

காஞ்சி காமகோடி பீடம் 66-வது ஆசார்ய ஸ்வாமிகள்.
இவர்கள் கலவையில் 1907-இல் சித்தி அடைந்தார்கள்.
ஸ்ரீ பரமாசார்யர்களின் பரமகுரு



காஞ்சி காமகோடி பீடம் 67-வது ஆசார்ய ஸ்வாமிகள்.
இவர்கள் கலவையில் சித்தி அடைந்தார்கள்.
ஸ்ரீ பரமாசார்யர்களின் குரு



வடஆற்காடு ஜில்லா கலவை ப்ருந்தாவனத்தில்
ஸ்ரீ பரமாசார்யர்களின் குரு, பரமகுரு அதிஷ்டானங்கள்

தங்களால் காணமுடியவில்லையே என நினைந்து வருந்தினார்களோ, யார் அறிவர்? ஆனால் ஒன்று மாத்திரம் இவ்விஷயத்தில் தெளிவாயிற்று. பிற்காலத்தில் யாரேனும் அப்பெற்றோர்களை அடைந்து ஸ்வாமிகளைப் பற்றி ஏதாவது கேட்டால், அவர்கள் மௌனத்தையே மேற்கொண்டிருந்தார்கள். உலகினில் புதல்வனைப் பெற்ற பயனை அடைந்த உத்தமர்கள் அல்லவோ அவர்கள்!

**கும்பகோணத்திற்கு விஜயம்**

பதினெட்டாவது நூற்றாண்டில் நம் நாட்டில் நடைபெற்ற கலகங்களின் காரணமாகத் தஞ்சை மகாராஷ்டிர மன்னர்களின் காலத்தில், காமகோடி பீடத்தின் நிர்வாக ஸ்தலமானது காஞ்சியிலிருந்து கும்பகோணத்திற்கு மாற்றப்பட்டது என்ற செய்தியை முன்பே கூறினோம். அந்நிகழ்ச்சி 62—ஆவது ஆசாரிய ஸ்வாமிகள் காலத்தில் ஏற்பட்டது. அவர்கள் காஞ்சியிலிருந்து கும்பகோணத்துக்குச் செல்லும் வழியில் உடையார்பாளையச் சமஸ்தானாதிபதியின் வேண்டுகோளுக்கிணங்கி, அவ்வூரில் சிலகாலம் தங்கியிருந்தார்களெனத் தெரிகிறது. பிறகு அவர்கள் தஞ்சையிலும் சில காலம் தங்கினார்கள். பின்னரே அவர்கள் கும்பகோணத்தில் காவிரி நதிக்கரையில் ஒரு மடத்தை நிறுவிக்கொண்டு அங்கே தங்கினார்கள். அது முதல் **கும்பகோணமே** மடத்தின் நிர்வாக ஸ்தானமாக அமைந்தது.

நம் ஆசாரிய ஸ்வாமிகள் ஆசாரிய பீடம் ஏற்றுக்கொண்டது வட ஆர்க்காடு ஜில்லாவிலுள்ள **கலவை** என்ற கிராமத்தில் என்று கூறினோம்; அவர்கள் அப்பதவியை மேற்கொண்ட அவ்வாண்டிலேயே கும்பகோணத்திற்குப் பிரயாணமானார்கள். வழியில் தம் தாய் தந்தையர் வசித்துவந்த ஊராகிய திண்டிவனத்தில் ஸ்வாமிகள் மூன்று நாட்கள் தங்கினார்கள்.

பொதுவாக ஆசாரிய ஸ்வாமிகள் ஓர் ஊருக்கு விஜயம் செய்கிறார்களென்றால் அவ்வைபவம் அந்த ஊர் முழுவதுமே ஒரு திருவிழாவாகக் கொண்டாடப்படும். ஒரு வாரத்திற்கு முன்னதாகவே ஸ்வாமிகளை வரவேற்கத்தக்க ஏற்பாடுகளை ஊர் மக்கள் செய்யத் தொடங்குவார்கள். மக்களெல்லோரும் கூட்டம் கூட்டமாக ஸ்வாமிகளைத் தரிசிக்க வருவார்கள். எங்கும் வேத கோஷமும், வாத்ய ஒலியும் முழங்கும். ஸ்வாமிகள் யானை மீதோ, பல்லக்கின் மீதோ, பவனி வரும் காட்சியைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் கூடுவார்கள். மடத்தின் பரிவாரங்களாக வரும் யானை, குதிரை, ஒட்டகம் இவைகளைக் காணக் குழந்தைகளின் கூட்டம் அங்கங்கே

காணப்பெறும். மடத்தின் அதிஷ்டான தெய்வமாகிய **ஸ்ரீ சந்திர மௌளீச்வரர், ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்மன்** இவர்களுக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் செய்யும் பூஜைகளைக் காண ஏராளமான ஜனங்கள் நீராடித் தூய்மையான மனஸுடன் கூடியிருப்பர். பூஜை முடிந்ததும் ஸ்வாமிகளால் கொடுக்கப்பெறும் அபிஷேக தீர்த் தத்தைப் பக்தர்கள் மிகுந்த பணிவுடன் தங்கள் உள்ளங் கைகளில் பெற்று உட்கொள்ளுவர். இந்தத் தீர்த்தத்தை ஏற்கு முன்னர், வேறு ஆகாரம் எதையும் கொள்ளாமலேயே பக்தர்கள் அதற்காகக் காத்திருப்பார்கள். இந்தத் தீர்த்தத்தால் உடல் சுத்திபெறுவதுடன், மனஸும் மாசு அகன்று தூய்மை அடையுமென்று பக்தர்கள் நம்புகிறார்கள். பல அடியார்கள் கோஷ்டி கானமாகப் பஜனை செய்வார்கள். புலவர்கள் ஸ்வாமி களைத் தரிசித்து அவர்களிடம் தங்கள் புலமையைக் காட்டிப் பொன்னாடை முதலிய சன்மானங்களைப் பெற்றுப் போவார்கள். பணம் படைத்தவர்கள் பொன்னால் அமைக்கப்பெற்ற ஸ்ரீ ஆதி சங்கரரது பாதுகைகளுக்குப் பொற்காசுகளினாலோ, நாணயங் களினாலோ அர்ச்சனை செய்வார்கள். இதற்குப் **பாதபூஜை** என்பது பெயர். மத பேதமின்றியும், ஜாதிபேதமின்றியும் ஸ்ரீ ஸ்வாமிகளை வரவேற்கும் பணியில் யாவரும் கலந்து கொள்வர். இவ்வைபவம் எல்லாம் ஸ்வாமிகள் முகாம் செய்யும் ஒவ்வோர் ஊரிலும் சாதா ரணமாக நடைபெறும் காட்சிகளாகும்.

நம் ஸ்வாமிகள் திண்டிவனத்திற்கு 1907-இல் விஜயம் செய்த காட்சியோ ஒரு தனிச் சிறப்பைப் பெற்றது. அதுவரை குழந்தைப் பருவத்திலும், பன்னிரண்டு வயது வரையிலுள்ள பாலகன் பருவத்திலும் பார்த்துப் பழகிய சுவாமிநாதரை அவ்வூர் வாசிகள் அப்பொழுது உலகத்தை உய்விக்கும் ஞானாசிரியராகக் கண்டார்கள். சந்திரன் போன்ற முக மண்டலம், பால சூரியனைப் போன்ற தேஜஸ், புதனைப் போன்ற ஞானம், இவை ஒருங்கே அமைந்த ஓர் உருவம் அவர்களுக்குக் காட்சியளித்தது. இவ்வுரு வத்தைக் கண்டதுமே பெரியோர், சிறியோர், பெண்டிர் யாவரும், ஸ்வாமிகள் தங்கள் ஊரைச் சேர்ந்தவரென்ற பெருமையினால், ஏராளமாகக் கூடி, அவரை வணங்கத் தொடங்கினார்கள். ஸ்வாமிகள் கல்வி பயின்ற திண்டிவனம், ஆர்க்காடு அமெரிக்கன் மிஷன் உயர்நிலைப் பள்ளியின் கிறிஸ்தவ ஆசிரியர்களும், உடன் பயின்ற மாணவர்களும் ஸ்வாமிகளைக் காண ஆவல் கொண்டார்கள். ஸ்வாமிகளும் ஒவ்வோர் ஆசிரியரிடத்திலும்

தனித்தனியே உரையாடி, அவர்கள் யாவரையும் மகிழ்வித்து, அவர்களுக்குத் தக்க வெகுமதிகளை அளித்தார்கள். பள்ளி மாணவர்களுக்கெல்லாம் தரிசனம் கொடுத்து அவர்கள் யாவருக்கும் சிற்றுண்டிகளும், பரிசுகளும் வழங்கினார்கள்.

**பட்டாபிஷேகம்**

ஆசாரிய பீடத்தில் அமர்கிறவர்கள் சந்நியாசிகளே ஆனாலும் அவர்கள் ஜகத் ரக்ஷணையை மேற்கொண்டவர்களாகையால் அவர்களைச் சக்ரவர்த்திகளைப் போலப் பாவிப்பதே இந்நாட்டின் தொன்றுதொட்டு வரும் வழக்கமாகும். ஆதி சங்கரர் காலத்தி லேயே, அவருக்கு அக்காலத்தில் காஞ்சியில் அரசாண்ட இராஜ சேன மன்னர் பல அரசாங்க விருதுகளை அளித்திருந்தார். அவற்றுள் முக்கியமானவை யானைமீது ஏறிப் பவனி வருவ தற்கு உரிய அம்பாரி, தந்தச் சிவிகை, வெண்சாமரம், வெண் பட்டுக் குடைகள், கட்டியம் கூறுவோர் தோள்களில் தாங்கிவரும் தங்கத்தடி, வெள்ளித்தடி முதலியனவும், நகரா, பேரி, காளம், கடகம், சங்கம், மிருதங்கம், வீணை, புல்லாங்குழல் போன்ற வாத்யங்கள் முதலியனவும் ஆகும்.

நம் ஸ்வாமிகளுக்கு முறைப்படியே பட்டாபிஷேகம் செய்து அவ்வைபவத்தை சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று சீடர்கள் எல்லோரும் விரும்பினார்கள். இவ்வைபவம் பிலவங்க வருடம் சித்திரை மாதம் 27-ஆம் தேதி (9–5–1907) வியாழக் கிழமை, கும்பகோணம் மடத்தில் மிக விமரிசையாகக் கொண் டாடப்பெற்றது. நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும் கணக்கற்ற மக்கள் இவ்விழாவில் கலந்து கொண்டார்கள். அரசாங்க உத்தி யோகஸ்தர்களும், வித்வத் ஜனங்கள் பல்லோரும் அங்கு வந்திருந் தார்கள். தஞ்சையின் கடைசி மன்னரான சிவாஜி மகாராஜாவின் இராணிகள் இருவரும் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பி ஸ்வாமி களுக்கு எல்லாவிதமான இராஜ மரியாதைகளையும் செய்வித் தார்கள். விழா நாட்களாகிய மூன்று தினங்களிலும், அறுபது பேர்கள் அடங்கிய தஞ்சைப் பாண்டு கோஷ்டியார் தம் இன்னிசை களால் மக்களுக்கு மகிழ்ச்சியூட்டி வந்தனர். தேவாலயங்களி லெல்லாம் விசேஷ பூஜைகள் நடந்தன. அன்று ஸ்வாமிகள் எல்லாக் கோயில்களுக்கும் சென்று ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு மடத்தில் அன்னதானம் வழங்கப்பட்டது. வித்வான்களுக்கும் கலைஞர் களுக்கும் ஏராளமான வெகுமதிகள் அளிக்கப்பட்டன.

நல்ல முகூர்த்தத்தில் ஸ்வாமிகளுக்குக் கங்காஜல அபிஷேகம் நடந்தேறிப் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றது. அபிஷேகம் முடிவு பெற்றவுடன், ஸ்வாமிகள் ஸிம்மாஸனத்தில் கொலு வீற்றிருந்தார்கள். அப்பொழுது சிஷ்யர்கள் தங்கள் காணிக்கைகளையும் மரியாதைகளையும் ஸ்வாமிகளுக்குச் செலுத்தினார்கள். அன்றிரவு ஸ்வாமிகள் மடத்து யானைமீது அம்பாரியில் ஆரோகணஞ் செய்துகொண்டு, ஸகல ஸன்னாகங்களுடன் நகரில் பவனி வந்த காட்சி யாவரையும் மெய்ம்மறக்கச் செய்தது. இவ்வாறு நம் ஸ்வாமிகள் பதின்மூன்றாம் பிராயத்தில் **ஜகத்குரு** பட்டம் தாங்கித் தம் ஆட்சியை மேற்கொண்டார்கள்.

---

## 3. முதல் விஜய யாத்திரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அடிக்கடி யாத்திரைகளை மேற்கொண்டு மக்களுக்குத் தரிசனம் அளித்து, அவர்களுக்கு உபதேசங்களைச் செய்து, அவர்களை உய்விக்கச் செய்வதைத் தொன்றுதொட்டே தம் கடமைகளுள் ஒன்றாகக் கொண்டிருந்தார்கள். நம் ஸ்வாமிகளும் தாம் பட்டமேறிய பின் இவ்வாறு யாத்திரையொன்றைச் செய்ய வேண்டுமென்று கருதியிருந்தார்கள். அதற்குத் தக்க சந்தர்ப்பம் ஒன்றும் கிடைத்தது.

திருச்சிராப்பள்ளிக்கடுத்த ஜம்புகேச்வரம் என்ற **திருவானைக்கா** க்ஷேத்திரம் உலகப் பிரசித்தி பெற்றது. அங்குள்ள கோயிலைச் சங்க காலத்து மன்னன் கோச்செங்கட் சோழன் கட்டினான் என்பர். அங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீ அகிலாண்டேச்வரி அம்பிகைக்கு ஆதி சங்கரர் தாடங்கப் பிரதிஷ்டை செய்தார். 1908-ஆம் வருஷம், அக்கோயிலுக்குக் கானாடுகாத்தான் சா. ராம குடும்பத்தார்கள் பல லக்ஷ ரூபாய்கள் செலவிட்டுத் திருப்பணி செய்து, அவ்வருஷம் பிப்ரவரி மாதத்தில் (பிலவங்க-தை) கும்பாபிஷேகத்திற்கு நாளும் குறிப்பிட்டிருந்தார்கள். அக்காலத்தில் தென்னிந்தியாவில் நடந்தேறிய கும்பாபிஷேகங்களில் இது மிகச் சிறந்த ஒன்றாகும். சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளான **ஸ்ரீ ஜகத்குரு நரசிம்ம பாரதி** ஸ்வாமிகளும் அவ்வைபவத்திற்கு எழுந்தருளியிருந்தார்கள். கும்பாபிஷேகத்திற்கென தனியே நியமிக்கப் பெற்றிருந்த அதிகாரி **ஸ்ரீ ராஜமையர்** எல்லா ஏற்பாடுகளையும் கவனித்து வந்தார்.

இந்தக் கும்பாபிஷேகத்தை நடத்தி வைக்க வேண்டுமென்று திருவானைக்காவிலிருந்து நம் ஸ்வாமிகளுக்கு அழைப்பு வந்தது. விஜய யாத்திரையைத் தொடங்க விருப்பங்கொண்டிருந்த அவர்களுக்கு இஃது ஓர் அரிய சுப சகுனமாயிற்று. அவர்கள் நல்ல வேளையில் மடத்தினின்று புறப்பட்டு, கும்பாபிஷேக தினத்துக்கு ஒரு வாரம் முன்பே ஜம்புகேச்வரம் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களுடைய முன்னிலையில் கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

**65–ஆவது பீடாதிபதிகளின் அதிஷ்டான தர்சனம்**

அதன்பின் ஸ்வாமிகளுக்கு, தமக்குமுன் 65–ஆவது குருவாயிருந்த **ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி** ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தைத் தரிசிக்க வேண்டுமென்ற விருப்பம் உண்டாயிற்று. அந்த அதிஷ்டானம் **இராமநாதபுரம் ஜில்லா, இளையாற்றங்குடி** என்ற கிராமத்தில் இருக்கிறது. அவ்விடத்துக்குப் போகும் வழியில் கடியாப்பட்டி, கோனாப்பட்டு, கீழச் சேவல்பட்டி என்ற கிராமங்களிலுள்ள செட்டி நாட்டுப் பிரமுகர்களும் பொது மக்களும் அவர்களை வரவேற்று மரியாதை செய்தார்கள். அவ்வவ்விடங்களில் சிற்சில நாட்கள் தங்கிப் புதுக்கோட்டை நகரை ஸ்வாமிகள் அடைந்தார்கள். புதுக்கோட்டை சம்ஸ்தான மன்னர் பரம்பரையினரும், மக்களும் பழங்காலந்தொட்டே இந்த மடத்தில் பற்றுக்கொண்டவர்களாதலால், அப்பொழுது பால வடிவத்தில் வரும் குருநாதரைத் தரிசிக்க அவர்கள் மிகுந்த கோலாகலத்துடன் கூடி ஸ்வாமிகளுக்கு வரவேற்பு அளித்து, 15 நாட்களுக்கு மேல் ஸ்வாமிகளை அந்நகரத்தில் தங்கச் செய்தார்கள். மன்னரின் இளைய சகோதரர் ஸ்ரீ விஜய ரகுநாத துரைராஜாவும், திவான் வேங்கடராமதாஸ் நாயுடுவும் மற்ற அரசாங்க அதிகாரிகளும் ராஜமரியாதைகளுடன் ஸ்வாமிகளை வரவேற்று உபசரித்தனர்.

இளையாற்றங்குடி கோயில் செட்டிநாட்டிலுள்ள நகரத்தார் கோயில்களுள் பழமை வாய்ந்ததாகும். ஒரு காலத்தில் நகரத்தார் எல்லோருக்கும் அதுவே பொதுக் கோயிலாக இருந்ததென்றும், பிறகே அவர்களுக்குள் மேலும் 8 பிரிவுகள் ஏற்பட, (மாத்தூர், வைரவன் கோயில், இரணியூர், பிள்ளையார்ப்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, சூரக்குடி, வேலங்குடி) அவ்விடங்களில் வேறு பிரபலமான கோயில்கள் உண்டாயின என்றும் கூறுவர். இளையாற்றங்குடியில் கோயில் கொண்டவர் **ஸ்ரீ நித்ய கல்யாணி சமேத கைலாசநாதர்.** ஒரே கோவிலைச் சேர்ந்தவர்கள் அவர்களுக்குள் மணம் முடிப்பது வழக்கமில்லை.

ஸ்ரீ காமகோடி பீடத்தில் 65-ஆவது ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் 1889–ஆம் வருடத்தில் செட்டி நாட்டிற்கு யாத்திரையாகச் சென்றிருந்தபோது, இளையாற்றங்குடியில் சில மாதங்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூர் ஆலயத்தைச் சார்ந்த நகரத்தார்கள் ஸ்வாமிகளிடம் மிகுந்த மரியாதை காட்டி, அவர்கள் தங்குதற்குரிய வசதிகள் யாவற்றையும் அமைத்துக் கொடுத்திருந்தார்கள். ஸ்வாமிகள் ஒரு நாள் அவ்வூரைக் கால் நடையாகச் சுற்றி வந்தபோது, புதர் அடர்ந்த ஓர் இடத்தைக் கண்டு, அதில் ஒரு நாழிகை தங்கினார்கள். மறுநாள் அவர்கள் தேவஸ்தான டிரஸ்டியிடம் அந்த இடத்தை மடத்திற்குக் கொடுக்க இயலுமா என்று கேட்க, ஸ்வாமிகளின் கருத்தை உணராத அந்த டிரஸ்டியார் கோயிலுக்கு அருகிலேயே அகன்ற வேறொரு ஸ்தலத்தை ஸ்வாமிகளுக்குக் கொடுப்பதாக வாக்களித்தார். ஆனால் ஸ்வாமிகளோ தாம் குறித்த இடமே வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

இது நிகழ்ந்த ஒரு வாரத்திற்குள் ஸ்வாமிகளுக்கு நோய் கண்டு, உடல் நலம் குன்றி, அவர்களும் நிர்விகல்ப சமாதியை அடைந்தார்கள். அந்த நாள் விரோதி வருஷம் பங்குனி மாதம் 8-ஆம் தேதி (20-3-1890) வியாழக்கிழமை, அமாவாசையாகும். ஊரார் முன் நடந்த செய்தியைக் கேட்டு வியப்படைந்து ஸ்வாமிகள் குறிப்பிட்ட இடத்திலேயே அவர்களுக்குச் சமாதியை அமைத்து, அவ்விடத்துக்கருகில் ஒரு சிவலிங்கத்தையும் ஆதி சங்கரர் விக்ரகத்தையும் பிரதிஷ்டை செய்தார்கள். அந்தக் கோயில் இன்றும் இளையாற்றங்குடி தேவஸ்தானத்தில் பராமரிக்கப்பட்டு வருகிறது.

நம் ஸ்வாமிகள் சிறந்த குரு பக்தியுடையவர்களாதலால் அவ்வூருக்குச் செல்லவேண்டும் என்ற நோக்கங் கொண்டே திருவானைக்காவிலிருந்து புறப்பட்டார்கள். புதுக்கோட்டையிலிருந்து அவ்வூருக்குச் சென்று அதிஷ்டானத்தைத் தரிசித்துக் கொண்டு திரும்பவும் வழியில் திருவானைக்காவில் தங்கி, தமது முதல் சாதுர்மாஸ சங்கல்பத்தை அவ்வூரிலேயே முடித்துக்கொண்டு, தஞ்சாவூர் வழியாகக் கும்பகோணத்திற்குத் திரும்பினார்கள்.

தஞ்சையில் ராணி ஸ்ரீ ஜீஜாம்பாபாயி ஸாகேபாவும், ராணி ஸ்ரீ ராமாம்பாபாயி ஸாகேபாவும், சீனியர் பிரின்ஸ் சிவாஜி ராஜா ஸாகேபும், ஜூனியர் பிரின்ஸ் பிரதாபசிம்ஹ ராஜா ஸாகேபும், மற்ற அரச பரம்பரையினரும் அரண்மனையில் ஸ்வாமிகளை வரவேற்றுப் பிக்ஷை, பாதபூஜைகளைச் செய்தனர். பொதுமக்களும்

இந்த வரவேற்பில் கலந்துகொண்டு ஸ்வாமிகளின் அருளுக்குப் பாத்திரமானுர்கள். அச்சமயம் பொதுமக்கள் ஏற்பாடு செய்த ஓர் ஊர்வலம் தஞ்சை நகரில் அதுவரையிலும் கண்டிராத ஒரு காட்சியாக விளங்கியது. மாலை 7 மணிக்குப் புறப்பட்ட ஊர்வலம் இரவு இரண்டு மணிக்கே மடத்தைத் திரும்பவும் அடைந்தது.

**மகா மகத்திற்குக் கும்பகோணம் திரும்புதல்**

பன்னிரு வருஷங்களுக்கொருமுறை வரும் மாசி மகத் திரு நாள் கும்பகோணத்தில் மகாமகம் என்ற பெரிய திருவிழா வாகும். மேலே கூறிய யாத்திரையை முடித்துக்கொண்டு, நம் ஸ்வாமிகள் 1909-ஆம் வருடம் மார்ச்சு மாதம் கும்பகோணத் திற்குத் திரும்பினுர்கள். அவ்வருஷம் மகாமக வருஷம். அதற்கென அரசாங்கத்தாரும், பொது மக்களும் விசேஷ ஏற்பாடு களைச் செய்திருந்தார்கள். மடத்திலும் யாத்திரிகர்களுக்காக ஏராளமான இட வசதியும் உணவு வசதியும் செய்து கொடுக்கப் பட்டன. மகாமகத்தன்று ஸ்வாமிகள் யானையின்மீது அம் பாரியிலமர்ந்து, தஞ்சை அரசர் குடும்பத்தினர் முன் செல்ல, மகாமகக் குளத்திற்கு ஸ்நானத்திற்குச் சென்ற காட்சி, அவ்வருட மகாமகத்தில் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த விழாவாகக் காணப் பட்டது.

---

## 4. வித்தியாப்யாசம்

1909, 1910 இந்த இரண்டு வருடங்களிலும், மடத்தின் ஆஸ் தான பண்டிதர்களால் கும்பகோணத்திலேயே ஸ்வாமிகளுக்குச் சம்ஸ்கிருத காவியங்கள், நாடகங்கள் இவைகளின் பயிற்சியும், வேதப் பயிற்சியும் செய்து வைக்கப்பட்டன. இந்த இரண்டு வருடங்களிலேயே ஸ்வாமிகளின் அறிவின் பெருமையைப் பண்டி தர்கள் கண்டு ஆச்சரிய மடைந்தனர். பக்தர்களும், மடத்தின் சீடர்களும் அதிகமாக ஸ்ரீ ஸ்வாமிகளைத் தரிசிக்க வரத் தொடங்கி னுர்கள். அதனுல் சாஸ்திரப் பயிற்சிக்குக் கும்பகோணத்தில் வசிப்பது சிறிது இடையூறுகக் காணப்பட்டது. வித்தியாப் யாஸத்தை உத்தேசித்து ஏகாந்தமான ஓர் இடம் நிர்ணயிக்கப்பட வேண்டியது அவசியமாகிவிட்டது. அகண்ட காவேரியின் வட கரையில், முசிரிக்கு மேற்கே ஐந்து மைலில், இயற்கை அழகுகள்

அமைந்த **மகேந்திர மங்கலம்** என்னும் கிராமத்தை இதற்கென மடத்தின் அதிகாரிகள் குறிப்பிட்டார்கள். அந்தக் கிராமத்தில் அன்னதானக் கட்டளைக்கென மடத்திற்கு மதுரையில் அரசாண்ட கடைசி நாயக்க மன்னனான விஜய ரங்க சொக்கநாத நாயக்கர் சாலிவாகன சகம் 1630-ஆம் ஆண்டில், (கி. பி. 1708) பூதானம் செய்திருந்தார்.

மகேந்திர மங்கலம் திருச்சி—நாமக்கல் ரஸ்தாவில், தொட்டியத்திற்கு இப்பால் உள்ளது. அக்காலத்தில் அதற்குப் போக்கு வரத்து வசதிகள் அதிகமாக இல்லை. அக்கிராமத்தை அடைய வேண்டுமானால், காவிரியின் தென் கரையிலுள்ள லாலாபேட்டை என்னும் ரயில் நிலையத்தில் இறங்கி, ஒரு மைல் அகலமுள்ள காவிரியைப் பரிசலில் கடந்து செல்லவேண்டும். இவ்வளவு சிரமத்தையும் பொருட்படுத்தாது ஸ்வாமிகளின் தரிசனத்துக்கு வரக்கூடியவர்கள் சிலரே இருப்பர். ஆகையால் இந்த இடம் ஸ்வாமிகளின் வித்தியாப்யாஸத்திற்கு மிகவும் ஏற்றதெனத் தெரிந்தெடுக்கப் பெற்றது. பூஜையும், மடத்தின் மற்ற நிர்வாக ஸ்தலங்களும் அக்ரஹாரத்தில் தனிகர், சிங்கம் ஐயங்கார் இல்லத்தில் வைக்கப்பட்டன. காவிரியின் கரையில், தண்ணீர் நிலைக்கு அருகிலேயே ஒரு சிறு பர்ணசாலை நிர்மாணிக்கப் பெற்றது.

1911-ஆம் வருடம் கும்பகோணத்திலிருந்து அந்தக் கிராமத்திற்கு ஸ்வாமிகள் பயணமானார்கள். மகேந்திர மங்கலத்துக்குச் செல்லும் வழியில் ஸ்வாமிகள் லால்குடி என்ற ஊரில் தங்கி, அங்குச் சங்கராலயத்தையும், ஒரு குருகுலத்தையும் ஸ்தாபனம் செய்தார்கள். அந்தக் குருகுலத்திலிருந்து வித்தியாப்யாஸம் செய்த பலர் இன்று மகா வித்வான்களாக விளங்குகிறார்கள்.

**கல்வி முறை**

ஸ்வாமிகளின் வித்யாப்யாஸ முறை தனித் தன்மையானது. சாதாரணமாக மக்கள் தமக்குக் கல்வி கற்பிக்கின்றவர்களைத் தம் ஆசாரியர்களென மதித்து, அவர்களிடம் பக்தி செலுத்திக் கல்வி பெறுவார்கள். ஸ்வாமிகளுக்குக் கல்வி கற்பித்த பண்டிதர்களோ ஸ்வாமிகளைத் தம் குருவாக ஏற்றுக் கொண்டவர்கள். பாடம் ஆரம்பிக்கும் முன்னரும், முடிந்த பின்னரும், அவர்கள் ஸ்வாமிகளை வணங்குவார்கள். இப்படிப்பட்ட ஓர் நிலையிலிருந்தும், ஸ்வாமிகள் பாடங்கள் கற்கும்பொழுது மிகுந்த கவனத்துடனும் அக்கறையுடன் கல்வியில் முன்னேற வேண்டுமென்ற எண்ணத்

துடனும், வித்துவான்களிடம் மிகுந்த மரியாதையுடனும் கல்வி கற்று வந்தார்கள். அக்காலத்தில் அவர்கள் கற்ற கலைகள், வியாகரணம், தர்க்கம், வேதாந்தம் ஆகியவைகளாகும். பின்னர், மீமாம்சையும் கற்றுக் கொள்ளப் பெற்றது. ஸ்வாமிகளின் மேதையினுல் பண்டிதர்களின் பணி வெகு எளிதாகிவிட்டது. 1911, 1912, 1913 ஆகிய இந்த மூன்று வருடங்களில் நம் நாட்டில் பிரசித்திபெற்ற பண்டிதர்களுக்கும், தலைவர்களுக்கும் அந்தக் கிராமம் ஒரு யாத்திரை ஸ்தலம் ஆயிற்று. இக்காலத்தில், ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு முறையாகக் கல்வி உதவியவர்களுள், **பைங்கா நாடு பஞ்சாபகேச சாஸ்திரிகள், மஹாமஹோபாத்யாய சாஸ்திர ரத்னுகர தி. வேங்கடசுப்பா சாஸ்திரிகள், சாஸ்திர ரத்னுகர விஷ்ணுபுரம் சாமி சாஸ்திரிகள், திருவிசைநல்லூர் வே. வேங்கட ராமசாஸ்திரிகளும்** குறிப்பிடத் தக்கவர்கள். இன்னும் அக்காலத்தில் மடத்து ஆஸ்தான வித்வான்களாக இருந்து ஸ்வாமிகளின் வித்யாப்யாஸத்தில் ஊக்கமளித்தவர்களுள், மஹாமஹோபாத்யாய **பைங்கா நாடு கணபதி சாஸ்திரிகள்,** மஹாமஹோபாத்யாய **கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள்,** கோடி கன்னிகாதானம் உபய வேதாந்த **ராஜகோபால தாதாச்சாரியார்** முதலானவர்கள் முக்கியமானவர்கள்.

இவ்வளவு கல்விகளோடு, ஸ்வாமிகள் ஆங்கிலத்துடன் பிரஞ்சு பாஷையும்கூடக் கற்றுவந்தாரென்றுல், அது யாவருக்கும் ஆச்சரியத்தையே அளிக்கும். காலஞ்சென்ற கீர்த்தனுச்சாரிய **ஸி. ஆர். சீனிவாச ஐயங்கார்** அக்காலத்தில் அடிக்கடி ஸ்வாமிகளிடம் வந்து போவதுண்டு. மகாராஷ்டிர பாஷையையும் அதிலுள்ள நூல்களையும் கற்பதில் ஸ்வாமிகளுக்கு அவா மிகுதியாய் இருந்ததால், பம்பாய் மாகாணத்திலிருந்து மகாராஷ்டிர பண்டிதர் ஒருவரைத் தருவித்து மூன்று வருடங்களுக்குமேல் அவரை மடத்தில் தங்கச் செய்து வைத்தனர். அவரிடம் ஸ்வாமிகள் பல மகாராஷ்டிர நூல்களையும் ஆராய்ச்சி செய்துள்ளார்கள். தமிழில் ஸ்வாமிகளுக்கு இருந்த ஆர்வம் எல்லாவற்றையும்விட அதிகமாகும். ஓய்வு நேரங்களில் அவர்கள் சில புலவர்களின் துணை கொண்டு தமிழ் இலக்கண, இலக்கியங்களையும் பயின்று வந்தார்கள். தேவாரம், திருவாசகம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், திருக்குறள் ஆகியவைகளையும் அவர்கள் தொடர்ந்து ஆராய்ச்சி செய்து வந்தார்கள். கலைகளுக்குத் தனிமையான காலத்தை அவர்கள் ஒதுக்கிக் கொள்ளவில்லை. கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களுடன் ஓய்வு கிடைக்கும் நேரங்

களிலெல்லாம் பேசிக்கொண்டு வரும்பொழுதே, அக்கலைகளின் நுட்பங்களை அவர்கள் அறிந்து கொள்வார்கள். அவற்றுள் **சங்கீதக் கலை** ஸ்வாமிகளின் மனஸை மிகவும் கவர்ந்தது.

அடிக்கடி ஸ்வாமிகள் தம் பர்ணசாலையை விட்டு அகண்ட காவிரியின் நடுவில் அமைந்த திட்டுக்களுக்குச் சென்று, அவ்விடம் நெடுநேரம் தங்கி, இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிப்பார்கள்; அநேக சமயங்களில் அவர்கள் தனிமையில் தியானத்திலும் அங்கு அமர்ந்துவிடுவார்கள்; இயற்கைக் காட்சிகளையெல்லாம் படம் பிடிப்பதில் ஸ்வாமிகளுக்கு மிகுந்த ஆசையுண்டு. அக்காலத்தில் ஒருவர் போட்டோ காமிராவுடன் ஸ்வாமிகளைத் தொடர்ந்து வருவது வழக்கம். அவரைக் கொண்டு பல இயற்கைக் காட்சிகளைப் படம் எடுக்கும்படி ஸ்வாமிகள் கட்டளை இடுவார்கள். காமிராவி லிருக்கும் நுட்பங்களெல்லாம் ஸ்வாமிகளுக்கு நன்கு தெரியு மாதலால், படம் நன்ருக விழக் கூடிய ஆலோசனைகளைப் படம் பிடிப்போருக்கு ஸ்வாமிகள் அடிக்கடி கூறுவதுண்டு. மேலும் மாற்றுக் கண்ணுடியைக் கழுவுதல், பிரதிகள் எடுத்தல், இவை களிலும் தம் அரிய யோசனைகளை ஸ்வாமிகள் அவருக்குக் கூறு வார்கள். கணிதம், சோதிடம், வானசாஸ்திரம் இவைகளிலும் ஸ்வாமிகள் நல்ல விற்பன்னராக ஆனுர்கள். இவைகளில் பயிற்சி பெறுவதற்கென அவர்கள் திருவையாறு சுந்தரேச ச்ரௌதிகளின் சீடரான மரூர் **இராமஸ்வாமி சாஸ்திரிகளைப்** பல வருடங்கள் மடத் திலேயே இருக்கும்படி செய்து, அவரது குடும்பத்தையும் ஆதரித்து வந்தார்கள். தேவாரம் பாடம் கேட்பதில் ஸ்வாமிகளுக்கு ஆர்வம் அதிகம். நல்ல இசையுடன் பாடுகிறவர்கள் மடத்துக்கு வரும் பொழுதெல்லாம், ஸ்வாமிகள் பல மணிநேரம் அவர்களுடன் கூட இருந்து, தம் மனஸிற்கிசைந்த தேவாரங்கள் பலவற்றைப் பாடச் சொல்லிக் கேட்டுக்கொண்டே இருப்பார்கள். திருவாய்மொழி முதலிய வைணவப் பிரபந்தங்களிலும் ஸ்வாமிகளுக்கு நல்ல பற்று உண்டாயிற்று.

மகேந்திரமங்கலத்தில் நம் ஸ்வாமிகள் தங்கியது 1911 முதல் 1914-வரையிலுள்ள காலமாகும். 1914-இல் ஸ்வாமிகள் கும்பகோணம் திரும்பினுர்கள். அவர்களுக்கு வித்தியாப்யாஸ இடமாயிருந்த மகேந்திரமங்கலத்தில், அதன் ஞாபகார்த்தமாகக் காவிரியின் கரையில் ஒரு சங்கர ஆலயம் நிறுவப்பெற்றது. ஸ்வாமிகள் மகேந்திரமங்கலத்திலிருந்து திரும்பியபோது அவர் களுக்குப் பிராயம் இருபது. இக்காலத்தினுள் அவர்கள் பல துறைகளிலும் அறிவு நிரம்பி விளங்கினுர்கள். புராணங்கள்,

ஸ்தல வரலாறுகள், கல்வெட்டுக்கள் ஆகியவற்றைப் பற்றிய அறிவு, நவீன உலக ஞானம் ஆகிய பல துறைகளிலும் அவர்களுக்கு நல்ல பரிசயம் ஏற்பட்டிருந்தது. ஒரு முறை அறிந்தவற்றை அவர்கள் என்றும் மறப்பதில்லை. தம்மைக் காண வரும் அறிஞர்களிடமிருந்து தாம் அறிந்தவற்றோடு, தம் ஊகத்தால் ஒவ்வொரு அறிவின் தத்துவத்தையும் ஆராய்ந்து உண்மையைக் கண்டுகொள்வதில், நம் ஸ்வாமிகள் மகாமேதைகளுள் ஒருவராகத் திகழ்கின்றார்கள். பிறரோடு பழகும் திறமைகளிலும் ஒவ்வொருவருடைய தாரதம்யத்தைச் சீர்தூக்கி அறியும் நிபுணத்துவத்திலும் அவர்களுக்கு இணையாக மிகச் சிலரையே கூறலாம்.

ஸ்வாமிகள் கும்பகோணத்தில் தங்கியிருந்தபொழுது, சுமார் 30 மைல் தூரத்திலுள்ள **கங்கை கொண்ட சோழபுரத்திற்கு** வருடத்திற்கொருமுறை விஜயம் செய்து, தஞ்சைப் பெரிய கோவிலின் அமைப்பில் கட்டப்பட்டுள்ள அவ்வாலயத்தின் மிகப் பெரிய சிவலிங்கத்தைத் தரிசித்து, சிதிலமடைந்த அக்கோவிலின் சிலாசாஸனங்களையெல்லாம் ஆராய்ச்சி செய்துவருவார்கள். இவ்வாராய்ச்சியில் ஸ்வாமிகளுக்கு உதவியவர்களில், சிலாசாஸன இலாகா **பி. வி. ஜகதீச ஐயரையும்**, எஞ்சினீயர் **அனந்தாழ்வாரையும்** குறிப்பிடலாம். இவ்வாறு நம் சுவாமிகள் தம் இருபதாவது பிராயத்துக்குள்ளேயே தம் பதவிக்கேற்ற வித்தியா விலாஸத்துடன் விளங்கலானார்கள்.

---

## 5. 1911முதல் 1915 வரையில் மடத்தின் நிர்வாகம்

### ஜில்லா கோர்ட்டு நிர்வாகத்தில் மடம்

அக்காலத்தில் ஸ்வாமிகள் மைனராக இருந்ததால், அவர்களுக்கு இருபத்தோராவது பிராயம் பூர்த்தியாகும் வரையில், மடத்து நிர்வாகம் ஜில்லா கோர்ட்டின் பாதுகாப்பில் இருக்க வேண்டுமென்று மடத்தில் அக்கறை கொண்ட சில சீடர்கள் சென்னை அரசாங்கத்தாருக்கு விண்ணப்பித்துக் கொண்டிருந்தார்கள். கோர்ட்டு நிர்வாகத்தில் கொண்டுவரக்கூடிய அளவில் மடத்தின் சொத்துக்கள் இல்லாமலிருந்தும், அதன் நன்மையைக் கருதி மடத்தைக் கார்டியன் அண்டு வார்ட்ஸ் சட்டப்படி நடத்தக் கோர்ட்டார் உத்திரவு இட்டார்கள். கோயம்புத்தூர் ஜில்லா

கொளிஞ்சிவாடி கிராமத்தைச் சார்ந்த ஸ்ரீமான் **ஸி. எச். வேங்கட ரமண ஐயர்** என்னும் பிரமுகர் கார்டியனுக நியமிக்கப்பட்டார். 1911-ஆம் வருடம் முதல் 1915–ஆம் வருடம் மே மாதம் வரை, மடத்தின் நிர்வாகம் அவர் மூலம் நடைபெற்று வந்தது. 1915-ஆம் வருடம் மே மாதம் நடைபெற்ற **சங்கர ஜயந்தி** அன்று, ஸ்வாமி களுக்கு இருபத்தோராவது ஆண்டு பூர்த்தியாகவே, அன்று முதல் மடத்தின் நிர்வாகத்தை ஸ்வாமிகளே நேரில் ஏற்றுக் கொண்டார் கள். பெயரளவில் நிர்வாகம் ஏற்றுக்கொள்ளப்பட்டதேயொழிய, சர்வமுக்தியார்நாமா என்னும் அதிகாரம் பெற்ற ஏஜெண்டு ஒருவ ராலேயே மடத்தின் நிர்வாகக் காரியங்களெல்லாம் கவனித்து வரப்பட்டன. அக்காலத்தில், பாலப்பருவம் தொடங்கியே ஸ்வாமி களிடம் விசேஷப் பற்றும் பக்தியும் கொண்டிருந்த திருப்பாதிரிப் புலியூர் வாசியான **பசுபதி ஐயர்** என்னும் சீடர் ஊதியமின்றி மடத்தின் நிர்வாகத்தை ஏற்று, எல்லாத் துறைகளிலும் திறம்பட பணியாற்றி வந்தார். பழைய கால வழக்கப்படி எந்தத் தஸ்தா வேஜுவிலும் ஸ்வாமிகள் கையெழுத்திடுவதில்லை. ஏஜண்டு களுக்குப் பவர் கொடுக்கும்பொழுதும், மடத்தின் ஸ்ரீமுக முத் திரையே உபயோகப்படுத்தப்பட்டு வருவது வழக்கம்.

இந்த முறையில் 1915-ஆவது வருட சங்கர ஜயந்தி மடத்தில் மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. நாட்டின் பல பாகங் களிலிருந்தும் சீடர்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தனர். வேத நூல்களின் சாரங்களை யாவரும் எளிதில் அறியும்பொருட்டு, **ஆரிய தருமம்** என்னும் தமிழ்ச் சஞ்சிகையை மடத்தின் மாத வெளியீடாக அன்று ஸ்வாமிகள் ஆரம்பித்து வைத்தார்கள். ஸ்ரீரங்கம் வாணிவிலாஸ் அச்சகத்திலிருந்து **ஸ்ரீ டி. கே. பாலசுப்ர மண்ய ஐயர்** மேற்பார்வையில் அந்தச் சஞ்சிகை உயரிய முறையில் வெளிவந்தது. மடத்தின் நிர்வாகத்திலும் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. சிஷ்யர்களின் நன்மையின் பொருட்டுப் பல பாஷைகளில் மடத்தின் சரித்திரம் வெளியிடப் பெற்றது. மடத்தி லுள்ள தாமிரப்பட்டையங்கள் திருவனந்தபுரம் சிலாசாஸனப் பரிசோதகர் **ஸ்ரீ டி. ஏ. கோபிநாத ராவ்** அவர்களால் பரிசீலனை செய்யப்பட்டுப் புத்தக வடிவமாக வெளிவந்தது.

———

## 6. நவராத்திரி உற்சவம்

**லக்ஷதீபம், லக்ஷார்ச்சனை**

1916-ஆவது வருடம் அக்டோபர் மாதத்தில் கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் நவராத்திரி விழாவானது மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்த ஒன்பது நாட்களிலும் அம்பிகைக்கு லக்ஷார்ச்சனை செய்யப்பட்டும், நெய்யினால் லக்ஷ விளக்குகள் ஏற்றப்பட்டும், லக்ஷம் பிராம்மணர்களுக்கு அன்னமளிக்கப்பட்டும் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவைப் பற்றி **ஸ்ரீ சி. சுப்ரமணிய பாரதியார்** தமது கட்டுரை ஒன்றில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

"உலகத்தார் பராசக்தியை, நல்ல மழை அருள்புரியும் சரத் காலத்தின் முதல் ஒன்பது இரவும் வணங்கிப் பூஜைகள் செய்யவேண்டும் என்பது பூர்விகர் ஏற்பாடு. மிகப் பயனுடைய காரியம். மேலான வழி. கும்பகோணம் சங்கர மடத்தில் இந்தப் பூஜை மிகவும் கோலாகலமாக நடத்தப் போவதாகப் பத்திரிகையில் ஒரு தந்தி போட்டிருந்தது. சகஜமான விசேஷம். தேசம் முழுவதும் இப்படி நடப்பது நல்லது. சங்கர மடத்திலும் எனக்கு ஒருவிதமான ஆவல் உண்டானதால் தந்தியை வாசித்துப் பார்த்தேன். அந்தத் தந்தியிலே பாதி சாஸ்திரம்; வர்த்தமான தந்திக்குள்ளே சாஸ்திரத்தை நுழைத்தது ஒரு விநோதம். ஆனால் அதில் கண்ட சாஸ்திரம் உண்மையாக இருந்தது. நான் எதிர் பார்க்கவில்லை. எனவே தந்தியைப் படித்தபொழுது எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று.

கும்பகோணத்துத் தந்தி பேசுகிறது :—இந்தப் பூஜைகளின் நோக்கம் உலக நன்மை. நவராத்திரி காலத்தில் யோகமாயை துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி என்ற மூன்று வித வடிவம் கொண்டு துஷ்டரையெல்லாம் அழித்து, மனித ஜாதிக்கு மகிழ்ச்சி பெருக வைத்தாள். மனிதர் படும் துன்பத்தைத் தீர்க்கும் பொருட்டாக, தேவி அவ்வாறு அவதாரம் செய்த காலம் முதல் இன்றுவரை பாரத தேசத்தில் எல்லாப் பாகங்களிலும் ஆரியர் இந்தத் திருவிழாவைக் கொண்டாடி வருகிறார்கள். தேவி, உலகம் முழுவதிலும் பரவி இருக்கின்றாள். ஒவ்வொரு தனிப் பொருளிலும் நிறைந்து இருக்கிறாள். இவளே மாயை; இவளே சக்தி; செய்பவளும் செய்கையும் செய்கைப் பயனும் இவளே;

தந்தையும், தாயும் இவள்; இவளே பரப்ரம்மம்" (பாரதி நூல்கள், கட்டுரை—பக்கம் 32, 33.)

இவ்விழாவை ஏற்பாடு செய்தவர்களில் முதன்மையானவர்கள் தஞ்சை ஜில்லா மிராசுதார்களான **பில்லூர் அபிராமி ஐயர், வில்லியனூர் வைத்தியநாத ஐயர், கோட்டூர் கிருஷ்ண ஐயர், கொத்தங்குடி ஸ்ரீநிவாச ஐயர், கல்லூர் வெங்கப்ப ஐயர், சென்னை** கணேஷ் கம்பெனியின் சொந்தக்காரர் **எம். ஆர். ராமசேஷ ஐயர், சித்தமல்லி சுப்ரமண்ய ஐயர்** ஆகியோராவார். இவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு ஊக்கம் அளித்து விசேஷமாகப் பொருளுதவி புரிந்தவர்களில், திருப்பனந்தாள் காசி மடம் அதிபர் **ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்கத் தம்பிரான் ஸ்வாமிகள்** அவர்களையும், **ஆண்டிப்பட்டி ஜமீன்தார் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார்** அவர்களையும் **நங்கவரம் இராஜப்பய்யர்** அவர்களையும் முதன்மையாகக் குறிப்பிடலாம். மடத்தின் முதல் முற்றத்தில் சித்திர வேலைகள் அமைந்த அற்புதமான ஒரு பெரிய கொட்டகை அமைக்கப்பெற்றிருந்தது.

துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி, இம்மூன்று தேவிமார்களும் கிழக்கு நோக்கி ஆவாகனம் செய்யப்பெற்றிருந்தனர். அன்றாடம் புஷ்பங்கள் மலைபோல் வந்து குவிந்தன. தேவியின் பூஜையில் தேர்ச்சி பெற்றிருந்தவர்கள் லலிதா ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லி ஒவ்வொரு நாளும் பலமுறை அர்ச்சனை செய்தனர். பித்தளையினால் செய்யப்பட்ட 12,000 அகல் விளக்குகளை சுவரில் லிங்க வடிவமாகவும், ரிஷப வடிவமாகவும், யானை வடிவமாகவும், துவார பாலகர் வடிவமாகவும் அமைத்து, அவற்றில் நெய் ஊற்றி விளக்குகள் ஏற்றிப் பத்து இரவிலும் எரிய விட்டிருந்தனர். ஒருபுறம் ஆழமான ஓம குண்டங்களில் புரோகிதர்கள் கொழுந்துவிட்டெரியும் அக்னி ஜ்வாலையை எழுப்பிச் சண்டீஹோமம், ஸ்ரீ வித்யாஹோமம் இவைகளைச் செய்துவந்தனர். நூற்றுக்கணக்கான வித்வான்கள் இராமாயணம், பாகவதம். தேவீமாகாத்மியம், ஸௌந்தர்ய லஹரி, பகவத்கீதை இவைகளைப் பாராயணம் செய்தனர். மூன்று வேதங்களிலும் வல்லவர்கள் வேத கோஷத்தை ஒருபுறம் ஒலிக்கச்செய்தனர். புலவர்கள் தங்கள் புலமையை விளக்கி மற்றொருபுறம் சொற்பொழிவுகள் ஆற்றிவந்தார்கள்.

அம்பிகைக்குப் பிரியமான வீணை முதலான வாத்தியங்களின் நாதம் எப்பொழுதும் ஒலித்தவண்ணமாக இருந்தது. அக்காலத்தில் நம் நாட்டில் வாழ்ந்த எல்லாச் சங்கீத வித்வான்களும்,

பாகவத சிகாமணிகளும் போட்டியிட்டுக்கொண்டு தங்கள் தங்கள் கலைத்திறன்களைத் தேவிக்கு அர்ப்பணம் செய்தார்கள். ஸரஸ்வதி பூஜையன்று இராமநாதபுரம் பூச்சி ஐயங்காரென்னும் ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்களின் கச்சேரியும், மதுரை புஷ்பவனம் ஐயரின் கச்சேரியும் மிகவும் சோபையை அளித்தன. அந்த விழாவில் இராமனுதபுரம் பூச்சி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்களின் கச்சேரி தஞ்சை ஜில்லா ரசிகர்களைப் பரம ஆனந்தத்தில் ஆழ்த்திவிட்டது. ஸ்வாமிகள் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் அவ்வப்போது நேரில் விஜயம் செய்து, அடியார்களை மகிழ்வித்த காட்சி என்றும் மறக்க முடியாததாகும். ஏறக்குறைய 300 தொண்டர்கள் இவ்விழாவில் தொண்டாற்றினுர்கள். ரூபாய் 50,000 வரையில் (அன்னதானம் நீங்கலாக) இவ்விழாவுக்குச் செலவிடப்பட்டது. லக்ஷம் பேர்களுக்கு மேல் அன்னதானம் செய்யும் பணியை மகான் தேப்பெருமாள் நல்லூர் சிவன் அவர்கள் ஏற்று நடத்தினுர்கள். ஒவ்வொரு நாளும் பதினுயிரம் மக்களுக்குமேல், சேர்ந்தாற்போல் பத்து நாட்களுக்கு அறுசுவையுடன் அன்னமிட வேண்டிய உணவுப் பொருள்களைச் சேகரிக்க எவ்வளவு பிரயாசை வேண்டுமென்பதை ஆலோசித்தால், அஃது ஓர் ஆச்சர்யத்தையே விளக்கும். திவான் சேஷையா சாஸ்திரிகள் வீட்டில் ஒரு பண்டக சாலை நிறுவப்பெற்றது. தஞ்சை ஜில்லா மிராசுதார்களும், வியாபாரிகளும் ஒரு மாதத்துக்கு முன் தொடங்கியே தங்கள் காணிக்கைகளாக உணவுப் பொருள்களை இவ்விழாவுக்கென அனுப்பிவைத்தார்கள். அரிசி மூட்டைகள் ஆயிரக்கணக்காக வந்து குவிந்தன. நூற்றுக்கணக்கான மரப் பீப்பாய்களில் மோரை அடைத்து அவற்றைத் தண்ணீரில் மிதக்கவிட்டிருந்தார்கள். சுமார் 200 சமையல் சிப்பந்திகள் பணி செய்தனர். மடத்தின் தோட்டத்தில் ஒரே தடவையில் 1000 பேர்கள் உட்கார்ந்து புசிக்கும் வசதியுடன் பெரிய பந்தல்கள் அமைக்கப்பெற்றிருந்தன. பனிக்குன்று போன்ற அன்னக் குவியல்கள், யானைகளை முழுகவடிக்கும் அண்டாக்களில் சாம்பார், ரசம் முதலிய மற்ற உணவுப் பொருள்கள் ஆகியவை தயாரிக்கப் பெற்றன. இவையெல்லாம் சிவனது தனிமையான மேல் பார்வையில் நடைபெற்றன. எல்லாம் அமைதியுடன் யாவருக்கும் எவ்விதமான குறைவுமின்றி நடந்தேறியது. ஒழுங்கைப் பாதுகாப்பதில் சிவன் மிகவும் கண்டிப்பானவர். எந்தச் சிப்பந்தியும் அல்லது உணவருந்த வருபவரும் அவரது கட்டுப்பாட்டுக்கு அடங்கியே நடக்கவேண்டும்.

பத்தாவது நாளாகிய விஜயதசமி அன்று இரவில், ஸ்ரீ ஸ்வாமிகள் உள்ளூர்த் தேவாலயங்களுக்கு விஜயம் செய்து ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டார்கள். அன்று யானைமீது அம்பாரியில் ஸ்வாமிகள் பவனி வந்த காட்சியைப் பல்லாயிரம் மக்கள் கண்டு களித்தனர். சுமார் ஒரு மைல் நீளமுள்ள அந்த ஊர்வலத்தை **ஆண்டிப்பட்டி ஜமீன்தார் பெத்தாச்சி செட்டியாரும், திருப்பனந்தாள் காசி மடம் ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்கத் தம்பிரான் ஸ்வாமிகளும்** முன்னின்று நடத்தி வைத்தனர். இருபுறமும் நூற்றுக்கணக்கான பவர் விளக்குகள், கண்ணைக் கவரும் வாண வேடிக்கை, ஆறு ஜதை நாயனம், மூன்று ஜதை பாண்டு, வேத பாராயணம், தேவார கோஷ்டி, பஜனை கோஷ்டி, நான்கு யானைகள், நாட்டியக் குதிரைகள் இவைகளுடன் அன்று தேஜோமயமாய் விளங்கிய ஸ்வாமிகளின் திருமேனியைத் தரிசித்து அனைவரும் பாக்யசாலிகளானார்கள்.

---

## 7. கல்விக்கும் கலைகளுக்கும் ஊக்கமளித்தமை: அத்வைத சபைக் கூட்டமும் பண்டிதர்களுக்குப் பாராட்டும்

*1917*-ஆவது வருடம் ஆகஸ்டு மாதம், கும்பகோணம் **அத்வைத சபையின்** வருடாந்தரக் கூட்டம் முடிவு பெற்றவுடன், ஸ்வாமிகள் ஒரு வித்வத் சபையைக் கூட்டி, அக்காலத்தில் மகா வித்வான்களாக விளங்கிய **பிரம்மஸ்ரீ பழமார்நெறி இராமஸ்வாமி சாஸ்திரிகள், பிரம்மஸ்ரீ திருவிசைநல்லூர் வேங்கட சுப்பா சாஸ்திரிகள்** ஆகியவர்களுக்குச் **சாஸ்திர ரத்னாகரம்** என்னும் பட்டத்தை வழங்கி, இரட்டை சால்வை, வெள்ளிஜாரி முதலிய சன்மானங்கள் செய்து அவர்களைக் கௌரவித்தார்கள். இந்தப் பட்டத்தை அதன் பிறகு நாளது வரையில் பல வித்வான்கள் பெற்றிருக்கிறார்கள். அவர்களின் பெயர்கள்:—

1. மன்னார்குடி மகாமகோபாத்யாய யக்ஞசாமி சாஸ்திரிகள்.
2. சிதம்பரம் மகாமகோபாத்யாய தண்டபாணிசாமி தீக்ஷிதர்.
3. புதுக்கோட்டை சம்ஸ்தான தானாதிகாரி திருவையாறு விச்வநாத சாஸ்திரிகள்.



1914-இல் வித்யாப்யாஸம் முடிவுபெற்றவுடன் கும்பகோணம் ஸ்ரீமடத்தில்



1915 இல் ஸ்ரீ ஆசார்யர்கள் மடத்து நிர்வாகம் ஏற்றுக் கொண்ட சமயம்



1920-இல் சாதுர் மாத சங்கல்பம் எடுத்துக் கொண்ட சமயம்.



1932-இல் சென்னைக்கு விஜயமான சமயம் வெள்ளி சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறார்கள்



ஸ்ரீ பரமாசார்யர்கள் சிம்மாஸனத்தில் இரண்டு மஹா பண்டிதர்கள் ஸ்ரீ ராமசுப்பா சாஸ்திரிகள், கருங்குளம் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் இவர்களுக்கு நடுவில் அமர்ந்திருக்கிறார்கள்.



1923-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் திருவானைக்காவலில்
ஸ்ரீ அகிலாண்டேச்வரிக்கு தாடங்க பிரதிஷ்டை செய்தபிறகு
தர்சனம் கொடுக்கிறார்கள்.



ஆந்திரப்ரதேசம் சிம்மாசலத்தில் மரங்களடர்ந்த இடத்தில்
ஏகாந்தமாக அமர்ந்திருக்கிறார்கள்.



1919-இல் விஜயயாத்திரையாக புறப்பட்ட முதல் நாளன்று
(சிவராத்திரி) கும்பகோணம் காவேரி பகவத்
கட்டத்தில் பூஜை நடத்துகிறார்கள்.



1926-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் வெள்ளி சிம்மாஸனத்தில்
அமர்ந்து தர்சனம் கொடுக்கிறார்கள்.

4. தேதியூர் சுப்ரமணிய சாஸ்திரிகள்.

5. விஜயநகரம் மகாமகோபாத்யாய தாத சுப்பராய சாஸ்திரிகள்.

6. குண்டூர் திண்டுகூரி நரசிம்ம சாஸ்திரிகள்.

7. கல்கத்தா சர்வகலாசாலை மகாமகோபாத்யாய என். எஸ். அனந்த கிருஷ்ண சாஸ்திரிகள்.

8. கல்கத்தா சர்வகலாசாலை மகாமகோபாத்யாய ஏ. சின்ன சாமி சாஸ்திரிகள்.

9. காசிஹிந்து சர்வகலாசாலை டி.வி. இராமசந்திர தீக்ஷிதர்.

10. காசி மகா பண்டிதர் ராஜேச்வர சாஸ்திரி திராவிட்.

11. மடம் ஆஸ்தான வித்வான் டி. வி. லக்ஷ்மீ நாராயண சாஸ்திரிகள்.

12. சிதம்பரம் ராமசுப்பா சாஸ்திரிகள்.

13. சென்னை, சம்ஸ்கிருத காலேஜ், போலகம் ராமா சாஸ்திரிகள்.

14. திருச்சி, போலகம் சுந்தர சாஸ்திரிகள்.

15. கிழக்கு கோதாவரியைச் சேர்ந்த ஸ்ரீ பாதம் லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகள்.

16. எல்லூரு, மண்டலிக வேங்கடசாஸ்திரிகள்.

17. சென்னை அரசாங்கக் கவிஞர் மகாமகோபாத்யாய மதுரை கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்.

18. பம்பாய் பாரத வித்யா பவனத்தின் பேராசிரியர் டி. ஏ. வேங்கடேச்வர தீக்ஷிதர்.

19. புதுக்கோட்டைச் சம்ஸ்தான தானாதிகாரி காளி ரங்காச் சாரியார்.

இவர்கள் யாவரும் ஸ்வாமிகளால் அவ்வப்போது நன்கு கௌரவிக்கப்பட்டு மடத்திலிருந்து தகுந்த சன்மானங்களையும் அடைந்திருக்கிறார்கள்.

**மாணவர்களுக்கு உதவி**

அதே வருடம் கல்லூரி மாணவர்கள் நமது மதத்தில் பற்றுள்ளவர்களாக இருக்கவேண்டுமென்பதை எண்ணி, அவர்களுக்கென ஆங்கிலத்தில் ஒரு கட்டுரைப் போட்டியை ஸ்வாமிகள் ஏற்படுத்தினார்கள். 'காலத்தின் மாறுபாடுகளை அநுசரித்துச் சநாதன தர்மத்தைக் காப்பாற்றும் முறையை எவ்விதம் நிர்ணயிக்கலாம்' என்பது அப்போட்டி வியாஸத்தின் தலையங்கம். சென்னை, திருச்சி, மதுரை முதலிய பெரிய நகரங்களின் கலாசாலை மாணவர்

கள் இந்த வியாஸத்தை ஆங்கிலத்தில் எழுதிப் போட்டியில் கலந்துகொண்டனர். வெற்றி பெற்ற வியாஸங்கள் எழுதிய முதல் மூன்று மாணவர்களுக்கு முறையே பணப் பரிசு, புத்தகங்கள் முதலானவை வழங்கப்பட்டன. இதில் முதல் பரிசு பெற்றவர், பின்பு சென்னைச் சர்வகலாசாலையில் சரித்திரப் பேராசிரியராக இருந்த **வி. ஆர். இராமசந்திர தீக்ஷிதர்** ஆவர். அந்த வருடத்திலும், அடுத்த வருடங்களிலும் ஸ்வாமிகள் கல்லூரி மாணவர்களுக்கும், கலாசாலை மாணவர்களுக்கும் உபகாரச் சம்பளம் கொடுப்பதென ஓர் ஏற்பாடும் செய்தார்கள்; மதக் கல்வி போதிக்கப்படும் கல்விச் சாலைகளுக்குப் பொருளுதவியும் செய்து வந்தார்கள்.

### ஏழைகளுக்கு வைத்திய வசதி

அக்காலத்தில், மடத்தில் ஓர் ஆயுர்வேத வைத்தியசாலையை நிறுவி ஏழைகளுக்கு இலவசமாக வைத்திய வசதி கிடைக்கும்படி ஸ்வாமிகள் செய்திருந்தார்கள். மயிலாப்பூர் வேங்கட்ரமண வைத்திய கலாசாலையில் தேறிய, வைத்திய விசாரத **ஜகத் ரக்ஷக சாஸ்திரிகளும்**, வைத்திய விசாரத திருவண்ணாமலை **கிருஷ்ண சாஸ்திரிகளும்**, இந்த வைத்திய சாலையில் வைத்தியர்களாக அமர்ந்திருந்தார்கள்.

### கலைகளுக்கு ஊக்கமளித்தது

1914-ஆவது வருடம் முதல் 1918-ஆவது வருடம் வரை ஸ்வாமிகள் கும்பகோணத்தில் தங்கியிருந்த காலத்தில், வடமொழி, தென்மொழி வித்வான்களும், சங்கீத வித்வான்களும், மற்றும் கல்வியில் ஆர்வமுள்ள அன்பர்கள் பலரும் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் ஸ்வாமிகளை தரிசிக்க வந்து கொண்டிருந்தனர். அநேகமாக ஒவ்வொரு நாளும் மாலை நேரங்களில் மடத்தில் வித்வான்களின் சபைகள் கூடுவதுண்டு. அப்பொழுது காரசாரமாகச் சாஸ்திர விசாரங்கள் நடைபெறும். ஸ்வாமிகள் எல்லோருடைய கட்சிகளையும் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, முடிவில் ஒவ்வொருவருடைய கட்சியின் உண்மைகளையும் விளக்கி யாவரும் ஏற்றுக்கொள்ளுமாறு விவாதத்தை முடிக்கும் அழகைப் பார்த்து யாவரும் ஆச்சரியமடைவார்கள்.

அந்நாளில் அஷ்டாவதானிகள். சதாவதானிகள் என்னும் பெயர் பெற்ற பல்கலைப் புலவர்கள் இந்தச் சபைகளுக்கு வந்து தங்கள் புலமைகளைக் காட்டுவதுண்டு. சதாவதானி என்பவர் நூறு விஷயங்களின் கேள்விகளை மனஸில் வாங்கிக் கொண்டு,

பின்னர் அவைகளுக்கு ஒன்று விடாமலும், தவறு இல்லாமலும் விடை கூறுவர். அஷ்டாவதானி என்பவர் ஒரே காலத்தில் எட்டு விஷயங்களை மனஸில் வாங்கிக் கொண்டு பதில் கூறுவர். அவர்கள் பல பாஷைகளிலும் கவிதை இயற்றுவதில் வல்லவர்களாயிருப்பர்; கணிதம், ஜோதிஷம், தர்க்கம், வேதாந்தம், மீமாம்ஸை, வியாகரணம் இவைகளை நன்கு கற்றவர்களாகவுமிருப்பர் ; அவர்களது திறனைப் பரீக்ஷிக்கும்போது பண்டிதர்கள் அவர்களைச் சுற்றி உட்கார்ந்திருப்பார்கள். வடமொழியிலோ, தென்மொழியிலோ ஒருவர் ஒரு செய்யுளின் முதலடியை மாத்திரம் கூறிவிட்டு அடுத்த வித்வானிடம் அந்தப் பரீக்ஷையை விட்டு விடுவர். அடுத்திருப்பவர் ஒரு கணித சாஸ்திரியாக இருந்தால், ஒரு பெரிய கணக்கை அவரிடம் கூறிவிட்டு அதன் விடைக்காகக் காத்திருப்பார். மற்றொருவர் ஒரு சோதிடராக இருக்கக்கூடும் ; அவர் ஒரு ஜாதகத்தை வாயால் கூறிவிட்டு அதனுடைய இராசி பலனையும் அம்ச பலனையும் அந்த அவதானியிடமிருந்து தெரிந்துகொள்ள ஆவலுள்ளவராக இருப்பார். சங்கீத வித்வானொருவர் அபூர்வ ராகத்தைப் பாடுவார் ; ஒருவர் ஒரு புஷ்பத்தின் பெயரைச் சொல்லிவைப்பார் ; இராமாயணத்தில் ஓர் குறிப்பிட்ட செய்கையை நிகழ்த்திய ஓர் அரக்கனது பெயரைச் சொல்லும்படி ஒருவர் கேட்பார் ; இவ்விதமாக இன்னும் பல கேள்விகள் பிறக்கும். கேள்விகள் முடிந்ததும் இவ்விதப் பரீக்ஷைக்கு உட்படும் கலாவல்லவர்கள் வரிசைக் கிரமமாக அவைகளுக்கு ஒரு தவறு கூட இல்லாது விடைகளைக் கூறிக்கொண்டே வருவார்கள். பார்ப்பவர்களுக்கு இக்காட்சி ஆச்சரியத்தை அளிக்கும்.

### ஸ்வாமிகளும் அவதானமும்

ஒரு சமயம் ஸ்வாமிகளைக் காண மிகவும் வயோதிகரான ஸ்ரீ வைஷ்ணவ சதாவதானி ஒருவர் மடத்திற்கு வந்திருந்தார். வழக்கம்போல் வித்வான்கள் அவரை இவ்விதமாகப் பரீக்ஷைகளுக்கெல்லாம் உள்ளாக்கினார்கள். வித்வான்கள் கேள்விகளையெல்லாம் கேட்டு வரும்போதே, ஸ்வாமிகள் மற்றொருவரைக் கொண்டு, தாம் கூறிவரும் விடைகளைக் குறித்துக்கொள்ளும்படி சொல்லியிருந்தார்கள். அந்தப் பெரியவர் சற்றும் தயங்காமல் விடைகளை அளித்தார். ஸ்வாமிகள் சொல்படி குறித்து வைத்திருந்த விடைகளும், அவர் கூறிய விடைகளும், ஒன்றாகவே இருந்தன. ஸ்வாமிகளின் மேதையைப் பற்றி அங்கிருந்த அனைவருக்கும் ஓர் வியப்புண்டாயிற்று. ஸ்வாமிகள் அந்த சதாவ

தானிக்குக் காஷ்மீர் சால்வையையும், பிற வெகுமானங்களையும் அளித்து அவரைப் பெருமைப்படுத்தினர்கள். பின்னர் சில வருடங்கள் அடிக்கடி அவர் மடத்திற்கு வருவதுண்டு. இவ்விதம் அக்காலத்தில் பல கலைஞர்கள் ஸ்வாமிகளிடம் வந்து தங்கள் கலைத் திறன்களைக் காட்டிச் சன்மானங்கள் பெற்றுப் போவார்கள். அந்நாளில் பெரியதொரு சர்க்கஸ் கம்பெனியை நடத்திவந்த **ப்ரொபஸர் இராமமூர்த்தி** என்றவரும் ஸ்ரீஸ்வாமிகளைத் தரிசித்து, யோகாப்யாஸ சம்பந்தமான சில சந்தேகங்களை ஸ்வாமிகளிடம் கேட்டு அவற்றில் விளக்கம் பெற்றுக்கொண்டார். அந்தக் கனவான் பின்பொரு தடவை ஸ்வாமிகளைப்பற்றித் தம் நண்பர் ஒருவரிடம் கூறியபோது, 'பிரம்மசரியத்தின் சக்தியை ஸ்வாமிகளிடம் தாம் பார்த்ததாயும் அந்தச் சக்தியைக் கொண்டு உலகில் சாதிக்கமுடியாதன எல்லாவற்றையும் சாதிக்கலாம்' என்றும் கூறினராம்.

1917-ஆவது வருடம் **தர்பங்கா மகாராஜா** தமது தென்னாட்டு யாத்திரையின்போது கும்பகோணத்திற்கு வந்து, மூன்று நாட்கள் அவ்விடம் தங்கி, ஸ்வாமிகளைத் தரிசித்து தென்னாட்டையும் வடநாட்டையும் ஒற்றுமைப்படுத்தும் தேவாலயங்கள், பண்பாடு இவைகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். ஸ்வாமிகளது தவ மகிமையில் அவர் ஈடுபட்டு, ஸ்வாமிகளை வடநாட்டுக்கு விஜயம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

### இரு மேதாவிகளுடன் விஞ்ஞான ஆராய்ச்சி

கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியின் பௌதிகப் பேராசிரியராகவும், பின்னர் பிரின்ஸிபாலாகவும் விளங்கிய ஸ்ரீமான் **பி. இராஜகோபால ஐயர்** ஸ்வாமிகளின் கலையறிவையும், மேதையையும் நண்பர்கள் மூலம் கேள்வியுற்று, அவர்களைச் சந்தித்து அவர்களுடன் உரையாட வேண்டுமென்று அவாவுள்ளவராக இருந்தார். ஆயினும் வைதிக ஆசார நியமங்களுடன் விளங்கும் ஒரு சந்யாசியும், பீடத்திற்கு அதிபதிகளுமான ஸ்வாமிகள், தம்மை மதித்துத் தம் பெருமைக் கேற்றவாறு தம்மை வரவேற்றுத் தம்முடன் உரையாடுவார்களா வென்னும் சந்தேகத்தை உள்ளத்தில்கொண்டே, அவ்விதச் சந்திப்பை அவர் வெகுநாள் ஒத்திப் போட்டுக் கொண்டேயிருந்தார். ஆயினும் ஒரு நாள் அவர் தமது மனஸை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு, ஸ்வாமிகளைத் தரிசித்து விடுவதெனத் தீர்மானித்தவராய் மடத்திற்கு வந்து சேர்ந்தார். ஆசாரியஸ்தானத்தில் உள்ள ஸ்வாமிகளுக்கு எவ்

விதம் வந்தனை வழிபாடுகளைச் செய்யவேண்டுமென்பதை அவர் உண்மையில் அறிந்தவரல்லர். அப்படியிருந்தும் அவரது உள்ளத்திலிருந்த அன்பை மட்டும் ஸ்வாமிகள் உணர்ந்து கொண்டு, அவரை ஆதரவுடன் ஏற்று, அவரிடம் பேசத் தொடங்கினார்கள், முதலில் கல்லூரியைப் பற்றியும், மற்றும் பொதுவான விஷயங்கள் பற்றியும் பேச்சுக்கள் நடைபெற்றன. தொடர்ந்து, விஞ்ஞானத்தைப்பற்றிப் பேச்சுக்கள் ஆரம்பமாயின. பௌதிக சாஸ்திரத்தின் நுட்பங்கள் பலவற்றை எளிதில் விவரிக்கும் ஸ்வாமிகளின் புத்தி நுட்பத்தைக் கண்டு இராஜகோபால ஐயர் வியந்தார். இருவரும் அந்தச் சம்பாஷணையில் ஈடுபட்டிருந்த சமயத்தில், மராமத்திலாகா சூப்பரின்டெண்டிங் எஞ்சினியராக இருந்த **பி. வி. மாணிக்க நாயக்கர்** ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தார். ஸ்வாமிகளுக்கு அவர் பல வருடங்கள் முன்பே அறிமுகமானவர். அவர் ஸ்வாமிகளிடம் ஆழ்ந்த பக்தியும் மதிப்பும் கொண்டவர். அவர் தமக்கு முன் வந்து ஸ்வாமிகளுடன் பேசிக்கொண்டிருப்பவர் யாரென்பதை அறிந்தவரல்லர். ஆயினும் சம்பாஷணைகளின் போக்கிலிருந்து அவரைத் தெரிந்துகோள்ள வேண்டுமென்று நாயக்கர் விரும்பினார். ஸ்வாமிகளே நாயக்கருக்கு ஐயரை அறிமுகப்படுத்தினார். நாயக்கரும் கணித சாஸ்திரத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர். பின்னர் வான சாஸ்திரத்தைப் பற்றி பேச்சுத் தொடங்கிற்று. இந்தக் கலையில் நமது புராதன வழிக்கும், மேனாட்டார் வழிக்கும் உள்ள ஒற்றுமைகளை ஸ்வாமிகள் விளக்கிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் கூறிய விளக்கங்களைக் கல்லூரியிலிருந்து ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியை வரவழைத்து மேலும் தெளிவுபடுத்தினார்கள். வான சாஸ்திரங்களின் நுணுக்கங்களை ஸ்வாமிகள் தெளிவுபடுத்தியதைக் கண்டு அந்த இரு விஞ்ஞானிகளும் மிகவும் வியப்படைந்தனர். சர்வ கலாசாலைப் படிப்பு இல்லாமலேயே, இப் பயிற்சிகளெல்லாம் ஸ்வாமிகளுக்கு எவ்விதம் ஏற்பட்டன என்று அவர்கள் பெரிதும் வியப்பை அடைந்து, தாங்கள் சர்வகலாசாலையின் உயர்தர பட்டதாரிகள் என்னும் பெருமையை மறந்தவர்களானார்கள். அன்று முதல் ஐயர் பல தடவைகள் மடத்திற்கு வந்து போய்க்கொண்டிருந்தார். ஸ்வாமிகளிடம் உரையாடுவதே தமது வாழ்க்கையின் லக்ஷியங்களில் சிறந்ததென அவர் மதித்தார்.

ஸ்ரீ பி. வி. மாணிக்க நாயக்கர் சம்ஸ்கிருதத்தையும் பிறமொழிகளையும் தமிழ் எழுத்துக்களைக் கொண்டே எளிதாக உச்சரிக்கவும் எழுதவும் ஓர் நூதன முறையைக் கண்டுபிடித்து, அதை ஓ

புத்தக வடிவமாகவும் வெளியிட்டிருந்தார். ஸ்வாமிகள் அவரது அந்த முயற்சியை வெகுவாகப் பாராட்டி, அந்தப் புத்தகத்திற்கு ஓர் ஸ்ரீமுகமும் கொடுத்திருந்தார்கள். நாயக்கர் வெளியூர்கள் செல்லும் போதெல்லாம் தமது நூதன முறையைப்பற்றிக் கற்றவர்களின் கூட்டங்களில் பேசி, இந்த முறையைப் பின்பற்றும்படி யாவரையும் கேட்டுக் கொள்வதுண்டு; இது சம்பந்தமாய் நாயக்கர் தஞ்சையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசும்போது, ஸ்வாமிகள் தம் ஆராய்ச்சிக்கு அநுக்ரஹம் செய்துள்ளதையும் விளம்பரப்படுத்தினர்.

**ஆந்திர ஜமீன்தாரின் அன்பளிப்பு**

விசாகப்பட்டினம் ஜில்லா ஷேர்முகம்மதுபுரம் ஜமீன்தார் ராஜா ஏ. வி. ஜெக்காராவ் என்பவர் விசாகையில் ஓர் வான சாஸ்திர ஆராய்ச்சி நிலையத்தைப் பல லக்ஷ ரூபாய்கள் செலவிட்டு நிறுவியிருந்தார். அவர் உலகம் முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து, பல வான சாஸ்திரிகளைச் சந்தித்து அவர்கள் மூலம் அக்கலையின் விசேஷ நுட்பங்களை அறிந்து, அவைகளை நம் நாட்டிற்குப் பயன்படும்படி செய்யும் தொண்டை மேற்கொண்டிருந்தார். ஒரு சமயம் அவர் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தார். வான சாஸ்திரத்தில் ஸ்வாமிகளுக்கு இருக்கும் ஞானத்தைக் கண்டு அவர் வியப்படைந்து, அவர் இத்தாலியில் பல்லாயிரம் ரூபாய்கள் கொடுத்து வாங்கிய சுமார் நான்கடி நீளமும், ஆறங்குல குறுக்களவுமுள்ள மிகவும் நுட்பமான தூரதிருஷ்டிக் கண்ணாடி ஒன்றை ஸ்வாமிகளின் ஆராய்ச்சிக்காக அளித்தார்.

**பிற மதங்களில் சமதிருஷ்டி.**

கடவுளை ஒப்புக்கொண்ட மதம் எந்த மதமாக இருந்தாலும் ஸ்வாமிகளுக்கு அதனிடம் நல்ல மதிப்புண்டு. அந்த அந்த மதத்தினர் அவரவர்கள் மதத்திலிருந்து கொண்டே கடவுளை வழிபட வேண்டுமென்பது ஸ்வாமிகளின் அபிப்பிராயமாகும். பலர் ஸ்வாமிகளின் பரந்த நோக்கத்தையும், சகிப்புத் தன்மையையும், நேரில் கண்டும் கேள்வியுற்றுமிருந்தனர். ப்ரம்மஞான சபையைச் சேர்ந்த **ஸ்ரீ ஜினராஜ தாஸர்** ஸ்வாமிகளை ஒருமுறை தரிசித்து உலக மதங்களைப்பற்றி விரிவாக உரையாடி, ஸ்வாமிகளின் பரந்த நோக்கங்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார்.

**சங்கீதக் கலைக்கு ஆதரவு**

சங்கீதத்திலுள்ள சாஸ்திரீயமான அம்சங்களைச் சுவைப்பதில் ஸ்வாமிகளுக்கு இணையாக எவரையும் கூற முடியாது. பெரிய

வித்வான்கள் மடத்திற்கு வந்து கச்சேரிகள் நடத்தும் பொழுதெல்லாம் அவர்கள் பாடும் கீர்த்தனைகளின் பொருள்களிலும், ராகம், தாளம் இவைகளின் நுட்பங்களிலும், ஸ்வாமிகள் தமது கவனத்தைச் செலுத்தி, வித்வான்கள் வியப்படையும்படியாகப் பல கேள்விகளைக் கேட்டுத் தம் சந்தேகங்களையும் அவர்களிடம் தெரிவிப்பதுண்டு. தெலுங்கு மொழியில் ஸ்வாமிகளுக்கு இருக்கும் பயற்சியினால் ஸ்ரீ தியாகையர் முதலியவர்களுடைய கீர்த்தனைகளின் பொருள்களை ஸ்வாமிகள் வித்வான்களுக்கு எடுத்துக் கூறுவார்கள். பொருளை அறிந்தே கீர்த்தனைகளைப் பாடவேண்டுமென்றும், ஆகையால் வித்வான்கள் தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம் ஆகிய இம்மூன்று மொழிகளையாவது நன்கு கற்கவேண்டுமென்றும், பழைய காலத்தில் வித்வான்கள் இவ்விதம் பல பாஷைகளைக் கற்று வந்திருந்தார்களென்றும் ஸ்வாமிகள் அடிக்கடி வற்புறுத்திக் கூறுவர். ஸ்ரீ சாம சாஸ்திரிகள், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், இவர்களின் கிருதிகள் வித்வான்களிடையில் அதிகமாகப் பழக்கத்தில் இல்லாததைக் கண்டு, தம்மிடம் வரும் வித்வான்களை அவ்விருவருடைய சாகித்தியங்களையும் பாடம் செய்து கொள்ளும்படி ஸ்வாமிகள் கூறுவதுமுண்டு.

அக்காலத்தில் சங்கீத வித்வான்களும், கதாகாலக்ஷேபங்கள் செய்வதில் ஈடுபட்டிருந்த பாகவதர்களும் ஸ்வாமிகள் முன்னிலையில் தங்கள் கச்சேரிகளையும், கதா காலக்ஷேபங்களையும் நிகழ்த்தி அவர்களின் ஆசியைப் பெறுவதை ஒப்பற்ற பெருமையாகக் கருதி வந்தார்கள்.

மகா **வைத்தியநாத ஐயரின்** முக்கிய சிஷ்யரும், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் சிஷ்ய பரம்பரையில் வந்தவரும், பல மாணவர்களுக்குக் குருவாக அமைந்திருந்தவருமான **உமையாள்புரம் சுவாமி நாதையர்** அக்காலத்தில் கும்பகோணத்தில் தங்கியிருந்தார். அவர், அநேகமாக ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகளைத் தரிசிக்க வருவார். அவரிடம் ஸ்வாமிகள் சங்கீதக் கலையைப்பற்றித் சர்ச்சைகள் பல செய்வதுண்டு. ஸ்வாமிகள் அவருக்கு 'நாதானுபவ ஸாரக்ஞ' என்னும் பட்டத்தை அளித்தார்கள். திருக்கோடிகாவல் **கிருஷ்ண ஐயர்** ஒரு முறை மடத்திற்கு வந்து ஸ்வாமிகள் முன்னிலையில் பிடில் வாசித்துத் தமது அபூர்வமான வாசிப்பினால் ஸ்வாமிகளை மகிழச் செய்தார்

மாயவரம் வீணை **வைத்தியநாத ஐயர்** தம் புதல்வர்கள் **சபேச ஐயருடனும், கிருஷ்ணமூர்த்தியுடனும்** அடிக்கடி ஸ்வாமிகளைத்

தரிசிக்க வருவதுண்டு. சபேச ஐயர் மிகவும் அபூர்வமாக வீணை வாசிப்பார். தமது மெல்லிய குரலுடன் வீணையின் நாதத்தை இணைத்து அவர் கச்சேரி செய்வதைக் கேட்பவர்களெல்லாம் பரவசமடைவார்கள். அம்பிகையின் பேரில் அவர் கீர்த்தனைகளைப் பாடி வீணை வாசிக்கும்போது ஸரஸ்வதியின் மேதாவிலாஸம் அவரிடம் காணப்படும். தம் புதல்வர் சபேச ஐயர் கச்சேரிகள் செய்ய முற்பட்ட பிறகு, வைத்தியநாத ஐயர் கச்சேரி செய்வதை நிறுத்திவிட்டார். ஒரு நாள் ஸ்வாமிகள் முன்னிலையில் சபேச ஐயர் மிகவும் அபூர்வமாக வீணை வாசித்துக் கொண்டிருந்தார். வைத்தியநாத ஐயரும் அவர் முன் உட்கார்ந்துகொண்டு தம்மை அறியாமலேயே, ‘சபாஷ் என் அப்பனே!’ எனக் கூறினார். அப்பொழுது ஸ்வாமிகள் வைத்தியநாத ஐயரைப் பார்த்துப் புன்னகையுடன், ‘சபை நடுவில் நீங்கள் உங்கள் புதல்வனுடைய ஞானத்தை வெளிப்படையாகப் புகழலாகாது; மற்றவர்கள் புகழ்ந்தால்தான் தங்கள் புதல்வனுக்குப் பெருமை ஏற்படும். தாங்கள் மட்டும் தங்கள் மனத்திற்குள்ளேதான் புதல்வன் கலைத் திறனை அனுபவிக்க வேண்டும்’ எனச் சொன்னார்கள். அப்பொழுது ஐயர் ஸ்வாமிகளை வணங்கி, ‘வயதான எனக்கு இந்தச் சிறிய விஷயம் புலனாகவில்லை. இனி மகா சந்நிதானத்தின் உத்திரவுப்படி நடந்துகொள்ளுகிறேன்’ என தெரிவித்துக் கொண்டார்.

அக்காலத்தில் அடிக்கடி **நாகராஜ ராவின்** புல்லாங்குழல் கச்சேரி ஸ்வாமிகளின் சந்நிதானத்தில் நடைபெறுவதுண்டு; கச்சேரிக்குப் பக்கவாத்யமாக செம்மங்குடி **நாராயணஸ்வாமி ஐயர்** பிடில் வாசிப்பார்; சாக்கோட்டை **ரங்கு ஐயங்கார்** மிருதங்கமும், உமையாள்புரம் **சுந்தரம் ஐயர்** கடமும் அநேகமாக இதில் சேர்ந்திருக்கும். அப்பொழுதெல்லாம் வெகுநேரம் ஸ்வாமிகள் கச்சேரிகளில் அமர்ந்திருந்து ரசமான கட்டங்களில் வித்வான்களை உற்சாகப்படுத்துவதுண்டு.

**திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகள்** கும்பகோணத்திலேயே வசித்து வந்ததால் அவருடைய கதாகாலக்ஷேபங்களும் அக்காலத்தில் அடிக்கடி மடத்தில் நடைபெறுவதுண்டு. ஒலிபெருக்கி இல்லாத அந்த நாளில் பல்லாயிரக்கணக்கான மக்கள் அவரது கதையைக் கேட்டு மகிழ்ச்சியுறுவார்கள். ரசிகர்களின் தன்மையை அறிந்து அவர்களின் ருசிக்குத் தக்கவாறு பேசுவதிலும், பாடுவதிலும் சாஸ்திரிகளுக்கு இணை வேறு எவரையும் கூற முடியாது. அவர் கதைக்கு அந்த நாளில் வித்வான் **அழகநம்பி பிள்ளையும்**

அவருக்குப்பின் **கோதண்டராம ஐயரும்** மிருதங்கம் வாசித்து வந்தார்கள். இனிய சாரீரம் படைத்த **குஞ்சு** என்னும் சௌராஷ்டிரரும், **நல்லூர் விசுவநாத ஐயரும், மாதிரிமங்கலம் நடேச ஐயரும்** சாஸ்திரிகளுக்குப் பின்பாட்டுக்களைப் பாடிவந்தனர். சாஸ்திரிகள் தாம் சங்கரரது சரித்திரத்தைக் கதாகாலக்ஷேபம் செய்யும் முறையில் கீர்த்தனங்களாகவும், வசனங்களாகவும் சிறந்த வித்வான்களின் உதவியைக் கொண்டு அமைத்திருப்பதாயும், அதனை ஸ்வாமிகளும் கேட்டருளவேண்டுமென்றும் விக்ஞாபித்துக் கொண்டார். ஸ்வாமிகளும் அவரது கோரிக்கையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு, மடத்தில் சங்கர விஜயத்தைக் காலக்ஷேபம் செய்ய அனுமதித்தார்கள். சாஸ்திரிகள் ஏழு பாகங்களாக அக்கதையைப் பிரித்து, ஏழு நாட்கள் மடத்தில் பிரவசனம் செய்தார். சாஸ்திரிகள் மிகவும் அருமையாகச் செய்த இந்தக் கதாகாலக்ஷேபத்திற்கு வெளியூர்களிலிருந்தும், உள்ளூரிலிருந்தும் ரசிகர்கள் ஆயிரக்கணக்காகக் கூடி, அதுவரை யாவராலும் நிகழ்த்தப்படாத அந்தக் கதையைக் கேட்டு மகிழ்ந்தனர். ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகள் முழுநேரமும் கதையில் அமர்ந்திருந்து சாஸ்திரிகளைப் பெருமைபடுத்தினார்கள். சாஸ்திரிகளது மேதையை மெச்சி முடிவு நாளன்று அவருக்குப் பீதாம்பரம், தோடா முதலான சன்மானங்களைச் செய்து ஸ்வாமிகள் அவரைக் கௌரவித்தார்கள்.

மேலும் அந்த நாளில் கதாகாலக்ஷேபங்கள் செய்வதில் மிகப் பிரசித்தியுடன் விளங்கிய **சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர், தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர், பாலக்காடு அனந்தராம பாகவதர், ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர்: கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர், மாங்குடி சிதம்பர பாகவதர், பழனி சுப்பிரமணிய பாகவதர், ஸ்ரீரங்கம் சடகோபாச்சாரியார்** முதலான வித்வான்கள் ஸ்வாமிகள் சந்நிதானத்தில் கதாகாலக்ஷேபங்கள் செய்து ஸ்வாமிகளால் கௌரவிக்கப்பட்டு, அவர்களிடமிருந்து உயர்ந்த சன்மானங்களையும் அடைந்திருக்கிறார்கள். தம் இளம் பிராயத்திலேயே இத்துறையில் பிரசித்தி அடைந்த **சூலமங்கலம் சௌந்தரராஜ பாகவதரையும்** இந்த வரிசையில் சேர்த்துக் கொள்ளவேண்டும். அந்த நாளில் கீதாப் பிரவசனம் செய்வதில் பிரக்யாதி பெற்றிருந்த மகா வித்வான் **திருவையாறு லக்ஷ்மணாச்சாரியாரும்** ஸ்வாமிகளது சந்நிதானத்தில் கதாகாலக்ஷேபம் செய்து ஸ்வாமிகளது பாராட்டுக்குப் பாத்திரமாகி அவர்களிடம் ஒப்பற்ற சன்மானங்களைப் பெற்றிருக்கிறார். ஹரிகதா காலக்ஷேபங்களுக்குப்

பிறப்பிடமான மகாராஷ்டிர தேசத்திலிருந்து பாகவதர் ஒருவர் தமது கோஷ்டியுடன் கும்பகோணத்திற்கு விஜயம் செய்திருந்தார். அவர் சிவாஜியின் குருவான **ஸமஸ்த ராமதாஸ் சுவாமிகளின்** சிஷ்ய பரம்பரையைச் சார்ந்த **மோர்காம்கர் பீடத்தின் மடாதிபதி ஆவார்.** அவர் நம் ஸ்வாமிகளைத் தரிசித்து மடத்திலும் மூன்று கதாகாலக்ஷேபங்களைச் செய்தார். அந்தக் கதைகள் மகாராஷ்டிர பாஷையில் அமைந்திருந்த போதிலும் பாட்டுக்களும் வசனங்களும் உள்ளத்தை உருக்குமாறு பக்தி ரசத்துடன் அமைந்திருந்ததினுல் மக்கள் அவற்றை நன்கு ரசித்தார்கள்.

சங்கீத மும்மணிகளுள் **ஸ்ரீ சாமா சாஸ்திரிகளின்** கிருதிகளை அதிகமாகப் பாடம் செய்த ஓர் மாத்துவப் பெரியார் ஸ்வாமிகளைத் தரிசிக்க ஒரு முறை வேலூரிலிருந்து வந்திருந்தார். அம்பிகையின் பேரில் அமைந்துள்ள அந்தக் கிருதிகளை முறைப்படி இனிய சாரீரத்துடன் அவர் பாடியதை ஸ்வாமிகள் கேட்டு ஆனந்தம் அடைந்து அவரைப் பதினைந்து நாட்கள் மடத்திலிருக்கச் செய்து ஒவ்வொரு நாளும் பூஜா காலத்தில் சந்நிதியில் அவரைக் கொண்டு அந்தக் கீர்த்தனங்களைப் பாட உத்திரவிட்டார்கள். **சாமா சாஸ்திரிகளின் கீர்த்தனங்களைப் பாடக் கேட்பதில் ஸ்வாமிகளுக்குத் தனிப்பட்ட அவா உண்டு.**

மதுரையிலிருந்து சங்கீத வித்வான் ஒருவர் ஸ்வாமிகளைத் தரிசிக்க ஒருமுறை வந்திருந்தார். அவர் பெயர் **கிருஷ்ண ஐயங்கார்.** அவர் ஸ்வாமிகளிடம் தமது வித்தையை வெளிப்படுத்த ஆவல் கொண்டார். ஸ்வாமிகளும் சுருதி பக்கவாத்யங்கள் எதுவுமில்லாமலேயே பாடும்படி அவருக்குக் கட்டளையிட்டார்கள். அவர் பியாகடை ராகத்தை ஒரு மணி நேரம் ஆலாபனம் செய்து பாட, ஸ்வாமிகள் இன்பத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள். இந்த வித்வான் அந்த ராகத்தைப் பாடுவதில் நிபுணரென்றும் அவருக்குப் **பியாகடை கிருஷ்ண ஐயங்காரென** ஒரு சிறப்புப் பெயர் உண்டென்றும் பின்னர் தெரியவந்தது.

**கோனேரிராஜபுரம் வைத்தியநாத ஐயரும்** ஸ்வாமிகள் முன்னிலையில் கச்சேரிகள் செய்து ஸ்வாமிகளது பாராட்டைப் பெற்றிருக்கிருர். **வாளாடி கிருஷ்ண ஐயர்** கச்சேரியும் பலமுறை ஸ்வாமிகள் சந்நிதானத்தில் நடைபெறுவதுண்டு. மைசூர் **பிடாரம் கிருஷ்ணப்பா, வீணை சேஷண்ணு, வீணை சுப்பண்ணு** முதலான மகா வித்வான்கள் அக்காலத்தில் தஞ்சைப் பக்கம் வரும்போதெல்லாம் ஸ்வாமிகளைத் தரிசித்து மடத்தில் கச்சேரிகள் செய்துவிட்டுப் போவது வழக்கம். கோட்டு வாத்யம் என்னும் மகா

நாடக வீணையைக் கையாளுவதில் மிகவும் பிரசித்தியாக அந்நாளில் விளங்கியவர் **சகாராம் ராயர்** என்பவராவர். அவர் திருவிடைமருதூரில் வசித்துவந்தார். அவரும் ஸ்வாமிகளின் முன்னிலையில் பலமுறை கச்சேரிகள் செய்து ஸ்வாமிகளிடமிருந்து சன்மானங்களைப் பெற்றிருக்கிறார். பம்பாய் காந்தர்வ மகா வித்யாலயத்தின் அதிபர் **பண்டித விஷ்ணு திகம்பர்** என்பவர் அக்காலத்தில் ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் ஓர் மகா வித்வானாக விளங்கிவந்தார். அதனுடன் அவர் ஓர் உயரிய பாகவதோத்தமருமாவர். அவர் தமது பெரிய பக்த கோஷ்டியாருடன் ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களின் முன்னிலையில் வடநாட்டுச் சம்பிரதாயமான பஜனையைச் செய்தார். பக்தி பரவசத்துடன் அமைந்திருந்த அந்த பஜனையை ஸ்வாமிகள் வெகுவாகப் பாராட்டினார்கள்.

பெண் வித்வான்கள் கச்சேரிகள் செய்யும்பொழுதோ, தனிமையில் பாடும்பொழுதோ ஸ்வாமிகள் நேரில் அமர்ந்திருந்து கேட்பது வழக்கமில்லை. அவ்வாறு கேட்பது அவர்களது ஆச்ரம தருமத்திற்கு விரோதமாகையால், பெண்மணிகளின் சங்கீதக் கச்சேரிகள் மடத்தில் நிகழ்வதற்கு அதிகச் சந்தர்ப்பம் வாய்த்ததில்லை. ஆயினும் வீணை தன அம்மாள், பெங்களூர் நாகரத்தினம் அம்மாள் இவர்களைப் போன்ற சில விதுஷிகள் ஸ்வாமிகளது பிரத்யேக அனுமதியைப் பெற்று மடத்தில் கச்சேரிகள் செய்துள்ளார்கள். இவர்களைப் பூஜா காலத்தில் ஸ்வாமி ஸந்நிதானத்தில் இருந்து தங்கள் வித்தையை அர்ப்பணம் செய்யும்படி ஸ்வாமிகள் உத்திரவிடுவார்கள். அப்பொழுது ஸ்வாமிகள் பூஜையிலமர்ந்திருப்பார்களாதலால் ஸ்வாமிகள் முன்னிலையிலும் இந்தத் தெய்விகக் கலையை வெளிப்படுத்த அவர்களுக்கும் வாய்ப்பு நேருவதுண்டு. மற்றும் சில பெண்மணிகளும் இவ்வாய்ப்பை அடைந்துள்ளார்கள். இவ்வரிசையில் இக்கால விதுஷிகளான **ஸ்ரீமதி பட்டம்மாளையும், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியையும்** குறிப்பிடலாம். அவர்களும் ஸ்வாமிகளின் சந்நிதானத்தில் தங்கள் கலையை அர்ப்பணம் செய்து அவர்களின் ஆசியைப் பெற்றுள்ளார்கள்.

இக்கால சங்கீத வித்வான்கள் பலரும் ஸ்வாமிகளின் முன்னிலையில் கச்சேரிகள் செய்து அவர்களது ஆசியைப் பெற்றுள்ளார்கள். அவர்கள் எல்லோரைப் பற்றியும் இங்குக் குறிப்பிடுவதென்றால் தற்கால சங்கீத வித்வான்களின் பெயர்கள் அடங்கிய பெரியதோர் பட்டியலாகவே இப்பகுதி அமைந்துவிடும். எல்

லோர் மனஸையும் குளிரச் செய்யும் வகையில் ஹாஸ்யமாகவும், அர்த்த புஷ்டியுடனும் ஸ்வாமிகள் வார்த்தைகள் சொல்லும் திறன் படைத்தவர்களாதலால் ஸ்வாமிகளது முன்னிலையில் பெரிய வித்வான்களின் சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும் பொழுது ஸ்வாமிகளது திருவாக்கிலிருந்து அவ்வப்போது வரும் சொற்களை யாவரும் ஆவலுடன் நோக்கியிருப்பர்.

இசையில் சம்ஸ்கிருத இசை, தெலுங்கு இசை, கன்னட இசை, தமிழ் இசை என்ற பாகுபாடுகள் ஸ்வாமிகளது உள்ளத்தில் என்றுமே தோன்றியதில்லை. முத்துஸ்வாமி தீக்ஷிதர் கம்பீரமாகச் சம்ஸ்கிருதத்தில் பாடியதும், இராமதாஸ் ஸ்வாமிகள், ச்யாமாசாஸ்திரிகள், தியாகய்யர் இவர்கள் அழகிய தெலுங்கில் பாடியதும், புரந்தர தாஸர் இனிய கன்னடத்தில் பாடியதும், அருணுசல கவிராயர், முத்துத்தாண்டவர், மாரிமுத்தா பிள்ளை, கோபால கிருஷ்ண பாரதி, வேதநாயகம் பிள்ளை முதலானோர் தேன் மொழியான தமிழ் மொழியில் பாடியதும் ஒரே கடவுளைக் குறிப்பிடுவதால் இவர்கள் இயற்றிய கீர்த்தனங்கள் யாவற்றையும் எவ்வித ஏற்றத் தாழ்வுமில்லாமல் ஸ்வாமிகள் ரசித்துவருவார்கள். பக்தர்கள் உள்ளம் உருகிப் பாடியது எந்த மொழியில் இருந்தாலும் அவை யாவும் ஏற்றுக்கொள்ளத் தக்கவைதாம் என்பதே ஸ்வாமிகளது திருவுள்ளத்தின் சம்மதமாகும். **வேதநாயகம் பிள்ளை** கீர்த்தனங்களில் ஸ்வாமிகளுக்கு ஒரு விசேஷ பற்று உண்டு. தமிழ்க் கீர்த்தனங்கள் பல பாடியுள்ள **பாபநாசம் சிவனுக்கு** 1950-ஆவது ஆண்டில் நடைபெற்ற அவரது சஷ்டியப்த பூர்த்தியின்பொழுது '**சிவ புண்யகான மணி**' என்னும் பட்டத்தை ஸ்வாமிகள் அளித்துத் தமிழ் இசையைப் பெருமை படுத்தியுள்ளார்கள்.

தக்ஷிணுமூர்த்தி பிள்ளை மிருதங்க வாத்யத்துடன் கூடின காரைக்குடி சகோதரர்களின் வீணை வாசிப்பை தேவகானத்திற்கே ஒப்பிடல் வேண்டும். இந்தக் கோஷ்டியின் சங்கீத வினிகை இரண்டொரு முறை ஸ்வாமிகளின் சந்நிதானத்தில் நடைபெற்றதுண்டு. இந்த வித்வான்களின் திறனை ஸ்வாமிகள் புகழ்ந்து அவர்களைப் பாராட்டியுள்ளார்கள். ஸ்வாமிகள் செட்டி நாட்டில் யாத்திரை செய்தபொழுது தக்ஷிணுமூர்த்தி பிள்ளை பக்தி மேலீட்டினுல் ஸ்வாமிகளின் பேரில் சில பாட்டுக்களைக் கவனம் செய்து அவற்றை எழுதி மௌனத்துடன் ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார். அவற்றைத் தாம் படிக்க எண்ணம் கொள்ளவில்லையென்றும், ஸ்வாமிகளது திருக்கண்களினுல் அவற்றைப் பார்வை

யிட்டாலே போதுமென்றும் அவர் மேலும் விண்ணப்பித்துக் கொண்டார். புகழை விரும்பாத அவரது தூய எண்ணத்தைப் பற்றி ஸ்வாமிகள் பக்தர்கள் பலரிடம் தெரிவித்து அவரைப் பெருமைப் படுத்தினார்கள். மைசூரைச் சார்ந்தவரும், வீணை வாசிப்பதில் மிகப் புகழ் பெற்றவருமான **வேங்கடகிரியப்பா** என்னும் வித்வான் ஸ்வாமிகள் சந்நிதானத்தில் சில கச்சேரிகளை நடத்தியிருக்கிறார். அவருக்கு ஸ்வாமிகள் '**வைணிக சிகாமணி**' என்னும் பட்டத்தையும், இரட்டைச் சால்வை, இரட்டைத் தோடா ஆகியவைகளையும் பரிசாக அளித்தார்கள்.

மடத்திற்கு ஆஸ்தான சங்கீத வித்வான் ஒருவரை நிரந்தரமாக நியமனம் செய்யவேண்டுமென ஸ்வாமிகள் எண்ணம் கொண்டு, ஸ்ரீவாஞ்சியம் **இராமசந்திர ஐயர்** என்ற இளம் வித்வான் ஒருவரை 1952-இல் அப்பதவியில் அமர்த்தி, அவருக்கு, '**ஆஸ்தான கீர்த்தனமணி**' என்ற பட்டத்தையும் சூட்டியருளினார்கள்.

சங்கீத வித்வான்களில் பிராயத்திலும், திறமையிலும் தலைசிறந்து விளங்கியவர் **மைசூர் வாசுதேவாசாரியார்** ஆவர், இவர் கன்னடத்திலும், சம்ஸ்கிருதத்திலும் சிறந்த கீர்த்தனைகளை இயற்றும் வன்மை பொருந்தியவர். அவ்விரண்டு பாஷைகளிலும் இவர் நல்ல பாண்டித்யம் அடைந்து சங்கீத சாஸ்திரத்திலும், புராணங்களிலும் ஆராய்ச்சிகள் பல நடத்தியுள்ளார். இவர் காஞ்சீபுரத்திற்குச் சில சமயங்களில் சென்று ஸ்வாமிகளைத் தரிசித்துச் சங்கீத சம்பந்தமாகவும், தாம் நிகழ்த்தியுள்ள ஆராய்ச்சிகளைப் பற்றியும் ஸ்வாமிகளிடம் உரையாடி வந்ததோடு தாம் இயற்றியுள்ள கீர்த்தனங்களைப் பாடியும் காட்டியுள்ளார். இவரிடம் ஸ்வாமிகளுக்கு மிகுந்த மதிப்பு உண்டு. இந்த நூற்றாண்டில் சங்கீதத்தில் இவருக்கு நிகரான வித்வான் வேறு எவரும் இருந்ததில்லையென ஸ்வாமிகள் பக்தர்களிடம் கூறியிருக்கிறார்கள்.

கர்நாடக சங்கீதத்திற்குத் தனிச்சிறப்பைத் தருவது நாதஸ்வர வாத்தியம். பாமரர்களும் அனுபவித்து ரசிக்கக்கூடிய அந்த வாத்தியத்தைக் கையாளுவது மிகவும் கடினம். பல பெரிய சங்கீத வித்வான்கள்கூட நல்ல நாதஸ்வர வாசிப்பைக் கேட்டுத் தங்களது ஞானத்தைப் பெருக்கிக்கொள்வது வழக்கம். இந்த வாத்தியம் திமிரி என்னும் பெயருடன் சிறிய அளவிலும், மற்றும் நடுத்தர அளவிலும், பாரி என்னும் பெயருடன் பெரிய அளவிலும் அமைந்துள்ளன. திமிரியும், பாரியும் சில குறிப்பிட்ட தேவஸ்

தானங்களில் வாசிக்கப்படுகின்றன. சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் எல்லா நாதஸ்வரக்காரர்களாலும் வாசிக்கப்பட்டு வந்த நடுத்தர அளவுள்ள வாத்தியமானது தற்காலம் மறைந்து வருகிறது; வித்வான்கள் வாத்தியத்தின் நீளத்தைத் தங்கள் சௌகரியத்தை முன்னிட்டு அதிகரித்துக் கொண்டுவிட்டார்கள். பூர்வகாலந்தொட்டு மடத்தில் வாசித்து வரும் நாதஸ்வரம் சுமார் 15 அங்குல நீளமுள்ள திமிரி வாத்தியமேயாகும். இந்த வாத்தியத்தைச் சென்ற நூற்றுண்டில் **சுப்ரமணியம்** என்னும் ஒரு மகா வித்வான் மடத்தில் வாசித்துவந்தார். அக்காலத்தில் மிருதங்கமே திமிரி நாயனத்திற்குப் பக்க வாத்தியமாக அமைந் திருந்தது. பூஜா காலத்தில் கும்பகோணம் மடத்தின் வெளித் திண்ணையில் அவர் அமர்ந்து நாதஸ்வரம் வாசிக்கும்போது தெருவில் நடமாடும் ஜனங்கள் அந்த வாத்தியத்திலிருந்து வெளி வரும் அபூர்வ நாதத்தையும், சுத்தமான சங்கீதத்தையும் அனுப வித்து மெய்ம்மறந்து மடத்தின் வாயில்முன் பெருங் கூட்டமாகக் கூடிவிடுவார்களென முதியவர்கள் கூறியுள்ளார்கள். நமது ஸ்வாமிகள் காலத்திலும் மிகுந்த மேதையாக விளங்கி இளமையி லேயே மறைந்த **நாராயணன்** என்னும் வித்வானும், பின்னர் கும்பகோணம் **கந்தஸ்வாமி நாதஸ்வரக்காரரும்**, அவர் குமாரர் **இரத்தினமும்**, கும்பகோணம் **சின்னையாவும்** இந்த வாத்யத்தை நன்கு வாசித்து வந்தார்கள். இன்றும் ஸ்வாமிகள் நித்ய பூஜை களில் இந்தச் சிறந்த வாத்யமானது வாசிக்கப்பட்டு வருகிறது.

1934-ஆவது ஆண்டில் ஸ்வாமிகள் காசிக்கு விஜயம் செய்த பொழுது அங்கு ஓர் ஹிந்துஸ்தானி சங்கீத மகாநாடு நடை பெற்றது. அந்த மகா நாட்டிற்கு மடத்தின் நாதஸ்வர வித்வானை யும் அழைத்திருந்தார்கள். ஸ்வாமிகளின் அனுமதியின் பேரில் அந்த மகாநாட்டில் அந்த வித்வான் திமிரி வாத்யத்தில் சில ஹிந்துஸ்தானி அபூர்வ ராகங்களை வாசித்ததைக் கேட்டு, அங்குக் கூடியிருந்த வடநாட்டு வித்வான்கள் யாவரும் மிகுந்த ஆச்சரி யத்தில் ஆழ்ந்தனர். நம் நாட்டில் தற்காலம் மிகப் பிரசித்தி யாயுள்ள வித்வான்கள் பலரும் 40 ஆண்டுகளுக்கு முன்னிருந்த பிரபல வித்வான்களும் ஸ்வாமிகளின் முன்னிலையில் நாதஸ்வரம் வாசித்து அவர்களது ஆசியைப் பெற்றுள்ளார்கள். ஸ்வாமிகளின் யாத்திரையுடன் வந்துகொண்டிருக்கும் நாதஸ்வர கோஷ்டியைச் சார்ந்த சுமார் ஆறு குடும்பங்களைச் சென்ற 40 ஆண்டுகளுக்கு மேலாக ஸ்வாமிகள் அன்புடன் ஆதரித்து வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## 8. இருபத்தோராண்டு விஜய யாத்திரை (1919—1939 தொடக்கம்)

நம் நாட்டிலுள்ள திவ்ய ஸ்தலங்களைத் தரிசிக்கவும், திவ்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவும், சிஷ்யர்களுக்கு ஸத் உபதேசங்களைச் செய்யவும் ஸ்வாமிகள் 1919-ஆவது வருடம் மார்ச்சு மாதம் சிவராத்திரி அமாவாசையன்று கும்பகோணத்திலிருந்து யாத்திரை புறப்பட்டார்கள். இந்த யாத்திரையில் சுமார் 200 பேர்களுக்கு மேற்பட்ட சிப்பந்திகளும், 30 மாட்டு வண்டிகளும் மற்றும் யானை, குதிரை, ஒட்டகம், பசு முதலான கால்நடைகளும் தந்தச் சிவிகை முதலான விருதுகளும் ஸ்வாமிகளைப் பின் தொடர்ந்தன. அன்று காலை ஸ்வாமிகள் மடத்தின் பூஜாகிருகத்தின் தென் பிராகாரத்திலுள்ள விநாயகரை வணங்கி, மடத்தின் தோட்டத்தில் சமாதியடைந்திருக்கும் **மூன்று பூர்வாசார்யர்களின்** பிருந்தாவனங்களையும் தரிசித்து, அந்தணர்களுக்கு யாத்திரா தானம் வழங்கிக் காவிரி நதியின் பகவத் படித்துறை என்னும் ஸ்நான கட்டத்திற்கு மேற்புறமாகப் படிக் கட்டுகளுடன் புதிதாக அமைக்கப்பெற்ற தருமக் கட்டிடத்தில், முதல் நாள் சந்திர மௌளீச்வரர் பூஜையைச் செய்தார்கள். அந்தக் கட்டிடம் டிபுடி கலெக்டர் **வி. துரைசாமி ஐயரின் புதல்வர் வி. டி. ஸ்வாமிநாத ஐயரின்** முயற்சியினால் கட்டம் பெற்றதாகும். அன்று ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை பாத பூஜை முதலியவைகளை **ஸ்ரீ ஸ்வாமிநாத ஐயரே** செய்து வைத்தார். சுமார் நான்கு மாதங்கள் கும்பகோணத்திலுள்ள பக்தர்கள் ஸ்வாமிகளை அவரவர் இல்லங்களுக்கு வரவழைத்துப் பிக்ஷை, பாத பூஜை முதலான வழிபாடுகளைச் செய்தார்கள்.

### வேப்பத்தூரில் வியாஸ பூஜை—சாதுர்மாஸ ஸங்கல்பம்

ஆஷாட (ஆனி அல்லது ஆடி) மாதத்தில் வரும் பூர்ணிமையை **வியாஸ பூர்ணிமை** எனக் கூறுகின்றோம். வேதாந்த ஸூத்திரங்கள் இயற்றிய **வியாஸ பகவானைக்** குறித்து அன்று பூஜை செய்யப்படுகிறது. அவர் உலக ஆசாரியராகக் கருதப்படுகிறார். நம் நாட்டில் இந்தப் பூஜையை அநேகமாகச் சந்நியாசிகளே செய்து வருகிறார்கள். விந்திய மலைக்கு வடக்கேயுள்ள நாட்டில் இந்த நாளைக் **குரு பூர்ணமி** என்று கூறி, அந்நாளில் ஒவ்வொருவரும் தங்கள் வித்யாகுருக்களை வணங்கி, அவர்களுக்குப் பாத காணிக்கைகள் செலுத்துகிறார்கள். வேதவியாஸர் வேதங்களுக்குச்

சாகைகளைப் பிரித்து இயற்றினவர். பிரம்மசூத்திரங்கள் ஜீவ-ப்ரம்ம ஐக்கியத்தைப் போதிக்கின்றன. அந்தச் சூத்திரங்களுக்குச் **சங்கரர், இராமானுஜர், மத்துவர்** இம் மூன்று ஆசாரியர்களும் பாஷ்யம் செய்துள்ளார்கள். இம் மூன்று ஆசாரிய புருஷர்களுக்கும் வியாஸபகவானே முதல் ஆசாரியராதலால் அந்த நாளை அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத சம்ப்ரதாயங்களைச் சார்ந்த சந்நியாசிகள் யாவரும் கொண்டாடுவது வழக்கமாயிருக்கிறது.

ஸ்ரீ காமகோடி மடத்தில் விசேஷ நாட்களில் இது ஒரு முக்கிய நாளாகக் கருதப்படுகிறது. வியாஸ பூஜைக்கென ஒரு தனி மண்டபம் நிர்மாணிக்கப்பெற்று, அந்த மண்டபத்தின் மத்தியில் முழு அக்ஷதை பரப்பிய வெள்ளிப் பீடத்தில் **கிருஷ்ண விக்கிரகத்தைப்** பிரதிஷ்டை செய்து, அந்த விக்கிரகத்தைச் சுற்றிலும் தேவதைகளையும், ரிஷிகளையும் குரு பரம்பரையில் வந்த ஆசார்யர்களையும் எலுமிச்சம் பழங்களில் ஆவாகனம் செய்து, அவர்கள் யாவருக்கும் தனித்தனியே பூஜைகள் நடத்தப்பெறும். கீதை 10-ஆவது அத்யாயம் 37-ஆவது சுலோகத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் முனிவர்களுள் வேதவியாஸராக விளங்குவதாகக் கூறியிருப்பதற்கிணங்கி, வேதவியாஸருக்கு உரித்தான இந்தப் பூஜையைக் **கிருஷ்ண பகவானுக்கே** அர்ப்பணம் செய்வது மடத்தின் தொன்று தொட்ட வழக்கம். சுமார் 6 மணி நேரம் நடைபெறும் இந்தப் பூஜை முழுவதையும் ஸ்வாமிகள் தமது திருக்கரங்களினாலேயே செய்து முடிப்பார்கள். பூஜாகாலங்களில் நாட்டின் முக்கியமான தேவாலயங்களிலிருந்து பிரசாதங்களும், ராஜாக்கள், ஜமீந்தார்கள் முதலான பிரமுகர்களிடமிருந்து காணிக்கைகளும் மடத்திற்கு வந்து சேரும். ஆயிரக்கணக்கில் சிஷ்யர்களும் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பூஜையைக் காண்பதற்கெனக் கூடுவார்கள்.

1919-ஆவது வருடத்து வியாஸ பூஜையை கும்பகோணத்திற்குக் கிழக்கே ஐந்து மைல் தூரத்திலுள்ள **வேப்பத்தூரில்** நடத்த வேண்டுமென்று அந்த ஊர் மகா ஜனங்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க, ஸ்வாமிகள் பூஜையை அங்கேயே வெகு விமரிசையாக நடத்தினார்கள். அந்த ஊரும் காவிரியின் வட கரையில் அமைந்துள்ளதால் ஸ்வாமிகள் தங்குவதற்கு வசதியுடன் இருந்தது. வியாஸ பூஜைக்குப் பிறகு மழைக்காலமாதலால் சந்நியாசிகள் நான்கு மாதங்கள் அதே இடத்தில் தங்கியிருக்க வேண்டுமென்பது நியதி. மழைக் காலத்தில் சந்நியாசிகள் கால் நடையாகயாத்திரை செல்லும்பொழுது பூச்சிகள் முதலான சிறிய ஜீவஜந்துக்கள் அவர்கள் காலில் பட்டு மரணமடையக் கூடும்

என்பதற்காகவும், எவ்வித ஜீவஹிம்சையும் சந்நியாசிகள் செய்யக் கூடாதென்பதற்காகவும், இந்த நியதி ஏற்பட்டுள்ளது. இந்த நான்கு மாதங்களையும் **சாதுர்மாஸம்** என்பர். அந்த நான்கு மாதங்களையும் நான்கு பக்ஷங்களாக வைத்துக்கொண்டு, சந்நியாசிகள் ஒரே ஊரில் ஆஷாட பூர்ணமியிலிருந்து இரண்டு மாதங்கள் தங்கிவருவது வழக்கமாயிருக்கிறது. இவ்விதம் தங்கு வதைப் பூர்ணமி அன்று சந்நியாசிகள் சங்கல்பமாக ஏற்றுக் கொள்ளுகிறார்கள். இதற்குச் **சாதுர்மாஸ சங்கல்பம்** எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. வேப்பத்தூர் மகா ஜனங்கள் அந்த இரண்டு மாதங்களிலும் ஸ்வாமிகளின் பரிவாரங்களுக்கும், ஸ்வாமிகளைத் தரிசிக்க வரும் சிஷ்ய கோடிகளுக்கும் ஏராளமான செலவில் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்தார்கள். அவ்வருடத்து **நவராத்திரி பூஜையும்** அவ்விடத்திலேயே நடைபெற்றது.

இந்தப் பூஜைகளுக்குப் பிறகு, தஞ்சை ஜில்லாக் கிராமங் களில் யாத்திரை செய்துகொண்டு ஸ்வாமிகள் 1920-ஆவது வருடம் மார்ச்சு மாதம் கும்பகோணத்திற்கு அடுத்த **சிறுகளத்தூருக்கு** விஜயமானார்கள். அவ்வூர் பெரிய தனவந்தரான '**கன்னிவாடி ஜமீந்தார் கல்கத்தா என். ஆர். ஐயர்** அவர்கள் தம் இல்லத்தில் ஸ்வாமிகளை வரவேற்று, விஜய யாத்திரை தினத்தின் முதல் வருடக் கொண்டாட்டத்தை அவ்வூரில் வெகு விமரிசையாக நடத்திவைத்தார்கள். பிறகு ஸ்வாமிகள் திருவாரூருக்கு எழுந் தருளினார்கள். திருவாரூரில் சிஷ்யர்கள் அவர்களது விஜயத்தை மிக்கச் சிறந்த முறையில் கொண்டாடி ஸ்வாமிகளை வழி பட்டார்கள். அங்கு அவர்கள் தங்கியிருந்த ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகள் **தியாகராஜ ஸ்வாமி** ஆலயத்திற்கு ஸ்வாமி தரிசனத் திற்காகச் சென்று வருவார்கள்.

### 1920-இல் மஹோதய புண்யகாலம்

1920-ஆவது வருஷம் ஏற்பட்ட **மஹோதய புண்ய** காலத்திற்கு ஸ்வாமிகள் **வேதாரண்யத்திற்கு** விஜயம் செய்து, சமுத்திர ஸ்நானங்களைச் செய்து கொண்டு அவ்விடம் ஒரு வாரம் தங்கியிருந் தார்கள். மஹோதய ஸ்நானம் கோடிக் கரையில் நடந்தது. ஆதி ஸேது எனக் கூறப்படும் இந்தத் தலத்தின் அருகிலுள்ள **அகத்தி யாம்பள்ளி** 'முதலான க்ஷேத்திரங்களையும் ஸ்வாமிகள் அப் பொழுது தரிசனம் செய்து கொண்டார்கள். அங்கிருந்து ஸ்வாமிகள் **நாகப்பட்டினத்திற்கு** விஜயம்செய்து, அவ்விடம் பொது மக்களால் நன்கு வரவேற்கப்பட்டு **நீலாயதாக்ஷி அம்மன் கோயிலில்**

தங்கினார்கள். கோயிலில் ஸ்வாமிகளை வரவேற்கும்பொழுது பல்லாயிரக்கணக்கான மக்கள் அங்குக் கூடியிருந்தனர். நாகை நீலலோசனி பத்திராதிபர் ஜி. **சதாசிவம் பிள்ளை** ஸ்வாமிகளின் பேரில் ஐந்து பாட்டுக்கள் தொகுத்து அக் கூட்டத்தில் படித்தார்.

**மாயவரத்தில் 1920-ஆவது வருடத்து வியாஸ பூஜை**

1920-ஆவது வருடத்து வியாஸ பூஜையை ஸ்வாமிகள் **மாயவரத்தில்** நடத்திப் பின்னர் மூன்று மாதங்கள் அவ்விடம் தங்கியிருந்ததும் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். அப்பொழுது பள்ளிகளில் பயிலும் பிரம்மசாரிச் சிறுவர்கள் சுமார் முந்நூறு பேருக்கு வேத வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. அவர்கள் யாவரும் சூரியோதத்திற்கு முன்பு காவிரியில் நீராடி, சந்தியாவந்தனம் செய்து, ராஜான் தோட்டத்தில் அமைந்திருந்த கொட்டகைகளில் சமிதாதானம் என்னும் ஹோமத்தைச் செய்து, தகுந்த ஆசிரியர்கள் மூலம் வேதப்பயிற்சி பெற்றுவந்த அழகை அன்று கண்டவர்கள் என்றும் மறப்பதிற்கில்லை. அப்பொழுது அந்த இடம் பழமையான ரிஷி ஆசிரமங்களையும் அவைகளில் பயின்ற ரிஷி புதல்வர்களையும் நினைவிற்குக் கொண்டு வந்தது. 2—11—1920 அன்று, அப்பொழுதிருந்த தருமபுரம் ஆதீனம் **ஸ்ரீலஸ்ரீ பண்டார சந்நிதிகள்** ஸ்வாமிகளை மாயவரத்தில் சந்தித்து அவர்களுக்குத் தக்க மரியாதைகளைச் செய்தனர்.

ஸ்வாமிகள் மாயவரத்தில் தங்கியிருந்தபொழுது குரானில் நல்ல தேர்ச்சி பெற்ற இஸ்லாமியர் ஒருவர் ஸ்வாமிகளிடம் நேரில் உரையாடவேண்டுமென்ற அவாவைத் தெரிவித்தார். அவரோ இரண்டு கண்களும் தெரியாதவர்; ஆனால் நல்ல சொல்வன்மை படைத்தவர். ஸ்வாமிகள் அவரை மாலை நான்கு மணிக்கு வரும்படி கட்டளையிட்டிருந்தார்கள். அதன்படி குறித்த காலத்திற்கு மடத்திற்கு அவர் வந்து சேர்ந்தார். அப்பொழுது வித்வான்களின் சபை ஒன்று கூடியிருந்தது; இந்துமதத் தத்துவங்களைப் பற்றி அந்த வித்வான்கள் விளக்கம் செய்துகொண்டிருந்தார்கள்; பக்தர்களின் கூட்டமும் அதிகமாயிருந்தது. வித்வான்கள் பேசி முடிந்ததும், ஸ்வாமிகள் இஸ்லாமியரைத் தம் பக்கத்தில் அழைத்து அவரது மதத்திலுள்ள பொதுவான தர்மங்களைப் பற்றி விவரிக்கும்படி கட்டளையிட்டார்கள். அவர் ஸ்வாமிகள் வீற்றிருந்த இடத்தை நோக்கி, "மகான்களாகிய தங்கள் முன்னிலையில் நான் என்ன சொல்லப்போகிறேன்? எல்லா மதங்களும் முடிவில் கடவுளையடையும் மார்க்கத்தையே கூறுகின்றன. அவனை விடப்

பெரிய வஸ்து எங்குமில்லை. தங்களிடம் அக்கடவுளை நான் என் உள்ளத்தில் காண்கிறேன். எவ்விடத்தில் அன்பு இருக்கிறதோ அவ்விடத்தில் கடவுளைக் காணலாம்,'' எனக் கூறிவிட்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். அப்பொழுது அங்குக் கூடியிருந்தோர் யாவரும் அந்த இஸ்லாமியரின் பக்தியைக் கண்டு ஆச்சரியமடைந் தனர்.

அவ்வருட நவராத்திரி பூஜை **ஆனைதாண்டவபுரத்தில்** நடை பெற்றது. அவ்விழாவிற்குப் பின் ஸ்வாமிகள் **மாயவரம் சீகாழி தாலுக்கா** கிராமங்களுக்கு விஜயம் செய்தார்கள். அப்பொழுது **திருக்கடையூர், திருப்புங்கூர், வைத்தீச்வரன் கோவில்** முதலிய க்ஷேத்திரங்களில் அவர்கள் ஸ்வாமி தரிசனம் செய்து கொண் டார்கள். **வைத்தீச்வரன் கோவில்** கட்டளை **ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான்** அவர்கள் ஸ்வாமிகளைப் பூர்ண கும்பத்துடன் வர வேற்றுத் தேவஸ்தான மரியாதைகளுடன் தக்க முறையில் உபசரித்தார். பின்னர் 1920-ஆவது வருடம் மார்கழி மாதம் ஸ்வாமிகள் **சீகாழியில்** தங்கி **ஸ்ரீ சட்டநாத ஸ்வாமியைத்** தரிசனம் செய்துகொண்டார்கள். இத்தலம் **உமா தேவியார் ஞான சம்பந்தருக்கு ஞானப்பால் ஊட்டிய** பெருமை பெற்றதாகும். இந்த யாத்திரையில் சீகாழியைச் சுற்றியுள்ள எல்லாச் சிவ க்ஷேத்திரங் களையும் ஸ்வாமிகள் தரிசித்தார்கள். ஸ்வாமிகள் சீகாழியில் தங்கியிருந்தபொழுது, ஸ்ரீமான் **சிதம்பரநாத முதலியார்** தாம் நடத்திவரும் உயர்தரப் பள்ளிக்கு ஸ்வாமிகளை விஜயம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். அதன்படி ஸ்வாமி களும் அந்தப் பள்ளிக்கு விஜயம் செய்து மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் உபதேச மொழிகளை அருளினார்கள். சிறந்த தருமமான வித்யாதானத்தைக் குழந்தைகளுக்கு முதலியார் அளித்து வருவதற்காக அவரையும் அவருடைய குடும்பத் தாரையும் ஸ்வாமிகள் மிகவும் பாராட்டினார்கள். சீகாழியில் ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது **குன்னம் சுப்பிரமணிய ஐயர்,** அவரது சகோதரர் **இரகுபதி ஐயர்,** வக்கீல் **சுவேதாரண்ய ஐயர்,** வக்கீல் **எஸ். சுப்பிரமணிய ஐயர்,** தென்பாதி **திருநாராயண பிள்ளை** இவர்களும் இன்னும் மற்றும் பல பிரமுகர்களும் மடத்தின் பணியில் ஈடுபட்டிருந்தனர். ஸ்வாமிகள் சீகாழிக்குக் கிழக்கே யுள்ள **திருவெண்காடு** என்னும் க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து அவ்விடம் **சுவேதாரண்யேசுவரரைத்** தரிசனம் செய்து கொண்டார் கள். அத்தலத்திலேயே நிர்விகல்ப சமாதியிலிருக்கும் **ஸ்ரீ காமகோடி பீடத்தின் 57-ஆவது ஆசாரிய** ஸ்வாமிகளான **பரம சிவேந்திர**

**ஸ்வாமிகளின்** அதிஷ்டானத்தையும் அவர்கள் தரிசித்துக் கொண்டார்கள். அந்தப் பரமசிவேந்திர ஸ்வாமிகள் **ஸ்ரீ சதாசிவ ப்ரம்மத்தின் ஞானகுருவாக** விளங்கியவர்கள்.

ஆழ்வார்களால் பாடப்பெற்ற பாரத பூமியிலுள்ள நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் பன்னிரண்டு திவ்ய தேசங்கள் சீகாழி தாலுகாவில் அமைந்துள்ளன. அவையாவன :

**1. தாடாளங் கோவில், 2. திருநகரி, 3. திருநாங்கூர். 4. வைகுந்த விண்ணகரம், 5. அரிமேய விண்ணகரம், 6. செய் கோவில், 7. திருத்தெற்றி அம்பலம், 8. திருமணக்கூடம், 9. பார்த்தன் பள்ளி, 10. திருக்காவளம்பாடி, 11. திருவள்ளகம், 12. திருத்தேவனூர் தொகை.** இந்தத் திவ்ய தேசங்களையெல்லாம் ஸ்வாமிகள் தரிசித்து ஆங்காங்குப் பெருமாளைச் சேவித்துக் கொண்டார்கள். பின்னர் ஸ்வாமிகள் காவிரிப்பூம்பட்டினம் சென்று காவிரி ஆறு கடலில் சேரும் இடத்தில் நீராடினூர்கள்.

**1921-ஆவது வருட மகாமகம்**

*1921*-ஆவது வருடத்தில் கும்பகோணத்தில் நடைபெற்ற மகாமகத்தின் பொழுது ஸ்வாமிகள் **தாராசுரத்திற்குப்** பக்கத்திலுள்ள **பட்டீச்வரம்** என்னும் தலத்தில் பழமையான சிவாலயத்திற்கு விஜயம் செய்திருந்தார்கள். அப்பொழுது மகாமகம் நேர, ஸ்வாமிகள் அதற்காகக் கும்பகோணம் சென்றூர்கள். *1919*-இல் ஸ்வாமிகள் சங்கல்ப யாத்திரை தொடங்கிவிட்டதால், கும்பகோணத்திலுள்ள தம் மடத்திற்கு அப்பொழுது விஜயம் செய்யவில்லை. மடத்தில் வழக்கம்போலத் தேப்பெருமா நல்லூர் சிவன் அவர்களது சமாராதனை மிகச் சிறப்பாக நடந்தேறியது. மகாமகக்குளம் தென்கரையிலுள்ள மண்டபத்தில் ஸ்வாமிகள் தங்கி, தடாகத்தில் மகாமகத்தன்று ஸ்நானம் செய்தார்கள். பல்லாயிரக் கணக்கான சிஷ்யர்கள் ஸ்வாமிகளை அப்பொழுது தரிசித்துக் கொண்டார்கள். பாரத நாட்டில் மிகவும் மகிமை வாய்ந்த இந்தத் தடாகத்திற்கு ஓர் மைய மண்டபம் இல்லாததை ஸ்வாமிகள் உணர்ந்து, அந்நாளில் தேசப் பணியில் ஈடுபட்டவரும், தண்ணீர்க்குன்னம் உடையார் வம்சத்தைச் சேர்ந்தவருமான **இராமபத்திர உடையாரிடம்** இப்பணியைச் செய்து முடிக்கும்படி சொல்லி, அதற்காக ரூபாய் ஐந்நூறு மூலதனமாக மடத்திலிருந்து கொடுக்கும்படி ஸ்வாமிகள் உத்திரவிட்டார்கள். பொது ஜனங்களிடம் மேலும் பொருள் சேர்த்து உடனே ஒரு சிறு மண்டபம் கட்ட முயற்சி எடுக்கப்பட்டது ; தண்ணீர் மட்டத்திற்கு மேல் ஒரு மேடை மட்டும் தான் இதுவரை அவ்வேலை முடிந்துள்ளது.

அந்த மகாமகத்தில் பொதுஜன சேவை செய்யச் சென்னை முஸ்லீம் இளைஞர் சங்கத்திலிருந்து சுமார் இரு நூறு தொண்டர்கள் கும்பகோணத்திற்கு வந்திருந்தார்கள். ஜனக் கூட்டத்தில் அவர்கள் செய்த ஒப்பற்ற பணியை ஸ்வாமிகள் நேரில் கண்டு மகிழ்ந்தார்கள். அவர்கள் யாவரும் இருபத்திரண்டு வயதிற்குட்பட்ட வாலிபர்கள். நல்ல திடகாத்திரம் படைத்தவர்கள்; தொண்டாற்றும் ஆவல் அவர்கள் முகத்தில் பிரதிபலித்தது. அவர்களை நேரில் கண்டு அருள்புரிய வேண்டுமென்று ஸ்வாமிகளுக்கு ஓர் எண்ணம் உதித்தது. ஸ்வாமிகள் விருப்பப்படி அவர்கள் யாவரும் மடம் முகாம் செய்திருந்த **பட்டீச்வரத்திற்கு** அழைத்து வரப்பட்டனர்; அவர்களுக்கு மடத்தில் நல்ல உணவளிக்கப்பட்டது. ஸ்வாமிகள் அவர்கள் ஒவ்வொருவருடனும் பேசி அவர்களுடைய பெற்றோர்களைப் பற்றியும், கல்வியைப் பற்றியும் அன்புடன் விசாரித்தார்கள். அவர்கள் சேவையைப் பாராட்டி ஒரு வெள்ளிக் கோப்பையை ஸ்வாமிகள் அவர்களது சங்கத்திற்கு அப்பொழுது பரிசாக அளித்தார்கள். அவ்வருட மகாமகத்தில் காங்கிரஸ் தலைவர் **பந்துலு ஐயரின்** தலைமையிலும் பல தொண்டர்கள் நல்ல பணியாற்றினார்கள். அத்தொண்டர்களையும் ஸ்வாமிகள் நேரில் பாராட்டி, அவர்களுக்கும் ஒரு வெள்ளிக் கோப்பையைப் பரிசாக அளித்தார்கள்.

அம்மகாமகத்தின் பொழுது கும்பகோணத்திற்கு வந்திருந்த பழுத்த தேசபக்தரான **சுப்ரமணிய சிவம்** என்பவர் தம் உடல் நிலையையும் பொருட்படுத்தாது பட்டீச்வரம் வந்து ஸ்வாமிகளைத் தரிசிக்கவேண்டி ஜனக்கூட்டத்தினிடையே ஓர் புறத்தில் காத்து நின்றார். ஸ்வாமிகள் அவரை அதற்கு முன் சந்திக்கவில்லை; ஆயினும் வெகு தூரத்தில் நின்று கொண்டிருந்த அவரைக் கண்டவுடன் தொண்டர்களை அனுப்பி அவரைத் தம்மிடம் அழைத்து வரச்செய்தார்கள்; தன்பால் ஸ்வாமிகளுக்கு ஏற்பட்ட கருணையைக் கண்டு சிவம் உள்ளம் பூரித்தார்; தேசத்தின் விடுதலையில் பூரணமாக ஈடுபட்டிருந்த அவர் அப்பொழுது துறவிகளுக்கான காஷாய உடையைத் தரித்திருந்தார். அந்நிய ஆட்சியிலிருந்து பாரத பூமியானது சீக்கிரம் விடுபடவேண்டுமென்றும், மக்கள் எல்லோரும் கடவுள் பக்தியோடு இருக்க வேண்டுமென்றும், இவ்விரண்டிற்கும் ஸ்வாமிகளின் ஆசி பரிபூரணமாகத் திகழ வேண்டுமென்றும் அவர் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டார். அவ்விதமே நடைபெறுமென்று ஸ்வாமிகள் அருள் புரிந்தார்கள்.

அந்த (1921-ஆவது) வருடத்து வியாஸ பூஜையையும் சாதுர்மாஸ சங்கல்பத்தையும், ஸ்வாமிகள் குற்ருலத்துக்குச் சமீபமுள்ள **கதிராமங்கலத்தில்** நிறைவேற்றினார்கள். அதற்கடுத்த ஒருவருடம் தஞ்சை ஜில்லா **சீகாழி, மாயவரம், நன்னிலம், மன்னார்குடி** தாலுக்காக் கிராமங்களில் விஜய யாத்திரை நடைபெற்றுக்கொண்டிருந்தது. அப்பொழுது ஸ்வாமிகள் காவிரியின் வடகரை, தென்கரையிலுள்ள பாடல் பெற்ற சிவஸ்தலங்களையும், வைணவ திவ்ய தேசங்கள் பலவற்றையும் தரிசித்து, ஒவ்வொரு ஆலயத்திலுள்ள விக்ரஹங்களுக்கும் பட்டுப் பீதாம்பரம் அணிவித்து வழிபட்டார்கள். எவ்வளவு சிறிய ஆலயமாயினும் அது ஸ்வாமிகளின் கவனத்தைக் கவராமல் இருந்ததில்லை.

**ஹரிஜனங்களுக்குத் தரிசனம் அளித்தது**

தஞ்சை ஜில்லாவில் ஸ்வாமிகள் யாத்திரை செய்துகொண்டிருந்தபொழுது குடவாசலிலிருந்து கொரடாச்சேரி செல்லும் மார்க்கத்தில் **செல்லூர்** என்னும் கிராமத்தில் ஹரிஜனங்கள் முதியோர், பெண்கள், குழந்தைகள் உள்பட சுமார் 200 பேர்கள் நீராடி, விபூதி அணிந்து ஸ்வாமிகளைத் தரிசிப்பதற்காகச் சாலையின் ஓரத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்டதும் ஸ்வாமிகள் தமது சிவிகையை நிறுத்தும்படி உத்தரவிட்டு, சிவிகையிலிருந்து கீழே இறங்கி, அவர்கள் யாவருக்கும் தரிசனம் அளித்தார்கள். அப்பொழுது ஸ்வாமிகள் அவர்களைப் பார்த்து அவர்களின் எஜமானர்களான மிராசுதார்கள் அவர்களை அன்புடன் நடத்துகிருர்களாவென்றும், அவர்கள் ஆகாரத்திற்குப் போதுமான தானியத்தைக் கொடுக்கிருர்களாவென்றும் கேட்க, அவர்கள் ஆகாரத்திற்கு குறைவில்லாமல் தங்களுக்குத் தான்யம் கிடைக்கிறதென்றும் தாங்கள் சந்தோஷமாகவே வாழ்ந்து வருவதாகவும் தெரிவித்தனர். மேலும் ஸ்வாமிகள் அவர்கள் செய்து வரும் கடவுள் வணக்கங்களைப் பற்றியும் கேள்விகள் கேட்டார்கள். அவர்கள் விசேட நாள்களில் தங்கள் ஜாதி தெய்வங்களுக்குப் பூஜை போடுவதாகவும், காலரா, அம்மை முதலான நோய்கள் வரும்பொழுது வழக்கமாகத் தெய்வங்களுக்குப் பூஜையிட்டு வீடுகளைச் சுத்தமாய் வைத்துக் கொள்வதாகவும் தெரிவித்தார்கள். ஸ்வாமிகள் மடத்துக் காரியஸ்தர்களைப் பக்கத்திலுள்ள குடவாசலுக்கு அனுப்பிப் புது ஆடைகள் வாங்கிவரச் செய்து, அவற்றை அவர்களுக்கு அளித்து ஆசீர்வதித்தார்கள். ஸ்வாமிகளின் கருணையைக் கண்டு அவர்கள் அகமகிழ்ந்

தனர். வெகு நேரம் ஸ்வாமிகளை அவ்விடம் தங்க வைத்து விட்டதற்காக அவர்கள் மன்னிப்பும் கேட்டுக்கொண்டார்கள். இவ்விதம் ஸ்வாமிகள் விஜய யாத்திரை செல்லும்பொழுது, பாதைகளில் ஹரிஜனங்களைக் காண நேரும்போதெல்லாம் சிவிகையை நிறுத்தச்செய்து அவர்களுக்குத் தரிசனம் கொடுத்து நல்வாழ்த்துக் கூறிச் செல்வது வழக்கம்.

**வாத்திமர் கிராமங்களுக்கு விஜயம்**

அவ்வாண்டு **கதிராமங்கலத்தில்** சாதுர்மாஸ சங்கல்பம் முடித்துக்கொண்ட பிறகு ஸ்வாமிகள் நன்னிலம் தாலுகாவி லுள்ள கிராமங்களில் விஜய யாத்திரை செய்யத் தொடங்கி னார்கள். அந்தத் தாலுகாவில் வசிக்கும் 18 கிராமத்து வாத்தி மர்கள் என்று கூறப்படும் அந்தணப் பிரிவைச் சார்ந்தவர்கள் தங்கள் கிராமங்களுக்கு ஸ்வாமிகளை விஜயம் செய்ய வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டனர். வாத்திமர் எனப்படுகின்றவர்கள், தமிழ் நாட்டு அந்தணர்களில் சிறியதோர் பிரிவைச் சார்ந்தவாகள்; சுமார் ஆயிரம் குடும்பங்களைக் கொண்டு இவர்களது சமூகம் விளங்குகின்றது. (1) ஆனைதாண்டவபுரம், (2) கோனேரி ராஜபுரம், (3) திப்பராஜபுரம், (4) விஷ்ணுபுரம், (5) தேதியூர் (6) முடிகொண்டான், (7) செம்மங்குடி, (8) அரசவனங்காடு, (9) முழையூர், (10) புலியூர், (11) சேங்காலிபுரம், (12) மரத்துரை, (13) மாம்படுகை, (14) மாங்தை, (15) மேலப் பாலையூர், (16) கூந்தலூர், (17) தூத்துக்குடி (தஞ்சை ஜில்லா) (18) சித்தன்வாளூர் என்னும் கிராமங்கள் வாத்திமர்களின் கிராமங்களாகும். ஆசாரத்தையும், சீலத்தையும் இவர்கள் கைக்கொண்டவர்கள்; அவற்றுடன் லக்ஷ்மீ கடாக்ஷமும் பெற்று நல்ல வசதியுடன் வாழ் கின்றவர்கள்; செட்டாகவும், கட்டுப்பாடாகவும் இருந்து எளிய முறையில் வாழ்க்கையை நடத்துகின்றவர்கள்; அப்படியிருந்தும் அவசியமான சந்தர்ப்பங்களில், கோவில் திருவிழாக்களையும், வைதிக காரியங்களையும், அவர்கள் தம் இல்லங்களில் நடைபெறும் கலியாணங்களையும் ஏராளமான பணச் செலவில் மிகச் சிறப் புடன் யாவரும் மெச்சத் தக்கவாறு செய்து முடிப்பார்கள். வேதம் ஓதுபவர்களையும், மற்றும் சாஸ்திரம் கற்றவர்களையும் இச்சமுகத்தார் மிகப் பரிவுடன் ஆதரித்து வருகின்றனர். சுமார் 90 ஆண்டுகளுக்கு முன்னர் திருவனந்தபுரத்திலும், புதுக் கோட்டையிலும் திவான் உத்தியோகம் வகித்து வந்த **சர். ஏ. சேஷையா சாஸ்திரிகள்** இந்த மரபைச் சார்ந்தவர்களாவர்.

இப்பொழுது அவருடைய சுவீகார புதல்வரின் பேரன் **அ. சேஷையா சாஸ்திரி*** என்பவரே நமது ஸ்வாமிகளிடம் அதிகாரம் பெற்று மடத்தின் ஸ்ரீகார்யம் என்னும் உயர்ந்த பதவியை வகித்து வருகிறார். கும்பகோணம் அத்வைத சபையின் ஸ்தாபகர்களில் ஒருவரான கோனேரிராஜபுரம் சாம்பசிவ ஐயர் என்னும் பெரியார் இவ்வாத்திமர் வகுப்பைச் சார்ந்தவராவர். இவர் கும்பகோணத்தில் ஸ்ரீவித்யா அச்சுக்கூடம் என்னும் ஓர் அச்சுக்கூடத்தை அமைத்து, 'அத்வைதசித்தி, சித்திப்பிரம்மாநந்தீயம், அப்பய்ய தீக்ஷிதரது சிவதத்துவ விவேகம்' முதலிய நூல்களை வெளியிட்டார். பெரிய வாத்திமக் கிராமங்கள் ஒவ்வொன்றிலும் ஸ்வாமிகள் சுமார் ஒவ்வொரு மாதத்திற்கு மேல் தங்கி அவர்கள் பக்தியுடன் செய்துவைத்த பிக்ஷை, பாதபூஜை முதலியவற்றை ஏற்றுக்கொண்டார்கள். அந்த (1921-வது) வருஷ நவராத்திரி விழாவை ஸ்ரீ ஸ்வாமிகள் விஷ்ணுபுரத்தில் நடத்தினார்கள். அவ்வூர் பிரமுகர் மகாதேவய்யரும் மற்ற மிராசுதார்களும் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார்கள்.

**மன்னார்குடி முதலான இடங்களுக்கு விஜயம்**

நன்னிலம் தாலுகாவிலுள்ள கிராமங்களில் யாத்திரையை முடித்துக்கொண்டு ஸ்வாமிகள் மன்னார்குடி தாலுகாவிலுள்ள கிராமங்களில் பெரும்பான்மையாக யாத்திரையைத் தொடர்ந்து நடத்திவந்தார்கள். ஸ்வாமிகள் விஜயம் செய்த ஒவ்வொரு ஊரிலும் சமூகத்தினர் யாவரும் மிகவும் ஒற்றுமையுடன் ஸ்வாமிகளது பணியில் ஈடுபட்டிருந்தனர். மன்னார்குடி தாலுகா பூவனூரைச் சார்ந்த பெரிய சிவபக்தரான **ராஜு முதலியார்** என்பவர் அப்பொழுது ஸ்வாமிகளை அவ்வூருக்கு விஜயம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். அதற்கிணங்கி ஸ்வாமிகளும் அங்குச் சுமார் பத்து நாட்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூரில் முதலியார் அவர்கள் நடத்தி வந்த தேவார பாடசாலைக்கு அடிக்கடி ஸ்வாமிகள் சென்று மாணவர்களைக்கொண்டு தேவாரங்களைப் பாடச்செய்து, அவைகளின் பொருளிலும், இசையிலும் மனசைச் செலுத்தி இன்புற்றார்கள். இப்பாடசாலையின் மாணவர்களுக்குப் பட்டு முதலிய சாமான்களை அவர்கள் அளித்து ஆசீர்வதித்தார்கள். நாட்டில் இன்று தேவாரம் ஓதுவதில் மிகத் தேர்ச்சி பெற்ற வித்வான்களில் பலர் பூவனூர்ப் பாடசாலையில் கற்றவர்கள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

* இவர் 1968-ஆம் ஆண்டு வரை ஸ்ரீமடம் ஸ்ரீகார்யம் ஏஜண்டாக இருந்தார்.

பின்னர் ஸ்வாமிகள் மன்னார்குடியில் சுமார் ஒரு மாத காலம் தங்கியிருந்தார்கள். அவ்வூரில் தங்கியிருந்தபொழுது ஸ்வாமிகள் நேஷனல் உயர்நிலைப்பள்ளிக்கு விஜயம் செய்து மாணவர்களுக்குப் பல உபதேசங்களை அருளினார்கள். அவ்வூர் **இராஜகோபால ஸ்வாமி** தரிசனம் செய்து கொண்டார்கள். அங்கிருந்து அவர்கள் வடுவூர் சென்று அங்குள்ள பிரசித்தி பெற்ற **ஸ்ரீ இராம விக்கிரஹத்தையும்** தரிசித்துக்கொண்டார்கள். பிரபல மிராசுதாரரான **குன்னியூர் சாம்பசிவ ஐயர்** அவர்களின் விருப்பப்படி குன்னியூரில் ஸ்வாமிகள் சில காலம் தங்கியிருந்தார்கள். பின்னர் **சித்தமல்லி, ஆலங்காடு** முதலான ஊர்களுக்கு விஜயம் செய்து, **பட்டுக்கோட்டை, அறந்தாங்கி** மார்க்கமாக **ஆவுடையார் கோவிலுக்கு** 1922-ஆவது வருடம் ஜுலை மாதம் முதல் வாரத்தில் விஜயம் செய்தார்கள். அக்காலத்தில் சித்தமல்லி மிராசுதார் **சுப்பிரமணிய ஐயர்** ஸ்வாமிகளுடன் கூட இருந்து மடத்திற்குப் பணியாற்றி வந்தார். இவர் பல சாஸ்திரங்களைக் கற்ற மகாவித்வான்; மகாமகோபாத்யாய மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளிடம் சிஷ்யராக இருந்து கல்வி கற்றவர்.

**ஆவுடையார் கோவிலில் சாதுர்மாஸ விரதம்**

ஸ்வாமிகள் 1922-ஆவது வருடம் வியாஸ பூஜையை **ஆவுடையார் கோவிலில்** நடத்தி அவ்விடம் இரண்டு மாதங்கள் தங்கியிருந்தார்கள். **திருப்பெருந்துறை** யென்னும் இந்தத் தலமானது தமிழ்நாட்டுச் சிவத் தலங்களுள் மிகவும் பெருமை பெற்று விளங்குகிறது. அரிமர்த்தன பாண்டியன் தன் அமைச்சர் **வாதவூரர்** என்னும் **மாணிக்கவாசகரைத்** தனக்குக் குதிரைகள் வாங்கி வரும்படி நாற்பத்தொன்பது கோடி பசும் பொன்களுடன் அனுப்ப, அவர் இந்தத் தலத்தில் தங்கி, **ஆத்மநாதரது** தரிசனத்தில் ஈடுபட்டிருந்தபொழுது, ஆலயத்தின் பிராகாரத்திலுள்ள குருந்தமரத்தின் அடியிலுள்ள பீடத்தில் பதினாறு வயதுள்ள அந்தண் உருவத்துடன் ஈசன் அவர்முன் தோன்றி, சிவஞான போதத்தை அவருக்கு உபதேசித்து அருளினார். மாணிக்கவாசகர் தாம் கொண்டுவந்த பொருளை யெல்லாம் இந்த ஆலயத்தின் திருப்பணியில் செலவிட்டு விட்டார்.

இவ்வாலயத்திலுள்ள சிற்பக் கலையின் நுட்பங்களை வேறு எந்த ஆலயத்திலும் காணமுடியாது. இந்த ஆலயம் திருவாவடுதுறை ஆதீனத்தின் நிர்வாகத்தில் நன்குப் பரிபாலிக்கப்பட்டு வருகிறது. அநேகமாக ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளும் ஆத்மநாத

ஸ்வாமி தேவஸ்தானத்துக்குச் சென்று, அங்கு ஸ்வாமி சந்நிதியையும், யோகாம்பிகை சந்நிதியையும், மாணிக்கவாசகர் சந்நிதியையும், குருந்த மரத்தையும் தரிசனம் செய்து வந்தார்கள். அந்த ஊரில் தங்கியிருந்தபொழுது ஸ்வாமிகளிடம் மிகவும் பக்தி கொண்ட **நெய்க்குப்பை ஏகாம்பர சேர்வைக்காரர்** சலியாத ஊக்கத்துடன் மடத்திற்கு வேண்டிய பணிகளையெல்லாம் செய்து வைத்தார். அவ்வூரிலே சாதுர்மாஸ சங்கல்பம் முடிவுபெற்று விசுவரூப யாத்திரை அன்று (8-9-1922), திருவாவடுதுரை ஆதீன கர்த்தரவர்கள் ஆவுடையார் கோவிலில் தமது கட்டளைத் தம்பிரான் மூலமாக ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை முதலிய மரியாதை களைக் செய்துவைத்தார்கள். அவ்விடம் மடத்தின் சேவையில் ஈடுபட்டவர்களில், பட்டுக்கோட்டை வக்கீல் **வேங்கடேசுவர ஐயர்**, தேவஸ்தானம் ஸ்தானிகம் **ஆத்மநாத நம்பியார்** இவர்களைக் குறிப்பிடலாம்.

**முதல் இராமேசுவர யாத்திரை**

ஆவுடையார் கோவிலிலிருந்து ஸ்வாமிகள் **உப்பூர், தேவிப் பட்டினம்** வழியாக இராமேச்வரத்திற்குப் பயணமானார்கள். ஸ்வாமிகள் பாம்பன் ஜலசந்தியை ரயில் பாலத்தின்மீது நடந்து சென்று கடக்கத். தென்னிந்திய ரயில்வே அதிகாரிகள் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்கள். மற்றச் சாமான்களையும், வண்டிகளையும் படகுகளின் மூலம் ஏற்றி அனுப்புவதற்கு மண்டபம் **மரக்காயர்** எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து உதவினர். மரக்காயரும் ஸ்வாமிகளை நேரில் சந்தித்து ஸ்வாமி களின் அருளைப் பெற்றார். இராமேச்வரத்தில் தேவஸ்தான அதிகாரிகளும், பரம்பரை பண்டாக்களும் தேவஸ்தான மரியாதை களுடன் இராமநாத ஸ்வாமி தரிசனத்தை ஸ்வாமிகளுக்குச் செய்து வைத்தார்கள். இராமநாதலிங்கம் பாரத நாட்டிலுள்ள 12 ஜோதிர் லிங்கங்களுள் ஒன்றாகும். துந்துபி வருடம் (1922) புரட்டாசி மாதம் பூர்ணமி அன்று, ஸ்வாமிகள் இராமசேதுவில் கங்கையில் கலப்பதற்கென மணல் எடுத்துக் கொண்டார்கள். அந்த மணலும் பவ வருடம், ஆடி மாதம் பத்தாம் தேதி புதன் கிழமை (25-7-1934) அலகாபாத் என்னும் பிரயாகை திருவேணி சங்கமத்தில் சேர்க்கும் வரையில், ஸ்வாமிகளின் பூஜையிலேயே இருந்து வந்தது.

தனுஷ்கோடியில் ஸ்வாமிகள் நவராத்திரி பூஜையை முடித் துக்கொண்டு மகோததி, இரத்னாகரம் என்னும் இரண்டு கடல்கள்

சேரும் இடத்தில் விதிப்படி மூன்று நாட்கள் நீராடி, வேதமோதிய அந்தணர்களுக்கு ஏராளமான பொருள்களைத் தானமாகக் கொடுத்தார்கள். சுமார் பதினாயிரம் ரூபாய் வரையில் அங்குத் தானங்கள் கொடுக்கப்பட்டன. ஸ்வாமிகள் தனுஷ்கோடியிலிருந்து மறுபடியும் இராமேச்வரம் வந்து அவ்விடம் பக்தர்கள் செலுத்திய பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை ஏற்றுக்கொண்டு ஒரு வாரம் தங்கியிருந்தார்கள்.

**கதர் அபிமானம்**

கதராடைகள் விற்பனைக்கு வந்த சுமார் 1918-ஆவது வருடம் முதல், ஸ்வாமிகள் கதர் வஸ்திரத்தையே உடுத்து வருகிறார்கள். எவ்வளவு முரட்டு வஸ்திரமானாலும் கதர் அணிவதில் ஸ்வாமிகள் மிகுந்த மகிழ்ச்சி அடைவார்கள். தனுஷ்கோடியில் ஸ்வாமிகள் நீராடிய பொழுது மடத்தின் சிப்பந்திகள் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஜோடி கதர் வஸ்திரம் கொடுத்து, மில் நூல் ஆடைகளைத் தரித்திருந்தவர்களை அழைத்து அவ்வாடைகளைக் கடலில் எறிந்து விடும்படி கட்டளையிட்டார்கள். சிப்பந்திகளுக்குக் கொடுப்பதற்கென எட்டு முழம் வேஷ்டிகளில் சுமார் 200 ஜோடிகள் அன்று மதுரையிலிருந்து தருவிக்கப்பட்டன. காந்தியடிகளின் திட்டங்களில் கதர் உற்பத்தியும் முக்கியமான அம்சமாக விளங்கி வந்த அந்நாளில், சீமை உடைகளை நெருப்பில் எரிப்பது தேசபக்தர்களின் பணிகளில் ஒன்றாக அமைந்திருந்தது. அன்னிய நாட்டு துணிகளை ஜனங்கள் முன்னிலையில் எரிப்பதைவிடக் கடலில் எறிவது ஒரு சாவதானமான முறையாயும், சாத்விகமான முறையாயும் இருக்குமென்று ஸ்வாமிகள் எண்ணினார்கள் போலும். மடத்தின் சிப்பந்திகள் பலர் அன்று முதல் கதராடையே உடுத்துவதென்று சங்கல்பம் செய்து கொண்டனர்.

**மிராசுதார் ஆத்ம ஞானியானது**

கோடிக்கரையில் நீராடிவிட்டு ஸ்வாமிகள் ஒருநாள் கடற்கரை ஓரமாக நடந்து வந்தபொழுது அடியார்கள் கூட்டம் ஏராளமாக ஸ்வாமிகளைப் பின்தொடர்ந்து வந்தது. மடத்தில் நெருங்கிய தொடர்புள்ள மிராசுதார்கள் பலர் ஸ்வாமிகளுடன் வந்தார்கள். வழியில் அவர்கள் ஏழை மக்களுக்குக் காசும் துணியும் கொடுத்து வந்தார்கள். வழக்கம்போல் பிச்சை வாங்குவோரின் கூட்டத்தில் 'நான் முந்தி, நீ முந்தி' என்ற போட்டியுடன் சிறிது குழப்பமும் நேர்ந்தது. அப் பிச்சைக்காரர்களில் ஒருவன் தன்னை அறியாதவாறு

ஸ்வாமிகளை வழிமறைத்து நின்றுவிட்டான். உடன் வந்த மிராசு தார் ஒருவருக்கு அதனால் சினம் ஏற்பட்டு, அந்த ஏழையைத் தம் கைத்தடியினால் அவர் ஓர் அடி அடித்துவிட்டார். அந்த அடி தாங்காமல் அவனது உடலிலிருந்து சிறிது இரத்தமும் வெளிப் பட்டு விட்டது. கருணையே உருவெடுத்த ஸ்வாமிகள் இதைக் கண்டு மனம் சகியாதவராகி, அந்த மிராசுதாரை நோக்கி, 'நீங்கள் சாஸ்திரங்களை நன்கு கற்று அறிந்திருக்கிறீர்கள். ஈச்வரன் உங்களுக்கு வேண்டிய அளவு பொருளையும், நல்ல அறிவையும் கொடுத்திருக்கிறார். சாந்தமும் ஜீவகாருண்யமும், எல்லாப் பிராணிகளிடத்தும் தயையும், உங்களுக்குச் சாஸ்திரங்களிலிருந்து ஏற்பட்டிருக்க வேண்டும். மனிதன் எல்லாவற்றிலும் முதன்மை யான சினத்தை அடக்க வேண்டும்.'—என்று கூறிவிட்டு மடத்தின் சிப்பந்திகள் மூலம் அடிபட்ட பிச்சைகாரனுக்குச் சிகிச்சை செய்வித்து அவன் கோரிய இடத்திற்கு அனுப்பி வைக்க ஏற்பாடும் செய்தார்கள். ஸ்வாமிகளின் மொழிகள் மிராசுதாரரின் உள்ளத்தைத் தொட்டது. அவர் தாம் செய்த தவறை உணர்ந்து வருந்தினார். அந்த மிராசுதார் அன்று முதல் சினத்தை அடக்கிய வராகித் தமது வாழ்நாளின் பிற்பகுதியில் முறைப்படி சந்நியாச ஆசிரமும் பூண்டு ஆத்மஞானியாக விளங்கலானார்.

**இராமநாதபுரம், சிவகங்கை விஜயம்**

இராமேச்வர யாத்திரையை முடித்துகொண்டு ஸ்வாமிகள் இராமநாதபுரத்திற்கு 1922-ஆவது வருடம் அக்டோபர் மாதம் பத்தாம் தேதி விஜயமானார்கள். இராமநாதபுரம் ராஜா **ஸ்ரீமத் முத்துராமலிங்க சேதுபதி அவர்கள்** ஸ்வாமிகளைத் தமது அரண்மனைக்கு எல்லாவித அரசாங்க மரியாதைகளுடன் அழைத்துச் சென்று அவ்விடம் ஆறு நாட்கள் தங்கியிருக்குபடி செய்தார். பிறகு ஸ்வாமிகள் இராமநாதபுரத்திலிருந்து மானா மதுரை மார்க்கம் சிவகங்கையை அடைந்தார்கள். அங்கு **ராஜா முத்துவிஜய ரகுநாத கௌரீவல்லப துரைசிங்கத் தேவர்** அவர்கள் ஸ்வாமிகளுக்குத் தக்க முறையில் வரவேற்பு அளித்து வழக்க மாயுள்ள மரியாதைகளையும், பிக்ஷை, பாதபூஜை முதலியவை களையும் செய்துவைத்தார். சிவகங்கைப் பொதுமக்களும் ஸ்வாமி களுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளைச் செய்து ஸ்வாமி களைப் பூஜித்தார்கள். ஸ்வாமிகள் அக்டோபர் மாதம் இருபதாம் தேதி முதல் இருபத்து நான்காம் தேதி வரை சிவகங்கையில் தங்கியிருந்தார்கள்.

**பாண்டி நாட்டுத் திருத்தலங்களுக்கு விஜயம்**

ஸ்வாமிகள் சிவகங்கையிலிருந்து புறப்பட்டு, 1922–அக்டோபர் 28-ஆம் தேதி காளையார்கோவிலுக்கு விஜயம் செய்து அவ்விடம் சோமேச்வரர், காளீச்வரர், சுந்தரேச்வரர் இம்மூன்று சந்நிதிகளையும் அம்பிகை சந்நிதிகளையும் தரிசித்துக் கொண்டார்கள். சம்பந்தர், சுந்தரர் இவ்விருவராலும் இந்தத் தலம் பாடப்பெற்றதாகும். மாணிக்கவாசகர் (வாதவூர் அடிகள்) பிறந்த இடமாகிய **திருவாதவூர்** இவ்விடமிருந்து 16 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. சிவகங்கை சம்ஸ்தானத்தைச் சேர்ந்த இவ்வாலயத்தின் நிர்வாகிகள் ஸ்வாமிகளைத் தேவஸ்தான மரியாதைகளுடன் வரவேற்று அவ்விடம் தங்குவதற்குச் சிறப்பான வகையில் எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொடுத்தனர். பின்னர், ஸ்வாமிகள் **நாட்டரசன் கோட்டை, சோளபுரம், மதகுபட்டி** இவ்விடங்களில் தங்கி **திருக்கோட்டியூர்** என்னும் வைணவத் தலத்திற்கு விஜயம் செய்து அவ்விடம் **திருமகள் நாச்சியார் சமேத சௌமிய நாராயணப் பெருமாளையும்** அந்த ஆலயத்தின் பிராகாரத்தினுள் அமைந்துள்ள **சரபேச்வரர்** சிவாலயத்தையும் தரிசித்துக் கொண்டு மறுநாள் நவம்பர் மாதம் முதல் தேதி **திருப்பத்தூருக்கு** விஜயம் செய்து அப்பர், சம்பந்தர் பாடிய **சிவகாமி அம்பிகை சமேத ஸ்ரீதளிநாதர் சுவாமியைத்** தரிசனம் செய்து கொண்டார்கள். நவம்பர் மாதம் 2-ஆம் தேதி அவர்கள் **இளையாற்றங்குடிக்கு** விஜயம் செய்து, நகரக்கோவிலையும் அங்குள்ள பூர்வ ஆசாரியர்களின் அதிஷ்டானத்தையும் தரிசித்துக்கொண்டு, அவ்விடமிருந்து **வார்பட்டு** மார்க்கமாக நவம்பர் மாதம் 6-ஆம் தேதி **பிரான் மலையை** அடைந்து அந்த மலையின் மீது ஏறி அங்குள்ள சுனைகளில் நீராடினார்கள். அங்கிருந்து **கருங்காலக்குடி, மேலூர்** மார்க்கமாக நவம்பர் மாதம் 11-ஆம் தேதி **திருமாலிருஞ்சோலை** என்னும் **அழகர் கோவிலுக்கு** அவர்கள் விஜயம் செய்தார்கள்; அவ்விடம் மலைமீது பெருகும் **நூபுரகங்கை** என்னும் நீர்வீழ்ச்சியில் ஸ்நானம் செய்து, **சுந்தர ராஜரையும், சுந்தரவல்லித் தாயாரையும்** சேவித்துக் கொண்டார்கள். நம்மாழ்வார், பூதத்தாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் முதலான பக்தர்கள் இத்தலத்தில் பெருமாளைச் சேவித்துப் பாடியுள்ளார்கள். மேலும் இத்தலம் ஆறுபடை வீடுகளில் ஒன்றாகிய முருகன் தலமாகவும் கருதப்பட்டு வருகிறது. இந்த முருகன் தலத்திற்குப் **பழமுதிர்சோலை** என்பது பெயர்.

**மதுரை விஜயம்**

அழகர் கோவிலில் பெருமாளைச் சேவித்துக்கொண்டு ஸ்வாமிகள் மதுரைக்கு 1922-ஆவது வருடம் நவம்பர் மாதம் 12-ஆம் தேதி விஜயம் செய்தார்கள். மதுரையில் உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், வக்கீல்கள், இன்னும் மற்றவர்களெல்லோரும் மிகவும் ஒற்றுமையுடன் ஸ்வாமிகளுக்கு ஒரு பெரிய வரவேற்பை அளித்தார்கள். ஸ்வாமிகளின் விஜயத்திற்கென ஒரு பெரிய ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மதுரையின் முக்கிய வீதிகளில் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு ஸ்வாமிகள் தரிசனம் கொடுத்து, **மீனாக்ஷி அம்மன் ஆலயத்தின் கல்யாண மண்டபத்தில்** அவர்களுக்கென ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஜாகையில் வந்திறங்கினார்கள். அன்று மதுரை நகரம் முழுவதுமே, பெரிய கோலாகலத்தில் மூழ்கி இருந்தது. ஸ்வாமிகள் அன்று **மீனாக்ஷி அம்மனையும், சுந்தரேச்வரரையும்** தரிசனம் செய்து கொண்டார்கள். தேவஸ்தான அதிகாரிகள் கோவில் மரியாதைகளுடன் ஸ்வாமிகளை வரவேற்று, அம்பாள் தரிசனத்தையும், ஸ்வாமி தரிசனத்தையும் செய்து வைத்தார்கள். ஸ்வாமிகள் சுமார் ஒரு மாத காலம் மதுரையில் தங்கி இருந்தார்கள். ஸ்வாமிகளின் நித்ய பூஜையைக் காணவும், இரவு நேரங்களில் கல்யாண மண்டபத்தில் அவர்கள் புரிந்த உபந்யாசங்களைக் கேட்கவும், ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கில் பக்தர்கள் வந்து குவிந்துகொண்டிருந்தனர். வக்கீல் **ராவ்சாஹேப் என். நடேச ஐயர்** மடத்துக்கு வேண்டுவன எல்லாவற்றையும் கவனித்து மடத்தின் பணியில் ஈடுபட்டிருந்தார். வக்கீல் **கே. வி. இராமசாமி ஐயர், வக்கீல் ஏ. வைத்தியநாதய்யர்,** ஜவுளிக் கடை **மணி ஐயர்,** முதலான பல பிரமுகர்களும் இத்திருப் பணியில் பேருதவி புரிந்தார்கள். அந்த வருடம் மழையின் மிகுதியினால் வைகை ஆற்றில் பெரிய வெள்ளம் ஏற்பட்டது. 1922-ஆம் வருடம் டிஸம்பர் மாதம் 11-ஆம் தேதி வரையில் ஸ்வாமிகள் மதுரையிலேயே விஜயம் செய்திருந்தார்கள்.

**தாம்பிரபரணி தீர விஜயம்**

1922 டிஸம்பர், 12-ஆம் தேதி மதுரையிலிருந்து புறப்பட்டுத் **திருமங்கலம், வத்தராயிருப்பு, ஸ்ரீ வில்லிப்புத்தூர், இராஜபாளையம், சேத்தூர், சிவகிரி, சிந்தாமணி, கடையநல்லூர், தென்காசி, கடையம், பாபநாசம், அரியநாயகிபுரம்** மார்க்கமாக ஸ்வாமிகள் **திருநெல்வேலியை** அடைந்தார்கள். **வீரராகவபுரம், சந்நியாசி கிராமம், கைலாஸபுரம், வண்ணாரப்பேட்டை, திருநெல்வேலி டவுன்**

ஆகிய இவ்விடங்களில் பக்தர்கள் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாத பூஜை முதலியவைகளை மிகத் திறம்பட நடத்தி வைத்தார்கள். வீரராகவபுரத்தில் **விவேகசம்வர்த்தனி சபையின்** வருஷாந்தரக் கொண்டாட்டத்தில், ஸ்வாமிகள் தலைமை தாங்கி அந்தச் சபையின் கட்டிட நிதிக்காக ரூபாய் ஆயிரம் நன்கொடை அளித்தார்கள். 1923-ஆவது வருடத் துவக்கத்தில் ஸ்வாமிகள் **ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவைகுண்டம், நாங்குநேரி** முதலான திவ்ய தேசங்களைச் சேவித்துக் கொண்டு 11-2-1923-ஆம் தேதி ஆதிசங்கரரால் **புஜங்க ஸ்தோத்திரம்** பாடப்பெற்ற **திருச்செந்தூர்** க்ஷேத்திரத்திற்குச் சென்று அவ்விடம் 5 நாட்கள் தங்கி, **ஷண்முகநாதனைத்** தரிசித்துக்கொண்டார்கள். பின்னர் **அம்பாசமுத்திரம், பாபநாசம், தென்காசி, திருக்குற்றாலம், சங்கர நாராயணர் கோவில்** ஆகிய திருத்தலங்களுக்கெல்லாம் யாத்திரை செய்தார்கள். **கல்லிடைக் குறிச்சியில்** ஸ்வாமிகள் ஒரு வாரம் தங்கி மகாஜனங்கள் அளித்த பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளை ஏற்றுக் கொண்டார்கள்.

அவ்வருடமே ஏப்ரல் மாதத்தில் **திருவானைக்காவில்** அகிலாண்டேச்வரி அம்மனுக்குத் **தாடங்கப் பிரதிஷ்டைக்கு** முகூர்த்தம் வைத்திருந்ததால், திருநெல்வேலி ஜில்லா யாத்திரையைச் சீக்கிரத்தில் முடித்துக் கொண்டு **கோவில்பட்டி, சாத்தூர், அருப்புக் கோட்டை, மதுரை** மார்க்கமாக ஸ்வாமிகள் திருச்சிராப்பள்ளிக்கு வரவேண்டியதாயிற்று. வரும் மார்க்கத்தில் ஸ்வாமிகள் **திண்டுக் கல்லில்** மூன்று நாட்கள் முகாம் செய்திருந்தார்கள். அப்பொழுது திண்டுக்கல்லுக்குச் சுமார் முப்பது கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **சிறு மலைக்கு** விஜயம் செய்து, பரிவாரங்கள் ஒன்றுமில்லாமல், குறிப்பிட்ட சில சிப்பந்திகள் மாத்திரம் பின்வர மலைமீது வெகு தூரம் ஏறி, அங்கே பச்சை இலைகளால் பர்ணசாலை ஒன்று அமைத்துக் கொண்டு, நிர்மானுஷ்யமான இயற்கைக் காட்சிகளிலே ஈடுபட்டவர்களாய், அங்கு இரண்டு நாட்கள் தங்கி இருந்தார்கள். மலையில் தங்குவதற்கான பந்தோபஸ்துக்களைக் **கன்னிவாடி ஜமீன்** அதிகாரிகள் செய்துகொடுத்தார்கள். பிறகு ஸ்வாமிகள் பழனிக்கு 22-3-1923-விஜயம் செய்து மூன்று நாட்கள் அவ்விடம் தங்கி, **தண்டாயுதபாணி தர்சனம்** செய்துகொண்டார்கள்.

பின்னர் யாத்திரை **திண்டுக்கல், விராலிமலை, இலையாற்றங் குடி, கண்டனூர், திருமயம், புதுக்கோட்டை, கீரனூர்** மார்க்கமாக 1923-ஆவது வருடம் ஏப்ரல் மாதத்தில் திருவானைக்காவுக்குச்

சென்றது. திருமயம் சத்திரத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்த பொழுது, கடியாப்பட்டி **தீ. நா. முத்தையா செட்டியாரால்** ஸ்வாமிகள் பூஜைக்காக ஒரு தங்கத் தாம்பாளம் காணிக்கையாக அளிக்கப் பட்டது. **புதுக்கோட்டையில்** சம்ஸ்தான ரீஜெண்டு **ஸ்ரீ விஜய ரெகுநாத துரை ராஜா** அவர்கள் ஸ்வாமிகளை அரசாங்க மரியாதைகளுடன் வரவேற்று, **ஸஹஸ்ர பாதபூஜை** செய்வித்தார். புதுக்கோட்டை மக்களும் ஸ்வாமிகளைச் சுமார் ஒரு வாரம் அவ்விடம் தங்கச் செய்து, பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளையும் பெரியதொரு ஊர்வலத்தையும் நடத்தினார்கள். புதுக்கோட்டை நகரத்திற்கு இது ஸ்வாமிகளது இரண்டாவது விஜயமாகும்.

**திருவானைக்கா மடம்**

ஸ்ரீ காமகோடி பீடத்திற்குப் பல க்ஷேத்திரங்களில் மடங்கள் ஏற்பட்டுள்ளன. அவைகளில் திருவானைக்காவில் உள்ள மடத்தை மிகவும் பழமையானதெனச் சொல்லுகிறார்கள். விஜயரங்க சொக்கநாதரால் மடத்திற்கு அளிக்கப்பட்ட தாமிரசாஸனத்தில் இச்செய்தி கூறப்பட்டுள்ளது. அவ்வூர் வடக்கு வீதியில் ஏற்பட்டுள்ள இந்த விசாலமான மடம் எப்பொழுது தோன்றிற்று என்று தீர்மானிக்கத் தக்க ஆதாரம் எதுவும் இதுவரையில் கிடைக்கவில்லை. பழையதொரு சிலாசாஸனம் ஒன்றில் இது நாற்பத்து எண்ணாயிரத்தவர் மடம் எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது; இந்தச் சொல் புராதனமாக ரிஷிகளைக் குறிப்பதால், ரிஷிகளின் காலம் தொட்டே இந்த மடம் இருந்து வருவதாக ஒருவாறு ஊகிக்கலாம். ஜம்புரிஷி என்றவர் இத்தலத்தில் வசித்த செய்தியையும் இங்குக் குறிப்பிடலாம். இம்மடத்தில் சமீபகாலம் வரையில் அந்தணர்கள் தங்கள் பாலகர்களுக்குப் பிரம்மோபதேசம் செய்துவைப்பது வழக்கமாயிருந்தது. இந்தியாவின் பழுத்த விஞ்ஞானியாக விளங்கிய **ஸர்.எம். விசுவேசுவரய்யா** தமக்கு உபநயனமும் பிரம்மோபதேசமும் இந்த மடத்தில்தான் நடைபெற்றனவென்று அவர் 1923-ஆவது வருடத்தில் திருச்சிராப்பள்ளிக்கு வந்த சமயம் தெரிவித்தார். முழுவதும் கல்மண்டபங்களாக அமைக்கப்பட்டிருந்த இந்த மடமானது சென்ற 1908-ஆவது வருடத்திலேயே மிகவும் ஜீரண தசை அடைந்திருந்ததை ஸ்வாமிகள் நேரில் கண்டிருந்தார்கள்; அவர்களின் மனஸில் இதை நன்குப் புதுப்பித்து வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்பிக்கும் ஓர் முக்கிய ஸ்தானமாக இதனை



கும்பகோணம் காஞ்சி காமகோடி மடத்தின் தோற்றம்



திருவானைக்காவில் உள்ள ஸ்ரீ காஞ்சி காமகோடி மடம்
(வித்யாஸ்தானம்)



ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்நானமான பிறகு காக்ஷி
அளிக்கிறார்கள்



விஜயவாடா கிருஷ்ணா நதியில் ஸ்நானத்திற்கு முன்
சங்கல்பம்

அமைத்துவிடவேண்டுமென்ற எண்ணம் அப்பொழுதே உதித்தது. ஸ்வாமிகள் இந்த மடத்தின் திருப்பணியை 1920-ஆவது வருடம் ஆரம்பிக்கக் கட்டளையிட்டார்கள் ; சுமார் ரூபாய் 75,000 செலவில் நூதன முறையில் நல்ல வசதிகளுடன் இது கட்டப்பெற்றது. இம்மடத்தில் நடைபெறும் வித்யாஸ்தானத்தின் ஆசாரியர்களுக்கும், மாணவர்களுக்குமாகத் தனித்தனி விடுதிகளும் கட்டப்பட்டிருக்கின்றன.

### தாடங்கப் பிரதிஷ்டை

இந்த க்ஷேத்திரம் **திருவானைக்கா** என்றும் **ஜம்புகேசுவரம்** என்றும் அழைக்கப்பெறும். இது பஞ்சபூத க்ஷேத்திரங்களில் அப்பு க்ஷேத்திரமாக விளங்குகிறது. அப்பு என்பது தண்ணீரைக் குறிக்கும். திருவானைக்கா ஸ்தலத்தில் லிங்கத்தைச் சுற்றி எப்பொழுதும் ஊறிக் கொண்டிருக்கும் தண்ணீரை இறைத்த பிறகே லிங்கத்திற்குப் பூஜை செய்யமுடியும் ; இறைக்க இறைக்க அவ்விடம் தண்ணீர் ஊறிக்கொண்டே இருக்கும் ; அந்த நீரை முதலில் ஒரு தொட்டியில் இறைத்துப் பிறகு இயந்திர சாதனத்துடன் ஒவ்வொரு நாளும் அதை வெளியேற்றுகிறார்கள். அந்த க்ஷேத்திரத்தின் ஸ்வாமியின் பெயர் **ஸ்ரீ ஜம்புநாதர்.** அம்பிகை **ஸ்ரீ அகிலாண்டேச்வரி** ; ஆதிசங்கரர் பாரததேசத்தில் திக்விஜயம் செய்தபொழுது, தேசத்தின் பல பாகங்களில் வெவ்வேறு க்ஷேத்திரங்களில் தோன்றியிருந்த பராசக்தியின் உக்கிரக் கலையைச் சாந்தப்படுத்துவதற்காக ஆங்காங்கு **ஸ்ரீசக்கிர ப்ரதிஷ்டைகளைச்** செய்துள்ளதாகச் சரித்திரம் கூறுகிறது. காசியில் **அன்னபூரணி,** வடகன்னடத்தில் **மூகாம்பிகை,** காஞ்சியில் **காமாக்ஷி,** திருவொற்றியூரில் **திரிபுரசுந்தரி,** ஜம்புகேசுவரத்தில் **அகிலாண்டேச்வரி** ஆக இவ்விடங்களில் எல்லாம் சங்கரர் ஸ்ரீ சக்கர ப்ரதிஷ்டை செய்திருக்கிறார். காஞ்சீபுரம், திருவொற்றியூர், திருவானைக்கா ஆகிய க்ஷேத்திரங்களில் ஆலயங்களின் உட்புறங்களில் ஸ்ரீ ஆதிசங்கரரின் பிம்பங்கள் காணப்பெறுகின்றன. அவ்விடங்களிலுள்ள அம்பிகைக்கு வைதிக முறையாகவே பூஜை நடைபெற்று வருகிறது. திருவொற்றியூரிலுள்ள அம்பிகைக்கு மலையாள நாட்டு நம்பூதிரி ஒருவர் பூஜை செய்து வருகிறார். இந்தச் சக்கர ப்ரதிஷ்டை ஒவ்வோர் இடத்திலும் வெவ்வேறு விதமாக அமைந்துள்ளது. அகிலாண்டேச்வரி அம்மனுக்கு **தாடங்கம்** என்னும் காதிலணியும் ஆபரணத்தில், ஸ்ரீ சக்கரத்தை சங்கரர் ப்ரதிஷ்டை செய்துள்ளார். அதனுடன் அம்பிகையின்முன் ஓர் விநாயகரையும் அவர்

ஸ்தாபனம் செய்து, தேவியின் உக்கிரத்தையும் சாந்தப்படுத்தினார். அன்று முதல் அம்பிகையின் இரு காதுகளிலும் அத்தாடங்கங்கள் அணிவிக்கப்பட்டு வருகின்றன. இரத்தினங்களால் பதிக்கப்பெற்ற அந்தத் தாடங்கங்களுக்கு எப்பொழுதாவது பழுதேற்பட்டால், அவைகளைப் புதுப்பித்து மறுபடியும் ஸ்தாபனம் செய்யும் உரிமை **ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஆசாரியர்களுக்கே** உரியதாகும். 1846-ஆவது வருடத்தில் அக்காலத்திலிருந்த ஆசாரிய ஸ்வாமிகளால் ஒரு முறை தாடங்க ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அந்தத் தாடங்கங்களுக்கு மலினம் ஏற்பட்டிருப்பதாயும், அவைகளைச் சீக்கிரம் புதுப்பித்துத் தாடங்க ப்ரதிஷ்டை செய்ய வேண்டுமென்றும் தேவஸ்தானத்து அதிகாரிகள் 1920-ஆவது வருடத்திலேயே மடத்திற்குத் தெரிவித்துக் கொண்டனர். இவ்விஷயத்தில் ஸ்வாமிகள் தீர்க்கமாக ஆலோசனை செய்து, அவை வெகுகாலம் அழியாமலிருக்க வேண்டுமென்பதை உத்தேசித்து, பழைமையான அந்தத் தாடங்கங்களைச் சீர்திருத்தம் செய்வதுடன் அவைகளை உள்ளடக்கி வைக்கும்படி ஸ்ரீ சக்கர வடிவமாக ரத்தினங்கள் பதித்த புதிய இரண்டு மேலுரைகளையும் தயாரிப்பதென முடிவு செய்தார்கள். ஸ்வாமிகளின் விருப்பப்படி இந்தப் பணியை மடத்தின் முக்கிய சீடர்களும், சென்னையில் ரத்தின வியாபாரத்தில் மிகவும் பிரபலமாக விளங்கியவர்களுமான **டி. ஆர். டாக்கர் அண்டு சன்ஸின்** சொந்தக்காரர்கள் முற்றிலும் ஏற்றுக்கொண்டனர். இந்த ப்ரதிஷ்டையை முன்னிட்டு ஸ்வாமிகள் திருச்சிராப்பள்ளிக்கு விஜயமான பொழுது, திருச்சி மக்கள் ஸ்வாமிகளுக்கு அச்சமயம் அளித்த வரவேற்பு அதுவரையில் எவருக்கும் அளிக்கப்படாத வகையில் விளங்கிற்று. அக்காலத்தில் முனிஸிபல் சேர்மனாக இருந்த **எப். ஜி. நடேச ஐயர்** பிற்காலத்தில் வெளியிட்டிருக்கும் கட்டுரை ஒன்றில் அவ்வரவேற்பின் சிறப்பைக் கீழே கண்டவாறு விவரித்துள்ளார்.

“முப்பது வருடங்களுக்கு முன் நடந்த ஒரு சம்பவம். நான் திருச்சிராப்பள்ளி முனிஸிபல் சபையின் சேர்மனாக இருந்த காலம். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்து ஆசார்ய ஸ்வாமிகள் திருவானைக்கா என்னும் ஜம்புகேசுவரம் அகிலாண்டேச்வரி அம்பாளுக்குத் தாடங்கப் பிரதிஷ்டைக்காக விஜயம் செய்திருந்தார்கள். வரவேற்புக் கமிட்டிக்குத் தலைவனாக என்னையே மகா ஜனங்கள் தேர்ந்தெடுத்து என்னிடம் ஸ்வாமிகளின் வரவேற்புக்கும் பட்டண ப்ரவேசத்திற்குமான சகல பொறுப்புக்களையும் ஒப்

படைத்து விட்டார்கள். அதனுடன் நகரசபைத் தலைவன் என்கிற வகையிலும், பல ஆண்டுகள் கழித்து இப்பெரிய மகோத்சவத்திற்கு வரும் ஆசார்யர்களுக்குகந்த மரியாதையும், கௌரவமும் நிறைந்த வரவேற்புக் கொடுப்பது என் கடமையாயிற்று............ மகாராஜாக்களுக்கும், வைசிராய், கவர்னர் முதலிய பிரமுகர்களுக்கும் அக்காலத்தில் அளித்து வந்த உபசரிப்பு, வரவேற்பு ஏற்பாடுகள், இவைகளுக்குப் பல படிகள் மேலாகவே, ஆசார்ய ஸ்வாமிகளுக்கு வரவேற்பு அளிக்கும் பாக்கியம் எனக்கும் என்னுடன் பக்கபலமாய் நின்று உழைத்த, காலம்சென்ற என் ஆருயிர் நண்பர்கள் **ஸ்ரீ மு. கந்தசாமி சேர்வை**, வக்கீல் **ஸ்ரீ ரா. ஸ்ரீனிவாச ஐயர்** இவர்களுக்கும் பொது மக்களுக்கும் கிடைத்தது. ஏழு மைல் தூரம் தெற்கு எல்லையிலிருந்து, வடக்கு எல்லைவரை பிரம்மாண்டமான ஊர்வலம்; ஏழு ஜதை தனித்தனி நாயனம்; மூன்று ஜதை பாண்டு; நான்கு யானைகள்; பல குதிரைகள்; ஒட்டகங்கள்; பாவட்டாக்கள்; பிருதுகள்; நகரா முதலிய மடத்தைச் சார்ந்த வாத்திய கோஷ்டிகள்; பஜனை கோஷ்டிகள்; சேவா சமிதிகள்—இவை முன்னும், பின்னும் செல்ல மத்தியில் தந்தச் சிவிகையின் முன் குஞ்சத்தை அடியேன் பிடித்துச் செல்ல, **லோககுருவான ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்** திவ்ய தேஜஸுடன் தெருக்களின் இரு பக்கங்களிலும், வீட்டுத் திண்ணை வாயில்களிலும், மாடிகளிலும் திரண்டு நின்ற லக்ஷக் கணக்கான மக்களுக்கு இந்துக்களல்லாத கிறிஸ்தவ, முகம்மதிய சமூகத்தினரும் கொண்ட மக்களுக்கு—பக்த கோடிகளுக்குத்—தரிசனமளித்துப் பவனி சென்றார். பூர்ண கும்பங்கள், புஷ்ப மாலைகள், ஆரத்திகள், நிவேதனங்கள், ஆஸ்திக கோஷங்கள் அபரிமிதம்; கண்கொள்ளாக் காட்சி; ஊர்வலம் மாலை 6 மணிக்குக் கிளம்பியது. திருவானைக்கா மடத்து வாசல் சேர 10 மணிக்கு மேலாயிற்று. நான் ஆனந்த பரவசத்தினால் மெய்ம்மறந்து, உடல் சிலிர்த்து ஆசார்ய ஸ்வாமிகளைச் சாக்ஷாத் பிரத்தியக்ஷ ஈசுவரனாகவே கருதி அவர்கள் சேவையிலேயே ஈடுபட்டிருந்தேன்.''

**பிரதிஷ்டை**

தாடங்கப் பிரதிஷ்டைக்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே ஆலயத்தில் பெரிய யாகசாலை நிர்மாணிக்கப்பெற்றிருந்தது. எங்கும் வேத கோஷம்; தேவார கானம்; பஜனைகோஷ்டிகளின் நாமாவளியின் சப்தம்; இவைகளெல்லாம் மூன்று நாட்கள் ஒலித்தவாறே இருந்தன. மடத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திர

மௌளீச்வரருக்குச் செய்யும் நித்ய பூஜையைக் காண, நியமத்துடன் காத்து நிற்கும் ஆயிரக் கணக்கான மக்களுக்கு அபிஷேக தீர்த்தமும், விபூதி, மந்திராக்ஷதைப் பிரசாதமும் வழங்கி வந்தார்கள். ஸ்ரீ ஜம்புநாதர் அகிலாண்டேச்வரி ஆலயத்தில் தாடங்க ப்ரதிஷ்டை தினத்தன்று அடங்க முடியாத ஜனக் கூட்டம். பலருக்கு மூச்சே திணறியதால் அவர்களைக் காற்றோட்டமான இடங்களுக்கு எடுத்து வந்து சிகிச்சை செய்ய வேண்டியதாயிற்று.

குறித்த முகூர்த்தத்தில் (ருத்ரோத்காரி சித்திரை 17-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை; 29-4-1923) ஸ்வாமிகள் தமது திருக்கரங்களால் இரண்டு தாடங்கங்களையும் ஏந்திப் பண்டிதர்களெனப் படும் ஆலய அர்ச்சகர்களின் உதவியுடன் அம்பிகையின் இரு காதுகளிலும் அணிவித்தார்கள். இந்தக் காட்சியை அன்று தரிசித்தவர்களே பாக்கியசாலிகள். **ஆதிசங்கரரே திரு அவதார மெடுத்து இந்தத் தாடங்கப் பிரதிஷ்டையைச்** செய்தாரென்று பக்தர்கள் நினைத்தார்கள். இவ்விதம் அகிலாண்டேச்வரியின் தாடங்கப் பிரதிஷ்டை மிகச் சிறப்பாக நடந்தேறியது. தேவஸ்தானத்தின் பரம்பரை டிரஸ்டிகளான **காளுடுகொத்தான் சா. ராம** குடும்பத்தார்களும், திருச்சி மளிகை **மு. கந்தசாமி சேர்வையும்,** மடத்தின் மாஜி ஏஜெண்டு **மணக்கால் கந்தசாமி ஐயரும்,** வக்கீல் **ஆர். ஸ்ரீநிவாஸ ஐயரும்,** வக்கீல் **வி. ஐயராம ஐயரும்** இன்னும் பல பக்தர்களும் இந்த விழாவில் சலியாது உழைத்துப் பணியாற்றினார்கள்.

**ஆண்டிப்பட்டி ஜமீன்தார்** திவான்பகதூர் **பெத்தாச்சி செட்டியார்** ஸ்வாமிகளின் வரவேற்பில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டு, தாடங்கப் பிரதிஷ்டை சம்பந்தமாய்ப் பலவிதப் பணிகளை ஆற்றினார். இந்தப் பெரிய மகோத்ஸவத்தில் **தேப்பெருமாநல்லூர் சிவனது** அன்னதானம் தொடர்ந்து ஏழு நாட்களுக்கு ரங்கூன் ரெட்டியார் சத்திரத்தில் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு நடைபெற்றது; அவ்வளவு பெரிய அன்னதானம் திருச்சிராப்பள்ளியில் அதுவரை ஒருவராலும் நடத்தப்பெறவில்லையென்று ஜனங்கள் கூறிக்கொண்டனர்.

இந்த விழாவை ஒட்டி மடத்தில் ஆஸ்திகர்களின் மகாநாடு ஒன்று கூட்டப்பட்டது. இந்த மகாநாட்டில் வித்வான்கள் பலரும், மற்றும் காங்கிரஸ்வாதிகள், மிதவாதிகள், ப்ரம்மஞான சங்கத்தவர்கள், உயர்தர அரசாங்க அதிகாரிகள், வழக்கறிஞர்கள், சைவ வைஷ்ணவப் பெரியார்கள் போன்ற பல்வேறு நிலையில் உள்ளவர்களை ஒரே மேடையில் காணும் சந்தர்ப்பம் அந்த

ஆஸ்திக மகாநாட்டினுல் ஏற்பட்டது. காலப்போக்கை அனு சரித்தும் பழைமையைப் புறக்கணிக்காமலும், நமது மதத்தையும், மதத்தின் கோட்பாடுகளையும் எவ்விதம் பாதுகாக்கவேண்டு மென்பதான முயற்சியில் அந்த மகாநாட்டில் சர்ச்சைகள் செய்யப் பட்டன. மூன்று நாட்கள் மகாநாடு நடைபெற்றது. அந்நாளில் மைசூரில் காங்கிரஸ் தலைவராக விளங்கிய **செட்லூர்** என்பவர் மகாநாட்டின் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார். ஸ்வாமிகள் ஒவ் வொரு நாளும் சபையில் பிரசன்னமாக இருந்தார்கள். சமூக நலனுக்கும், மதத்தைக் காப்பதற்கும் எடுத்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கைகளைக் குறித்து அவரவரின் எண்ணங்களையும், ஆலோசனைகளையும் தாராளமாக எடுத்துரைக்க எல்லோருக்கும் அனுமதி அளிக்கப்பட்டது. காரசாரமான விவாதங்கள் அப் பொழுது எழுந்தன. நீடித்த சர்ச்சைகளுக்குப் பின்னர் பல தீர் மானங்கள், ஸ்வாமிகளின் அனுமதியின் பேரில் ஏக மனதாக நிறைவேற்றப்பட்டன. அவைகளில் திருவானைக்கா மடத்தில் ஒரு **விச்வ வித்யாலயம்** ஏற்படுத்தவேண்டுமென்பதும் ஒன்று. குருகுல முறையில் அதை நடத்தவேண்டுமென்று ஸ்வாமிகள் எண்ணம் கொண்டார்கள். அதை ஒட்டி மடத்தில் ஒரு **வேத பாடசாலையும்,** ஒரு **வேதாந்த பாடசாலையும்** ஆரம்பிக்கப்பட்டன. இந்த மகா நாட்டை நிர்வகிக்கும் பொறுப்பை ஸ்ரீரங்கம் வாணி விலாஸ அச்சகத்தின் ஸ்தாபகரான **டி. கே. பாலசுப்ரமண்ய ஐயர்** ஏற்றுக் கொண்டிருந்தார். யாவருக்கும் திருப்தி அளிக்கும் வண்ணம் அவர் மகாநாட்டைத் திறமையுடன் நடத்திவைத்ததற்கு ஸ்வாமிகள் அவரை மிகவும் பாராட்டினுர்கள். அப்பொழுது அவர் நடத்திவந்த **ஹிந்து மெஸ்ஸேஜ் (Hindu Message)** என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் ஸ்வாமிகளின் திருச்சி விஜயத்தைப் பற்றியும், தாடங்கப் பிரதிஷ்டையின் வைபவத்தைப் பற்றியும், மகாநாட்டின் நடவடிக்கைகளைப் பற்றியும் விரிவான தலையங்கம் ஒன்று வெளிவந்தது. அக்கட்டுரை இப்புத்தகத்தில் சேர்க்கையாக அமைந்துள்ளது.

தாடங்கப் பிரதிஷ்டை முடிந்த பின்னர் ஸ்வாமிகள் ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரங்கநாதரையும், மலைக்கோட்டை ஸ்ரீ மாத்ரு பூதேச்வரரை யும் தரிசனம் செய்துகொண்டார்கள். அவ்விரண்டு தேவஸ் தானங்களிலும் டிரஸ்டிகள் எல்லா மரியாதைகளுடன் ஸ்வாமிகளை வரவேற்று வழக்கம்போல் ஸ்வாமி தரிசனம் செய்து வைத்தார்கள். ஸ்வாமிகள் திருவானைக்காவில் தங்கியிருந்த பொழுது மாலை நேரங்களில் மடத்தின் பின்புறத்தில் அமைந்

திருந்த பர்ணசாலையில் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்து வந்தார்கள். ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கானவர்கள் அவ்விடம் கூடி ஸ்வாமிகளின் உபதேச மொழிகளைக் கேட்க ஆவலுடன் காத்திருப்பார்கள். சகலகலாவல்லபர்களான ஸ்வாமிகள் சாஸ்திரங்களிலிருந்து, விஞ்ஞானத்தின் முதிர்ச்சியால் தற்காலம் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்குத் தாத்பரியம் கூறியதையும், மேலும் மிகவும் எளிதாகவும் ஹாஸ்யச் சுவையுடனும், அழுத்தம் திருத்தமாகவும் பற்பல விஷயங்களை எடுத்துக் கூறியதையும் யாவரும் கேட்டு வியப்படைந்தார்கள். ஸ்வாமிகள் பழைமையும், புதுமையும் ஒருங்கே அமைந்த ஸரஸ்வதிவிலாசமென்று திருச்சியில் அந்நாளில் பேராசிரியராக விளங்கிய **பி. டி. ஸ்ரீநிவாஸ அய்யங்காரும், பி. ஜி. சுந்தரேச சாஸ்திரிகளும்** ஸ்வாமிகளைப்பற்றிக் கூறியதுண்டு.

### நெரூரில் ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரரின் ஸமாதி தரிசனம்

தாடங்கப் பிரதிஷ்டை முடிந்தவுடன் ஸ்வாமிகள் காவிரியின் தென்கரை வழியாகக் **குழித்தலை, கிருஷ்ணராஜபுரம், மகாதானபுரம்** முதலான ஊர்களில் தங்கி, **கரூர்** வரை விஜயம் செய்து, பின் **நெரூரில் ஸ்ரீ** ஸதாசிவ ப்ரம்மத்தின் அதிஷ்டானத்தையும் தரிசனம் செய்துகொண்டார்கள். ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர் கும்பகோணத்தை அடுத்த **திருவிசைநல்லூரில்** உதித்தவர். ஸ்ரீ காமகோடி பீடத்தின் 57-ஆவது ஆசாரியர்களான **ஸ்ரீபரம சிவேந்திர ஸரஸ்வதியைத்** தம் ஞான குருவாகப் பெற்றவர். ஸதாசிவேந்திரர் இயற்றிய நூல் ஒன்றில் தம் குருநாதரைச் சந்திரனெனவும், தம்மை எல்லையற்ற ஆனந்தக் கடலெனவும், உவமை கூறியுள்ளார். என்ன அழகிய உவமை! சந்திரனைக் கண்ட கடல் பொங்கி எழுந்து ஆரவாரம் செய்வதுபோல், குருநாதரைக் கண்ட மாத்திரத்தில் உள்ளம் குளிர்ந்து மனத்தில் தோன்றும் எழுச்சிகளெல்லாம் பொங்கி, அவர்பால் தம்மையே அர்ப்பணம் செய்யும் நிலையல்லவோ இது? கடலுக்கும், சந்திரனுக்கும் இடையே யார் குறுக்கே நிற்கப் போகிறுர்கள்?

ஸ்ரீ ஸதாசிவேந்திரர் 'யோகசூத்திரவிருத்தி, பிரம்மசூத்திர விருத்தி, சித்தாந்தகல்பவல்லி, சிவமானஸ பூஜை, ஆத்மவித்யா விலாஸம்' என்னும் நூல்களையும் தமது வேதாந்த அனுபவங்களையும், பக்தி மார்க்கத்தையும் போதிக்கும் பல கீர்த்தனங்களையும் இயற்றியுள்ளார். இவைகளைத் தவிர ஸ்ரீ காமகோடி பீடத்தில் தம் குரு பரமசிவேந்திரர்வரை அமர்ந்திருந்த ஆசாரியர்களின்

சரித்திரங்களையும் விளக்கி, 'குருரத்தினமாலிகை' என்னும் நூலையும் இயற்றியிருக்கிறார். அந்த நூலில் நமது பாரத நாட்டில் அவ்வப்போது அரசாண்ட பல தேசத்து மன்னர்களைப் பற்றியும், அவ்வக் காலங்களில் அவர்களின் சபைகளில் வீற்றிருந்த கவிகளைப் பற்றியும் விவரித்துள்ளார். அந்நூல் ஸ்ரீ காமகோடி பீடத்தின் சரித்திரமாயிருப்பதோடு, தேச சரித்திரமாகவும் விளங்கி வருகிறது. இந்த நூலை ஆராய்ந்து வெளியிடவேண்டியது மடத்துச் சீடர்களின் பொறுப்பாகும்.*

ஸ்ரீ ஸதாசிவேந்திரர் தம் குருநாதரின் குறிப்பை உணர்ந்து மௌன நிலை அடைந்து, ஐம்புலன்களையும் அடக்கி யாராவது அன்ன பிக்ஷை அளித்தால் அதைத் தம் கைகளால் ஏந்திப் பெற்று உட்கொண்டு, பின்னர் அதையும் குறைத்துக்கொண்டு அவதூதராக (ஆடையில்லாதவராக) காவிரி நதியின் கரை ஓரங்களிலும், மணல் திட்டுக்களிலும், செடிப் புதர்களிலும், பெரிய மரங்களின் அடிகளிலும், கூடியவரை ஜனங்களின் கண்களுக்குப் புலப்படாதவாறு சஞ்சரித்து வந்தார். ஸதாசிவேந்திரர் ஒரு சமயம் புதுக்கோட்டைச் சீமையிலுள்ள காடுகளில் சஞ்சரித்த பொழுது அந்நாட்டு மன்னர் **விஜயரகுநாத தொண்டைமான்** அவரைக் கண்டதாகவும், தமக்கு உபதேசமருள வேண்டுமென அவரை அம் மன்னர் வேண்டிக்கொள்ள, அப்பொழுது ஸதாசிவேந்திரர் தாம் நின்ற இடத்திலேயே மணலில் சில உபதேசமொழிகளை எழுதிக் காட்டியதாகவும், அந்த மன்னர் அம் மணலை அப்படியே எடுத்து வந்து தம் அரண்மனையில் பூஜையில் வைத்ததாகவும் கூறப்படுகிறது.

ஸதாசிவேந்திரர் ஒரே காலத்தில் பல இடங்களில் தோன்றிப் பல அதிசயங்களைச் செய்துள்ளார். ஒரு நாள் பிரம்மேந்திரர் தம் சீடர்களை அழைத்து, "காசியிலிருந்து ஓர் அந்தணப் பிரம்மசாரி சில நாட்களில் ஒரு சிவலிங்கத்தைக் கொண்டுவருவான். அப்படி அவன் வரும் நாளில் எமக்கு நிர்யாணம் ஏற்படும்; அப்பொழுது இந்த உடலை அகண்டகாவிரியின் தென்கரையில் அமைந்துள்ள நெரூர் என்னும் இடத்தில் சமாதி வைத்து, அதன்மீது ஒரு வில்வ மரத்தையும் வளரச்செய்து அதற்குப் பக்கத்தில் அந்தணர் கொண்டுவரும், சிவலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்ய வேண்டும்," எனக் கட்டளையிட்டார். குறித்த நாளில் அந்தணரும் காசியிலிருந்து லிங்கத்தைக் கொண்டுவரவே, ஸதாசிவேந்திரர்

* 'குரு ரத்னமாலிகை' காமகோடி கோசஸ்தானத்தாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

தமது பூத உடலை விடுத்தார். சீடர்களும் அவரது புனித உடலைக் குறிப்பிட்ட இடத்தில் சமாதியில் அமைத்து அதன்மேல் ஓர் வில்வ மரத்தையும், வளரச்செய்தார்கள். குருநாதரது விருப்பப்படி பக்கத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்யப்பெற்றது.* இந்த நிகழ்ச்சிகளெல்லாம் இன்றைக்குச் சுமார் 200 வருடங்களுக்கு முன் நடந்தவைகளாகும். ஸதாசிவப்ரம்மம் தாயுமானவரின் சம காலத்தவரெனவும் கூறுவர்.

நம் ஸ்வாமிகள் நெரூரில் சுமார் ஒரு வாரம் தங்கியிருந்தார்கள். அப்பொழுது அவர் ஸதாசிவப்ரம்மத்தின் சமாதியில் அதிக நேரம் தனிமையில் நிஷ்டையிலிருந்து வந்தார்கள். அவர்களின் விருப்பப்படி சமாதிக்கும் அதை அடுத்த சிவலாயத்திற்கும் விசேஷமான ஆராதனைகள் செய்விக்கப்பட்டன.

### கிறிஸ்தவ மதத்தில் சேரத் தீர்மானித்த இளைஞரை மனமாற்றியது

நெரூரிலிருந்து யாத்திரை மேலே நடந்த காலத்தில் 1923-இல் ஜூன் மாதத்தில் மலையாள நாட்டிலிருந்து ஸ்மார்த்தப் பிராம்மண இளைஞர் ஒருவர் தாம் கிறிஸ்துவ மதத்தில் சேரும் தீர்மானத்துடன் திருச்சிக்கு வந்து சேர்ந்தார். அவர் ஒரு சர்வகலாசாலைப் பட்டதாரி; தெள்ளிய அறிவு படைத்தவர்தாம்; ஆனால் இளமை உள்ளம் எதைப் புகட்டினாலும் ஏற்றுக்கொள்ளும் தன்மை; அவர் தம் ஊரிலுள்ள கிறிஸ்தவப் பாதிரிகளின் பிரசங்கங்களையும் தனி உபதேசங்களையும் கேட்டு மனஸை அவ்வழியில் ஈடுபடுத்திவிட்டார். அப்பொழுது திருச்சியிலுள்ள அவர் நண்பர்கள் சிலர் அக்காலத்தில் திருச்சி முனிஸிபல் சேர்மனாக இருந்த எப். ஜி. நடேச ஐயரிடம் அவரை அழைத்துச் சென்றனர். நடேச ஐயரும் தாம் சென்ற இருபது ஆண்டுகளுக்கு மேல் கிறிஸ்தவ மதத்திலிருந்து, அதில் தாம் கண்ட அனுபவங்களையெல்லாம் விரிவாக அவ்வாலிபரிடம் உரைத்து, ஹிந்து மதம்தான் நமக்குத் தாய் என்றும், தாயைவிட்டுப் பிரிவது மிகுந்த பாபச் செயல் என்றும், ஏதோ விதிவசத்தினால் தாம் அந்தச் செயலைப் புரிய நேர்ந்துவிட்டதென்றும், இதைப் பிறர் செய்வதைக் காண தம்மனம் ஒருபொழுதும் சகியாதென்றும் கூறி, இன்னும் பல விதமாக வாலிபருக்கு நற்போதனைகளையெல்லாம் செய்தார். ஆனால் அந்த இளைஞர் பிடிவாதமாகவே இருந்துவிட்டார். அப்பொழுது ஐயர் அந்த இளைஞரைப் பார்த்து, 'உமது முடிவைப்பற்றி

* வேறு சில இடங்களிலும் ஸதாசிவ ப்ரம்மம் சமாதி அடைந்ததாக கூறுவாருமுண்டு.

இதற்கு மேலும் நான் எதையும் கூற விரும்பவில்லை; ஆனால் கிறிஸ்தவப் பாதிரிகளிடம் நீர் தஞ்சம் புகும் முன்னர் உம்மை ஸ்ரீகாமகோடி பீடம் ஆசார்ய ஸ்வாமிகளிடம் அழைத்துச் செல் கின்றேன்; அவர்கள் இவ்வூருக்கு அருகில்தான் தங்கியிருக்கிறார் கள். உமக்குச் சம்மதமானால் என்னுடன் வாரும்,' என்றார். அந்த இளைஞரும் ஐயர் அவர்களுடன் ஸ்வாமிகளிடம் வரச் சம்மதிக்கவே, இருவரும் மாலை நேரத்தில் ஸ்வாமிகள் தங்கியிருந்த **குழுமணி** என்னும் கிராமத்துக்குச் சென்றனர். ஸ்வாமிகள் அந்த இளைஞரை அவ்வூர் ஆற்றங்கரைக்கு அழைத்து வரும்படி ஐயர் அவர்களிடம் கூறினார்கள். அவ்விதமே அவர்கள் அவ்விடம் வர, ஸ்வாமிகளும் அவ்விடத்துக்குச் சற்று நேரத்தில் விஜயம் செய்தார்கள். ஆற்றின் கரையோரமாகவே அப்பொழுது தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றின் பெரும்பகுதி மணல் திட்டாகவே இருந்தது. ஸ்வாமிகள் அவ்விருவரையும் மணல் பிரதேசத்தில் வெகு தூரம் அழைத்துச் சென்று அந்த இளைஞர் கூறிய எல்லாவற்றையும் மிகவும் நிதானத்துடன் கேட்டுக் கிறிஸ்தவ மதத்தில் அவருக்கேற்பட்ட மோகத்தின் காரணங்களை யெல்லாம் நன்கு விசாரித்தார்கள். அந்த இளைஞரும் தம் உள்ளத்திலிருந்த எதையும் ஒளிக்காமல் ஸ்வாமி களிடம் கூறினார். அப்பொழுது ஸ்வாமிகள் பிற மதங்களிலுள்ள தர்மங்களெல்லாம் நமது மதத்திலேயே இருக்கின்றனவென்றும், அவைகளெல்லாம் எல்லா மதங்களுக்கும் பொதுவான தர்மங்கள் தான் என்றும், ஆகையால் எல்லாமதங்களுக்கும் அடிப்படை ஹிந்து மதந்தானென்றும், மேலும் ஹிந்து மதத்தில் பல விசேஷ தர்மங்கள் கூறப்பட்டுள்ளன வென்றும், கடவுளை அடைய இந்தத் தர்மங்கள் பல மார்க்கங்களைப் போதிக்கின்றன வென்றும் ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் அவைகளில் ஏதாவதொரு மார்க்கத்தைக் கடைப் பிடித்துக் கடவுளைச் சுலபமாக அடையலா மென்றும் கூறி, அந்த இளைஞருக்கு இன்னும் பலவிதமாக உபதேச மொழிகளை அருளினார்கள். அன்றிரவு ஸ்வாமிகள் வெகு நேரம் அந்த இளைஞருடன் பேசிக்கொண்டிருந்துவிட்டு மறுபடி தொடர்ந்து இரண்டு நாட்கள் அவரை அழைத்து வரும் படி நடேச ஐயரிடம் ஸ்வாமிகள் தெரிவித்தார்கள். அப்பொழுது தனிமையில் அந்த இளைஞருக்குச் சில உபதேசங்களைக் கூறினார் கள். பின்னர் அந்த இளைஞர் தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டு தமது மதத்தில் நம்பிக்கை கொண்டவராகி, ஸ்வாமிகளை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தம் உறவினர்களிடம் போய்ச்

சேர்ந்தார். அஞ்ஞானத்தால் மத மாற்றத்தை விரும்பிய ஒருவருக்காக ஸ்வாமிகள் பல மணி நேரத்தைச் செலவிட்டு அவருக்குத் தகுந்தவாறு உபதேசங்களைச் செய்து அவரைத் தடுத்து ஆட்கொண்ட பெருமையைப் பக்தர்கள் எல்லோரும் கொண்டாடினார்கள்.

**பாடகச்சேரி சுவாமிகள் செய்த ஆலயத் திருப்பணி**

இன்றைக்குச் சுமார் 55 ஆண்டுகளுக்கு முன்னர் கும்பகோணத்தில் இல்லறத்தை விட்டுத் துறவறம் பூண்ட ஓர் பெரியார் அடிக்கடி எல்லா வீதிகளிலும் காணப்பட்டு வந்தார். அவரைப் **பாடகச்சேரி சுவாமிகள்** என்று அழைத்து வந்தனர். அப்பொழுது சுமார் 30 பிராயமே நிறைந்த அவர் தூய வெள்ளை வேஷ்டி ஒன்றை இடுப்பிலும் கழுத்திலுமாகச் சுற்றிக்கொண்டு, நெற்றியில் விபூதி அணிந்து, ஓர் சிறிய பித்தளைச் செம்பை ஒரு கயிற்றில் கோத்து, அதைத் தம் இடுப்பின் முன்புறம் தொங்க விட்டுக்கொண்டு இருப்பார். நல்ல மேனி படைத்த அவர் கண்களில் ஒளி வீசிக்கொண்டிருக்கும். அவர் மிதமாக இரண்டொரு வார்த்தைகளே பேசுவார். அவர் கையில் சிறியதொரு தடியையும் ஏந்திவருவார். வேளாள வகுப்பைச் சார்ந்த அவர் எல்லாச் சமூகத்தினரின் நன்மதிப்புக்கும் பாத்திரராக இருந்து வந்தார். அவருக்குக் கால பைரவர் உபாஸனை உண்டெனக் கூறுவர். அவர் தாங்கிவரும் செம்பில் பொது மக்கள் தாராளமாக நாணயங்களைச் சேர்ப்பிப்பார்கள். தொழிலாளிகளும், வியாபாரிகளும் தவறாது அந்தச் செம்பை நாணயங்களால் ஒவ்வொரு நாளும் நிரப்பிவிடுவார்கள். அவர் எவரையும் வற்புறுத்தி எதையும் கேட்கமாட்டார். கும்பகோணத்தில் வாடகைக்கு விடப்படும் ஒற்றை மாட்டு வண்டிகள் அதிகம். அந்த வண்டிகளின் சொந்தக்காரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் ஒரு சிறு தொகையாவது அந்தச் செம்பில் போடாமல் இருக்கமாட்டார்கள். இவர் எதற்காக நிதி வசூல் செய்கிறார் என்பதைப் பற்றி பொது மக்கள் கவலைப்படுவதேயில்லை. நல்ல பாத்திரத்தில் சேரும் தொகை சிறந்த ஓர் தர்மத்திற்கே சேரும் என்னும் நம்பிக்கை மக்களுக்குப் பொதுவாக உண்டு. செப்பு நாணயமாகச் சிறிது சிறிதாகச் சேர்ந்த தொகை முடிவில் ஓர் பெரிய நிதியாகத் திரண்டது.

பாடகச்சேரி சுவாமிகளின் பார்வையும் மனமும் அவ்வூரின் மிகப்பழமையான **ஸ்ரீ நாகேச்வரஸ்வாமி ஆலயத்தின்** பழுதடைந்த கோபுரத்தைக் கவர்ந்தன.

பொதுவாகக் கோபுரங்களின் பெருமையைப் பற்றி ஆகம சாஸ்திரங்கள் மிகவும் விசேஷமாகக் கூறுகின்றன. பிரயாணத்தின்போது யாவரும் தம் கண்களில் விழும் ஆலய கோபுரங்களை வணங்கி அவ்வாலயங்களுள் பிரதிஷ்டை செய்யப் பெற்றிருக்கும் மூர்த்திகளைத் தியானம் செய்யவேண்டும். கோபுர தரிசனத்தினாலேயே மக்களுக்கு விசேஷ நன்மைகள் ஏற்படும். இன்றும் வயது முதிர்ந்தவர்கள் கோபுரங்களைக் காணும் போதெல்லாம் கைகூப்பி வணங்கிவருவதை நாம் காண்கிறோம். கோபுரங்களை உற்று நோக்கினால் பல விசேஷமான அம்சங்களை நாம் காணலாம். விஜயநகர சாம்ராஜ்யத்தின் அதிபராக விளங்கிய ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் இராமேச்வரத்திற்கு விஜயம் செய்த பொழுது நம் தென்னாட்டிலுள்ள பல தேவாலயங்களின் கோபுரத்திருப்பணிகளைச் செய்வித்தார் எனத் தேச சரித்திரம் கூறுகிறது. அஸ்திவாரம் மாத்திரம் போட்டு அவரால் செய்து முடிக்கப் பெறாத சில கோபுரங்களையும் இன்று நம் நாட்டில் நாம் காணலாம். இவர் கட்டியவை இராயகோபுரமென்று கூறப்படுகின்றன. இராயர் என்னும் சொல் கிருஷ்ணதேவராயரையே குறிக்கும். இராய கோபுரங்களில் முதன்மையாக ஸ்ரீரங்கம் தெற்கு வாயிலில் தோன்றும் மொட்டைக் கோபுரத்தைக் கூறலாம். கிருஷ்ணதேவராயர் ஸ்ரீரங்கம், திருவானைக்கா, மதுரை முதலான இடங்களில் ஆரம்பித்து முடிவுபெறாத இத்திருப்பணிகளைப் பூர்த்தி செய்து வைக்கப் பின்னர் மன்னர்களோ மற்றவர்களோ இதுவரை தோன்றாதது நாட்டின் துர்ப்பாக்கியமாகும்.

பாடகச்சேரி சுவாமிகளின் கண்ணைக் கவர்ந்த கும்பகோணம் நாகேசுவர சுவாமி ஆலயத்தின் கோபுரமானது மரம் செடிகள் முளைக்கப் பெற்றும், அநேக இடங்களில் பிளவுண்டும் பொது ஜனங்களுக்கு அபாயம் விளைவிக்கக் கூடிய நிலையிலும் இருந்தது. அம் மாபெரும் கோபுரத்தைச் சீர்படுத்தவே பல்லாயிரக்கணக்கான ரூபாய்கள் தேவையாயிருந்தது. மற்றும் பழமையான அவ்வாலயத்தின் மற்றப் பகுதிகளையும் சீர்படுத்த வேண்டியிருந்தது.

அந்த ஆலயம் அப்பர் சுவாமிகள் பாடிய ஸ்தலங்களில் ஒன்றாகும். அக்கோவிலில் சுமார் 6 அடி உயரமுள்ள நடராஜ மூர்த்தம் உளது. அந்த மூர்த்தம் அமைந்துள்ள சபாமண்டபம் ஓர் நகரும் விமானம் போல அமைந்துள்ளது. கல்லினால் செதுக்கப்பட்ட சுமார் 10 அடி குறுக்களவுள்ள அவைகளின் சக்கரங்கள் கல் அச்சுகளில் கோக்கப்பட்டிருப்பதைப் பார்த்தால் சிற்பிகள்

அவைகளை எவ்விதம் அமைத்தார்கள் என்று நாம் வியப்பையே அடைவோம். விமானத்தை முழுப்பலத்துடன் முண்டி இழுக்கும் தோற்றத்தில் மிகப்பெரிய கல்குதிரைகளையும், கல்யானைகளையும், நாம் அவ்விடம் காண்கிறோம். மேலும் இந்த ஆலயத்தில் ஒவ்வொரு ஆண்டிலும் சித்திரை மாதம் 11-ஆம் தேதி தொடங்கி மூன்று நாட்கள் சூரிய பூஜை நடைபெறும். அந்த மூன்று நாட்களும் சூரியனது ஒளி சிவலிங்கத்தின் மேல் காலை வேளையில் நேராக விழும்.

பாடகச்சேரி சுவாமிகள் தாம் சேர்த்த பொருளைக்கொண்டு இவ்வாலயத்தைச் சீர்திருத்தம் செய்யும் பணியில் சில வருடங்கள் ஈடுபட்டுத் திருப்பணியையும் மிகவும் சீரிய வகையில் செய்து முடித்தார். பின்னர் கும்பாபிஷேகத்திற்கும் நாள் குறிப்பிடப் பட்டது. அப்பொழுது அவர் மனஸிற்குக் கவலை தரக்கூடிய ஓர் நிகழ்ச்சி தோன்றியது. திருப்பணியில் ஈடுபட்டிருந்த விசுவகர்ம வகுப்பினர் அபிஷேகத்தைத் தாங்களே முதலில் செய்யவேண்டு மென்றும் அதன் பிறகே ஆதி சைவர்களான அர்ச்சகர்கள் அபிஷேகம் செய்ய வேண்டுமென்றும் கூறினர். இதில் அபிப் பிராய பேதம் ஏற்படவே விசுவகர்ம வகுப்பினர் நீதிஸ்தலத்தில் வியாஜ்ஜியத்தையும் தொடர்ந்து விட்டார்கள். தாம் மிகவும் அன்புடன் செய்துவந்த இறைவன் திருப்பணி பூர்த்தி அடை யாமல் போய் விடுமோ என்ற கவலை பாடகச்சேரி சுவாமிகளின் உள்ளத்தில் குடிகொண்டது. கும்பாபிஷேகத்திற்கு நாள் நெருங்கிவிடவே பொதுமக்களின் மனத்திலும் கவலை உண்டா யிற்று. பின்னர் பாடகச்சேரி சுவாமிகள் நம் ஆசார்ய ஸ்வாமிகளை 1920 ஆம் தஞ்சை ஜில்லா விஷ்ணுபுரத்தில் தரிசித்து அவர்களிடம் இவ்விஷயங்களையெல்லாம் விவரமாகக் கூறி, இதற்கு ஒரு முடிவைக் கண்டு குறித்த காலத்தில் கும்பாபிஷேகம் நடை பெறும்படி அனுக்கிரகிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். நம் ஸ்வாமிகளும் பாடகச்சேரி ஸ்வாமிகள் உள்ளன்புடன் செய்து வரும் தெய்வத் திருப்பணியைப் போற்றி இவ்விஷயத்தில் தம்மால் ஆவதைச் செய்வதாக ஏற்றுக்கொண்டார்கள். பின்னர் அவர்கள் சிற்பிகளையும் ஆதி சைவர்களையும் தனித்தனியே வரவழைத்து அவர்களின் கக்ஷிகளையும் ஆதாரங்களையும் கேட்டறிந்து, மடத்தி லிருந்து கூறும் முடிவை இருவரும் ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று அவர்களிடம் தனித்தனியே ஓர் ஒப்பந்தத்தைப் பெற்றுக் கொண்டார்கள். இரு கக்ஷியாரும் கோர்ட்டிலும் அதுபோலவே மனுவையும் தாக்கல் செய்தார்கள். இதனால் இந்த வியாஜ்ஜியத்தை

எவவிதம் தீர்மானம் செய்வதென்று கவலை கொண்டிருந்த நீதிபதியின் பொறுப்பும் ஓர் அளவு குறைந்தது. ஸ்வாமிகளின் முடிவையே இதில் தீர்ப்பாகக் கூறுவதென அவரும் முடிவுசெய்து கொண்டார். விக்கிரகங்களை அமைக்கும் விசுவகர்ம வகுப்பினர் கும்பாபிஷேக காலங்களில் முதலில் அபிஷேகம் செய்வதைச் சாஸ்திரங்கள் குறிப்பாகத் தடைசெய்யவில்லை என்றும், அவ் விதம் செய்வதால் மூர்த்திகளின் பெருமை பாதிக்கப்படா தென்றும், கும்பாபிஷேகத்திற்கு முன் அவர்கள் அபிஷேகம் செய்வதை அனுமதிக்கலாம் என்றும் ஸ்வாமிகள் தம் அபிப்பிரா யத்தைத் தெரிவித்தார்கள். இந்த அபிப்பிராயத்தை ஆதார மாகக்கொண்டே கும்பகோணம் ஜில்லா முன்சீப்பும் இந்த வியாஜ்ஜியத்தில் தம் தீர்ப்பைக் கூறினார். பின் இரு கக்ஷிகளுள் மனத்தாங்கல் எதுவுமில்லாமல் அந்த ஆலயத்தின் ஜீர்ணோத் தாரண கும்பாபிஷேகத்தை ருத்ரோத்காரி வருடம் ஆனி மாதம் (1923 ஜூனில்) வெகு விமரிசையாக நடத்தி வைத் தார்கள். அப்பெரிய கும்பாபிஷேகத்தைப் பல்லாயிரக் கணக் கான மக்கள் தரிசித்தனர். பாடகச்சேரி ஸ்வாமிகளும் அளவு கடந்த மகிழ்ச்சியை அடைந்தார். வியாபாரிகள், வக்கீல்கள், மிராசுதார்கள், உத்தியோகஸ்தர்கள் யாவரும் அவருடன் ஒத்துழைத்து அந்த விழாவை மிகவும் சிறப்பாக நடத்திவைத் தார்கள். **தேப்பெருமாநல்லூர் அன்னதான சிவன்** அவ்விழாவில் பெரியதொரு அன்னதானத்தை நடத்திவைத்தார். சிவனிடம் பாடகச்சேரி சுவாமிகளுக்கு நல்ல மதிப்பும் மரியாதையுமுண்டு. சிவன் அவருக்கு அடிக்கடி ஊக்கமளித்துத் திருப்பணி செவ்வனே நடைபெற வேண்டிய உதவிகளையெல்லாம் செய்துவந்தார்.

இன்றைக்குச் சில வருடங்களுக்கு முன்னர் பாடகச்சேரி சுவாமிகள் திருவொற்றியூரில் சமாதி அடைந்தார். அவர் சமாதி யடைந்த இடத்தில் ஒரு மடம் கட்டிவைக்கப் பெற்று அவரது சீடர்களால் நன்குப் பரிபாலித்து வரப்பெறுகிறது. பட்டினத் தடிகள் சமாதிக்குப் போகும் மார்க்கத்தில் அது அமைந்துள்ளது. இராமலிங்க சுவாமிகளின் பெரிய உருவப்படம் ஒன்று அங்கு வைக்கப்பட்டிருக்கிறது. மனத்திற்கு சாந்தியை அளிக்கும் இடமாக அஃது அமைந்திருக்கிறது.

பாடகச்சேரி சுவாமிகளைப் பற்றிக் கூறும்பொழுது மற்றொரு சிவ பக்தரது நினைவும் வருகிறது. சுமார் 70 வருடங்களுக்கு முன்னர் கும்பகோணத்தில் **சிவக்கொழுந்து** என்னும் பெயர் பெற்ற ஓர் நாதஸ்வர வித்வான் இருந்தார். அவருக்கு ஓர் இளைய

சகோதரர் உண்டு. அவர் தமது வாழ்நாளின் பெரும்பகுதியைத் தர்ம காரியங்களிலே ஈடுபடுத்தி வந்தார்: கும்பகோணம் சங்கர மடத்திற்குத் தென்புறம் **காளஹஸ்தீச்வரர்** ஆலயம் ஒன்று இருக்கிறது. அந்நாளில் அவ்வாலயத்திற்குக் கோபுரம் இல்லாமலிருந்தது. இக்குறையை உணர்ந்த அந்தச் சிவபக்தர் ஒரு பித்தளைச் செம்பினால் ஓர் உண்டியல் தயாரித்து, அதை ஒவ்வொரு நாளும் ஆலயத்திற்கு எதிர்ப்புறம் சாலையின் ஓரமாக ஒரு நாற்காலியின் மீது காலை 5 மணிக்கே வைத்துவிடுவார். அவர், விடியுமுன் காவேரியில் நீராடி விபூதி ருத்திராக்ஷம் தரித்து அந்த உண்டியலின் அருகே சில மணி நேரம் நின்று 'சிவதருமம் சிவதருமம்' எனக் கூறிக்கொண்டே இருப்பார். அவருடைய தோற்றமும் குரலும் அவ்வழியே காவிரிக்கு நீராடச் செல்பவர்களின் மனஸையும், வேறு அலுவலாகச் செல்பவர்களின் மனஸையும் இழுத்துவிடும். அந்தச் செம்பில் ஒரு சிறு காசை யாவது போடாது அவரைத்தாண்டி எவரும் செல்ல மாட்டார்கள். ஒவ்வொரு நாளும் அவர் மடத்திற்கு வந்து வெகுதூரத்தில் நின்று ஸ்வாமிகளைத் தரிசனம் செய்துகொண்டு போவார். சுமார் 5, 6 வருடங்கள் செப்பு நாணயமாகச் சேமித்த தொகையைக் கொண்டு காளஹஸ்த்தீசுவரர் ஆலயத்திற்கு ஓர் அழகிய கோபுரத்தையே அவர் அமைத்துவிட்டார். உள்ளன்பும், ஊக்கமும் இருந்தால் எந்தப் பெரிய காரியங்களையும் சாதாரண மனிதன் கூடச் செய்து முடிக்கலாமென்பதற்கு உதாரணமாக இந்தச் சிவ பக்தரைப்பற்றி அக்காலத்தில் ஸ்வாமிகள் சிறப்பாகக் குறிப்பிடுவதுண்டு.

**தேசபந்து ஸி. ஆர். தாஸுக்கு அளித்த பேட்டி**

*1922*-ஆவது வருடம் கயா காங்கிரஸ் மகாசபையில் ஏற்பட்ட சில கொள்கை வேற்றுமையினால் அந்த மகாசபைக்குத் தலைமை வகித்த, வங்காளத்தின் ஒப்பற்ற தலைவரான **சித்தரஞ்சன தாஸ்** காங்கிரஸிலிருந்து விலகி, **ஸ்வராஜ்ய கட்சி** என்ற பெயருடன் ஒரு புது ஸ்தாபனத்தை அமைத்தார். இவருக்குத் தமிழ் நாட்டில் **ஏ. ரங்கஸாமி அய்யங்கார், எஸ். ஸ்ரீனிவாச அய்யங்கார், எஸ். சத்தியமூர்த்தி** போன்ற தலைவர்கள் ஆதரவளித்தனர். தேர்தல்களில் போட்டியிட்டுச் சட்டசபைகளைக் கைப்பற்றி, எதிர்க்கட்சிகளில் இருந்து கொண்டு அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்வதே இக்கட்சியின் நோக்கமாகும். காங்கிரஸ் மகாசபையோ அக்காலத்தில் காந்தி அடிகளின் திட்டப்படி சட்டசபைகளைப்

பகிஷ்கரிக்க வேண்டுமெனத் தீர்மானித்தது. அப்புதிய கட்சியின் பிரசாரத்திற்காகவும், அக்கட்சியின் வேலைகளுக்கு நிதி திரட்டவும், தாஸ் தமிழ்நாடு முழுவதும் அப்பொழுது சுற்றுப் பிரயாணம் செய்தார். 1923-ஆவது வருடம் ஜுலை, ஆகஸ்ட் மாதங்களில் அவர் தமிழ் நாட்டில் சுற்றுப்பிரயாணத்தை மேற் கொண்டார். அப்பொழுது நம் ஸ்வாமிகள் திருச்சி ஜில்லா **பட்டவாய்த்தலையில்** விஜயம் செய்திருந்தார்கள். ஸ்வாமிகள் ஓர் ஒப்பற்ற மதத் தலைவராகவும், பெரிய மேதாவியாகவும், அன்னிய நாகரிகத்திலிருந்தும் ஆட்சியிலிருந்தும் நமது நாடு விடுதலை பெற வேண்டுமென்று மிகவும் ஆர்வமுள்ளவராகவும் இருப்பதை **தாஸ்** நண்பர்கள் மூலம் கேள்வியுற்று, ஸ்வாமிகளைத் தரிசிக்கவேண்டு மென்று தமது விருப்பத்தைச் சத்தியமூர்த்தியிடம் தெரிவித்தார். சத்தியமூர்த்தியும் ஸ்வாமிகளிடமிருந்து அனுமதி பெற்று, இந்தச் சந்திப்பிற்கு ஏற்பாடு செய்தார், ஸ்வாமிகள் தங்கியிருந்த பட்ட வாய்த்தலையில் இந்தச் சந்திப்பு நிகழ்ந்தது. குறிப்பிட்ட நாளில் இந்தச் சந்திப்பை ஒட்டிப் பொதுமக்களும். நூற்றுக்கணக்கான தொண்டர்களும் பட்டவாய்த்தலையில் கூடிவிட்டனர்.

ஸி. ஆர். தாஸும் ஸ்வாமிகளை முறைப்படி வணங்கி அவரது திவ்ய தேஜோமயமான உருவத்தில் ஈடுபட்டுச் சற்று நேரம் மௌனமாக இருந்தார். எஸ். சத்தியமூர்த்தி, ஏ. ரங்கசாமி அய்யங்கார் இவர்களுடன் மேலும் இரண்டொருவரே உள்ளே அனுமதிக் கப்பட்டனர். ஸ்வாமிகள் தாஸ் அவர்களின் க்ஷேமங்களையும், அவரது குடும்ப நலன்களையும் பற்றிப் பல கேள்விகளைக் கேட்டுப் புதிய கட்சியினால் தேசத்திற்கு விளையக்கூடிய நன்மைகளைப் பற்றியும் வினவினார்கள். மேலும், தமது சொந்த சந்தேகங்கள் சிலவற்றையும், ஆலோசனைகள் சிலவற்றையும் ஸ்வாமிகள் அப்பொழுது தாஸிடம் எடுத்துக் கூறினார். வெகு நுட்பமான கேள்விகளையெல்லாம் கேட்ட ஸ்வாமிகளின் அரசியல் ஞானத் தைக் கண்டு ஸி. ஆர். தாஸ் வியந்தார். கேள்விகளெல்லாம் எளிதில் பதிலளிக்க முடியாதவாறு இருந்தன. முடிந்தவரையில் அவைகளுக்குத் தாஸ் பதில் கூறி, ஸ்வாமிகளின் சந்தேகங் களுக்குத் திருப்தி அளித்தார். ஸ்வாமிகளும் எந்தக் கட்சியானு லும் மக்களுக்குக் கடவுள் பக்தி குறையும் வண்ணம் நடந்து கொள்ளலாகாதென்று கூறித் தாஸுக்குத் தமது பூர்ண ஆசியை அளிப்பதாகவும் அனுக்கிரஹித்தார்கள். மேலும் தாம் ஒரு ஸந்நியாஸி என்னும் காரணத்தினாலும், மதத்தின் தலைவர் என்ற முறையிலும், எந்தக் கட்சியிலும் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள

முடியாதென்றும் ஆயினும் நம் நாடு சுதந்தர நாடாகி மக்கள் சுகமாக வாழும் நன்னாளைத் தாம் எதிர்பார்த்துக் கொண்டிருப்ப தாயும் கூறினார். தாஸூம் மிகவும் மனமகிழ்ச்சி அடைந்தவராய் ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டார். தாஸ் தமிழ் நாட்டில் சுமார் பத்து நாட்கள் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு, திருச்சிக்கு வந்து, அப்பொழுது திருவானைக்காவில் தங்கியிருந்த நம் ஸ்வாமிகளை மறுமுறையும் தரிசித்துக் கொண்டார். அப் பொழுது ஸ்வாமிகள் முன்னிலும் அதிகமான அன்புடன் அவரை ஆசீர்வதித்தார். மடத்தின் சிஷ்யர்கள் பலர் ஸ்வராஜ்யக் கட்சிக்கு அக்காலத்தில் ஆதரவளித்தனர். அவர்களில் தஞ்சை ஜில்லா மிராசுதார்களான **மூலங்குடி கோபாலகிருஷ்ண ஐயர், மகிழஞ்சேரி சாம்பசிவ ஐயர், தொழுதூர் டி. வி. நாராயணஸ்வாமி ஐயர்** இவர்களை முதன்மையாகக் குறிப்பிடலாம்.

**சென்னை ஹிந்து தர்ம ஸ்தாபன மசோதா**

ஜஸ்டிஸ் கட்சியின் தலைவரான **பனகல் ராஜா** அவர்களின் மந்திரி சபையில் 1923-ஆவது வருடம் ஹிந்துக்களின் தர்ம ஸ்தா பனம் சரிவரப் பாதுகாக்கப்படவேண்டுமென்ற நோக்கத்துடன் மசோதா ஒன்றைச் சர்க்காரே கொண்டு வந்தனர். அந்த மசோதா ஓர் தனிக் கமிட்டியின் பரிசீலனைக்கு விடப்பட்டிருந்தது. மசோதாவைப் பற்றிப் பொது ஜனங்கள் தங்கள் அபிப்பிராயங் களைத் தெரிவிக்கும்படி அவர்களுக்குத் தனிமையில் கடிதங்களும் சர்க்கார் அனுப்பியிருந்தனர். மேலும் தனிக் கமிட்டியின் முன் ஆஜராகி அவர்கள் தங்கள் அபிப்பிராயங்களை நேரிலும் தெரிவிக்கலாமென்றும் பிரகடனம் செய்திருந்தார்கள்.

மடத்தின் சார்பாகவும் மகஜர் ஒன்று தயாரிக்கப்பட்டது. அனுபவம் வாய்ந்த வழக்கறிஞர் பலர் அதைத் தயாரிக்க முன் வந்தனர். ஸ்வாமிகள் அவர்களுக்கு ஆலோசனை கூறியதுடன், ஆங்காங்குச் சேர்க்கவேண்டிய பொருத்தமான வார்த்தைகளையும் தாமே எடுத்துக் கொடுத்தார்கள். அந்த மகஜருடன் பனகல் ராஜாவைப் பேட்டி காண, கும்பகோணம் வக்கீல் **எஸ். மகாலிங்க ஐயர்** அனுப்பப்பட்டார். பனகல் ராஜா மகஜரைப் பெற்றுக் கொள்ளும் முன்னர், ஐயரிடம் தர்ம ஸ்தாபனங்களைப் பாதுகாக்க இவ்விதமாக ஒரு சட்டம் தேவை யென்பதை ஸ்வாமிகள் ஒப்புக் கொள்கிறார்களா, அல்லது அவசியம் இல்லையென்று நினைக்கிறார் களா என்று கேட்க, ஐயரும் இவ்விதம் ஒரு சட்டம் அவசிய மென்பதாகவே ஸ்வாமிகள் எண்ணுகிறார்களென்றும், ஆனால்

மசோதாவின் சில ஷரத்துக்கள் சட்டத்தின் நோக்கத்தையே பாதிக்கக் கூடியதாக அமைந்திருக்கின்றனவென்றும், அவை சம்பந்தமாகவே ஸ்வாமிகள் மடத்தின் சார்பாக மகஜர் அனுப்பி யுள்ளாரென்றும் தெரிவித்து விட்டு மகஜரையும் அவரிடம் கொடுத்தார். மகஜரின் துவக்கத்திலேயே சர்க்காரின் இந்த நல்ல முயற்சி பெரிதும் பாராட்டப் பட்டிருந்தது. அதைக் கண்ணுற்ற பனகல் ராஜாவும் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, ஸ்வாமிகளின் ஆசியால் இந்த மசோதா சட்டசபையில் நிறைவேறித் தர்மங்கள் சரிவர பரிபாலிக்கப்பட்டு வருமென்று தாம் நம்புவதாகத் தெரி வித்தார். அன்று பிற்பகல் தனிக் கமிட்டியின் கூட்டம் சென்னை ஸெயின்ட் ஜார்ஜ் கோட்டை சட்டசபை மண்டபத்தில் நடை பெற்றது. மடத்தின் சார்பாக அக்காலத்தில் மிகவும் பிரசித்தி பெற்று விளங்கிய வக்கீல் **டி. ஆர். இராமசந்திர ஐயர்** ஆஜராகி மகஜரின் விஷயங்களையெல்லாம் விளக்கினார். மாகாணத்திலுள்ள மற்றப் பாகங்களிலிருந்தும் மதத் தலைவர்களின் பிரதிநிதிகள் தங்கள் தங்கள் ஆட்சேபங்களை எடுத்துக் கூறினர். கூட்டம் முடியு முன்னர் பனகல் ராஜா, "காமகோடிபீடம் ஆசாரிய ஸ்வாமிகள் இந்த மசோதாவின் நோக்கத்தைப் பொதுவாக ஆதரித் திருக்கிறார்கள்; அவர்களுடைய மற்ற யோசனைகளும் சர்க்காருக்கு மிகவும் உதவியாயிருக்கும்; இவ்விஷயத்தில் ஸ்வாமிகளுக்குச் சர்க்கார் மிகவும் கடமைப்பட்டுள்ளார்கள்; தனிக் கமிட்டியாரின் நன்றியையும் வணக்கத்தையும் ஸ்வாமிகளுக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன்" என்று வக்கீல் இராமசந்திர ஐயரிடம் கூறினார்.

### திருச்சி ஜில்லாவில் விஜய யாத்திரை

1923-ஆவது வருடம் திருவானைக்காவில் சாதுர்மாஸ சங்கல் பம் முடிவுபெற்றவுடன் ஸ்வாமிகளின் விஜய யாத்திரை சில மாதங்கள் தொடர்ந்து திருச்சி ஜில்லாவிலேயே **கரூர், குழித்தலை, லால்குடி** தாலுக்காக்களில் நடைபெற்று வந்தது. அந்த ஜில்லா வாசிகள் மிகுந்த பக்தியுடன் மடத்தின் பணிகளில் ஈடுபட்டு, ஒவ்வொரு கிராமத்திற்கும் ஸ்வாமிகளை அழைத்துச் சென்று வழி பாடுகளை யெல்லாம் மிகவும் சீரிய முறையில் நடத்திவைத்தனர். 1924-ஆவது வருடம் ஸ்வாமிகள் திருச்சியில் தங்கியிருந்தபொழுது காங்கிரஸில் முதன்மையாக விளங்கிய தலைவர்களுள் ஒருவரான **புருஷோத்தமதாஸ் தாண்டன்** ஸ்ரீ ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டார். அப்பொழுது ஹிந்திப் பிரசாரத்திற்காக ரூபாய் 1,000 அவரிடம் ஸ்வாமிகள் நன்கொடையாக அளித்தார்கள்.

**காவிரி வெள்ளமும், ஸ்ரீ ஆசாரியரின் கருணை வெள்ளமும்**

1924-ஆவது வருடம் ஜூலை மாதம் ஸ்வாமிகள் திருவையாற்றில் அவ்வூர் மகாஜனங்களின் வேண்டுகோளுக்கிணங்கி காவிரியின் வட கரையில் புஷ்யமண்டபத் துறையைச் சார்ந்த கட்டிடத்தில் தங்கி, அவ்வருட வியாஸ பூஜையை மிகவும் விமரிசையாக நடத்தினார்கள். பக்கத்திலுள்ள தஞ்சை நகரத்திலிருந்தும், சுற்றுப்புறங்களிலிருந்தும் ஸ்வாமிகளின் பூஜையைத் தரிசிக்க ஏராளமான பக்தர்கள் கூடியிருந்தனர். அந்த வருடம் ஆடிப்பெருக்கின்போது, எதிர்பாராதபடி காவிரி அம்மன் கரை புரண்டு ஓட ஆரம்பித்து விட்டாள். சிலவிடங்களில் கரைகளும் தகர்ந்தன ; பல விடங்களில் உடைப்புக்கள் ; காவிரியின் கரையிலேயே ஸ்வாமிகளின் பூஜையும் வைக்கப்பட்டிருந்ததால், பூஜா மண்டபத்திற்குள்ளும் தண்ணீர் புகுந்துவிட்டது. இதைக் கண்டு, திருவையாறு வாசிகள் மிகவும் கலக்கமுற்று ஸ்வாமிகளிடம் வந்து வேறு இடத்திற்குப் பூஜையை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டனர். சாதுர்மாஸ சங்கல்பம் முடியும் வரை எவ்வித ஆபத்து நேர்ந்த போதிலும் வேறு இடத்திற்குப் பூஜையை மாற்ற இயலாதென ஸ்வாமிகள் கூறிவிட்டார்கள். பொது மக்களின் கவலை பெருகிற்று ; அதற்கேற்றவாறு வெள்ளமும் மேலும் அதிகரித்தது. காவிரி வெள்ளம் வடக்கே சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள கொள்ளிடம் வரையில் பரவி எங்கும் ஒரே தண்ணீர் மயமாகி விட்டது. ஏழைகளின் குடிசைகளெல்லாம் தண்ணீருக்குள் முழுகி விட்டன. அவைகளில் பெரும்பான்மையானவை ஹரிஜனங்களின் குடிசைகளாகும். வீடுகளையும், பொருள்களையும், ஆடு மாடுகளையும், இழந்த அந்த மக்கள் தங்கள் குழந்தைகளுடனும், மற்றும் வயது முதிர்ந்த உறவினர்களுடனும், காவிரியின் கரையில் மேடான இடங்களில் தங்க ஆரம்பித்தனர். உணவின்றித் தவிக்கும் இந்த நூற்றுக்கணக்கான குடும்பங்களின் பரிதாபமான நிலையை ஸ்வாமிகள் நேரில் கண்டு வருந்தி, அவர்களுக்கு எந்த எந்த விதங்களில் உதவியளிக்க முடியுமோ அந்தந்தவழிகளில் திட்டங்களையெல்லாம் வெகு சீக்கிரத்தில் வகுத்து, அவற்றை நிறைவேற்ற அவ்வூர்ப் பிரமுகர்களைக் கொண்டு ஏற்பாடு செய்தார்கள் ; மடத்தில் நடைபெறும் அன்னதானத்தைக்கூட குறைத்துக் கொண்டு, மடத்தின் உக்கிராணத்திலிருந்த உணவுப் பொருள்களின் பெரும் பகுதியைக் கொண்டு அன்றுடம் உணவு தயாரிக்கச் செய்து,

அதைப் பெரிய அண்டாக்களில் நிரப்பி மடத்தின் வண்டிகளில் ஏற்றி ஏழை மக்களுக்கு விநியோகம் செய்யும்படி கட்டளை யிட்டார்கள்; அந்த விநியோகப்பணியை அவ்வூர்க் காங்கிரஸ் தலைவராக இருந்த வக்கில் **சாரங்கபாணி ஐயங்கார்** பல தொண்டர் களின் உதவியைக் கொண்டு நிறைவேற்றி வைத்தார். சுமார் பதினைந்து நாட்கள் அந்த அன்னதானம் நடைபெற்று வந்தது. காவிரியின் வெள்ளமும் ஒருவாறு குறைந்தது. மக்களுக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. சிறுகச் சிறுக அவர்கள் தங்கள் குடிசைகளைப் பழுது பார்த்து, அவைகளில் மறுபடியும் வசிக்க வசதி செய்து கொண்டார்கள். ஏழை மக்கள் ஸ்வாமிகள் செய்த அந்த அன்னதானத்தின் பெருமையை வாயாரப் புகழ்ந்தார்கள்; ஸ்வாமிகளைப் போற்றினார்கள். கஷ்டம் நேரும் சமயத்தில் கிடைக்கும் உதவியே சமயத்தில் கிடைத்த உதவியாகும். ஸ்வாமி கள் செய்த சமயோசிதமான அந்த உதவியைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். ஏழைகளுக்கிரங்கும் ஸ்வாமிகளின் சுபா வத்தை விளக்கும் மற்றும் சில உதாரண நிகழ்ச்சிகளையும் இங்கே கூறலாம்.

மேலே சொன்ன நிகழ்ச்சிக்குச் சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்னர் வங்காளத்தில் குல்னு என்ற இடத்தில் கங்கையின் உபநதியில் வெள்ளப் பெருக்கேற்பட்டு அதனால் பல்லாயிரக்கணக் கான மக்கள் வசிக்க வீடும், புசிக்க உணவும், உடுக்க உடையு மின்றித் தவித்தனர். நாடு முழுவதும் அவர்களுக்கு உத்வ நிதி திரட்டப்பட்டது. சென்னையில் ஹிந்துப் பத்திரிகையின் ஆசிரியர் **எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார்** நமது மாகாணத்தில் ஒரு நிதி சேர்க்க ஏற்பாடு செய்து தமது பத்திரிகையில் பொதுமக்களுக்கு ஓர் வேண்டுகோளையும் விடுத்தார். அந்த வேண்டுகோளைக் கண் ணுற்ற அன்றே ஸ்வாமிகள் மடத்திலிருந்து அந்த நிதிக்கு ரூபாய் ஐந்நூறு அனுப்பிவைக்கும்படி கட்டளையிட்டார்கள். கஸ்தூரி ரங்க ஐயங்கார் அந்த நன்கொடையை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு மடத்தின் அதிகாரிகளுக்கு எழுதிய கடிதத்தில், "ஸ்வாமிகள் தமது பூஜை, தவம், இவை போன்ற முக்கியமான அலுவல்களுக்கிடையே என் வேண்டுகோளைக் கவனித்துச் சற்றும் தாமதமின்றி இந்த உதவியை அளிக்கச் செய்ததற்கு பக்தி யுடன் கூடிய என் வந்தனங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்; இவ்வித உதவியை மடாதிபதிகளிடமிருந்து தாம் பெற்றுக் கொண்டது இதுவே முதல் தடவை" என்று குறிப்பிட்டிருந்தார்.

மற்றொரு சமயம் கும்பகோணத்தில் காவிரியின் வடகரையில் பழைய பாலத்திற்கருகே உள்ள கள்ளத்தெருவில் தீப்பற்றிக் கொண்டது. கீற்றினால் அமைக்கப்பெற்ற அத்தெருவின் வீடுகளெல்லாம் நெருப்புக்கு இரையாகி விட்டன. மக்கள் வைத்திருந்த பொருள்களெல்லாம் சேதமடைந்தன. இதை அறிந்த ஸ்வாமிகள் மடத்திலிருந்து அவர்களுக்கு உணவுப் பொருள்களை அளித்துச் சேதமடைந்த எல்லா வீடுகளையும் கட்டித்தரும்படி மடத்தின் அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்கள். 1955-ஆவது வருடம் நவம்பர் மாதம் இறுதியில் தஞ்சை, இராமனாதபுரம், திருச்சி ஜில்லாக்களில் புயலினால் சேதமடைந்த ஏழை மக்களுக்கு கஞ்சி வார்க்க 100 மூட்டை அரிசியை மடத்திலிருந்து ஸ்வாமிகள் உதவினார்கள்.

### திருக்காட்டுப்பள்ளி சிவஸ்வாமி ஐயர் உயர் நிலைப் பள்ளிக்கு விஜயம்

1924-ஆவது வருட துவக்கத்தில் ஸ்வாமிகள் **கோவிலடி** மார்க்கமாக **திருக்காட்டுப்பள்ளிக்கு** விஜயம் செய்து அவ்விடமிருந்து பக்கத்து கிராமங்களாகிய **நேமம், பழமார் நெறி, ஒம்பத்து வேலி, அரங்கநாதபுரம், வரகூர், மரூர், சாத்தனூர், கூத்தூர், முல்லக்குடி, பூதலூர்** முதலான கிராமங்களுக்கு விஜயம் செய்து அங்கெல்லாம் சிஷ்யர்கள் அளித்த பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளை ஏற்றுக்கொண்டார்கள். திருக்காட்டுப்பள்ளியில் ஸர். பி. எஸ். சிவஸ்வாமி ஐயரால் ஸ்தாபனம் செய்விக்கப்பட்ட உயர் நிலைப்பள்ளிக்கு ஸ்வாமிகள் (22-3-1924)-ஆம் தேதியில் விஜயம் செய்தார்கள். பள்ளியின் மாணவர்களும், ஆசிரியர்களும், ஸ்வாமிகள் தங்கள் பள்ளிக்கு விஜயமாவதை ஒட்டி மிகவும் உற்சாகத்துடன் பள்ளியை அலங்கரித்து ஸ்வாமிகளை வரவேற்றார்கள். பள்ளியின் தலைமை ஆசிரியர் **குருசாமி சாஸ்திரிகள்** அன்று மாணவர்கள் சார்பாகவும் ஆசிரியர்கள் சார்பாகவும் ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை நடத்தினார். ஸ்வாமிகளை சாஸ்திரிகள் வரவேற்றுப் பேசுகையில், அப்பள்ளிக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்வது அவர்களுக்குக் கிடைப்பதற்கரிய ஒரு பாக்யமென்றும், ஸ்தாபகரின் நல்ல எண்ணமே அதற்குக் காரணம் என்று தான் நம்புவதாகவும் கூறினார். ஸ்வாமிகள் அன்று அருளிய உபதேச மொழிகளில் மாணவர்களுக்கு ஆசிரியர்களிடம் பக்தியும், ஆசிரியர்களுக்கு மாணவர்களிடம் அன்பும், பழைய குருகுல முறையில் அங்கு அமைந்திருப்பதைக் காணத் தாம் மிகவும் மகிழ்ச்சியுறுவ

தாகவும், ஆசிரியர்களைத் தெய்வமாகக் கருதவேண்டுமென நமது சாஸ்திரங்கள் கூறுவதாயும், ஆசிரியர்கள் ஊதியத்திற்கு மாத்திரம் கல்வி பயிற்றுவதானல் அது பயனற்றதாகிவிடுமென்றும், மாணவர்களும், ஆசிரியர்களும் ஒரே குடும்பம் போல் வாழ்ந்துவர வேண்டுமென்றும், அங்குப் பயிலும் ஒவ்வொரு மாணவனும் தன் பெற்றோருக்கும், தனக்கும், உலகத்திற்கும் உதவக்கூடிய வகையில் எதிர்காலத்தில் நல்ல தீர புருஷனாக விளங்கவேண்டுமென்றும், அதே எண்ணத்துடன்தான் **சிவஸ்வாமி ஐயர்** இந்தப் பள்ளியை நிறுவியிருப்பதாகத் தாம் எண்ணுவதாகவும் கூறினார்கள். குழந்தைகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் முதலில் தங்கள் தாய், தந்தையரைக் குறித்தும், பின்னர் உலகிற்கெல்லாம் தாய், தந்தையாக விளங்கும் பார்வதி, பரமேச்வரனைக் குறித்தும் வணக்கம் தெரிவித்துவிட்டுப் பாடங்களைப் பயில ஆரம்பிக்கவேண்டுமென்றும் உபதேசித்தார்கள்.

**வல்லத்து விஜயம்**

1924-ஆவது வருட இறுதியில் ஸ்வாமிகள் தஞ்சைக்கடுத்த வல்லத்திற்கு விஜயம் செய்தபொழுது, அவ்வூரில் கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர்கள் ஆகியோர்களும் ஹிந்துக்களுடன் ஒத்துழைத்து ஸ்வாமிகளுக்கு ஒரு பெரிய வரவேற்பை அளித்தனர். வல்லம் அன்றுவரை கண்டிராதபடி ஒரு பெரிய கோலாகலத்துடன் அப்பொழுது விளங்கிற்று. சுற்று வட்டாரங்களிலுள்ள ஜனங்களெல்லாம் அவ்வூரில் கூட்டம் கூட்டமாக அன்று கூடினர். ஏராளமான ஹரிஜனங்களும் அவர்கள் செய்யக்கூடிய பணியில் ஈடுபட்டு ஸ்வாமிகளின் வரவேற்பில் பணியாற்றினர். ஒரு பெரிய ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஸ்வாமிகள் தந்தச் சிவிகையில் வீற்றிருந்து ஆயிரக்கணக்கான மக்களுக்குத் தரிசனம் அளித்தார்கள். ஜனங்களின் ஆரவாரமும், மகிழ்ச்சியும் கட்டுக்கடங்காததாய் இருந்தன. ஸ்வாமிகள் தங்கள் ஊருக்கு விஜயம் செய்வதால் ஊர் செழித்து மக்களுக்கு எல்லா நன்மைகளும் ஏற்படுமென்பதை ஜனங்கள் நம்பினார்கள். பல மணி நேரம் நடைபெற்ற அந்த ஊர்வலம் ஜாகையை அடைந்தவுடன் ஸ்வாமிகள் எல்லோருக்கும் உபதேச மொழிகள் கூறிப் பல மதத்தினரும் ஒற்றுமையுடனிருந்து தமக்கு இவ்வளவு பெரிய வரவேற்பு ஒன்றை அளித்ததற்காக மிகுந்த மகிழ்ச்சி அடைவதாயும், கிராமங்களில் இவ்வித ஒற்றுமைதான் அவசியம் வேண்டுமென்றும்,

கிராம மக்கள் சண்டை – சச்சரவு ஏற்படும்போது கூடக் கோர்ட்டுகளுக்குச் சென்று பணம் செலவிட வேண்டிய சந்தர்ப்பங்களை ஒருபொழுதுமே ஏற்படுத்திக் கொள்ளக் கூடாதென்றும், எந்த மதத்தினராய் இருந்தாலும், அவர்களது கோட்பாடுகளின்படி கடவுளைத் தொழவேண்டுமென்றும், இவ்விஷயத்தில் ஹிந்துக்களைவிட கிறிஸ்தவர்களும், இஸ்லாமியர்களும் அதிக ஈடுபாடுள்ளவர்களாக இருப்பதைத் தாம் மிகவும் மெச்சுவதாகவும், அவர்களைப் பார்த்து ஹிந்துக்கள் நடந்துகொள்ள வேண்டுமென்றும், அன்று ஆயிரக்கணக்கில் அவ்விடம் கூடியிருந்த ஹரிஜனங்களின் வஞ்சனையற்ற விபூதி பூசிய முகங்களில் நல்ல அருளைத் தாம் காண்பதாகவும், ஹரிஜனங்களின் நன்மைகளை இதர ஜனங்கள் கவனித்து அவர்களுக்கு வேண்டுவனவற்றை அவ்வப்பொழுது செய்துகொடுத்தால்தான் கிராமமும் கிராம மக்களும் செழிப்புடன் வாழ்வார்களென்றும், கிராமத்தின் கட்சி விவகாரங்களில் வெளியிலிருந்து வரும் மூன்றுவது மனிதனுக்கு இடந்தராமல் அவர்களே சமரசமாகத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், நாட்டில் தெய்வ நம்பிக்கை குறையாமல் எல்லோரும் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறினார்கள். அந்த உபதேசங்களைக் கேட்ட ஜனங்கள் அவ்விதமே நடந்துகொள்வதாகக் கூறி ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றனர். ஸ்வாமிகள் தனிமையில் ஹரிஜனங்களில் எழுபது வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் பாலர்களுடன் பேசி, அவர்களின் பூர்வோத்திரங்களையெல்லாம் விசாரித்து, அவர்களுக்கு விபூதி கொடுத்து அனுக்ரகம் செய்தனுப்பினார்கள்.

### கலெக்டருக்குப் பேட்டி அளித்தது

தஞ்சை கலெக்டரின் வாஸஸ்தலம் வல்லத்தில் அமைந்திருக்கிறது. அப்பொழுது தஞ்சை கலெக்டராக இருந்த ஆங்கிலேயர் எச். எம். ஹூட் என்பார், அன்று வல்லத்தில் நடைபெற்ற அவ்வளவு பெரிய வரவேற்புக்கு உரியவர் யாரென்பதை விசாரித்தறிந்து, தாமும் ஸ்வாமிகளைக் காண வேண்டுமென்று விரும்பினார். ஸ்வாமிகளைக் காணவேண்டிய ஓர் அலுவலும் ஏற்கனவே அவரிடம் காத்திருந்தது. சமீபத்தில் திருவையாற்றில் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டிருந்த மக்களுக்கு ஸ்வாமிகள் அன்னம் அளித்ததற்காக, சர்க்கார் சார்பாக ஸ்வாமிகளுக்கு நன்றி செலுத்த வேண்டியதே அக்காரியம்; அதன் பொருட்டும் அப்பொழுதே ஸ்வாமிகளைப் பேட்டி காணக் கலெக்டர் விரும்பித் தமக்குப் பழக்க

முள்ள ஹிந்து நண்பர் ஒருவர் மூலம் தமது விருப்பத்தை ஸ்வாமிகளுக்குச் சொல்லி அனுப்பினார். ஸ்வாமிகளும் அவரது வேண்டுகோளுக்கு இசைந்து, அன்று மாலை கலெக்டரை அங்கு வரும்படி அனுமதித்தார்கள். கலெக்டரும் அதன்படியே குறித்த வேளையில் ஸ்வாமிகளைக் காணச் சென்றார். ஸ்வாமிகள் தாம் தங்கியிருந்த ஜாகையின் திண்ணையின்மேல் வீற்றிருக்க, கலெக்டருக்குத் திண்ணையின் கீழ் ஒரு நாற்காலி போடப்பட்டிருந்தது. (சாதாரணமாக ஹிந்துக்கள் எவரும் ஸ்வாமிகள் முன்னிலையில் ஆசனங்களில் அமர்வது வழக்கமில்லை.) ஸ்வாமிகளுக்குத் தெளிவாக ஆங்கிலம் பேசக்கூடிய திறமை இருந்தபோதிலும், அம்மொழியில் பேசுவதை ஸ்வாமிகள் அநேகமாகத் தவிர்த்து விடுவதுண்டு. கலெக்டரின் நண்பர் ஒருவர் ஸ்வாமிகள் தமிழில் கூறியவற்றையெல்லாம் ஆங்கிலத்தில் கலெக்டருக்கு மொழி பெயர்த்துக் கூறினார். கலெக்டர் திருவையாற்றில் ஸ்வாமிகள் நடத்திய அன்ன தானத்தைக் குறித்துச் சர்க்காரின் நன்றியை ஸ்வாமிகளுக்குத் தெரிவித்துக் கொள்வதாகக் கூறினார். ஸ்வாமிகளின் வசீகரமான முகத் தோற்றத்திலும், தெளிவான அறிவிலும் கலெக்டர் ஈடுபட்டவராகிச் சுமார் ஒரு மணி நேரம் பொது விஷயமாகவும், அரசாங்க விஷயமாகவும், மடத்தின் அலுவல்களைப் பற்றியும், ஸ்வாமிகளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார். பின்னர் கலெக்டர் ஸ்வாமிகளிடம், 'எனது வாழ்நாளில் இந்தச் சந்திப்பை ஒரு நாளும் மறக்கமாட்டேன்' என்று கூறி விடைபெற்றுக் கொண்டார்.

**கடல் கடந்த நம் நாகரிகத்தைப் பற்றிய ஆராய்ச்சி-கிழக்காசியாவில் ஹிந்து நாகரிகம்**

இப்பிரயாண காலத்தில் ஸ்வாமிகள் கருத்தைக் கவர்ந்த சில ஆராய்ச்சிகளைப்பற்றி இங்குக் கூறுவோம். இன்று **இந்தோனேஷியாவென** சொல்லப்படும் **ஜாவா**, பாலி தீவுகளில் இந்திய நாகரிகமும், பண்பாடும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இருந்து வந்திருக்கின்றன. மேலும் அவை தமிழ் நாட்டு நாகரிகங்களுக்கு ஒத்ததாகவே விளங்கி வருகின்றன. பல வருடங்களாகவே ஸ்வாமிகள் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு வந்திருக்கிறார். Raffles History of Java என்னும் பழைய புத்தகத்திலிருந்து இந்த ஆராய்ச்சி சம்பந்தமாக ஸ்வாமிகளுக்குப் பல விஷயங்கள் புலனாயின. இரண்டு பாகங்கள் கொண்ட இந்தப் புத்தகம் சுமார் இரண்டாயிரம் பக்கங்கள் உள்ளது. அப்புத்தகம் ஓர் ஆங்கிலேய

ரால் இயற்றப்பட்டது. ஆங்கிலேயர் ஆட்சியினுல் நம் நாடு அடிமைப் பட்டிருப்பதைக் குறித்து நாம் வருந்தாமல் இருக்க முடியாதெனவும், ஆனுல் அவர்களுள் பல மேதாவிகள் இயற்றியுள்ள புத்தகங்களினுல் நாம் பெரும் பயனை அடைந்திருக்கிருேமெனவும், அதை ஒரு நாளும் நாம் புறக்கணிக்க முடியாதெனவும், ஸ்வாமிகள் அடிக்கடி கூறுவதுண்டு. நம் பழந்தமிழர்கள் கீழ்த் திசைத் தீவுகளை வென்று, அவற்றில் குடியேறி ஹிந்து நாகரிகத்தை அவ்விடம் பரவச் செய்திருக்கலாம்; அல்லது நமது தமிழ் நாடே அவ்வளவு தூரம் வரையில் விசாலமாக இருந்திருக்கலாம் என்பது ஸ்வாமிகளின் அபிப்பிராயம்.

இன்று அங்குக் காணும் விநாயகர், சிவன், அம்பிகை, விஷ்ணு—இவர்களின் விக்கிரகங்களைக் காணும்பொழுது நமது மனம் அத்தேசத் சரித்திரத்தின் ஆராய்ச்சியில் ஈடுபடாமலிருக்க முடியாது. ஹிந்து மதத்தின் நாகரிகச் சின்னங்களும் அங்கே அதிகமாகத் தென்படுகின்றன. ஆனுல் சைவம், வைஷ்ணவம் என்ற இரண்டு மதங்களும் இன்று அந்நாட்டிலிருந்து மறைந்து, இஸ்லாம் மதமே தேச மதமாக மாறிவிட்டது. பாலித் தீவில் மாத்திரம் இன்னும் ஹிந்துக்கள் மதம் மாருமல் இருக்கிருர்களென்று சொல்லப்படுகின்றது. இன்றும் பிராம்மணர்கள் அங்கு வேதம் ஓதுதலை வழக்கமாக வைத்துக் கொண்டிருக்கிருர்களென்றும் சொல்லப்படுகிறது. ஜாவா நாடு மத மாற்றத்தை அடைந்திருந்த போதிலும் அங்கு மக்களின் பெயர்களெல்லாம் ஹிந்து தெய்வங்களின் பெயர்களாகவே விளங்குகின்றன. அவர்களின் நாடகங்களும், நாட்டியங்களும், இராமாயணம் மகா பாரதம் இவை போன்ற இதிகாஸங்களையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

அந்த நாட்டிற்கு நேரில் சென்றவர்களை ஸ்வாமிகள் சந்தித்து அதனுடைய பூர்விக நாகரிகங்களைப்பற்றிய விஷயங்கள் யாவற்றையும் கேட்டு அறிந்துகொள்வார்கள். அந்த நாடு அப்பொழுது டச்சுக்காரர் வசம் இருந்தது. வெகு சமீப காலத்தில்தான் அது சுதந்தரம் பெற்று, இந்தோனேஷியா என்னும் பெயருடன் விளங்குகிறது. ஜாவா, பாலி என்ற இரண்டு தீவுகளிலும் உள்ள ஹிந்து கலாசாரத்தை விளக்கும் நூல்கள் எந்தப் பாஷையிலிருந்தாலும் அவைகளை வரவழைத்து ஆராய்ச்சி செய்வதில் ஸ்வாமிகளுக்கு மிகுந்த ஆர்வமுண்டு. ஸ்வாமிகளின் விருப்பப்படி டச்சுக்காரரால் ஹாலந்தில் வெளியிடப்பட்ட அத்தீவுகள் சம்பந்தமான எல்லாப் புத்தகங்களையும் அந்தச் சர்க்கார் மடத்

திற்கு அனுப்பி வைத்தனர் ; மேலும் ஸ்வாமிகள் இவ்விஷயத்தில் எடுத்துக்கொண்டுள்ள சிரத்தையையும் பாராட்டிக் கடிதங்கள் எழுதியிருந்தனர் ; சர்க்கார் வெளியிட்டு வந்த **தி ஜாவா** என்னும் மாதாந்தர டச்சுப் பத்திரிகையையும் ஸ்வாமிகளின் பார்வைக்கு இலவசமாக அனுப்பி வைத்தனர்.

சுமார் இருபது வருடங்களுக்கு முன் ஜாவானிய நடன கோஷ்டி ஒன்று சென்னையை அடுத்த அடையாற்றுக்கு வந்திருந்தது. இராமாயணத்தையும், மகாபாரதத்தையும் சித்திரித்துப் பல நடனங்களை அந்தக் கோஷ்டியார் சென்னையில் நடத்தினார்கள். ஸ்வாமிகள் அந்தக் கோஷ்டிக்கு ஒரு ஆசிச் செய்தியையும், கோஷ்டியைச் சார்ந்த ஒவ்வொருவருக்கும் இந்தியக் கலையை விளக்கும் சில பரிசுகளையும் மடத்தின் விசேஷ பிரதிநிதியான மயிலாப்பூர் வேங்கடரமண வைத்தியசாலையின் ஆசிரியர் **கே. ஜி. நடேச சாஸ்திரிகளின்** மூலம் ஸ்வாமிகள் அனுப்பி வைத்தார்கள். ஸ்வாமிகளின் உருவப் படமும், அவர்கள் கோரிக்கையின் பேரில், அவர்கள் யாவருக்கும் அளிக்கப்பட்டது. கோஷ்டியின் தலைவர் ஸ்வாமிகளுக்கு நன்றி செலுத்திவிட்டு ஸ்வாமிகள் தங்கள் நாட்டிற்கு விஜயம் செய்ய வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டார். ஸ்வாமிகள் அந்நாட்டிற்கு விஜயம் செய்யப் போவதென்பது ஒருபொழுதும் நடைபெறக் கூடியதில்லை ; ஆயினும் அந்நாட்டில் ஹிந்து பௌத்த புராதன சின்னங்கள் அமைந்திருக்கும் ஒவ்வொரு இடத்தைப் பற்றியும் ஸ்வாமிகள் நன்கு அறிந்து கொண்டிருக்கிறார்கள். இவ் விஷயங்களை எவ்விதமோ அறிந்திருந்த உலகத்தின் பெரிய பிரயாண ஏஜண்டுகளாக விளங்கும் **தாமஸ் குக் அண்டு கம்பெனி யார்** ஜாவா சம்பந்தமான சரித்திர வெளியீடுகளை ஸ்வாமிகளுக்கு அனுப்பி, ஸ்வாமிகள் அந்நாட்டுக்கு விஜயம் செய்வதானால் அவர்கள் அங்குத் தங்குவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் மேலும் பிரயாண ஏற்பாடுகளையும் செய்து கொடுப்பதாக எழுதியிருந்தனர். ஸ்வாமிகளின் ஆசார அனுஷ்டானங்களைப் பற்றி அவர்கள் எவ்விதம் அறிவார்கள் !

### ஓவியங்களில் ஆராய்ச்சி—சித்தன்னவாசல் முதலிய குகைக் கோயில்களைப் பார்வையிட்டது

மற்றொருவகை ஆராய்ச்சியிலும் ஸ்வாமிகளின் மனம் ஈடுபட்டிருந்தது. புதுக்கோட்டைச் சீமையில் **சித்தன்னவாசல், நார்த்தாமலை, குண்டாண்டார் கோயில், குடுமியா மலை, திருக்கோ**

**கர்ணம், திருமயம்** முதலானவை குகைக் கோயில்களைக் கொண்டுள்ளன. **சித்தன்ன வாசல்** குகையின் கூறையில் தாமரைப் புஷ்பங்களைக் கையிலேந்தி நடமாடும் நடனப் பெண்களின் உருவங்கள் வர்ணச்சித்திரங்களில் வெகு அழகாக அமைக்கப்பட்டுள்ளன ; அவை ஆயிரம் வருடங்களுக்கு முன் நம் நாட்டிலிருந்த பல்லவர் காலத்து ஜைன நாகரிகத்தை விளக்குகின்றன. அந்தச் சித்திரங்களையெல்லாம் ஸ்வாமிகள் புகைப்படங்கள் எடுக்கச் செய்தார்கள். **நார்த்தாமலைக்** குகைக் கோயிலில் ஜைன நாகரிகமும், ஹிந்து நாகரிகமும் ஒருங்கே அமையப் பெற்றிருக்கின்றன. **குடுமியாமலை** சிவாலயத்திலும் **திருமயம்** சிவாலயத்திலும், சங்கீத சாஸ்திரம் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இவை மஹேந்திரவர்மன் காலத்தில் பொறிக்கப்பட்டனவாகும். இந்தக் கல்வெட்டுகளை ஸ்வாமிகள் ஆராய்ச்சி செய்தார்கள். **திருக்கோகர்ணம்** குகைக்கோயில் புராதன சிவஸ்தலமாகும். **திருமயத்தில்** கல்வெட்டினால் சித்திரிக்கப்பட்ட பள்ளிகொண்ட பெருமாள் விக்ரகத்தின் சிறப்பைப்போல் வேறெங்கும் காணமுடியாது. **திருமயம்** சிவாலயத்தில் குகைக்கோயிலுள் அமைந்துள்ள லிங்கோத்பவ மூர்த்தியின் பெரிய அழகான உருவத்தைப் போல் வேறு எச்சிவாலயத்திலும் காணமுடியாது. 1924-ஆவது வருடம் பிற்பகுதியில் ஸ்வாமிகள் புதுக்கோட்டைச் சீமைக்கு விஜயம் செய்து அக்குகைக் கோயில்களையெல்லாம் தரிசித்துக்கொண்டார்கள். ஆராய்ச்சி முறையில் கல்வெட்டுகளையெல்லாம் பார்வையிட்டார்கள். **நார்த்தா மலையிலும், சித்தன்ன வாசலிலும்** மலையின் மேற்புறத்தில் தண்ணீர் நிறைந்த சுனைகளைக் காணலாம். அச்சுனைகளின் அடித்தலத்தில் கல்வெட்டினால் சிவலிங்கங்கள் சித்திரிக்கப்பட்டிருப்பதை ஸ்வாமிகள் அறிந்து, அச்சுனைகளின் தண்ணீரை இயந்திர உதவி கொண்டு இறைக்கச் செய்து, அவைகளின் கீழுள்ள சிவலிங்கங்களுக்கு அபிஷேகம், அர்ச்சனை, பூஜை இவை செய்து அவைகளைத் தரிசித்துக்கொண்டார்கள். அந்த லிங்கங்களை அதுவரை அப்பக்கத்து மக்கள் கண்டதில்லையாதலால், புதுக்கோட்டையிலிருந்தும், சுற்றுப்புறங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் அவ்விடங்களில் கூடிச் சிவலிங்க தரிசனத்தைச் செய்துகொண்டார்கள். அச்சமயம் புதுக்கோட்டை சம்ஸ்தான அதிகாரிகளும் **கடியாபட்டி தீ. நா. முத்தையா செட்டியாரும்** ஸ்வாமிகளுக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் புரிந்தார்கள். இவ்வித ஆராய்ச்சிகள் ஸ்வாமிகளிடம் ஒரு காலத்திலோ இடத்திலோ தோன்றி மறைவனவல்ல ; அவர்களின் இளமை

முதற்கொண்டே அவர்களின் மனம் இவை போன்றவற்றில் ஈடுபட்டு இன்னும் வளர்ந்து கொண்டே வருகின்றன.

**தமிழில் ஆர்வம் : தாக்ஷிண்யத்ய கலாநிதிப் பட்டம் அளித்தது**

தமிழிலுள்ள சங்க நூல்கள், பழைய காப்பியங்கள் மற்றும் தேவாரம், திருவாசகம், திருக்குறள், ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்கள், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், இவைகளின் ஆராய்ச்சியில் சமயம் வாய்க்கும்போதெல்லாம் ஸ்வாமிகள் ஈடுபடுவதுண்டு. தக்க புலவர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க வரும்பொழுது காலம் கடப்பது தெரியாமல் ஸ்வாமிகள் அவர்களுடன் அளவளாவி அவ்வரிய நூல்களில் பொதிந்துள்ள பொக்கிஷங்களைப் பற்றி அவர்கள் விளக்கம் கூறுவதைக் கேட்டு அகமகிழ்வார்கள்.

அக்காலத்தில் மகாமகோபாத்தியாய **உ. வே. சுவாமிநாத ஐயர்** ஸ்வாமிகளைத் தரிசிக்க மடத்திற்கு வருவதுண்டு. தமிழில் ஸ்வாமிகளுக்குள்ள ஆர்வத்தைக் கண்டு ஐயர் அவர்கள் பெரு மகிழ்ச்சியுற்று, வயதின் காரணமாக ஏற்பட்டுள்ள தமது உடல் தளர்ச்சியையும் பொருட்படுத்தாது ஸ்வாமிகளிடம் இத்துறையில் பல மணி நேரம் பேசிக்கொண்டே இருப்பார். சிறியோர், பெரியோர் எல்லோருடைய மனமும் இன்புறும் வண்ணம் எப்பொழுதும் இனிய சொற்களையே பேசி, சில சமயங்களில் ஒரே மொழியில் பல கருத்துக்களை அடக்கி, ஐயர் அவர்கள் நயமாக உரையாடுவார்கள் என்பதை அவர்களை நேரில் கண்டோர் அறிந்திருப்பர். ஸவாமிகளிடம் ஐயர் உரையாடும்பொழுது ஸ்வாமிகள் பல புதிய கருத்துக்களை வெளியிடுவார்கள். அவைகளைக் கேட்ட ஐயர் புளகாங்கிதம் அடைந்து, ஸ்வாமிகளைத் தமிழ் தெய்வத்தின் அவதாரம் எனப் போற்றுவார் ; இந்த அவதாரம் தமது வாழ்நாளில் ஏற்பட்டிருப்பதைக் குறித்து பெருமையும் கொள்வார். ஸ்வாமிகளைக் காண வரும்பொழுதெல்லாம் ஐயர் அவர்கள் பெரிய மகர கண்டி ருத்திராக்ஷ மாலை அணிந்து வருவார். ஸ்வாமிகள் அன்றாடம் செய்யும் சிவ பூஜையை ஐயர் தரிசித்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கித் தியானத்தில் அமர்ந்திருப்பார். ஸ்ரீ காமகோடி பீடத்தின் 65-ஆவது ஆசாரியர்களான **ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** சிவ பூஜை செய்வதில் மிகச் சிறந்தவர்களென்றும், அக்காட்சியைத் தாம் தமது பதினெட்டாவது பிராயத்தில் நேரில் கண்டிருப்பதாகவும், அக் காலத்தில் அவர் கண்ட அந்தச் சிவ பூஜையை இப்பொழுது மறு

முறை காணும் பாக்கியத்தைத் தாம் பெற்றிருப்பதாகவும், ஐயர் அவர்கள் கூறுவார்கள். மேலும் அக்காலத்திலேயே தாம் தமிழில் செய்துவந்த புராணப் பிரசங்கத்தைக் கேட்டு மடத்தின் ஆஸ்தான வித்வான்கள் தம்மைப் பாராட்டி இருப்பதைப் பற்றி யும், அவர்கள் தமது சுய சரித்திரத்தில் கூறியுள்ளார்கள்.

மகாமகோபாத்தியாய சுவாமிநாத ஐயர் அவர்கள் தமிழுக் கும், தமிழ் வளர்ச்சிக்கும் செய்துள்ள அரிய தொண்டைப் பாராட்டி 1925-ஆவது வருடம் ஸ்வாமிகள், அவர்களுக்கு **தாக்ஷி ணாத்ய கலாநிதி** என்னும் பட்டத்தை வழங்கி மடத்தின் உயரிய கௌரவமான இரட்டை காஷ்மீர் சால்வைகளை அவர்களுக்குப் போர்த்தச்செய்து அவர்களைச் சிறப்பித்தார்கள். அப்பட்டம் வழங்கப்பெற்ற ஸ்வாமிகளது திருமுகமானது அவ்வருடம் **ஸர். ஸி. பி. ராமஸ்வாமி ஐயர்** அவர்களது தலைமையில் நடைபெற்ற மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வருடாந்தரக் கூட்டத்தில் ஐயர் அவர்களுக்கு அளிக்கப்பெற்றது. ஐயர் அவர்களும் அத்திரு முகத்தைப் பெற்றுக்கொண்டு அது தனக்குக் கிடைப்பதற்கரிய ஓர் கௌரவம் என்றும், அதைத் தனக்கு அளித்த மகா புருஷர் களான ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள் பல்லாண்டு வாழ்ந்து மக்களை உய்விக்க வேண்டுமென்றும் கடவுளைப் பிரார்த்திப்பதாகவும் கூறினார்கள்.

இவ்வைபவத்தைப் பற்றி மதுரைத் தமிழ்ச் சங்க வெளி யீடான **செந்தமிழ்** தொகுதி 23 (பக்கம் 311) இல் கூறியிருப்பதை இங்குக் குறிப்போம்.

"ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகளான கும்பகோணம் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகள் மஹாமஹோபாத்யாய ஐயரவர்களுக்கு **தாக்ஷிணாத்ய கலாநிதி** என்ற பட்டத்துடன் அளிக்கும்படி அனுப்பிய ஜோடி சால்வையும், தங்கத் தோடாவும் பைம்பொற் பவுண்டன் பேனாவும், மந்த்ராக்ஷதை விபூதி ப்ரஸா தங்களும் ஸ்ரீமுகமும் வந்தன. ஸ்ரீமுகத்தை மதுரை வக்கீல் மகா-ா-ா-ஸ்ரீ வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியவர்கள் ஸபையில் படித்துக் கொடுக்க, ஸபா தலைவரவர்கள்,

> செந்நாப் புலவர் திறமறிந்து பொற்கிழிகள்
> அந்நாளிக் கூட லளித்தமைநந்—தொன் னூல்கள்
> கற்றறிந்தோம் மற்றதனைக் கண்ணுற் கண்டறிந்தோம்
> இற்றநா ளிங்கே யினிது.

என்று புலவர் பாராட்டும் வண்ணம், தமிழபிமானச் செல்வர்கள் வழங்கிய ரூபாய் ஐயாயிரம் அடங்கிய பொற்கிழியையும், ஸ்ரீ ஜகத்

குரு ஸ்வாமிகள் வழங்கிய தாக்ஷிண்ணுத்ய கலாநிதி என்ற பட்டத்தையும், சால்வை முதலியவற்றையும் மஹாமஹோபாத்யாய ஐயரவர்களுக்கு உவப்புடன் அளித்தார்கள்.

அதன்பின் மஹாமஹோபாத்யாய ஐயரவர்கள் தம்மைக் கௌரவித்தமைக்கு நன்றி பாராட்டி, தமிழ் மொழியைக் கௌரவிக்க வேண்டி தமக்கு இந்த விசேஷ சம்மானம் செய்யப்பட்டதென்று தாம் கருதுவதாகக் கூறினர்கள்.''

இன்னும் ஸ்ரீ ஐயரவர்கள் அவ்வாண்டு வெளியிட்ட தம் 'நன்னூல் சங்கர நமச்சிவாயருரைப்' பதிப்பின் முகவுரையில் (28-9-25) பின்வருமாறு எழுதியுள்ளமையும் குறிக்கத்தக்கது.

"தரிசிக்குங்காலங்களிலெல்லாம் பழைய தமிழ் நூல்களை ஆராய்ந்து பதிப்பிப்பதில் சிறிதும் தளர்ச்சியடையாமல் மேன் மேலும் உழைத்து வரவேண்டுமென்று பெருங்கருணையுடன் கட்டளையிட்டருளியதன்றி, மேற்கூறிய தமிழ்ச் சங்க வருஷோத்ஸவ காலத்தில் அடியேனுக்குத் திவ்யப்ரஸாதங்களையும் ஸ்ரீ முகத்தையும் ஸம்மானங்களையும் அனுப்பி அனுக்கிரஹித்த ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான கும்பகோணம் ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகளுடைய பரிபூரண கிருபையைச் சிந்தித்து, 'தாயுநற் றந்தையுந் தவமுமன்பினுன், மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ' (கம்ப. திருவவதார.) என்பதையே சொல்லித் துதித்துத் திசைநோக்கி அவர்களை வந்திக்கின்றேன்.

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசே
ரூருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கி மூதியமே

—திருச்சிற்றம்பலக்கோவையார், ௪00.

இப்போது கும்பகோணத்தில் ஆசார்யமூர்த்திகளாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்கள் தேவார திருவாசகங்களில் ஈடுபட்டிருப்பதன்றி......தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்தருளிவருவது யாவராலும் கொண்டாடத் தக்கது.''

ஸ்வாமிகளின் இந்த யாத்திரையில் செட்டிமார் நாட்டுக்கு விஜயம் செய்யவேண்டு மென்று கண்டனூர் நகரத்தார் செய்து கொண்ட பிரார்த்தனைக்கு இணங்கி, அவர்கள் கண்டனூருக்கு 15-4-1923-ஆம் தேதி விஜயம் செய்தார்கள். அப்பொழுது அவ்வூரை அடுத்த சாக்கோட்டை என்னும் தலத்தில் ஸ்வாமிகள் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டார்கள். பின் 1925-ஆம் வருடம்

துவக்கத்தில் தேவகோட்டையில் சுமார் ஒரு மாதமும், பிறகு காரைக்குடியில் ஒரு மாதமும், தங்கி அங்குள்ள பக்தர்களை அனுக்ரகித்தார்கள். தேவகோட்டையில் சிலம்பணி விநாயகர் ஆலயத்தின் அருகில் உள்ள துவாதசி மடத்தில் அவர்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூர் அள. அரு. ஜமீந்தார் குடும்பத்தாரும் மற்ற நகரத்தார்களும், வக்கீல்களும், உத்தியோகத்தர்களும் ஸ்வாமிகளின் பணியில் ஈடுபட்டனர். காரைக்குடியில் அவர்கள் தங்கியிருந்தபொழுது ஜில்லாபோர்டு மெம்பர் சித. நாராயணன் செட்டியாரும், சின்னையா ஐயரும், ஹெட்மாஸ்டர் N. S. வேங்கடராமையரும் மடத்தின் கைங்கரியங்களில் பக்தியுடன் ஈடுபட்டிருந்தனர். பிறகு பள்ளத்தூர், கடியாபட்டி, இராயவரம், அரிமளம் இவ்விடங்களுக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். 1925-ஆவது வருடத்து வியாஸ பூஜையும் சாதுர்மாஸ சங்கல்பமும் இளையாற்றங்குடியில் நடைபெற்றன. இளையாற்றங்குடிக்குப் போகும் மார்க்கத்தில் ஸ்வாமிகள் கோனுப்பட்டில் சுமார் பத்து தினங்கள் தங்கியிருந்து நகரத்தாரால் உபசரிக்கப்பட்டார்கள். காரைக்குடியில் தங்கியிருந்தபொழுது ஸ்வாமிகள் அரியக்குடிக்கும், குன்றக்குடிக்கும், கோவிலூருக்கும் சென்று ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டார்கள். கோவிலூர் மடாலயத்தின் தலைவரான ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஸ்வாமிகள் நம் ஸ்வாமிகளைத் தக்க மரியாதைகளுடன் வரவேற்று உபசரித்தார். வியாஸ பூஜை முடிந்த பின்னர், ஸ்வாமிகள் நச்சாந்துப்பட்டி, பனையப்பட்டி, விராய்ச்சிலை, குழிபிரை இவ்விடங்களுக்கெல்லாம் விஜயம் செய்தார்கள். இளையாற்றங்குடியில் நம் ஸ்வாமிகள் சாதுர்மாஸ சங்கல்பத்தை நடத்திக்கொண்டிருந்தபோது ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதி ஸ்வாமிகள் 5 மைல் தூரத்திலுள்ள குன்றக்குடியில் தம் சாதுர்மாஸ விரதத்தை நடத்திவந்தார்கள். வித்வான்களும், பக்தர்களும், இரு மடங்களுக்கும் வந்துபோவதுண்டு. அவர்கள் மூலம் இரு மகான்களும், ஒருவருக்கொருவரின் நலன்களைப் பற்றி விசாரிப்பதுண்டு. குரோதன வருடம் தை மாதம் முதல் தேதி (14-1-1926) ஏற்பட்ட சூரிய கிரஹணத்திற்கு ஸ்வாமிகள் இராஜா மடம் சென்று அவ்விடம் சமுத்திர ஸ்நானம் செய்துவிட்டு, பன்னிரண்டாம் தேதி நேமத்தான்பட்டியில் நடைபெற்ற மெ. மு. குடும்பத்தாரால் கட்டப்பட்ட சத்திரத்தின் கிருஹப்ரவேசத்திற்காக அவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். பின்னர் கானாடுகாத்தானில் பதினைந்து நாட்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தார்கள். அவ்விடம் சர். எம். ஸி. டி. முத்தையா செட்டியார் முதலிய நகரப் பிரமுகர்கள்

ஸ்வாமிகளுக்குத் தகுந்தவாறு வரவேற்பளித்து ஸ்வாமிகளின் பூஜைக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கடைசி நாளன்று பெரியதொரு ஊர்வலத்தையும் நடத்திவைத்தார்கள்.

### தர்ம பூஷணம் பட்டமளிப்பு

கடியாபட்டியில் ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது அவ்வூர் நகரத்தார் மிகுந்த பக்தியுடன் ஸ்வாமிகளின் பணியில் ஈடுபட்டிருந்தனர். திருப்பாதிரிப்புலியூரில் ஆலயத் திருப்பணியும், திருவண்ணாமலையில் வெள்ளி ரதப் பணியும் நடத்திய அவ்வூர் **தீ. சொ. குடும்பத்தார்** ஸ்வாமிகள் பணியில் முக்கியமான பங்கு எடுத்துக்கொண்டனர். அவ்வூர் பி. கு. **நா. குடும்பத்தினர்** ஸ்வாமிகளின் பூஜைக்கெனத் தங்கம் கட்டிய வலம்புரிச் சங்கு ஒன்றைக் காணிக்கையாக அளித்தார்கள். தீ. சொ. குடும்பத்தைச் சார்ந்த திவான்பகதூர் **தீ. நா. முத்தையா செட்டியாருக்குத் 'தர்மபூஷணம்'** என்னும் பட்டத்தை ஸ்வாமிகள் அப்பொழுது அளித்தார்கள். அவர் அந்தப் பட்டத்தைப் பெற்ற பெருமையைக் கொண்டாடுவதற்காக அன்பர்கள் பலர் கடியாபட்டியில் ஒரு பாராட்டுக் கூட்டத்தை ஏற்பாடு செய்தனர். அந்தக் கூட்டத்திற்கு மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி **உ. வே. சுவாமிநாத ஐயர்** தலைமை தாங்கினார். இராமலிங்க ஸ்வாமிகளின் திருவருட்பாவை அதுவரை வெளிவராத முறையில் ஓர் உயர்ந்த வெளியீடாக, ஆயிரத்தைந்நூறு பக்கங்களுக்குமேல் ஒரே புத்தகமாக உருவாக்கி ஆயிரக்கணக்கான பிரதிகளைச் செட்டியார் அடியார்களுக்கு இனமாக வழங்கிய பெருமையை, ஐயர் அவர்கள் எடுத்துக் கூறிச் செட்டியாரின் இந்த ஒரு தர்மச் செயலே ஸ்வாமிகள் அளித்த பட்டத்திற்கு உரியதாக ஆகுமென்றும், இதுபோல் பல தருமங்களைச் செட்டியார் செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். இன்னும் பல பெரியோர்கள் அன்று செட்டியாரைப் பாராட்டிப் பேசினர். மகிபாலன்பட்டி **பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரும்** தம் பாராட்டுக்களை அழகிய முறையில் அன்று வெளியிட்டார்.

### வைநாகரம் இராமநாதன் செட்டியார்

**வைநாகரம் இராமநாதன் செட்டியார்** என்னும் பெரியார் தேவகோட்டைக்கடுத்த **அமராவதிப்புதூரைச்** சார்ந்தவர். அவர் ஓர் ஒப்பற்ற சிவ பக்தர் : ஆசார சீலர். ஒவ்வொரு நாளும் சிவ பூஜை செய்த பிறகே அவர் உணவருந்துவார். பல மணி நேரம்

பக்தி பரவசத்தில் அவர் பூஜையில் அமர்ந்திருப்பார்; எப்பொழுதும் உருத்திராக்ஷ மாலைகளை அணிந்திருப்பார்; தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய நூல்களை நன்கு ஆராய்ச்சி செய்து அவை களின் கருத்துக்களை பிறருக்குப் பயன்படுமாறு அவர் உபதேசிப் பார்; அவற்றுடன் அவர் ஓர் கவியாகவும் விளங்கிவந்தார். அவர் மதுரை மீனாக்ஷி அம்மன் ஆலயத்தின் டிரஸ்டியாகவும் சிலகாலம் இருந்து வந்தார்; அவர் அவ்வாலய டிரஸ்டியாக இருந்த பொழுது கடவுள் நம்பிக்கை இல்லாத கோஷ்டியார் மதுரையில் பக்தர்களுக்குப் பலவாறு துன்பங்களை விளைவித்து வந்தனர். அப்பொழுது செட்டியார், ஓர் தொண்டர்படையைத் திரட்டி நாஸ்திகர்களின் தொந்தரவுகள் நீங்கும்படி செய்தார்.

ஸ்வாமிகள் **கடியாபட்டியில்** விஜயம் செய்திருந்தபொழுது ஸ்வாமிகளின் சிவ பூஜையைக் காணவும், சமய சம்பந்தமாகவும், உலக சம்பந்தமாகவும், ஸ்வாமிகள் உரையாடும் சொல்நயங்களை அனுபவிக்கவும் செட்டியார் சுமார் ஒரு வாரம் கடியாப்பட்டியி லேயே தங்கியிருந்தார். அப்பொழுது அவர் ஒவ்வொரு நாளும் பல மணி நேரம் ஸ்வாமிகளிடம் உரையாடி அந்தச் சம்பாஷணை களில் களித்திருப்பார். கடியாபட்டி நகரத்தார் அப்பொழுது ஸ்வாமிகளுக்கு ஓர் பெரிய ஊர்வலத்தை ஏற்பாடு செய்திருந்தனர். ஊர்வலத்தின்பொழுது ஸ்வாமிகளைத் தரிசிக்க வெளியூர்களி லிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து கூடியிருந்தனர். அப்பொழுது முக்கியமானவர்கள் சிவிகையுடன் தொடர்ந்து வருவதை ஸ்வாமிகள் கண்டார்கள். ஆனால் அக் கூட்டத்தி னிடையே **இராமநாதன் செட்டியாரைக்** காணவில்லை. தொடர்ந்து ஒரு வாரமாகப் பழகிய செட்டியார் அச்சமயம் அங்கில்லாததை ஸ்வாமிகள் ஒருவாறு குறிப்பாக உணர்ந்தார்கள். இரவு ஒரு மணி வரை அந்த ஊர்வலம் நடைபெற்று அதற்குமேல் ஜாகையை அடைந்தது. ஸ்வாமிகள் சிவிகையிலிருந்து இறங்கியதும் வழக்கம்போல் ஒரு சிம்மாசனத்தில் சிறிது நேரம் அமர்ந்தார்கள். அமர்ந்தவுடன் இராமநாதன் செட்டியாரை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்கள். அப்பொழுது கூட்டத்தின் நடுவில் ஓர் மூலையில் நின்றிருந்த செட்டியார் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஸ்வாமிகள் முன் வந்து அவர்களை வணங்கினார். ஸ்வாமிகளும் அவர்களைப் பார்த்து, ‘ தங்களை இவ்வளவு நேரம் காணவில்லையே! எங்கு சென்றிருந்தீர்கள்?” என்று வினவினார்கள். அதற்குச் செட்டியார் ஸ்வாமிகளை நோக்கி, “நான் ஊர்வலத்துடன் தான் வந்துகொண்டிருந்தேன்” எனக் கூறினார். தாம் அவரைக் காண

வில்லையே என ஸ்வாமிகள் மேலும் வற்புறுத்திக் கேட்க, அவர், 'எனது தோள்கள் இன்றே பெரும் புண்ணிய பயனை அடைந்தன. அவை சுவாமிகளது திருமேனியைத் தாங்கி வந்தன' என்றார். அப்பொழுது ஸ்வாமிகள் புன்சிரிப்புடன், 'அப்படியா! சிவிகையைத் தாங்கி வந்தீர்களா?', என்று கேட்டார்கள். செட்டியார், 'ஆம்' எனக் கூறிவிட்டு, பக்தர்களைச் சிவனடியார்கள் சிவிகையில் அமர்த்தி அவர்களைத் தாங்கிப் போவது தமிழ் நாட்டின் பழமையான பண்பாட்டில் ஒன்று என்றும், அன்று சமயகுரவர்கள் திருத்தலங்களுக்கெல்லாம் யாத்திரை செய்த பெருமையை இன்று ஸ்வாமிகள் யாத்திரையில் தாம் நேரில் கண்டதாகவும், புண்ணிய வசத்தால் ஸ்வாமிகளின் சிவிகையைத் தாங்கும் வாய்ப்பு தமக்குக் கிடைத்ததென்றும் கூறிவிட்டு, ஸ்வாமிகள் பேரில் ஐந்து பாக்கள் அமைத்து, அவைகளை அப்பொழுதே பாடி, ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்து, அப்பாக்களுக்கு விளக்கத்தையும் அங்குக் கூடியிருந்த நூற்றுக்கணக்கான மக்களுக்கு எடுத்துரைத்தார். அப்பொழுது, அக்ஷம், அக்கம் என்னும் சொற்கள் கண்ணைக் குறிப்பதால், பல கண்கள் கண்டு மகிழும் பொருளே பல்லக்கு எனச் செட்டியார் சாதுர்யமாகப் பொருள் கூறினார்; மக்கள் யாவரும் செட்டியாரின் பக்தியைக் கண்டு மகிழ்ச்சியுற்றனர். ஸ்வாமிகளும் செட்டியார் அவர்களது புலமையைப் பெருமைப்படுத்த விரும்பி, அவருக்கு விலையுயர்ந்த ஒரு காசிப் பீதாம்பரத்தைச் சம்மானமாக அளித்து, விபூதி பிரசாதமும் கொடுத்து அவருக்கு ஆசி கூறினார்கள். செட்டியாரும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கி ஸ்வாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டார்.

ஸ்வாமிகள் விஜயம் செய்யும் பல ஊர்களில் அவ்வூர்ப் பிரமுகர்களும், புலவர்களும், சாதாரண மனிதர்களும் ஸ்வாமிகளின் ஊர்வலத்தில் சிவிகையைத் தாங்களே தாங்கி வருவது வழக்கம்.

### பண்டித மணியைப் பாராட்டியது

1925–ஆவது வருடம் ஜூலை மாதம் ஸ்வாமிகள் **இளையாற்றங்குடியில்** தங்கியிருந்தபொழுது வழக்கம்போல் வித்வான்கள் பலர் ஸ்வாமிகளைத் தரிசித்து, தங்கள் தங்கள் புலமைகளை வெளிப்படுத்தி, எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ற ஸ்வாமிகளுடன் உரையாடிப் போவதற்கு வந்துகொண்டேயிருந்தனர். பல சமயங்களில் வேதாந்த, சித்தாந்த விஷயங்களில் சர்ச்சைகள்

அப்பொழுது நிகழ்வதுண்டு. அவரவர்கள் புலமைக்குத் தக்கவாறு ஸ்வாமிகள் வித்வான்களைப் பெருமைப்படுத்தி அனுப்புவது வழக்கம்.

ஒரு நாள் **பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார்** ஸ்வாமிகளைத் தரிசிக்க அவ்விடம் வந்தார். செட்டியார் வடமொழி, தென்மொழி இவ்விரண்டிலும் நல்ல புலமை வாய்ந்தவர்; பேசுவதில் சமர்த்தர்; ஒரே மொழியில் பல பொருள்களை அடக்கி ஹாஸ்யமாகப் பேசும் திறமை படைத்தவர். தமிழ் நூல்களின் ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்; இப்படிப்பட்ட ஒரு வித்வானைச் சந்தித்து அவருடன் உரையாடுவதில் ஸ்வாமிகளுக்கு மிகுந்த ஆர்வம் ஏற்பட்டது. பழமையான நூல்களைப் பற்றியும், தமிழும், வடமொழியும் இப்போது அடைந்துள்ள நிலைமையைப் பற்றியும் காலம் கடந்தது தெரியாமல் மூன்றுமணி நேரத்திற்கும் மேல் ஸ்வாமிகள் அவரிடம் உரையாடினார்கள். நம் நாட்டுப் புராதனக் கலைச்செல்வங்கள் அழியாமலிருப்பதற்குத் தமிழும், வடமொழியும் ஒருங்கே வளம் பெற வேண்டுமென்றும், அன்று இருந்த நிலையில் அவ்விரு மொழிகளும் புறக்கணிக்கப்படுகின்றனவென்றும், பண்டிதமணியைப் போன்றவர்களே எதிர்காலத்தில் நல்ல புலவர்களை உருவாக்க முடியுமென்றும், ஸ்வாமிகள் தெரிவித்தார்கள். பண்டிதமணியும் ஸ்வாமிகளின் தவமகிமையையும், பன்மொழிப் புலமையையும் பல்கலைப் புலமையையும் கண்டு வியப்படைந்தவராகி, ஸ்வாமிகளைப் போன்ற பெரியவர்களின் ஆசியினால் இரு மொழிகளும் நன்கு வளருமென்றும், தம்மால் அதற்கானவைகளை யெல்லாம் செய்யச் சித்தமாக இருப்பதாகவும் கூறினார். ஸ்வாமிகள் அவரது புலமையை மெச்சி அவருக்கு ஓர் பீதாம்பரம் அளித்துத் தக்க மரியாதை செய்தார்கள். செட்டியாரும், ஸ்வாமிகளை வணங்கி என்றென்றும் தம்மைப் பற்றிய நினைவு ஸ்வாமிகளுக்கு இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு விடை பெற்றுக் கொண்டார்.

**ராஜா. ஸர். அண்ணாமலை செட்டியாருக்கு அளித்த பேட்டி**

*1926*—ஆவது வருடம் பிப்ரவரி மாதம் இரண்டாம் தேதி **ஸர். சா. ராம. மு. சித. முத்தையா செட்டியார்** முதலான நகர மக்களின் அழைப்பிற்கிணங்கி ஸ்வாமிகள் கானாடுகாத்தானுக்கு விஜயம் செய்ததைப்பற்றி முன்னமே கூறியுள்ளோம். அப்பொழுது டில்லி சென்றிருந்த **சா. ராம. மு. அ. அண்ணாமலை செட்டியார்** ஸ்வாமிகளைத் தரிசிக்க வேண்டுமென்று, தம் அலுவல்

களைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு தமது சொந்த ஸ்தலமாகிய காஞடுகாத்தானுக்கு வந்து சேர்ந்தார். அண்ணுமலை செட்டியார் ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களிடம் உரையாடிக் கொண்டிருந்த பொழுது, ஸ்வாமிகளின் அந்த யாத்திரையானது மக்களுக் கிடையே நல்ல பயனை அளித்திருப்பதாகவும், எந்த மடாதிபதி களும் இவ்வளவு நீண்டகால யாத்திரையை இதுவரை மேற் கொள்ள வில்லையென்றும், நாஸ்திகர்களை நல்வழிப்படுத்த ஸ்வாமிகளின் தரிசனம் ஒன்றே போதுமென்றும், மற்ற மடாதி பதிகளும் ஸ்வாமிகளைப் பின்பற்றித் தீவிரமான பிரசாரத்தைச் செய்ய வேண்டுமென்று தாம் விரும்புவதாகவும் தெரிவித்தார், மேலும் பிராம்மணக் குடும்பங்கள் ஏழ்மைநிலை அடைந்து வருவதைப் பற்றிச் செட்டியார் ஸ்வாமிகளிடம் மன வருத்தத் துடன் விண்ணப்பித்து, அதைத் தடுக்க ஒரு வழி தேடவேண்டு மென்றும், பெண்களுக்காக கொடுக்கும் வரதட்சிணையே அதற்குக் காரணமென்று தாம் எண்ணுவதாகவும், அந்தச் சமூகத்திலுள்ள அக்கொடிய பழக்கத்தை அகற்ற ஸ்வாமிகள் ஒரு திட்டத்தை வகுத்துக் கொடுத்தால் அதன் பிரசாரத்திற்காகத் தாமே பொருளுதவி செய்வதாகவும் உரைத்தார். மற்றும் அந்நியர் நாகரிகத்தில் எல்லாச் சமுதாயங்களைக் காட்டிலும் பிராம்மண சமூகமே அதிகமாக ஈடுபடுகிறதென்றும், அந்தச் சமூகத்தை மற்றச் சமூகங்களும் பின்பற்றித் தங்கள் வாழ்க்கைச் செலவுகளை அளவுக்கு மீறிப் பெருக்கிக் கொள்கின்றனவென்றும், இந்தத் தீமையையும் தடுக்க முயற்சிக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டார். செட்டியார் கூறியவற்றையெல்லாம் ஸ்வாமிகள் மிகுந்த கவனத் துடன் கேட்டுத் தமக்கும் இவ் விஷயங்களில் மிகுந்த கவலை இருப்பதாகவும், சரீரத்தில் விஷம் ஏறுவது போல இந்தத் தீமைகள் சமூகத்தில் பரவி வருவதைத் தாம் உணர்ந்திருப்ப தாகவும், இதில் செட்டியார் அவர்களுக்குச் சிரத்தை ஏற்பட்டிருப் பதே ஓர் நல்ல அறிகுறியாகத் தாம் கருதுவதாகவும், தேவை யுள்ளபோதெல்லாம் அவரது உதவியைத் தாம் உபயோகித்துக் கொள்வதாகவும் தெரிவித்தார்கள். செட்டியாரும் மனமகிழ்ச்சி யோடு ஸ்வாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டார்.

### இளையாற்றங்குடியில் சாதுர்மாஸ விரதம்

நம் ஸ்வாமிகள் தம் குருநாதருடைய அதிஷ்டானத்தைத் தரிசிக்க இளையாற்றங்குடிக்கு அடிக்கடி செல்வதுண்டு என்பதை முன்பே கூறினேம். 1925-ஆவது வருட சாதுர்மாஸத்தை

யொட்டி ஸ்வாமிகள் அங்கு மூன்று மாதங்கள் தங்கியிருந்தார்கள். அப்பொழுது ஒவ்வொரு நாளும் கைலாசநாதரையும், நித்ய கல்யாணி அம்பிகையையும், தம் குருவின் அதிஷ்டானத்தையும், தவறாது அவர்கள் தரிசனம் செய்தார்கள். ஸ்வாமிகள் தங்குவதற்கு நகரத்தார் விடுதியில் இடம் அமைத்துக் கொடுத்திருந்தார்கள் என்றாலும், அநேகமாக ஸ்வாமிகள் தேவஸ்தானத்தைச் சேர்ந்த தென்னந் தோப்பின் சோலையிலேயே மாலை நேரங்களில் தங்கி வந்தார்கள்.

இளையாற்றங்குடி பிரிவைச் சார்ந்த ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் எடுத்துக் கொண்ட முயற்சியின் பயனாக அந்தச் சிறிய ஊர் இன்று மிகவும் சிறப்பாக விளங்குகிறது. ஆலயத்தின் பழமையான நிலை மாறாதவாறு, திருப்பணிகள் செய்விக்கப்பட்டு, சென்ற 1939-ஆவது வருடம் (பிரமாதி வருடம் வைகாசி மாதம்) கும்பாபிஷேகமும் நடைபெற்றது. சுமார் நூறு வீடுகள் கொண்ட அவ்வூரில் தேவஸ்தானத்தார் சிப்பந்திக்களுக்கெல்லாம் அவரவர்கள் தகுதிகளுக்கேற்றவாறு வீடுகளும், குழாய்மூலம் குடி தண்ணீர் வசதியும், ஊர் நடுவில் ஓர் அழகிய பூங்காவும், அதன் நடுவில் ஒரு ரேடியோ ஒலி பெருக்கியும், இலவச ஆரம்பப் பள்ளியும், தபால் ஆபீசும், பிரசவ விடுதியும், வெளியூர்களிலிருந்து வருவோர்களுக்குத் தங்க வசதியான விடுதிகளும் அமைத்துள்ளார்கள். தேவஸ்தானத்தைச் சேர்ந்த நந்தவனத்தில் அன்றாடம் பூஜைக்கு வேண்டிய புஷ்பங்கள் கிடைக்கும்படி செய்திருப்பதுடன், நூற்றுக்கணக்கான வகையில் பல்வேறு விதங்களான புஷ்பச் செடிகளையும் பழ வகைகளையும் வளர்க்கச்செய்து, அவைகளை மிகவும் ஜாக்கிரதையாகக் கண்காணித்து வருகிறார்கள். இந்த நந்தவனத்தைக் காண்பதே ஓர் கண்காட்சியாக அமைந்திருக்கிறது. அங்கே தனிமையாக ஒரு பசுமடமும் ஏற்படுத்தப்பட்டு அதில் கோசம்ரக்ஷணமும் நடைபெற்று வருகிறது. இளையாற்றங்குடிக் கோவிலின் ஒரு பிரிவைச் சேர்ந்த **ஒக்கூர்** நகரத்தார் இளையாற்றங்குடியில் சுமார் பத்து லக்ஷ ரூபாய் செலவில் ஒரு குளத்தையும் ஓர் விநாயகர் ஆலயத்தையும் அமைத்துள்ளார்கள். அந்தப் பெரிய குளத்திற்கு **பிரளயம்** எனப் பெயரிட்டுள்ளார்கள். நகரத்தார் நாட்டில் குடி தண்ணீருக்கு உதவும் குளங்களுக்கெல்லாம் **ஊருணி** என்பது பெயர். இளையாற்றங்குடியில் வேறு சில ஊருணிகளும் உண்டு. அவ்வூரில் அமைந்துள்ள புராதனமான ஆதி கேசவப் பெருமாள் ஆலயத்திற்கு நகரத்தாரின் மற்றொரு பிரிவைச் சேர்ந்த **கழனி வாசல் நகரத்தார்** மிகச் சிறந்த

முறையில் திருப்பணி செய்துள்ளார்கள். பழமையான ஆலயங்களையும், அவைகளில் அமைந்துள்ள சிற்பங்களையும் நாம் கண்டு உண்மையில் பிரமிக்கக் கூடியவர்களாவோம். அவைகளை அமைத்த தொழிலாளிகளும் சிற்பிகளும் இக்காலத்தில் இல்லையே என மனஸில் வருத்தமும் உண்டாகும். பழைய நிலைக்கு எவ்விதத்திலும் குறையாதவாறு கைவேலைகளைச் செய்யக்கூடிய நுண்ணறிவு படைத்த தொழிலாளிகளும், சிற்பிகளும் இன்றும் நம் நாட்டை விட்டு அகலவில்லையென்பதை இந்த விஷ்ணு ஆலயம் நிரூபிக்கிறது. இக்கோயிலில் சிற்பிகள் பெரிய கல்தூண்களில் தசாவதாரத்தின் உருவங்களைச் சித்திரித்திருக்கிறார்கள்; தூணின் ஒரு புறத்தில் **காந்திமகானின்** உருவத்தையும், அமைத்திருக்கிறார்.

65-ஆவது ஆசாரிய ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தைச் சுற்றிலும் வெளிச்சுவர்களும் பிராகாரங்களும் அமைத்து, தண்ணீர் வசதியும் அமைத்துள்ளார்கள். இளையாற்றங்குடி தேவஸ்தானமும் திறமை வாய்ந்த அதிகாரிகளால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு வருடமும் பங்குனி மாதத்தின் அமாவாசையில் நிகழும் ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஆராதனையைத் தேவஸ்தானத்தார் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

**காங்கிரஸ் தலைவர்கள் ஸ்வாமிகளை பேட்டி கண்டது**

ஸ்வாமிகள் இளையாற்றங்குடியில் விஜயம் செய்திருந்த பொழுது காங்கிரஸ் தலைவர்களான **எஸ். சத்தியமூர்த்தி, டாக்டர் யூ. ராமராவ்** முதலியவர்கள் ஸ்வாமிகளைப் பேட்டி கண்டு, சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் தலைவர்கள் கலந்து கொள்ளப் போவதை அவர்களிடம் தெரிவித்து, அவர்களுடைய ஆசியைப் பெற விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவர்களிடம் ஸ்வாமிகள், சிஷ்யர்களின் நன்மையில் தமக்கு எப்பொழுதும் சிரத்தை உண்டென்றும், அவர்களுக்குத் தம் ஆசியை அளிக்க தாம் சித்தமாய் இருப்பதாகவும் கூறி, ஆனால் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராயினும் பொதுமக்களின் நம்பிக்கையைப் பெற்றால் தான் தேர்தலில் வெற்றிஅடைய முடியுமென்றும், அவர்களால் முடிந்தவரையில் மக்களுக்கும் தெய்வத்திற்கும் பணி செய்ய வேண்டுமென்று தேர்தலில் நிற்பவர்கள் சங்கல்பம் செய்து கொள்ளவேண்டுமென்றும் சொல்லி அனுப்பினார்கள்.

இராயவரத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தபொழுது ஹிந்து பத்திரிகை அதிபர் ஏ. **ரங்கஸ்வாமி ஐயங்காரும்**, தஞ்சை **ஈ. சூரியநாராயண ஐயரும்** ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தனர். காந்தியடிகளின் சத்தியாக்ரகத்தைப் பற்றியும், நம் நாட்டில் அக்காலத்தில் நடைபெற்று வந்த சுதந்தரக் கிளர்ச்சிகளைப் பற்றியும், வெகுநேரம் அவர்கள் ஸ்வாமிகளுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். ரங்கஸ்வாமி ஐயங்கார் ஒப்பற்ற அரசியல் ஞானி; காந்தியடிகளின் உள்ளத்தை நன்கு அறிந்தவர். சில முக்கியமான விஷயங்களில் ஸ்வாமிகளின் அபிப்பிராயத்தை அறியவே ஐயங்கார் அப்பொழுது அங்கு வந்தார். சம்பாஷணைக்குப் பிறகு ஸ்வாமிகள் அளித்த சில ஆலோசனைகளால் தாம் மிகவும் பயனடைந்ததாகவும், அந்த ஆலோசனைகளின்படி நடந்துகொள்வதாகவும் அவர் தெரிவித்தார். ஐயங்கார் விடைபெற்றுக் கொள்ளும் முன்னர் ஸ்வாமிகள் ஐயங்காரிடம் ஹிந்து பத்திரிகையை நடத்தி வரும் விவரங்களையெல்லாம் கேட்டறிந்து, அதன் சேவையைப் பற்றித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்துப் பத்திரிகை நடத்துவோர் இலாபத்தைக் கருத வேண்டியது அவசியமேயானாலும் மனஸில் சரியென்று தோன்றுவதை மறைக்காமல் வெளியிட ஒரு பொழுதும் பின் வாங்கக்கூடாதென்றும், எந்த நிலையிலும் தெய்வ நம்பிக்கையை இழக்கலாகாதென்றும் கூறி, ஐயங்காரை அனுக்ரகித்து விடை கொடுத்தார்கள்.

**ஒரு முஸ்லிம் பக்தர்**

*1926*-ஆவது வருடம் ஜனவரி மாதத்தில் ஸ்வாமிகள் ராஜா மடத்திற்குச் சமுத்திர ஸ்நானத்திற்காகச் சென்றபொழுது, புதுக்கோட்டைச் சீமையைச் சேர்ந்த **கறம்பக்குடியில்** ஒரு நாள் தங்கினார்கள். அவ்விடமிருந்து **பட்டுக்கோட்டைக்கு** அடுத்த முகாம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கறம்பக்குடி ஜனங்கள் ஸ்வாமிகளை வழியனுப்ப பெரிய கூட்டமாக ஊர் எல்லை வரை வந்தனர். அக்கூட்டத்தில் சில இஸ்லாமியர்களும் காணப்பட்டனர். அவர்களில் ஒரு இஸ்லாமியர் மாத்திரம் ஸ்வாமிகளின் பல்லக்கைப் பிடித்துக்கொண்டு சுமார் மூன்று மைல்கள்வரை தொடர்ந்து வந்து கொண்டிருந்தார். இதைக் கவனித்த ஸ்வாமிகள் பல்லக்கை நிறுத்தும்படி கூறி, அந்த இஸ்லாமியரை அழைத்து விசாரித்தார்கள். அவர் ஸ்வாமிகளிடம் தம் சொந்த விஷயங்கள் பலவற்றைத் தெரிவித்துவிட்டு, ஸ்வாமிகளின் பேரில் தாம் இயற்றிய சில பாடல்களையும், ஒரு பூமாலையையும், மற்றும்

தாம் கொண்டுவந்த பழங்கள், கற்கண்டு, வாசனைத் திரவியம், பவுன் காணிக்கை, இவைகளையும் ஸ்வாமிகளின் பாதங்களின் சமீபத்தில் சேர்ப்பித்தார். ஸ்வாமிகள் அவைகளை அன்புடன் ஏற்றுக்கொண்டு அவர் எழுதிய பாடல்களை அவரையே படிக்கும்படி கேட்க, அவரும் அப்பாடல்களைப் பாடி அவற்றிற்கு விளக்கமும் கூறினுர். ஸ்வாமிகள் தமது வழக்கமான புன்சிரிப்புடன் அப்பாட்டுக்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த முஸ்லிம் சற்று நேரம் மௌனமாக இருந்து, பிறகு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினுர். பின்னர் அவர் ஸ்வாமிகளைப் பார்த்து, "என் கண்களுக்கு ஸ்வாமிகள் அல்லாவின் உருவமாகவே தோன்றுகிறுர்கள்; மனிதன் உலக பாசங்களிலிருந்து விடுபடுவதற்கு ஸ்வாமிகளைப் போன்ற மகான்களின் தரிசனமே போதும். வெகுநாட்கள் ஸ்வாமிகள் அடியார்களுக்குத் தரிசனம் கொடுத்து அவர்களை உய்விக்கச் செய்ய வேண்டும்; ஏகாந்தமான தரிசனத்தை வேண்டியே நான் பல்லக்குடன் அவ்வளவு தூரம் ஓடி வந்தேன்." என்று தெரிவித்தார். மேலும் அவர் ஆனந்தக் கண்ணீர் விடுத்து உள்ளம் உருகி அழுதார். ஓர் உண்மை பக்தருடைய நிலை அவரிடம் பிரதிபலித்தது. மடத்தின் சிப்பந்திகள் அந்தப் பக்தரது நிலையைக் கண்டு ஆச்சரியமடைந்தனர். ஸ்வாமிகள் கருணை கூர்ந்து அவரைத் தேற்றி அவருக்குப் பரிபூரண அனுக்ரகத்தைச் செய்து விடைகொடுத்தனுப்பினுர்கள்.

**சேத் ஜமன்லால் பஜாஜும், ராஜாஜியும் ஸ்வாமிகளைத் தரிசித்தது**

1926-ஆவது வருடம் மார்ச் மாதம் ஸ்வாமிகள் திருவானைக்கா ரங்கூன் ரெட்டியார் சத்திரத்தில் முகாம் செய்திருந்தார்கள். அச்சமயம் **சேத் ஜமன்லால் பஜாஜ்** என்ற காங்கிரஸ் பிரமுகர் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்துவந்தார். அவருக்கு ஸ்வாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்ற அவா இருந்தது. அவர் தம் அவாவைத் திருச்சியில் அக்காலத்தில் காங்கிரஸ் தலைவராயிருந்த **டாக்டர் டி. வி. ஸ்வாமிநாத சாஸ்திரிகளிடம்** தெரிவிக்க, அவரும் மடத்தின் அதிகாரிகளைக் கலந்துகொண்டு அவர் ஸ்வாமிகளை சந்திப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார். குறிப்பிட்ட அந்நாளில் **பஜாஜ், சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார், டாக்டர் சாஸ்திரி,** மடத்தில் நெருங்கிய தொடர்புள்ள வக்கீல் **வி. ஐயராம ஐயர்** ஆகியோர் ஸ்வாமிகள் தங்கி இருந்த அந்த ஜாகைக்கு வந்தனர். பஜாஜ், சாஸ்திரி, வக்கீல் ஐயர் இவர்கள் மட்டும் ஸ்வாமிகள் இருந்த சத்திரத்தின் மேல் மாடிக்

குச் சென்றனர். இவர்கள் ஸ்வாமிகளை வணங்கி அமர்ந்தவுடன் இன்னும் யாராவது வந்திருக்கிறார்களா வென்று ஸ்வாமிகள் கேட்டார்கள். ராஜாஜியும் வந்திருப்பதாகவும், அவர் வெளியி லிருப்பதாகவும் அவர்கள் தெரிவித்தார்கள். ஸ்வாமிகள் வக்கீல் ஜயராம ஐயரை அனுப்பி, ராஜாஜியை அழைத்துவரும்படி கூறி னார்கள். அப்பொழுது ராஜாஜியும் ஸ்வாமிகள் அமர்ந்திருந்த சத்திரத்தின் மேல்மாடிக்குச் சென்று, ஸ்வாமிகளை முறைப்படி வணங்கிக் கீழே அமர்ந்தார். ஸ்வாமிகள் அவரைப் பார்த்து அவர் கீழே தங்கி இருந்ததற்கு காரணத்தைக் கேட்க, ராஜாஜி தாம் ஸ்நானம் செய்து சரீர சுத்தி செய்துகொண்டுதான் தரிசனத் திற்கு வரவேண்டுமென வெளியில் தங்கியிருந்ததாகக் கூறினார். அப்பொழுது ஸ்வாமிகள் அவரைப் பார்த்து, தேச சேவையில் ஈடுபட்டவர்களுக்கு அடிக்கடி சரீர சுத்தி செய்துகொள்ள அவ காசம் கிடைக்காதென்றும், சலியாத உழைப்பே அவர்களது விரதமாக அமைந்திருப்பதென்றும், தூய்மையான மனம் படைத்த ராஜாஜியைப் போன்றவர்கள் எந்தச் சமயத்திலும் தம்மிடம் வருவதற்குத் தகுதியுள்ளவர்களாக இருக்கிறார்க ளென்றும் கூறினார்கள். ராஜாஜியும் மனம் குளிர்ந்தவராகி, மேலே தொடர்ந்த சம்பாஷணையில் ஈடுபட்டார். தேசத்தின் விடு தலைப் போராட்டத்தைப் பற்றியும், கதர், ஹிந்திப் பிரசாரம், காந்தியடிகளின் தேசசேவை இவைகளைப் பற்றியும், நீண்ட நேரம் சம்பாஷணை நடைபெற்றது. ஸ்வாமிகள் அந்தச் சம்பாஷணைகளில் ஆர்வத்துடன் கலந்துகொண்டு அத்தலைவர்களுக்குத் தம் அபிப் பிராயங்களையும் எடுத்துக் கூறினார்கள். ஸ்வாமிகளின் தரிசனத் தால் ஆத்மிகத் துறையிலும், லௌகிகத் துறையிலும், அவர்கள் மிகப் பெரிய பயனை அடைந்ததாகக் கூறிவிட்டு, ஸ்வாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டனர். ஸ்வாமிகள் அப்பொழுது கதர் இயக்கத்திற்காக ரூபாய் ஆயிரம் நன்கொடையளித்தார்கள்.

**உடையார் பாளையம் விஜயம்**

மேற்கூறியவாறு சுமார் ஒரு வருட காலம் ஸ்வாமிகள் நகரத் தார் நாட்டிலும், புதுக்கோட்டைச் சம்ஸ்தானத்திலும் விஜயம் செய்துவிட்டு, திருச்சி மார்க்கமாக 1926-ஆவது வருடம் ஜூலை மாதம் **உடையார்பாளையத்திற்கு** விஜயம் செய்தார்கள். உடையார் பாளையம் சம்ஸ்தானத்திற்கும் நமது மடத்திற்கும் பரம்பரை யாகப் பிரிக்க முடியாத தொடர்பு ஏற்பட்டிருந்தது. மடம் காஞ்சி

யிலிருந்து கும்பகோணத்துக்கு மாற்றப்பட்டபோது, அப் பொழுதிருந்த ஆசார்ய ஸ்வாமிகள் உடையார் பாளையத்தில் தங்கிச்சென்ற செய்தி முன்பே கூறப்பட்டது. அந்தக் காலத்தில் உடையார்பாளையம் சம்ஸ்தானம் தஞ்சை மகாராஷ்டிர மன்னர் களின்கீழ் ஓர் பாளையப்பட்டாகவிருந்தது. அதை ஆண்ட தலை வர்கள் அம்மன்னர்களின் கீழ் நாட்டைக் காக்கும் இராணுவ அதிகாரிகளாக அமர்ந்திருந்தார்கள். பின்னர் அவர்கள் சிற்றரசர் களின் நிலைமையைப் பெற்று ஜமீன்தார்கள் என அழைக்கப் பட்டனர். அவர்கள் ஸ்ரீ காஞ்சி காமாக்ஷியம்மனுக்குத் தொன்று தொட்டே அடிமைகள். அதனால்தான் அந்தச் சம்ஸ்தானாதி பதிகள் தம் பெயர்களைக் **கச்சி** சின்ன நல்லப்பன், **கச்சி** யுவரங் கப்பன் என்று **கச்சிப்** பெயரைக்கூட்டி அமைத்துக் கொண்டிருந் தார்கள். இந்தச் சம்ஸ்தானாதிபதிகள் நல்ல கலா ரசிகர்கள். சங்கீதத்தை ஆதரித்த அரச குடும்பங்களில் உடையார்பாளை யத்தை மிகவும் சிறப்பாகக் கூறலாம். ' பிற்காலத்தில் (சுமார் 90 வருஷங்களுக்கு முன்கூட) கனம் கிருஷ்ணய்யர் என்னும் சங்கீத வித்வான் அவர்களது ஆஸ்தானத்தில் அமர்ந்திருந்து தமிழில் பல கீர்த்தனைகளை இயற்றியுள்ள செய்தி உலகம் அறிந் ததே ; அவைகளில் பெரும்பான்மை கும்பகோணம் ஸ்ரீ சார்ங்க பாணி சுவாமி பேரில் இயற்றப்பட்டவைகளாகும்.

ஸ்ரீ காமகோடி பீடத்தின் சங்கரமடமானது காஞ்சியிலிருந்து சோழ மண்டலத்திற்கு விஜயமாகப் போவதை அறிந்த உடை யார்பாளையத்தின் அக்காலத்து அதிபர் சுவாமிகளின் பிரயாணத் திற்கு வேண்டிய பந்தோபஸ்துகளை யெல்லாம் செய்துகொடுத்து, உடையார்பாளையத்திலேயே மடத்தைச் சிலகாலம் தங்க ஏற்பாடு செய்திருந்தார். காஞ்சியில் காமாக்ஷியம்மன் ஆலயத்திலிருந்த **பங்காரு காமாக்ஷியம்மன்** விக்கிரகத்தை, அப்பொழுது முகம் மதியர்களிடமிருந்து காப்பதற்காக ஆசாரிய சுவாமிகள் தம்முடன் எடுத்துவந்ததாகக் கூறப்படுகிறது. பங்காரு என்பது பொன் னைக் குறிக்கும் தெலுங்குமொழி. இன்றும் காஞ்சீபுரம் காமாக்ஷி அம்மன் ஆலயத்தில் பங்காரு காமாக்ஷியம்மன் சன்னிதி காலியாக இருந்து வருவதைக் காணலாம். அந்த அம்மனுடன் அக்காலத்து ஆசார்ய சுவாமிகள் உடையார்பாளையத்தில் தங்கியிருப்பதை அறிந்த தஞ்சை மகாராஷ்டிர மன்னர் **பிரதாபசிம்மன்** ஸ்வாமி களைத் தஞ்சைக்கு அழைத்தார். மன்னரின் விருப்பப்படி தஞ்சை யில் சிலகாலம் ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது, இந்தப் பங்காரு காமாக்ஷியம்மன் விக்கிரகத்தைத் தஞ்சை மேல **வீதியில்**

மன்னரால் கட்டுவிக்கப்பெற்ற ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தார்கள். இந்த அம்மனைப் பூஜிக்கும் பெருமைவாய்ந்தவர்களான வடமர் வகுப்பைச் சேர்ந்த அந்தணர்கள் அப்பொழுது காஞ்சியிலிருந்து தஞ்சைக்குக் குடியேறினார்கள். சங்கீதக் கலையின் மும்மணிகளில் ஒருவராக விளங்கிய **சியாமா சாஸ்திரிகள்** இந்த மரபைச் சேர்ந்தவர்கள் என்பதை இவ்விடம் குறிப்பிடவேண்டும். இவர் காமாக்ஷி அம்மன் பேரில் பல கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். உடையார்பாளையத்திலுள்ள ஆலயத்திலும் பங்காரு காமாக்ஷியம்மன் வைக்கப்பட்டிருந்த மூலஸ்தானமானது இன்றும் காலியாகவே இருந்து வருகின்றது. அப்போதிருந்த ஆசார்ய சுவாமிகளுக்குத் தஞ்சையில் வசிக்க மனமில்லாததால், அவர்களுக்காகக் கும்பகோணத்தில் காவிரியின் தென் கரையில் மன்னரது மந்திரியான **டபீர் பந்த்** என்பவரால் ஒரு மடம் கட்டுவிக்கப்பெற்றது. அப்பொழுது அந்த அமைச்சர் மடத்தைச் சுற்றிலும் அக்கிரகாரம் அமைத்து, அதை வேதங்களைக் கற்றறிந்த அந்தணர்களுக்குத் தானமாகக் கொடுத்தார். அந்த அக்கிரகாரம் அந்த அமைச்சர் பெயரால் இன்று **டபீர்** தெருவென வழங்கப்படுகிறது. அன்றுமுதல் ஸ்ரீ காமகோடி பீடத்தின் நிர்வாக ஸ்தானம் கும்பகோணத்தை அடைந்தது. இவைகளெல்லாம் நிகழ்ந்தது சுமார் 200 வருடங்களுக்கு மேலாகும். அன்றுமுதல் உடையார்பாளையம் ஜமீன்தார்களும் மடத்திற்கு வேண்டிய பணிகளை எல்லாம் அவ்வப்போது புரிந்து வந்தனர்.

நம் ஸ்வாமிகள் 1926-ஆம் வருடம் உடையார் பாளையத்திற்கு விஜயம் செய்தபோது **ஜமீன்தார்** தமது பரம்பரைக்கு ஏற்றவாறு ஸ்வாமிகளுக்குச் சீரிய முறையில் வரவேற்பளித்து, சுமார் 15 நாட்கள் தமது அரண்மனையிலும் அவ்வூர் ஆலயத்திலும் அவர்கள் தங்க வசதிகள் செய்துகொடுத்து, பாதபூஜை, பிக்ஷை, ஊர்வலம் முதலியவைகளை நடத்தி வைத்தார். மேலும் அவர், ஆறு மாதங்களே நிறைந்த ஒரு ஆண் யானைக்குட்டியையும், இரண்டு குதிரைகளையும், ஒரு ஒட்டகத்தையும், பசுக்களையும் அப்பொழுது மடத்திற்குக் காணிக்கைகளாக அளித்தார். பல ஆண்டுகள் மழையையே காணாத அந்த ஸம்ஸ்தானப் பகுதியில் அவ்வாண்டு நல்ல மழை பொழிந்து பயிர் செழித்துப் பலன் பெருகி மக்களுக்கெல்லாம் களிப்பை அளித்தது.

அவ்வருஷத்து வியாஸ பூஜை சாதுர்மாஸ சங்கல்பத்தை ஸ்வாமிகள் சிதம்பரத்துக்கு அடுத்த **காட்டுமன்னார் கோயிலில்** நடத்தினார்கள். அங்கிருந்து கிளம்பி **திருப்பாதிரிப்புலியூர், மஞ்சக்**

குப்பம், கடலூர், புதுப்பாளையம் இவ்விடங்களிலுள்ள பக்தர்களின் பிரார்த்தனைகளுக்கிணங்கி ஆங்காங்குத் தங்கி, ஸ்வாமிகள் திருப் பாதிரிப்புலியூருக்கு வந்து அங்குக் கடியாபட்டி தர்மபூஷணம் தி. நா. நாச்சியப்ப செட்டியார் தரும சத்திரத்தில் 1926-ஆவது வருடத்தில் நவராத்திரி பூஜையை மிகவும் விமரிசையாக நடத்தி னார்கள். அந்த ஊருக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தது அதுவே முதல் தடவையானதால், ஆயிரக் கணக்கான பக்தர்கள் ஒவ்வொரு நாளும் பூஜையைத் தரிசிக்கச் சத்திரத்தில் கூடி னார்கள். ஒன்பது நாட்களும் ஊர் முழுவதும் திருவிழாக் காட்சி யாக விளங்கியது. கடியாபட்டி தர்மபூஷணம் செட்டியார் ஸ்வாமிகளின் பூஜைக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுத்து, ஒன்பது நாட்களும் கூடவே இருந்து பணி ஆற்றினார். விஜய தசமி யன்று ஓர் பெரிய ஊர்வலத்தையும் செட்டியாரவர் களும் மற்றும் ஊர் மக்களும் ஏற்பாடு செய்தார்கள். அன்றிரவு ஸ்வாமிகள் அவ்வூரின் முக்கிய வீதிகளின் வழியே பவனி வந்த காட்சி மிகச் சிறப்பானதொன்றாகும்.

சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூரில் தங்கியிருந்தபோது தமிழில் நல்ல பாண்டித்யம் பெற்றவரும், பல வருடங்கள் காங்கிரஸில் ஈடுபட்டுத் தேச சேவை புரிந்தவரும் காந்திமகான் சரித்திரத்தை செய்யுள்களாக இயற்றியவருமான பண்டிதை **அசலாம்பிகை அம்மையார்** சுவாமிகளின் பேரில் ஐந்து செய்யுள் களை இயற்றி அவற்றை அவர்களின் முன்னிலையில் வாசித்து வழங்கினார். அந்த அம்மையார் சுவாமிகளின் தந்தையாரிடம். கல்வி கற்ற பேற்றைப் பெற்றவர். அக்காலத்தில் குழந்தையா யிருந்த நம் ஸ்வாமிகளை அவர் அன்புடன் பாராட்டியதுண்டு. ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தபொழுது அம்மையாருக்கு உடல் நலம் மிகவும் குன்றியிருந்தது. ஆயினும் தாம் முன் அறிந்த **சுவாமிநாதன்** இப்பொழுது குருநாதன் வடிவமாக விளங்கு வதைக் கண்டு பெரிதும் களித்து அவரை வணங்கி ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார். அப்பொழுது மௌன நிலையிலிருந்த ஸ்வாமிகள் தம் அருள் பெருகும் பார்வையினால் அந்த அம்மையாரை அனுக்கிரகித்தார்கள்.

**புதுச்சேரி விஜயம்**

ஸ்ரீ காமகோடி பீடம் ஆசார்ய ஸ்வாமிகள் புதுச்சேரிக்கு விஜயம் செய்யும் போதெல்லாம் பிரெஞ்சு சர்க்கார் ஸ்வாமி களுக்குத் தக்க பல மரியாதைகள் செய்வது வழக்கம். 1926-ஆம்

வருடம் டிசம்பர் மாதம் ஸ்வாமிகள் புதுச்சேரிக்கு விஜய மானுர்கள். அப்பொழுது சர்க்கார் செலவில் ஊர் முழுவதும் தோரணங்களாலும் ஆங்காங்கு அமைக்கப்பெற்ற ஆர்ச் வளைவு களாலும் பந்தல்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. போலீஸ் படைகளின் அணிவகுப்புக்களுடனும் சர்க்கார் பாண்டு வாத்தியங்களுடனும் எல்லா உயர்தர இந்திய உத்தியோகஸ்தர் களும் மத வேற்றுமையின்றிப் பல்லாயிரக்கணக்கான பொது மக்களும் நகரின் எல்லையில் ஸ்வாமிகளை வரவேற்ருர்கள். மிகப் பெரியதொரு ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. பிரெஞ்சு கவர்னர் தம்பதிகளும், சேர்மன், மேயர் முதலான ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் நகரின் நடுவில் ஒரு முக்கிய சந்திப்பில் நின்று ஸ்வாமிகளை இந்து முறைப்படி கைகூப்பி வணங்கி, அவர்களின் தரிசனத்திஞல் தாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்ததாகவும், ஜாதிபேதமின்றி நகரமக்கள் அன்று பெரும் உற்சாகத்தைக் காட்டுவதாகவும் தெரிவித்தார்கள். ஸ்வாமி களும் அவர்களெல்லோரது பிரீதிக்கும் தம் சந்தோஷத்தைப் புன்னகையுடன் தெரிவித்தார்கள். சுமார் ஒரு வாரம் ஸ்வாமிகள் புதுச்சேரியில் தங்கியிருந்தார்கள். சேர்மன் மேயர் முதலான பிரெஞ்சு உத்தியோகஸ்தர்களுக்கு ஸ்வாமிகள் தம் ஜாகையில் ஒரு நாள் தனியாக பேட்டியளித்தார்கள். ஸ்வாமிகள் புதுச்சேரியில் தங்கியிருந்தபொழுது ஸா. குப்புசாமி ஐயர் முதலான சிஷ்யர்களும் மற்றும் பொதுமக்களும் மிகவும் உற்சாகத்துடன் மடத்தின் பணியில் ஈடுபட்டிருந்தனர். உள்ளூரி லிருந்தும் வெளியூர்களிலிருந்தும் ஸ்வாமிகளைத் தரிசிக்க ஆயிரக் கணக்கான மக்கள் அன்ருடம் புதுச்சேரியில் வந்து கூடினர். அன்றைக்குச் சுமார் 20 வருடங்களுக்கு முன் இந்தப் பீடத்தில் அமர்ந்திருந்த 66-ஆவது ஆசார்ய சுவாமிகள் அவ்வூருக்கு விஜயம் செய்திருந்ததை ஜனங்கள் அப்பொழுது நினைவுக்குக் கொண்டு வந்தார்கள். ஸ்வாமிகள் புதுச்சேரியில் விஜயம் செய்து கொண்டிருந்த காலத்தில் திருவாரூரில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை இங்குக் கூறுவது இன்றியமையாதது.

**திருவாரூர் தேர் திருப்பணி**

இன்றைக்குச் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர் நம் தமிழ் நாட்டின் திருத்தலங்கள் பலவற்றில் அமைந்திருந்த அழகிய தேர்கள் தீய எண்ணம் கொண்ட சிலரால் தீயிட்டுக் கொளுத்தப் பட்டன. புகழ்பெற்ற பல தலங்களுள் அமைந்திருந்தவைகளும்

அழகிய வேலைப்பாடுகளுடன் கூடினவைகளுமான நம் நாட்டுத் தேர்கள் பல இத்தீச் செயலால் சாம்பலாயின. இவைகளைக் கொளுத்தியவன் ஓர் சிற்பி என்று சிலரும், பிற மதத்தினனென்று சிலரும், கடவுள் நம்பிக்கை இல்லாத யாரோ ஒருவன் என்று வேறு சிலரும் கூறிவந்தனர். போலீஸாரும் தேர்களைக் கொளுத்தியவன் என்று ஒருவனைக் கைது செய்து அவன்மீது நடவடிக்கையும் எடுத்துக்கொண்டனர். விசாரணையில் அவன் ஒரு பைத்தியக்காரனென முடிவு செய்யப்பட்டது. எந்த நோக்கத்துடன் இச் செயலைச் செய்தவன் இதில் ஈடுபட்டிருந்திருப்பினும் நாட்டின் புராதன கலைக்கும், அக்கலையின் சின்னங்களுக்கும் பெரியதோர் பாதகத்தை அவன் விளைவித்து விட்டான்.

நம் ஆலயங்களின் தேர்களில் மிகுந்த அழகிய வேலைப்பாடுகளை நாம் காண்கின்றோம். இவைகளை மனிதன்தான் நிர்மாணித்தானோ என்னும் ஐயம்கூட நமக்குச் சில சமயங்களில் தோன்றி விடுகின்றது. ஆகமங்களையும், புராணங்களையும் நன்குக் கற்றிருந்த சிற்பிகள் தங்கள் கைத்திறனை எவ்வளவு தூரம் அவைகளில் காட்டியுள்ளார்களெனச் சற்று நாம் சிந்தனையும் செய்து பார்க்கிறோம்.

**திருவாரூர்** க்ஷேத்திரத்தில் ஸ்ரீ தியாகராஜர் ஆரோகணித்துப் பவனி வரும் தேர் நம் நாட்டுத் தேர்கள் யாவற்றிலும் மிகப் பெரியதாகும். வேலைப்பாட்டிலும் அதற்கிணையாக வேறு எதையும் கூறமுடியாது. திருவாரூரைப் பற்றிக் குறிப்பிடும்போது, '**திருவாரூர்த் தேர் அழகு**' என மக்கள் அவ்வூரைப்பற்றிப் பெருமையாகக் கூறுவார்கள். அக்காலத்தில் தீக்கு இலக்கான தேர்களில் திருவாரூர்த் தேரும் ஒன்று. தீயிடப்பட்ட அந்தத் தேரானது சுமார் ஒரு மாதம் எரிந்து கொண்டிருந்ததாக நேரில் கண்டவர் கூறியுள்ளனர். பழமையானதும் அழகு நிரம்பியதுமான அந்தத் தேர் அழிந்த செய்தி தஞ்சை ஜில்லா மக்களை வெகுவாகப் புண்படுத்தி விட்டது. ஸ்ரீ தியாகேசர் பணியில் நெருங்கி, ஈடுபட்டு வரும் **வடபாதிமங்கலம் குடும்பத்தாரும்**, மற்றும் தஞ்சை ஜில்லாப் பிரபல மிராசுதார்களும் எவ்வகையிலாவது பழைய தேருக்கு நிகராகப் புதிய தேர் ஒன்றை அமைத்துவிட வேண்டுமென்ற எண்ணம் கொண்டனர். அந்தத் தேர் அழிந்த செய்தி அறிந்த நம் ஸ்வாமிகளும் புதிய தேர் ஒன்றை நிர்மாணிப்பதில் சிஷ்யர்கள் யாவரும் தக்கவாறு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென வற்புறுத்தி வந்தார்கள்.

இந்தப் பணியில் பெரும் பங்கெடுத்துக் கொண்டவர்களில் **எழுலூர் சுப்பராய வாத்தியார்** என்ற வேதியரைப்பற்றி முதன்மையாகக் குறிப்பிடவேண்டும். புரோகிதத்தைப் பரம்பரைத் தொழிலாகக் கொண்ட அவர் தமக்கு இருந்த பூர்விகச் சொத்துக்களில் பெரும் பாகத்தை விற்று ஆலயத் திருப்பணிகளில் செலவிட்டு வந்தார். எங்குச் சென்றாலும் அவர் தமக்கு வேண்டிய உணவைத் தாமே தயாரித்துக் கொள்வார்; அவர் நம் ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்திகொண்டு அடிக்கடி அவர்களைத் தரிசிக்க வருவார். இந்தத் தேர்த் திருப்பணியில் அவர் ஈடுபட்டு, ஸ்வாமிகளை 1926-ஆவது வருடம் அக்டோபர் மாதத்தில் திருப்பாதிரிப் புலியூரில் தரிசித்து, தியாகேசர் தேர்த் திருப்பணிச் சம்பந்தமாக சிஷ்யர்களுக்கு ஓர் ஸ்ரீமுகத்தையும், ஸ்வாமிகள் மனமுவந்து அளித்த ரூபாய் 1001 நன்கொடையையும் பெற்றுக் கொண்டு, பின்னர் தஞ்சை ஜில்லாவில் இத் திருப்பணிக்கென அன்பர்களிடம் தொகைகளை வசூல் செய்யத் தொடங்கினார். ஆரூர்த் தேவஸ்தான மானேஜர் **நரஸிம்மய்யர்** முதலான நண்பர்களின் ஒத்துழைப்புடன் 6 மாதங்களுக்குள் இத் திருப்பணிக்கென அவர் சுமார் ஒரு லக்ஷம் ரூபாய் சேர்த்து விட்டார். 1927-ஆவது ஆண்டில் ஸ்வாமிகள் மலையாளம் ஜில்லாவில் விஜயம் செய்திருந்தபொழுது தேருக்கு வேண்டிய மரம் முதலியவற்றைப் பெறுவதற்கும் ஸ்வாமிகள் உதவி அளித்தார்கள்.

தேர்த் திருப்பணியானது வெகு மும்முரமாக நடைபெறத் தொடங்கிற்று. நூற்றுக்கணக்கான கைதேர்ந்த தொழிலாளிகள், எஞ்சியுள்ள நம் நாட்டுச் சிற்பிகளின் மேற்பார்வையில், சுமார் இரண்டு வருடங்களுக்குள் புதுத் தேரை நிர்மாணித்து விட்டார்கள். திருப்பணி வேலைகள் நடைபெற்றுக்கொண்டிருந்தபொழுது ஸ்வாமிகள் அம் முயற்சியில் மிகுந்த அக்கறை கொண்டு அடிக்கடி அதைப் பற்றி விசாரித்த வண்ணமாயிருந்தார்கள். தேர் வேலை முடிந்த அடுத்த வருடம் தேருக்கு வெள்ளோட்டம் விடப்பட்டது. இஃது ஓர் வியக்கத்தக்க சாதனையாகும். மக்களும் திருவாரூரின் புகழை நிலைநாட்டினார்கள்.

இந்தத் திருப்பணியில் ஈடுபட்ட சுப்பராய வாத்தியார் தமது பிற்காலத்தில் துறவு பூண்டு **ஸ்ரீ நாராயண பிரம்மேந்திரர்** என்னும் பெயருடன் சில வருடங்கள் வாழ்ந்து வந்தார். அவர் துறவறத்தை மேற்கொண்டிருந்த பொழுதும், ஆலயத் திருப்பணியில் அவருக்கு இருந்த பற்று அவரை விட்டு விடவில்லை. ஆண்டா நல்லூர், நரிவெளி, மருதவனஞ்சேரி இவ்விடங்களில் திருப்

பணிகள் செய்து கும்பாபிஷேகங்களையும் செய்தார். 1948-ஆவது வருடம் ஜனவரி மாதம் 10-ஆம் தேதி மருதவனஞ்சேரி என்ற கிராமத்தில் ஆசனத்தில் அமர்ந்தவாறே (தமது 77-ஆவது வயதில்) **தியாகேசா** எனக் கூறிக்கொண்டே அவர் ஈசனது பரம பதத்தை அடைந்தார்.

**வடவாம்பலத்தில் 58-ஆவது ஆசார்ய ஸ்வாமிகளின் பிருந்தா வனப் பிரதிஷ்டை**

விழுப்புரத்திற்குத் தெற்கேயுள்ள **சேந்தனூர்** ரயில் நிலையத்திற்குக் கிழக்கே **வடவாம்பலம்** என்னும் சிற்றூர் உண்டு. ஸ்வாமிகள் புதுச்சேரிக்கு விஜயம் செய்யும் முன்னர் அவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீ காமகோடி பீடத்தின் 58-ஆவது ஆசார்யர்களான **ஆத்மபோதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** அந்த ஸ்தலத்தில் ஸித்தி அடைந்திருப்பதாக மடத்தின் குரு பரம்பரை கூறுகிறது. ஆத்மபோதர் விருத்தாசலத்தைச் சேர்ந்தவர் என்றும், பாரத பூமி முழுவதும் யாத்திரை செய்து அவர் பல வருடங்கள் காசியில் தங்கியிருந்தார் என்றும் ஸ்ரீருத்திர மந்திரத்திற்கு அவர் ஓர் உரை இயற்றியுள்ளாரென்றும், 52 வருடங்கள் பீடத்தில் அமர்ந்திருந்தாரென்றும் மேலும் அந்தக் குரு பரம்பரை கூறுகிறது. ஆனால் அந்த ஸ்வாமிகள் அவ்வூரில் ஸித்தியடைந்த இடம் இன்னதெனக் குறிப்பிட்டுக் கூறுவதற்குள்ள அடையாளங்கள் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்துவிட்டன. அந்த இடத்தைக் கண்டுபிடிப்பதற்காக நம் ஸ்வாமிகள் அந்தக் கிராமத்தின் தோப்புக்கள், வயல்கள் முதலிய எல்லாவற்றையும் சுற்றி வந்து, கடைசியில் ஓர் இடத்தைக் குறிப்பிட்டு, அவ்விடத்தில் மண்ணை வெட்டிப் பார்க்கும்படி கட்டளையிட்டார்கள். அப்பொழுது கிராம மக்கள் பலர் ஸ்வாமிகளைப் பின் தொடர்ந்து வந்தனர். அவர்கள் வேறு பல காரியங்களுக்காக முன் பல முறை அவ்விடம் மண்ணை வெட்டிப் பார்த்திருப்பதாகவும், ஆனால் ஸித்தியின் அடையாளம் எதுவும் அங்கு அவர்களுக்குத் தென்படவில்லையென்றும், ஓர் கிணறு மட்டும் அதன் பக்கத்தில் தென்பட்டதென்றும் கூறினர். ஆயினும் ஸ்வாமிகள் அவர்களை வற்புறுத்தி அதே இடத்தில் மேலும் மண்ணைத் தோண்டிப் பார்க்கும்படி கட்டளையிட்டார்கள். பலர் மண்ணை வெட்டி கொண்டு அப்பொழுது பூமியைப் பறித்தார்கள். அவ்விடம் சிறிது ஆழத்தில் ஓர் கபால அஸ்தி (மண்டையோடு) தென்பட்டது. அப்பொழுது மண்ணைப் பறித்துக் கொண்டிருந்த **குமாரமங்கலம்**

**சாம்பமூர்த்தி சாஸ்திரி** என்னும் வைதிக அந்தணர் ஒருவர் மெய்ம் மறந்து கீழே சாய்ந்துவிட்டார். அவர் மற்றவர்களைப் பார்த்து, "நிறுத்து, நிறுத்து" என உரக்கக் கூறினார். வெகு நேரம் சென்று அவருக்குச் சுய அறிவு வந்தது. கூட்டத்தில் யாவரும் அவர் மயங்கிய நிலையில் அடைந்த அநுபவத்தைப் பற்றி பின்னர் அவரிடம் கேட்க, அவர் தாம் கண்ட ஓர் அற்புதக் காட்சியைக் கீழே கண்டவாறு விவரித்தார்.

"காஷாய வஸ்திரம் உடுத்து, கையில் தண்டம் ஏந்தி, நெற்றியில் விபூதி அணிந்து, கழுத்தில் தொங்கும் ருத்திராக்ஷ மாலையுடன் ஆகாயத்தை அளாவிநிற்கும் துறவியின் உருவம் ஒன்று என் கண் முன் தோற்றம் அளித்தது. அந்த உருவத்தின் முன் ஆயிரக்கணக்கான அந்தணர்கள் உபநிஷத் பாராயணம் செய்வதைக் கண்டேன். அந்தப் பெரிய ஸ்வரூபம் அந்தப் பாரா யணத்தை நிறுத்தும்படி உத்திரவிட நானும் வேகமாகத் தாவி நிறுத்தும்படி கூறினேன். மேலும் 'தோண்டாதே தோண் டாதே' என்று மெல்லிய சொல்லில் அவ்வுருவம் சொல்லிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். பிறகு அந்த உருவம் வரவரச் சிறிதாகிக்கொண்டே எனது கண்களின் தோற்றத் திலிருந்து மறைந்துவிட்டது. அதன்பின், 'சதாசிவம் சதாசிவம்' என்று யாரோ ஜபித்துக் கொண்டிருந்த ஒலி மட்டும் காதில் விழுந்து கொண்டிருந்தது. அதுவும் சற்று நேரத்தில் நின்று விட்டது" என்றார். அவ்வந்தணரது இந்த அநுபவத்தைக் கேட்ட அவ்வூர் ஜனங்கள் யாவரும் மிகவும் ஆச்சரியம் அடைந்து நம் ஸ்வாமிகளை வணங்கி, மேலே செய்ய வேண்டுவனபற்றிக் கட்டளையிட வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். பின்னர் ஸ்வாமிகள் விருப்பத்திற்கிணங்க அந்த இடமும் மடத்திற்குச் சாசனம் செய்விக்கப் பெற்றது. அவ்வூர் ரெட்டியார் ஒருவரின் மேற்பார்வையில் அங்கு ஒரு பிருந்தாவனம் கட்டுவிக்கப்பெற்றது. சந்நியாசிகளை அடக்கம் செய்யப்படும் இடங்களில் ஒரு மேடை கட்டி, அதற்குமேல் ஒரு துளசிமாடம் அமைத்து, அதில் எப் பொழுதும் பசுமையான துளசிச் செடியை வளரும்படி செய் வார்கள். அதையே **பிருந்தாவனம்** எனக் கூறுவர். அவ்விடங்களில் ஆலயம் நிர்மாணிப்பதுமுண்டு. அவ்விதம் ஆலயம் கட்டுவித்தால் அதில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வார்கள். அப்பொழுது அந்த இடம் **அதிஷ்டானம்** என வழங்கப்படும். 1927-ஆவது வருடம் ஜனவரி மாதம் 17-ஆம் தேதி ஸ்வாமிகளால் அந்தப் **பிருந்தாவனம்** பிரதிஷ்டை செய்விக்கப்பெற்றது. பிற்காலத்தில், ஸ்வாமிகள்

தென்னார்க்காடு ஜில்லாவிற்கு விஜயம் செய்யும் பொழுதெல்லாம் அந்தப் பிருந்தாவனத்தைத் தவருது தரிசனம் செய்து கொள்வார்கள்.

**கொங்குநாட்டு யாத்திரை**

புதுச்சேரியில் சுமார் ஒரு வாரம் தங்கிவிட்டு ஸ்வாமிகள் **கடலூர், விருத்தாசலம், கள்ளக்குறிச்சி, சின்னசேலம், ஆத்தூர்** மார்க்கமாகச் சேலம் ஜில்லாவை அடைந்து (1927–ஆம் வருடம் மார்ச் மாதம் 31-ஆம் தேதி) **சேலத்திற்கு** விஜயமானார்கள். சேலம் மக்கள் ஸ்வாமிகளுக்கு மிகப் பெரியதொரு வரவேற்பு அளித்தனர். சேலத்திலிருந்து **ஈரோடுக்குப்** பிறகு அவர்கள் விஜயமானார்கள்.

**ஸம்ஸ்கிருதம் கற்ற முஸ்லிம் அன்பர்**

ஸ்வாமிகள் ஈரோட்டிற்கு விஜயம் செய்திருந்தபொழுது முகம்மதிய கனவான் ஒருவர் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்திருந்ததை மடத்தின் சிப்பந்திகள் ஸ்வாமிகளிடம் தெரிவித்தனர். ஸ்வாமிகள் அவருக்குத் தனிமையான ஓர் இடத்தில் தரிசனம் அளிப்பதாகக் கூறி, குறிப்பிட்ட அந்த இடத்திற்கு அவரை வரும்படி கட்டளையிட்டார்கள். ஸ்வாமிகளும் சிறிது நேரத்தில் அவ்விடத்திற்கு எழுந்தருளினார்கள். ஸ்வாமிகளைக் கண்டதும் அந்தக் கனவான் தமது வணக்கத்தை ஸ்வாமிகளுக்குத் தெரிவித்துவிட்டு அவர்கள் பால் தாம் வடமொழியில் இயற்றிய சில சுலோகங்களைச் சித்திரத்தினுல் வரையப்பட்ட சிவலிங்க உருவத்தில் கட்டங்கள் அமைத்து அக்ஷரங்கள் யாவையும் அவைகளில் பந்தனம் செய்து (அடக்கி), வைத்திருந்தார். அந்தச் சுலோகங்களை அவர் தாமே ஸ்வாமிகள் முன்னிலையில் படித்து, அவைகளுக்குப் பொருளையும் கூறினார். அப்பொழுது அங்குக் கூடியிருந்த பக்தர்கள் மிகுந்த மகிழ்ச்சியையும் வியப்பையும் அடைந்தனர். அப்பொழுது ஸ்வாமிகள் அந்த அன்பரைப் பார்த்து, சுலோகங்கள் இயற்றக்கூடிய அளவுக்கு அவருக்கு எவ்விதம் வடமொழிப்புலமை வாய்த்ததென வினவினார்கள். அந்த முஸ்லிம் கனவான் ஸ்வாமிகளுக்கு விடையளிக்கையில் தம் முன்னோர் எல்லாம் சமஸ்கிருதத்தில் மிகுந்த புலமை வாய்ந்தவர்களென்றும், வழி வழியாகவந்த அந்தக் கலையை அவர் தமது தந்தையாரிடமிருந்து கற்றதாகவும் ஸ்வாமிகளைப் போன்ற பெரியோர்களிடம் தமது வித்தையை வெளிக்காட்ட வேண்டுமென்று அவர் வெகு நாள்களாக ஆவல் கொண்டிருந்ததாகவும், எதிர்பாராதவாறு அன்றைக்கு இந்த வாய்ப்புத் தமக்குக்

கிடைத்ததென்றும் தமது முன்னோர்களுக்குக்கூட இவ்வித வாய்ப்புக் கிட்டினதாகத் தெரியவில்லையென்றும் கூறி ஆனந்தக் கண்ணீர் விடுத்துச் சிறிதுநேரம் மௌனமாக இருந்தார். ஸ்வாமிகள் அவரது கலைத்திறனை மெச்சி வடமொழியில் தேர்ச்சி பெற்ற முஸ்லிம் ஒருவரைக் காண்பது, தமக்கு அதுவே முதல் தடவையெனக் கூறி அக்கலையைத் தொடர்ந்து காத்து வரும்படி கட்டளையிட்டு அந்த அன்பருக்கு ஆசி கூறினார்கள்.

பின்னர் **பவானி, நெருஞ்சிப்பேட்டை** மார்க்கமாக ஸ்வாமிகள் **மேட்டூருக்கு** விஜயம் செய்தார்கள். அக்காலத்தில் மேட்டூர் அணையின் அஸ்திவார வேலைகள் நடந்துகொண்டிருந்தன. ஸ்வாமிகள் இஞ்சினீயர்கள் பின்தொடர வேலை நடைபெறும் இடங்களையெல்லாம் நேரில் பார்வையிட்டு, அணையைப் பற்றிய எல்லா விவரங்களையும் கேட்டறிந்தார்கள். அணையைச் சேர்ந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், காண்ட்ராக்டர்களும் சுவாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளைச் செய்துவைத்தார்கள்.

மலைகளில் ஏறுவதில் ஸ்வாமிகளுக்கு இயற்கையாக ஆவல் உண்டு என்பதை முன்பே கண்டோம். ஸ்வாமிகள் சித்திரை மாதம் ஓர் ஏகாதசியன்று மேட்டூரினின்று செல்லும் வழியில் **நெருஞ்சிப்பேட்டை** சமீபமுள்ள மலையொன்றைக் கடந்து, 25 கிலோ மீட்டர்கள் சென்று, மைசூரிலிருந்து நம்நாட்டிற்குள் காவிரி பாயும் இயற்கை வனப்பைக் காண விரும்பினார்கள். சுமார் இருபது பேர்களுடன் காலை 6 மணிக்கே புறப்பட்டு அவர்கள் மலையைக் கடந்து, மேல் புறமுள்ள காட்சிகளைக் கண்டுவிட்டு 10 மணிக்குத் திரும்புங்கால், வெயிலும் அதிகமாகிவிடவே, கூடச்சென்றவர்களில் சிலர் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தனர். ஸ்வாமிகள் களைப்படைந்திருந்தும், கீழேயுள்ள கிராமத்திற்கு விஷயத்தைச் சொல்லியனுப்பக் கிராம மக்கள் பரபரப்புடன் இளநீர், எலுமிச்சம்பழம், கற்கண்டு, மோர், தண்ணீர் இவைகளைக் கொண்டு வந்தனர். அவைகளை மயக்கமுற்றிருந்தோருக்கும் மற்றோருக்கும் கொடுக்கச் செய்து, மாலை 5 மணிக்கு மலையிலிருந்து ஸ்வாமிகள் கீழே இறங்கினார்கள். ஜனங்கள் பஜனை கோஷத்துடன் ஸ்வாமிகளை வரவேற்றனர்.

பின்னர் **சூலூர்** மார்க்கமாக ஸ்வாமிகள் 1927–ஆம் வருடம் ஏப்ரல் மாதம் 26–ஆம் தேதி **கோயம்புத்தூருக்கு** விஜயமானார்கள். அவ்விடம் சிருங்கேரி சங்கர மடத்தில் ஸ்வாமிகளுக்கு ஜாகை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நகரப் பொதுமக்கள், சர்க்கார்

உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், வர்த்தகர்கள் யாவரும் ஓர் சிறந்த வரவேற்பை அன்று ஸ்வாமிகளுக்கு அளித்தனர். காலையில் 7 மணிக்குத் தொடங்கிய பெரிய ஊர்வலம் பகல் 12 மணிக்கு ஜாகையை வந்தடைந்து, பகல் பூஜை முடிந்ததும் பக்தர்களுக்கு விபூதி பிரசாதம், அபிஷேக தீர்த்தம் இவைகளைக் கொடுத்து ஸ்வாமிகள் யாவரையும் அனுக்கிரஹித்தார்கள். பக்த ஜனங்கள் ஸ்வாமிகளின் உபதேச மொழிகளைக் கேட்கவேண்டுமென்னும் தங்கள் அவாவைத் தெரிவித்துக் கொண்டபடியால், அன்று மாலை ஸ்வாமிகள் **சிவ விஷ்ணு அபேதம்** என்பதைப் பற்றி சுமார் 4 மணிநேரம், தமக்கே உரிய எளிய தமிழ் நடையில், எல்லோருடைய மனத்தையும் கவரும்படியாக உபதேசித்தருளினார்கள். ஆறு மாதங்கள் சேர்ந்தாற்போல் மழையின்றி இருந்த கோயம் புத்தூரில் அன்று வருணன் கருணை புரிந்து நல்ல மழையைப் பொழிந்ததால், ஊரும் குளிர்ந்து ஜனங்களின் மனதும் மகிழ்ச்சி யுற்றது. நான்கு நாட்கள் ஸ்வாமிகள் கோயம்புத்தூரில் தங்கி யிருந்து பின்னர் 1927-ஆம் வருடம் மே மாதம் 2-ஆம் தேதி **பாலக்காட்டிற்கு** விஜயம் செய்தார்கள்.

**கேரள நாட்டு விஜயம்**

ஸ்வாமிகள் பாலக்காட்டின் பதினெட்டு அக்கிரகாரங் களிலும் சுமார் ஒரு மாதம் வரையில் தங்கியிருந்து, அக்ரகார மகா ஜனங்களை அனுக்ரகித்துவிட்டுப் பின்னர் பக்கத்திலுள்ள பல கிராமங்களுக்கும் விஜயம் செய்தார்கள். ஸ்வாமிகள் பாலக் காட்டில் தங்கி இருந்த பொழுது, **டாக்டர் சங்கர நாராயணய்யர்** மடத்திற்கு வேண்டிய பணிகளை எல்லாம் செய்து வைத்தார். **கொல்லங்கோடு ராஜாவின்** விருப்பத்திற்கிணங்க ஸ்வாமிகள் கொல்லங்கோட்டிற்கு விஜயம் செய்து, அவ்விடம் 3 நாட்கள் தங்கி, அந்த அரச குடும்பத்தினரால் செய்யப்பட்ட மரியாதை களைப் பெற்றுக் கொண்டார்கள். அவர்கள் விஜயம் செய்த ஒவ்வொரு கிராமத்திலும், ஜனங்களது உற்சாகம் எல்லையைக் கடந்ததாக இருந்தது; ஊர்களெல்லாம் திருவிழாக்களைப்போல் விளங்கின. எங்குச் சென்றாலும் ஸ்வாமிகளைப் பற்றிய பேச்சே தான் நடைபெற்று வந்தது. ஸ்வாமிகள் தெளிவான மலையாளத்தில் அழகுடன் பேசிப் பிரசங்கம் புரிவதைக் கேட்ட மலையாள வாசிகள் ஸ்வாமிகள் மலையாள நாட்டைச் சேர்ந்தவர் களென்றே நம்பியிருந்தனர். 1927-ஆவது வருடத்திய வியாஸ பூஜையை ஸ்வாமிகள் பாலக்காட்டிற்கு அருகிலுள்ள **கஞ்சிக்**

கோடு என்னும் இடத்தில் நடத்தி, அவ்விடம் இரண்டு மாதங்கள் தங்கிச் சாதுர்மாஸ சங்கல்பத்தையும் முடித்துக் கொண்டார்கள்.

ஸ்வாமிகள் மலையாள நாட்டில் **பாறை** என்னும் தலத்திற்கு விஜயம் செய்தபோது அத்தலத்தைப் பற்றிய புராணவரலாறு ஒன்றைப் பக்தர்களுக்கு எடுத்துக் கூறினார்கள். அவ்வரலாறு பின்வருமாறு :—

**சரகங்கா தீர்த்தம்**

மலையாள நாடானது பரசுராமரால் ஸ்தாபனம் செய்விக்கப் பட்டது. அந்த நாட்டை ஸ்தாபனம் செய்யும்பொழுதே வெளி நாட்டவர் எவரும் அந்நாட்டின் எல்லைக்குள் நுழையலாகாதெனப் பரசுராமர் சாபமிட்டிருந்தார். ஸ்ரீ ராமபிரான் வனவாஸம் செய்த காலத்தில் கேரள நாட்டின் எல்லையான வாளையார் நதியில் நீராடி அச்சாபத்தின் தன்மையை மறந்தவராகி ஆற்றைக் கடந்து அக்கரை சென்று அத்தேசத்தின் எல்லையில் நின்றவாறு வல்கலம் என்னும் தமது ஆடையைக் கொண்டுவரும்படி எதிர்க் கரையில் நின்றிருந்த இலக்ஷ்மணருக்குக் கட்டளையிட்டார். ஆனால் அச்சாபத்தையறிந்த இலக்ஷ்மணரோ அந்த ஆடையை அக்கரைக்கு எடுத்துவர மறுத்துவிட்டார். இலக்ஷ்மணரது இந்த மாறுபட்ட செயலைக் கண்டு இராமர் மிகுந்த வியப்பை அடைந் தார். பின்னர் இளையவர் ஸ்ரீ இராமபிரானுக்கு அந்தப் பரசுராமரது சாபத்தை நினைவிற்குக் கொண்டு வந்தார். அப் பொழுது இராமபிரான் சற்று ஆலோசித்தவராகி, கங்கா நதியில் ஸ்நானம் செய்வதால் மாத்திரம் இந்தச் சாபக்கேடு விலகு மென்னும் தீர்மானத்திற்கு வந்தார். ஆனால் 14 ஆண்டுகள் முடிந்த பிறகல்லவோ கங்கையை அடையலாம். இந்நிலையில் ஸ்ரீராமர் அவ்விடத்திலேயே கங்கையை வரவழைக்க நினைத்தவ ராகித் தாம் நின்றிருந்த இடத்திலிருந்தே பூமியை நோக்கி ஓர் அம்பை எய்தார். அந்தப் பூமியும் இரண்டு மைல் விஸ்தீரணத் திற்குச் சமதளமுள்ள பாறையாக அமைந்திருந்தது. இராமர் விடுத்த அந்த அம்பானது பாறையைப் பிளந்துகொண்டு உள் சென்றதும் பிளக்கப்பட்ட இடத்திலிருந்து கங்கை நீர் பெருகிவர இராமபிரான் அதில் நீராடிச் சாபத்தை விலக்கிக் கொண்டார். இலக்ஷ்மணரும் அப்புனித கங்கையில் நீராடினார். பல வருடங் களுக்கு முன்பே இந்த வரலாற்றைக் கேட்டிருந்த நம் ஸ்வாமி களும் அப்புனித தீர்த்தத்தில் நீராடினார்கள். இராமபாணத்தின் வேகத்தினால் பிளக்கப்பட்ட பாறையானது நெருப்பினால் உருக்கப்

பட்டதுபோல இன்றும் அங்குக் காட்சியளிப்பதாகக் கூறப்படு கிறது. கங்கையை அங்குக் கொணர்ந்ததால் பரசுராமரது சாபத்தை இராமபிரான் நீக்கிவிட்டதாக நாம் ஒருவாறு ஊகிக்கலாம்.

**திருப்புகழ்மணி பட்டமளிப்பு**

ஸ்வாமிகள் பாலக்காட்டில் விஜயம் செய்திருந்தபொழுது. சென்னை வக்கீல் **டி. எம். கிருஷ்ணஸ்வாமி ஐயர்** தம் பக்த கோஷ்டி யுடன் ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்கள் முன்னிலையில் திருப்புகழ் பஜனையை நடத்தினர்கள். கந்தன் புகழை எவர் பாடினாலும் ஸ்வாமிகள் அதைக் கேட்டு மகிழ்வார்கள். அன்று ஐயர் அவர்கள் நல்ல இசையுடன் உள்ளம் உருகிப் பாடியதைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்வாமிகள், ஐயர் அவர்களைத் **திருப்புகழ் மணி** எனப் பெயரிட்டு அழைத்து, அவர்களுக்குக் காஷ்மீர் சால்வை போர்த்திப் பெருமைபடுத்தினர்கள். குருநாதரிடமிருந்து கிடைத்த இப்பெருமையை ஐயர் சிரமேல்தாங்கி ஸ்வாமிகளை வணங்கி ஆனந்தக்கண்ணீர் பெருக்கினர்.

**மகாத்மா காந்தியுடன் சந்திப்பு**

1927-ஆம் வருடம் பிற்பகுதியில் **மகாத்மா காந்தி** தென் னாட்டிற்கு விஜயம் செய்து காங்கிரஸின் நிர்மாண திட்டங்களைப் பிரசாரம் செய்யவும், அதற்காக நிதி திரட்டவும், ஓர் சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டார். மதத்தலைவராக விளங்கும் ஸ்வாமிகளின் தெள்ளிய அறிவையும், பரந்த நோக்கத்தையும், எவரையும் ஏற்றுக்கொண்டு அருள் புரியும் தன்மையையும் பற்றி 'ஹிந்து' பத்திராதிபர் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்கார், எஸ். ஸத்தியமூர்த்தி ஆகியோர் மூலம் காந்தியடிகள் முன்பே கேள்வியுற்றிருந்ததால் இந்தச் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு ஸ்வாமிகளைச் சந்தித்து அவர்களுடன் பேசவேண்டு மென்ற தீர்மானத்தைச் செய்துகொண்டார். அதையொட்டியே சரித்திரத்தில் முக்கியத்துவம் வாய்ந்த இந்தச் சந்திப்பு 15-10-1927-இல் நிகழ்ந்தது.

பாலக்காட்டைச் சேர்ந்த **நல்லிச்சேரியில்** ஸ்வாமிகள் தங்கி யிருந்த ஜாகையின் பின்புறம் அமைந்திருந்த மாட்டுக் கொட்டிலில் காந்தியடிகளுக்கும் ஸ்வாமிகளுக்கும் சந்திப்பு ஏற்பட்டது. குறிப்பாக இரண்டொருவரே உள்ளே அனுமதிக்கப்பட்டனர். காந்தி பத்திரிகை நிருபர்கள் யாரும் அனுமதிக்கப்படவில்லை. காந்தி

யடிகளும் ஸ்வாமிகளை நெருங்கியதும் இந்து முறைப்படி அவர்களை வணங்கினர். காஷாயக் கதராடை ஒன்றை அணிந்து தரையில் அமர்ந்திருந்த ஸ்வாமிகளின் ஒளி நிறைந்த திருமேனியில் காந்தியடிகளின் மனம் ஈடுபட்டுவிட்டது. அப்பொழுது சற்று நேரம் மௌனம் நிலவியது. பின்னர் ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்தில் இரண்டொரு வார்த்தைகள் கூறி, காந்தியடிகளை வரவேற்று உட்காரும்படி தெரிவித்தார்கள். காந்தியடிகளும் கீழே அமர்ந்து, தமக்கு ஸம்ஸ்கிருதம் பேசுவதற்கு பழக்கமில்லையென்றும், ஹிந்தியிலேயே பேச அனுமதிக்கவேண்டுமென்றும், ஆனால் கூடியவரையில் ஸம்ஸ்கிருத மொழிகளைப் புரிந்துகொள்ள முடியுமென்றும் தெரிவித்துக்கொண்டார். ஹிந்தியில் பேசுவதை ஸ்வாமிகளும் புரிந்து கொள்ளக்கூடியவர்களாதலால், இந்த ஏற்பாட்டின்படி ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்திலும் காந்தியடிகள் ஹிந்தியிலும் பேசத் தொடங்கினர்கள். கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டே ராஜ்யங்கள் அமையவேண்டுமென்றும், ஆத்ம சிந்தனையைப் புறக்கணித்து மனித சக்தியை மாத்திரம் பயன்படுத்தி அமையும் எந்த ராஜ்யமும் சீக்கிரத்தில் அழிவுதான் அடையுமென்றும், இதன் உண்மையைக் காந்தியடிகள் உலகிற்கு எடுத்துக் கூறுவதைத் தாம் மிகவும் பாராட்டுவதாகவும், ஹரிஜன ஆலயப் பிரவேச விஷயத்தில் சாஸ்திரங்களையும் பழைய வழக்கங்களையும் நம்பி இருப்பவர்கள் நம் நாட்டில் பெரும்பாலோர் இருக்கிறார்களென்றும், அவர்களுடைய மனம் நோகும்படி செய்யும் எந்த மாறுதலும் ஹிம்சைக்கு ஒப்பாகுமென்றே தாம் முடிவுக்கு வரவேண்டியிருக்கிறதென்றும் ஸ்வாமிகள் காந்தியடிகளிடம் தெரிவித்தார்கள். மேலும் பரமார்த்த விஷயங்களிலும் சம்பாஷணை தொடர்ந்து நடைபெற்றது. பேச்சுக்களெல்லாம் ஒருவருக்கொருவரது உள்ளன்பை வெளிக்காட்டும் வகையில் அமைந்திருந்தன. வாதப்பிரதிவாதங்கள் எதுவும் அப்போது நடைபெறவில்லை. தம் மனத்தில் தோன்றியதை ஒன்றையும் ஒளிக்காமல் வெளியிடுவதில் காந்திக்கு நிகராக வேறு எவரையுமே காண முடியாது. மக்கள் தம்மை ஏற்றுக் கொள்வார்களோ ஏற்றுக் கொள்ளமாட்டார்களோ என்பதைப்பற்றி அவர் கவலைப்படுவதேயில்லை. அவரது ஒவ்வொரு சொல்லிலும் உள்ளப்பற்று நிறைந்திருக்கும். காந்தியடிகளின் அந்தக் குணத்தை ஸ்வாமிகள் அடிக்கடி பாராட்டுவதுண்டு. சுமார் ஒரு மணிநேரம் காந்தியடிகள் ஸ்வாமிகளுடன் பேசிக்கொண்டிருந்தார். ஸ்வாமிகளது மேதையைக் கண்டு அவர்

வியந்தார். முடிவில் ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக்கொள்ளும் பொழுது, ஸ்வாமிகளுடைய தரிசனத்தினுல் தாம் மிகவும் பெரிய தொரு பயனே அடைந்ததாகவும், ஸ்வாமிகளின் விருப்பங்களை எல்லாம் மனஸில் வைத்துத் தம்மால் முடிந்தவரை அவைகளை நிறைவேற்றுவதாகவும் தெரிவித்துக்கொண்டு ஸ்வாமிகளை வணங்கி அவர் விடைபெற்றுக் கொண்டார்.

காந்தியடிகள் ஸ்வாமிகளிடம் உரையாடிக் கொண்டிருந்த பொழுது நிகழ்ந்த ஓர் சம்பவத்தை இவ்விடம் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது. அப்பொழுது மாலை 5-30 மணியாகிவிட்டதால் வெளியில் இருந்த **ராஜாஜி** உள்ளே வந்து, காந்திஜியிடம் அவரது ஆகாரத்தைப்பற்றி நினைவூட்டினுர். காந்திஜி மாலை 6-மணிக்கு மேல் ஆகாரம் எதுவும் உட்கொள்வதில்லை. அப்பொழுது காந்திஜி ராஜாஜியைப் பார்த்து, 'ஸ்வாமிகளிடம் சம்பாஷணை புரிவதே எனக்கு இன்றைய ஆகாரம்' எனக் கூறினுர்கள். ஸ்வாமிகள் காந்திஜிக்கு ஓர் பம்பளிஸ் நாரத்தம்பழத்தை அளித்த பொழுது, அதைக் காந்திஜி வெகு பரிவுடன் பெற்றுக் கொண்டு, அது தமக்கு மிகவும் பிரியமான பழம் என்பதாகத் தெரிவித்தார் அன்று மாலை கோயம்புத்தூர் பொதுக்கூட்டத்தில் காந்தியடிகள் பேசிய பொழுது, கூட்டத்தில் ஒரு சிலர் அவர் ஸ்வாமிகளிடம் சம்பாஷணை செய்த விஷயங்களைத் தெரிவிக்கும்படி காந்தியடிகளைக் கேட்டனர். காந்தியடிகள் ஸ்வாமிகளிடம் தாம் பேசியதெல்லாம் அந்தரங்கமான விஷயங்களென்றும், அவை தமக்கும் ஸ்வாமிகளுக்கும் தனி முறையில் நிகழ்ந்தவை யென்றும், அதன் காரணமாகவே பத்திரிகை நிருபர்கள் அப்பொழுது அனுமதிக்கப்படவில்லை யென்றும், ஆகையினுல் அவைகளை வெளியிடத் தாம் விரும்பவில்லையென்றும் பதில் கூறிவிட்டார். இந்தச் சம்பாஷணையில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகளைப்பற்றி ஸ்வாமிகளும் எதையும் வெளியிடவில்லை. சம்பாஷணையின்போது கூட இருந்த ஒருவரது மூலமாகத் தெரிந்து கொண்டவைகளை ஆதாரமாகக் கொண்டு இவ்விஷயம் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கொச்சி—திருவனந்தபுரம் ஸம்ஸ்தானங்களில் யாத்திரை**

ஸ்வாமிகள் **கஞ்சிக்கோடு** என்ற ஊரில் தம் சாதுர் மாஸ விரதத்தை முடித்துக் கொண்டு, மேலும் மலையாளம் ஜில்லா தென் பாகத்திலுள்ள பல பக்தர்களின் வேண்டுகோளுக் கிணங்கி அங்குள்ள பல ஊர்களுக்கு விஜயம்செய்து, 2-2-1928-இல் குருவாயூரில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் ஆலயத்தைத் தரிசனம்

செய்தார்கள். ஸ்வாமிகளின் வரவையொட்டி அன்று குருவாயூரில் பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் கூடியிருந்தனர். கிருஷ்ண விக்ரகத்திற்கு விசேஷமாக அபிஷேக அலங்காரங்கள் செய்விக்கப்பட்டிருந்தன. தேவஸ்தான அதிகாரிகளும் ஸ்வாமிகளைத் தகுந்த மரியாதையுடன் கோவிலுக்கு அழைத்துச் சென்று சுவாமி தரிசனம் செய்துவைத்தார்கள். பின்னர் ஸ்வாமிகள் **சித்தூர்** மார்க்கமாகத் **திருச்சூருக்கு** விஜயம் செய்து அங்கு, (5-2-28–ஆம் தேதி) **வடக்குநாதன் ஆலயத்திலும்** ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். அவ்வூரில் பழமையான இரண்டு சங்கர மடங்கள் உள்ளன. அம்மடங்களுக்கு நம்பூத்ரி ஸந்நியாசிகள் அதிபர்களாக இருந்துவருகிறார்கள். ஸ்வாமிகள் அம்மடங்களுக்கு விஜயம் செய்து, அவைகளின் பூர்வ சரித்திரங்களையெல்லாம் விசாரித்து, அங்கு வைக்கப்பட்டுள்ள பழைய ஏட்டுப் பிரதிகளிலிருந்து ஆதிசங்கரரது சரித்திரத்தையும் பரிசீலனை செய்தார்கள். மேலும், அவ்விடமுள்ள **பிரம்மஸ்வ மடம்** என்று கூறப்படும் குருகுலத்தைப் பார்வையிட்டு, அதில் அப்பொழுது வித்தியாப்பியாசம் செய்துவந்த வித்யார்த்திகளுக்கு ஆசிகூறி அனுக்கிரகித்தார்கள். **திருச்சூரிலிருந்து** ஸ்வாமிகள் **கிராங்கனூர்** என்ற கடல்துறைப் பட்டினத்துக்கு விஜயம் செய்து, அவ்வூர் மன்னரால் உபசரிக்கப்பட்டு, அங்குள்ள **பகவதி ஆலயத்தையும்** தரிசனம் செய்து கொண்டார்கள். பிறகு (19–3–28-இல்) **எர்ணுகுளத்தை** அடைய, அங்குக் கொச்சி ராஜ குடும்பத்தினர் ஸ்வாமிகளை மிகவும் உபசரித்து வரவேற்றனர். அவ்விடம் மார்ச் மாதம் முடிய (திருப்பணத்துறையிலேயே) ஸ்வாமிகள் தங்கியிருந்தார்கள். அங்கு ராஜ குடும்பத்தைச் சேர்ந்த தேவாலயத்தில் ஸ்வாமிகள் அன்றாடம் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டதுடன், அவ்விடத்திலுள்ள ஸம்ஸ்கிருத கலாசாலைக்கும் விஜயம் செய்து, மாணவர்களுக்கு ஸம்ஸ்கிருதத்தில் உபதேசங்களைச் செய்தருளினார்கள். அங்குத் தங்கியிருந்த காலத்தில் மடத்திற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் சம்ஸ்தான **திவான் டி. எஸ். நாராயணய்யர்** ஸம்ஸ்தான அதிகாரிகளின் மூலம் செய்து வந்தார். ஸம்ஸ்தானத்தின் சார்பாகப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளும் நடந்தன. ஒரு பெரிய ஊர்வலமும் ஏற்பாடு செய்யப்பட்டது. பின்னர், **வைக்கம்** க்ஷேத்திரத்தில் ஸ்வாமிகள் ஒரு நாள் தங்கி, சுவாமி தரிசனம் செய்துகொண்டு, **திருவனந்தபுரம்** ஸம்ஸ்தானத்தின் முக்கிய ஸ்தலங்களைத் தரிசனம் செய்து கொண்டு, **கோட்டயம்** மார்க்கமாக 1928-ஏப்ரல் மாதம் 15-ஆம்

தேதி **ஆலப்புழைக்கு** விஜயம் செய்தார்கள். ஆலப்புழையில் பக்தர்கள் ஸ்வாமிகளுக்கு நல்ல வரவேற்பளித்து அவர்களை அங்கு ஒரு வாரம் வரையில் தங்கச் செய்தார்கள். பின்னர் அவ்விட மிருந்து ஜல மார்க்கமாக 7 மைல் தூரமுள்ள **மன்கொம்புக்கு** யாத்திரை தொடங்கிற்று. அவ்வருடத்திய சங்கர ஜயந்தி உத்ஸவம் ஏப்ரல் மாதம் 24-ஆம் தேதி அங்குக் கொண்டாடப் பட்டது. அதன் பின்னர் **அம்பலப்புழை, மாஞர்** இவற்றின் மார்க்கமாக மே மாதம் 3-ஆம் தேதி **கொல்லத்திற்கு** ஸ்வாமிகள் விஜயம் செய்து, அவ்விடம் 5 நாட்கள் தங்கியிருந்தார்கள். சுவாமிகளின் பெயராலும் அவர்களின் ஆதரவாலும் பல வருடங் களாக ஆலப்புழையில் நடைபெற்றுவரும் **ஸ்ரீ சந்திரசேகரேந்திர பாடசாலைக்கு** ஸ்வாமிகள் விஜயம் செய்து, வேதம், சாஸ்திரம் கற்கும் மாணவர்களைப் பரீக்ஷித்து அவர்களை ஆசீர்வதித்தார்கள். ஆங்கிலம் பயிலும் மாணவர்களும் அங்கு வேதப் பயிற்சி பெறு வதைக் குறித்து அவர்கள் நிர்வாகிகளைப் பாராட்டினார்கள். கொல்லத்திலிருந்து **கொட்டாரக் கரை, புனலூர், ஆரியங்காவு, செங்கோட்டை** மார்க்கமாகத் **திருக்குற்றாலத்தை** அடைந்து, அவ் விடம் **குற்றாலநாதரைத்** தரிசனம் செய்துகொண்டு ஒரு வாரம் அங்குத் தங்கியிருந்தார்கள். இவ்வாறு **கொச்சி, திருவனந்தபுரம்** இரண்டு சம்ஸ்தானங்களிலும் ஸ்வாமிகள் யாத்திரை செய்த காலத்தில் அவ்விரு ஸம்ஸ்தானங்களிலும் ஸ்வாமிகள் தங்குவதற் காகச் சர்க்கார் அரண்மனைகளையும், கட்டிடங்களையும் கொடுத்து உதவியிருந்தார்கள். மடத்தின் வண்டிகளுக்கும், கால்நடை களுக்கும் சாலைச் சுங்கம் எதுவும் கட்டவேண்டாமென்றும் அவ்விரு அரசாங்கங்களும் உத்திரவு பிறப்பித்திருந்தார்கள். குற்றாலத்திலிருந்து ஸ்வாமிகள் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள ஸ்தலங்களைத் தரிசனம்செய்துகொண்டு ஜூன் மாதம் 9-ஆம் தேதி தாம்பரபரணியின் உற்பத்தி ஸ்தானமாகிய **பாண தீர்த்தத்தில்** நீராடிப் பின் **நாகர்கோயில்** மார்க்கமாகக் **கன்னியா குமரியை** அடைந்து ஜூன் மாதம் 17-ஆம் தேதி அங்கு அம்பிகையைத் தரிசனம் செய்துகொண்டு, அவ்விடம் இரண்டு நாட்கள் தங்கி, சமுத்திர ஸ்நானத்தையும் முடித்துக் கொண்டு, **நாங்குநேரி, திருநெல்வேலி, கோயில்பட்டி, சாத்தூர், விருதுநகர்** மார்க்கமாகத் திருவேடகத்தை அடைந்தார்கள்.

**திருவேடகத்தில் வியாஸ பூஜை**

திருவேடகம் என்னும் இந்தத் தலம் வைகை நதிக்கரையில் சோளவந்தானிலிருந்து 3 மைல் தூரத்திலுள்ளது. இது

திருஞான சம்பந்தரால் பாடப்பெற்ற தலம். ஞானசம்பந்தர் சமணருடன் வாதுசெய்த பொழுது, '**வாழ்க அந்தணர்**' என்னும் பதிகத்தை ஓர் ஏட்டில் எழுதி மதுரையில் வைகை நதியிலிட்டதாகவும், அந்த ஏடு வைகை ஆற்றை எதிர்த்துத் திருவேடகம் வரையில் சென்றதாகவும் அப்பொழுது சம்பந்தர் '**வன்னியும் மத்தமும்**' என்னும் பதிகத்தைப் பாட, அந்த ஏடும் அத்தலத்தில் கரை சேர்ந்ததாகவும், அதனுல் அத்தலத்திற்கு **திருவேடகம்** என்னும் பெயர் வந்ததாகவும், குலச்சிறையாரென்னும் அமைச்சர் பரியேறி ஏட்டுடன் தொடர்ந்து அதனை எடுத்துவந்ததாகவும் புராணம் கூறுகின்றது. அங்கு மூலத்தானம் ஏடு உருவத்தில் அமைந்திருப்பதும் குறிக்கத்தக்கது. அவ்விடத்தில் ஆலயத்திற்குப் பின்புறம் வைகை நதி தெற்கு நோக்கி ஓடுகின்றது. தமது தியானத்திற்கும், தவத்திற்கும் ஏற்றதாக ஸ்வாமிகள் இத்தலத்தைக் குறிப்பிட்டு அவ்விடம் விபவ வருட (1928) வியாஸ பூஜை செய்து, இரண்டு மாதங்கள் சாதுர்மாஸ சங்கல்பத்தையும் அங்கே கழித்தார்கள். ஸ்வாமிகள் அவ்விடம் தங்கியிருந்த காலத்தில் காங்கிரஸ் தலைவரான **மட்டப்பாறை வேங்கடராமய்யரும், சோளவந்தான்** அக்ரஹார மஹா ஜனங்களும் மற்றக் கிராமவாசிகளும் மடத்திற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்துகொடுத்தனர். அவ்வூரில் ஸ்வாமிகள் முகாம் செய்திருந்தபொழுது **மைசூர் மகாராஜா** தமது காணிக்கையாக மடத்திற்கு ஒரு பெண்யானையை அளித்தார். பிரசித்திபெற்ற சங்கீத பரம்பரையைச் சேர்ந்த **மழவராய நேந்தல் சுப்பராம பாகவதர்** ஸ்வாமிகள் முன்னிலையில் அங்கு ஒரு நாள் மூன்று மணி நேரம் கச்சேரி நடத்தினர். ஸ்வாமிகள் பாகவதரது சங்கீத ஞானத்தை மிகவும் போற்றி அவருக்குப் பீதாம்பரம் முதலான சம்மானங்களை அளித்தார்கள்.

**மதுரையில் சர் தேஜ்பகாதூர் சப்ரூ ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டது**

திருவேடகத்தில் சாதுர் மாஸ சங்கல்பம் முடிவுபெற்றவுடன் ஸ்வாமிகள் மதுரைக்கு வந்து அங்கு ஒரு வாரம் தங்கியிருந்தார்கள். அப்பொழுது நமது நாட்டின் தலை சிறந்த சட்ட நிபுணர்களில் ஒருவராக விளங்கிய அலாகாபாத்தைச் சேர்ந்த **சர் தேஜ் பகாதூர் சப்ரூ** ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களின் ஆசியைப் பெற்ருர். அக்காலத்தில் சர்க்கார் அடக்கு முறையினல் நாட்டில் குழப்பம் அதிகமாக ஏற்பட்டிருந்தது. காந்தி அடிகள் உள்பட

பல தேசத் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். இந்த நிலையில் சப்ரூ சர்வகட்சி மகாநாடு ஒன்றைக் கூட்டிச் சர்க்காரிடம் ஆலோசித்து நிலைமையைச் சீர்படுத்த முயன்று வந்தார்; அவ் விஷயத்தில் தாம் எடுத்துக்கொண்ட முயற்சிகளைப் பற்றி விரிவாக அவர் ஸ்வாமிகளிடம் தெரிவித்தார். எவ்வகையிலாவது தேசத்தில் சமாதானம் ஏற்பட்டு மக்கள் நன்மை அடைய வேண்டு மென்பதே தம் அவாவென்றும், சப்ரூ இம்முயற்சியில் ஈடுபட் டிருப்பதைத் தாம் மிகவும் பாராட்டுவதாகவும் ஸ்வாமிகள் கூறி னார்கள். மதுரையிலிருந்து ஸ்வாமிகள் **வத்தலகுண்டு, பெரிய குளம், தேனி, சின்னமனூர்,** முதலான இடங்களுக்குச் சென்று விட்டு, நவராத்திரி பூஜைக்காக **அம்மையநாயக்கனூருக்கு** விஜயம் செய்தார்கள்.

**அம்மையநாயக்கனூரில் நவராத்திரி பூஜை—ஜமீன்தாரின் பூமி காணிக்கை**

ஸ்வாமிகள் அம்மையநாயக்கனூர் ஜமீன்தார் **ஸ்ரீ இராமசாமி நாயக்கரின்** அழைப்பிற்கிணங்க, அங்கு விஜயம் செய்து சுமார் பதினைந்து நாட்கள் அவ்வூரில் தங்கி, அவ்வருட நவராத்திரி பூஜையையும் அங்கு மிகவும் சிறப்பாக நடத்தினார்கள். ஸ்வாமி களையும், அவர்களின் பரிவாரங்களையும் ஜமீன்தார் அன்புடன் உபசரித்துப் பூஜைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் அன்புடன் சேகரித்துக் கொடுத்ததுடன், சிறுமலையில் 300 ஏக்கர் நிலத்தையும் மடத்திற்குத் தானமாக அளித்தார். நவராத்திரிக் குப் பிறகு ஸ்வாமிகள் **திண்டுக்கல்** மார்க்கமாய் இரண்டாவது முறை **பழனிக்கு** விஜயம் செய்து, **தண்டாயுதபாணியைத்** தரிசித்து, விசேஷமாக அபிஷேகம் முதலியவற்றை அவருக்கு நடத்திவைத் தார்கள். ஊர் மகாஜனங்களும் ஸ்வாமிகளை வரவேற்றுப் பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளைச் செய்து வைத்தார்கள். பழனியி லிருந்து **தாராபுரம், கொளிஞ்சிவாடி, சின்ன தாராபுரம், கரூர்** வழி யாக, திருச்சிக்கு 1929-ஆவது வருடம் ஜனவரி மாதத்தில் ஸ்வாமி கள் விஜயம் செய்தார்கள்.

**தென்னார்க்காடு, வட ஆர்க்காடு ஜில்லாக்களில் சுற்றுப் பிர யாணம்**

1929-ஆவது வருடம் பிப்ரவரி மாதத்தில் திருச்சி ஜில்லாவை விட்டுத் தென்னார்க்காடு ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் தொடங் கப்பெற்றது. ஸ்வாமிகள் சுமார் ஏழு மாதங்கள் **கள்ளக்குறிச்சி,**

**திருக்கோயிலூர்** தாலூக்காக்களில் விஜயம் செய்து, அவ்வருடத்து வியாஸ பூஜையை (21-7-1929-இல்) **மணலூர்ப்பேட்டையில்** நடத்தி, இரண்டு மாதங்கள் அவ்விடமே தங்கியிருந்தார்கள்.* அப்பொழுது ஸ்வாமிகளின் உடல்நிலை சுமார் ஒரு மாதம்வரையில் ஜுரத்தினால் பாதிக்கப்பட்டிருந்தது. அச் சமயத்திலும் ஸ்வாமிகள் தினந்தோறும் மூன்று வேளைகளிலும் ஒவ்வொரு நாளும் ஸ்நானம் செய்து தமது பூஜையை எவ்விதக் குறைவுமின்றி நடத்திவந்தார்கள். அதனால் சிஷ்யர்கள் மனஸில் கவலை குடிகொண்டது. சிஷ்யர்கள் எவ்வளவு வற்புறுத்தியும் ஜுரத்திற்கு ஏற்ற சிகிச்சையைப் பெற்றுக்கொள்ள ஸ்வாமிகள் மறுத்துவிட்டார்கள். துளசி தீர்த்தத்தை மாத்திரம் மருந்தாக உட்கொண்டுவந்த ஸ்வாமிகளின் உடல்நிலை நாளடைவில் குணமடைந்துவிட்டது. ஸ்வாமிகளின் உடல்நிலை பாதிக்கப்பட்டிருந்த சமயம் பாலக்காடு **டாக்டர் சங்கரநாராயணய்யரும்,** மயிலாப்பூர் வைத்திய விசாரத பண்டித **கே. ஜி. நடேச சாஸ்திரிகளும்** கூடவே தங்கியிருந்து ஸ்வாமிகளைக் கவனித்து வந்தார்கள். பின்னர் ஸ்வாமிகள் பிறந்த ஊராகிய விழுப்புரத்திற்கு 28-11-1929-ஆம் தேதி விஜயம் செய்தார்கள். விழுப்புரத்தில் பொதுமக்கள் ஸ்வாமிகளுக்கு அமோகமாக வரவேற்பளித்து உபசரித்தனர். அவ்விடம் வயோதிகர்களில் சிலர் ஸ்வாமிகளைக் குழந்தை வடிவத்தில் கண்டிருந்த தங்கள் பெருமையைக் கூறிக்கொண்டனர். இளமையில் கல்விகற்ற இடமாகிய திண்டிவனத்திற்கு 1-5-1930-இல் அவர்கள் விஜயம் செய்தார்கள்.

இந்த யாத்திரையில் ஸ்வாமிகள் தண்டலம் என்னும் கிராமத்தின் வழியாகச் சென்றுகொண்டிருந்தபோது, அவ்வூர் இடையன் ஒருவன் தனது நிலத்தைவிற்று அதனால் கிடைத்த பொருளை ஸ்வாமிகளுக்குக் காணிக்கையாக அளிக்கவேண்டுமென விரும்பினான். ஸ்வாமிகள் எவ்வளவு மறுத்தும் அவன் ஏற்றுக்கொள்ளாமல் நிலத்தை ஒரு தனவந்தரிடம் விற்று அதில் கிடைத்த பொருளை மிகுந்த சந்தோஷத்துடன் ஸ்வாமிகள் முன்னிலையில் சமர்ப்பணம் செய்தான். ஸ்வாமிகளும் அவனது பக்தியை மெச்சி அதை அன்புடன் ஏற்றுக்கொண்டு, புறம்போக்கு நிலத்தில்

---

* ஸ்வாமிகளின் தந்தையார் சுப்பிரமண்ய சாஸ்திரிகள் 24-7-1929 அன்று கும்பகோணத்தில் சிவபதம் அடைந்த செய்தியை மடத்தின் அதிகாரிகள் அதுசமயம் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள். அச்செய்தியை ஸ்வாமிகள் மௌனத்துடன் கேட்டுக்கொண்டு மேலும் யாதொன்றும் கூறாமல் இருந்துவிட்டார்கள்.

அவனுக்கு நல்லதாக நான்கு காணி நிலம் சாஸனம் செய்யும்படி தாசில்தார் மூலம் ஏற்பாடு செய்தார்கள். அதன்படி அவனுக்கு நிலமும் கிடைத்தது.

1929-ஆம் வருடம் டிசம்பர் மாதத்தில் திருவண்ணாமலையில் நடைபெற்ற தீப தரிசனத்திற்காக ஸ்வாமிகள் அவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். பஞ்ச பூதங்களில் இது தேயு க்ஷேத்திர மாகும்.

**கார்த்திகை தீப தரிசனம்**

அண்ணாமலை நகரம் மிகுந்த புராணப் பிரசித்தி பெற்றது. பிருங்கி என்னும் முனிவர் தமக்குச் சிவபிரான்மீது ஏற்பட்டுள்ள பக்தியினால் மற்ற எந்தத் தெய்வங்களையும் வணங்குவதில்லையெனத் தீர்மானம் செய்து கொண்டவராய், அம்பிகையையும் வணங்க மனமில்லாமல் இருந்தவராயிருந்தார். இதைக் கண்ட அம்பிகை கோபம் கொண்டு, தான் பரமசிவனது இடப்பாகத்தையே அடைந்துவிட்டதாகப் புராணம் கூறுகின்றது. இதன் காரணமாகப் பரமசிவன் **அர்த்தநாரீச்வரர்** எனப் பெயர் பெற்று விளங்குகிறார். திருவண்ணாமலையில் விளங்கும் மூர்த்திக்கு **அர்த்தநாரீச்வரர்** என்ற ஒரு பெயரும் உண்டு. அர்த்தம் என்றால் பாதி எனப்பொருள்படும்; நாரீ என்பது பெண்ணைக் குறிக்கும். **அபீதகுசாம்பாள்** என்பது இங்கு அமைந்துள்ள அம்பிகையின் பெயர்; **உண்ணாமுலை** என்பது இதன் பொருள். ஈச்வரனின் ஜோதி வடிவத்தை விளக்கவே இங்கு மலைமீது கார்த்திகைத் தீபம் ஏற்றப்படுகிறது. அப்பர், சம்பந்தர் இவ்விருவராலும், பாடப்பெற்ற தலம் இது. பரமசிவனது விச்வரூபத்தைக் காண மகாவிஷ்ணு பன்றி உருவம் எடுத்துப் பாதாளத்திற்குச் சென்ற தாகவும், பிரம்மா அன்னப் பட்சியின் உருவத்துடன் ஆகாயத்தில் பறந்து சென்றதாகவும், ஒருவர் கீழும் மற்றொருவர் மேலுமாக இருவரும் எவ்வளவு தூரம் சென்றும், ஈசனது உருவம் முழு வதையும் அவர்களால் காணமுடியவில்லை யென்றும் சொல்லப் படுகிறது. இந்த நிலையைச் சித்திரிப்பதே **லிங்கோத்பவ மூர்த்தி யாகும்.** அநேகமாக எல்லாப் பெரிய சிவாலயங்களிலும் கர்ப்பகிரு கங்களுக்குப் பின்புறம் மேற்கு முகமாக நோக்கிய லிங்கத்தில் இந்த உருவத்தைக் காணலாம். அவ்வுருவத்தின் கீழ் ஒரு பன்றி யின் உருவமும், மேலே ஓர் அன்னப்பறவையின் உருவமும் காணப்பெறும். திருவண்ணாமலையில்தான் இவ்விதம் விஷ்ணுவும், பிரம்மாவும் சிவபிரானின் அடி முடியைத் தேடினார்களாம்.

இன்னும் முருகப்பிரான் **அருணகிரிநாதருக்கு** உபதேசித்த தலமும் இதுதான்; **பட்டினத்தாரும்**, இத்தலத்தில் தங்கியிருந்ததாகச் சொல்லப்படுகிறது. **இடைக்காட்டுச் சித்தர்** இவ்விடத்தில் தான் முக்தி பெற்ருர். நமது காலத்தில் தோன்றிய **ரமண மகரிஷிகளும்** தமது ஞான சாதனத்திற்கும், தவத்திற்கும் ஏற்றதலமாக இதையே ஆக்கிக்கொண்டார்கள்.

இந்த அண்ணுமலை க்ஷேத்திரத்திற்கு முதன் முறையாக விஜயம் செய்த ஸ்வாமிகளை அத்தலவாசிகள் மிகுந்த பக்தியுடன் வரவேற்று, பீடத்திற்குரிய மரியாதைகளையெல்லாம் செய்தனர். ஸ்வாமிகளும் அந்த க்ஷேத்திரத்தில் சுமார் ஒரு மாதம் தங்கியிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் அண்ணுமலையின் கிரிப்ரதக்ஷிணத்தைப் பலமுறை செய்தார்கள்; ஆலயத்திலும் **அருணுசலேச்வரரைத்** தரிசனம் செய்து வந்தார்கள்.

பின்னர் ஸ்வாமிகள் காவிரியின் இயற்கைக் காட்சிகளைக் காணவேண்டி திருவண்ணுமலையிலிருந்து **செங்கம்** வழியாக சேலம் ஜில்லா **ஹரூர், தர்மபுரி** இவ்விடங்களுக்கு விஜயம் செய்து **தீர்த்த மலை** என்னும் தலத்தில் காவிரியின் நீர்வீழ்ச்சியில் நீராடினுர்கள். பின்னர் **ஹொகேநகல்** என்னும் இடத்திற்கு அடுத்த **மேகெதாடு** என்னும் தலத்தில் காவிரி இரண்டு பாறைகளுக்கு நடுவில் ஆடு தாண்டும் அளவில் அவ்வளவு குறுகலாக ஓடுவதைக் கண்டு அவ்விடத்திலும் நீராடினுர்கள். **மேகெ** என்னும் மொழி கன்னட பாஷையில் ஆட்டைக் குறிப்பதாகும்; ஆடு தாண்டும் அளவிற்கு அவ்விடம் காவிரி குறுகியிருப்பதால் அந்த இடத்திற்கு **மேகெதாடு** என்னும் பெயர் அமைந்துள்ளது.

1930-ஆம் வருடத்திலும் ஸ்வாமிகள் அநேகமாக வட ஆர்க்காடு ஜில்லாவிலேயே சுற்றுப் பிரயாணம் செய்துவந்தார்கள். அவ்வருடத்து வியாஸ பூஜையும், சாதுர்மாஸ சங்கல்பமும் 10-7-1930 முதல் ஆரம்பித்து ஆரணி ஜாகீரைச் சேர்ந்த **பூசைமலைக்குப்பம்** என்னுமிடத்தில் நடைபெற்றன. தகுந்த வசதியில்லாமல் காட்டின் நடுவே அமைந்திருந்த அவ்விடத்திலும் இரண்டு மாதங்கள் ஸ்வாமிகள் முகாம் செய்வதற்கும் தரிசனத்திற்கு வரும் பக்தர்களுக்குத் தகுந்த வசதிசெய்து கொடுப்பதற்கும் ஜாகீர் அதிகாரிகள் சலிப்பின்றி உழைத்தனர்.

**மடத்து யானை காணுமல் போனது**

இவ்வூரில் தங்கியிருந்தபோது, மடத்து யானை கட்டியிருந்த இடத்திற்குச் சமீபத்தில் ஓர் இரவு கீற்றுக்கொட்டகை

ஒன்றில் தீப்பற்றிக் கொண்டது. அந்நிகழ்ச்சியை இரவில் ஒருவரும் கவனிக்கவில்லை. பக்கத்திலிருந்த யானை தீயின் அனல் தாங்கமாட்டாமல் சங்கிலியை அறுத்துக்கொண்டு காட்டிற்கு ஓடிவிட்டது. மறுநாள் காலையில் யானை காணப்படவில்லை. பக்கத்தில் இருந்த கொட்டகையும் சாம்பலாக இருந்தது. இரண்டு நாட்கள் மடத்தின் சிப்பந்திகள் யானையை எல்லாத் திசைகளில் தேடியும் அது தென்படவில்லை. பின்னர் ஐந்து மைல் தூரத்தில் காட்டின் நடுவில் தண்ணீர் நிறைந்த ஒரு குளத்தில் யானை ஒன்று படுத்திருப்பதை அப்பக்கம் சென்றவர்கள் மடத்திற்குத் தெரிவித்தார்கள். யானைப்பாகன் முதலானவர்கள் அவ்விடம் சென்று யானையை வெளியில் கொண்டுவர எவ்வளவோ முயற்சி செய்தும் அது வெளிவரவில்லை. பின்பு ஸ்வாமிகளே அந்த இடத்திற்குச் சென்றார்கள். ஸ்வாமிகளைக் கண்டதும் அந்த யானை கரைக்கு வந்து ஸ்வாமிகளை வணங்கும் முறையில் முன் வந்து நின்றது. அதன் உடலில் சிறிய தீப்புண்கள் காணப்பட்டன. ஸ்வாமிகளும் தம் கரத்தினால் அதைத் தடவிக்கொடுத்து, அதற்குச் சிகிச்சைகள் செய்யும்படி உத்திர விட்டார்கள்.

**சங்கீதத்தின் மூலம் கடவுள் பற்று**

பூசமலைக் குப்பத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தபோது வேலூரிலிருந்து ஒரு பக்தகோஷ்டியார் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தனர். அவர்களில் வக்கீல்கள், வியாபாரிகள், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், டாக்டர்கள் இவ்விதமாகப் பல தொழில் நிபுணர்கள் கூடியிருந்தனர். அக்கூட்டத்தில் சங்கீதத்தில் தேர்ச்சி பெற்று நன்றாகப் பாடக்கூடியவர்களும் சிலர் இருந்தனர். அவர்கள் தம்புராவுடனும் இதர வாத்யங்களுடனும் வந்திருந்தனர். ஸ்வாமிகள் முன்னிலையில் கச்சேரி செய்யவேண்டுமென்று அவர்களுக்கு மிகவும் அவா இருந்தது. ஸ்வாமிகள் அவர்களை ஜாகைக்கு ஒரு மைல் தூரத்திலுள்ளதும் இயற்கை அழகு வாய்ந்ததுமான ஓர் குன்றின் அடிவாரத்திற்கு வரும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே மாலை 5-மணிக்கு அவ்விடம் யாவரும் கூடினார்கள். ஸ்வாமிகளும் அந்த இடத்திற்கு விஜயம் செய்தார்கள். அப்பொழுது ஒரு சங்கீத வினிகை ஏற்பாடாயிற்று. நன்றாகப் பல்லவி பாடக்கூடிய வித்வான்கள் சிலரும் அதில் கலந்துகொண்டனர். அப்பொழுது ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் வெகு இனிமையாகவும், சாஸ்த்ரோக்தமாகவும் பாடிக்கொண்டிருந்தார். அவருடைய சங்கீதத்தில் யாவரும் ஈடுபட்டிருந்தனர்.

அவர் **சிவதீக்ஷாபருலா** என்னும் கீர்த்தனையைப் பாடும் பொழுது, ஸ்வாமிகள் அந்தக் கீர்த்தனையின் பொருளை விளக்கிக் கூறும்படி அந்த வித்வானுக்குக் கட்டளை இட்டார்கள். கீர்த்தனையில் ஸ்ரீவைஷ்ணவருடன் சேரமாட்டேனென்று பொருள் அமைந்திருக்கிறது. வித்வானோ அதன் பொருளைக் கூறச் சற்றுத் தயங்கவே, கூட்டத்தில் யாவரும் ஹாஸ்யமாகச் சிரித்தனர். ஸ்வாமிகள் பின்னர் அந்தக் கீர்த்தனத்தின் உண்மைப் பொருளை விளக்கி, இதில் துவேஷத்திற்கோ ஹாஸ்யத்திற்கோ இடமில்லை யென்றும், தனது பற்று முழுவதையும் ஒரே தெய்வத்தின் மேல் வைத்து ஒரு பக்தன் பாடும்பொழுது துவேஷத்தை மனத்தில் கொள்ளமாட்டானென்றும், கீர்த்தனையில் கடுமையான சொற்கள் ஏதாவது இருந்தால், அது பாடியவரின் தீவிர பக்தியையே விளக்குகிறதென்றும் அந்தச் சாகித்திய கர்த்தா எந்த நிலையில் கடவுளிடம் பக்தி கொண்டிருந்தாரோ, அதே நிலையில் யாவரும் தங்கள் வழிபடும் தெய்வங்களிடம் பற்றுக் கொள்ள வேண்டுமென்றும் கூறினார்கள். பக்தகோஷ்டியினர் ஸ்வாமிகளின் இந்த உபதேச மொழிகளைக் கேட்டு எதிர்பாராது தங்களுக்குக் கிடைத்த ஓர் உபதேசமாய் இதை மதித்து மகிழ்ச்சியுற்றவர்களாகி ஸ்வாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டனர்.

**மஹான் அப்பய்ய தீக்ஷிதரின் ஊருக்கு விஜயம்**

வடமொழியில் பல நூல்கள் இயற்றி ஒப்பற்ற சிவபக்தராக விளங்கிய **அப்பய்யதீக்ஷிதர்** அவர்களது சொந்த தலமாகிய **அடையபலம்** என்னும் சிற்றூருக்கு ஸ்வாமிகள் 2-6-1930-இல் விஜயம் செய்தார்கள். இந்த ஊர் ஆரணிக்கு அருகில் மூன்று மைல் தூரத்திலுள்ளது. ஸ்வாமிகள் அவ்வூர்ச் சிவன் கோவிலில் தங்கி பூஜைகளை முடித்துக்கொண்டு, 400 வருடங்களுக்கு முன் அவ்வூரில் வாழ்ந்த அந்த மஹானைப்பற்றிய சரித்திரத்தையும் அவர் இயற்றிய நூல்களையும்பற்றி பிரஸங்கம் புரிந்தார்கள். தீக்ஷிதரது அவதார நாளை ஒவ்வொரு வருடமும் கொண்டாட வேண்டுமென்று ஸ்வாமிகள் அவ்வூராரிடம் வற்புறுத்தினார்கள். தீக்ஷிதர் பிறந்த ஊராகிய **விரிஞ்சிபுரத்திற்கும்** ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். அவர்களின் சந்ததியார் தீக்ஷிதரது வமிசத்தில் பிறந்ததாக மாத்திரம் பெருமை கொள்ளாது, அவர் நூல்களைக் கற்று அவரது பெருமை என்றும் உலகில் நிலைத்திருக்கச் செய்யவேண்டுமென ஸ்வாமிகள் அங்குக் கூறினார்கள்.

**செங்கல்பட்டு ஜில்லாவில் விஜய யாத்திரை**

பூசமலைக்குப் பக்கத்தில் 1930-ஆம் வருடத்திய வியாஸ பூஜை சாதுர்மாஸ சங்கல்பத்தை முடித்துக்கொண்டு ஸ்வாமிகள் **காவேரிப்பாக்கம், ராணிப்பேட்டை, வாலாஜாபாத், ஆர்க்காடு, திருவள்ளூர், பூந்தமல்லி,** சென்னைக்கடுத்த **கோயம்பேடு** ஆகிய இடங்களுக்கு விஜயம் செய்துவிட்டு அவ்வருட இறுதியில் **செங்கல்பட்டுக்கும்** அதன் பின்னர் **பக்ஷிதீர்த்தம்** என்னும் **திருக்கழுக்குன்றத்திற்கும்** விஜயம் செய்தார்கள். அங்கே **வேதகிரீசுவர** ஸ்வாமி தரிசனம்செய்து கொண்டார்கள். அவ்விடம் அகில இந்திய சாதுமகா சங்கத்தார் ஸ்வாமிகளுக்கு (25-12-1930) ஒரு வரவேற்பளித்தனர். நம் ஸ்வாமிகளிடம் சாதுசங்கத்தார் வைத்திருந்த ஆழ்ந்த பக்தியை வெளிக்காட்டும் அவ்வரவேற்பின் வாசகத்தைக் கீழே காணலாம்.

"இப்பாரத பூமியை ஞான ஒளியால் விளங்கச் செய்யும் ஜகத்குருநாதா! முற்காலத்தில் நம் கண்டத்தை அறிவு மயமாய்த் திகழச் செய்வதற்கான பெருங் கைங்கரியத்தை மேற்கொண்டு ஆன்மாக்களுக்கு இதத்தையே செய்யும் சங்கரரே திரு அவதாரமாகி, சன்மார்க்கம் தழைக்கச் செய்த சத்குரு மரபில் தோன்றிய அருள் வள்ளலே! நின் வரவு நல் வரவாகுக! ஞானமயமாய் விளங்கும் கிருபா மூர்த்தி! தொன்மைப் பெரும் புகழ்கொண்ட நின் அடிமலர் பதிந்த இத்தலம் மேலும் மேலும் தூயதாய்ப் பக்குவான்மாக்களுக்கு ஏற்ற வண்ணம் ஞானத்தியாகம் செய்யும் தன்மையை மேற்கொள்ளும் என்பதில் ஐயமில்லை. இம் மண்டபம் ஸ்வாமிகளின் அரிய திருவடி தீண்டப்பெறுதலின் **'புனிதமாம் என்ன மாதவம் செய்தது இச்சிறு குடில்?'** என்ற உண்மையை விளக்குகின்றது. ஆன்ம ஞானம் குன்றி அதன் உண்மை இன்னதென்றே விளங்காமல், கண்டன கண்டன கூறித் திரியும் போலிஞானிகள் மலிந்த இக்காலத்தில் உண்மைத் தத்துவ ஞானத்தை உணர்த்தி எவரையும் நன்னெறிப் படுத்தும் ஒழுக்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஞான சத்குருவே! நின் மலரடி வணங்குகின்றோம். தமோ குணம் எங்கும் நுழைந்து மனம் வலுவிழந்து நிற்கின்ற இன்றைப்பொழுது, அன்பாகிய தருவிலி பழுத்த தவமாகிய அருங்கனி! அதன் ரசமாகிய அத்வைதத்தைக் கற்பிக்க எழுந்தருளிய ஞானதருவே! நின் மலரடியை உவந்து வணங்கின்றோம். அன்பைப் பெருக்கி ஆனந்தம் ஊட்டி ஆன்ம சக்தி வளரச் செய்வோய்! சரணம்! சரணம்! நின் பாத

பங்கயம், சரணம்! சரணம்! ஜகத்குரு சங்கர பகவத்பாதரே! சரணம்! சரணம்!''

இந்த வரவேற்புப் பத்திரத்திற்கு ஸ்வாமிகள் பதிலளிக்கையில் சாதுக்கள் தங்களுக்கு மோக்ஷ சாதனமாகவுள்ள வழிகளைத் தேடிக் கொள்வதுடன் ஆத்மிகத் துறையில் மக்களை நல்வழிப் படுத்துவதிலும் முயற்சிக்க வேண்டுமெனக் கூறினார்கள்.

**செங்கல்பட்டில் பால்பிரண்டன் என்னும் ஆங்கிலேயருக்குப் பேட்டியளித்தது**

1931-ஆவது வருடம் ஜனவரி மாதத் துவக்கத்தில் ஸ்வாமிகள் **செங்கல்பட்டிற்கு** விஜயம் செய்திருந்தார்கள். பல வருஷங்களாக ஸ்வாமிகளை எதிர்பார்த்திருந்த செங்கல்பட்டு வாசிகளுக்கு ஸ்வாமிகள் விஜயம் ஒரு பேரின்பத்தை அளித்தது. பெரியோர்கள், குழந்தைகள், பணக்காரர்கள், ஏழைகள் மற்றும் கீழ்க்குலத்தோர் மேல் குலத்தோர் என்னும் பாகுபாடின்றி யாவரும் ஸ்வாமிகளின் வழிபாட்டில் அப்பொழுது கலந்து கொண்டனர். ஸ்வாமிகள் அவ்வூரில் தங்கியிருந்தபோது ஒவ்வொரு இரவிலும் அவ்வூர்ச் சிவன் கோயிலில் பக்தர்களுக்கு உபதேசமொழிகளைக் கூறிவந்தார்கள்.

அச்சமயம் **பால்பிரண்டன்** என்னும் ஆங்கிலேயர் நமதுபாரத பூமியிலுள்ள யோகிகள் பலரைச் சந்தித்து அவர்களின் ஆசியைப் பெறும் எண்ணத்துடன் ஓர் சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தார். அவர் வட இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு, தென் இந்திய யாத்திரையின் பொருட்டுச் சென்னைக்கு வந்தார்: சென்னையில் பிரபல ஆங்கில எழுத்தாளராய் விளங்கிய **ஸ்ரீ கே. எஸ். வேங்கடரமணிக்கு** இவர் இங்கிலாந்திலிருந்து ஓர் அறிமுகக் கடிதம் கொண்டுவந்திருந்தார். அக்கடிதத்துடன் சென்னையில் முதன்முதலாக அவர் ஸ்ரீ வேங்கடரமணியைச் சந்தித்தார். பால்பிரண்டன் அவரைப்பற்றித் தம் **''பாரத நாட்டின் ரகசியம் பற்றிய ஆராய்ச்சி''** (Search in Secret India) என்னும் புத்தகத்தில், 'இங்கிலாந்திலுள்ள ஹால்டேன் பிரபு மற்றும் ரவீந்திரநாத் டாகூர் முதலானவர்களால் புகழப்பெற்ற இவர் ஆங்கில பாஷையின் மூலம் இந்தியக், கிராம வாழ்க்கையை முதன் முதலாக வெளியிட்டவர். சென்னைச் சர்வ கலாசாலை செனட்டில் அவர் ஓர் அங்கம் வகிப்பவர். உயர்ந்து மெல்லிய மேனி படைத்த அவரது சிறிய தலையின் மேல் சிறிதளவு குடுமி காணப்பட்டது. மூக்குக்கண்ணாடி பொருத்தப்பட்ட அவரது கண்களின்

தோற்றத்தில், சிந்தனையில் ஆழ்ந்த உள்ளத்தையும் ஆதர்ச புருஷனையும் கவியையும் கண்டேன். ஆயினும் நாட்டில் உழுது பயிரிடும் ஏழை மக்களின் துக்கமும் துன்பமும் அவருடைய கண்களில் பிரதிபலித்துக் கொண்டிருந்தன' எனக் கூறியுள்ளார்.

அந்த ஐரோப்பியர் சென்னையில் வேங்கடரமணியைச் சந்தித்து, சித்திபெற்ற யோகிகளைக் காணத் தமக்கு அவர் உதவி புரிய வேண்டுமென்றும், வெறும் வேஷதாரிகளான பலரைக் காண்பதைத் தான் விரும்பவில்லையென்றும் தெரிவித்துக் கொண்டார். வேங்கடரமணியும் சற்று நிதானத்துடன் அவரது வேண்டுகோளைப்பற்றி யோசித்து, ஒருபுறம் நாத்திகமும் மற்றொருபுறம் மேல்நாட்டு நாகரிகமும் நிறைந்திருக்கும் இந்நாளில் வெளிப்படையாக யோகிகளைக் காண்பது அரிதென்றும், அவர்கள் தனிமையில் ஜனங்களின் கண்களுக்குப் புலனாகாமல் நிஷ்டையில் இருப்பார்களென்றும், இந்தியர்களுக்கே சுலபமாகக் கிட்டாத இந்த யோகிகளை ஓர் ஐரோப்பியர் அடைவது மிகவும் கடினமென்றும் அவரிடம் கூறிவிட்டார். ஆயினும் மறுநாள் வேங்கடரமணி மறுபடியும் பால்பிரண்டனைச் சந்தித்து கீழே கண்ட ஆலோசனை ஒன்றைத் தெரிவித்தார்.

"தென்னிந்தியாவின் மதத் தலைவரும் எனக்கு மிகுந்த ஆதரவு அளிப்பவருமான ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் செங்கல்பட்டுக்கு வந்திருப்பதாக நேற்றிரவு எனக்குத் தகவல் எட்டியது. ஆத்மிகத் துறையில் நான் அவர் உபதேசத்தையே நாடி வருகிறேன். அவர் தவத்தின் உன்னத நிலையை அடைந்தவர்; ஓர் உண்மைத் துறவி; பெரிய வேதாந்தி. அவர் ஒரு யோகியாக இல்லாவிடினும் யோக மார்க்கத்தின் உண்மைகளை நன்கறிந்தவர். இந்த நாட்டிலுள்ள நகரங்களிலும் கிராமங்களிலும் யாத்திரை செய்து வருகிறார். அவர் செல்லும் இடமெல்லாம் பக்தர்கள் அவரை வணங்கி வருகிறார்கள். தாங்கள் உபயோகமுள்ள முறையில் அவர் மூலம் சில உபதேசங்களைப் பெறலாமென்று நினைக்கிறேன். அவர் தங்கியிருக்கும் இடம் சென்னையிலிருந்து 60 கிலோ மீட்டர் மைல் தூரத்தில்தான் இருக்கிறது. ஆனால் தங்களுக்கு ஸ்வாமிகள் பேட்டியளிப்பார்களா என்பதுதான் சந்தேகம். எப்படியாயினும் நான் அதற்கான முயற்சிகளைச் செய்கிறேன்" என்றார்.

இந்த ஆலோசனையைக் கேட்ட பிரண்டனும் ஸ்வாமிகளைத் தரிசிக்க அவருடன் செல்லச் சம்மதிக்கவே இருவரும் அதிகாலையில் செங்கல்பட்டிற்குப் புறப்பட்டனர். போகும் வழியில்

ஸ்வாமிகளின் எளிய வாழ்க்கையைப் பற்றியும், பீடத்தின் ஆதி ஆசார்யரான ஸ்ரீ சங்கரரைப் பற்றியும், அவரது சித்தாந்தத்தைப் பற்றியும், வேங்கடரமணி கூறிக்கொண்டே போனார். மேலும் பீடத்தின் சரித்திரத்தைப்பற்றித் தாம் அறிந்த யாவற்றையும் அந்த ஐரோப்பியருக்குச் சொல்லிக்கொண்டுவர, அவரும் மிகுந்த கவனத்துடன் கேட்டுவந்தார். இருவரும் செங்கல்பட்டை அடைந்து ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்த வீட்டிற்குச் சென்றனர். பிரண்டன் ஓர் ஐரோப்பியராக இருந்ததாலும், நூற்றுக்கணக்கானவர் முன்கூட்டியே அன்று தரிசனத்திற்குக் காத்திருந்ததாலும் அவருக்குத் தரிசனம் கிடைப்பது சாத்திய மில்லையென்று மடத்தின் அதிகாரிகள் கூறிவிட்டனர். பின்னர் வேங்கடரமணியே ஸ்வாமிகளிடம் நேரில் சென்று விண்ணப்பித் துக்கொள்ள, ஸ்வாமிகள் அந்த ஆங்கிலேயரைத் தம்மிடம் அழைத்து வர அனுமதித்தார்கள். அதில் வேங்கடரமணிக்கு ஏற் பட்ட மகிழ்ச்சியும் பெருமையும் அளவு கடந்திருந்தன. அந்த ஆங் கிலேயர் புஷ்ப ஆரங்கள், ஆரஞ்சுப் பழங்கள் முதலியவற்றைத் தாம் தூக்கிச் செல்லக்கூடிய அளவுக்கு எடுத்துக்கொண்டு, ஸ்வாமிகள் தங்கியிருந்த வீட்டிற்குள் நுழைந்தார். அவ்விடம் மேஜை நாற்காலி ஒன்றுமில்லாத ஓர் இருட்டறை; அதன் ஒரு மூலையில் மங்கலான எண்ணெய் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அந்த விளக்கின் நிழலில் அதிக உயரமில்லாத ஸ்வாமிகளின் உருவத்தைப் பிரண்டன் கண்டார். அவர் தயக்கத்துடன் முன் நெருங்கித் தாம் கொண்டுவந்த பழம், புஷ்பம் இவைகளை ஸ்வாமிகளின் முன்னிலையில் சமர்ப்பித்து, இந்துக்கள் வணங்கும் முறையில் ஸ்வாமிகளை நோக்கித் தரையில் வணங்கினர். (ஸ்வாமிகளின் தோற்றத்தில் அவர் மிகவும் அதிகமாக ஈடுபட்டு, அது மிகவும் தெய்வத் தன்மை வாய்ந்த தெனத் தம் புத்தகத்தில் பிறகு வரைந்துள்ளார்). முதலில் அவர் ஆங்கிலத்தில் ஸ்வாமிகளைப் பார்த்து, "தாங்கள் என்னை இவ்விடம் வர மிகவும் அன்புடன் அனுமதித்தீர்கள்" எனக் கூறினர். ஸ்வாமிகள் வழக்கமான தமது மந்தகாசத்துடன் அதை ஏற்றுக்கொண்டார்கள். ஆங்கிலம் பேசுவதை ஸ்வாமிகள் புரிந்துகொள்வார்களென்றும், ஆனல் அவர்கள் பதிலை இந்திய பாஷைகளில் கூறுவார்கள் என்றும், தாம் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கூறுவதாகவும் பிரண்டனிடம் வேங்கட ரமணி தெரிவித்தார். ஸ்வாமிகள் தீர்க்கதரிசிகளென்றும், பின் னல் நடைபெறப்போவதை முன்னலேயே ஊகித்துச் சொல்லக்

கூடியவர்களென்றும் வேங்கடரமணி மூலம் அந்த ஆங்கிலேயர் கேள்விப்பட்டிருந்ததால், உலகத்தின் எதிர்காலத்தைப்பற்றி ஸ்வாமிகளை அவர் சில கேள்விகள் கேட்கத் தொடங்கினர்.

**கேள்வி :**—உலகத்தின் தற்கால ராஜீய நிலைமையும், பொருளாதார நிலைமையும் எப்பொழுது சீர்படுமென்று தாங்கள் நினைக்கிறீர்கள் ?

**பதில் :**—நிலைமை திருந்துவதென்பது சுலபமாகவும் வேகமாகவும் நடைபெறக்கூடியதன்று. அது காலக்கிரமத்தில் தான் நடைபெறவேண்டும். பெரிய நாடுகள் ஒவ்வொரு ஆண்டிலும் அழிக்கும் ஆயுதங்களை உற்பத்தி செய்வதில் ஏராளமான பொருளைச் செலவிட்டுக்கொண்டிருக்கும் போது எவ்விதம் உலகம் சீர்திருந்த முடியும் ?

**கேள்வி :**—உலகில் ஆயுத ஒழிப்புப் பேச்சுக்களும், தற்காலம் நடைபெற்று வருகின்றனவே! அதனால் ஏதாவது பயன் ஏற்படுமா ?

**பதில் :**—உங்கள் சண்டைக் கப்பல்களை உடைத்தெறிந்தாலும் இயந்திர பீரங்கிகளைத் துருப்பிடிக்கச் செய்தாலும் அவையொன்றும் சண்டையை நிற்கச் செய்யாது. கையில் கம்புகளை ஏந்தியாவது ஜனங்கள் சண்டையிடுவார்கள்.

**கேள்வி :**—அப்படியானால் உலகம் சீர் அடைய என்னதான் வழியெனத் தாங்கள் எண்ணுகிறீர்கள் ?

**பதில் :**—ஆத்மிகத் துறையில் ஒரு நாடு மற்றொரு நாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும். அவ்விதமே முதலாளிகள் ஏழைகளைப் புரிந்து கொள்ளவேண்டும். இதனால் தான் ஒருவருக்கொருவர் நல்லெண்ணம் ஏற்படும். இவ்வித நல்லெண்ணம் ஏற்படுவதால் உண்மையான சமாதானமும் தேசங்களுக்கு நன்மையும் உண்டாகும்.

**கேள்வி :**—தாங்கள் கூறுவது எளிதில் நடைபெறக் கூடியதாக நான் எண்ணவில்லை. ஆகையால் எங்களுக்கு (ஐரோப்பியர்களுக்கு) ஒருபொழுதும் மனநிம்மதி கிடைக்காதென்றே நாங்கள் முடிவுக்கு வரவேண்டுமா?

**பதில் :**—அவ்விதம் நினைப்பதற்கில்லை. நம்மை எல்லாம் ஆளும் கடவுளது சக்தி ஒன்று உலகில் இருக்கிறது.

**கேள்வி :**—கடவுள் ஒருவர் இருக்கிறார் என்றாலும், அவரை அடைவது எளிதான காரியமன்றே ?

**பதில்** :—மனித சமுதாயத்தில் எப்பொழுதும் கடவுள் அன்பு கொண்டவராகவே இருக்கிறார். அன்பு நிறைந்த இடத்தில் கடவுளைக் காணலாம்.

**கேள்வி** :—தற்காலம் உலகில் வியாபித்திருக்கும் அமைதியின்மையையும் அக்கிரமங்களையும் கவனிக்கும்போது கடவுள் மக்களைப்பற்றிச் சற்றும் கவலை கொள்ளாமல் இருக்கிறாரோ என நினைக்கவேண்டியிருக்கிறதல்லவா ?

**பதில்** :—அவ்விதம் நினைப்பதற்கில்லை. பொறுமையுடன் இருப்பவன், எதிர்காலத்தை ஆழ்ந்த சிந்தனையுடன் பார்ப்பான். கடவுள் மனிதன் உருவத்திலேயே தோன்றி ஓர் குறிப்பிட்ட காலத்தில் இந்தச் சிக்கல்களையெல்லாம் சீர்ப்படுத்துவார். பெரிய சாம்ராஜ்யங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் சச்சரவுகளும், மக்களின் அதர்மச் செயல்களும், கோடிக்கணக்கான ஏழைகளின் கஷ்டங்களும், எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகின்றனவோ, அப்போதுதான் ஒரு மாறுதலுக்கும் சந்தர்ப்பம் நேரிடும். தெய்விக சக்தி வாய்ந்த மனிதன் ஒருவன் உலகில் அப்பொழுது தோன்றுவான். இந்தக் கஷ்டங்களுக்கெல்லாம் அந்த மனிதன் மூலம் ஓர் முடிவு ஏற்படும் ; ஒவ்வொரு நாட்டிலும் இவ்வித மகா புருஷன் தோன்றி மக்களைக் காப்பாற்றலாம். பௌதிக சாஸ்திரத்தின் நியாயத்தைப் போல், இந்த மாறுதல் உலகில் படிப்படியாக ஏற்படும். மக்களது நாத்திகக் கொள்கைகளாலும் தன்னை உணராததாலும் எவ்வளவு வேகமாகத் துன்பங்கள் பரவுகின்றனவோ, அவ்வளவு வேகமாகவே உலகத்தைக் காப்பாற்றவும் கடவுள் சக்தியுடன் இந்த மனிதன் தோன்றுவான்.

**கேள்வி** :—ஆகையால், நமது காலத்தில்கூட அத்தகைய மனிதன் அவதரிப்பானெனத் தாங்கள் நினைக்கின்றீர்களா?

**பதில்** :—ஆம், எங்கள் நாட்டிலேயே அவ்வித அவதார புருஷன் தோன்றலாம். இந்த அவதாரத்திற்கு இப்பொழுது அவசியமும் ஏற்பட்டுவிட்டது. உலகில் அஞ்ஞான இருளும் அதிகமாகப் பரவியிருக்கிறது.

**கேள்வி** :—உலக மக்கள் இப்பொழுது மிகவும் கேவலமான நிலையை அடைந்து விட்டதாகத் தாங்கள் கருதுகிறீர்களா ?

**பதில்** :—இல்லை. ஒவ்வொரு மனிதனது இருதயத்திலும் ஆத்ம சக்தி நிறைந்திருக்கிறது. அந்தச் சக்தியானது அவனை முடிவில் கடவுளிடமே கொண்டுபோய் விடுகிறது.

**கேள்வி** :—மேல் நாடுகளில் இப்போது மனிதனது இருதயத்தில் பைசாசங்கள் அல்லவோ புகுந்திருக்கின்றன? அவர்கள் செயல்களும் அவ்விதம்தான் இருக்கின்றன. இவ்விஷயத்தில் தாங்கள் எவ்விதம் நினைக்கிறீர்கள்?

**பதில்** :—மனித வர்க்கத்தை அவ்விதம் குறை கூறவேண்டாம். அவரவர்கள் பிறந்த சூழ்நிலையில் அவரவர்கள் நடந்துகொள்கிறார்கள். உண்மையில் எவரும் அவ்வளவு மோசமானவர்களல்லர். சந்தர்ப்பங்களை ஒட்டியே அவர்கள் மோசமாக நடந்துகொள்ளும்படி நேரிடுகிறது. இவ்வுண்மை மேற்கு நாடுகளுக்கும் கிழக்கு நாடுகளுக்கும் ஒன்றேதான். உலகெல்லாம் ஓர் உயர்ந்த கொள்கை பரவ வேண்டும். இன்று நாம் பார்ப்பதும் அனுபவிப்பதும்தான் உண்மை என்னும் எண்ணத்தை மனிதன் மாற்றிக்கொண்டு, மனித சக்திக்குமேல் ஓர் தெய்வ சக்தி இருக்கிறதென்பதை அவன் உணர வேண்டும். அப்பொழுதுதான் உலகத்தில் துன்பங்களுக்கு எல்லாம் ஓர் முடிவு காணலாம். எல்லா நாடுகளிலும் இவ்விதத் துன்பங்களில் மக்கள் மூழ்கியிருக்கிறார்கள். ஒருவனது தவறு உச்ச நிலையை அடையும்போது, அவனுக்குப் புதிதாக ஒரு நல்ல மார்க்கம் தோன்றுவதுபோல, ஓர் உலக மாறுதலை நாம் இப்பொழுது காணவேண்டும்.

**கேள்வி** :—ஆகையால் தாங்கள் மனிதனது உலக வாழ்க்கையிலேயே தெய்விகத்தை புகுத்திவிடலாமென்று நினைக்கின்றீர்களா?

**பதில்** :—ஆம். அது சாத்தியமானதென்றே நான் கருதுகிறேன். அதுதான் எல்லோருக்கும் முடிவுகாலத்தில் திருப்தியைத் தரக்கூடிய பயனை அளிக்கும். அப்பயனும் எளிதில் மறைந்துவிடாது. தெய்விக சக்தி வாய்ந்த மனிதர்கள் எவ்வளவுக் கெவ்வளவு உலகில் அதிகமாகத் தோன்றுகின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு உலகில் இந்த எண்ணம் சீக்கிரமாகப் பரவும். தெய்வத் தன்மை வாய்ந்த மகான்களைப் பாரத தேச மக்கள் மதிப்புடன் நடத்தி வருகிறார்கள். அதுபோல் உலகில்

மற்றெல்லாத் தேசங்களும் நடந்து, அந்த மகான்கள் காட்டும் வழியைப் பின்பற்றுவார்களானுல், உலகெல்லாம் அமைதியும் சிறப்பும் பெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை. இப்பொழுது நன்மை தீமை இவை இரண்டும் உலக முழுவதும் பரவியிருக்கின்றன. இனிப் பிறக்கும் சந்ததியார் அவர்களது (ஆசிய-ஐரோப்பிய) நாகரிகத்தின் உயரிய கொள்கைகளைக் கடைப்பிடித்து, சமுதாயத்தின் சீரிய மக்களாக விளங்குவார்களென நான் நம்புகிறேன்.

பின்னர் பால் பிரண்டன் நம் ஸ்வாமிகளைப்பற்றிய விஷயங்களைச் சில கேள்விகள் மூலம் கேட்கத் தொடங்கினுர்.

**கேள்வி** :—தாங்கள் எவ்வளவு ஆண்டுகளாக இந்தப் பீடத்தில் அமர்ந்திருக்கிறீர்கள் ?

**பதில்** :—1907-ஆம் வருடம் நான் இந்தப் பீடத்தில் அமர்ந்தேன், அப்போது எனக்குப் பிராயம் சுமார் 12.

**கேள்வி** :—தாங்கள் தங்கள் நிர்வாக ஸ்தலமாகிய கும்பகோணத்தில் அதிகமாகத் தங்குவதில்லையென நினைக்கிறேன். நான் நினைப்பது சரிதானு?

**பதில்** :—ஆம், நான் சென்ற 15 ஆண்டுகளாக இந்த ஜில்லாக்களில் கிராமம் கிராமமாக யாத்திரை செய்து வருகிறேன். என் யாத்திரையும் மெதுவாகவே நடந்து வருகிறது. இப்பொழுது வடக்கே காசி வரை போவதாகத் திட்டமிட்டுள்ளேன்.

அதன் பின்னர் அந்த ஐரோப்பியர் தாம் நாடி வந்த விஷயத்தைப்பற்றி ஸ்வாமிகளிடம் பேசத் தொடங்கினுர். ஸ்வாமிகளும் அதுவரை அந்த ஐரோப்பியர் பாரத நாட்டில் சந்தித்த யோகிகளையும் சாதுக்களையும்பற்றி விசாரித்தார்கள். அவர் அவர்கள் எல்லோரையும் பற்றி விளக்கமாகக் கூறிவிட்டு ஸ்வாமிகளைப் பார்த்துக் கேட்டார்.

**கேள்வி** :—யோகாப்பியாசத்தில் சித்தி பெற்று அதன் பயனை நிதர்சனமாகக் காட்டக் கூடிய ஒரு மகானை நான் காண விரும்புகிறேன். அவரிடம் அதிகமாகப் பேசுவதைக்கூட நான் விரும்பவில்லை. நான் இவ்விதம் கேட்பதால் என் நிலைமைக்கு அதிகமானதொரு பயனை நான் எதிர்பார்ப்பதாகத் தாங்கள் நினைக்கலாம். இவ்விஷயத்தில் தாங்கள் எனக்கு வழி காட்டுவீர்களா?

பதில் :—உயரிய யோக மார்க்கத்தை நீங்கள் பயில வேண்டுமென்று நினைப்பதில் யாதொரு தவறுமில்லை. அதில் உங்கள் சிரத்தைதான் உங்களுக்குப் பயனளிக்கும். தீவிரமான மன உறுதியும் இதற்கு வேண்டும். இவை உங்களிடம் இருப்பதாகவே நான் நினைக்கின்றேன். இப்பொழுது உங்கள் உள்ளத்தில் ஒரு ஒளி தோன்றமுற்பட்டிருக்கிறது. அந்த ஒளியே நீங்கள் கோரும் பயனை அளிப்பதற்கு உங்களுக்கு நிச்சயமாக உதவியளிக்கும்.

கேள்வி:—தாங்கள் கூறுவதை நான் முற்றிலும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும் இதுவரை நானும் சிந்தனை செய்து வந்திருக்கிறேன். பாரத நாட்டின் பழைய காலத்து ரிஷிகளும்கூடக் கடவுள் நமது ஹிருதயத்திலேயே வசிப்பதாகக் கூறியுள்ளார்கள். இதை எனக்கு விளக்கமாகக் கூறுவீர்களா ?

பதில் :—கடவுள் எங்கும் நிறைந்தவர். அவரை ஒருவர் ஹிருதயத்தில் மாத்திரம் அடங்கியவராக எண்ணிவிடலாகாது. இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் அவரே தான் தாங்கிக் கொண்டிருக்கிறார்.

கேள்வி :—பின்னர் நான் எந்த மார்க்கத்தைக் கடைப் பிடிக்க வேண்டுமென்பதை எனக்குக் கூறுவீர்களா ?

பதில் :—உங்கள் சுற்றுப் பிரயாணத்தை நீங்கள் மேலும் தொடர்ந்து அது ஒருவாறு முடிவடைந்தவுடன் நீங்கள் சந்தித்த யோகிகளையும் சாதுக்களையும் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். அவர்களில் யாரை உங்கள் மனத்திற்கு உகந்தவர்களாக எண்ணுகின்றீர்களோ, அவரையே அடையுங்கள். அவர் நீங்கள் கோரும் மார்க்கத்தை உங்களுக்கு உபதேசிப்பார்.

கேள்வி :—என் மனத்திற்குத் திருப்தி யளிக்கக்கூடியவராக எனக்கு எவருமே கிடைக்காவிட்டால், நான் மேலும் செய்யவேண்டுவதென்ன ?

பதில் : அவ்விதம் ஒருவரும் கிடைக்காவிட்டால் நீங்களாகவே தனிமையில் முயற்சி செய்யவேண்டும். ஒவ்வொரு நாளும் தியானத்தில் மனத்தை ஈடு படுத்தவேண்டும். அற்ப விஷயங்களையெல்லாம் மனத்தை விட்டு அகற்றி உயரிய விஷயங்களை அன்புடன் மனத்தில் சிந்தனை செய்யவேண்டும். ஆத்மாவைப்பற்றி அடிக்கடி

நினைக்கவேண்டும். அதுவே சாதனைக்கு உதவும். இந்த அப்பியாசங்களைச் செய்வதற்கு விடியற்காலையே ஏற்ற காலமாகும். மாலைச் சந்தி நேரங்களிலும் தியானம் செய்யலாம். இந்த இரண்டு நேரங்களிலுமே அமைதி நிறைந்து இருக்கும். அப்பொழுது தியானத்திற்கு இடையூறும் அதிகமாக ஏற்படாது.

**கேள்வி** :—என் சொந்த முயற்சியிலும் எனக்குப் பயன் கிடைக்காவிட்டால் நான் மறுபடியும் தங்கள் உதவியை நாடலாமா !

**பதில்** :—நான் ஒரு பொது ஸ்தாபனத்தின் தலைவனாக அமர்ந்துள்ளேன். அநேகமாக இரவு பகல் முழுவதுமே இந்த ஸ்தாபனத்தின் காரியங்களில் நான் ஈடுபடவேண்டியவனாக இருக்கிறேன். அப்படியிருப்பதால், தனிமையில் காலத்தைச் செலவிட வசதியுள்ள ஓர் குருவையே நீங்கள் நாடவேண்டும்.

**கேள்வி** :—உண்மையான ஆசார்யர்கள் கிடைப்பது அரிதென்றும் அதிலும் ஓர் ஐரோப்பியன் அவர்களைக் காண முடியாதென்றும் கூறுகின்றார்களே !

**பதில்** :—உலகில் உண்மை இல்லாமலில்லை. அதை நாம் காணவும் முடியும்.

**கேள்வி** :—அப்படியானால் அப்படிப்பட்ட ஓர் உண்மையான ஒரு ஆசார்யரிடம் என்னை அனுப்புவீர்களா ?

**பதில்** :—அப்படிப்பட்ட இருவர்களை மாத்திரம் நான் மனத்தில் கொண்டுள்ளேன். அவர்களிலொருவர் இந்த நாட்டின் தென் பாகத்தில் அடர்ந்த கானகத்தில் வசித்து மௌனத்தையும் மேற்கொண்டு வருகிறார். வெகு சிலரே அவரைக் காணமுடியும். இதுவரை ஐரோப்பியர் எவரும் அவரைக் கண்டதில்லை. நான் அவரிடம் தங்களை அனுப்பலாம். ஆனால் அவர் ஐரோப்பியரை ஏற்றுக்கொள்ள மறுத்துவிடலாம்.

**கேள்வி** :—மற்றொருவரைப்பற்றி நான் அறிந்துகொள்ள ஆவலாக இருக்கிறேன். அவர் யார் ?

**பதில்** :—மற்றொருவர் உள்நாட்டில்தான் வாசம் செய்கின்றார். அவர் ஒரு சீரிய ஞானியாக விளங்குகிறார். நீங்கள் அவரை நாடிச் செல்லலாம்.

**கேள்வி** :—அவரைப்பற்றி நான் மேலும் விவரம் தெரிந்து கொள்ளலாமா ?

பதில் :—அவரை மகரிஷி எனக் கூறுவார்கள். வட ஆர்க்காடு ஜில்லா, திருவண்ணுமலை என்னும் ஊரில் ஜோதிமய மாக விளங்கும் அருணுசலத்தில், அவர் வசித்து வருகிருர். அவரை அடைய மேலும் விவரங்களை அவசியமானுல் தெரிவிக்கின்றேன்.

கேள்வி :—தங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். அதே இடத்திலிருந்து என்னைக் காண ஒருவர் வந் திருக்கிருர். தங்களுக்குள்ள எவ்வளவோ முக்கிய மான அலுவல்களுக்கிடையில் தங்களது காலத்தை நான் உபயோகித்துக் கொண்டுவிட்டேன். அதற்காக என்னை மன்னிக்கவேண்டும். எனக்கும் போக விடை தருகின்றீர்களா?

பதில் :—சரி. நீங்கள் தவருது திருவண்ணுமலைக்குச் செல்வீர் களென்று நினைக்கின்றேன்.

கேள்வி :—தென்னிந்தியப் பயணத்தை நான் இன்றுடன் முடித் துக்கொண்டு, நாளை புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் முன்பே செய்துவிட்டேன். நான் இந்த நிலையில் என்ன செய்வது?

பதில் :—உங்கள் ஏற்பாட்டை மாற்றிக்கொண்டு, மகரிஷியைச் சந்தித்த பிறகே தென்னிந்தியாவை விட்டுப் புறப்படு வதென்று ஓர் தீர்மானத்தைச் செய்துகொள்ளுங்கள்; நீங்கள் கவலை கொள்ள வேண்டாம். உங்கள் விருப்ப மெல்லாம் நன்கு நிறைவேறும்.

பால் பிரண்டன் ஸ்வாமிகளின் விருப்பப்படியே மகரிஷியைப் பார்த்துவிட்டு பிறகு செல்வதாக வாக்களித்தார். பின்னர் பிரி வதற்கு மனமில்லாமல் ஸ்வாமிகளிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியில் வந்தார். அதன் பின்னர் தாம் அடைந்த சில அனுபவங் களைப் பற்றித் தமது புஸ்தகத்தில் அவர் கீழே கண்டவாறு கூறி யுள்ளார்.

“குழந்தைப் பருவத்திலிருந்தே கடவுள் பணியில் ஈடுபட் டிருக்கும் இப்பெரியாரை விட்டுப் பிரிய எனக்கு மனம் வரவே யில்லை. அவர் ஒரு பீடாதிபதியாக இருந்தும் அவரது மனம் அதிகாரத்தில் நாடவில்லை. அவர் எல்லாவற்றையும் துறந்தவர். அவருக்கு அளிக்கும் காணிக்கைகளையெல்லாம் அவர் அவைகளைப் பெறத் தகுதி உள்ளவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிடுகிருர். தேஜோமயமான அவரது அழகிய உருவத்தை நான் ஒரு பொழுதும் மறக்க முடியாது.

"அன்று மாலை வரையில் நான் செங்கல்பட்டிலேயே சுற்றிக் கொண்டு அந்த ஊரின் அழகில் என் மனஸை ஈடுபடுத்திக்கொண்டிருந்தேன். அவ்விடமிருந்து செல்லும்முன்னர் ஸ்வாமிகளை மற்றொருமுறை பார்த்துவிட வேண்டுமென்ற எண்ணம் எனக்கு உதித்தது. அப்பொழுது அந்த ஊரின் பெரிய ஆலயமொன்றில் கூடியிருந்த ஒரு பெரிய கூட்டத்தின் நடுவில் ஸ்வாமிகள் அமர்ந்து சில உபதேச மொழிகளைக் கூறிக்கொண்டிருந்தார்கள். கூட்டத்தில் பெரியோர்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் உட்கார்ந்திருந்தனர். ஆயினும் அவர் பேசிய மொழி எனக்குப் புரியாவிடினும், நல்ல கல்வி அறிவுள்ள பிராம்மணனும், படிப்பில்லாத குடியானவனும் ஒரேவிதமாக ஸ்வாமிகளின் உபதேச மொழிகளில் ஈடுபட்டிருந்தார்களென்பதை மட்டிலும் நான் தெரிந்துகொண்டேன். ஸ்வாமிகளின் அழகிய திருமேனி என் உள்ளத்தைக் கவர்ந்தது. அந்தக் கூட்டத்தில் அமர்ந்திருந்தவர்களின் திடமான நம்பிக்கையைக் கண்டு நான் பொறாமைக் கொண்டேன். அவர்களது வாழ்க்கையில் அவர்கள் சந்தேகம் கொள்ளவில்லை. 'கடவுள் ஒருவர் இருக்கிறார்' என்ற எண்ணம் அவர்களது வாழ்க்கையை மேலும் திடப்படுத்தியிருந்தது. அவர்கள் வேறு எந்தச் சிந்தனையிலும் தங்கள் மனஸை ஈடுபடுத்தவில்லை. மேடு பள்ளமான இந்த உலக வாழ்க்கையைப் பற்றியோ பிரபஞ்சத்தின் ஒரு பாகமாகிய பூமியின் அழிவைப்பற்றியோ அவர்கள் கவலை கொள்ளவில்லை.

"பின் நாங்கள் செங்கல்பட்டிலிருந்து மோட்டாரில் திரும்பிச் சென்னைக்குப் பிரயாணமானோம். நிறைந்த நக்ஷத்திரங்கள் நீல நிறமான ஆகாயத்தில் பதிக்கப்பட்டனபோல் காணப்பட்டன; சாலை ஓரங்களில் தண்ணீர் தடத்திற்கு அருகிலுள்ள தென்னை மரங்களின் மட்டைகள் குளிர்ந்த காற்றினால் ஆடி அசைந்து கொண்டிருந்த சப்தம் என் காதுகளில் விழுந்தவாறேயிருந்தது. சிறிது நேரம் நாங்கள் மௌனமாகவே பிரயாணம் செய்து கொண்டு வந்தோம். என் நண்பர் வேங்கடரமணி திடீரென்று எங்கள் மௌனத்தைக் கலைத்தார். அவர் என்னைப் பார்த்து, 'நீர்தான் உண்மையில் அதிர்ஷ்டசாலி' என்று கூறினார். அவரை நான் 'ஏன்' என்று கேட்டேன். ஐரோப்பிய எழுத்தாளர் ஒருவருக்கு ஸ்வாமிகள் பேட்டியளித்தது இதுதான் முதல் தடவையென்றும், ஆகையால் ஸ்வாமிகளின் ஆசி எனக்குப் பரிபூர்ணமாக இருக்கிறதென்றும் அவர் என்னிடம் கூறினார். நானும் அதில் பெருமை கொண்டேன்.

"சென்னையில் நான் என் ஜாகைக்குத் திரும்பியபொழுது இரவில் நடுநிசி வேளை வந்துவிட்டது. விடுதிக்குள் நுழையு முன்னர் ஆகாயத்தை ஒருமுறை உற்று நோக்கினேன். கூடாரம் போன்ற ஆகாயவெளியில் கணக்கில்லாத வயிரங்கள் பதித்தன போல நக்ஷத்திரங்கள் காணப்பட்டன. ஐரோப்பாக் கண்டத்தில் எங்கும் இம்மாதிரிக் காட்சி காணவே முடியாது. நான் அந்த விடுதியின் படியில் ஏறி எனது பாட்டிரி விளக்கை ஏற்றிக் கொண்டே வராந்தா பக்கமாகச் சென்றேன். அங்கு அந்த இருளில் படுக்கையிலிருந்து என் நண்பர் (திருவண்ணாமலையி லிருந்து என்னை அழைக்கவந்தவர்) எழுந்து உட்கார்ந்தவண்ணம் என்னை வரவேற்றார். அவரைப் பார்த்து, 'சுப்பிரமண்யம், நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்?' எனக் கேட்டேன். அவர் சிறிது பல்லை இளித்துப் புன்னகை புரிந்தார். மேலும் அவர் என்னைப் பார்த்து, 'நான் தங்களைச் சந்திப்பதாக முன்னரே கூறவில்லையா?' என்றார். நானும், 'ஆம்' என்று கூறிவிட்டு, அவரைப் பார்த்து, 'உங்கள் குருநாதரை **மகரிஷி** எனக் கூறுவார் களா?' எனக் கேட்டேன். நான் இவ்விதம் கூறவே, அவர் வியப்பை அடைந்தார். எனக்கு அந்தப் பெயர் எவ்விதம் தெரிந்த தென ஆவலுடன் கேட்டார். நான் அவரைப் பார்த்து, 'அதைப் பற்றி நீர் கவலைப்பட வேண்டாம். நாம் இருவரும் அந்த மகரிஷி உள்ள இடத்திற்குச் செல்லுவதாக ஏற்பாடாகிவிட்டது. நான் எனது பிரயாணத்தை மாற்றிக்கொண்டுவிட்டேன்,' என்றேன். இதையெல்லாம் கேட்டு அவர் அளவு கடந்த மகிழ்ச்சி தெரிவித்தார். அதற்குப் பிறகு அரை மணிநேரம் நாங்களிருவரும் பேசிக்கொண்டிருந்தோம். இரவில் வெகு நேரம் சென்றுவிட்ட தாலும் நானும் மிகக் களைப்பு அடைந்திருந்ததாலும் இருவரும் படுக்கச் சென்றோம். அவர் தரையில் கிடந்த ஓர் ஓலைப் பாயின் மேல் படுத்துக்கொண்டு தாம் உடுத்திருந்த மெல்லிய துணியைப் போர்வையாகப் போர்த்துக் கொண்டார். ஜமுக்காளம் விரிப்பு இவைகளை நான் அவருக்குக் கொடுத்தேன். அவைகளை அவர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்."

"நான் சிறிது நேரம் தூங்கியிருப்பேன். பின்னர் எதிர் பாராதவாறு விழித்துக்கொண்டேன். நான் படுத்திருந்த அறை யில் ஒரே இருட்டு பரவியிருந்தது. அப்போது என் உடலி லுள்ள நரம்புகள் சற்று விறைப்படைந்து இழுப்பதுபோல ஓர் உணர்ச்சியை நான் அடைந்தேன்; என்னைச் சுற்றியுள்ள காற் றெல்லாம் மின்சாரம் பாய்ந்திருப்பதுபோல உணர்ந்தேன்; தலை

யணைக்குக் கீழிருந்த எனது கைக்கடிகாரத்தை அப்பொழுது எடுத்துப் பார்த்தேன். ரேடியம் டயலுள்ள அந்தக் கடிகாரம் இரண்டே முக்கால் மணியைக் காட்டிற்று. அப்பொழுது என் படுக்கையின் கால்மாட்டின் ஓரத்தில் ஓர் ஒளி தென்பட்டது. நான் உடனே எழுந்து உட்கார்ந்துகொண்டு, அந்த ஒளியைக் கவனித்தேன். மிகுந்த பரபரப்புடன் நோக்கிய என் பார்வையில், ஆசார்ய ஸ்வாமிகளின் உருவம் மிகவும் தெளிவாகக் காணப் பட்டது. அந்த உருவம் ஒரு பிசாசன்று; ஓர் மனித உருவம் தான் என்பதில் சந்தேகமில்லை. அந்த உருவத்தைச் சுற்றிலும் ஓர் ஒளி நிலவியது. பக்கத்திலிருந்த இருட்டும் இந்த ஒளியும் வேறுபட்டிருந்தன ; உண்மையில் அது காணமுடியாத உருவம் தான் ; ஆனாலும் செங்கல்பட்டில் அன்று நான் கண்ட உருவமே அது என்பதில் ஐயமில்லை. இதைப் பரீக்ஷித்துப் பார்த்துவிடலா மென்பதற்காக, நான் என் கண்களை இறுக மூடிக்கொண்டேன். அப்பொழுதும் அதே உருவம் முன்போலவே தென்பட்டது. கருணையையும் அன்பையும் என்னிடம் காட்டவே அந்த உருவம் அவ்விடம் வந்ததாக நான் தீர்மானித்துக் கொண்டேன். பிறகு என் கண்களைத் திறந்து பார்த்தபோது, காஷாயம் தரித்த அதே உருவத்தை மறுபடியும் கண்டேன். உதடுகளில் ஏற்பட்ட சிரிப்பினால் அவரது முகம் சற்று அசைந்தது. **'தாழ்மையுடன் இரு. நீ கோருவதை யெல்லாம் அடைவாய்'** என்று சொன்னது போன்ற வார்த்தைகளை என் காதுகள் உணர்ந்தன. அந்த வேளையில் ஒரு மனித உருவம் என்னைப் பார்த்துப் பேசுவது போல நான் ஏன் உணரவேண்டும்? அதைப் பிசாசென நான் நினைத்துவிடலாகாதா? அந்த உருவம் எவ்விதம் தென்பட்டதோ அதுபோலவே மறைந்துவிட்டது. அசாதாரணமான இந்த நிகழ்ச்சியில் நான் அமைதியையும் பெருமையையும் மகிழ்ச்சி யையும் அடைந்தேன். நான் இதை ஓர் கனவெனத் தள்ளிவிடலா மென்றாலோ, அவ்விதம் அதைத் தள்ளுவதற்கில்லை. அதன் பின்னர் அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. தென்னிந்திய மக்கள் கடவுள் அவதாரமாக மதிக்கும் ஆசார்ய ஸ்வாமிகளிடம் அன்று பகலில் எனக்குக் கிடைத்த மறக்க முடியாத சந்திப்பைப் பற்றியே மிகுதி நேரத்தில் சிந்தனை செய்து கொண்டிருந்தேன்."

### காஞ்சீபுரத்திற்கு விஜயம்

பஞ்சபூத க்ஷேத்திரங்களில் பிருதிவி க்ஷேத்திரமாக விளங் கும் காஞ்சீபுரத்திற்கு முதன் முதலாக ஸ்வாமிகள் (சென்ற

பிரமோதூத வருடம் தைமாதம் 12-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை (25-1-1931) விஜயம் செய்தார்கள். அந் நகரில் சுமார் அறுபதுக்கு மேற்பட்ட தேவாலயங்கள் விளங்கிவருகின்றன. அங்குள்ள ஸ்ரீ ஏகாம்ரநாதரின் ஆலயத்தில் ஸ்ரீ காமாக்ஷி அம்பிகை தனது கைகளால் மண்ணைப் பிடித்து லிங்கமாக அமைத்து, அந்த லிங்கத்தைப் பூஜை செய்ததாகவும், அதனால் அது **பிருதிவி க்ஷேத்திரமாக** விளங்கிவருகிறதென்றும் கூறப்படுகிறது. அந்த க்ஷேத்திரத்தின் மத்தியில்தான் காமாக்ஷி அம்மனது ஆலயமும் அமைந்துள்ளது. காஞ்சீபுரத்திலுள்ள எந்தச் சிவாலயத்திற்கும் தனிமையாக அம்பாள் காணப்படவில்லை. காமாக்ஷி அம்மனே பரமசிவனை அடைய தவக்கோலத்திலிருந்து அவ்விடமுள்ள எல்லாச் சிவாலயங்களுக்கும் அம்பிகையாக வீற்றிருக்கிறாள். காஞ்சீபுரத்தில் உள்ள மற்ற எல்லா ஆலயங்களும் காமாக்ஷி அம்மன் ஆலயத்தின் திசையையே நோக்கி இருக்கும். மற்ற ஆலயங்களில் உத்ஸவங்கள் நடைபெறும்போதெல்லாம் எல்லா ஆலயங்களின் மூர்த்திகளும் காமாக்ஷி அம்மன் ஆலயத்தையே சுற்றி வருவது இன்றும் வழக்கமாக இருந்துவருகிறது. ஸ்ரீ ஆதிசங்கராசார்ய சுவாமிகள் காமாக்ஷி அம்பிகையின் ஆலயத்தில் **ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை** செய்துள்ளாரென முன் அத்தியாயம் ஒன்றில் கூறப்பட்டுள்ளது. மேலும் ஸ்ரீ ஆதிசங்கரர் காஞ்சியில் **சர்வக்ஞ பீடம் ஏறி** ஸ்ரீ காமாக்ஷி அம்மனின் ஆலயத்தில் உட்புறத்திலேயே **ஸித்தி அடைந்ததாகவும்** சரித்திர வாயிலாக அறிகிறோம். இன்றும் அந்த ஆலயத்தின் உட்புறத்தில் மனுஷ்ய ஆக்ருதி அளவில், **ஸ்ரீ சங்கரரது சிலா விக்ரகம்** காணலாம்.

ஸ்ரீ காமகோடி பீடத்தின் அதிஷ்டான ஸ்தலமாக விளங்கும் இந்தக் காஞ்சி நகருக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்வதை அவ்வூர்ப் பொது மக்கள் மிக ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அவர்களால் தக்க வரவேற்பும் ஸ்வாமிகளுக்கு அளிக்கப்பெற்றது; பெரிய காஞ்சீபுரத்திலுள்ள தமது மடத்தில் ஸ்வாமிகள் சுமார் ஒரு மாத காலத்திற்கு மேல் தங்கி இருந்தார்கள். அக்காலத்தில் அவர்கள் **ஸ்ரீ வரதராஜர், ஸ்ரீ ஏகாம்ரேச்வரர்** இவ்வாலயங்களை அடிக்கடி தரிசித்துக் கொண்டும், அநேகமாக ஒவ்வொரு நாளும் காமாக்ஷி அம்மனைத் தரிசித்தும் வந்தார்கள்.

காமாக்ஷி அம்மன் ஆலயத்தின் நிர்வாகம் பல நூற்றாண்டுகளாக ஸ்ரீ காமகோடி பீடத்தின் பொதுவான மேற்பார்வையில் இருந்து வந்திருக்கிறது. சென்ற 1840ஆம் வருடம் அந்த ஆலயத்திற்குக் கும்பாபிஷேகத்தை அப்பொழுதிருந்த 64-ஆவது ஆசார்

யர்களான **ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** நடத்தி வைத்தார்கள்; அதற்கடுத்த வருடமே அந்த ஆலயத்தின் நிர் வாகத்தை மடத்தின் மேற்பார்வையில் ஆங்கில அரசாங்கத்தார் விட்டுவிட்டனர். நம் ஸ்வாமிகள் இந்தத் தேவஸ்தானத்தில் பற்பல சீர்திருத்தங்கள் செய்ய விரும்பி, சென்னை பெஸ்ட் அண்டு கம்பெனி துபாஷ் தண்டலம் **ஸ்ரீ டி. எஸ். ராமஸ்வாமி ஐயரவர்களை** ஆலயத்தின் கௌரவ நிர்வாகியாக நியமனம் செய்தார்கள். அவர் களின் காலத்தில் ஆலய பூஜைகளைச் செய்பவர்கள் நல்ல ஒழுக்க முள்ளவர்களாக இருக்க வேண்டுமென்பதையொட்டி பூஜை கிரமத்தில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பெற்றன. ஆலயத்தின் சில பகுதிகள் ஜீர்ணமடைந்திருந்ததை ஸ்வாமிகள் அக்காலத்தில் நேரில் கண்டு அவைகளைச் செப்பனிடும் திருப்பணியைக் கூடிய சீக்கிரம் மேற்கொள்ளவேண்டுமென்றும், சற்று ஏறக்குறைய 120 வருடங்களுக்கு முன் நடைபெற்ற மேற்படி ஆலயத்தின் கும்பாபி ஷேகத்தைத் தமது காலத்திலே மற்றொருமுறை செய்து முடிக்க வேண்டுமென்றும் மடத்தின் நிர்வாகிகளிடமும் மற்றுமுள்ள சிஷ்யர்களிடமும் ஸ்வாமிகள் தெரிவித்தார்கள். அன்று முதலே மேற்படி ஆலயத் திருப்பணிக்கும் வேலைகள் துவக்கப்பட்டுத் திறமை வாய்ந்த அதிகாரிகள் மூலம் அவை நடைபெறத் தொடங்கின.

ஸ்வாமிகள் அவ்வருடம் ஏப்ரல் மாதம் முடிய பெரிய காஞ்சீ புரத்திலேயே முகாம் செய்திருந்தார்கள். பின்னர் அவர் **உத்திரமேரூருக்கு** விஜயம் செய்து அங்குள்ள ஆலயத்தின் சுவர் களில் பழைய காலத்து நீதி நிர்வாகத்தைப்பற்றியும் கிராம நிர்வா கத்தைப்பற்றியும் செதுக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களை வெகு எளிதில் படித்து அங்குக் கூடியிருந்தவர்களுக்கு அதன் பொருள் களையும் விளக்கினார்கள். உத்திரமேரூர் சாஸனம் சரித்திரப் புகழ்பெற்றதாகும். அந்தக் கல்வெட்டானது நாட்டில் ஜன நாயக ஆட்சி அக்காலத்தில் எவ்விதம் நடைபெற்று வந்ததென் பதை நன்கு விளக்குகிறது. அதன் பின்னர் செங்கல்பட்டு ஜில் லாவில் தென்பாகத்திலுள்ள **வந்தவாசி, பாலூர், அச்சிறுபாக்கம்,** தென்னார்க்காடு ஜில்லா திண்டிவனம் தாலுக்காவிலுள்ள **மரக் காணம், திண்டிவனம்** ஆகிய இடங்களுக்கு அவர்கள் சென்று அவ் வவ்வூர்களின் பொதுமக்களின் விசேஷ அழைப்பிற்கிணங்க, இரண்டு மாதங்கள் வரையில் விஜய யாத்திரை செய்துவந்தார்கள். அப்பொழுது ஸ்வாமிகளிடம் விசேஷமான பக்தி கொண்டவரும், அவர்களின் தந்தையாரின் பழைய நண்பரும், சூணாம்பட்டு

ஜமீந்தாருமான **திவான்பகதூர் ஸி. அருணுசல முதலியார்** ஸ்வாமிகளின் யாத்திரையில் கூட இருந்து, மடத்திற்கு எவ்விதக் குறைவுமில்லாமல் பணியாற்றிவந்தார்.

### ஸ்ரீ பெரும்புதூர் விஜயம்

நம் ஸ்வாமிகள் செங்கல்பட்டு ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்கையில் ஸ்ரீ ராமானுஜர் அவதரித்த தலமாகிய **ஸ்ரீ பெரும்புதூ**ருக்கு விஜயம் செய்து, அந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள **ஸ்ரீ எதிராஜவல்லி சமேத ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள்** சந்நிதியைச் சேவித்தார்கள். தேவஸ்தானத்தின் அதிகாரிகளும், ஊர்ப் பொது ஜனங்களும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு தேவஸ்தானத்தில் சடாரி முதலிய மரியாதைகளைச் செய்து அவர்களை ஆலயத்தில் வரவேற்ருர்கள். அந்த க்ஷேத்திரத்தின் மகிமையைப்பற்றி, ஸ்வாமிகள் அன்று உபந்யாசம் செய்துவிட்டு, **புஷ்பதந்தர்** என்னும் மகாகவி இயற்றிய **சிவமஹிம்ன ஸ்தோத்திரத்**திலிருந்து கீழே கண்டுள்ள சுலோகத்தை எடுத்துக்காட்டி மானிடர்கள் கடவுளை அடையப் பல மார்க்கங்களைக் கடைப்பிடித்திருந்தபோதிலும் அவ்வெல்லா வழிகளாலும் அடையப்படும் பொருள் ஒன்றுதான் என்பதை எடுத்துக் கூறினுர்கள்.

त्रयी सांख्यं योगः पशुपति मतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च ।

रुचीनां वैचित्र्यादृजुकुटिलनानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥

மேலும் இந்தச் சுலோகத்தின் கருத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் விளக்கம் செய்கையில் வெவ்வேறு மத பேதங்களால் முடிவில் அடையப்படும் பொருள் ஒன்ருகவிருந்தாலும், மனிதர்கள் அவரவர்களது விருப்பத்திற்கிணங்க வேதாந்த மார்க்கம், சாங்க்யம், யோகம், பாசுபதம் என்னும் சைவமதம், வைஷ்ணவம் முதலான பற்பல மதங்களைக் கடைப்பிடித்து அவரவர்களுக்கு எது உயர்ந்ததெனத் தோன்றுகின்றதோ அதையே பெரிதெனக் கொண்டாடி வருகின்றனரென்றும், அவ்விதம் கொண்டாடி வருவதில் யாதொரு தவறுமில்லையென்றும், ஆனுல் பிற மதங்களைத் தூஷிக்காமலும், மதச் சண்டைகள் போட்டுக்கொள்ளாமலும், எவ்வழியில் சென்ருலும் முடிவு ஒன்ருகவிருக்கும் பரமாத்மாவை அடைவதே தங்களது லக்ஷியமென்பதை மனசில் கொண்டு தங்கள்

மதத்தில் பற்றுடனும் நல்ல ஒழுக்கத்துடனும், ஒற்றுமையுடனும் வாழவேண்டுமென்றும் உபதேசித்தருளினார்கள். இந்தச் சுலோகத்தில் கவியானவர் தண்ணீருக்கும் மனிதனுக்கும் உவமை கூறி இருப்பதால் அந்த உவமையை விரித்துக் கூறும்பொழுது ஸ்வாமிகள் "தண்ணீரானது மலை போன்ற மேடான பிரதேசங்களில் உற்பத்தியாகிப் பாறைகளின் இடுக்குகளில் நுழைந்து, அவ்விடமிருந்து பள்ளங்களை அடையும்பொழுது அருவியாக மாறி, பெரிய சத்தத்துடன் மலைச்சரிவில் விழுந்து, பின்னர் சமவெளியை அடைந்து அமைதியுடன் ஓர் பெரிய ஆறாகி, பல கிளைகளாகப் பிரிந்து வயல்களில் பாய்ந்து, பல வகைகளில் மனிதனுக்கு உதவி புரிந்துவிட்டு, பின்னர் தண்ணீர் குறைவினால் சிறு ஆறாக மாறி, கடலில் நுழைந்து சத்தம் ஒடுங்கி, தன் நிலை இழந்து, கடல் நீரில் ஒன்றாகக் கலந்து விடுவதுபோல், மனிதனும் குழந்தைப் பருவத்தில் வளர்ந்து, யௌவனம் எனப்படும் இளமைப் பருவத்தில் ஆசைகளாலும் அகங்காரத்தாலும் சத்தங்கள் செய்து, சம்சார வாழ்க்கையில் புகுந்து, பற்பல விதமாக அலைந்து முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளை ஒட்டிப் பற்பல கருமங்களைச் செய்து, இன்ப துன்பங்களை அனுபவித்து, முதிர்ந்த வயதில் ஓய்வடைந்து, அகங்காரத்தை அதாவது தான் என்னும் அகந்தையைப் போக்கி ஈசனது திருவடிகளில் மனசை அர்ப்பணம் செய்து அவரது சொரூபத்தில் கலந்து, தன்னிலை மாறி அவருடன் ஒன்றாகிவிடுகின்றான்'' எனக் கூறினார்கள்.

இந்த உபந்யாசம் நடைபெற்றபொழுது சென்னையிலிருந்து பல பக்தர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்திருந்தனர். ஆங்கிலம், வடமொழி, தமிழ் இவைகளில் நல்ல தேர்ச்சி பெற்றவரும். ரசிகத் தன்மை வாய்ந்தவருமான மயிலாப்பூர் வக்கீல் **கே. பால சுப்பிரமணிய ஐயர்** ஸ்வாமிகளின் திருவாக்கிலிருந்து வந்த இவ்வரிய உபதேச மொழிகளைக் குறிப்பெடுத்துக் கொண்டார். அக் குறிப்பை அவர் சென்ற 26-11-1931-ஆம் தேதியுள்ள ஆரிய தர்ம சஞ்சிகையில் வெளியிட்டுள்ளதை ஆதாரமாகக் கொண்டு இவ் விஷயம் இங்குத் தரப்பட்டுள்ளது.

### சித்தூரில் வியாஸ பூஜை-சாதுர்மாச சங்கல்பம்

ஸ்வாமிகள் செங்கல்பட்டு ஜில்லாவில் விஜய யாத்திரையை முடித்துக் கொண்டு வட ஆர்க்காடு ஜில்லாவிள்ள **எசையனூர்** என்னும் கிராமத்தில் சில நாட்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூரிலுள்ள **கோகிலாம்பாள்** என்னும் மாது சிரோமணி பன்முறை

ஸ்வாமிகளை அவ்விடத்திற்கு விஜயம் செய்யும்படி அழைத்து மடத்திற்கு விசேஷமாகக் கைங்கர்யம் செய்துவந்தார். எசைய னூரிலிருந்து ஸ்வாமிகள் 1931-ஜுலை மாதம் 28-ஆம் தேதி **சித்தூருக்கு** விஜயமானார்கள். ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளின் மாம னாராகிய **நம்பிராசன்** என்னும் வேடுவனது பட்டினமே இப் பொழுது **சித்தூரென** வழங்கப்படுகிறது. அதன் பக்கத்தில் **வள்ளிமலை** என்ற சிறு குன்று அமைந்திருப்பதும், இதற்கு அத் தாக்ஷியாக இருக்கிறது. அக்குன்றின் பக்கத்தில் ஒரு சிவாலயமும், அவ்வாலயத்தின் அருகே ஒரு நதியும் இருக்கின்றன. அந்நதிக்கு **நீவா** என்னும் பெயர் அமைந்துள்ளது. ஒரு காலத்தில் அந்த நதி யானது ஆலயத்திலிருந்து சற்று தூரம் விலகியிருந்ததாகவும், ஒரு நாள் அர்ச்சகர் சிவபெருமானது அபிஷேகத்திற்காகத் தண்ணீர் கொண்டுவரச் சென்றபொழுது ஓர் அரக்கன் அவரைப் பய முறுத்த, சுவாமி கருணையுடன் அந்த நதியை ஆலயத்தின் சமீபத் திற்கே வரும்படி தமிழ் மொழியில் '**நீ வா**' என்று அழைத்த தாகவும், உடனே அந்த நதி ஆலயத்தின் பக்கத்திலேயே ஓடிய தாகவும் வரலாறு கூறப்படுகிறது. அதனால் அந்த நதிக்கு **நீவா** என்ற பெயரையே சூட்டியிருக்கிறார்கள்.

சித்தூர் **அகஸ்தீசுவர ஸ்வாமி** ஆலயத்தின் முன்புறம் ஓர் பெரிய பந்தல் அமைக்கப் பெற்று, அதன் நடுவே வியாச மண்டபத்தையும் அமைத்திருந்தார்கள். வியாஸ பூஜைக்கு முதல் நாள் ஸ்வாமிகள் அந்நகருக்குள் பிரவேசம் செய்தபொழுது ஊர் ஜனங்கள் ஆயிரக்கணக்கில் கூடி, ஊரில் முக்கியமான வீதிகளின் வழியாகத் தந்தச் சிவிகையில் ஸ்வாமிகள் வந்த காட்சியைக் கண்டு களித்தார்கள். வியாஸ பூஜை அன்று மடத்தின் முத்திராதிகாரி யான **அந்துக்கூர் சுப்பிரமணிய சாஸ்திரிகளும், வக்கீல் ஸி. வேங்கடரமண அய்யரும்** ஸ்வாமிகளைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்று வியாஸ பூஜா மண்டபத்திற்கு அழைத்துச் சென்றனர். பூஜை ஆரம்பிப்பதற்கு வெகு நேரம் முன்னரே மண்டபத்தில் பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் கூடியிருந்தனர்.

மாலை நான்கு மணிக்குப் பூஜை முடிந்ததும், பக்தர்கள் எல்லோருக்கும் வியாஸ பிரசாதம் வினியோகம் செய்யப்பட்டது. ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி சென்னை மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையின் அதிபர் வேதாந்த விபூஷணம் **கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள்** அன்று வியாசரது வேதாந்த சூத்திரத்தை விளக்கம் செய்தார்கள். மற்றும் அன்று அவ்விடம் கூடியிருந்த சாஸ்திர **ரத்னாகரம் திருவையாறு விசுவநாத சாஸ்திரிகளும்,** போலகம்

ராமா சாஸ்திரிகளும், வரகூர் வேங்கடராம சாஸ்திரிகளும், பக்ஷிதீர்த்தம் டி. ஏ. வேங்கடேச தீக்ஷிதரும், மதுரை கே. வி. சுப்பிர மணிய சாஸ்திரிகளும், மடம் ஆஸ்தான வித்வான் லக்ஷ்மீ நாராயண சாஸ்திரிகளும், வாக்கியார்த்த விளக்கத்தில் கலந்து கொண்டனர். ஸ்வாமிகளின் பேரில் பிரம்மஸ்ரீ வேங்கடேச தீக்ஷிதர் தாம் இயற்றிய சம்ஸ்கிருத சுலோகங்கள் பதினைந்தையும் சபையில் வாசித்து அவைகளுக்குப் பொருளும் விளக்கிக் கூறினார். வெளி ஜில்லாக்களிலிருந்தும் தேவஸ்தானங்களிலிருந்தும் பிரதி நிதிகள் ஏராளமாகக் கூடி அன்று ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டனர். அன்று சித்தூர் மிகவும் குதூகலத்துடன் விளங்கியது. எங்குப் பார்த்தாலும் ஸ்வாமிகளின் மகிமையைப் பற்றிய பேச்சுத்தான். ஸ்வாமிகள் சித்தூரில் இரண்டு மாதங்கள் தங்கிச் சாதுர்மாஸ விரதத்தைப் பூர்த்தி செய்து கொண்டார்கள். அந்நகரவாசிகள் எவ்விதக் குறைவுமின்றி ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை இவைகளைச் செய்து வைத்தனர். சாதுர்மாஸ முடிவுபெற்ற நாளாகிய 26-9-31-ஆம் தேதி சனிக்கிழமை, சந்திர கிரஹணத்திற்கு இரவில் நதியில் ஸ்நானம் செய்துவிட்டு, விசுவரூப யாத்திரையின் பொருட்டு முருகன்பட்டுக்கு ஸ்வாமிகள் விஜயமானார்கள். அவ்வருஷத்து நவராத்திரி பூஜையைச் சித்தூரிலேயே நடத்தவேண்டுமென்று பக்தர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க, 1931 அக்டோபர் மாதம் 12-ஆம் தேதி முதல், சித்தூரில் நவராத்திரி பூஜையை விசேஷமாக ஸ்வாமிகள் நடத்தினார்கள். பின்னர் அக்டோபர் மாதம் முடிய ஸ்வாமிகள் சித்தூரிலேயே தங்கியிருந்தார்கள்.

### வேலூருக்கு விஜயம்

சித்தூரிலிருந்து ஸ்வாமிகள் குடியாத்தத்திற்கு விஜயம் செய்து, பின்னர் வைத்தியநாதன் குப்பம், காட்பாடி வழியாக வேலூருக்கு விஜயம் செய்து, 1931-டிசம்பர் மாதம் 22-ஆம் தேதி வரை, வேலூர் தாரகேச்வரர் ஆலயத்தில் தங்கியிருந்தார்கள். ஸ்வாமிகளின் வரவில் மிகவும் குதூகலமடைந்த வேலூர் மக்கள், வக்கீல் கங்காதர சாஸ்திரிகள் தலைமையில் ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பை அளித்து, நகரில் ஒரு ஊர்வலத்தையும் ஏற்பாடு செய்திருந்தனர். வக்கீல்கள், வியாபாரிகள், உத்யோகஸ் தர்கள் யாவரும் எவ்வித வேற்றுமையின்றி ஸ்வாமிகளை வரவேற் பதிலும், அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைப் புரிவதிலும் மிகவும் ஊக்கம் எடுத்துக்கொண்டனர். மாலை வேளைகளில்

ஸ்வாமிகள் செய்த பிரசங்கங்களைக் கேட்க ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் பின்னர் ஆருத்ரா தரிசனத்தை உத்தேசித்து எசையனூருக்குச் சென்று அவ்விடமிருந்து, ஆரணி மார்க்கமாகக் காஞ்சீபுரத்திற்கு விஜயமானுர்கள்.

### காங்கிரஸ் தொண்டர்களுக்குத் தரிசனமளித்தது

ஸ்வாமிகள் ஆரணியில் தங்கியிருந்தபொழுது சுமார் 200 பேருக்கு அதிகமாகவுள்ள காங்கிரஸ் தொண்டர் படை ஒன்று ஸ்வாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்று விரும்பியது. காங்கிரஸ் தொண்டர்களுக்கு அபயமளித்தார்கள், அவர்களுக்கு எவ்வித மான சிறிய உதவி செய்தாலும் அதைப் பெரிய குற்றமாகக் கருதி அவ்விதம் உதவியவர்களைச் சர்க்கார் தண்டனைக்கும் உள்ளாக்கி வந்த காலம் அது. அதனுல் மடத்தின் அதிகாரிகள் அவர்களை மடத்திற்குள் அனுமதிக்கத் தயங்கி, ஸ்வாமிகளிடம் இவ் விஷயத்தைச் தெரிவித்துக்கொண்டனர். ஸ்வாமிகள் அவர்கள் யாவரையும் மடத்தின் ஜாகைக்குள் அழைத்துவரும்படி மடத்தின் அதிகாரிக்கு உத்தரவிட்டார்கள். ஸ்வாமிகளின் அநுமதியின்படி அவர்கள் யாவரும் மடத்தின் ஜாகைக்குள் சென்று ஸ்வாமி களையும் மடத்தின் அதிஷ்டான தெய்வங்களான ஸ்ரீ சந்திர மௌளீசுவரர் திருபுர சுந்தரி அம்மனையும் தரிசித்துக்கொண்டனர். ஸ்வாமிகள், அவர்களில் ஒவ்வொருவரைப்பற்றியும் விசாரித்து விட்டு அவர்களுக்கு விபூதி பிரசாதத்தையும் வழங்கினுர்கள். அன்று அவர்கள் யாவருக்கும் மடத்திலேயே உணவு தயாரித்து அளிக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சி ஊர் மக்கள் பலருக்கும் மடத்தின் சிப்பந்திகளுக்கும் சற்றுக் கவலையையே அளித்தது. சர்க்காரிடமிருந்து ஏதாவது கேள்விகள் பிறந்து மடத்திற்கு ஏதாவது குறைவு ஏற்படுமோவென்று அவர்கள் பயந்தனர். ஆனுல் ஸ்வாமிகள் அதைப்பற்றிச் சற்றும் கவலைகொள்ளவில்லை. காங்கிரஸ் தொண்டர்களானுலும், சர்க்கார் உத்தியோகஸ்த ரானுலும் மடத்திற்குத் தரிசனத்திற்கென வருகிறவர்களை வித்தியாசமின்றி அநுக்கிரகிக்க வேண்டிய கடமையை ஸ்வாமிகள் மேற்கொண்டுள்ளார்களென பின்னர் அவர்கள் அறிந்து கொண்டு கவலை நீங்கினவர்களாக ஆனுர்கள்.

### மகா சிவராத்திரிக்குக் காளஹஸ்தி விஜயம்

1932-ஆம் வருடம் மார்ச் மாதம் 5-ஆம் தேதியில் நிகழ்ந்த மகா சிவராத்திரிக்குக் காளஹஸ்தி க்ஷேத்திரத்திற்கு விஜயம்

செய்யவேண்டுமென்று ஸ்வாமிகள் விரும்பினார்கள். காஞ்சீபுரத்திலிருந்து **திருப்பாற்கடல், வேப்பூர்** மார்க்கமாக **வேலூரை** அடைந்து பிப்பிரவரி மாதம் 28-ஆம் தேதி **சித்தூருக்கு** விஜயம் செய்து, **பாக்காலா** மார்க்கமாகத் **திருப்பதியில்** ஒரு நாள் தங்கி **காளஹஸ்திக்கு** விஜயமானார்கள். அன்று ஸ்வாமிகள் சொர்ணமுகி ஆற்றில் நீராடிப் பெரியதொரு மாமரத்தின் அடியில் உட்கார்ந்து அடியார்களுக்குத் தரிசனம் அளித்த காட்சி தக்ஷிணாமூர்த்தியே உலகில் அவதரித்துக் காட்சி அளித்ததுபோல விளங்கிற்று. காளஹஸ்தி வாசிகள் கூட்டம்கூட்டமாக வந்து ஸ்வாமிகளைத் தரிசித்து, அவர்களை வரவேற்க அவசரமாக ஏற்பாடுகளைச் செய்தார்கள். எதிர்பாராதவாறு அந்த விசேஷ தினத்தில் ஸ்வாமிகள் அந்த க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்ததை மக்கள் யாவரும் மிகுந்த சந்தோஷத்துடன் கொண்டாடினார்கள். **காளஹஸ்தி ராஜா,** ஸ்வாமிகள் நீராடிய இடத்தில் சொர்ணமுகியின் கரையில் ஓர் பந்தல் அமைக்கச் செய்தார். அம்மன்னர் தமது பரிவாரங்களுடனும் தேவஸ்தான அதிகாரிகளுடனும் தேவஸ்தான மரியாதைகளுடனும் ஸ்வாமிகளைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்றுப் பெரியதொரு ஊர்வலத்தையும் ஏற்பாடு செய்தார். அன்று சிவராத்திரி தினமாதலால் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் ஏராளமாக ஜனங்கள் காளஹஸ்தியில் கூடியிருந்தனர். ஊரின் முக்கியமான வீதிகளின் வழியாக ஊர்வலம் சென்றது. ஊர்வலத்தின் மத்தியில் ஸ்வாமிகள் சிவிகையிலிருந்து இறங்கி, **ஸ்ரீ காளஹஸ்தீச்வரரையும் ஞானப்ரஸூனாம்பிகையையும்** தரிசித்துக் கொண்டார்கள். பின்னர் ஸ்வாமிகள் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கற்பக சத்திரத்தில் ஊர்வலம் முடிவடைந்தது. காளஹஸ்தி ராஜாவும் ஊர்வலத்தின் கூடவே வந்து சத்திரத்தில் ஸ்வாமிகளை இறக்கி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டார். ஸ்வாமிகள் காளஹஸ்தியில் ஒரு வாரம் தங்கியிருந்தார்கள். அப்பொழுது அந்த க்ஷேத்திரத்திலுள்ள பரத்வாஜ தீர்த்தம், மயூர தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், பனஸகோனா, ஸகஸ்ரலிங்கேச்வரகோனா இவைகளில் நீராடினார்கள். சிவராத்திரி அமாவாசை அன்று ஸ்வாமிகள் அவ்வூர் ஆலயத்திற்குப் பக்கத்தில் அமைந்துள்ள கைலாசகிரி மலையைச் சுற்றிவர விரும்பவே, அவ்வூர் வாசிகள் மலைப்பாதைகள் சீராக இல்லை என்றும், பாதை இல்லாத மேடு பள்ளங்களையும் முட்புதர்களையும் கடந்து செல்ல வேண்டுமென்றும், சுமார் ஐம்பது கிலோமீட்டர்கள் நடக்க வேண்டும் என்றும் கூறி அந்தக் கிரிபிர

தக்ஷிணம் செய்வதை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்றும் பல முறை பிரார்த்தித்துக் கொண்டனர். ஆனால் எவ்வளவு கஷ்ட மிருந்த போதிலும் அந்த மலைமீது ஏறி அதை வலம் வருவதென ஸ்வாமிகள் தீர்மானம் செய்துகொண்டு விட்டார்கள். காலையில் சுமார் 9 மணிக்கு ஸ்வாமிகள் கால்நடையாகப் புறப்பட்டு. பகல் முழுவதும் கடும் வெயிலில் மலையைக் கடந்து மாலை இருட்டுக்குள் கிரிபிரதக்ஷிணத்தை முடித்துக்கொள்ள எண்ணியும், அன்றிரவு 12 மணி வரையில் அவர்கள் மலையில் நடக்கவேண்டியதாக ஏற் பட்டது. ஸ்வாமிகளுடன் சென்ற சுமார் 20 பேர்களும் வெயிலின் கடுமை தாங்கமாட்டாமல் தாங்கள் உடுத்தியிருந்த துணிகளைக் கிழித்துக் கால்களில் சுற்றிக் கொண்டு நடக்கவேண்டியதாயிற்று. அவர்கள் யாவரும் மிகவும் களைப்படைந்தவர்களாகிவிட்டார்கள். ஸ்வாமிகளின் அடிப்பாதத்திலும் சூடு தாங்கமாட்டாமல் பல கொப்புளங்கள் காணப்பட்டன; அன்றிரவு ஸ்வாமிகள் காள ஹஸ்தியில் தமது ஜாகைக்குத் திரும்பிவர மணி ஒன்று ஆயிற்று. இவ்வளவு மன உறுதியுடன் ஸ்வாமிகள் செய்த அந்தக் கிரி பிரதக்ஷிணத்தைக் கண்டு, அவ்வூர் வாசிகள் யாவரும் ஆச்சரி யத்தை அடைந்தனர். காளஹஸ்தி ராஜா ஸ்வாமிகளைத் தம் அரண்மனைக்கு வரவேற்று, பாதபூஜை முதலான வந்தனை வழி பாடுகளைச் செய்து தமது அரண்மனையில் புனிதமாக வைக்கப் பட்டிருக்கும் பழமையான தந்தத்தினால் செய்யப்பட்ட ஓர் சிம்மாசனத்தில் ஸ்வாமிகளை அமரச் செய்தார். அந்தச் சிம்மா ஸனத்தில் ஸ்வாமிகளைப் போன்ற பெரியோர்களே அமருவது வழக்கம். முன் 1887-ஆவது வருடம் ஸ்ரீ காமகோடி பீடத்தின் 65-ஆவது ஆசார்யர்களான ஸ்ரீ மகா தேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அந்தச் சிம்மாஸனத்தில் அமர்ந்திருந்த நிகழ்ச்சியை அந்த அரண்மனையில் வைக்கப்பட்டிருக்கும் குறிப்புக்கள் மூலம் அப்பொழுது யாவரும் தெரிந்துகொண்டனர்.

காளஹஸ்தி பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஒன்று. இது வாயு க்ஷேத்திரம். இங்குக் கர்ப்ப கிருகத்தில் இருக்கும் தூண்டா மணி விளக்கின் தீப ஜோதி எப்பொழுதும் அசைந்தும் ஆடியும் கொண் டிருப்பதை ஞானிகள் குண்டலினி சக்தியின் நடனமெனக் கூறுவர்.. ஸ்வாமிகள் காளஹஸ்தியில் ஒரு வாரம் தங்கிவிட்டு மார்ச் மாதம் 13-ஆம் தேதி திருப்பதிக்கு விஜயமானார்கள்.

**திருப்பதி விஜயம்**

திருப்பதியில் கிழக்கு எல்லையில் அமைந்துள்ள அங்காளம் மன் ஆலயத்தில் திருப்பதிப் பொது மக்களும் தேவஸ்தான அதி

காரிகளும், தேவஸ்தான மரியாதைகளுடன் ஸ்வாமிகளை வர வேற்றார்கள். மிகவும் அழகாகப் புஷ்பத்தினால் அலங்கரிக்கப் பட்ட தந்தப் பல்லக்கில் ஸ்வாமிகள் வீற்றிருந்து வேதபாரா யணம், பஜனை கோஷ்டி இவைகளுடன் ஜயகோஷங்கள் முழங்க, பல்லாயிரக்கணக்கான மக்கள் பின்தொடர்ந்து வர அந்த ஊர்வலம் கோவிந்தராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தை அடைந் ததும் ஸ்வாமிகள் சிவிகையிலிருந்து இறங்கி ஸ்ரீ கோவிந்த ராஜரை சேவித்துக்கொண்டார்கள். ஸ்வாமிகள் தங்குவதற்காக ராமஸ்வாமி ஆலயத்தின் முன்புறமுள்ள புஷ்பத்தோட்டத்தைத் திருப்பதி ஸ்ரீ மகந்த் அவர்கள் பிரத்யேகமாகச் சீர்படுத்தி வைத் திருந்தார்கள். ஸ்வாமிகள் புஷ்பத்தோட்டத்தை அடைந்ததும், **பிரம்மஸ்ரீ வேங்கடேச்வர தீக்ஷிதர்** வடமொழியில் ஒரு வரவேற்புப் பத்திரத்தையும், நாகபூடி **என். குப்புசாமி ஐயர்** தெலுங்கில் ஒரு வரவேற்புப் பத்திரத்தையும் ஸ்வாமிகளுக்கு வாசித்தளித்தார் கள். அன்று மாலை ஸ்வாமிகள் சங்கர மடத்திற்கு விஜயம் செய்து, மடத்தின் முத்ராதிகாரி **பிரும்மஸ்ரீ வேங்கடேச்வர தீக்ஷிதரால்** செய்யப்பட்ட பாத பூஜையை ஏற்றுக்கொண்டார்கள். ஸ்வாமிகள் கீழத் திருப்பதியில் 21-4-32 வரை மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். இந்த அவகாசத்தின் மத்தியில் ஸ்வாமிகள் மூன்று நாட்கள் திருமலைக்கு விஜயம் செய்து **ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத்** தரிசனம் செய்துகொண்டார்கள். திருமலையில் தேவஸ்தான அதிகாரிகளும் பொது மக்களும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை இவைகளைச் செய்து வைத்தார்கள். தேவ ஸ்தானத்தின் சார்பாக ஸ்வாமிகளின் பிக்ஷைக்கென விசாரணை கர்த்தா ரூபாய் 700 அளித்தார். வழக்கம்போலுள்ள மரியாதை களை ஸ்வாமிகளுக்குத் தேவஸ்தானத்தார் செய்ததுடன், ஸ்வாமி களுக்குப் பிரத்யேக மரியாதையைக் காட்டும் பொருட்டுத் தங்கக் கலசம் வைத்த குடை ஒன்றையும், பொன்னாடைகளையும், பெரு மாளுக்கு அலங்கரிக்கப்பட்ட இருபத்தைந்து முழ நீளமுள்ள பீதாம்பரம் ஒன்றையும் வழங்கினார்கள். ஸ்ரீ வேங்கடேச பெருமாளுக்கு ஸ்வாமிகள் விலையுயர்ந்த ரத்னங்கள் பதிக்கப் பெற்ற மகரகண்டி பதக்கமொன்றையும், பீதாம்பரம் ஒன்றையும் அளித்தார்கள்; மேலும் உண்டியில் பவுன் நாணயங்களையும், முத்து, பவழம், கோமேதகம், வைரம், வைடூரியம் இவைகளையும் சேர்த்தார்கள்; தவிர, ஸ்வாமிக்கு ஸகஸ்ரகலச அபிஷேகமும், சுக்கிர வார அபிஷேகமும், கருடோத்ஸவமும் நடத்திவைத் தார்கள். மகரகண்டி பதக்கம் சமர்ப்பித்ததற்கும் ஸகஸ்ர

கலசாபிஷேகம் செய்ததற்கும் தேவஸ்தானத்திற்கு வழக்கமாகச் செலுத்தவேண்டிய காணிக்கையில் பாதித் தொகையையே தேவஸ்தான அதிகாரிகள் மடத்திலிருந்து வசூலித்துக்கொண்டனர். தேவஸ்தான அதிகாரிகளுக்கெல்லாம் ஸ்வாமிகள் வஸ்திரங்கள் கொடுத்து, அவர்களை ஆசீர்வதித்தார்கள். மற்றும் அர்ச்சகர்கள், தீர்த்தவாசிகள், சிப்பந்திகள் இவர்களுக்கும் தக்க மரியாதைகளைச் செய்தார்கள். திருமலையில் ஸ்வாமிகள் தங்கியிருந்த 3 நாட்களிலும் பாபநாசம், ஆகாச கங்கை இவ்விரண்டு நீர்வீழ்ச்சிகளிலும் நீராடினார்கள். மலையிலிருந்து இறங்கும்பொழுது பாதை நெடுகிலும் உட்கார்ந்திருக்கும் ஏழை மக்களுக்கு ஸ்வாமிகள் வஸ்திரங்களையும், நாணயங்களையும் அளித்தார்கள். கீழைத் திருப்பதியில் ஸ்வாமிகள் தங்கியிருந்த பொழுது ஸ்மார்த்த பிராம்மணர்களும், வைசியர்களும், பேரி வைசியர்களும், பலிஜா சமூகத்தினரும், ரெட்டி சமூகத்தினரும், மற்றும் கண்ட்லா சமூகத்தினரும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளைச் செய்துவைத்தார்கள். ஸ்வாமிகள் திருப்பதியில் தங்கியிருந்த ஒவ்வொரு நாள் இரவிலும், அவர்கள் தெலுங்கு பாஷையில் எளிய நடையில் உபன்யாஸம் செய்து வந்ததை ஆயிரக்கணக்கான மக்கள் கேட்டுத் தங்களது அறிவை பெருக்கிக்கொண்டனர். ஸ்வாமிகள் திருப்பதியில் விஜயம் செய்திருப்பதை அறிந்த வெளி ஜில்லாக்களிலுள்ள மடத்தின் சிஷ்யர்கள் நூற்றுக்கணக்காகத் திருப்பதிக்கு வந்து ஸ்வாமிகளைத் தரிசனம் செய்து கொண்டார்கள். அப்பொழுது மடத்திற்கு வந்த பண்டிதர்களெல்லோருக்கும் ஸ்வாமிகள் காஷ்மீர் சால்வைகளை அளித்து மரியாதை செய்தார்கள். திருப்பதியிலிருந்து ஸ்வாமிகள் 21-4-32-ஆம் தேதி வேங்கடகிரிக்கு விஜயமானார்கள்.

**வேங்கடகிரிக்கு விஜயம் செய்தது**

வேங்கடகிரி மகாராஜாவின் அழைப்பிற்கிணங்க ஸ்வாமிகள் 24-4-32-இல் **வேங்கடகிரிக்கு** விஜயம் செய்தபொழுது, அவ்வூரின் எல்லையில் தகுந்த மரியாதைகளுடன் ஊர் மக்களும் **வேங்கடகிரி** **குமாரராஜாவும்** வரவேற்றார்கள். அவ்வூரில் புதிதாய் **தர்பா காளஹஸ்தி சாஸ்திரிகளால்** கட்டப்பட்ட சங்கரமடத்தில் ஸ்வாமிகள் தங்கியிருந்தார்கள். அவ்வருடத்து சங்கர ஜயந்தியும் அந்த மடத்திலேயே நடைபெற்றது. வேங்கடகிரி ராஜபரம்பரையினர் ஸ்வாமிகள் அவ்விடம் தங்கியிருந்த ஒவ்வொரு நாளும் பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளைச் செய்துவைத்தார்கள்.

அரச குடும்பத்தினருக்கும் வித்வான்களுக்கும் பீதாம்பரம் சால்வை முதலான மரியாதைகளை ஸ்வாமிகள் அளித்துவிட்டு அவர்களை ஆசீர்வதித்து 11-5-32-இல் வேங்கடகிரியை விட்டுப் பிரயாணமானுர்கள்.

**கார்வேட்நகரத்திற்கு விஜயம்**

வேங்கடகிரியிலிருந்து ஸ்வாமிகள் **பூடி, வடமல்பேட்டை, பதிரேடு, ஜோகுல மல்லவரம், புங்கலூர்** இவ்வூர்களின் வழியாக மறுமுறை திருப்பதியை அடைந்து பௌர்ணமியன்று திருமலையில் வேங்கடேசப் பெருமாளைச் சேவித்துக்கொண்டு, இரண்டு நாட்கள் **திருச்சானூரில்** தங்கி **பத்மாவதி அம்மனைத்** தரிசனம் செய்து கொண்டு, மே மாதம் 22-ஆம் தேதி **புத்தூரை** அடைந் தார்கள். அவ்விடம் சுமார் பதினைந்து நாட்கள் தங்கியிருந்து, இயற்கை அழகு வாய்ந்த கைலாசகொனு, சதாசிவகொனு, அம்மவாருகொனு என்னும் நீர்வீழ்ச்சிகளில் நீராடினுர்கள், ஸ்வாமிகள் புத்தூரில் தங்கியிருந்த பொழுது நகரிக்குச் சமீபமாக உள்ள புக்கை என்னும் தலத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்ய வேண்டுமென்றும், அவ்விடத்திலேயே அவ்வருடத்து வியாஸ பூஜை சாதுர்மாஸ சங்கல்பத்தை நடத்தவேண்டுமென்றும் **ஆனம் குப்புசாமி நாயுடு, ஜி. ரெங்கைய ரெட்டி** முதலிய பிரமுகர்கள் ஸ்வாமிகளை வேண்டிக்கொண்டிருந்தனர். ஸ்வாமிகளும் அவர் களது வேண்டுகோளை அன்புடன் ஏற்றுக்கொண்டார்கள். ஸ்வாமிகள் 4-6-32-ஆம் தேதி கார்வேட்நகரத்திற்கு விஜயம் செய்து நான்கு நாட்கள் அவ்விடம் தங்கியிருந்தார்கள். **கார்வேட் நகர ராஜா** ஸ்வாமிகளுக்கு தக்க வரவேற்பளித்து தமது லக்ஷ்மீ விலாச அரண்மனையில் ஸ்வாமிகள் தங்க இடவசதி செய்து கொடுத்தார். அந்த ராஜாவும், அவரது குடும்பத்தினரும் மற்றும் அவ்வூர்ப் பொதுமக்களும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளைச் செய்து வைத்தனர். கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ சந்திரமௌளீசுவரரின் அபிஷேகத்திற்கென வெள்ளியினுல் **ஸகஸ்ர தாரா பாத்திரம்**—அதாவது ஆயிரம் துவாரங்களுள்ள ஓர் கிண்ணத்தைச் செய்து சமர்ப்பித்தார். ஸ்வாமிகள் ராஜாவிற்கும், அரண்மனைப் பண்டிதர்களுக்கும் சால்வைகள் வெகுமானம் செய்து அவர்களை அனுக்ரகித்தார்கள்.

**தாயின் வியோகம்**

1932-ஆவது வருடம் ஸ்வாமிகள் சித்தூர் ஜில்லா **நகரி** என்னும் ஸ்தலத்தில் விஜயம் செய்திருந்தபொழுது ஒரு நாள்

காலையில் மடத்தின் மானேஜருக்கு ஒரு தந்தி கிடைத்தது. அத் தந்தியின் சாரம் ஸ்வாமிகளின் தாயாராகிய மகாலக்ஷ்மி அம்மையார், ஆங்கிரஸ வருடம் ஆனி மாதம் 1-ஆம் தேதி (14-6-1932) ஜேஷ்ட சுக்ல ஏகாதசி அன்று, கும்பகோணத்தில் சிவபதம் அடைந்துவிட்டார்கள் என்பதேயாகும். ஏகாதசியன்று மரணமும் துவாதசியன்று தகனமும் கிடைப்பது ஓர் பெரிய புண்ணியமென்று பெரியோர்கள் கூறுவர். உலக ஆசார்யரைப் பெற்றெடுத்த அந்த அம்மையாருக்கு இப்பெரும் புண்ணியம் கிடைத்ததில் யாதொரு ஆச்சரியமுமில்லை.

இத் தந்தி கிடைத்தபொழுது ஸ்வாமிகள் பண்டிதர்களின் நடுவில் வேதாந்த விசாரம் செய்துகொண்டிருந்தார்கள். மடத்தின் நிர்வாகி இத் தந்தியைக் கையிலேந்தி ஸ்வாமிகள் வீற்றிருந்த இடத்தை நோக்கி வந்துகொண்டிருந்தபோதே, ஸ்வாமிகள் அவரிடம், 'அந்தத் தந்தி கும்பகோணத்திலிருந்து வந்ததா?' எனக் கேட்க, நிர்வாகி, ஸ்வாமிகளின் கேள்விக்குப் பதிலாக 'ஆம்' எனக் கூறவே, எவரிடமும் மேலே எதுவும் கேட்காமல், அவரைத் திரும்பிப் போகும்படி அவர்கள் கட்டளையிட்டார்கள். அதன்பின் ஸ்வாமிகள் சில விநாடிகள் மௌனமாக இருந்தார்கள். அங்குக் கூடியிருந்த பண்டிதர்களுக்குத் தந்தியின் விவரம் யாதும் விளங்கவில்லை. அந்தத் தந்தியைப்பற்றிய தகவலை அவர்கள் தெரிந்துகொள்ள ஆவலுள்ளவர்களாக இருந்தபோதிலும், ஸ்வாமிகளின் வாக்கினின்று எதுவும் வெளிவராத நிலையில் அவர்களும் மௌனமாகவே இருந்தார்கள். சற்றுநேரத்திற்கெல்லாம் ஸ்வாமிகள் அந்தப் பண்டிதர்களை நோக்கி, 'தாயாரின் வியோகத்தைக் கேட்ட சந்நியாசி உடனே செய்ய வேண்டுவதென்ன?' எனக் கேட்டார்கள். அங்குக் கூடியிருந்த பண்டிதர்கள் தர்ம சாஸ்திரங்களில் நன்கு தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தும், விஷயத்தை ஒருவாறு ஊகித்தவர்களாகி, மனக்கிலேசத்தை அடைந்து, எதையும் உரைக்கத் தோன்றாதவர்களாய் மௌனம் சாதித்தனர், ஸ்வாமிகள் அப்பொழுது தாம் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்திருந்து, அவ்விடமிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள ஒரு நீர்வீழ்ச்சியை நோக்கிப் புறப்பட்டார்கள். இந்தத் துக்ககரமான சம்பவத்தை அறிந்த பண்டிதர்களும், ஸ்வாமிகளைப் பின் தொடர்ந்து சென்றனர். இந்தச் செய்தி வெகு சீக்கிரத்தில் அந்த ஊர் மக்களுக்கும் ஸ்வாமிகளைத் தரிசிக்க வெளியூர்களிலிருந்து வந்தவர்களுக்கும் எட்டிவிடவே பெரியோர்கள், ஆண், பெண், குழந்தைகள் ஈறாக எல்லோரும் ஸ்வாமிகளைப்

பின் தொடர்ந்து சென்றனர். ஸ்வாமிகள் முன்னால் மௌனமாக நடந்து செல்ல, மற்றவர்கள் பகவன் நாமாக்களை உச்சரித்தவாறு பின் சென்றனர். நாம உச்சரிப்பைத் தவிர வேறு எந்தப் பேச்சும் அப்பொழுது கேட்கவில்லை. பலர் உள்ளம் உருகிக் கண்ணீர் விடுத்தனர். ஸ்வாமிகளின் தாயார் உலகத்திற்கெல்லாம் தாயாரே என்ற எண்ணம் அவர்கள் மனங்களில் உதித்தது. யாவரும் உணர்ச்சி மிகுந்தவர்களாகக் காணப்பட்டனர். ஸ்வாமிகள் நீர்வீழ்ச்சியில் ஸ்நானம் செய்தவுடன் பின் தொடர்ந்து வந்த கூட்டத்திலுள்ளவர்களும் அமைதியுடன் ஸ்நானம் செய்தனர். மடத்தின் அதிகாரிகள் வேதம் ஓதும் அந்தணர்களுக்குப் பொற்காசுகளையும் வெள்ளிக்காசுகளையும் தானமாக அளித்தார்கள். அந்த அம்மையார் இறந்த பத்தாவது நாளன்று கும்பகோணம் மடத்தில் ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு அன்னதானம் அளிக்கப்பட்டது.

**புக்கையில் வியாச பூஜையும், சங்கர ஆலய பிரதிஷ்டையும்**

புக்கை என்னும் க்ஷேத்திரம் நகரியிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ளது. அங்குள்ள கோயிலுள் ஒரே பிராகாரத்திற்குள் **காசிவிசுவநாதர்** ஆலயமும் **பிரயாகை மாதவர்** ஆலயமும் அமைந்து சிவவிஷ்ணு அபேதத்தை விளக்கக் கூடிய ஸ்தலமாக அக்கோயில் அமைந்திருக்கிறது. அந்த ஆலயத்தை ஒட்டினாற் போல **குசஸ்தலி** என்னும் ஜீவநதி ஓடுகிறது. அந்நதியின் கரையில் பஞ்ச கங்கை என்று கூறப்படும் ஐந்து அருவிகள் எப்பொழுதுமே தண்ணீரைச் சொரிந்து கொண்டு இருக்கின்றன. அந்தத் தண்ணீர் அவ்வாலயத்திலுள்ள மூர்த்திகளின் கீழ்ப் புறத்தில் உற்பத்தியாகி இவ்விதம் அருவிகளாக விழுகின்றன எனக் கூறுகின்றார்கள். இவ்வித இயற்கை அழகு பெற்ற புண்ணிய க்ஷேத்திரத்தில் வியாஸபூஜையை நடத்தி அவ்விடத்திலேயே இரண்டு மாதங்கள் தங்கியிருப்பது ஸ்வாமிகளுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரக்கூடியதாக இருந்தது. 1932-ஆம் வருடம் ஜூலை மாதம் 17-ஆம் தேதி புக்கையில் வியாஸபூஜை மிகவும் விமரிசையாய் நடைபெற்றது. வழக்கம்போல் பண்டிதர்களும் ஆயிரக்கணக்கில் பக்தர்களும் அன்று அவ்விடம் கூடி ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டனர். அத்தலத்தில் வியாஸ பூஜை நடைபெற்றதின் நினைவாக, அங்கிருந்த அன்பர்கள் **வியாஸ தீர்த்தம்** எனப் பெயரிட்டு ஓர் கிணற்றை அமைத்துள்ளார்கள். ஸ்வாமிகள் புக்கையில் தங்கியிருந்த காலத்தில் **ஸ்ரீகாசி விசுவ**

நாதர் ஆலயத்திற்கும் ஸ்ரீ பிரயாஸக மாதவஸ்வாமி ஆலயத்திற்கும் ஜீர்ணோத்தாரணம் செய்து 11-9-32-இல் கும்பாபிஷேகமும் மிகச் சிறப்பாக நடத்தினார்கள். கும்பாபிஷேகத்திற்கெனப் பல்லாயிரக்கணக்கான மக்கள் சித்தூர் ஜில்லாவிலிருந்தும், மற்றும் வெளி ஜில்லாக்களிலிருந்தும் சென்னை நகரத்திலிருந்தும் வந்து குவிந்தனர். எம். எஸ். எம். ரெயில்வே அதிகாரிகள் பொது மக்களின் சௌகரித்தை முன்னிட்டுச் சென்னையிலிருந்து பிரத்யேக ரெயில்கள் விட ஏற்பாடு செய்திருந்தனர். கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்த மக்கள் யாவருக்கும் அன்னதானம் அளிக்கக் கும்பாபிஷேகக் கமிட்டியார் சிறந்த முறையில் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஸ்வாமிகளின் மேற்பார்வையில் இந்த வைபவங்களெல்லாம் மிகவும் மேன்மையாக நடைபெற்றன. அச்சமயம் கும்பாபிஷேகத்திற்கு ஆக வேண்டிய பணிகளையெல்லாம் ஆனம் குப்புசாமி நாயுடு, பா. மாணிக்க நாயுடு, குண்டா ரெட்டி, ரெங்கைய ரெட்டி, பி. கிருஷ்ணசாமி அய்யர் முதலானவர்கள் சலியா உழைப்புடன் செய்துகொடுத்தனர். சாதுர்மாஸ சங்கல்பம் முடிந்தவுடன் சென்னை நகரவாசிகளின் பிரார்த்தனைக்கிணங்கி ஸ்வாமிகள் சென்னைக்குப் பயணமானார்கள். வழியில் திருத்தணியில் தங்கி ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமியை தரிசித்துக் கொண்டார்கள்.

**சித்தூர் ஜில்லாவின் பெருமையும் ஸ்ரீ வேங்கடேச தத்துவமும்**

சித்தூர் ஜில்லாவை விட்டுப் புறப்படுமுன்னர் ஸ்வாமிகள் அந்த ஜில்லாவின் அழகையும் புனிதத்தன்மையையும் வர்ணித்து ஓர் உபந்யாஸம் செய்தார்கள். அதில் அந்த ஜில்லாவில் திருப்பதியில் ஸ்ரீ வேங்கடேசரும், காளஹஸ்தியில் ஸ்ரீ காளஹஸ்தீச்வரரும் அமைந்திருப்பதுடன், திருத்தணியில் ஸ்ரீ சுப்பிரமன்யர் ஆலயம் அமைந்திருப்பதும் ஒரு விசேஷமென்றும், தவிர, சதாசிவ கொனு, கைலாச கொனு, அம்மவாரி கொனு என்னும் நீர்வீழ்ச்சிகளும் அங்கு அமைந்திருக்கின்றனவென்றும், வடக்கே பதரிவனம், காசிஸ்தலம், கைலாச பர்வதம், மகா மேரு இவை உள்ளன போலச் சித்தூர் ஜில்லாவில் நாராயண வனம், காசிவிச்வநாதர் ஆலயம், பஞ்சகங்கை, பிரயாக மாதவ ஆலயம் இவை அமைந்திருக்கின்றன என்றும், இவைகளெல்லாம் இந்த ஜில்லாவின் பெருமையைக் குறிக்கின்றன என்றும், திருப்பதியில் விளங்கும் ஸ்ரீ வேங்கடேச்வரர், ஸ்ரீ சுப்பிரமணியம், சிவன், சக்தி, விஷ்ணு, இவர்களுடைய ஸ்வரூபத்தைக் கொண்ட ஒரு மூர்த்தியே யென்றும், மலையில் அமர்ந்து பாலாஜி என்று பெயர் பெற்றிருப்

பதால், அந்தக் கடவுளைப் பால **சுப்ரமண்யரெனக்** கூறலா மென்றும், அந்த மூர்த்தியின் தலையில் சிவச் சின்னத்தை விளக்கும் ஜடையும், நாகமும் காணப்படுகின்றன வென்றும், ஒவ்வொரு நாளும் அந்த மூர்த்திக்குப் பில்வ அர்ச்சனை நடைபெறுகின்ற தென்றும், அதனால் அவர் சிவ வடிவமாகவும் காட்சியளிக்கின்றார் என்றும், கிரீடத்தில் ஸ்ரீசக்ரம் காணப்படுவதாலும், வெளிப் பிராகாரத்தில் சுவர்களின் மேல் சிம்ம உருவங்கள் காணப்படுவ தாலும் அவை அம்பிகையின் சின்னமாகயிருக்கின்றனவென்றும் சங்கு, சக்கரம், கிரீடம் இவை காணப்படுவதால் அவை விஷ்ணுவின் அம்சத்தைக் குறிப்பிடுகிறதென்றும் கூறினார்கள். மேலும் ஸ்வாமிகள் கூறுகையில் சிவ விஷ்ணு சர்ச்சைகளெல்லாம் பிற்காலத்தில் எழுந்தவைகளென்றும், உப நிஷதங்களில் இவ்விதப் பாகுபாடு எதுவும் விவரிக்கப்பட வில்லை யென்றும், மாண்டுக்ய உபநிஷத்தில் ஓர் இடத்தில் மாத்திரம் **சிவன்** என்னும் சொல்லையும், கடோபநிஷத்தில் ஓர் இடத்தில் **விஷ்ணு** என்னும் சொல்லையும் காண்கிறோமென்றும், அவ்விரு சொற்களுக்கும் **மங்களம்** என்னும் பொருளே பொருந்துமென்றும், ஆகையால் பக்தர்கள் யாவரும் சிவ விஷ்ணு அபேதத்திற்குச் சாக்ஷியாக நிற்கும் ஸ்ரீ வேங்கடேச்வரப் பெருமாளை என்றும் வணங்கி அவரது அருளுக்குப் பாத்திரர்களாக வேண்டுமென்றும் அருள்மொழி பொழிந்தார்கள்.

**ஒரு நாயின் அறிவும் பக்தியும்**

1927-ஆம் வருடம் முதல் மடத்தின் முகாமுடன் நாய் ஒன்று வந்துகொண்டிருந்தது. அது நல்ல அறிவு படைத்த நாய். அசுத்தங்களை அது தொடுவதில்லை. அது மடம் முகாம் செய்யும் இடங்களிலெல்லாம் தங்கி, இரவில் மடத்தின் கால்நடைகளையும் சாமான்களையும் திருடர்கள் எடுத்துப் போகாமல் பாதுகாத்து வரும். அது வழக்கம்போல் மடத்திலிருந்து போடப்படும் அன்னத்தை உட்கொள்ளுமே தவிர வேறு யாராவது கொடுக்கும் எந்தவித உணவையும் அது உட்கொள்ளுவதில்லை. அதனால் ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளும் மாலையில் புன்முறுவல் செய்து கொண்டே, 'நாய்க்கு ஆகாரம் கொடுத்தாகிவிட்டதா?' எனக் கேட்பார்கள். ஸ்வாமிகள் பல்லக்கில் ஆரோகணம் செய்து கொண்டு, ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊர் போகும்போது, இந்த நாய் பல்லக்கின் கீழேயே போய்க்கொண்டிருக்கும். நடுவில் ஏதாவது ஓர் ஊரில் பக்தர்களுக்குச் சேவை அளிக்கப் பல்லக்கு

நிறுத்தப்பட்டால், இந்த நாய் வெகு தூரத்தில் போய் நின்று விடும். சில சமயம் சாலைகளில் நடந்து செல்லும் மடத்தின் யானையின் நான்கு கால்களின் நடுவில் அது சென்றுகொண்டே யிருக்கும். நீராடி விபூதி தரித்துத் தூய்மையுடன் ஸ்வாமிகளைத் தரிசிக்க வருபவர்களைக் கண்டால் வாலைக் குழைத்துக்கொண்டு அது தூரத்தில் விலகி நிற்கும். மடத்தின் காவற்காரர்கள் சற்று அயர்ந்திருந்தால், அவர்களுக்காக அது மடத்தில் காவல் காக்கும். மடத்திலிருந்து வழக்கமாக அன்னமிடுகிறவர் ஒரு நாள் அன்னமிட மறந்துவிட்டால் அன்று அது பட்டினியே கிடக்கும். அந்த நாயை ஒரு நாள் ஒரு சிறுவன் கல்லால் அடிக்க, அது குரைத்துக்கொண்டு அவனைக் கடிக்க வரவே, மடத்தின் அதிகாரிகள் பயந்து, அந்த நாயின் கண்களை மறைத்து இருபத்தைந்து மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்தில் அதைக் கொண்டுபோய் விட்டுக் கயிற்றினால் கட்டி வைக்கும்படி செய்து வந்துவிட்டார்கள். ஸ்வாமிகளை விட்டுப் பிரிந்த அந்த நாய் எந்த விதமோ கயிற்றிலிருந்து விடுபட்டுக்கொண்டு, தன்னைக் கொண்டுவந்து விட்டவன் ஊர் போய்ச் சேரும் முன்னரே வேறு பாதையின் வழியாக ஸ்வாமிகளின் முகாமுக்கு ஓடிவந்து விட்டது. அன்று முதல் அது உயிர் வாழ்ந்தவரை ஸ்வாமிகளைத் தரிசிக்காமல் ஆகாரம் உட்கொள்ளுவதில்லை. மடத்திற்குத் தரிசனத்திற்கு வரும் பக்தர்களெல்லாம் இந்த நாயையும் பார்த்துவிட்டுச் செல்வார்கள்.

**ஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்தது**

ஸ்வாமிகள் சென்னையை நோக்கி யாத்திரை செய்யப் புறப்பட்ட செய்தியை முன்பு கூறினோம். சென்னை போன்ற பெரிய நகரங்களில் தம் ஸ்நானத்திற்கும், பூஜைக்கும் வேண்டிய வசதிகள் குறைவாக இருக்குமென்ற காரணத்தினால், ஸ்வாமிகள் அது போன்ற இடங்களில் அதிக காலம் தங்க விரும்புவதில்லை. அதே காரணத்தினால் சென்ற 1930-ஆம் வருடம் டிசம்பர் மாதத்தில் ஸ்வாமிகள் சென்னையைச் சார்ந்த **கோயம்பேடு** வரை விஜயம் செய்திருந்த போதிலும், நகரத்திற்குள் பிரவேசிக்காமல் இருந்து விட்டார்கள். சென்னை வாசிகளான அடியார்கள் பலர் ஸ்வாமிகள் **புக்கையில்** தங்கியிருந்தபொழுது அவ்விடம் சென்று, ஸ்வாமிகள் சென்னை நகரத்திற்கு வந்து இரண்டொரு மாதங்களாவது தங்கியிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். அவர்களும் அதற்கொருவாறு இணங்கிப் புக்கையில் சாதுர்மாஸ்ய

முடிந்ததும், அவ்விடமிருந்து **திருத்தணி** மார்க்கமாக 28-9-32-இல் **சென்னை நகருக்கு** விஜயமானார்கள். ஸ்வாமிகளின் வரவை எதிர் பார்த்து, அன்று மாலை ஆயிரக்கணக்கான ஜனங்கள் பூர்ண கும்பங்களுடனும், மாலைகளுடனும் மயிலாப்பூர் லஸ் சர்ச் ரோட்டிலும், மௌபரிஸ் ரோட்டிலும் கூட்டங்கூட்டமாகக் காத்திருந்தார்கள். ஸ்வாமிகள் சுமார் இரவு எட்டரை மணிக்கு அங்கு விஜயம் செய்தவுடன், முதலில் வரவேற்புக் கமிட்டியின் சார்பாக, **கே. பாலசுப்ரமண்ய ஐயர்** மற்றும் **சென்னை கார்ப்பரேஷன் தலைவர் T. S. ராமஸ்வாமி ஐயர்** முதலானவர்கள் ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து, ஊர்வலமாக வரவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்கள். ஓர் பெரிய ஊர்வலத்திற்கு முன்னரே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஸ்வாமிகள் புஷ்ப அலங்காரம் செய்யப்பெற்றிருந்த தந்தச் சிவிகையில் ஆரோகணித்துக் கொண்டு, இரவைப் பகலாக்கும் எண்ணிறந்த காந்த விளக்குகளின் ஜோதியில் பக்தர்களுக்குக் காட்சியளித்ததை அன்று கண்டவர்கள் என்றும் மறக்க முடியாது. வேதம் ஓதும் அந்தணர்கள், வரிசை வரிசையாக நின்று வேத கோஷங்களை ஒருபுறம் ஒலிக்கச் செய்தனர்; இசையுடன் ஈசனைப் பாடிப் பழகிய அடியார்கள் இன்னிசை வாத்தியங்களுடன் ஒருபுறம் பஜனை செய்தனர்; இவைகளைத் தவிர நாற்புறமும் பக்தர்களின் ஜய கோஷங்கள். அப்பொழுது அங்குக் கூடியிருந்தவர்களின் கண்களும் மனமும் ஜோதிர்மயமாய் விளங்கிய ஸ்வாமிகளின் திருமேனியிலேயே லயித்திருந்தனவென்றால் அது மிகையாகாது. ஸ்வாமிகள் தமது புன்முறுவலால் எல்லோரையும் அனுக்கிரகித்தார்கள். நெருங்கிப் பழகிய சிலருடன் இரண்டொரு வார்த்தைகளைக் கூறி அவர்களை மகிழ்விக்கச் செய்தார்கள். மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் ஸ்வாமிகள் தங்குவதற்கென விசாலமான கொட்டகைகள் போடப்பட்டும், இதர வசதிகள் செய்யப்பட்டும் இருந்தன. ஸ்வாமிகள் ஜாகைக்கு வந்து தங்கியவுடன் சம்ஸ்கிருதத்திலும், தெலுங்கிலும், தமிழிலும் அவர்களுக்கு வரவேற்புப் பத்திரங்கள் வாசித்து அளிக்கப்பட்டன. அன்றிரவு ஸ்வாமிகள் **சிவபக்தியின் பெருமையையும்,** அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் **கபாலீச்வரர் மகிமையையும்** பற்றிச் சிறிது நேரம் பக்தர்களுக்கு உபதேசித்தருளினார்கள். சென்னைக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்ததை முன்னிட்டு ஸ்வாமிகளின் பக்தர்களில் ஒருவரான **ஏ. கே. ரங்கநாதய்யர்** அடுத்த நாளாகிய 29-9-32 அன்று 3000 ஏழைகளுக்கு அன்னதானமும் வஸ்திரதானமும் செய்தார்.

## ஸ்வாமிகளுக்கு வரவேற்பளிக்கச் சென்னைக் கார்ப்பொரேஷன் நிறைவேற்றிய தீர்மானம்

ஸ்ரீ ஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்யும் முன்னர் சென்னைக் கார்ப்பொரேஷனில் ஸ்வாமிகளுக்கு நகர மக்களின் சார்பாக வரவேற்பளித்து ஓர் உபசாரப் பத்திரத்தை வாசித்து அளிப்பதென்றும், அதற்காக ரூபாய் 300 செலவிடுவதென்றும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்தது. இந்தத் தீர்மானத்தை **ஸர். ஏ. ராமசாமி முதலியார்** பிரேரேபித்துப் பேசுகையில், ஓர் மதத் தலைவருக்குக் கார்ப்பொரேஷன் வரவேற்பளிப்பது அதுவே முதல் தடவையென்றும், நம் ஸ்வாமிகள் இந்துக்கள் மாத்திரமல்லாமல் பிற மதத்தினருடைய மதிப்பிற்கும் பாத்திரர்களாக விளங்குகிறார்களென்றும், அப்பெரியாருக்கு வரவேற்பளிக்கும் ஓர் தீர்மானம் விவாதம் ஒன்றுமில்லாமலேயே அனுமதிக்கப்பட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். அதன்படியே எவ்வித விவாதமுமில்லாமலேயே தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. ஆயினும், ஸ்வாமிகள் கார்ப்பொரேஷன் கட்டிடத்திற்குச் சென்று லௌகிக சம்பிரதாயத்துடன் கூடிய அந்த வரவேற்பை நேரில் பெற்றுக்கொள்ள முடியாத நிலையில், கார்ப்பொரேஷனுக்கு ஸ்வாமிகள் தமது நன்றியை மடத்தின் அதிகாரிகள் மூலம் தெரிவித்துவிட்டார்கள்.

## சென்னையில் நவராத்திரி பூஜை

ஒன்பது இரவுகளைக் குறிப்பதே நவராத்திரி யாகும். நவராத்திரி பூஜையானது ஒவ்வொரு வருடத்திலும் மடத்தில் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படும். சரத் காலத்தில் வரும் நவராத்திரி யாதலால் இதற்கு **சாரத நவராத்திரி** யென பெயர் வழங்குகிறது. வஸந்த காலத்தில் வரும் நவராத்திரியிலும் தேவி பக்தர்கள் விசேஷ பூஜைகளைச் செய்வதுண்டு. இதற்கு **வஸந்த நவராத்திரி** என்னும் பெயருண்டு. சரத் காலத்தில் பாரத பூமி முழுவதும் சற்றேறக்குறைய ஒரே சீதோஷ்ண நிலையை அடைந்திருக்கும். சாந்திரமான ரீதியாக ஆச்விஜ மாதம் சுக்கில பக்ஷத்தில், அதாவது புரட்டாசி மாதம் வளர்பிறையில், முதல் நாள் தொடங்கி 9 நாட்கள் இந்தப் பூஜை நமது பாரத தேச முழுவதும் பராசக்தியைக் குறித்து நடைபெறுகிறது. தேவியை அதிகமாக வழிபடும் வங்காளத்தில் இந்தப் பூஜையை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள்.

அவ்வருடம் அக்டோபர் மாதம் 1-ஆம் தேதியில் சென்னையில் நவராத்திரி பூஜை ஆரம்பமாயிற்று. பூஜை தொடங்கும் நாள் முதல் 9 நாட்களும் ஸ்வாமிகள் மௌனத்தை மேற்கொள்ளு வார்கள். 10-ஆவது நாளாகிய விஜயதசமி அன்றுதான் ஸ்வாமி களின் மௌனம் நீங்கும். அந்த நாள்களில் ஸ்வாமிகள் ஆகாரம் எதையும் அருந்துவதில்லை. இரவும் பகலும் தேவியின் பூஜையி லேயே ஈடுபட்டிருப்பார்கள். ஏராளமான பக்தர்கள் ஸ்வாமி களின் தரிசனத்திற்காகவும், அவர்கள் செய்யும் விசேஷ பூஜை யைக் காணவும் மடத்திற்கு வந்து கூடுவார்கள். ஸ்வாமிகள் அம்பிகைக்குச் செய்யும் அபிஷேக தீர்த்தத்தைக் கொண்டு ஸ்நானம் செய்வோருக்கு வியாதிகள் நீங்கும். பெண் மக்களுக்கு ஏற்படும் சங்காதோஷம் என்னும் கெடுதிகளும் அவர்களை விட்ட கலும். மேலும் அவர்கள் நல்ல அறிவையும் எல்லா பாக்யங் களையும் பெறுவார்கள் என்பது பக்தகோடிகளின் ஆழ்ந்த நம் பிக்கை. பக்தர்கள் அவரவர்கள் சக்திக்குத் தகுந்தவாறு ஸ்வாமி களின் பூஜைக்கு வேண்டிய திரவியங்களைக் காணிக்கையாக அளிப்பார்கள்.

நவராத்திரி பூஜை நடைபெறும் அக்காலங்களில் மடத்தில் பெண்களுக்கே அதிக உரிமையுண்டு. மாங்கல்யத்துடன் விளங்கும் அவர்களை அவ்வொன்பது நாட்களும் பரதேவதையின் அம்ச மாகப் பாவித்து அவர்களுக்கு ஆடைகள், மஞ்சள், குங்குமம் புஷ்பம் இவைகளை வழங்குவார்கள். அவர்களுக்கு முதலில் உண்டி அளித்த பிறகே மற்றவர்கள் ஆகாரம் உட்கொள்ளு வார்கள். இரண்டு வயது முதல் பத்து வரையில் உள்ள கன்னிப் பெண்களுக்கு முறையே முதல் நாளிலிருந்து நடைபெறும் பூஜையைக் கன்னியா பூஜையெனக் கூறுவார்கள். ஸ்வாமிகள் தமது திருக்கரங்களால் செய்யும் இந்தக் கன்னியா பூஜையைப் பக்தர்கள் வெகு நேரம் காத்திருந்து காண்பார்கள். வேதங்களைக் கற்றறிந்த அந்தணர்கள் அப்பொழுது வேதபாராயணத்தைச் செய்வார்கள். மற்றும் தேவீபாகவதம், ராமாயணம், கீதை, பிரம்ம சூத்திர பாஷ்யம் இவைகளையும் வித்வான்கள் பாராயணம் செய்வார்கள். மடத்தில் சண்டி ஹோமம், ஸ்ரீ வித்யா ஹோமம் இவைகளெல்லாம் நடைபெறும். இவற்றிற்கெல்லாம் ஏராளமாகப் பொருள் செலவாகும். இவற்றிற்குச் சிஷ்யர்கள் போட்டியிட்டுக் கொண்டு தங்கள் தங்கள் காணிக்கைகளைச் செலுத்துவார்கள். இந்தப் பூஜையின் கோலாகலத்தைச் சென்னை வாசிகள் பலர் அதற்கு முன் கண்டதில்லை யாகையால் ஏராளமான கூட்டம்

மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் கூடிற்று. கலாசாலையின் கட்டிடங்கள் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. பத்து நாட்களும் அப்பொழுது ஒரு திருவிழாப்போல மயிலாப்பூர் காணப்பட்டது. இந்த விசேஷ பூஜைகளும் ஹோமங்களும் சரஸ்வதி பூஜையன்று முடிவு பெற்று, விஜயதசமியன்று ஸ்வாமிகள் தமது மௌன விரதத்தை முடித்துக்கொண்டார்கள்.

**சந்திரசேகரேந்திர தீர்த்தமும், பாஷ்ய விஜய மண்டபமும்**

ஸ்ரீ ஸ்வாமிகள் சென்னையில் ஸம்ஸ்கிருத கலாசாலையில் விஜயம் செய்தபொழுது கே. பாலசுப்ரமண்ய ஐயர் முன்னேற்பாடாக ஸ்வாமிகளின் ஸ்நானத்திற்கென முன்பே யிருந்த ஓர் கிணற்றைப் பெரிதாக்கி, அதை ஒரு சிறிய தடாகமாக மாற்றிவிட்டார். அதில் ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகள் பலமுறை ஸ்நானம் செய்துவருவார்கள். அவ்விடத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தது எந்நாளும் மறவாமல் இருக்கும் பொருட்டு, ஐயர் அந்தக் கிணற்றிற்கு **ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி தீர்த்த**மெனப் பெயரிட்டார். நவராத்திரி முடிந்ததும் **விஜயதசமி** அன்று ஸ்வாமிகள் **பிரம்ம சூத்திர பாஷ்ய பாடம்** நடத்திப் பண்டிதர்களுடன் வேதாந்த தத்துவ விசாரம் செய்வதற்காகத் தனிமையான ஓர் மண்டபத்தை ஸம்ஸ்கிருத கலாசாலையில் அமைத்துக் கொடுத்திருந்தார்கள். அந்த மண்டபத்திற்கு ஸ்வாமிகளே **பாஷ்ய விஜய மண்டபம்** என்னும் பெயரைச் சூட்டினார்கள்.

**இராமகிருஷ்ண மாணவர் இல்லத்திற்கு விஜயம்**

மயிலாப்பூரில் ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்திற்கு அவர்கள் விஜயம் செய்தார்கள். அங்கு அவ்வில்லத்தின் தலைவரான **இராமானுஜாசாரியர்** ஸ்வாமிகளைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்று, இல்லத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் அவர்களை அழைத்துச் சென்று, மாணவர்களின் அன்றாட அலுவல்களைப் பற்றி விளக்கினார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரது உபதேசங்களை மனதில் சிந்தனை செய்து யாவரும் பக்தி மார்க்கத்தில் ஈடுபட வேண்டுமென்றும், இராமகிருஷ்ண மடத்தார் செய்துவரும் பல நல்ல காரியங்களைக் கண்டு தாம் மிகவும் மகிழ்ச்சியுறுவதாகவும், ஸ்வாமிகள் கூறினார்கள். இல்லத்தின் நிர்வாகியான இராமானுஜாசாரியரது ஒப்பற்ற சேவையை ஸ்வாமிகள் மிகவும் பாராட்டினார்கள். அன்று ஸ்வாமிகள் முன்னிலையில் **வித்வான்**

ஜி. என். பாலசுப்ரமண்ய ஐயர் ஒரு சங்கீதக் கச்சேரி நடத்தினுர். இல்லத்தில் வசிக்கும் மாணவர்கள் யாவருக்கும் ஸ்வாமிகள் விபூதி, அக்ஷதை கொடுத்து எல்லோரையும் ஆசீர்வதித்தார்கள். ஸ்வாமிகள் அந்த இல்லத்திற்கு விஜயம் செய்த நினைவு என்றும் மறவாமலிருக்கும் பொருட்டு ஸ்வாமிகளிடம் ஆழ்ந்த பக்தி பூண்ட செட்டி நாட்டு அன்பர் ஒருவர் அந்த இல்லத்திற்கு ஸ்வாமிகளின் பெரியதொரு உருவப்படத்தைக் காணிக்கையாக அளித்தார்.

### தேவாலயப் பிரவேசத்தில் அரசாங்கத்தின் தலையீடு

ஜாதி ஹிந்துக்களுக்கும் ஹரிஜனங்கள் எனக் கூறப்படுபவர்களுக்கும் சமரஸமான ஓர் ஒப்பந்தம் ஏற்படாவிடில், தாம் பட்டினி கிடந்து உயிரை மாய்த்துக் கொள்ளப் போவதாகக் காந்தியடிகள் 1932-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 2-ஆவது வாரத்தில் ஓர் அறிக்கையை விடுத்தார். இதனுல் பண்டித மதன் மோகன மாளவீய, ஸி. ராஜகோபாலசாரியர் போன்ற தலைவர்களும் மிகவும் கவலை கொண்டு தேசமக்களுக்கு ஓர் அறிக்கை விடுத்தார்கள். காந்திஜி பட்டினியை மேற்கொண்ட ஐந்தாவது நாளிலேயே ஹரிஜனங்களின் உரிமைகளை ஏற்றுக் கொள்ளும் எட்டு நிபந்தனைகளைக் கொண்ட ஒப்பந்தம் ஒன்று 24-9-32-இல் பூனுவில் ஏற்பட்டது. அதனுல் காந்திஜியும் தமது பட்டினியை நிறுத்திக்கொண்டார். அந்த ஒப்பந்தத்தில் ஜாதி ஹிந்துக்களுக்குப் பிரதிநிதியாக பண்டித மாளவீய, டாக்டர் சாலாங்கி, ஸர். தேஜ்பகாதுர் ஸப்ரூ, எம். ஆர். ஜயகர் இவர்கள் நால்வரும் ஹரிஜனங்களின் சார்பாக டாக்டர் அம்பேத்கர், ராவ்பகாதுர் ஸ்ரீநிவாஸன், ராவ்பகாதுர் எம். ஸி. ராஜா, ராஜ்போஜ், பி. பாலு இவர்கள் ஐவரும் கையெழுத்திட்டனர். இந்த ஒப்பந்தப்படி ஆலயங்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட வேண்டுமென்று காந்தியடிகள் தேசமக்களைக் கேட்டுக்கொண்டார். ஆலயப் பிரவேசம் புனு ஒப்பந்தத்தில் ஓர் அம்சமாகக் குறிப்பிடப்படவில்லையென்றும், பழமையான வழக்கத்திற்கும் வைதிக ஆகம சாஸ்திரங்களுக்கும் மாருக ஹரிஜனங்களை ஆலயத்தில் பிரவேசிக்கச் செய்வது நியாயமாகாதென்றும் ஸநாதனிகள் வாதாடினுர்கள். அதே காலத்தில் ஹரிஜனங்கள் பலர் ஆலயப் பிரவேசத்தினுல் தங்களுக்கு விசேஷ பயன் எதுவும் ஏற்பட்டு விடாதென வெளிப்படையாகத் தெரிவித்தார்கள். ஆலயப் பிரவேச இயக்கத்திற்கு அக்காலத்தில் ஜாதி ஹிந்துக்களின் எதிர்ப்பு அதிமாகக் காணப்

பட்டது. ஆயினும் காந்திஜீயின் விருப்பப்படி நாடெங்கும் ஆலயப் பிரவேசத்திற்குத் தீவிரமான பிரசாரம் செய்து வரப்பட்டது. தீண்டாமையை மிகக் கடுமையாக அனுஷ்டிக்கும் மலையாள தேசத்தில், அதிலும் கிருஷ்ண பரமாத்மாவின் ஸ்தலமாகிய **குருவாயூரில்** இது ஓர் சோதனையாக ஆரம்பிக்கப்பட்டது. **கேலப்பன்** என்னும் மலையாளவாசி பட்டினி கிடந்து அவ்விடம் சத்தியாக்கிரகம் செய்தார். நம் ஸ்வாமிகளின் பரிபூர்ண ஆசியைப் பெற்று ஸநாதனிகளின் கோஷ்டி ஒன்று 1932-ஆம் வருடம் டிசம்பர் மாதம் 10-ஆம் தேதி மலையாளத்திற்குச் சென்றது. முதலில் சென்ற அந்தக் கோஷ்டியில் சட்ட நிபுணர்களான **டி. ஆர். ராமசந்திரய்யர், திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், சிவராம கிருஷ்ணய்யர், ராஜகோபாலய்யர், எஸ். சுப்ரமண்ய ஐயர்** இவர்களும், பிரபல ஸநாதனியாக இந்திய சட்ட சபையில் பல வருடங்கள் பணியாற்றிய **எம். கே. ஆசார்யாவும்,** மற்றும் **வே. சோமதேவ சர்மாவும்** இருந்தனர். பாலக்காடு முனிஸிபல் சேர்மன் **எஸ். கே. இராமசாமி ஐயரால்** அவர்களுக்குப் பாலக்காட்டில் தகுந்த வரவேற்பளிக்கப்பட்டது. டிசம்பர் மாதம் 10–ஆம் தேதி பாலக்காட்டில் ஒரு பொதுக் கூட்டமும், 11-ஆம் தேதி குருவாயூரில் ஒரு பொது கூட்டமும் நடைபெற்றன. **கோட்டக்கல் ராஜா** குருவாயூர்க் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். இந்தக் கோஷ்டியில் சேர்ந்தவர்களைத் தவிர பாலக்காடு **டாக்டர் சங்கரய்யரும், தெக்காடு கோவிந்த மேனன்** முதலானவர்களும் இந்த ஆலயப் பிரவேச இயக்கத்தை மிகவும் வன்மையாகக் கண்டித்துப் பேசினர். அதையொட்டித் தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டன. இந்த எதிர்ப்பு இயக்கத்திற்கு மலையாளத்தில் நல்ல ஆதரவு காணப்பட்டது.

25 பேர்கள் கொண்ட திருப்புகழ் கோஷ்டி ஒன்றும், அதைத் தவிர **கே. பாலசுப்ரமண்ய ஐயரைத்** தலைவராகக் கொண்ட மற்றொரு கோஷ்டி ஒன்றும் டிசம்பர் மாதம் 16-ஆம் தேதி சென்னையை விட்டுக் குருவாயூருக்குச் சென்று நம் ஸ்வாமிகளின் ஆசியுடன் பொதுக் கூட்டங்கள் நடத்தினர். கூட்டங்களுக்கு மலையாள மக்கள் நல்ல ஆதரவளித்ததுடன், நூற்றுக்கணக்கான பெண்மணிகளும் அக்கூட்டங்களில் கலந்துகொண்டனர்.

இந்த ஆலயப் பிரவேச இயக்கத்தை ஒருவாறு சமரஸமாக முடிவுபெறச் செய்யலாமென்ற எண்ணத்துடன் காந்திஜியின் யோசனைப்படி காங்கிரஸ் தலைவர்களான **பாபு ரஜேந்திர பிரஸாத், சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரியர், கே. பாஷ்யம், வரதாசாரி**

இவர்கள் மயிலாப்பூரில் ஸ்வாமிகளைச் சந்தித்து அவர்களுடன் இரண்டு மணி நேரம் ஆலோசனை செய்தனர். ஆயினும் அந்தப் பேச்சு வார்த்தைகளால் அவர்கள் எதிர்பார்த்தபடி முடிவு ஒன்றும் காணமுடியவில்லை. ஆயினும் பல விஷயங்களைக் குறித்து அவர்கள் மனம் விட்டுப் பேசியதாகவும், ஸ்வாமிகளின் தரிசனத்தினால் ஆத்மிகத் துறையில் அவர்கள் நல்ல பயனைப் பெற்றதாகவும் கூறினார்கள். சென்னையில் அச்சமயம் ராஜாஜி பேசிய பொதுக்கூட்டம் ஒன்றில் அவர் ஸ்வாமிகளுடன் நிகழ்த்திய சம்பாஷணைகளைக் குறிப்பிட்டு, ஹரிஜன ஆலயப் பிரவேச விஷயத்தில் ஸ்வாமிகளின் முடிவான அபிப்பிராயம் என்னவென்று சிலர் அவரைக் கேட்டனர். அதற்கு ராஜாஜி பதிலளிக்கையில் அதற்கு முன்னும் அவர் ஸ்வாமிகளைத் தரிசித்திருப்பதாகவும், குறிப்பிட்ட ஒரு தனிப் பிரச்னையில் ஸ்வாமிகளின் அபிப்ராயம் எவ்விதமிருந்தபோதிலும், ஸ்வாமிகள் ஓர் ஒப்பற்ற தவசியென்றும், நல்ல ஆத்மஞானி என்றும், ஹரிஜனங்களின் நலனை அவர்கள் எப்பொழுதும் கோரியவர்களென்றும், ஒரு பிரச்னையை மாத்திரம் மனஸில் கொண்டு ஸ்வாமிகளைப் போன்ற பெரியவர்களின் நிலையைப்பற்றி ஆராய்வதால் எவ்வித நன்மையும் கிடைக்கப் போவதில்லையென்றும் கூறினார்.

பின்னர் ஆலயப் பிரவேசத் திட்டத்தைச் சர்க்கார் சட்டமாக்கி, அந்தச் சட்டத்தின் உதவியைக் கொண்டு எல்லா முக்கிய ஆலயங்களிலும் ஹரிஜனங்களைச் சர்க்கார் செல்வாக்குள்ள பிரமுகர்கள் உள்ளே அழைத்துச் சென்றனர். சட்டத்தின் உதவியை நாடிப் புரட்சிகரமான இவ்விதச் சீர்திருத்தம் செய்வதில் காந்தியடிகளுக்கும் விருப்பமில்லை என்பது அவர் அடிக்கடி பேசியவைகளிலிருந்தும் எழுதியவைகளிலிருந்தும் வெளியாயிற்று. மக்களின் மன மாற்றத்தினால்தான் இவ்விதச் சீர்திருத்தங்கள் நாட்டில் ஏற்படவேண்டுமென்று அவர் வற்புறுத்தி வந்தார்.

### சென்னையில் ஸ்வாமிகளின் உபந்யாசம்

ஸ்வாமிகள் சென்னையில் தங்கியிருந்த காலத்தில் நான்கு மாதங்களுக்கு மேல் அவர்கள் ஒவ்வொரு நாள் இரவிலும் பூஜை முடிந்தபிறகு, சிம்மாசனத்தில் வீற்றிருந்து, பக்தர்களுக்கு உபதேச மொழிகளைக் கூறிய அழகை எழுத்தினால் விவரிக்க இயலாததாகும். **டி. ஆர். வேங்கடராம சாஸ்திரிகள், ஜட்ஜ் குமாரசாமி சாஸ்திரிகள், ஸர். பி. எஸ். சிவஸ்வாமி ஐயர்** போன்ற மேதாவிகள் முதல், சாமான்ய ஜனங்களில் ஸ்திரீ புருஷர்கள் குழந்தைகள்

ஈருகப் பல்லாயிரக் கணக்கில் மக்கள் ஸ்வாமிகளின் உபதேச மொழிகளைக் கேட்க அப்பொழுது கூடியிருப்பார்கள். அவ்வளவு பெரிய கூட்டத்தினிடையே ஆச்சரியத்தைத் தரக்கூடிய ஓர் அமைதி நிலவும். எல்லோரது பார்வையும் திவ்ய தேஜோமயமாக விளங்கும் ஸ்வாமிகளின் கருணை ததும்பும் முகத்தையே நோக்கிய வாறு இருக்கும். சில நிமிஷங்கள் ஸ்வாமிகள் மௌனத்தை மேற் கொள்வார்கள். ஸ்வாமிகள் எந்த விஷயத்தைப்பற்றிப் பேசப் போகிறார்கள் என்பது முன் கூட்டியே ஒருவருக்கும் அறிவிக்கப் படுவதில்லை. அவர்கள் தமது ஆஸனத்தில் அமர்ந்தவுடன் தமக்குச் சுற்றியுள்ள ஏதாவதொரு விஷயத்தைப் பற்றியோ, அல்லது அந்த நாளின் விசேஷத்தைப்பற்றியோ, தமது இனிமையான குர லில் சாதாரணமான சம்பாஷணைபோலப் பேசத் தொடங்குவார் கள். சில நாட்களில் **ஸௌந்தர்ய லகரியிலிருந்தோ, சிவானந்த லகரி யிலிருந்தோ, அப்பைய தீக்ஷிதரின் கவிதைகளிலிருந்தோ,** சில சுலோகங்களைச் சொல்லிவிட்டு அவைகளின் பொருள்களைக் கூறு வார்கள். இவ்விதம் ஆரம்பிக்கப்படும் சாதாரணப் பேச்சே சற்று நேரத்திற்குள் ஒரு பெரிய உபந்யாசமாகத் திகழும். நேரம் போவதே தெரியாமல் ஸ்வாமிகள் அருளும் உபதேச மொழிகளை யாவரும் மிகக் கவனத்துடன் கேட்டு வருவார்கள். ஸ்வாமிகளின் உபந்யாசங்களையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் அதை ஹிந்து மதத்தின் நிகண்டு எனக் கூறிவிடலாம். ஸ்வாமிகள் அம்பிகை யைப் பற்றியோ, ஆறங்கங்களைப்பற்றியோ, அர்த்த சாஸ்த்திரத் தைப்பற்றியோ, நம் நாட்டு தேவாலயங்களைப்பற்றியோ, பேசும் போதுகூட நடுவில் உயர்தரமான ஹாஸ்யத்தின் மூலம் பெரிய விஷயங்களைப் புகுத்திக் கேட்பதற்குச் சிறிதும் சலிப்பு ஏற்படாத வாறு அவர்களது கவனத்தையெல்லாம் தம்முடன் இழுத்துச் செல்லும் ஓர் சக்தியை அவர்களிடமேதான் காணலாம். அந்த உபந்யாசங்கள் யாவும் ஒவ்வொரு நாளும் ஹிந்து, சுதேசமித்திரன் முதலிய பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவந்தன. மயிலாப்பூர் லா ஜர்னல் பிரஸின் சொந்தக்காரரான **ஆர். நாராயணசாமி ஐயர்** ஸ்வாமிகளின் ஐம்பது சொற்பொழிவுகளை 610 பக்கங்கள் கொண்ட முதல் பாகமாகவும், சங்கர விஜய உபந்யாசங்களை இரண்டாவது பாகமாகவும் வெளியிட்டு, குறைந்த விலையில் அவை களை மக்களுக்கு வழங்கும் ஓர் புண்ணியத்தை ஏற்றுக் கொண் டார். அப்புஸ்தகத்தின் முதல் பாகத்திற்கு **கே. பாலசுப்ரமண்ய ஐயர்** எழுதியிருக்கும் முகவுரையின் முடிவில் அழகிய ஆங்கிலச் சொற் களைக் கொண்டு கீழ்கண்ட தமது கருத்தை வெளியிட்டுள்ளார்.

"தத்துவங்களை உள்ளபடி விளக்கும் ஸ்வாமிகளின் மொழிகளை வேண்டுமானால் நாம் அச்சில் பொறித்துவிடலாம். ஆனால் தேஜோமயமாய் விளங்கும் அவர்களின் ரூபத்தையும், குரலின் இனிமையையும், காண்போரை வசப்படுத்தும் கண்களின் சக்தியையும், முகத்தில் தோன்றும் மந்தஹாஸத்தையும் எவ்விதம் விளக்க முடியும்?"

ஸ்வாமிகளின் மற்றச் சொற்பொழிவுகள் 18-ஐ மூன்றாவது பாகமாக மயிலாப்பூர் காமாக்ஷி நிலயத்தார் 156 பக்கங்கள் கொண்ட புத்தகமாக வெளியிட்டு, அதற்கு மிகக் குறைந்த விலை நிர்ணயித்துப் பொருள் நஷ்டத்தையும் பாராமல் மக்களுக்கு வழங்கினார்கள். இந்தப் பிரதிகளெல்லாம் வெகு சீக்கிரத்தில் செலவாகி விட்டபடியால், ஸ்வாமிகளின் முதல் 50 உபந்யாசங்களையும் சென்னை ஜார்ஜ் டவுன் பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெருவிலுள்ள காமகோடி கோசஸ்தானத்தார் பிரசுரித்துள்ளார்கள்.* ஒவ்வொரு வீட்டிலும் இந்தப் புத்தகங்கள் பொக்கிஷமாக அமையவேண்டும். பின்வரும் சந்ததியார் இவைகளைப் பிரிவினை செய்யப்படாத பொது சொத்தாக வைத்துக் காப்பாற்ற வேண்டும்.

**பக்தர் வீட்டுக்கு எதிர்பாராத விஜயம்**

மயிலாப்பூரில் பிரபல டாக்டர் ஒருவருக்கு ஸ்வாமிகளைத் தமது வீட்டிற்கு அழைத்து உபசரிக்க வேண்டுமென்ற ஆசை மனஸில் குடி கொண்டு இருந்தது. ஆனால் அவருக்கு அவ்விதம் செய்யச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அது அவரது உள்ளத்தில் ஓர் பெரும் குறையாகவே இருந்தது. அவர் ஸ்வாமிகளை ஒவ்வொரு நாளும் தவறாது தரிசித்துப்போவார். அவரது மனக் குறையை அவரது முகக் குறிப்பிலிருந்து உணர்ந்த ஸ்வாமிகள் ஒரு நாள் அந்த டாக்டரைப் பார்த்து அவரது வீடு எங்கிருக்கிறதென்று கேட்டார்கள். எதிர்பாராத அந்தக் கேள்வியால் டாக்டர் ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்தவராகி, ஸ்வாமிகளிடம் தமது ஜாகை இருக்கும் இடத்தைக் குறிப்பிட்டுக் கூறினார். அப்பொழுது ஸ்வாமிகள் அவரைப் பார்த்து இன்னும் அரை மணி நேரத்தில் அவரது வீட்டிற்குத் தாம் வரப்போவதாகவும், அவரை வீட்டிற்குச் சென்று குடும்பத்தாருடன் தம்மை

[1] ஸ்ரீ பரமாசார்யர்களின் மூன்று பாகங்களாக பிரசுரிக்கப்பட்ட உபந்யாஸங்களை ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தார் 3 பதிப்புகளுக்கு மேல் வெளியிட்டுள்ளார்கள். இவற்றின் விலைகளும் சொற்பமே, மறு பதிப்பு இப்போது அச்சில் உள்ளது.

எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படியும் கட்டளையிட்டார்கள். அப்பொழுது அந்த டாக்டர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஆயினும் அவ்வளவு குறைந்த அவகாசத்தில் ஸ்வாமிகள் பெருமைக்குத் தக்கவாறு அவர்களை வரவேற்கும் ஏற்பாடுகளை எவ்விதம் செய்வதென அந்தப் பக்தர் சற்றுக் கவலையடைந்தார். அப்பொழுது ஸ்வாமிகள் அவரைப் பார்த்து, 'உங்கள் வீட்டிற்கு வருவதற்கு நானே எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொள்ளுகிறேன். மடத்தின் சிப்பந்திகள் அதையெல்லாம் கவனித்துக் கொள்ளுவார்கள். நீங்கள் கவலையில்லாமல் வீட்டிலிருங்கள்' என்றார்கள். அவரும் அவ்வாறே தம் ஜாகையில் தங்கியிருக்கவே, ஸ்வாமிகள் சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த வீட்டிற்குச் சிவிகையில் ஏறிச்சென்றார்கள். டாக்டரும் ஸ்வாமிகளைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்றார். ஸ்வாமிகள் அவரது வீட்டில் சிறிது நேரம் தங்கிக் குழந்தைகள் உள்பட அந்தக் குடும்பத்தினர் யாவரையும் தனித் தனியே விசாரித்து, அவர்களுக்கெல்லாம் விபூதி, குங்குமம், அக்ஷதை இவைகளை வழங்கி, எல்லோரையும் பரிபூர்ணமாக ஆசீர்வதித்தார்கள். எதிர்பாராது அவ்விதம் ஸ்வாமிகள் அருள் தமக்குக் கிடைத்ததுபற்றி அந்த டாக்டர் மிகப் பெருமை அடைந்து, உள்ளம் உருகி ஆனந்தக் கண்ணீர் விடுத்தார். உண்மை பக்தி நிறைந்த அவரை யாவரும் கொண்டாடினார்கள்.

**மித்திரன் பத்திரிகைக்கு அளித்த ஆசி**

1932–ஆம் வருடம் அக்டோபர் 8-ஆம் தேதி சென்னை சுதேச மித்திரன் பத்திரிகையின் **வெள்ளிவிழா** கொண்டாடப் பட்டது. மித்திரன் பத்திரிகையிலும் அதன் ஆசிரியர்களிடமும் ஸ்வாமிகளுக்கு நல்ல மதிப்புண்டு. அவ்விழாவன்று ஸ்வாமிகள் தம் ஆசிச் செய்தியடங்கிய திருமுகத்தை மடத்தின் பிரதிநிதியொருவர் மூலம் அனுப்பிவைத்தார்கள். இந்நிகழ்ச்சி ஆசிரியர் **ஸி. ஆர். ஸ்ரீனிவாச அய்யங்காருக்கும்** மற்ற நிர்வாகிகளுக்கும் மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. தங்கள் பத்திரிகைக்குக் கிடைத்த தனிப் பெருமையாக அவர்கள் அதை மதித்தனர்.

**ஸ்வாமிகளுக்குச் சிவிகை அளித்த பக்தர்**

மயிலாப்பூரில் ஸ்வாமிகள் தங்கியிருந்த காலத்தில் திருவல்லிக்கேணி புத்தக வியாபாரியான **பி. டி. பாணி அண்டு கம்பெனி** சொந்தக்காரரான **தண்டபாணி ஐயர்** ஸ்வாமிகளின்

யாத்திரைக்குத் தகுந்த ஓர் மேனாப் பல்லக்கை நல்ல வேலைப் பாடுகளுடன் தயாரித்து அதில் ஐந்து கலசங்கள் அமைத்து ஸ்வாமிகளுக்குச் சமர்ப்பணம் செய்தார். இந்தக் கைங்கரியத்தை ஊக்கத்துடனும் சிரத்தையுடனும் செய்து முடித்த **தண்டபாணி ஐயரைப்** பக்தர்கள் மிகவும் கொண்டாடினார்கள். தாம் அளித்த சிவிகையில் ஸ்வாமிகள் ஆரோகணித்துக் காட்சியளித்ததைக் கண்டு தண்டபாணி ஐயர் அகமகிழ்ந்தார்.

**வாஜபேயருக்கு வெண்பட்டுக் குடை சம்மானம்**

காலத்தின் மாறுதலால் வேதவேள்வியைச் செய்யத் தகுதியுள்ளவர்கள் நாட்டில் குறைந்துவருவதை உணர்ந்த ஸ்வாமிகள், யாகங்கள் எங்கு நடைபெற்றாலும் அதைச் செய்யும் பெரியோர்களுக்கு ஊக்கமளித்து, மடத்திலிருந்தும் மடத்தின் சிஷ்யர்கள் மூலமாகவும் எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கும்படி கட்டளையிட்டுள்ளார்கள். உலக க்ஷேமத்தின் பொருட்டு யாகங்கள் செய்யப்படவேண்டிய அவசியத்தை அடிக்கடி ஸ்வாமிகள் தமது சிஷ்யர்களுக்கு வற்புறுத்திக் கூறுவதுண்டு. யாகம் செய்பவர்களைக் கண்டால் ஸ்வாமிகளுக்கு நல்ல மதிப்புண்டு. மடத்தில் அவர்களுக்குத் தனிமையான சில உரிமைகள் காட்டப்படும். **தண்டாங்கோரை அப்பாத்துரை தீக்ஷிதர்** என்பவர் சுமார் 25 ஆண்டுகளுக்கு மேல் பல யாகங்களை நடத்தி, அவை எல்லாவற்றிலும் உயர்வான **வாஜபேயம்** என்னும் யாகத்தையும் செய்து முடித்திருந்தார். அவரைச் சிறப்பிக்கும் பொருட்டு ஸ்வாமிகள் மயிலாப்பூரில் தங்கியிருந்தபொழுது ஒரு வெண்பட்டுக் குடையை அவருக்குச் சம்மானமாக அளித்தார்கள். யாகம் செய்த மகரிஷிகளுக்குச் சக்ரவர்த்திகள் வெண்பட்டுக் குடை அளிப்பது நமது பாரத நாட்டின் சிறந்த பண்பாடுகளில் ஒன்றாகும். இதிகாசங்களும் இவ்விஷயத்தை விளக்கமாகக் கூறுகின்றன. சக்ரவர்த்திகளுக்குச் சக்ரவர்த்தியாக விளங்கும் நம் ஆசார்ய ஸ்வாமிகள் வாஜபேய யாகம் செய்த ஒரு மகானுக்கு வெண்பட்டுக் குடை அளித்தது மிகவும் பொருத்தமான வெகுமதியாகும். ஸ்ரீ ராமபிரானே உலகில் அவதாரம் செய்து அந்தக் குடையைத் தமக்கு அளித்ததாக அந்த ஸோமயாஜி மனஸில் எண்ணி மகிழ்ந்தார். அதன் பின்னர், இந்த வாஜபேய யாகத்தை நடத்திய **சேங்காலிபுரம் நாராயண வாஜபேயர்,** அவரது சகோதரர் **வேங்கடேச வாஜபேயர்** இவர்கள் இருவருக்கும் ஸ்வாமிகள் வெண்பட்டுக் குடைகள் சம்மானம் செய்துள்ளார்கள்.

**ஹரிஜன அரசியல் தலைவர்களுக்கு அளித்த பேட்டி**

1933-ஆவது வருடம் ஜனவரி மாதம் மாட்டுப் பொங்கல் அன்று, மடத்தில் நடைபெற்ற கோபூஜை சென்னைக்கடுத்த திருமங்கலத்தில் **ஏ. கே. ரங்கநாதையரின்** ஓட்டுத் தொழிற் சாலையில் நடைபெற்றது. ஒவ்வொரு நாளும் மடத்தில் உதயத்திற்கு முன் கோபூஜை நடைபெறுவதுண்டு. மாட்டுப் பொங்கலன்று நடைபெறும் பூஜை மிகவும் விசேஷமான பூஜை யாகும். ஏராளமான பசுக்களுக்கும் பசுங்கன்றுகளுக்கும் விருஷபங்களுக்கும் அப்பொழுது பூஜை நடைபெறும். அந்த மாட்டுப் பொங்கலன்று ஹரிஜனத் தலைவர் ராவ்பகாதுர் **எம்.ஸி. ராஜா** ஸ்வாமிகளைத் தரிசிக்கத் தமது குடும்பத்துடன் திருமங்கலத்திற்கு வந்திருந்தார். அக்காலத்தில் ஹரிஜன ஆலயப் பிரவேச இயக்கம் மிகவும் மும்முரமாகக் காந்தியடிகளின் ஆதரவில் நடந்துவந்தது. ஸநாதனிகள் இதை வன்மையாக எதிர்த்து வந்தனர். ஸ்வாமிகள் ஸநாதனிகளுக்கு மிகவும் ஊக்கம் அளித்துவந்ததுடன், வேதாகம சாஸ்திரங்களுக்கு விரோதமாய் ஹரிஜனங்களை ஆலயங்களுக்குள் பிரவேசிக்க அநுமதிப்பது தவறென்பதாகவே வெளிப்படையாக அபிப் பிராயம் தெரிவித்தார்கள். இந்த நிலையில் எம். ஸி. ராஜா ஸ்வாமிகளைத் தரிசிக்கச் சென்றது ஆலயப் பிரவேச விஷயத்தில் ஸ்வாமிகளுடன் சர்ச்சை செய்ய வேண்டுமென்ற எண்ணத்துட னன்று; தவத்தினால் மேன்மை பெற்று விளங்கும் ஓர் பெரியாரைத் தரிசித்து அவர்கள் ஆசியைப் பெறவேண்டுமென்பதற்காகவே அவர் தமது குடும்பத்துடன் ஸ்வாமிகளைக் காண வந்தார். ஸ்வாமிகளின் திருமேனியும் அவர்களின் அன்பு நிறைந்த சொற் களும் அனுக்கிரகம் செய்யும் தன்மையும் ராஜாவின் உள்ளத் தைக் கவர்ந்தன. அகில இந்திய ஆதித் திராவிட சபைக்குக் கார்யதரிசியாக யிருந்து அந்தச் சமூகத்தினரின் முன்னேற்றத் திற்காக அவர் மிகவும் பாடுபட்டிருக்கிறார். சென்னைச் சட்ட சபையிலும், இந்தியச் சட்டசபையிலும் பல ஆண்டுகளாக அங்கம் வகித்துத் தேசத்திற்குப் பணியாற்றியிருக்கிறார். அவர் அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் சங்கத்திற்குத் தலைவராகவும், அகில இந்திய ஹிந்து மகாசபையின் உபதலைவராகவும் இருந் துள்ளார். 1929-ஆவது வருடம் லண்டனில் நடைபெற்ற முதல் வட்ட மேஜை மகாநாட்டிலும் பங்கெடுத்துக்கொண்டுள்ளார். அரசியல் சம்பந்தமான இன்னும் எவ்வளவோ ஸ்தாபனங்களில்

அவர் சம்பந்தம் வைத்துக் கொண்டு தேசப்பணிபாற்றி யிருக்கிறார்.

எம். ஸி. ராஜா ஸ்வாமிகளை வணங்கியவுடன் ஸ்வாமிகள் அவரை மந்தஹாஸத்துடன் வரவேற்று, அவரது குடும்ப நலனைப் பற்றி விசாரித்துவிட்டு, பிறகு உலக அரசியலைப்பற்றியும், இந்தியாவின் அப்போதிருந்த நிலையைப் பற்றியும், ஆதித் திரா விடர்களின் நிலையைப் பற்றியும், ராஜாவிடம் பல கேள்விகளைக் கேட்டார்கள். அந்தச் சம்பாஷணையில் ஸ்வாமிகளது ஒப்பற்ற அரசியல் ஞானத்தை ராஜா கண்டு வியந்தார். நம் நாடு அந்நியர் ஆட்சியிலிருந்து விடுதலையடைந்து நம்மவர்களாலாயே ஆளப்பட வேண்டுமென்ற ஆசை ஸ்வாமிகளுக்கு வெகு நாட்களாகவே உண்டு. ஆங்கிலேய ஆட்சியால் நம் நாட்டுக்குச் சில நன்மைகள் ஏற்பட்டிருந்த போதிலும், அந்த நன்மைகளை விட அவர்களால் ஏற்பட்டிருக்கும் தீமைகளே அதிகமென்பதாக ஸ்வாமிகள் சில சமயம் கூறுவதுண்டு. "நம் நாட்டிலிருந்து ஏழைமை அகல வேண்டும்; எல்லா மக்களும் சுகத்தை அடைய வேண்டும்; எந்நிலையிலும் மக்கள் தர்மங்களிலிருந்து விலகலாகாது; கடவுள் நம்பிக்கையுடன் இருந்தால்தான் மனச் சாந்தியுடன் வாழலாம்; சாந்தியில்லாவிட்டால் பேராசை அதிகரிக்கும்; பேராசையினுல் தான் உலகில் சண்டைகளும் துன்பங்களும் ஏற்படுகின்றன" என்றும் தமது அபிப்பிராயத்தை ஸ்வாமிகள் அன்றையச் சம்பா ஷணையில் வற்புறுத்திக் கூறினுர்கள். ஸ்வாமிகளின் பரந்த நோக்கத்தைக் கண்டு எம். ஸி. ராஜா மகிழ்வுற்று, ஸ்வாமிகளின் எண்ணங்களை மனஸில் வைத்துக் கொண்டு, தம்மால் கூடியவரை தேசத்துக்குச் சேவை புரிவதாக வாக்களித்தார். பின்னர் அவர் தம் குடும்பத்துடன் ஸ்வாமிகளை வணங்கி விடை பெற்றுக் கொண்டார்.

அவர் ஸ்வாமிகளிடம் விடைபெற்றுச் செல்லும்பொழுது நடைபெற்ற பக்தி பெருகிய நிகழ்ச்சி ஒன்றை இவ்விடம் குறிப்பிட வேண்டியது அவசியமாகவிருக்கிறது. சம்பாஷணைகளெல்லாம் நடைபெற்ற பொழுது ராஜாவின் பக்கத்திலேயே யிருந்த அவரது மனைவியார் ஸ்வாமிகள் நின்றுகொண்டிருந்த ஸ்தலத்திலிருந்து கைப்பிடி அளவுள்ள மண்ணை எடுத்துத் தனது முன்தானையில் பத்திரமாகச் சேகரித்து வைத்துக் கொண்டார். மிகப் புனித மென்று அவ்வம்மையார் மதித்த அந்த மணலைச் சேகரித்த பொழுது அவரது கண்களிலிருந்து பக்தி வெள்ளமாக ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. பக்கத்தில் நின்ற அவரது கணவரும்

மற்றோரும் இந்த நிகழ்ச்சியைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். தம் மனைவிக்கு உதித்த உள்ளன்பு தமக்கு உதிக்கவில்லையேயென அவர் நினைத்தார். இந்த நிகழ்ச்சிகளைக் கண்டவர்களெல்லாம் இந்த அம்மையாரின் பக்தியைக் கொண்டாடினார்கள். பக்தர்கள் தங்கள் மனசைக் கடவுளிடம் அர்ப்பணம் செய்து, உள்ளம் உருகிப் பாடும்பொழுது, உலகில் எந்த உயர்வான பொருளும் தமக்கு வேண்டாமென்றும், ஈசனது அடியார்களாக விளங்கும் பக்தர்களின் பாத துளி ஒன்று மட்டுமே தங்களுக்குக் கிடைத்தால் போதுமென்றும் கூறுவர். அந்த நிலையிலேயே இந்த அம்மையார் ஸ்வாமிகளின் பாதங்கள் பட்ட மணலை எடுத்துச் சேகரித்து வைத்துக் கொண்டதாக எண்ண வேண்டியிருக்கிறது. பக்தியின் பெருமையை என்னவென்று கூறுவது!

பின்னர் ஒரு சமயம் சென்னை அரசாங்கத்தில் அற நிலையப் பாதுகாப்பு மந்திரியாக இருந்த **பரமேசுவரரின்** பாட்டனாரும், அக்காலத்தில் ஹரிஜனத் தலைவராக விளங்கியவருமான **திவான் பகாதுர் ஸ்ரீனிவாசன்** ஸ்வாமிகளைத் தரிசித்து ஹரிஜனங்களின் நலனைக் குறித்து ஸ்வாமிகளிடம் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார். தாழ்த்தப்பட்டோரின் பொருளாதார நிலைமையை உயர்த்தி அவர்கள் கஷ்டமின்றி வாழ்வதற்குத் தம் ஆலோசனைகள் சிலவற்றை ஸ்வாமிகள் ஸ்ரீனிவாசனிடம் தெரிவித்தார்கள். சென்னையில் ஹரிஜனங்களின் வாசஸ்தலத்தில் நூதனமாக ஆலயம் கட்டுவிக்க ரூ. 500 ஸ்வாமிகள் நன்கொடையாகவும் அளித்தார்கள்.

### பிரமுகர்களுக்குப் பட்டமளிப்பு

ஸ்வாமிகள் சென்னையிலிருந்து புறப்படும் முன்னர் சென்னை பிரஸிடென்ஸி கல்லூரியில், சம்ஸ்கிருதப் பேராசிரியராக விளங்கிய **மகாமகோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்குத் 'தர்சந கலா நிதி'** என்னும் பட்டத்தையும், அட்வோகேட், **டி. ஆர். ராமசந்திர ஐயருக்குத் 'தார்மிக துரந்தரர்'** என்னும் பட்டத்தையும், மயிலாப்பூர் வக்கீலும் ஸ்வாமிகளின் சென்னை விஜயத்தின் போது விசேஷமாகப் பணியாற்றியவருமான **கே. பாலசுப்ரமண்ய ஐயருக்குத் 'தர்ம ரக்ஷாமணி'** என்னும் பட்டத்தையும் வழங்கினார்கள். அந்தப் பட்டங்களைப் பெற அவர்கள் மிகவும் பொருத்தமானவர்களாதலால் அவர்களை யாவரும் கொண்டாடினார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகளது சென்னை விஜயத்தின் பொழுது மேலும் அவர்களிடம் நெருங்கிப் பணியாற்றிய அன்பர்கள் பலரில் சென்னையில் போலீஸ் கமிஷனராக உத்யோகம் வகித்து ஓய்வு பெற்றிருந்த **ராவ்பகாதுர் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்** பற்றி இங்குக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. மயிலாப்பூரில் சிறிய ஏழையாயினும், பெரிய சீமானாயினும் ஐயரது நட்பைப் பெறுவதில் எவரும் மிகப் பெருமை கொள்வார்கள். நண்பர்களின் சுகதுக்கங்களையெல்லாம் தம்முடையனவாக அவர் மதித்து யாவருக்கும் உற்ற துணைவராக அவர் விளங்கினார். பிராயத்தினாலும் அறிவாலும் போற்றப்பட்டு வந்த ஐயர், சென்னைச் சர்க்கார் நிர்வாக சபை அங்கத்தினராகப் பெரிய பதவி வகித்து வந்த, காலம் சென்ற **ஸ்ரீ வீ. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு** உற்ற தோழராகவும் விளங்கி வந்தார். வீ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமது சொந்த முயற்சியினால் தோற்றுவித்த மயிலாப்பூர் **ஸம்ஸ்கிருத கலாசாலையையும், வேங்கடரமணா ஆயுர்வேத வைத்திய சாலையையும்** நிர்வாகம் செய்யும் பொறுப்பை நமது ஐயர் ஏற்று, வெகு திறமையுடன் அவைகளை நிர்வகித்து வந்தார்.

வீ. கிருஷ்ணஸ்வாமி அய்யரின் தவப் புதல்வர்களான ஸ்ரீமான்கள், **கே. பாலசுப்ரமண்ய ஐயரும், ஸ்ரீ கி. சந்திரசேகர ஐயரும்,** அவர்களின் தந்தையின் காலத்திற்குப் பிறகும் ராவ் பகாதுர் ஐயர் அவர்களைத் தங்கள் தந்தைபோல் மதித்து இவ்விரண்டு ஸ்தாபனங்களின் நிர்வாகத்தையும் அவரிடமே ஒப்புவித்து விட்டார்கள்.

ஸ்வாமிகள் மயிலாப்பூரில் தங்கிய சுமார் மூன்று மாதங்களிலும் அன்னாரின் தரிசனத்திற்கு வரும் பக்தர்களில் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரை யாவரும் முதன்மையாகக் காண்பர். ஸ்வாமிகளுக்குச் செய்யவேண்டிய பணிகளில் மிகுந்த ஆர்வம் எடுத்துக் கொண்டு தமக்கு அறிமுகமானவர்களுக்கெல்லாம் ஸ்வாமிகளின் ஆசி கிட்டும்படி அவர் செய்து வந்தார். பிறர்க்கு உதவி புரிவதே தமது வாழ்வின் நோக்கம் என்பதைச் செயலில் காட்டிய ஐயர் அவர்களுக்கு ஸ்வாமிகள் '**பரோபகார சிந்தாமணி**' என்னும் பட்டத்தையளித்துப் பொற்கவசங்கள் பதித்த ஸ்படிக மாலையொன்றையும், காஷ்மீர் சால்வையையும் வெகுமானமாக அளித்தார்கள்.

எதிர்பாராதவாறு இவ்வுயரிய பெருமையைக் குரு பீடத்திலிருந்து பெற்ற ஐயர் தமக்குக் கிடைத்த அவ்வாசியை ஒப்பற்ற பாக்யமாக நினைத்து மெய்மறந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கி ஸ்வாமிகளின் பாதகமலங்களில் பன்முறை வணங்கி, இப்பெரு

மைக்கெல்லாம் காரணம் "தமது மூதாதையர் செய்த தவப் பயனே" எனக் கூறினர்.

**நகரத்தில் வசிக்கும் பிராம்மண சமூகத்துக்கு உபதேசம்**

ஸ்வாமிகள் 17-11-32-ஆம் தேதி மயிலாப்பூரில் செய்த உபந்யாசத்தில் நகரத்தில் வசிக்கும் பிராம்மண சமூகத்தின் நலனுக்காகச் சில உபதேச மொழிகளைப் புரிந்தார்கள். அவைகளில் சில பகுதிகள் இங்குச் சுருக்கமாக எடுத்துக் காட்டப் பட்டுள்ளன :—

"கிராமவாசிகள் தங்கள் கிராமங்களை விட்டு இப்பொழுது நகரங்களில் வந்து வசிக்க ஆரம்பித்து விட்டார்கள். அவர்களில் சிலர் தங்கள் நிலத்தையும் வீட்டையும் விற்று, அதனால் கிடைத்த பொருளைக் கவர்ன்மெண்டு கடன் பத்திரமாகவோ பாங்கி ரசீதுகளாகவோ மாற்றி வைத்துக்கொண்டுள்ளார்கள். இப்பொழுது படிப்புக்கு உத்யோகம் கிடைப்பதில்லை. ஜாதிக்குத்தான் உத்யோகம் கிடைக்கிறது. அதனால் வேறு ஜாதியில் பிறக்க வேண்டுமெனச் சிலர் பரமேசுவரனைப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறார்கள். முதலில் பிராம்மணனுக்கு வேலை இல்லையென்று சொன்னார்கள். பிறகு எல்லோருக்குமே வேலை இல்லை என்றாகி விட்டது. நிலங்களை முதன் முதலில் விற்று வந்தவர்கள் பிராம்மணர்கள் தாம். அவர்களைப் பின்பற்றி மற்றச் சமூகத்தாரும் தங்கள் நிலங்களை விற்க முற்பட்டிருக்கிறார்கள். கிராமங்களிலுள்ள வீடுகளில் பல இடிந்து குட்டிச்சுவர்களாக மாறிவிடுகின்றன. நகரங்களிலோ நமது தேவைக்கு அதிகமாக எல்லாவற்றையும் நம்மீது சுமத்திக் கொள்ளுகிறோம். தட்டுமுட்டுச் சாமான்கள், சட்டை துணி, உடுப்புக்கள் இவைகளை அதிகமாக வாங்க வேண்டியிருக்கிறது. இவைகளைச் சேகரித்து வைக்க வசதியாக அதிக வாடகையுடன் இடம் வேண்டும். இவைகளெல்லாம் செய்து கொண்டும், அடுத்த மாதம் சாப்பாட்டிற்கு என்ன செய்வதென்ற கவலை பெரும்பாலோர் மனஸில் குடி கொண்டிருக்கிறது. உலகில் அதிகப் பணமிருப்பதாக எண்ணம் மட்டுமிருக்கிறது. ஆனால் மனிதனுடைய மனத்திலிருக்கும் திகில் விலகவில்லை. எங்கும் தரித்திரம் குடி கொண்டு இருக்கிறது. அரசாங்கங்களுக்கும் பணம் போதவில்லை. அமெரிக்காவில் கூட இவ்வித நிலைதான். உலகில் இப்பொழுது வியாபாரம் அதிகமாகி விட்டது. லாபத்தில் அதிக ஆசையினால் எல்லாக் காரியங்களும் மிகவும் வேகமாக நடைபெற்று வருகின்றன. நகரத்தில் எல்லாம்

வேகமாக நடைபெற வேண்டியிருக்கின்றன. இங்கு நிதானத்திற்கு இடமில்லை. வேகமாக நடைபெற வேண்டியிருப்பதால் பணச் செலவும் அதிகம். நம்மிடம் ஏற்பட்டிருக்கும் வறுமையைச் சற்றுக் குறைப்பதற்கு எனக்கு மூன்று விதமான யோசனைகள் தோன்றுகின்றன. 1. **ஸ்திரீகள் உள்பட யாவரும், கடைசித் தரமான வஸ்திரங்களையே உடுத்திக் கொள்ளுவதெனத் தீர்மானம் செய்துகொள்ள வேண்டும், 2. காப்பிக்குப் பதிலாகக் காலையில் கோதுமைக் கஞ்சியை சாப்பிடலாம் அல்லது மோர் சாப்பிடலாம்.** மோர் அமுதத்திற்கு நிகரென வைத்திய சாஸ்திரம் கூறுகின்றது. இதனால் நூற்றுக்கு அறுபது மடங்கு செலவு குறைந்துவிடும். ஒரு குடும்பத்தில் காப்பிக்கொட்டை பால் இவைகளுக்குத்தான் அதிகச் செலவு. அரிசிக்குக் கூட அவ்வளவு செலவாகிறதில்லை. **3. பிள்ளைகளைப் பெற்றவர்கள் வரதக்ஷிணை வாங்குவதைக் குறைத்துக்கொள்ள வேண்டும்.** கல்யாணத்தில் ஆடம்பரச் செலவு எதுவும் விதிக்கப்படவில்லை. இரண்டு ரூபாய் செலவில்கூடக் கல்யாணத்தை நடத்தலாம். ஒருநாள் கல்யாணமும், மூன்று நாள் ஔபாசனமும் செய்யவேண்டும். வரதக்ஷிணையினால் அதிகச் சங்கடங்கள் ஏற்படுகின்றன. பிள்ளை வீட்டுக்காரர் வாங்கும் பணம் வீணான வழியில் செலவழிக்கப்படுகின்றது. பணம் வாங்காவிட்டாலோ, கௌரவம் இல்லையென நினைக்கிறார்கள். இந்தக் கெடுதியைத் தடுக்க எவ்வளவோ முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. முன் நாளில் கன்னிகைகளுக்கே பிள்ளை வீட்டுக்காரர்கள் பணம் கொடுத்து வந்தார்கள். இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. அதற்குக் காரணம் அப்பொழுது கன்னிகைகள் குறைவு. ஆகையால் பிள்ளைவீட்டுக்காரன் கன்னிகையின் பிதாவிடம் வந்து யாசித்துக் கன்னிகையைப் பெற்றுப்போவான். இப்பொழுதோ ஒவ்வொரு குடும்பத்திலும் பெண்கள் அதிகமாகிவிட்டார்கள். அதிகமாக இருக்கும் சாமானுக்கு கிராக்கியில்லை. இதனால் கல்யாணம் ஒரு வியாபார விஷயமாக மாறிவிட்டது. அந்தக் காலத்தில் புருஷர்கள் ஆசார அனுஷ்டானங்களை வைத்துக் கொண்டிருந்ததால் ஆண் சந்ததி அதிகமாக உண்டாயிற்று. சூரிய உதயத்துக்கு முந்தி ஸ்நானம் செய்து சந்தியாவந்தனம் செய்கின்றவன், அகால மரணத்தை அடைய மாட்டான். எல்லோரும் ஆடம்பர ஆடைகளை விலக்க வேண்டும். **நீங்கள் கிளப்புக்கும் பீச்சுக்கும்** போகும் நேரத்தைச் **சற்றுக் குறைத்துக்கொண்டு,** நித்ய கர்மானுஷ்டானங்களைச்

செய்து வரவேண்டும். உங்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்.''

ஸ்வாமிகள் பள்ளி ஆசிரியர்களுக்கு ஒருமுறை செய்த உபதேசத்தின் சாராம்சத்தையும் இங்குத் தருகிறோம் :—

**பள்ளி ஆசிரியர்களுக்கு உபதேசம்**

''தாங்கள் கற்ற வித்தையை உபயோகித்துக் கொண்டு அதை ஒரு ஜீவனத்திற்கு வழியாகத் தேடிக்கொள்பவர்கள் உபாத்தியாயர்கள். மற்றவர்கள் எல்லோரும் படிப்பு முடிவு பெற்றதும் வேறு வேடம் போட்டுக் கொண்டு படிப்புக்குச் சம்பந்தமில்லாத தொழில்களில் ஈடுபட்டு வருகிறார்கள். தாங்கள் கற்பிக்கப் போவதை உபாத்தியாயர்கள் முன்னாடியே ஆராய்ந்து கொண்டால்தான் மாணவர்களின் மனத்தில்படியும்படி போதிக்கக் கூடிய சக்தி அவர்களுக்கு உண்டாகும். ஒரு வித்வான் ஒரு அரசனிடம் சென்று பாகவதம் சொல்வதாகக் கூறினார். அந்த அரசன் அவரைப் பார்த்து, மற்றொருமுறை பாகவதத்தைப் படித்து வரும்படி சொல்லி அவரைத் திருப்பியனுப்பிவிட்டான். மறுபடியும் அவர் வந்தபொழுதும், 'மறுபடியும் படித்துவாரும்' எனக் கூறினான். இவ்விதம் 21 முறை அரசன் அவரைத் திருப்பி யனுப்பிவிட்டான். இருபத்தொருமுறை பாகவதம் வாசித்த அந்த வித்வான் பாகவதத்தின் உட் பொருளை நன்றாக உணர்ந்து, ஆத்ம ஞானத்தை அடையும் பொருட்டு காட்டுக்குச் சென்றுவிட்டார். அவர் காட்டுக்குச் சென்றுவிட்டதை அறிந்து அந்த அரசன் தனக்கு உபதேசம் செய்ய அவர் அப்பொழுதுதான் பக்குவமடைந் தார் என்பதை உணர்ந்து அவரைக் காட்டில் தேடிச்சென்று தனக்கு உபதேசம் செய்யும்படி கேட்டுக்கொண்டான். அதுபோல, பலமுறை படிக்கப்படிக்கத்தான் விஷயத்தின் உட்கருத்து வெளிப் படும். அப்பொழுதுதான் நீங்கள் கல்வி போதிக்கத் தகுதியுள்ளவர் களாக யிருப்பீர்கள். பழைய காலத்து ரிஷிகள் போல் நீங்கள் வாழ்ந்து சிஷ்யர்களை நல்ல மார்க்கத்தில் பயில்விக்கச் செய்ய வேண்டும்.''

1932-ஆம் வருடம் டிசம்பர் மாதம் 18-ஆம் தேதி ஸ்வாமிகள் சென்னைத் தங்கசாலைத் தெரு, இந்து தியாலாஜிகல் ஹைஸ்கூலில் மாணவர்களுக்குச் செய்த உபதேசத்தின் சாரம் :—

**மாணவர்களுக்கு உபதேசம்**

''இந்த உலகம் முழுமையும் ஓர் குடும்பம், இந்தக் குடும்பத் திற்குப் பார்வதி, பரமேச்வரர் இருவரும் தாய் தந்தையர்.

இதையே காளிதாஸன் ரகுவம்சம் முதல் சுலோகத்தில் சொல்லி யிருக்கிறார். ஆசிரியர்களும் நீங்களும் சேர்ந்து உலகத்தில் ஓர் சிறிய குடும்பமாக விளங்குகிறீர்கள், குழந்தைகளாகிய நீங்கள் இளமையிலேயே கல்வி கற்கவேண்டும். வித்தையைக் கற்பதில் இரண்டு அங்கங்கள் உண்டு. ஒன்று குரு பக்தி; மற்றது ஒழுக்கம். மாணவர்கள் கோபத்தைத் தவிர்க்கவேண்டும். எதை யும் கண்டனம் செய்வதில் முற்படலாகாது. மருந்து சாப்பிடும் பொழுது பத்தியமாக இருக்கவேண்டுமல்லவா? அதுபோலவே கல்வி பயிலும் காலத்தில் மருந்து சாப்பிடும் காலம்போல் நினைத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது சுதந்தரத்தைப் பற்றியோ பெரியோர்களின் சொற்களை மீறுவது பற்றியோ நினைக்காதீர்கள். குருபக்தியும், ஒழுக்கமும் மாணவர்களுக்குத் தேவை. அடக்கமே உயர்வைத் தரும். சிறுவர்களாக இருக்கும் பொழுது தாழ்மையுடன் இருப்பவர்கள் பிற்காலத்தில் மேன்மை அடைவார்கள். உங்களுக்கு மாத்ரு பக்தி, பித்ரு பக்தி, குரு பக்தி இம்மூன்றும் அவசியமாக இருக்கவேண்டும். தான் என்னும் செருக்கை நீக்கவேண்டும், 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று ஔவைப்பிராட்டியார் கூறியுள்ளார். வேத மும் அவ்விதமே கூறுகிறது. நீங்கள் கல்வி பயிலும் காலத்தில் உலக விஷயங்களில் தலையிடவேண்டாம். 'உலகத்திற்குச் சேவை செய்ய வேண்டாமா?' என நீங்கள் கேட்கலாம். அவசியம் அது செய்யப்பட வேண்டியதுதான். ஆனால் அதற்கு அவசியமான கல்வி அறிவைச் சம்பாதித்துக் கொண்டு பிறகு அதன் வழிநின்று காரியங்களில் ஈடுபடலாம். மூட்டை தூக்குகிற ஒருவனுக்கு ஜுரம் வந்திருக்கும்போது அவன் மூட்டையைத் தூக்கினால் ஜுரம் அதிகமாகிவிடுமல்லவா? நீங்கள் கல்வி பயில்வதை உலக சேவைக்குப் பூர்வாங்கமாக எண்ணி அதில் ஈடுபடவேண்டும். உலக விஷயங்களைப்பற்றி நீங்கள் காதில் போட்டுக்கொள்ள வேண்டாம்."

### திருவொற்றியூருக்கு விஜயமும் தலத்தின் பெருமையும்

நம் ஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்திருந்தபொழுது, **திருவொற்றியூருக்குச்** சென்று, அப்புனித க்ஷேத்திரத்தில் எழுந் தருளியிருக்கும் **ஸ்ரீ தியாகேசப் பெருமானையும், ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்மையையும்** தரிசித்துக்கொண்டார்கள். பிரம்மா, வால்மீகி, வாசுகி முதலானோர் இத்தலத்தில் சிவபெருமானைப் பூசித் துள்ளார்கள். அப்பர், சுந்தரர், சம்பந்தர் இம்மூவராலும் பாடப்

பெற்ற தலம் இது. சுந்தரர் சங்கிலியாரை இவ்விடம் மணந்த பெருமையைப் பெரியபுராணத்தில் காணலாம். இத்தலத்தில் பல அடியார்கள் பிறந்தும், பல அடியார்களும், சித்தர்களும் முக்திபெற்றும் இருக்கிறார்கள். பட்டினத்தார் முக்தி அடைந்த க்ஷேத்திரம் இதுவே. அவரது சமாதியை ஒரு சிவாலய வடிவத்தில் இன்றும் நாம் இங்குக் காணலாம். அவ்வூர் கடற்கரையை நோக்கி நின்றோமானால், நூற்றுக்கணக்கான சமாதிகள் நம் கண் முன் தோற்றமளிக்கின்றன. இன்றைக்குச் சுமார் 2500 வருடங்களுக்கு முன் தோன்றிய ஸ்ரீ ஆதிசங்கரரும் இத்தலத்தின் பெருமையை அறிந்து, ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்மையின் முன்பு **ஸ்ரீ சக்ர பிரதிஷ்டையும்** செய்திருக்கிறார்கள். ஸ்ரீ ஆதிசங்கரரது அழகிய சிலா உருவம் ஒன்றைத் தியாகேசர் ஆலயத்தின் உட்பிராகாரத்தில் காண்கிறோம். இன்றும் திரிபுரசுந்தரி அம்மையைப் பூஜிப்பவர்கள் ஸ்ரீ சங்கரரின் மரபினரான **நம்பூத்ரி பிராம்மணர்** என்பது குறிப்பிடத்தக்கது. அம்பிகைக்கு அங்கு வைதிக முறைப்படி பூஜையும், ஈசனுக்கு ஆகம முறைப்படி பூஜையும் நடைபெற்று வருகின்றன. ஸ்ரீ ஆதிசங்கரருக்குப் பின்னர் ஸ்ரீ காமகோடி பீடத்தை அலங்கரித்த ஆசார்ய ஸ்வாமிகள் பலர் இந்தத் தலத்தில் பல வருடங்கள் தங்கி, தங்களது வேதாந்த விசாரத்திற்கும், தியானத்திற்கும், சமாதிக்கும் ஏற்ற தலமாக இதைக் கொண்டிருந்தார்கள். இவ்வூர் ஆலயத்தில் தெற்கு மடவளாகத்தில் சங்கர மடம் ஒன்று அமைந்துள்ளது. இந்த மடம் ஜீர்ணம் அடைந்திருந்ததால், ஸ்வாமிகள் விருப்பப்படி அது இச்சமயம் செப்பனிடப்பட்டது. அந்த மடத்தின் உட்புறத்தில் இரண்டு அதிஷ்டானங்கள் காணப்பெறுகின்றன. அவைகளில் ஒன்று 1704 முதல் 1746 வரை ஸ்ரீ காமகோடி பீடத்தில் அமர்ந்திருந்த 61-ஆவது **ஆசார்யர்களான மூன்றாவது மஹா தேவேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுடையதெனத்** தெரிகிறது. மற்றொன்று, 55-ஆவது **ஆசார்யர்களான ஸ்ரீ சந்திரசூடேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுடையதென** ஊகிக்கப்படுகிறது. மற்றுமொரு அதிஷ்டானமும் தெற்கு வீதியில் அமைந்துள்ளது. இந்த அதிஷ்டானத்திற்குரியவர்கள் இன்னார் என்பதை நிச்சயமாகக் கூறமுடியவில்லை. ஸ்வாமிகளின் உத்திரவுபடி இன்று இந்த அதிஷ்டானங்களுக்கு அன்றாடம் பூஜை நடைபெற்று வருகிறது. இவர்களைத் தவிர இன்னும் பல ஆசார்யர்கள் இத்தலத்தில் தங்கி, திரிபுரசுந்தரி அம்மையை வழிபட்டு இவ்விடத்திலேயே விதேக முக்தி அடைந்திருக்கிறார்களெனவும் கூறப்படுகிறது.

நான்கு மாதங்களுக்கு மேல் ஸ்வாமிகள் சென்னையில் தங்கி மயிலாப்பூர், மாம்பலம், கிண்டி, டவுன், கோமளேச்வரர் ஆலயம், கச்சாலேச்வரர் ஆலயம், மல்லிகேச்வரர் ஆலயம், காளகஸ்தீச்வரர் ஆலயம், புரசைவாக்கம், திருவல்லிக்கேணி இவ்விடங்களில் நமது ஹிந்துசமய சம்பந்தமாகப் பக்தர்களுக்கு உபதேசமொழிகளைக் கூறிப் பக்தர்களால் பூஜிக்கப்பெற்று, கும்பகோணத்தில் 1933-ஆம் வருடம் மார்ச் மாதம் நடைபெற்ற மகாமக உத்ஸவத்திற்காக யாத்திரையாகப் புறப்பட்டபொழுது, சென்னை மக்களுக்கு ஸ்வாமிகள் கீழே காணும் ஒரு ஆசிச் செய்தியை விடுத்தார்கள் :—

"சத்தியத்தைச் சொல்; தர்மத்தை நடத்து; அன்னை, பிதா, குரு இவர்களைத் தெய்வமாகக் கொள்" எனநமது வேதம் உபதேசிக்கின்றது. நம் சைவம், வைஷ்ணவம் முதலிய ஆறு சமயங்களையும் நமது புண்ணிய பூமியில் ஸ்தாபிக்கும் பொருட்டு ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னர் நமது நாட்டில் அவதரித்த ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாசார்ய ஸ்வாமிகள் தாம் அருளிய பிரச்னோத்தர ரத்ன மாலிகை என்னும் நூலில் வேதத்தில் கூறப்பட்ட சத்தியம், தர்மம் என்ற சொற்களுக்குக் கீழ்க் கண்டவாறு பொருளை விளக்கி உள்ளார்கள்.

"பிராணிகளுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியது தான் சத்தியம். தனது வம்சத்தில் ஸதாசாரமுள்ள சாதுக்களான முன்னோர்கள் எதைத் தர்மம் எனக் கொண்டார்களோ அதுவே ஒருவனுக்குத் தர்மம்.

உலகத்திற்கே அன்னையாகவும் தந்தையாகவும் குருவாகவும் விளங்கும் அம்பிகை, ஈசன், தக்ஷிணாமூர்த்தி, அல்லது கீதையை உபதேசித்த கிருஷ்ண பகவான், இவர்களை மனத்தில் விட்டகலாது எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

வேதியர்கள் வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மானுஷ்டானங்களைப் புறக்கணிக்காது கூடிய மட்டும் அவைகளை அனுஷ்டித்துத் தங்கள் உடை நடை முதலியவைகளால் சுமத்திக் கொண்டிருக்கும் அதிகச் செலவுகளையாவது குறைத்துக்கொண்டு, சில சமயங்களில் உணவுகூடக் கிடைக்காது சிரமப்படும் குடியான மக்களுக்கும் பிற மக்களுக்கும் ஒரு வாரத்தில் ஒரு முறையாவது அந்த அந்தக் கிராம தேவதைகளின் சந்நிதானங்களில் குறிப்பாக வெள்ளியிலாவது, செவ்வாயிலாவது, தங்கள் சக்திக்கு இயன்றவாறு கஞ்சி, கூழ் முதலியவைகளை ஊற்றும் கடமையைக் கைக்கொள்ளவேண்டும்.

வர்த்தகர், வேளாளர், தொழிலாளர், முதலான குடிமக்கள் தங்கள் குலத்தில் உதித்த பெரியோர்களின் மனப்பான் மையை அனுசரித்து அந்தணர்களையும் ஹரிஜனங்களையும் அன்புடன் ஆதரிப்பதைக் கடமையாகக் கொள்ளவேண்டும்.

ஹரிஜனங்களும், 63 நாயன்மார்களில் திலகமாக விளங்கும் ஸ்ரீ நந்தனாரின் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து, ஈசனிடத்திலே பேரன்பு செலுத்தி தங்கள் முன்னோர்களின் குலாசாரத்தை மீறி நடவாமல் இருப்பது அவர்களின் நன்மைக்கு ஏதுவாகும். இவ்விரு ஒழுக்கங்களையும் தம் வாழ்க்கையின் லக்ஷியங்களாகக் கொண்ட நந்தனாரின் உள்ளொளி எவ்விதம் பரமசிவனின் பாதார விந்தத்திற்கு ஆளாயிற்றோ, எவ்விதம் நந்தனாரின் தூய மனம் இவ்வுலக வாழ்க்கைக்கு ஆதாரமான நெல்லினை நிலங்களையும் செழிக்க வைத்ததோ, அதுபோல் ஒவ்வொருவரும் தம் குலத்து முன்னோர்களுடைய தர்மத்தைக் கடைப்பிடித்து, அருளையும் பொருளையும் பெற்று, பக்தி, பொறுமை, அடக்கம் இவைகளில் எல்லோருக்கும் வழிகாட்டிகளாக இருக்க வேண்டும்.

எல்லாச் சமூகங்களிலுள்ள ஸ்திரீகளும் அவர்களின் புருஷர்கள் அயல் பழக்கங்களினால் ஒரு சமயம் சமயாச்சாரங்க ளிலிருந்து வழுவினாலும், பண்டைக் காலத்துத் **திலகவதியார்** போலவும் **மங்கையர்க்கரசியார்** போலவும் ஈசனிடத்தில் சித்தத்தை ஒரே நிலையில் செலுத்தி, தம் கணவன், உடன்பிறந்தார், மக்கள் ஆகிய அனைவரையும் நல்வழிப்படுத்தவேண்டும். இவ்விதமான நம் பெரியோர்களின் நல் வழிகளால் நமது சமயமும் சமூகமும் மேன்மேலும் க்ஷேமத்தை அடையவேண்டும்.''

## கும்பகோண தலத்தின் புராண வரலாறு

சென்னையிலிருந்து மகாமகத்திற்காக ஸ்வாமிகள் புறப்பட்ட செய்தியைக் கூறினோம். அம்மகோற்சவத்திற்குரிய நகரமான கும்பகோணம், மடத்தின் சரித்திரத்தில் மிகவும் பெருமை வாய்ந்தது என்பது இதுவரையில் கூறிய வரலாறுகளினாலேயே தெரியவரும். இந்நகர்க்குப் **பாஸ்கர க்ஷேத்திரம்** என்றும் மற்றோர் பெயர் உண்டு. பாஸ்கரன் என்பது சூரியனைக் குறிக்கிறது. சித்திரை மாதத்தில் இத்தலத்தின் **நாகேசர்** ஆலயத்தில் சிவலிங் கத்தின் மேல், நேராகச் சூரிய ஒளி வீசுவதால் இத்தலத்திற்கு இந்தப் பெயர் வந்திருக்கலாம். பிரம்மா உள்பட மும்மூர்த்தி களின் தலங்கள் பல இவ்வூரில் விளங்கி வருகின்றன.

மகாப்பிரளய காலத்தில் உலகெலாம் தண்ணீரில் மூழ்கி விடும். அப்பொழுது பரமசிவன், மகாவிஷ்ணு, பிரம்மா, இம்மூவரே எஞ்சியிருப்பர். சிருஷ்டி காலத்திலிருந்து பல முறை இவ்விதப் பிரளயங்கள் தோன்றியதுண்டு. இம்மாதிரி யான ஒரு பிரளய காலத்தின் முன்பாகவே பிரம்மா பரமசிவனை அடைந்து, பிரளயத்திற்குப் பின் மீண்டும் உலக சிருஷ்டி செய்யச் சாதனம் வேண்டுமேயென்க் கேட்க, பரமசிவன் தமது திருக் கரங்களினால் மண்ணெடுத்து அதை அமிர்தத்துடன் கலந்து பிசைந்து, ஒரு குடமாக்கி அக்குடத்தில் அமிர்தத்தையும், சிருஷ்டிக்கு ஆதாரமான விதைகளையும், நான்கு வேதங்களையும், நிரப்பி அதன்மேல் ஒரு தேங்காயையும் மாவிலையையும், தர்ப்பைப் புல்லையும் (யக்ஞோபவீதம் என்னும்) பூணூலையும் வைத்து அலங்கரித்து அக்குடத்தை மகா மேரு மலையின் உச்சியில் வைத்துவிட்டு வரும்படி பிரம்மாவிடம் கொடுத்தார். பிரம்மா வும் பரமசிவனின் ஆணையைச் சிரமேற் கொண்டு அக்குடத்தை ஓர் உரியில் அமைத்து அதை மேரு மலையின் உச்சியில் வைத்து வந்தார். பிரளயம் வந்தவுடன் அந்தக் குடமானது தண்ணீரில் மிதந்து, காற்றினால் தள்ளப்பட்டு, வெகு தூரம் தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்தது. பிரம்மாவும் அக்குடத்துடனேயே வந்து கொண்டிருந்தார். புயல் காற்றில் ஏற்பட்ட அசைவினால், கும்பத்தில் வைத்திருந்த தேங்காய் தென் கிழக்குத் திசையில் ஓர் இடத்தில் விழுந்தது ; அவ்விடத்தில் **நாரிகேளேச்வரர்** என்னும் பெயருடன் ஒரு சிவலிங்கம் விளங்கிற்று. மாவிலையும், தருப்பை யும் **திருப்புரம்பியம்** என்னும் இடத்தில் விழவே, அவ்விடத்திலும் ஒரு லிங்கம் தோன்றிற்று. பூணூல் விழுந்த இடத்தில் **சூத்திரநாதர்** என்னும் லிங்கம் உண்டாயிற்று. மேலும் தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்த அந்தக் குடம் ஓர் இடத்தில் தங்கிற்று. அப்பொழுது பரமசிவன் அதை நோக்கி ஓர் அம்பை எய்தார் ; எந்த இடத்தில் நின்று அவர் அம்பை எய்தாரோ அவ்விடத்திற்குப் **பாணபுரி** என்னும் பெயர் அமைந்தது ; அவ்விடமுள்ள ஈசனுக்குப் **பாணபுரீசுவரர்** என்று பெயர் ; கும்ப கோணத்தில் **பாணுதுறை** என்று கூறப்படும் தலம் இதுதான். (பாணுதுறை என்பது இப்பொழுது வாணுதுறை என்று மாறி யிருக்கிறது.) அம்பினால் ஏற்பட்ட துவாரத்தின் வழியாகக் குடத்திலுள்ள அமிர்தம் வழிந்தோடியது ; ஐந்து வழிகளாக அது வழிந்து வரவே, அவ்வழிகளில் **பஞ்சக்ரோசம்** என்னும் ஐந்து புண்ணியத்தலங்கள் தோன்றின. அவை **திருவிடைமருதூர்**

**திருநாகேச்வரம்**, **தாராசுரம்**, **சுவாமிமலை**, **கருப்பூர்** என்பன வாகும். குடத்தின் வாய் சிதறி விழுந்த இடமே **குடவாசல்** எனக் கூறப்படும் **குடவாயில்** கடைசியாகக் குடம் தங்கிய இடம்தான் **கும்பகோணம்**. இங்குத் தான் **ஆதிகும்பேச்வரர்** காட்சியளிக்கின்றுர். கும்பம் என்ருல் குடம்; கோணம் என்ருல் மூக்கு; இங்கு கும்பத்தின் மூக்கு பரமசிவனுல் உடைக்கப்பட்ட தால், இத்தலத்திற்குக் **குடமூக்கு** என்று பெயர் வந்தது. வைஷ்ணவர் இத்தலத்தைத் **திருக்குடந்தை** எனக் கூறுவர். அந்தக் கும்பத்திலிருந்த அமிர்தம் முடிவில் தங்கிய இடம் **மகாமக தீர்த்தமும்**, **பொற்ருமரைத் தீர்த்தமும்** ஆகும். இவ்வித மான ஆச்சரியகரமான நிகழ்ச்சிகளெல்லாம் மாசி மாதமாகிய கும்ப மாதத்திலேயே நிகழ்ந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். கும்பேச்வரர் ஆலயத்தைத் தவிர, பழமையானதும், புராண மகிமை பெற்றதும், பக்தர்களால் பாடப்பெற்றதுமான பல சிவ, விஷ்ணு ஆலயங்கள் இத்தலத்தில் அமைந்துள்ளன. அவற்றுள் சிவத்தலங்களில், **நாகேசர்**, **சோமேசர்**, **அபிமுக்தேசர்** ஆலயங் களையும் வைணவ தலங்களில், **சார்ங்கபாணி**, **சக்ரபாணி**; **ராமஸ்வாமி** ஆலயங்களையும் முதன்மையாகக் கூறலாம். பிரம்மா விற்கும் இங்கு ஒரு தனி ஆலயம் அமைந்துள்ளது. பிரம்மாவுக்குத் தனி ஆலயம் நமது பாரத நாட்டில் மற்றும் ஓர் இடத்தைத் தவிர வேறெங்கும் அமைத்துள்ளதாகத் தெரியவில்லை. அமிர்தகுடத் துடன் இத்தலத்திற்குவந்த பிரம்மாவை வணங்க வேண்டி இவ்வா லயம் ஏற்பட்டதாக நினைக்க வேண்டியிருக்கிறது. வைஷ்ணவத் தலங்களுள் முதன்மையாக விளங்கும் சார்ங்கபாணி ஆலயத்தின் கோபுரம் நம்நாட்டில் மற்றக் கோபுரங்களைவிட உயர்ந்ததாகும். சார்ங்கபாணியை, நம்மாழ்வார் உள்பட பத்து ஆழ்வார்கள் மங்களா சாஸனம் செய்துள்ளார்கள்; **ஹேமரிஷி** என்னும் முனிவர் இப்பெருமாளைக் குறித்துத் தவம் செய்து தமது குமாரியான **கோமளவல்லியை** உத்தராயண புண்ய காலத்தில், மகர சங்கராந்தி அன்று, சார்ங்கபாணிக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுத்ததாகத் தல புராணம் கூறுகின்றது. **ஸ்ரீவில்லிப்புத்தூரில் ஆண்டாள்** ஸ்ரீ ரங்கநாதரை அடையத் தானே தவம் இருந்தாள். திருக்குடந்தையிலோ தம் புதல்வியின் விவாகத்தில் கவலைகொண்ட ஹேமரிஷி அக்கன்னிகையின் பொருட்டுத் தவம் இருந்தார். இன்றைக்கும் பொற்ருமரைக் குளத்தின் வடகரையில் ஹேமரிஷி மண்டபம் என்ற ஓர் மண்டபம் அமைந்துள்ளதைக் காணலாம். சார்ங்கபாணியை

**ஆராவமுதன்** எனவும் கூறுவார்கள். 'எப்பொழுதும் குறைவில்லாத அமுதத்தை வைத்திருப்பவன்' என்பது இதன் பொருளாகும். பரமசிவன் அளித்த அமிர்தமானது இத்தலத்தில் தங்கியிருப்பதாலும் இப்பெயர் சார்ங்கபாணிக்கு மிகப் பொருத்தமாகும். இவ்வூரில் சங்கர மடம் அமைந்திருப்பதுடன், இராமாநுஜ, மத்வ ஆசாரியர்களின் மடங்களும், சைவ மடங்களும், ஒரு ஜைன மடமும் அமைந்துள்ளன. இத்தலத்தைக் **காசிக்கு வீசம்** அதிகமெனப் பெரியோர்கள் பெருமையாகக் கூறுவதுண்டு.

### 1933-ஆவது வருடத்திய மகாமகம்

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குரு சிம்ம ராசியில் வரும்பொழுது கும்ப மாதத்தில் இந்த மகாமக புண்யகாலம் கும்பகோணத்தில் ஏற்படுகிறது. இப்புண்ய காலத்தில் கங்கையானது மகாமகக் குளம் எனக் கூறப்படும் தடாகத்திற்கு வருவதாகவும் புராணத்தின் மூலம் அறிகின்றோம். ஒன்பது கன்னிகைகள் இத்தடாகத்தில் நீராடி அவர்கள் விரும்பிய பேறுகளைப் பெற்றார்கள். மகாமகக் குளக்கரையின் வட பாகத்தில் அமைந்துள்ள **காசிவிசுவநாதர்** ஆலயத்தில் **அக்கன்னிகைகளின் விக்ரகங்கள்** காணப்படுகின்றன. மகாமக காலத்தில் லக்ஷக்கணக்கான மக்கள் அக்குளத்தில் நீராடி வருவதால் தண்ணீரில் மூழ்கி ஜனங்களுக்கு உயிர்ச்சேதம் நேராதவண்ணம் சர்க்காரும், நகர சபையும், முன்யோசனையுடன் இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு முன்னரே, குளத்தின் தண்ணீரை இயந்திர சாதனத்தைக் கொண்டு இறைத்து, இடுப்பளவுக்கு மேல் தண்ணீர் நிற்காமல் செய்து, சுகாதாரத்திற்காகத் தடுப்பு மருந்தையும் தண்ணீரில் கலந்து விடுவார்கள்.

ஆங்கிரஸ வருடம் மாசி மாதம் இருபத்தைந்தாம் தேதி (8-3-1933) புதன்கிழமை அன்று மகாமகம் நிகழ்ந்தது. அப்பொழுது யுத்தமோ, பஞ்சமோ இல்லாமல் காலம் மிகவும் சுபிக்ஷமாக இருந்தது. போக்குவரவுச் சாதனங்களும் மக்களுக்குக் குறைவில்லாமல் கிடைத்தன. தென்னிந்திய ரெயில்வே கம்பெனியாரும் நாலா பக்கங்களிலிருந்தும் அதிக வண்டித் தொடர்களைவிட ஏற்பாடு செய்திருந்தனர். போலீஸ் இலாகாவிலும் பஸ்போக்குவரத்தை நன்குக் கட்டுப்பாடு செய்து, ஜனங்கள் ஊருக்குள் வரவும், தாமதமின்றி அவர்களை வெளியேற்றவும், ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். சுமார் ஆறு லக்ஷம் ஜனங்கள் அன்று கும்ப

கோணத்திற்கு வந்து மகாமகக் குளத்தில் நீராடியதாக மதிப் பிடப்படுகிறது. இதில் கால் மடங்கு சுற்றுப்புறங்களிலிருந்து கால்நடையாகவும், மாட்டு வண்டிகளிலும் வந்தவர்கள். திரு விழாக்களில் **கண்காட்சி** ஏற்படுத்துவதென்பது அந்நாளில் ஓர் புதுமையாக இருந்தது. நகர சபையார் அவ்விதக் கண்காட்சி ஒன்றை அப்பொழுது ஏற்படுத்தினார்கள். வியாபாரிகள் தங்கள் பொருள்களை மக்களது மனத்தைக் கவரும் வண்ணம் தீப அலங் காரத்துடன் விளம்பரம் செய்தார்கள். கண்காட்சியில் சங்கீதம், நாட்டியம் முதலிய நிகழ்ச்சிகளையும் அமைத்திருந்தனர். அவ்வருட மகாமகம் பொதுமக்களுக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தரக்கூடிய தாக இருந்தது. தனி மனிதர்களும், பொது ஸ்தாபனங்களும், பல இடங்களில் அன்னதானத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அவைகளுள் சங்கர மடத்தில் நடைபெற்ற **தேப்பெருமாள் நல்லூர் சிவன்** நடத்திய அன்னதானம் மிகப் பெரியதாகும்.

நம் ஸ்வாமிகள் 1933-இல் பிப்ரவரி மாதம் முதல் வாரத்தில் சென்னையிலிருந்து புறப்பட்டு, மகாமகத்திற்கு இரண்டு நாட்க ளுக்கு முன்னர் **திருவிடைமருதூரில்** விஜயம் செய்தார்கள். ஸ்வாமிகள் 1919-இல் பிப்ரவரி மாதம் கும்பகோணத்திலிருந்து விஜய யாத்திரையாகப் புறப்பட்டு, (1922 அக்டோபர் மாதம்) துந்துபி புரட்டாசி பூர்ணிமை அன்று இராமேச்வரத்தில் கங்கா யாத்திரைக்காகச் சங்கல்பம் செய்துகொண்டு கங்கையில் கலப்ப தற்கெனக் கடலிலிருந்து மணலை எடுத்துக்கொண்டார்கள் என்று முன்னே கூறினோம். ஆகையால் அந்தச் சங்கல்பம் நிறைவேறும் வரையில் தமது சொந்த மடத்தில் தங்கலாகாதென்ற காரணத் தினால், திருவிடைமருதூர் பச்சையப்ப முதலியார் அக்ரஹாரத் தில், சென்னை மயிலாப்பூர் லாஜர்னல் பிரஸ் சொந்தக்காரர் **ஆர். நாராயண சுவாமி ஐயர்** அவர்களது ஜாகையில் தங்கியிருந்து, மகாமக ஸ்நானத்திற்கும், ஸ்வாமி தரிசனத்திற்கும் ஸ்வாமிகள் கும்பகோணத்திற்கு சென்று வந்தார்கள்.

மகாமகத்தன்று காலை 4 மணிக்குப் புறப்பட்டு 5-மணி சுமாருக்கு, மகாமகக் குளத்தென்கரையில் வழக்கமாக ஸ்வாமிகள் தங்கும் மண்டபத்திற்கு விஜயம் செய்து, தடாகத்தில் விதிப்படி சங்கல்பம் செய்துகொண்டு நீராடினார்கள். ஸ்வாமிகள் நீராடிய பொழுது அவர்களுடன் ஆயிரக்கணக்கான சிஷ்யர்களும், கூடவே நீராடினர். போலீஸ் அதிகாரிகள் அப்பெருந்திரளான கூட்டத்தில் ஸ்வாமிகளுக்குத் தகுந்த வசதி ஏற்படுத்திக் கொடுத்தனர். அந்த மகாமகக் குளத்திற்குத் தீர்த்தம் கொடுக்க வந்த தேவாலயங்

களின் உத்ஸவ மூர்த்திகளையெல்லாம் ஸ்வாமிகள் அன்று தரிசனம் செய்து கொண்டார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்பின் ஸ்வாமிகளைத் தரிசிக்க விரும்பிப் பக்தர்கள் அப்பொழுது மிகுந்த ஆவலுடன் மேலும் மேலும் வந்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் கும்பகோணம் ஸ்ரீமடத்தின் திருப்பணியும் பூர்த்தியடைந்திருந்தது. அவ்வருட மகாமகத்தன்று திருப்பணி பூர்த்தியடைந்த நாளைக் கொண்டாட நகர மக்களும், மடத்தின் அதிகாரிகளும் ஏற்பாடு செய்திருந்தனர். கங்கா யாத்திரை பூர்த்தியடைவதற்கு முன் மடத்திற்கு வருவது தாம் செய்து கொண்டிருந்த சங்கல்பத்திற்கு விரோதமாகையால், ஸ்வாமிகள் அப்பொழுது மடத்தினுள் பிரவேசிக்கவில்லை. ஸ்வாமிகள் மடத்தில் பிரவேசிக்காமல் மடத்தின் திருப்பணியை வெளியிலிருந்தே பார்வையிட்டார்கள். மேலும் நடைபெறவேண்டிய திருப்பணிகளைப் பற்றியெல்லாம் தமது ஆலோசனைகளைக் கூறினார்கள்.

### கும்பகோணத்தில் சங்கரமடம் தோன்றிய வரலாறும் திருப்பணியும்

இன்றைக்குச் சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்னர் காமகோடி பீடத்தின் 62-ஆவது ஆசாரியர்களான ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள், அக்காலத்தில் காஞ்சிப் பிராந்தியத்தில் நடைபெற்ற கர்நாடக யுத்தத்தின் காரணமாகத் தஞ்சை ராஜ்யத்திற்குத் தமது வாசஸ்தலத்தை மாற்றிக்கொண்டார்களென முன் பகுதியில் கூறப்பட்டிருக்கிறது. அப்பொழுது தஞ்சையில் மகாராஷ்டிரர்களின் அரசு நடைபெற்று வந்தது; மன்னர் பிரதாபசிம்ஹரது அமைச்சர் **டபீர் பந்த்** என்னும் அந்தணர் கும்பகோணத்தில் காவிரியின் தென்கரையில் இந்த மடத்தையும், நான்கு அக்ரஹாரங்களையும், மடத்துக்காக அமைத்துக்கொடுத்தார். இந்த மடம் அங்கு அமைக்கப் பெறுவதற்கு முன்னர் அவ்விடங்களிலெல்லாம் தென்னைமரச் சோலைகள் நிறைந்திருந்தன. டபீர் பந்த் அப்பொழுது மடத்தை ஓர் ஓட்டுக் கட்டிடமாகவே அமைத்துக்கொடுத்தார். அப்பொழுது தஞ்சையில் தங்கியிருந்த ஸ்வாமிகள் காவிரிக்கரையிலுள்ள கும்பகோணத்திற்குத் தமது வாசஸ்தலத்தை விரைவில் மாற்றிக்கொள்ள விரும்பியதால் அவசர நிமித்தம் இவ்விதம் கட்டப்பட்டது.

ஆனால் பிரதாபசிம்ஹ மன்னருக்குப் பின்னர் வந்த சரபோஜி மன்னர், காசி யாத்திரை சென்றுவந்தபொழுது 1820-ஆவது ஆண்டில் பழைய கட்டிடத்திற்கு வடபுறம் ஸ்வாமிகளின் பூஜைக்கென விமானத்துடன் கூடின ஒரு கர்ப்ப க்ருகத்தையும், அதைச்

சுற்றி மண்டபங்களேயும், அமைத்துக்கொடுத்தார். இதை விளக்கும் ஓர் சிலாசாஸனம் அந்தக் கர்ப்ப க்ருகத்தின் முன்சுவரில் பதிக்கப்பெற்றிருக்கிறது. பழைய ஓட்டுக் கட்டிடங்களும், வருடங்கள் பல சென்றமையால் சிதிலம் அடைந்து கீற்றுக்கொட்டகையாக மாற வேண்டிய நிலே வந்துவிட்டது. 1923-ஆம் வருடம் திருவானைக்கா மடத்தின் திருப்பணி முடிவுபெற்றவுடன், கும்பகோணம் மடத்தின் திருப்பணியையும் நடத்தவேண்டுமென ஸ்வாமிகள் விரும்பினுர்கள். அக்காலத்தில் மடத்தின் சர்வாதிகாரியாக இருந்த வக்கீல் **கே. குப்புஸ்வாமி ஐயர்** அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு தளராத ஊக்கத்துடன் அப்பணியில் ஈடுபட்டார். முழுவதும் கருங்கல் மண்டபமாகவே இக்கட்டிடத்தை அமைக்கவேண்டுமெனத் **தேப்பெருமாள் நல்லூர் சிவன்** விரும்பினுர். மரமோ, இரும்போ சேராமல் பழைய முறையில் கல்லே மாத்திரம் உபயோகித்துக் கட்டிடம் அமைப்பதில், அதிகப் பொருள் செலவாகுமென மடத்தின் அதிகாரிகள் எடுத்துரைத்தனர். ஆயினும் அடிக்கடி பழுதுபார்க்க வேண்டிய அவசியம் ஏற்படாதென்ற காரணத்தினுல் திருப்பணியானது கற் கட்டிடமாகவே அமையவேண்டுமெனச் சிவன் கூறியதை ஸ்வாமிகளும் ஏற்றுக்கொண்டார்கள். இவ்வேலேக்கென திருக்கோவிலூரிலிருந்து முதிர்ந்து தேர்ச்சிபெற்ற கருங்கற்கள் ரெயில்மூலம் தருவிக்கப் பட்டன. புதுக்கோட்டை சம்ஸ்தானம் கடியாபட்டி **திவான் பகாதுர் தர்மபூஷணம் தீ. நா. முத்தையா செட்டியார்** இத்திருப்பணிக்கென ரூ. 25,000 நன்கொடையாக அளித்தார். மடத்தின் வருமானத்திலிருந்து ரூ. 75,000க்கு மேல் இத்திருப்பணியில் செலவிடப்பட்டது. சிவனின் மேற்பார்வையிலும், மடத்து நிர்வாகிகளின் பராமரிப்பிலும் அந்தத் திருப்பணி 1933-ஆவது ஆண்டு முடிவுபெற்று அதன் விழா மகாமகத்தன்று கொண்டாடப்பட்டது.

பின்னர் வெளிமண்டபம், உக்கிராணக்கட்டு, ஸ்வாமிகள் தனிமையில் தங்கியிருக்கும் இடங்கள், கோசாலே, இவைகளின் திருப்பணிகளே நடத்தும் பொறுப்பைக் கும்பகோணம் டாக்டர் **ஆர். மகாலிங்க ஐயரின்** தந்தையாரும், மாஜி தாசில்தாருமான **இராமமூர்த்தி ஐயரும்**, கும்பகோணம் டபீர் நடுத்தெரு டெபுடி கலெக்டர் அ. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் புதல்வர் **ஏ. கோபால ஐயரும்** ஏற்றுக்கொண்டு, சிஷ்யர்களின் பொருளுதவியின் பேரில் செய்து முடித்தார்கள். மேலும் இந்தத் தர்மத்திற்கென **இராமநாதபுரம் ராஜா, கொல்லங்கோடு ஸீனியர் இராணி,**

மற்றும் தமிழ் நாட்டிலும் ஆந்திர தேசத்திலுமுள்ள பிரமுகர்கள் பலர் தாராளமாகப் பண உதவி செய்துள்ளார்கள்.

**கும்பகோணத்தில் ராஜா கோவிந்த தீக்ஷிதர் பாடசாலைக் கட்டிடத் திறப்புவிழா**

தஞ்சையில் நாயக்க மன்னர்களிடம் அமைச்சராக இருந்த ஐயன் என்ற **கோவிந்த தீக்ஷிதரைப்** பற்றி இப்புத்தகத்தின் துவக்கத்தில் கூறப்பட்டுள்ளது. கும்பகோணத்தில் காமாக்ஷி ஜோஸ்யர் தெருவில் மேற்குக்கோடியில், காவிரியின் கரையை அடுத்த ஓரிடத்தில் அந்த அமைச்சர் ஒரு வேதசாஸ்திர பாடசாலையை ஏற்படுத்தியிருந்தார். அப்பாடசாலையானது நாயக்கர்கள் ராஜ்யம் மறைந்த பிறகு, மகாராஷ்டிர மன்னர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்தது. ஏராளமான மாணவர்கள் இந்தக் குருகுலத்தில் நான்கு வேதங்களையும், பல சாஸ்திரங்களையும் கற்று வந்தார்கள். தஞ்சை அரசுரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனியார் நேரில் ஏற்றுக் கொண்ட பிறகு இதன் நிர்வாகம் தஞ்சை கலெக்டரிடமும், பின்னர் சத்திரம் இலாகாவினிடமும், அதன் பின்னர் தேவஸ்தானக் கமிட்டி இடமும் வந்தது. **கே. ஆர். எம். சிங்காரம் செட்டியார்** என்னும் பக்தர் தேவஸ்தானக் கமிட்டியின் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டவுடன் இந்தப் பழைய குருகுலத்தின் கட்டிடத்தைப் புதுப்பிக்கச் செய்தார். 1933–ஆவது வருடம் மகாமகத்தன்று அதன் கிருஹப்ரவேசத்தைக் கமிட்டியின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்வாமிகள் நிறைவேற்றி வைத்தார்கள். அப்பொழுது முனிஸிபல் சேர்மெனாகவிருந்த **முத்துக்குமர செட்டியார்** ஸ்வாமிகளுக்கு அங்கு ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்தார். அன்று அந்தக் குருகுலத்தைப்பற்றி ஸ்வாமிகள் பேசியபொழுது, "நல்ல அஸ்திவாரத்துடன் கட்டப்படும் கட்டிடம் பல வருடங்கள் நிலைத்திருப்பது போல், நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் மகான் கோவிந்த தீக்ஷிதரால் துவக்கப்பட்ட இந்தக் குருகுலத்தில் அன்று முதல் இன்று வரை நாள் தவறாது வேத கோஷம் ஒலித்துக் கொண்டிருக்கிறது; இராஜ்யங்கள் பல மாறினும் அந்த அமைச்சர் ஏற்றிவைத்த விளக்கு அணையா விளக்காக ஒளிபெற்று வருகிறது; நல்ல எண்ணத்துடனும், பலமான அடிப்படையுடனும் ஏற்படுத்தப்படும் எந்தத் தருமமும் நீடூழிக் காலம் நடைபெற்று வரும்" என்று கூறினார்கள். அச்சமயம் கோவிந்த தீக்ஷிதரின் சரித்திரத்தை அனந்தப்பூர் அரசாங்கக் கல்லூரியின் ஆங்கிலப் பேராசிரியர் **என். கே. வேங்கடேசம்**

பந்துலு ஆங்கிலத்தில் ஓர் ஆராய்ச்சி நூலாக வெளியிட்டு, அதை ஸ்வாமிகளுக்குச் சமர்ப்பணம் செய்தார். இந்தப் பாடசாலையின் தலைவராக மகான் அப்பைய தீக்ஷிதர் வம்சத்தில் உதித்தவரும், மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளின் பேரருமான **மகாமகோபாத்தியாய சாஸ்திர ரத்னாகரம் யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள்** சில ஆண்டுகள் இருந்து வந்தார்கள்.

**திருவிடைமருதூருக்கு விஜயம்**

திருவிடைமருதூரில் வடக்குக் கோபுர வாயிலுக்கு அடுத்த மகாதான வீதியில் சங்கர மடம் ஒன்று அமைந்துள்ளது. 1933–ஆவது வருடத்திய மகாமகம் முடிந்த பிறகு ஸ்வாமிகள் சில மாதங்கள் திருவிடைமருதூரில் அந்த மடத்தில் தங்கி இருந்தார்கள். திருவிடைமருதூர் மூவரால் பாடப்பெற்ற சிறப்பு வாய்ந்த தலம்; இங்குத் தலவிருக்ஷம் மருதுமரம்; வரகுண பாண்டியனுக்குப் பிரம்மஹத்திதோஷம் நீங்கிய தலமும் இது தான். ஸ்ரீ ஆதிசங்கரர் இத்தலத்திற்கு விஜயம் செய்தபோது, ஸ்ரீ மகாலிங்க ஸ்வாமியைத் தரிசித்துக் கொண்டார்கள். அப்பொழுது லிங்கத்தின் நுனியிலிருந்து ஓர் புருஷ உருவம் தோன்றித் தன் வலதுகையை உயர்த்தி, "**அத்வைதமே உண்மை**" யென மும்முறை கூறி மறைந்ததென சங்கர விஜயங்களில் கூறப்பட்டுள்ளது. தைப்பூசத்தன்று இங்கு நடைபெறும் தேர்விழாவைப் பல்லாயிரம் மக்கள் கண்டு களிப்புறுவர். 1933ல் நடைபெற்ற ஸ்ரீமகாலிங்க ஸ்வாமியின் வெள்ளி ரத விழாவன்று, திருவாவடுதுறை ஆதீனம் **ஸ்ரீலஸ்ரீ வைத்தியலிங்க பண்டார சந்நிதி** அவர்கள் நம் ஸ்வாமிகளை நேரில் சந்தித்து, மதிப்பிற்குரிய மரியாதைகளையெல்லாம் செய்து வெகுவாக அவர்களைப் பாராட்டினார்கள். ஸ்வாமிகளும் பண்டார சந்நிதிகளின் ஆதீனத்தின் கீழ்த் தேவாலயங்களும், மற்ற தருமங்களும், தக்க முறையில் நிர்வகித்து வரப்படுவதைப் பற்றியும் ஆதீனத்தின் பழைய பெருமைகளைப் பற்றியும், ஆதீனம் செய்து வரும் பணிகளைப் பற்றியும், முதிர்ந்த வயதில் பண்டார சந்நிதிகள் செய்துவரும் பல கைங்கரியங்களைப் பற்றியும் வெகுவாய் மெச்சினார்கள். ஸ்ரீலஸ்ரீ ஆதீன கர்த்தர் அவர்கள், 14-3-1933 அன்று ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை நடத்தி வைத்து, மடத்தின் அன்றைச் செலவுகளையெல்லாம் ஆதீனத்திலிருந்தே நடைபெறச் செய்தார்கள்.

### திருவிடைமருதூரில் சங்கர ஜயந்தி

அவ்வருடத்து ஸ்ரீ சங்கரஜயந்தி உத்ஸவத்தை ஸ்வாமிகள் திருவிடைமருதூரில் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய்தார்கள். வித்துவான்களின் **பெரிய சபை** ஒன்று கூட்டி அவர்களைக் கொண்டு வேதாந்த தத்துவ விசாரமும், உபந்யாசங்கள் பலவும் நிகழச் செய்தார்கள். ஐந்து நாட்கள் நடைபெற்ற அந்த விழா வின்போது ஸ்ரீ ஆதி சங்கரர் இயற்றியுள்ள நூல்களைப் பற்றியும், குறுகிய காலத்திற்குள் அவர்கள் பாரத பூமி முழுவதும் சஞ்ச ரித்து நிகழ்த்தியுள்ள பல சாதனைகளைப் பற்றியும், அத்வைத சித்தாந்தத்தைப் பற்றியும் ஸ்வாமிகள் சிஷ்யர்களுக்கு உபதேச மொழிகளாக அருளினார்கள். விழா முடிவு பெற்ற நாளன்று, ஆதி சங்கரரின் திருவுருவப்படமானது யானைமீது ஆரோகணிக்கப் பெற்று நான்கு வீதிகளின் வழியாக ஊர்வலமாக எழுந்தருளியது. பல பிரபல நாதஸ்வர வித்வான்கள் ஊர்வலத்தில் கைங்கர்யம் செய்யும் பாக்யத்தைப் பெற்றார்கள். ஸ்வாமிகளும் ஊர்வலத் துடன் கூடவே தொடர்ந்து வந்து பக்தர்களுக்குக் காட்சியளித் தார்கள். சபைக்கு வந்திருந்த பண்டிதர்கள் எல்லோருக்கும் ஸ்வாமிகள் தக்கவாறு பரிசுகளை வழங்கினார்கள்.

### சிதம்பரத்தில் நடராஜர் தரிசனம்

பஞ்சபூத க்ஷேத்திரங்களில் சிதம்பரம் ஆகாய க்ஷேத்திர மாகும். காஞ்சீபுரம் பிருதிவீ க்ஷேத்திரம்; திருவானைக்கா அப்பு க்ஷேத்திரம்; திருவண்ணாமலை தேயு க்ஷேத்திரம்; காளஹஸ்தி வாயு க்ஷேத்திரம். காஞ்சீபுரம் முதலான நான்கு க்ஷேத்திரங் களையும் ஸ்வாமிகள் முன்னரே தரிசித்தார்களென்பது முன் பக் கங்களில் கூறப்பட்டுள்ளன. ஆகாய க்ஷேத்திரமான சிதம்பரத் தில் ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தரிசிக்க ஸ்வாமிகளுக்கு மிகவும் ஆவலுண்டு. ஆனால், பீடத்தின் அதிபர்கள் நடராஜர் ஆலயத்திற் குச் சென்று ஸ்வாமி தரிசனம் செய்துகொள்வதில் சிறியதொரு லௌகிகமான இடையூறு வெகு காலமாக இருந்து வந்தது. சங்கர பீடத்தைச் சார்ந்த ஆசார்ய ஸ்வாமிகள் மற்ற தேவாலயங்களுக்கு வரும் பொழுது அர்ச்சகர்கள் தங்கள் கைகளில் ஏந்திவரும் தாம் பாளத்திலிருந்தோ, கிண்ணத்திலிருந்தோ, விபூதி, குங்குமம் முத லான பிரசாதங்களை ஸ்வாமிகளே தமது கரத்தினால் எடுத்துக் கொள்வது வழக்கம். அர்ச்சகர்கள் கொடுத்து இவர்கள் வாங்கிக் கொள்ளும் வழக்கம் இல்லை. தில்லை மூவாயிரத்தார் ஸ்மார்த்த பிராம்மணர்களாகவும், ஸ்ரீ சங்கரரின் அத்வைத சித்தாந்தத்தைத்

தழுவினவர்களாகவும் இருந்தும் மற்றத் தேவாலயங்களில் நடை பெற்று வரும் இவ்வழக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுத்ததாகக் கூறப்படுகிறது. இதை ஊர்ஜிதம் செய்யும் வகையில் 1909-ஆம் வருஷம் சென்னை அரசாங்கத்தினரால் வெளியிடப்பட்ட "Castes and Tribes of Southern India" by E. Thurston என்னும் புஸ்தகத்தில் முதல் வால்யூம் 340-ஆவது பக்கத்தில் கீழே கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது, "As a class, Dikshitars are haughty and refuse to acknowledge any of the Sankaracharyas as thier Priest, because they are almost equal to God Siva who is one of them. If a Sankaracharya comes to the temple he is not allowed to take the Sacred ashes direct from the cups as is done at other temples to show respect to the Sanyasin." மேற்கண்ட குறிப்பின் உண்மை எவ்வாருயினும், ஸ்ரீ காமகோடி பீடத்தில் நம் ஸ்வாமிகளுக்கு முன்பிருந்த ஆசார்யர்களுள் எவரும் இரண்டு நூற்ருண்டுகளுக் குள் சிதம்பர தரிசனம் செய்து கொண்டதில்லை; ஸ்வாமிகளைத் தரிசனத்துக்கு எவ்வகையிலாவது அழைத்து வரவேண்டுமெனப் பல ஆண்டுகளாக விருப்பம் கொண்டிருந்தவர்களில் ஸ்வாமி களிடம் ஒப்பற்ற பக்தியும், மதிப்பும் வைத்திருந்தவர்களும், மகா வித்வானும், தீக்ஷிதர்களின் மரபைச் சார்ந்தவர்களுமான **மகாமகோபாத்தியாய தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர்** அவர்களை யும், ஸ்வாமிகளைத் தமிழ்த் தெய்வத்தின் அவதாரம் என்று மதித்து வந்த **மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ.வே. சுவாமிநாத ஐயர்** அவர்களையும் முக்கியமாகக் குறிப்பிட லாம். ஸ்வாமிகளை ஒருமுறையாவது நடராஜர் சந்நிதிக்கு அழைத்துவரவேண்டுமென்று **ராஜா ஸர். அண்ணாமலை செட்டி யார்** தம்மிடம் பல முறை கூறியிருப்பதாக ஐயர் அவர்கள் சொல்லியுள்ளார்கள்.

திருவிடைமருதூரில் சங்கரஜயந்தி விழா நடத்திய பிறகு, தங்கள் ஊருக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்ய வேண்டுமெனச் சிதம்பரம் வாசிகள் கேட்டுக்கொண்டனர். தென்னார்க்காடு ஜில்லா வில் ஸ்வாமிகள் பலமுறை யாத்திரை செய்திருந்தும், அருகிலுள்ள ஊர்களுக்குப் பலமுறை விஜயம் செய்திருந்தும் சிதம்பர க்ஷேத்திரத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்து அங்குள்ள சிஷ்யர் களை நேரில் அனுக்கிரஹிக்கும் வாய்ப்பு அதுவரை அவர்களுக்கு நிகழாமலிருந்தது அவர்கள் மனஸில் வெகுநாளாக இருந்து வந்த ஒரு குறையாகும். இக்குறையைத் தீர்க்கவே, கருணையுடன்,

ஸ்வாமிகள் சிஷ்யர்களின் அழைப்பை ஏற்றுக்கொண்டார்கள். ஆதி சங்கரர் பீடத்தின் அதிபர்களாக அந்த க்ஷேத்திரத்திற்கு முதன்முதல் விஜயம் செய்யும் ஸ்வாமிகளைத் தகுந்த முறையில் வரவேற்கச் சிதம்பரம் வாசிகள் விசேஷமான ஏற்பாடுகளையெல்லாம் செய்திருந்தனர். சிதம்பரம் மக்கள் தெருக்களையெல்லாம் சுத்தம் செய்து ஊர் முழுவதையும் தோரணங்களால் அலங்கரித்து, ஸ்வாமிகள் எழுந்தருளும் நாளை ஒரு புனித நாளாக மதித்தார்கள். ஸ்வாமிகள் 1933–ஆம் வருடம் மே மாதம் 18-ஆம் தேதி வியாழக்கிழமை ஸ்ரீமுக வருடம் வைகாசி மாதம் 5-ஆம் தேதி அன்று, அவ்வூருக்கு விஜயம் செய்தபொழுது, தீக்ஷிதர் சமூகத்தினர் உள்பட பொதுமக்கள் யாவரும் ஊர் எல்லையிலேயே ஸ்வாமிகளைப் பூர்ண கும்பம், வேதகோஷம், பஜனைகோஷ்டி மேளவாத்யங்கள், இவற்றுடன் வரவேற்று, நான்கு ரத வீதிகளின் வழியே பெரியதொரு ஊர்வலமாக அவர்களை அழைத்து வந்தார்கள். பல்லாயிரக் கணக்கான மக்கள் அன்று ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களின் அருளைப் பெற்றார்கள். கீழவீதியில் ஸ்வாமிகளுக்குக் காரைக்குடி ராம. சு. வேத பாடசாலையில் ஜாகை அமர்த்திக்கொடுக்கப் பட்டிருந்தது. ஊர் பொது மக்களுக்கோ நடராஜர் ஆலயத்தில் ஸ்வாமிகளுக்கு நடைபெற வேண்டிய விபூதி மரியாதையைப் பற்றிய கவலை; ஆனால் ஸ்வாமிகளுக்கோ அதைப் பற்றிக் கவலை சிறிதுகூட இல்லை. பொன்னம்பலத்தில் நடனமாடும் அந்த நடராஜ மூர்த்தியைச் சீக்கிரமாகத் தரிசிக்க வேண்டுமென்ற அவாதான் அவர்கள் மனத்தில் குடிகொண்டிருந்தது.

**க்ஷேத்திரமகிமை**

எல்லையற்ற பெருமை படைத்தது சிதம்பர க்ஷேத்திரம். கோயில் என்னும் சொல், சிதம்பரத்தையே குறிக்கும். அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் இவர்கள் நால்வரும் இத்தலத்தில் ஈசனைப் பாடியுள்ளார்கள். **நடராஜர்** எனப் பெயர் தாங்கி இங்குப் பரமேசுவரர் தெற்கு நோக்கி நடனம் செய்ய, மகாவிஷ்ணு **கோவிந்தராஜரென்னும்** பெயருடன் கிழக்கு நோக்கிக் காட்சியளிக்கின்றார். இவ்விரு ராஜாக்களையும் ஒரே இடத்தில் நின்று பக்தர்கள் தரிசிக்கும் பாக்கியம் இவ்விடத்தில் தான் அமைந்துள்ளது- கோவிந்தராஜர் சந்நிதியில் **குலசேகராழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும்** மங்களா சாஸனம் செய்துள்ளார்கள். **மாணிக்கவாசகர்** திருத்தலங்கள் பலவற்றையும் தரிசித்து விட்டுச்

சிதம்பரத்தை அடைந்தார். அவர் பாடிய பாக்களினால் மகிழ்ச்சியுற்ற சிவபெருமானும், மாறுவேடம் தாங்கி மாணிக்கவாசகரை அடைந்து அவரது திருவாசகத்தையும், திருக்கோவையாரையும் எழுதிக்கொண்டு, அதில் **சிற்றம்பலமுடையான்** எனக் கையெழுத்திட்டு, அதைப் பஞ்சாக்ஷரப்படியில் வைத்துவிட்டு மறைந்துவிட்டார். மறுநாள் விடியற்காலை இந்த அதிசயத்தைக் கண்ட தலவாசிகள் அதை மாணிக்கவாசகரிடம் கொண்டுவந்து, அதற்குப் பொருள் கூறவேண்டுமென வேண்டினர். அப்பொழுது மாணிக்கவாசகர் பொற்சபையின் முன் எழுந்தருளியுள்ள நடராஜ மூர்த்தியைச் சுட்டிக் காட்டி, 'இவரே இதற்குப் பொருள்' எனக் கூறிவிட்டு, எல்லோர் முன்னிலையிலும் திருச்சபையில் மறைந்து விட்டார். மற்றும் **திருநீலகண்டர், திருநாளைப்போவார், கூற்றுவ நாயனர்,** இவர்களுக்கும் இங்கு முக்தி ஏற்பட்டுள்ளது. சுமார் 400 வருடங்களுக்கு முன் தோன்றிய மகான் **அப்பைய தீக்ஷிதரும்** தமது வாழ்நாளின் பிற்பகுதியை இந்த க்ஷேத்திரத்தில் கழித்து இவ்விடத்திலேயே பரமபதம் அடைந்தார். சிதம்பரம் ஆகாச க்ஷேத்திரமானதால் பரந்த வெளியை இங்குச் **சிதம்பர ரகசியமெனக்** காட்டுகின்றனர்கள். கமலையிற் பிறத்தலும், காசியில் இறத்தலும், அண்ணாமலையை நினைத்தலும், தில்லையைக் காண்பதும் முக்தியென்பர் பெரியோர்.

தில்லை அம்பலத்தில் நடராஜ பெருமான் நடனமாடியதை நேரில் கண்டுகளித்தவர்கள் **வியாக்ரபாதர், பதஞ்சலி, பாணினி, சனகர், சநந்தனர், சநாதனர், சனத்குமாரர்** போன்ற முனிவர்களாவர். அவர்களில் வியாக்ரபாதர் இருள்சூழ்ந்த சிதம்பர வனத்தில் புஷ்பம் கொய்து விடியுமுன் ஈசனை அர்ச்சிப்பது வழக்கம். இருளில் புஷ்பம் கொய்வதற்குத் தமக்குக் கால் வலிமையும் கண் வலிமையும் வேண்டுமென அந்த முனிவர் பரமசிவனை வேண்ட, அவருக்குப் புலியின் கால்களையும், பார்வையையும் ஈசன் தந்தருளினர். புலியின் காலைப் பெற்றதினால் அவருக்கு **வியாக்ர பாதர்** எனப் பெயர் வந்தது. **அனந்தன் (ஆதிசேஷன்)** நடராஜ மூர்த்தியின் நடனத்தைத் தரிசிக்க விரும்பியதால் மகாவிஷ்ணுவின் அருளால் அவர் ஒரு முனிவர் உருவத்துடன் தில்லையில் வசிக்கலானர். அவரே **பதஞ்சலி** முனிவர். அவர் **சம்பு நடனவிருத்தத்தில்** சிவதாண்டவத் தோத்திரம் என்னும் **ஒன்பது தோத்திரங்களை** இயற்றி அவற்றை இசையுடனும், தாளத்துடனும், பிரதோஷ காலத்தில் பாடி அப்பனது ஆனந்தத் தாண்டவத்தைக் கண்டு மகிழ்ந்தார். இவ்விரு முனிவர்களுள் ஒருவர் விடியும் முன்னரும்,

மற்றொருவர் சூரியன் மேற்கில் சாயும் முன்னரும் ஈசனது நடனத்தில் மகிழ்ச்சியைக் கண்டவர்கள்.

[ஸ்ரீ நடராஜப் பெருமானது நடன தத்துவத்தைக் குறித்து ஸ்வாமிகள் சென்னையில் 20-10-1932-ஆம் தேதி செய்த பிரசங்கத்தின் சில பகுதிகளைக் கீழே காணலாம்.]

**நடராஜ தத்துவம்**

"நடராஜா என்பது பரமேசுவரரின் ஒரு பெயர். நடன், விடன், காயகன் என்பவர்களுள் நடன் ஒருவன். நடன் நாட்டியம் செய்பவன்; நடர்களுக்கெல்லாம் ராஜா நடராஜா. அவரைக் காட்டிலும் உயர்ந்த நடனம் வேறு எவராலும் செய்ய முடியாது என்பது இதன் பொருள். மகாநடன் என்று அவர் சொல்லப்படுகின்றார்; அம்பலக் கூத்தாடுவானென்று தமிழில் அவரைச் சொல்லுவார்கள்; (அம்பலத்தாடுவான் பட்டனென்பது பிராம்மணர்களுக்குரிய பெயராக ஒரு காலத்தில் இருந்ததென்று சிலா சாஸனங்களால் தெரிய வருகிறது.) நடராஜா பெரிய கூத்தாடி; நாமெல்லாம் ஆடவேண்டிய கூத்தை அவர் ஆடுகிறார். அந்த நடராஜ விக்ரகத்தில் தலையில் படர்ந்தாற் போல ஒன்று காணப்படுகிறது; அது இரண்டு பக்கங்களிலும் நீண்டு இருக்கும். அதில் சந்திரன் இருக்கும்; கங்கையும் இருக்கும்; அது யாது? அதுதான் நடராஜருடைய **ஜடாபாரம்**. இந்தக் காலத்தில் போட்டோ எடுக்கிறார்கள். அதில் ஸ்நாப் ஷாட் என்பது ஒன்று. ஒரு வஸ்து சலனத்திலிருக்கும்பொழுது திடீரென்று ஓர் அவசரத்திலெடுப்பது அது. நடராஜர் வெகு வேகமாக நர்த்தனம் பண்ணுகிறார். நர்த்தனம் நிறுத்தப்போகும் சமயத்தில் ஜடாபாரம் இரண்டு பக்கங்களிலும் நீட்டிக் கொண்டு இருக்கும். அந்த நிலையை அந்தக் காலத்துச் சிற்பி மனத்திலே எடுத்த ஸ்நாப் ஷாட்டுதான் இந்தச் சொரூபம். அவருடைய கையில் ஓர் **உடுக்கை** இருக்கிறது. அதற்கு டக்கா என்றும், டமருகம் என்றும் பெயர்களுண்டு. பாதத்தின் தாளத்தை அனுசரித்து அந்த டமருகத் தாளமும் இருக்கும். வாத்யங்களில் முக்கியமானவை மூன்று வகை. அவை—சர்மவாத்யம் (தோல் கருவி), தந்திரிவாத்யம் (நரம்புக் கருவி) வாயு ரந்திர வாத்யம், (துளைக் கருவி) என்பவை. இவைகளில் சர்மவாத்யம் குச்சியினாலும் கையினாலும் அடிக்கப்படும். இந்த வாத்யத்தை நிறுத்தும்பொழுது சாப்புக்கொடுப்பது வழக்கம். அதாவது சேர்ந்தாற்போல் சில அடிகள் அடிப்பது

வழக்கம். அதுபோல நடராஜருடைய டமருகத்தில் நடனம் முடியும் காலத்தில் ஓர் சாப்புத்தொனி உண்டாயிற்று.

நடராஜா நிருத்தம் செய்கிறார். ஸனகாதிகள், பதஞ்சலி, வியாக்ரபாதர் முதலியவர்கள் சுற்றி நின்றுகொண்டிருக்கிறார்கள். அவர்கள் மகா தபஸ்விகள். ஆகையால் அவர்கள் அந்த நிருத்தத்தைத் தெரிந்துகொள்ள முடிந்தது. நடராஜாவின் நடனத்தை ஞானநேத்ரம் உடையவர்கள் மாத்திரம்தான் பார்க்கமுடியும். லென்ஸ் என்ற ஒரு கருவி நம் கண்ணில் இருக்கிறது. அதைப் பொருத்தே நம் பார்வையும் இருக்கிறது. இன்னும் பெரியவைகளாகப் பார்க்கக் கூடிய லென்ஸ் இருந்தால் அப்படியே பார்ப்போம். ஆகையால் நாம் இப்பொழுது பார்ப்பவை உண்மையானவையல்ல என்று தெரிகிறது. நிஜமான கண்களைக் கொண்டு ஸனகாதிகள் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; விஷ்ணு மத்தளம் கொட்டுகிறார்; பிரம்மா தாளம் போட்டுக்கொண்டிருக்கிறார். நிருத்தம் முடிகிற சமயத்தில் டமருகத்தில் **பதினான்கு சப்தங்கள்** எழுந்தன. அந்தச் சப்தங்களின் கணக்குக்கு ஏற்ப வித்தைகளின் கணக்கும் பதினாலாகத்தான் இருக்கின்றன. அந்தப் பதினான்கு சப்தங்கள் ஸனகாதிகளை உத்தாரணம் செய்வதற்காக உண்டாயின; அப்படி எழுந்த சப்தங்கள் சிவஸ்வரூபத்தை ஏகபோகமாக அனுபவிப்பதற்கு மார்க்கமாக இருந்தன; அந்தச் சப்தங்களையே சிவபக்தி தோத்திரங்களென்று வைத்து, அவற்றிற்கு நந்திகேச்வரர் பாஷ்யம் எழுதினார். அப்பொழுது அங்கேயிருந்தவர்களுள் **பாணினி** என்பவரும் ஒருவர். அந்தச் சூத்திரங்களின் முதல் எழுத்தாகிய அ என்பதையும், கடைசி எழுத்தாகியல் ஐயும் வைத்துப் பாணினி வியாகரணம் செய்தார். எல்லாப் பாஷைகளுக்கும் **அகாரம்** ஆதியாயிருக்கிறது. (ஹிந்துஸ்தானி பாஷையில் அலீப் என்பது முதல் எழுத்து. கிரீக்கில் ஆல்பா என்பது முதல் எழுத்து.) இந்த இரண்டும் எழுத்துக்களையெல்லாம் குறிக்கும் **அல்** என்பவைகளிலிருந்து வந்தவைகளே. இங்கிலீஷில் 'ஆல்ஃபபெட்' என்று எழுத்துக்களை குறிப்பதும் **'அல்'** என்பதிலிருந்து வந்ததுதான். இவ்வாறு வியாகரணத்திற்கு மூலகாரணமாக இருந்தது, நடராஜாவுடைய டமருகத்திலிருந்து உண்டாகிய **மாகேச்வர சூத்திரங்களென்று** தெரிகிறது. நடராஜாவுக்கருகில் **பதஞ்சலி, வியாக்ரபாதர்** என்னும் இருவரும் இருக்கிறார்கள். அவர்களுடைய பிம்பங்களை நடராஜாவினுடைய பிம்பத்துக்குப் பக்கத்தில் பார்க்கலாம். பதஞ்சலி **வியாகரண பாஷ்யம்** செய்தவர். **கையிலிருந்து** உண்டான சப்தத்தை வைத்துக்கொண்டு

**பாணினி** வியாகரணம் பண்ணினர்; **பதஞ்சலி** காலிலிருந்து உண்டான ஆட்டத்தைக்கொண்டு அதற்கு **பாஷ்யத்தைச்** செய்தார். பதஞ்சலி ஆதிசேஷரது அவதாரம். ஆதிசேஷன் பரமசிவனது காலில் பாதசரமாக இருக்கிறார். இவ்விதமாகப் பரமேச்வரனே வியாகரண சாஸ்திரத்திற்கு மூல புருஷராக விளங்குகிறார்.''

நம் ஸ்வாமிகள் வியாக்ரபாத முனிவர் கண்டு களித்த காட்சியை முதலில் காணவிரும்பினார்கள் போலும். ஆகவே அவர்கள் சிதம்பரத்திற்கு விஜயம் செய்த அன்றிரவே, இவ்விதம் தீர்மானம் செய்துகொண்டவர்களாகி, தமக்கு வஸ்திரம் துவைத்து உலர்த்திவைக்கும் சிஷ்யர் ஒருவருக்கு மாத்திரம் இந்தக் கருத்தைத் தெரிவித்து, ஒருவரும் அறியாதவாறு அவரைத் தமக்கான மடி வஸ்திரத்துடன் ஆலயத்தின் உட்புறத்திலுள்ள **சிவகங்கைத்** தடாகத்திற்கு விடியற்காலை நான்கு மணி சுமாருக்கே வரும்படி கட்டளையிட்டிருந்தார்கள். ஸ்வாமிகளும் அதே சமயத்தில் தனிமையில் அத்தடாகத்திற்கு வந்து, அந்தப் புண்ய தீர்த்தத்தில் நீராடி, அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, ஆலயம் திறக்கும் பொழுதே உட்சென்று திருச்சபையின் முன்புறம் நின்று விட்டார்கள். அப்பொழுது சந்நிதியின் உட்புறம் சென்றிருந்த, அன்றைய பூஜை முறையைப் பெற்றிருந்த **தீக்ஷிதர்** பின்புறம் திரும்பிப் பார்க்கவே, பரமசிவனது உருவம்தானோ என ஐயமுறும் படி நின்ற ஸ்வாமிகளின் திருமேனியைக் கண்டார். அப்பொழுது ஸ்வாமிகள் நடராஜரது தரிசனத்திலேயே தம் அகக்கண், புறக்கண் இரண்டையும் ஈடுபடுத்தி, நடராஜர் பேரில் தோத்திரங்களைத் தமது திருவாக்கினால் உச்சரித்துக்கொண்டிருந்தார்கள். தீக்ஷிதரோ ஸ்வாமிகளை அவ்வேளையில் தனிமையாக அங்கு எதிர் பார்க்கவில்லை யாதலால், அந்நிலையில் ஸ்வாமிகளை எவ்வாறு வரவேற்பதென்பது அவருக்கு விளங்கவில்லை. அவர் உடனே மெய்க்காவலர் மூலம் பொது தீக்ஷிதர்களுக்கெல்லாம் நடராஜர் சபைக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்திருப்பதைப்பற்றிய செய்தியைச் சொல்லியனுப்பினார். இச்செய்தி சில நிமிஷங்களில் ஊர் முழுவதும் பரவிவிட்டது. நூற்றுக்கணக்கான மக்கள் விரைவில் கோவிலை அடைந்தார்கள். தீக்ஷிதர்களும் கோவிலுக்கு வந்து ஸ்வாமிகளை வணங்கி, 'ஸ்வாமிகளைத் தக்கமுறையில் மரியாதைகளுடன் ஆலயத்திற்கு வரவேற்க எல்லா ஏற்பாடுகளையும் தாங்கள் செய்திருப்பதாகவும், இவ்விதம் தனிமையில் ஸ்வாமிகள் கோவிலுக்கு விஜயம் செய்தது அவர்கள் மனஸிற்குக் கவலையைத் தருவதாகவும்' தெரிவித்துக்கொண்டனர். ஆனால் ஸ்வாமிகள்

**விச்வரூப தரிசன** மென்னும் நடராஜரது முதல் காலக் காட்சியைத் தனிமையில் காணவேண்டுமெனத் தாம் விரும்பியதாகவும், அதனுல் அவ்விதம் வந்ததாகவும், இனிச் சிதம்பரத்தில் தங்கியிருக்கும் வரை ஒவ்வொரு நாளும் பல தடவை நடராஜப் பெருமானைத் தரிசிக்கப் போவதாகவும் கூறிஞர்கள்.

மற்றத் தேவாலயங்களில் நடைபெறுவதைப் போலவே தீக்ஷிதர்கள் ஸ்வாமிகளுக்கு நடராஜர் சந்நிதியில் தக்கவாறு மரியாதைகளைச் செய்து, தேவஸ்தான மரியாதைகளுடன் ஸ்வாமிகளை ஜாகைக்கு கொண்டுவந்து விட்டனர். பின்னர் தீக்ஷிதர்கள் ஒரு பொதுக்கூட்டம் கூட்டி, ஸ்வாமிகளை ஆலயத்திலேயே சில நாட்கள் தங்கும்படி கேட்டுக் கொள்வதென்றும், அவ்விடத்திலேயே அவர்களின் ஸ்ரீ சந்திரமெளளீச்வரர் நித்திய பூஜையையும் நடத்த ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். அதற்காக ஆயிரக்கால் மண்டபமும் சுத்தம் செய்யப்பட்டது. ஸ்ரீமுக வருடம் வைகாசி மாதம் 10-ஆம் தேதி (23-5-1933) செவ்வாய்க்கிழமை அன்று ஆயிரக்கால் மண்டபத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். அங்குப் பொது தீக்ஷிதர்கள் சார்பாக ஸ்வாமிகளுக்கு உபந்யாச ரத்ஞகரம் **ஸி. எஸ். சிவகாமி சுந்தர தீக்ஷிதர்** அவர்களால் வடமொழியிலும், அவருடைய திருக்குமாரர் **சி. எஸ். சச்சிதானந்த தீக்ஷிதர்** அவர்களால் தமிழிலும் வரவேற்புப் பத்திரங்கள் வாசிக்கப்பட்டன. ஸ்வாமிகள் சுமார் பதினைந்து நாட்கள் அவ்விடம் தங்கி, ஸ்ரீ சந்திரமெளளீச்வரர் பூஜையை நடத்திஞர்கள். ஸ்ரீ ஆதிசங்கரர் கைலாசத்திலிருந்து ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கொண்டுவந்ததாகவும், அவைகளுள் போகலிங்கத்தைச் **சிருங்கேரியிலும்**, வரலிங்கத்தை **நேபாளத்திலும்**, முக்திலிங்கத்தை **கேதார க்ஷேத்திரத்திலும்**, யோகலிங்கத்தைக் **காஞ்சியிலும்**, மோக்ஷலிங்கத்தைச் **சிதம்பரத்திலும்** பிரதிஷ்டை செய்ததாகவும் புராணம் கூறுகிறது. காஞ்சியில் ஸ்தாபித்த லிங்கமே இப்பொழுது ஸ்ரீ காமகோடி பீடத்தில் பூஜையில் அமர்ந்திருக்கும் **யோகலிங்கமாகும்.** இந்த லிங்கங்கள் எல்லாம் பரிமாணத்திலும் தோற்றத்திலும் ஒன்றுக்கொன்று ஒற்றுமையுடன் விளங்கிவருகின்றன. ஒவ்வொருநாளும் ஆயிரக்கணக்கான மக்கள் ஸ்வாமிகள் தங்கியிருந்த அந்தப் பிரம்மாண்டமான மண்டபத்தில் நடைபெற்ற ஸ்வாமிகளின் பூஜையைக் கண்டும், அவர்கள் ஒவ்வொரு நாள் மாலையிலும் நிகழ்த்திவந்த உபதேச மொழிகளைக் கேட்டும் மனமகிழ்ந்தார்கள். எல்லாச் சமூகத்தினரும் ஸ்வாமிகளுக்கு அன்ருடம் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை நடத்தி

வைத்தார்கள். ஸ்வாமிகளும் ஒவ்வொருநாளும் நடராஜர் சந்நிதி யிலும், கோவிந்தராஜர் சந்நிதியிலும் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். நடராஜாவுக்குப் பாவாடை, அபிஷேகம், தேருக்கு அலங்காரம் இவைகளை விசேஷமாகச் செய்துவைத் தார்கள். மேலும் சிவபிரானது நெற்றியில் தோற்றமளிக்கும் சந்திரகலையை ரத்தினங்கள் இழைத்த ஓர் ஆபரணமாக அமைத்து, அதை நடராஜப் பெருமானுக்கு ஸமர்ப்பணம் செய் தார்கள். ஸ்வாமிகள் அளித்த இந்த ஆபரணம் அப்பெருமானுக்கு மிகவும் பொருத்தமாக அமைந்திருந்ததைக் கண்டு யாவரும் மகிழ்ச்சியுற்றனர். ஸ்வாமிகள் சிதம்பரத்தில் அச்சமயம் ஒரு மாதம் தங்கியிருந்துவிட்டு, பக்கத்திலுள்ள **பறங்கிப்பேட்டை, கவரப்பட்டு** முதவான இடங்களுக்கு விஜயம் செய்தார்கள்.

**பறங்கிப்பேட்டையில் தந்தையாரின் பழைய மாணவரிடம் காட்டிய பரிவு**

சிதம்பரத்திலிருந்து புறப்பட்டு ஸ்வாமிகள் பறங்கிப் பேட்டைக்கு விஜயம் செய்திருந்தபொழுது, ஸ்வாமிகள் தந்தை யாரிடம் அவ்வூரில் பல வருடங்களுக்கு முன் கல்வி பயின்ற **பாவா மரக்காயர்** என்ற இஸ்லாமியப் பிரமுகர் ஸ்வாமிகளைக் காண வேண்டுமென விரும்பினர். 1898-ஆவது வருடம் ஸ்வாமிகளின் தந்தையார் பறங்கிப்பேட்டையில் பள்ளி ஆசிரியராக இருந் தார்கள். அவர்களிடம் கல்வி கற்ற இந்தப் பிரமுகர் அவர்கள் பாலும், அவர்கள் குடும்பத்தார்கள் பாலும், மிகுந்த பக்தி கொண்டிருந்தார். ஸ்வாமிகளின் இளமைப் பிராயத்திலேயே அவர்களுடன் நன்கு பழகி, அவர்களின் மேதா விலாசத்தை அந்நாளிலேயே கண்டறியும் பாக்கியத்தைப் பெற்றவர் இந்த அன்பர். ஸ்வாமிகளின் தந்தையார் பறங்கிப்பேட்டையிலிருந்து வேறு இடங்களுக்கு மாறிச் சென்ற பிறகுங்கூடப் பாலன் வடிவமாக இருந்த ஸ்வாமிகளைக் காண்பதற்கெனவே மிகுந்த ஆவ லுடன் அவர் அவ்வூர்களுக்கெல்லாம் சென்று வருவார். ஸ்வாமி களின் தந்தையாரையும், தாயாரையும் தமது தாய், தந்தை போலவும் அவர்களின் குழந்தைகளையெல்லாம் தம் உடன் பிறந்தார் போலவும் மதித்து அவர்களிடம் அவர் அத்தகைய உள்ளன்பையே பாராட்டி வந்தார். அக்காலத்தில் இளைஞராக இருந்த மகம்மதியக் கனவான் பரம்பரையாக ஏற்பட்ட வியா பாரத்துறையில் நல்ல செல்வம் படைத்தவராகவுமிருந்தார். அவர் வியாபார நிமித்தம் அக்காலத்தில் சென்னை முதலிய பெரிய ஊர்

களுக்குச் சென்று வரும்போதெல்லாம் சிறு பிராயத்திலிருந்த நம் ஸ்வாமிகளுக்கும், அவர்களின் உடன்பிறந்த குழந்தைகளுக்கும் விளையாட்டுச் சாமான்கள், ஆடை, பழங்கள் முதலியவற்றை வாங்கி வருவார்; அவைகளை இவர்களுக்கு வழங்கிவிட்டுப் பிறகே ஊருக்குச் செல்வார். வேறு எவர் எதைக் கொடுத்தாலும் ஏற்றுக் கொள்ளாத தாய்–தந்தையர் இணையற்ற அன்பின் காரணமாக அவைகளை மட்டும் ஏற்றுக்கொண்டு வந்தனர். ஆயினும் அந்த இளைஞரிடம், 'ஏனப்பா, இவைகளையெல்லாம் வாங்கி வருகிறாய்? அவசியமில்லாமல் பணத்தைச் செலவிடுகிறாயே" என மட்டும் அன்னையார் கூறுவார்கள். அதற்கு அவர், 'அம்மா, நான் வெளியூர்களுக்குச் செல்லும்போது கடைகளில் குழந்தைகளுக்கான பொருள்கள் என் கண்களில் படும்போதெல்லாம், இந்தக் குழந்தைகளின் நினைவுதான் எனக்கு வருகின்றது. அப்படியிருக்கும்போது நான் அவைகளை வாங்காமல் எப்படி இங்கு வருவேன்?' என்பார். இந்த அன்பான சொற்களைக் கேட்க அவர்கள் உள்ளம் பூரிக்கும்.

இத்தகைய நிலையில் பழகிய அந்த இஸ்லாமியக் கனவானுக்குப் பறங்கிப்பேட்டைக்கு ஸ்வாமிகள் விஜயமானபொழுது பிராயம் சுமார் நாற்பத்தெட்டு இருக்கலாம். அப்பொழுது அவர் தம் வியாபாரத்தைப் பெருக்கி நல்ல செல்வவானாக விளங்கி வந்தார். ஸ்வாமிகளிடம் இளமைப் பருவத்தில் பழகியதை அவர் தம் நண்பர்களிடமும், உறவினர்களிடமும் கூறி அதனால் பெருமையை அடைந்தார். ஸ்வாமிகள் அவ்வூருக்கு விஜயம் செய்யும்போது அவர்களை முதன்முதல் காண்பதற்கு உரிமை தமக்கே உண்டெனவும் அவர் கருதினார். அப்பொழுது அவர் தாம் பிறமதத்தைச் சேர்ந்தவர் என்ற எண்ணத்தையே மறந்து விட்டார். அவர் ஏராளமாகப் பழங்களையும் புஷ்பங்களையும் வாங்கிக்கொண்டு ஸ்வாமிகளைக் காணவந்தார். ஸ்வாமிகள் ஊருக்குள் பிரவேசித்தபொழுது அவர் தரிசனம் செய்துகொண்டார்; அன்று மௌன விரதமாதலால் புன்னகையுடன் ஸ்வாமிகள் அவ்வன்பை ஏற்றுக்கொண்டார்கள். அந்த மகம்மதியர் உப்பளங்களையும், பாய்க்கப்பல் மூலம் வியாபாரங்களையும் நடத்தி வந்தார். பறங்கிப்பேட்டை ஒரு சிறிய துறைமுகம். போர்ட்டோ நோவோ (Porto Novo) என இதை ஆங்கிலத்தில் கூறுவர். கடற்கரையிலுள்ள தம் வியாபார ஸ்தலங்களையெல்லாம் ஸ்வாமிகள் நேரில் காணவேண்டுமென்றும், தம் உப்பளம் முழுவதும் ஸ்வாமிகளின் காலடி படவேண்டுமென்றும், அவர் பிரார்த்தனை செய்துகொண்டார். அவரது கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு

ஸ்வாமிகள் அவர் அழைத்துச் சென்ற இடத்திற்கெல்லாம் மௌன நிலையுடனேயே குழந்தைபோல் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். இந்தக் காட்சியைக் காண நூற்றுக்கணக்கான அவ்வூர் மக்கள் ஸ்வாமிகளுடன் சென்றனர். கடற்கரை ஓரமாகச் சுமார் பத்து மைல் தூரம் கடுமையான வெயிலில் ஸ்வாமிகள் நடந்தே வந்து கொண்டிருந்தார்கள். அந்தக் கனவான் பாதையில் கப்பல்கள் போக்குவரத்தைப்பற்றியும், வியாபாரத்தைப்பற்றியும் விவரித்துக் கூறிக்கொண்டே வந்தார். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு ஸ்வாமிகள் ஜாகைக்கு வரும்பொழுது பகல் பன்னிரண்டு மணி ஆகிவிட்டது. ஸ்வாமிகளுக்கு மிகுந்த சிரமத்தைக் கொடுத்து விட்டதற்காக அந்த மரக்காயர் ஸ்வாமிகளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். அந்தரங்கமான பக்தி எவ்விடம் இருக்கின்றதோ அவ்விடம் கடவுளருளும் இருக்குமென்பதற்கு எடுத்துக் காட்டாக ஓர் இஸ்லாமிய அன்பரிடம் ஸ்வாமிகள் காட்டிய பரிவைக் கண்டு பக்தர்கள் யாவரும் வியப்படைந்தனர். இந்த நிகழ்ச்சியைக் குறித்தும், ஸ்வாமிகளின் தாராள மனப் பான்மையைக் குறித்தும் அக்காலத்தில் அவ்வட்டாரத்திலுள்ள மக்கள் பெருமையாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

**தஞ்சையில் நடந்த வியாஸ பூஜையும் நவராத்திரி விழாவும்**

பறங்கிப்பேட்டையிலிருந்து ஸ்வாமிகள் பல ஊர்களில் தங்கித் தஞ்சை நகரத்திலுள்ள சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 1933-ஆவது வருடத்து வியாஸ பூஜையையும், அதைத் தொடர்ந்து நவராத்திரி விழாவையும் ஸ்வாமிகள் தஞ்சையில் நடத்தினார்கள். ஸ்ரீமுக வருடம் ஆனி மாதம் 24-ஆம் தேதி வெள்ளிக்கிழமை (7-7-1933) வியாஸ பூர்ணமி அன்று தஞ்சையில் **ராஜராஜ சோளீயம்** எனப்படும் **ஸ்ரீ பிருகதீச்வரர் ஆலயத்தில்** இந்தப் பூஜை நடைபெற்றது. இவ்வாலயத்திற்குப் பெரிய கோவிலென்று மற்றொரு பெயரும் உண்டு. இவ்வாலயத்தின் முன்புறம் அமைந்துள்ள பெரியதொரு மண்டபத்தில் நடைபெற்ற இந்தப் பூஜையைப் பல்லாயிரக்கணக்கான மக்கள் தரிசித்தனர். வியாஸ பூர்ணமியைத் தொடர்ந்து சாதுர்மாஸ விரதத்தை ஸ்வாமிகள் தஞ்சை மேல வீதியிலுள்ள முகாசா கட்டிடத்தில் நடத்தினார்கள். ஒவ்வொரு நாளும் அவ்விடத்தில் வித்வத் சபைகளும் கலைஞர்களின் கூட்டமும் கூடின; தத்தம் கலைத்திறன்களை ஸ்வாமிகள் முன்னிலையில் கலைஞர்கள் வெளிப்படுத்தினார்கள். ஸ்வாமிகள் யாவருக்கும் தகுந்த சம்மானம் அளித்து அவர்களை மகிழ்வித்தார்கள்.

ஸ்வாமிகள் தஞ்சையில் தங்கியிருந்தபொழுது அவ்வூர் வரதப்ப ஐயர் சந்துக்குச் சென்று அங்கு ஒரு வீட்டில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கும் **ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளால் பூஜை** செய்யப்பட்ட **இராமவிக்ரகத்தைத்** தரிசித்து வந்தார்கள்.

அந்த வருட நவராத்திரி பூஜை தஞ்சை மேல வீதியிலுள்ள கோவாப்பரேட்டிவ் கட்டிடத்தில் நடைபெற்றது. இந்தப் பூஜைக்கென இந்தக் கட்டிடம் விசேஷமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. வழக்கத்திற்கு மேல் அதிகக் கோலாகலமாக அவ்வருட நவராத்திரி விழா அவ்வூரில் நடைபெற்றது. ஒன்பது நாட்களும் ஸ்வாமிகள் செய்து வந்த அம்பிகையின் பூஜையை ஆயிரக்கணக்கான மக்கள் தரிசிததுக்கொண்டனர். பத்தாவது நாளாகிய விஜயதசமி அன்று ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு ஊர்வலத்தை நடத்தப் பொதுமக்கள் ஏற்பாடு செய்தனர். மாபெரும் யானையின் மீது தங்க அம்பாரியை அமைத்து அதில் ஸ்வாமிகளை ஆரோகணிக்கச் செய்து, நகரத்தின் நான்கு பிரதான வீதிகளின் வழியாக அன்று ஊர்வலம் சென்றது. அம்பாரியின் முன்புறம் தஞ்சை **சீனியர் பிரின்ஸ் ராஜா ராம் சாகிபும்,** அவருடைய சகோதரரும், பின்புறம் மடத்தின் சர்வாதிகாரியும் வீற்றிருந்தனர். நடுவில் வீற்றிருந்த ஸ்வாமிகளின் திவ்ய தேஜோமயமான ஸ்வரூபத்தைக் காணப் பல்லாயிரக் கணக்கான மக்கள் ஊர்வலத்துடன் வந்துகொண்டிருந்தனர். வீதிகளின் இரு புறங்களிலும், உயர்ந்த கட்டிடங்களின் மாடிகளிலும் மக்கள் பலர் திரண்டு நின்று ஸ்வாமிகளைத் தரிசித்தனர். தோரணங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்த வீதிகளின் வழியே இரவைப் பகலாக்கும் நூற்றுக்கணக்கான காந்த விளக்குகளுடன் யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், குடைகள், பாவட்டாக்கள், நாதஸ்வர கோஷ்டிகள், பாண்டு வாத்ய கோஷ்டிகள் இவை முன் செல்லவும், வேத கோஷ்டி, தேவார கோஷ்டி, பஜனை கோஷ்டி முதலியன பின் செல்லவும் நடைபெற்ற இந்த ஊர்வலத்தின் சிறப்பைத் தஞ்சை மக்கள் என்றும் மறக்கமாட்டார்கள். முன்னர் தஞ்சையை அரசாண்ட சோழ, நாயக்க மகாராஷ்டிர மன்னர்கள் விழாக்காலங்களில் பவனி வந்த காட்சியை நினைவூட்டும் வண்ணம் அந்த ஊர்வலம் அமைந்திருந்தது. வழி நெடுக ஸ்வாமிகளுக்குப் பக்தர்கள் பூர்ண கும்பம் அளித்து, புஷ்ப மாலைகளை அணிவித்து, கற்பூர ஹாரத்தி சுற்றி வழிபாடு செய்தனர்.

தஞ்சையில் ஸ்வாமிகள் தங்கியிருந்த பொழுது சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், மிராசுதார்கள், வியாபாரிகள், தேசியத் தலைவர்கள் மற்றும் பல துறைகளில் ஈடுபட்டிருந்த மக்கள், எவ்வித வேறுபாடும் பாராட்டாமல் ஸ்வாமிகளுக்குச் செய்யவேண்டிய பணிகளைச் சிறப்பாக நடத்தி வைத்தனர். அவர்களில் முக்கியமாக வக்கீல்கள் **நாகநாத ஐயர், கோதண்ட ராம ஐயங்கார், கே. நடராஜன்,** மற்றும் **ஆத்மராம காடே சாகேப், வேங்கடேச பாண்ட்யா,** ஜில்லா ரிஜிஸ்ட்ரார்கள் **நாகராஜ ராவ், ஆர். கிருஷ்ண ஸ்வாமி ஐயர்,** டிபுடி கலெக்டர்கள் **பி. கிருஷ்ண ஸ்வாமி ஐயர், ரங்கஸ்வாமி ஐயங்கார், கிருஷ்ணஸ்வாமி சாஸ்திரி,** கவிஞர் **சுந்தரேச்வர சர்மா,** மிராசுதார் **எஸ். ரத்தினம் ஐயர்,** கண்ட்ராக்டர் **சீதாராமராஜா,** வியாபாரம் **ராஜமாணிக்கம் செட்டியார்,** காங்கிரஸ் தலைவர் **வேங்கடகிருஷ்ண பிள்ளை** இவர்களைக் குறிப்பிடலாம். மற்றும் நூற்றுக்கணக்கானவர்கள் ஸ்வாமிகளின் பணியில் நெருங்கி ஈடுபட்டிருந்தனர். அக்காலத்தில் தஞ்சையில் முனிஸிபல் சேர்மனாக இருந்த **இராமநாதன் செட்டியார்** ஸ்வாமிகளுக்கு வரவேற்பளிப்பதில் மிகுந்த ஊக்கம் எடுத்துக்கொண்டதுடன் ஸ்வாமிகளின் பூஜைக்கென தங்கத்தினால் ஓர் விநாயக விக்கிரகம் அமைத்து அவர்களுக்கு அளித்தார். தஞ்சையில் தங்கியிருந்த காலத்தில் அநேகமாக ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகள் மேல வீதியிலுள்ள **பங்காரு காமாக்ஷி** ஆலயத்திற்குச் சென்று அம்பிகையைத் தரிசித்துவந்தார்கள்.

**தஞ்சையில் சங்கரமடம் ஸ்தாபிதம்**

சுமார் 200 ஆண்டுகளுக்கு மேல் ஸ்ரீ காமகோடி பீடத்துப் பரம்பரையில் தோன்றிய ஆசார்ய ஸ்வாமிகள் பலர் அவ்வப்போது தஞ்சையில் தங்கியிருந்ததன் நினைவு மக்கள் உள்ளத்தில் எப்போதும் இருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன், நகரில் ஒரு சங்கர மடம் நிறுவவேண்டுமென மடத்தின் பணியில் நெருங்கிய தொடர்புகொண்ட பக்தர்கள் சிலர் ஆலோசித்தனர். அதற்கான முயற்சியையும் அவர்கள் எடுத்துக்கொண்டனர். பின்பு ஸ்வாமிகள் கங்கா யாத்திரையை முடித்துக்கொண்டு தென்னாட்டிற்குத் திரும்பிய சமயத்தில் இந்த முயற்சி சற்று வலுவடைந்தது. அப்பொழுது ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி பூண்ட தஞ்சை ஜூனியர் பிரின்ஸ் **பிரதாபசிம்ம ராஜாவும், டி. ஆர். ஜோஷியும்** இந்த முயற்சி வெகு எளிதில் நிறைவேறும் வண்ணம் என்றும் நிலைத்திருக்கும் ஒப்பற்ற ஓர் பணியைத் தங்கள் தாராள மனப் பான்மையினால் செய்து முடித்தனர். ஸ்வாமிகள் முன்னர் தங்கி

யிருந்ததும் மேல வீதியிலுள்ளதுமான **முகாஸா ஆபீஸ்** எனக் கூறப்படும் மாபெரும் கட்டிடத்தின் உரிமையாளர்களான அவர்கள் இருவரும் தங்கள் உரிமையை மடத்திற்கே தான சாஸனம் செய்துவிட்டார்கள். அன்று முதல் அக்கட்டிடம் தஞ்சையில் சங்கர மடமாக விளங்கி வருகிறது. தஞ்சையில் சங்கர மடம் நிறுவ வேண்டியதற்கு முயற்சி எடுத்துக்கொண்டவர் களில் அப்பொழுது தஞ்சைஜில்லா ஜட்ஜாக இருந்த **எம். அனந்த நாராயணனை** முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். அவர் பெரிய மேதாவியாக விளங்கிய **அ. மாதவய்யாவின்** புதல்வர். ஸ்வாமி களிடம் ஒப்பற்ற பக்தி கொண்டவர். அக்கட்டிடத்தில் ஆதி சங்கரரின் பிம்பப் பிரதிஷ்டைசெய்யப்பெற்று அன்றாடம் பூஜை யும் நடந்து வருகிறது. மத சம்பந்தமான விசேஷ நாட்களைப் பக்தர்கள் அங்குக் கொண்டாடி வருகிறார்கள். மத சம்பந்தமான சொற்பொழிவுகளும் கலைவிழாக்களும் அங்கு நடைபெறுகின்றன. ஓர் இலவச ஆயுர்வேத வைத்தியசாலையும் அங்கு நடந்து வருவ தாகத் தெரிகிறது.* அக்கட்டிடத்தில் ஸ்வாமிகளின் திரு உருவப் படத்தை 1946 நவம்பர் மாதக் கடைசியில் திறந்து வைத்த சென்னைப் பிரபல வழக்கறிஞர் (காலஞ்சென்ற) **டி. ஆர். வேங்கட ராம சாஸ்திரிகள்,** நம் ஸ்வாமிகள் ஓர் மகா புருஷரென்றும், இவ்வித மகா புருஷர்கள் உலகில் மிகவும் அரிதாகவே தோன்று வார்களென்றும், நமது காலத்தில் இவர்கள் தோன்றியுள்ளது நமது அதிர்ஷ்டம் என்றும், ஜனங்கள் அவர்களை நன்கு புரிந்து கொண்டு அவர்களது உபதேசப்படி நடந்தால் உலகிற்கு எல்லா நன்மைகளும் உண்டாகுமென்றும் கூறியுள்ளார். அந்த விழா விற்குச் சென்னை ஹைகோர்ட்டு நீதிபதி **என். சந்திரசேகர ஐயர்** தலைமை தாங்கினார்.

**கங்கா யாத்திரை—கால்நடையாகக் காசிக்குச் சென்ற அனந்த கிருஷ்ண சர்மா**

சாலை மார்க்கமாகக் காசிக்குச் செல்வதற்கு வசதியான வழி களை அறிந்து வரும் பொருட்டு **தென்காசியைச்** சேர்ந்த **அனந்த கிருஷ்ண சர்மா** என்னும் இருபது பிராயமுள்ள வாலிபரை ஸ்வாமிகள் (கங்கா யாத்திரைக்குப் புறப்படுவதற்குச் சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்னரே) அனுப்பி வைத்திருந்தார்கள். அவ்விதம் அனுப்பும் பொழுது அவருக்குக் கீழே கண்டவாறு சில நிபந்தனைகளையும் குறிப்பிட்டார்கள்.

---

* சம்ஸ்கிருத ஓரியண்டல் பள்ளியும் அங்கு இப்போது நடந்து வருகிறது.

1. அவர் காசியை அடையும்வரை நடந்தே செல்ல வேண்டும்.

2. அவருக்குத் தேவையான உணவை அவரே தயாரித்துக் கொள்ள வேண்டும்.

3. காபி, டீ முதலிய பானங்களை அவர் அருந்தக் கூடாது.

4. உணவு தயாரித்துக்கொள்ளச் சிற்சில பாத்திரங்களையும் மிகவும் அவசியமான உடையையுமே அவர் எடுத்துச் செல்ல வேண்டும்.

5. அன்றாடம் உணவு தயாரித்துக் கொள்ளத் தேவையான அரிசியையோ, கோதுமை மாவையோ அவர் போகுமிடங்களில் அன்பர்களிடம் யாசித்துப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

6. எவரிடமும் அவர் பணம் வெகுமதியாய்ப் பெற்றுக் கொள்ளக் கூடாது.

7. உடல்நிலை காரணமல்லாது, ஓர் ஊரில் ஒரு நாளைக்கு மேல் தங்கக் கூடாது.

8. ஸ்வாமிகளின் உத்தரவின்படி நடந்து காசி யாத்திரை செல்லுவதாக அவர் ஆங்காங்கு மக்களிடம் சொல்லிக்கொள்ள லாம். (ஆனால் அவரிடம் எவ்வித அடையாளச் சீட்டும் கொடுக்கப்படவில்லை.)

9. அவரிடம் கொடுக்கப்பட்ட போஸ்டு கார்டுகளில் அன்றாடம் அவர் சென்ற ஊர்களைப் பற்றியும் பாதையின் தன்மை களைப் பற்றியும், சந்தித்த மனிதர்களைப் பற்றியும், காப்பிங் பென்ஸிலால் சுருக்கமாக எழுதி மடத்திற்குத் தபால் மூலம் அனுப்ப வேண்டும். அவரிடம் கொடுத்திருந்த போஸ்டு கார்டுகள் குறைந்தவுடன் அவ்வப்போது அவருக்குக் கார்டுகள் அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

10. காசியிலிருந்து திரும்பி வரும்பொழுது அவர் ஹிந்தி யைப் பேசக் கற்றுக்கொண்டு வரவேண்டும். அவர் திரும்பி வரும்பொழுது ரெயில் மார்க்கமாக வருவதற்கு அவருக்கு அனுமதி அளிக்கப்பட்டது.

இவ்வகையான கடுமையான நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு கால் நடையாகக் காசி யாத்திரை செல்வதென்பது எவராலும் எளிதில் செய்து முடிக்கக் கூடியதன்று. ஸ்வாமிகளிடம் ஒப்பற்ற பக்தியும், மன வலிமையும், உடல் வலுவும் ஒருவருக்கு இருந்தா லொழிய இதைச் சாதிக்க முடியாதென்பது திண்ணம். அப் பொழுது பிரம்மசாரியாக இருந்த அனந்த கிருஷ்ண சர்மாவுக்கு நல்ல உடல் வலிமையும், மனத் திடமும், ஆசாரிய பக்தியும்

ஒருங்கே அமைந்திருந்தன. அவருக்குத் தமிழுடன், ஆங்கிலமும் பேசத் தெரியும். ஸ்வாமிகளின் கட்டளையை அவர் ஏற்றுக் கொண்டு அவர்களிட்ட நிபந்தனைகளிலிருந்து சிறிதும் வழுவாது சுமார் ஆறு மாதங்களில் காசியை அடைந்தார். அவர் ஒவ்வொரு நாளும் மடத்திற்கு எழுதி அனுப்பிய கார்டுகளிலிருந்து சில ரஸமான விஷயங்கள் புலப்பட்டன. ஓர் ஊரிலிருந்து அடுத்த ஊருக்குள்ள தூரத்தையும், பாதை நிலைமையையும், தண்ணீர் வசதியையும், அவர் முக்கியமாகக் குறிப்பிட்டிருந்தார். ஸ்வாமிகளின் உத்திரவின்படி தாம் காசிக்கு நடந்து செல்வதாக ஆங்காங்குள்ள ஊர் மக்களுக்கு அவர் தெரிவித்தவுடன், பலர் அவர் பாதங்களைத் தொட்டு வணங்குவார்களாம். அவர்களில் மிகப் பெரியோர்களும், கற்றோர்களும் இருப்பார்களாம். தான் மிகவும் சிறியவனென்றும், தன்னை வணங்க வேண்டாமென்றும் அவர் எவ்வளவு சொல்லியும் மக்கள் கேட்க மாட்டார்களாம். அநேகமாக அவர் பகலிலேயே பிரயாணம் செய்வது வழக்கம். ஆனால் ஒரு நாள் அடர்ந்த காடுகள் அமைந்த சாலையில் நடந்து சென்ற பொழுது சூரியன் மேற்கில் மறைந்து விட்டதாகவும், அந்த இடம் துஷ்ட மிருகங்கள் வசிக்குமிடமாதலால் அவர் அப்பொழுது தொடர்ந்து மேலே செல்லாமல் சாலையைச் செப்பனிடும் ஓர் இரும்பு உருளையின் உட்புறத்தில் பதுங்கிக் கொண்டு இரவு முழுவதையும் அங்குக் கழித்ததாகவும், அப்பொழுது தமது அருகிலேயே இரண்டு புலிகள் சென்றதைத் தாம் பார்த்ததாகவும், உருளைக்குள் மறைந்திருந்ததால் தாம் காப்பாற்றப்பட்டதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார். இவ்விதம் பல இன்னல்களைக் கடந்து அவர் காசியை அடைந்து அவ்விடம் சில நாட்கள் தங்கி இருந்தார். பின்னர் ஸ்வாமிகளின் உத்தரவின்படி காசியிலுள்ள மடத்தின் ஏஜெண்ட் அவரை ரயில் மூலம் கும்பகோணத்திற்குத் திருப்பி அனுப்பிவைத்தார். அனந்தகிருஷ்ண சர்மாவும் திரும்பி வந்தபொழுது ஹிந்தியை நன்ருகப் பேசப் பழகிக்கொண்டு விட்டார். அவர் ஸ்வாமிகளை நேரில் தரிசனம் செய்துகொண்டு யாத்திரையின்போது தாம் பெற்ற அனுபவங்களை எல்லாம் ஸ்வாமிகளிடம் தெரிவித்துக் கொண்டார். அவரது ஆழ்ந்த பக்தியையும், விடாமுயற்சியையும் ஸ்வாமிகள் மிகவும் பாராட்டி அவரை அனுக்ரகித்தார்கள். அனந்தகிருஷ்ண சர்மா பின்னர் மணம் புரிந்துகொண்டு மக்கள் பேற்றைப் பெற்று மடத்திலேயே ஊழியம் செய்து வந்தார்.

**கங்காதீரவாசிகளின் பிரார்த்தனே**

அனந்தகிருஷ்ண சர்மா சென்ற மார்க்கத்திலேயே கங்கா யாத்திரையை நடத்துவதெனத் தீர்மானித்தவர்களாய், ஸ்வாமிகள் **குன்னக்குடி ஸ்வாமிநாத ஐயர்** என்பவரை ஆங்காங்குத் தங்குவதற்கு இடவசதிகளேக் கவனித்து வரும்படி 1932-ஆவது வருட இறுதியில் வட இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார்கள். அவர் மூலம் ஸ்வாமிகள் கங்கா யாத்திரையாக வருவதை அறிந்த கங்காதீர வாசிகள் மிகவும் மகிழ்ச்சியுற்றவர்களாய் ஸ்வாமிகளின் வரவை வெகு சீக்கிரமாக எதிர்பார்ப்பதாகவும், ஸ்வாமிகளுக்கும் அவர்களின் பரிவாரங்களுக்கும் வேண்டிய வசதிகளேயெல்லாம் செய்து கொடுக்க அவர்கள் மிகுந்த ஆவலுடன் இருப்பதாகவும், ஸ்வாமிகளுக்கு விக்ஞாபனப் பத்திரிகைகள் எழுதி, ஸ்வாமிநாத ஐயர் மூலம் அனுப்பி வைத்தார்கள். அவ்விதம் பத்திரிகைகள் அனுப்பியவர்களில் முதன்மையான சிலரின் பெயர்கள் கீழே குறிப்பிடப் பட்டிருக்கின்றன:

1. அலாகாபாத் சர்வகலாசாலே உப அத்யக்ஷகர் மகாமகோபாத்யாய கங்காநாத் ஜா.
2. அலாகாபாத் ஸ்ரீ சங்கர பந்த் தர்மாதிகாரி.
3. அலாகாபாத் ஸ்ரீ கமலாகாந்த் மிச்ர.
4. காசி ஸ்ரீ விச்வநாத ஆலயத்தின் தலேவர்.
5. காசி தாரகா மடத்தின் நிர்வாகிகள்.
6. காசி பஞ்ச கங்கா மடத்தின் நிர்வாகிகள்.
7. காசி சிருங்கேரி மடத்தின் நிர்வாகிகள்.
8. காசி ஸ்ரீ ஸ்வாமி பாகவதானந்த மண்டலேச்வரர்.
9. காசி ஸ்ரீ ஸ்வாமி ஸ்வரூபானந்த மண்டலேச்வரர்.
10. காசி பாரததர்ம மகா மண்டலத்தின் பிரதான பண்டிதர் மகாமகோபாத்யாய ஸ்ரீ ஆனந்த சரண தர்க்க சூடாமணி.
11. காசி தர்ம சாஸ்திர பண்டிதர் ஸ்ரீவித்யாதர கௌடா.
12. கயா ஸ்ரீ காசிநாத் ஸிம்ஹா.
13. கயா ஸ்ரீ கோவர்த்தன மிச்ரா.

குன்னக்குடி ஸ்வாமிநாத ஐயர் ஸ்வாமிகளின் வட இந்திய யாத்திரையை முன்னிட்டு ஆங்காங்குப் பரிவாரங்கள் தங்குவதற்குரிய இடவசதிகளேக் கவனித்துக்கொண்டு நூற்றுக்கணக்கான பக்தர்களின் விக்ஞாபன பத்திரிகைகளுடன் 23-4-1933-ஆம் தேதியில், ஸ்வாமிகள் அப்பொழுது விஜயம் செய்திருந்த தஞ்சை ஜில்லா குற்றுலத்திற்கடுத்த **கோமல்** என்னும் கிராமத்திற்கு வந்துசேர்ந்தார். அவரிடம் ஸ்வாமிகள் பாதையின் சௌகரியங்களே யெல்லாம் விசாரித்துவிட்டு, அடுத்த சாதுர்மாஸம் முடிந்தவுடன்

யாத்திரை தொடங்கவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டார்கள். அதை ஒட்டித் தஞ்சையில் நடந்த நவராத்திரி விழாவின் முடிவு நாளாகிய விஜயதசமி அன்று ஸ்வாமிகளின் கங்கா யாத்திரை தொடங்கிற்று.

**ஸ்வாமிகளின் யாத்திரைக்கு அரசாங்கத்தினரின் ஏற்பாடுகள்**

ஔரங்கசீப் காலந்தொட்டு பின் வந்த நவாப்கள் காலங்களிலும் பீடத்தின் அதிபர்கள் யாத்திரை செய்யும்பொழுதெல்லாம் சுங்கச் சாவடிகளில் எவ்விதச் சுங்கமும் வசூலிக்கக்கூடாதென்றும் சர்க்கார் அதிகாரிகளும் பொது மக்களும் ஸ்வாமிகளின் பிரயாணத்திற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்துகொடுக்க வேண்டுமென்றும் அவ்வப்போது விளங்கிய அரசாங்கத்தார் உத்தரவு பிறப்பித்துள்ளார்கள். பின்னர் வந்த இங்கிலீஷ் ஈஸ்ட் இந்தியக் கம்பெனியாரும் இவ்வித உத்தரவுகளை ஊர்ஜிதம் செய்து, 18-4-1792-இல் ஓர் உத்தரவு பிறப்பித்துள்ளார்கள். அக்காலத்தில் ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஆசார்ய ஸ்வாமிகள் 500 சிப்பந்திகளும், 25 மாட்டு வண்டிகளும், 20 குதிரைகளும் 5, ஒட்டகங்களும், 3 யானைகளும், 10 பல்லக்குகளும் ஆகிய பரிவாரங்களுடன் காசிக்குச் சென்று வந்திருப்பது அவ்வுத்தரவுகளிலிருந்து வெளியாகிறது.

நம் ஸ்வாமிகள் திருவனந்தபுரம், கொச்சி, புதுக்கோட்டை முதலிய சம்ஸ்தானங்களில் விஜயம்செய்த பொழுதும், அந்த அந்த அரசாங்கங்கள் மடத்தின் கால்நடைகளுக்கும் வண்டிகளுக்கும் பாதைகளில் சுங்கம் வசூலிப்பதை விலக்கியதுடன், சர்க்கார் கட்டிடங்களில் ஸ்வாமிகள் தங்குவதற்கு வசதியளிக்கவும், போலீஸ், ரெவின்யூ அதிகாரிகள் மூலம் மடத்திற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுக்கவும் உத்தரவிட்டிருந்தனர்.

ஸ்வாமிகளின் வடஇந்திய யாத்திரையின் போது சென்னை சர்க்கார் (G. O. No. MS. 612 Public Police Department d/26-11-1933) உத்தரவு மூலம் ஸ்வாமிகள் யாத்திரை செய்ய உத்தேசிக்கும் மற்ற மாகாணங்களுக்கும் சுதேச சம்ஸ்தானங்களுக்கும் ஸ்வாமிகளின் யாத்திரைக்கு வேண்டிய வசதிகளைச் சர்க்கார் தம் சிப்பந்திகள் மூலம் செய்துகொடுக்க வேண்டுமென ஓர் வேண்டுகோளை விடுத்தனர். அதன்படி ஸ்வாமிகளுக்கு ஐதராபாத் ராஜ்யம், மத்யமாகாணம், ஐக்ய மாகாணம், பிகார் மாகாணம், ஒரிஸா மாகாணம், வங்காளம், கிழக்கு சம்ஸ்தானங்களைச் சேர்ந்த ராஜ்யங்கள் இவைகளின் அதிகாரிகள் ஸ்வாமிகளின் யாத்திரைக்கு எல்லா வசதிகளையும் அளித்தனர்.

**ராயல்சீமை வழியாக யாத்திரை தொடக்கம்**

தஞ்சையிலிருந்து 1933-ஆவது வருடம் செப்டம்பர் மாதம் இரண்டாவது வாரத்தில் புறப்பட்டு, நாள் ஒன்றுக்குச் சுமார் இருபது மைல் வீதம் பிரயாணம் செய்து, ஸ்வாமிகள் **திருவண்ணுமலை, ஆரணி, வேலூர், சித்தூர், பலமனேரு** மார்க்கமாக **மதனப்பள்ளியை** அடைந்தார்கள். அவ்வூர் மக்கள் ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பளித்தார்கள். அப்பொழுது மதனபள்ளிக்கு அடுத்த **சின்னதிப்பசமுத்திரம்** என்னும் சிற்றூரில் ஒரு மாத காலம் அவர்கள் தங்கியிருந்தார்கள். பின்னர் **கதிரி** என்னுமிடத்தில் **ஸ்ரீ நரசிம்ஹமூர்த்தியைத்** தரிசித்துக் கொண்டார்கள். அவ்விடமிருந்து **தருமாபுரம், அனந்தப்பூர், தோன், துரோணுசலம்,** இவ்வூர்களின் மார்க்கமாகக் **கர்னூலை** அடைந்து, அவ்விடம் சுமார் ஒரு வாரம் முகாம் செய்திருந்தார்கள். ஸ்வாமிகள் முகாம் செய்திருந்த இடமெல்லாம் ஆயிரக்கணக்கான மக்கள் ஸ்வாமிகளை உபசரித்து அவர்கள் செய்துவரும் சந்திரமௌளீச்வரர் பூஜையைத் தரிசித்து வந்தார்கள்.

**ஸ்ரீசைல யாத்திரை**

श्रीशैल श्रृंगे विबुधाति संगे तुलाद्रितुंगेपि मुदावसंतम् ।
तमर्जुनं मल्लिक पूर्वमेकम् नमामि संसार समुद्रसेतुम् ॥

தக்ஷிணகைலாயம் எனக் கருதப்படும் **ஸ்ரீசைலம்** நமது பாரத நாட்டிலுள்ள மிகவும் புனிதமான தலங்களில் ஒன்ருகும். ஸ்காந்த புராணத்திலும், மகா பாரதத்திலும், இந்தியாவின் ***பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களைப்** பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவைகளில் ஸ்ரீசைலத்திலுள்ள **மல்லிகார்ஜுனர்** எனப் பெயர் பெற்று விளங்கும் ஜோதிர்லிங்கமும் ஒன்ருகும். இந்த க்ஷேத்திரத்தின் தல விருக்ஷம் **அர்ஜுனம்** என்னும் மருத மரமாகும். மருத மரத்தைத் தலவிருக்ஷமாகக் கொண்ட மேலும் இரண்டுத் தலங்கள் நம் தமிழ் நாட்டில் உள்ளன. அவைகளில் ஒன்று மத்தியார்ஜுனம் எனக் கூறப்படும் திருவிடைமருதூர் மற்ருென்று திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள **புடார்ஜுனம்** என்னும் தலம். ஸ்ரீசைலத்தில் அமைந்துள்ள அம்பிகைக்குப் **பிரமராம்பிகை** என்பது பெயர். பிரமரம் என்னும் சொல்

* 12 ஜோதிர்லிங்கங்கள் :—(1) ஸோமநாதர் (2) வைத்யநாதர் (3) நாகநாதர் (4) விசுவநாதர் (5) ராமநாதர் (6) ஓங்காரேசுவரர் (7) திரயம்பகேசுவரர் (8) கேதாரேசுவரர் (9) க்ருஷ்ணேசுவரர் (10) பீமேசுவரர் (11) மல்லிகார்ஜுனர் (12) மகாகாளர்.

வண்டைக் குறிப்பதாகும். மல்லிகையின் பெயரை ஈசன் இங்கு பெற்றிருப்பதால், மல்லிகை மலரை அம்பிகையாகிய வண்டு மொய்க்கும் தன்மையை இங்குக் குறிப்பதாக உணரலாம். மேலும் இத்தலம் தேவி பாகவதத்தில் கூறப்பட்டுள்ள **பதினெட்டுச் சக்தி பீடங்களில்** ஒன்ருகும். இத்தலத்தை அடைய ஆந்திர நாட்டின் முதல் தலைநகராயிருந்த **கர்னூலிலிருந்து** 100 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **பெத்தசெருவு** என்னும் இடம் வரை இரு புறமும் காடுகள் அமைந்த சாலை வழியாக மோட்டாரில் சென்று, அவ்விடமிருந்து 18 கிலோ மீட்டர் மலைமீது நடந்தே செல்ல வேண்டும்.* கடல் மட்டத்திற்கு 450 மீட்டர் உயரமுள்ளதாக அமைந்துள்ள ஸ்ரீசைல மலைமீது ஏறுவது மிகவும் கடினமான காரியமாகும். நல்ல மனோதிடமும், கடவுள் பக்தியும் அமைந்தவர்கள் தாம் இத்தலத்திற்குச் சென்றுவர முடியும். வருடத்திற்கு ஒருமுறை சிவராத்திரி சமயத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் அங்குச் சென்று மல்லிகார்ஜுனரைத் தரிசித்து வருகின்றனர். மகர சங்கராந்தி அன்றும் யுகாதி எனக் கூறப்படும் சாந்திரமான வருடப்பிறப்பன்றும் சிலர் அங்குச் சென்று வருவதுண்டு. **மார்க்காபுரிலிருந்தும், நந்தியாலிலிருந்தும் பெத்தசெருவுக்குப்** போகப் பாதைகள் அமைந்துள்ளன. மேலே குறிப்பிட்டுள்ள விசேஷ நாட்களைத் தவிர மற்ற நாட்களில் அங்கு யாத்திரிகர் எவரும் செல்வதில்லை. ஆனால் இப்போது வருட முழுவதும் சௌகரியமாக யாத்திரிகர்கள் ஸ்வாமி தரிசனம் செய்து கொள்ளலாம்.

ஆதிசங்கரர் பாரதபூமியைச் சுற்றி வந்தபொழுது ஸ்ரீ சைலத்தை அடைந்து அங்கு அமைந்துள்ள மல்லிகார்ஜுன மகா லிங்கத்தைத் தரிசித்தார்கள். இதற்குச் சான்ருக ஆதிசங்கரர் அருளிய சிவானந்தலஹரி என்னும் தோத்திரத்தில் ஓர் சுலோகத்தைக் கூறலாம்.

संध्यारम्भविजृम्भितं श्रुतिशिरस्थानान्तराधिष्ठितं
सप्रेमभ्रमराभिराममसकृत् सद्वासना शोभितम् ।
भोगीन्द्राभरणं समस्तसुमनःपूज्यं गुणाविष्कृतं
सेवे श्री गिरिमल्लिकार्जुनमहालिङ्गं शिवालिंगितम् ॥

இதன் பொருள் :—'சந்தியாகாலமென்னும் பிரதோஷ காலத்தில் ஆனந்த தாண்டவம் ஆடி புஷ்டம்போல் மலர்கின்றவரும்,

* இப்போது ஸ்ரீசைலத்திற்கு பஸ் அல்லது கார் மூலம் செல்லலாம். மலைமீது நல்ல ரோடு அமைத்துள்ளார்கள்.

வேதங்களுக்கெல்லாம் சிகரமாக விளங்கும் உபநிடதங்களில் தங்கியிருப்பவரும், தன்பால் எப்பொழுதும் ஆசைகொண்டு விளங்கும் இனிமையான வண்டின் பெயரைப் பூண்ட பிரமராம்பிகையினால் அழகுபடுத்தப்பட்டவரும், பாம்பை ஆபரணமாகப் பூண்டவரும், எப்பொழுதும் ஸத்வ குணத்துடன் விளங்கி எல்லாத் தேவர்களாலும் பூஜிக்கத் தக்கவரும், சிவா என்னும் பெயருடன் விளங்கும் அம்பிகையினால் அணையப்பெற்றவருமான ஸ்ரீசைலத்தில் விளங்கும் மல்லிகார்ஜுன மகாலிங்கத்தை வணங்குகின்றேன்.'

இன்னும் பல விசேஷப் பொருள்களையும் இந்தச் சுலோகத்திற்கு உரையாசிரியர்கள் கூறியுள்ளார்கள்.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள சிவானந்தலஹரியின் சுலோகம் நம் ஸ்வாமிகளின் மனஸிற்கு மிகவும் பிடித்தமான சுலோகங்களில் ஒன்றாகும். அதை அவர்கள் அடிக்கடி தமது இனிமையான குரலால் பாடி ஈசனைத் துதி செய்வதைப் பக்தர்கள் பலர் கேட்டிருக்கின்றனர். மசூலிப்பட்டினத்திலுள்ள ஆந்திர அறநிலையப் பாதுகாப்பு இலாகா டெபுடி கமிஷனர் **ஸ்ரீ ஸி. வி. எல். வரப்பிரசாத ராவ்** என்பவர் இந்தச் சுலோகத்தை ஸ்வாமிகளின் திருவாக்கிலிருந்து கேட்டதின் விளைவாகவே, ஸ்ரீசைலம் சென்று வர வேண்டுமென்றும், மல்லிகார்ஜுனரைத் தரிசிக்க வேண்டுமென்றும் தமக்கு அவா ஏற்பட்டதென ஹிந்துப் பத்திரிகையின் 7-2-1954 ஞாயிறு இதழில் அவர் ஸ்ரீசைலத்தைப் பற்றி எழுதியுள்ள கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

இங்குத் தேவியின் ஆலயம் மல்லிகார்ஜுன ஆலயத்தை ஒட்டித் தனிமையான ஒரு பிராகாரத்தில் அமைந்துள்ளது. இத்தலத்தின் புண்ணிய தீர்த்தம் **பாதாளகங்கை** என்ற பெயர் பெற்று விளங்குகிறது. இதற்குக் **கிருஷ்ணவேணி** யென்று மற்றொரு பெயருமுண்டு. இந்த நீர் நிலையை அடைவதற்கு மல்லிகார்ஜுன ஆலயத்திலிருந்து 900 படிகள் இறங்கி, மூன்று கிலோ மீட்டர் தூரம் நடந்துசெல்லவேண்டும்.* வேங்கட மலையில் ஆகாய கங்கையும், இத்தலத்தில் பாதாள கங்கையும் மிகவும் புனித தீர்த்தங்களாகக் கருதப்பட்டு வருகின்றன. பக்தர்கள் இவைகளில் நீராடித் தங்களைப் புனிதமாக்கிக் கொள்வர். திருப்பருப்பதம் என்னும் இத்தலத்தில் அப்பர், சுந்தரர், சம்பந்தர் இம் மூவரும் ஈசனைக் குறித்துப் பாடியுள்ளார்கள். இத்தலத்திற்

* இப்போது நல்ல ரஸ்தாமூலம் பாதாள கங்கைக்கு காரில் சென்று சௌகரியமாக ஸ்நானம் செய்யலாம்.

கருகில் நந்தி தேவர் மலை உருவமாக அமைந்துள்ளார் எனக் கூறப் படுகிறது.

ஸ்வாமிகள் கர்னூலில் முகாம் செய்திருந்தபொழுது ஸ்ரீசைல யாத்திரை சென்று வரவேண்டுமெனக் கருதி அத்தலத்திற்குச் செல்லும் வழியைப்பற்றி அவ்வூர் மக்களிடம் வினவினார்கள். அப்பொழுது அவ்வூர்வாசிகள், சிவராத்திரி முதலான விசேஷ நாட்களில் மாத்திரமே அங்குப் பயமின்றி சென்று வரலா மென்றும், அடுத்த மாதத்தில் சிவராத்திரி வருவதால் அப் பொழுது சௌகரியமாகப் போய்வரலாமென்றும் கூறினர். ஆனால் ஸ்வாமிகளோ கங்கா யாத்திரையைச் சீக்கிரமாக முடிக்க எண்ணம் கொண்டிருந்ததால், ஸ்ரீசைலத்திற்கு விரைவில் சென்று வர ஓர் மார்க்கத்தைத் தாமே ஆலோசித்து, அதன்படி கர்னூல்-கடப்பை கால்வாய் வழியாகப் படகில் போய் வருவதெனத் தீர்மானித்தார்கள். மேலும் ஜனக் கூட்டம் இல்லாத சமயத்தில் ஸ்ரீ மல்லிகார்ஜுனரைத் தரிசிக்க ஸ்வாமிகள் ஆவல்கொண் டார்கள் போலும். அதன்படியே, ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திரமௌளீச் வரர் பூஜைக்கு வேண்டிய சாமான்களையும், சிறு பரிஜனக் கூட்டத்தையும் உடன் வரப் பணித்து, 24-1-1934-ஆம் தேதியில் கர்னூலிலிருந்து படகில் பிரயாணமானார்கள். 25-ஆம் தேதி **பகடிபாலாவிலும்,** 26-ஆம் தேதி **ஆத்மகூரிலும்,** 27-ஆம் தேதி **நாகலூட்டியிலும்,** 28-ஆம் தேதி **பெத்தசெருவிலும்** தங்கி, அன்றாட பூஜைகளை ஆங்காங்கே முடித்துக் கொண்டு பெத்த செருவிலிருந்து கால்நடையாக மலைமீது ஏறி, **சுக்லபர்வதம்** எனக் கூறப்படும் மிகக் கடுமையான ஏற்றத்தைக் கடந்து, 29-ஆம் தேதி, ஸ்ரீ மல்லிகார்ஜுனரையும் ஸ்ரீ பிரமராம்பிகையையும் தரி சித்துக் கொண்டார்கள். ஸ்வாமிகளின் வரவை அறிந்த தேவஸ் தான அதிகாரிகள் குறுகிய அந்தக் காலத்திற்குள் ஸ்வாமிகள் அவ்விடம் தங்குவதற்கென எவ்வளவு வசதி அளிக்க முடியுமோ அவ்வசதிகளை யெல்லாம் முன்கூட்டியே செய்து வைத்திருந்தனர். ஸ்வாமிகள் வெகு நேரம் ஈசன் சந்நிதியிலும், அம்பிகை சந்நிதி யிலும் நின்று ஆதிசங்கரர் அருளின சிவானந்தலஹரியிலிருந்தும் சௌந்தர்யலஹரியிலிருந்தும் பல சுலோகங்களைப் பாடி மெய்ம் மறந்து துதி செய்தார்கள். இதைக் கண்ணுற்ற பக்தர்கள் பரவச மடைந்தனர். அதற்கடுத்த 30-ஆம் தேதி அன்று சந்திரகிரகணம் நிகழ்ந்தபடியால், கிரகண ஸ்நானத்திற்கென ஸ்வாமிகள் பாதாள கங்கைக்குச் சென்றார்கள். அவ்விடத்தை அடைவதற்கு 900 படிகள் இறங்கிச் செல்லவேண்டுமென முந்தியே கூறப்பட் டுள்ளது. அன்றையக் கிரகணம் இரவு 9-30 மணிக்குப் பிடித்து

10-45க்கு விட்டது. மலைமீது அமைந்துள்ள அடர்ந்த கானகத்தில் ஓங்கி வளர்ந்திருந்த மரக்கூட்டம் நிலவின் ஒளியைக் கூடக் கண்களுக்குப் புலனாகாதவாறு செய்துவிட்டது. பாதாள கங்கையின் கரையோரமாக மரக்கிளைகளையும் காட்டுத் தழைகளையும் கொண்டு ஓர் பர்ணசாலை அமைக்கப்பெற்றது. அந்தப் பர்ணசாலையில்தான் அன்றிரவு ஸ்வாமிகளின் ஸ்ரீ சந்திரமௌளீச்வர பூஜை நடைபெற்றது. பெரிய தீவட்டங்களைச் சிப்பந்திகள் இரவு முழுவதும் எரியவிட்டனர். குளிர் நீங்குவதற்குக் காட்டுத் தழைகளையும், மரச்சுள்ளிகளையும் சேகரித்து நெருப்பு ஜ்வாலையை அவர்கள் உண்டாக்கினர். அந்த அக்னி ஜ்வாலையைக் கண்டதனால், துஷ்ட மிருகங்கள் எதுவும் கிட்ட அணுகவில்லை. அவ்விதம் அன்றிரவை ஸ்வாமிகள் பாதாளகங்கைக் கரையில் கழித்தார்கள். மறுநாள் காலையில் புறப்பட்டு 900 படிகள் மேலே ஏறி, மறுபடியும் ஸ்ரீசைலத்தை அடைந்து, ஸ்ரீ மல்லிகார்ஜுனரை மறுமுறை தரிசனம் செய்துகொண்டு, அன்றும் மறுநாளும் ஆலயத்திலேயே தங்கியிருந்து பின்னர் பெத்தசெருவை அடைந்து அவ்விடமிருந்து படகிலேயே பிரயாணத்தைத் தொடங்கி 6–2–1934–ஆம் தேதி கர்னூலுக்கு விஜயமானார்கள். 1934-ஆவது வருடம் பிப்ரவரி மாதம் 12-ஆம் தேதி சிவராத்திரியன்று ஸ்வாமிகள் அலம்புரி யென்னும் தலத்தில் துங்கபத்ரா நதியில் ஸ்நானம் செய்து அவ்விடம் ஸ்ரீ பாலபிரம்மேச்வரரைத் தரிசனம் செய்துகொண்டு ஸ்ரீ சந்திரமௌளீச்வரருக்கு இரவு நான்கு கால பூஜையையும் அவ்விடத்திலேயே நடத்தினார்கள். அம்மாதம் 21-ஆம் தேதி வரையில் ஸ்வாமிகள் பக்தர்களின் வேண்டுகோளின்படி அந்தப் பக்கத்திலுள்ள சில கிராமங்களுக்கு விஜயமாகிப் பின்னர் ஐதராபாத் சம்ஸ்தானத்திற்கு விஜயமானார்கள்.

### செஞ்சுக்கள் என்னும் மலைஜாதியினர் செய்த உதவி

ஸ்வாமிகள் ஸ்ரீ சைலத்திற்கு விஜயமாவதைத் தேவஸ்தான அதிகாரிகள் மூலம் அறிந்த **செஞ்சுக்கள்** எனக் கூறப்படும் ஆதிவாசிகளான மலைஜாதியினர் (சுமார் 100 பேர்களடங்கிய ஓர் கோஷ்டியினர்) நாகலூட்டியில் ஸ்வாமிகளைத் தரிசித்து, அவர்களின் யாத்திரைக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுப்பதாக வாக்களித்தனர். இந்த மலைஜாதியினர் தேர்ச்சி பெற்ற வில்லாளிகள். காடுகளிலுள்ள விலங்குகளைக் கொன்றும், மலைகளிலுள்ள தேனைச் சேகரித்தும், மற்றும் பழம்; கிழங்கு, காய்கள் இவைகளினாலும் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்றனர். நல்ல உடல் வலிமை படைத்த அந்தப் பழங்குடி மக்கள்

வெளியார்களை சாதாரண நாட்களில் அப்பிரதேசத்தினுள் நுழைய அனுமதிப்பதில்லை. வில்லைக் கொண்டு பிறரை எதிர்ப் பார்கள். அவர்கள் பேசும் பாஷையும் தனியானது. ஸ்வாமி களின் கோஷ்டியைத் தங்கள் பகைவர்களென முதலில் எண்ணிய அவர்கள் பின்னர் உண்மையறிந்து அந்தக் கோஷ்டிக்கு வனவிலங்கு களால் எவ்வித அபாயமும் நேராத வண்ணம் பிரயாணம் முழு வதும் அவர்கள் காவல் காத்து வந்ததுடன், சாமான்கள் பல வற்றை மலைமீது ஏற்றிச் செல்லவும் அவர்கள் மிகுந்த உதவி புரிந்தனர். ஸ்வாமிகள் அவர்களுக்குப் பணத்தைக் கொண்டு வெகுமதி அளிக்க உத்திரவிட்டபொழுது, அவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டனர். மதிப்பிற்குரிய பெரியவர்கள் அப்பிரதேசத் திற்கு விஜயம் செய்யும் பொழுது அவர்களின் முன்னிலையில் நடனமாடி அவர்களைக் களிப்புறச் செய்வதே தங்களது வழக்கம் என்றும், அந்த நடனத்தை ஸ்வாமிகள் பார்வையிட்டு அவர் களுக்கு ஆசி கூற வேண்டுமென்றும், அதுவே தங்களுக்கு மகிழ்ச்சி அளிக்குமென்றும் அவர்கள் கூறினார்கள். மடத்தின் அதிகாரிகள் இதை விரும்பவில்லை. ஆனாலும் எவரையும் மகிழ்விக்கச் செய்யும் கருணை உள்ளம் படைத்த ஸ்வாமிகளோ அவர்களது நடனத் தையும் பார்வையிட அன்புடன் இசைந்தார்கள். செஞ்சுக்களும் அது கேட்டு மகிழ்ந்து, சிறிதுநேரம் அவர்கள் தங்கள் நடனங்களை ஆடிக் காட்டிட, அவற்றைக் கண்டு ஸ்வாமிகள் மகிழ்ந்தார்கள். சிறிய பெண் குழந்தைகளும், அந்த நடனத்தில் கலந்துகொண்டு அவர்களது பழமையான முறைப்படி வெகு அழகாக நடனம் ஆடினர். ஸ்வாமிகள் அவர்கள் யாவருக்கும் நற்சுவை உண்டி அளிக்கச் செய்து, விபூதிப் பிரசாதம் கொடுத்து, அவர்கள் எல்லோரையும் ஆசிர்வதித்தார்கள். அப்பொழுது அச் சமூகத் தினர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

### ஐதராபாத் சம்ஸ்தான மக்கள் அளித்த விசேஷ வரவேற்பும் அரசாங்க மரியாதையும்

ஸ்வாமிகள் கர்னூலில் துங்கபத்ரா நதியைக் கடந்து, அதன் வடகரையிலுள்ள ஐதராபாத் சம்ஸ்தானம் **ஜல்லாபுரம், அனந்த புரம்** இவைகளின் வழியாக **கத்துவால்** என்னும் பட்டணத்தை அடைந்தார்கள். அக்காலத்தில் கத்துவால் ஐதராபாத் சம்ஸ் தானத்திற்குள்ளடங்கிய ஓர் உப சம்ஸ்தானமாக இருந்தது. அதை ஓர் ராணி ஆண்டு வந்தார். கத்துவால் மகாராணியால் ஸ்வாமிகள் விசேஷ மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டு, அவ்

விடம் நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள். அப்பொழுது அச் சம்ஸ்தான கிராம மக்கள் கத்துவாலில் ஆயிரக்கணக்காகக் கூடி ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டனர். அங்கிருந்து **கிருஷ்ண அக்ரகாரம், ஆத்மகூர், கொத்த கோட்டா, சின்னஜானம் பேட்டா, ஜட்ஜேர்லா, பெத்தஜானம் பேட்டா** இவைகளின் மார்க்கமாக ஸ்வாமிகள் 12-3-1934-ஆம் தேதியன்று **ஐதராபாத்** நகரத்திற்கு விஜயமானார்கள்.

ஸ்வாமிகள் ஐதராபாத்திற்கு விஜயமாகும் முன்னரே அந் நகர மக்கள் **திவான் பகாதுர் எஸ். ஆராவமுத ஐயங்கார்** தலைமையில் ஓர் வரவேற்புக் கமிட்டி அமைத்து, ஸ்வாமிகளின் ஐதராபாத் விஜயத்தை மிகவும் வெற்றிகரமாக நடைபெறச் செய்யவேண்டிய எல்லா முன்னேற்பாடுகளையும் செய்திருந்தனர். ஸ்வாமிகள் அவ் விடம் விஜயம் செய்த 12-3-34-ஆம் தேதி அன்று மாலை 6 மணிக்கு நகர எல்லையில் நகரப் பிரமுகர்களான **ஸ்ரீ ராஜா ராய் ராய், வாமன் நாயக், ச்யாம் ராவ், துக்காராம், ரங்கதாம் நாட், என்ஜினீயர் நடராஜ ஐயர்,** மற்றும் பல்லாயிரக்கணக்கான மக்களும் கூடி ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து மிகவும் குதூகலமாக அவர்களை வரவேற்றார்கள். அவ்விடமிருந்து நைஜாம் சம்ஸ்தானத் துருப்புகளும் விருதுகளும் முன் செல்ல ஒரு பெரிய ஊர்வலம் புறப்பட்டு லால்தார்வாயா ரோடிலுள்ள, ராஜாராய்க்குச் சொந்தமான **லக்ஷ்மணேச்வரபாக்** என்னும் அரண்மனைக்குச் சென்றது. அவ்விடம் ஸ்வாமிகள் சிவிகையிலிருந்து இறங்கிச் சிம்மாசனத்தில் அமர்ந்தவுடன், யாவரும் ஸ்வாமிகளை வணங்கினர். நகரப் பிரமுகரான **வாமன் நாயக்** ஸ்வாமிகள் மேற்கொண்டுள்ள கங்கா யாத்திரையை விளக்கி, மார்க்கத்தில் ஸ்வாமிகள் தங்குவதற்குத் தகுந்த ஏற்பாடுகளை மக்கள் குறைவின்றி செய்துகொடுக்க வேண்டுமென்றும், ஐதராபாத் சம்ஸ்தான மக்கள் இவ் விஷயத்தில் முன்னேறி நிற்பார்கள் என்று தாம் நம்புவதாயும், மற்றும் ஸ்வாமிகளின் பெருமைகளைப் பற்றியும் எடுத்துக் கூறினர். 24-3-34-ஆம் தேதி வரை ஸ்வாமிகள் லக்ஷ்மணேச்வரபாக்கிலேயே தங்கியிருந்தார்கள். 25-ஆம் தேதி துளஜாபவனில் நகர மக்களின் பொது பிக்ஷையும், பாதபூஜையும் நடைபெற்றன. 27-ஆம் தேதி அட்வகேட் **கல்யாண ராம ஐயர்** வீட்டிலும், 28-ஆம் தேதி நைஜாம் காலேஜ் புரபொசர் **கிருஷ்ணமூர்த்தி ஐயர்** வீட்டிலும் ஸ்வாமிகள் தங்கியிருந்தார்கள். நைஜாம் சம்ஸ்தானத்தின் பிரதம மந்திரியாக இருந்த **மகாராஜா கிஷன் பிரசாத் பகாதுர்** அவர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி

அவரது அரண்மனையில் ஸ்வாமிகள் 29-ஆம் தேதி தங்கி பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை ஏற்றுக்கொண்டார்கள். பிரதம மந்திரிக்கு ஸ்வாமிகள் ஒரு விலை உயர்ந்த காஷ்மீர் சால்வை அணிவித்து அவரைக் கௌரவித்தார்கள். பின்னர் மார்ச் மாதம் 30-ஆம் தேதி முதல் ஏப்ரல் 16-ஆம் தேதி முடிய சூப்பிரன்டென்டிங் என்ஜினீயர் **எம். கோபால ஐயர்** ஜாகையில் ஸ்வாமிகள் தங்கியிருந்தார்கள். பிரதம மந்திரியின் அரண்மனையில், ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது சம்ஸ்தானத்தின் பிரதான உத்தியோகஸ்தர்களெல்லாரும் ஸ்வாமிகளுக்கு அறிமுகம் செய்விக்கப்பட்டனர். நிஜாமின் விருப்பத்திற்கிணங்க மடத்திற்கு ஏற்பட்ட ஒரு நாள் செலவை சம்ஸ்தான சர்க்காரே ஏற்றுக்கொண்டார்கள். இந்தத் தொகை தகுந்த அதிகாரிகள் மூலம் ஸ்வாமிகளுக்குக் காணிக்கையாகச் செலுத்தப்பட்டது. நைஜாம் சம்ஸ்தானத்தில் அந்நாளில் யானைகள் வைத்துக்கொள்ள சம்ஸ்தான அதிபதிகளைத் தவிர வேறெவருக்கும் உரிமையில்லை. இவ்விதியிலிருந்து மடத்திற்கு விலக்களித்து ஓர் உத்திரவையும் சர்க்கார் வெளியிட்டனர். ஸ்வாமிகள் ஐதராபாத்தில் தங்கியிருந்தபொழுது அரசகுடும்பத்தில் நிகழ்ந்த மரணத்தை ஒட்டிச் சில நாட்கள் துக்கம் கொண்டாடப்பட்டது. அவ்விதம் துக்கம் கொண்டாடும் நாட்களில் நகரத்தில் எவ்வித வாத்யமும், சங்கீதமும் நடைபெறக்கூடாதென்பது சர்க்கார் ஏற்படுத்தியிருந்த விதியாகும். அப்படியிருந்தும், ஸ்வாமிகளின் நித்ய பூஜைக்கு நாதஸ்வர வாத்யம் வாசிப்பதற்கு நைஜாம் இவ்விதிகளிலிருந்து விலக்களித்தார். இவ்விதம் பொதுமக்களும் அரசாங்கமும் ஸ்வாமிகளுக்குத் தகுந்தவாறு மரியாதை செலுத்தினார்கள்.

**ஐதராபாத்தில் சநாதன தர்ம சபை நிறுவியது**

ஸ்வாமிகள் ஐதராபாத்தில் தங்கியிருந்தபொழுது **காட்கில் ? மாதவராவ்** வீட்டில் **சநாதன தர்ம சபை** ஒன்று கூட்டப்பட்டது. அந்தச் சபைக்கு நம் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தார்கள். மகா பண்டிதர்களான நியாய, வேதாந்த பாஸ்கர பிரம்மஸ்ரீ **புலுசு அப்பண்ண சாஸ்திரிகளும், வனபர்த்தி சம்ஸ்தான வித்வான் உபய வேதாந்த நம்பாக்கம் ராகவாசாரியரும்,** மற்றும் வேலூரி **ரங்கதாமுலு** முதலான பல வித்வான்களும் வந்திருந்தனர். ஸ்வாமிகள் சபையைத் துவக்கி வைத்துப் பேசுகையில், சநாதனமான நமது மதத்தையும் தர்மத்தையும் காப்பதற்கு ஹிந்துவாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் தம்மாலான முயற்சியை எடுத்துக்கொள்ள

வேண்டுமென்றும் அவரவர்கள் தங்களது சுயதருமத்தைக் காத்துக்கொள்வதால் சநாதன தருமம் எப்பொழுதும் நிலைத்திருக்குமென்றும், தர்மத்தை விளக்கி எடுத்துரைக்க, தர்மசபைகள் ஆங்காங்கு நிறுவ வேண்டியது மிகவும் அவசியமென்றும், அந்தப் பணியில் வித்வான்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் முக்கியமாக இருக்க வேண்டுமென்றும், பொதுமக்கள் அவர்களுக்கு எல்லா உதவிகளையும் அளித்து அவர்கள் மூலம் நற்பயனை அடைய வேண்டுமென்றும் உபதேசித்தார்கள்.

பின்னர் **ஸ்ரீ அப்பண்ண சாஸ்திரிகள்** பேசுகையில் ஸ்வாமிகளை ஸ்ரீ ஆதிசங்கரரின் அவதாரமென்றே தாம் நம்புவதாகவும் அவர்களின் திருவாக்கிலிருந்து வரும் உபதேசங்களை எல்லாம் ஆதிபகவத் பாதரது உபதேசமாகவே மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கூறினார். **உபய. வே. ராகவாசாரியர்** ஸ்வாமிகளின் மேதா விலாஸத்தைக் கண்டு வியந்து ஈசுவர அம்சமாகவே ஸ்வாமிகளைத் தாம் காண்பதாயும் அவர்கள் விஜயத்தினால் உலகத்திற்கு எல்லா நன்மையும் ஏற்படுமென்றும் கூறினார். அன்று அங்குக் கூடியிருந்த நகரமக்களில் கீழேகண்டவர்கள் சபையின் அங்கத்தினர்களாகத் தேர்த்தெடுக்கப்பட்டனர்.

1. ராஜா பகாதுர் ஸ்ரீ வேங்கடராம ரெட்டி.
2. ராஜா ஸ்ரீ நரசிங்க ராவ்.
3. ராஜா ஸ்ரீ ச்யாம் ராவ்.
4. ஸ்ரீ ஸ்ரீபதி ராவ்.
5. ஸ்ரீ பாண்டுரங்க ராவ்.
6. ஸ்ரீ காட்கில் மாதவ ராவ்.
7. ஸ்ரீ விஷ்ணு தத்தாத்ரேய பிசோங்கர்.
8. ஸ்ரீ ராமசந்திர ராவ்.
9. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயர்.
10. ஸ்ரீ ரங்கசாமி ஐயர்.
11. ஸ்ரீ ச்யாமாபந்துல கோபால ராவ்.
12. ஸ்ரீ நடராஜ ஐயர்.
13. ஸ்ரீ கோபால ஐயர்.
14. ஸ்ரீ நாராயண ராவ்.
15. ஸ்ரீ டாக்டர் ஸ்ரீ டௌரே.
16. ஸ்ரீ கோவிந்த ராவ்.

ஸ்வாமிகளின் உபதேசப்படி சநாதன தர்மத்தைக் காப்பாற்றுவதில் தங்களாலான பணிகளைச் செய்வதாக அங்கத்தினர்கள் தெரிவித்துக்கொண்டனர். சபைக்கு ஓர் தனிக்

கட்டிடம் அவசியமெனச் சபையில் சிலர் ஆலோசனை கூற, அதற்காக ஒரு நிதி திரட்டத் தீர்மானிக்கப்பட்டது. இந்த நிதிக்கு முதன் முதலாக மடத்தின் நன்கொடையாக ரூபாய் 100 அளிக்க ஸ்வாமிகள் கட்டளையிட்டார்கள். இவ்விதம் ஐதராபாத்தில் சநாதன சபையின் ஆரம்ப விழா மிகவும் விமரிசையாக நடைபெற்றது. அந்த நகரத்தில் ஓர் **அத்வைத சபையும்** நிறுவ வேண்டுமென ஸ்வாமிகள் விருப்பம் கொண்டார்கள். இப்பணியை நிறைவேற்றும் பொறுப்பை **மகாதேவ தாமோதர காட்கில்** என்னும் பிரமுகரிடம் அவர்கள் ஒப்படைத்தார்கள்.

**ஐதராபாத்திலிருந்து புறப்பாடும் மக்களின் பக்தியும்**

நாற்பது நாட்களுக்கு மேல் ஐதராபாத்தில் தங்கியிருந்த ஸ்வாமிகள் கங்கா யாத்திரையின் பொருட்டு மேலும் தமது பிரயாணத்தைத் தொடங்க வேண்டி, 22-4-34ஆம் தேதி அந் நகரத்திலிருந்து புறப்பட முன்னேற்பாடுகளெல்லாம் செய்யப் பட்டன. ஜனசஞ்சாரமே இல்லாத பிரதேசங்களின் வழியாக அதற்குமேல் யாத்திரை செய்ய வேண்டி இருந்ததை உத்தேசித்து, தமது பரிவாரங்களின் ஒரு பாகத்தை ஐதராபாத்திலேயே விட்டு வைப்பதென ஸ்வாமிகள் தீர்மானித்தார்கள். இதன்படி மடத்தின் வண்டிகள், கால்நடைகள், சாமான்கள் முதலான சில வற்றை அங்கே விட்டு வைக்க, மடத்தின் சிஷ்யர்கள் சிலர் அவைகளை நன்குக் காப்பாற்றி, நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு ஸ்வாமிகள் ஆந்திர தேசத்திற்குத் திரும்பியபொழுது அவற்றை மடத்தில் ஒப்படைத்தார்கள்.

ஒரு மாதத்திற்கு மேல் ஸ்வாமிகளிடம் நெருங்கிப் பழகிய வர்களும் அவர்களின் பூஜையை அன்றாடம் தரிசித்தவர்களும், ஸ்வாமிகள் அவ்வப்பொழுது அருளிய உபதேச மொழிகளைக் கேட்டவர்களுமான அந்நகர மக்கள், 'இனித் தங்களுக்கு இத் தகைய வாய்ப்பு கிட்டுமோ?' என்ற மனக்கவலையுடன் ஆயிரக் கணக்கில் அன்று ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தார்கள். ஸ்வாமிகள் ஒவ்வொருவருடனும் இரண்டொரு வார்த்தைகள் பேசி, அவர்கள் யாவருக்கும் மந்திராக்ஷதை தந்து அவர்களை ஆசிர்வசித்தார்கள். நகரத்திலுள்ள கோடீசுவரர்களும், அரசாங்க உத்தியோகஸ்தர் களும், பல தொழில்களில் ஈடுபட்டவர்களும், ஏழை மக்களும் ஒருங்கே சேர்ந்து அன்று ஸ்வாமிகளை வழியனுப்பிய காட்சி என்றும் மறக்கமுடியாததாகும். **சிகந்தராபாத்திலுள்ள** பக்தர் களின் விருப்பப்படி ஸ்வாமிகள் அந்நகரத்தில் திவான் பகாதூர்

**ராமகோபால் சேட்டின்** பௌத்திரர் **ஸ்ரீ கிஷன் சேட்டின்** மாளிகையில் 23ஆம் தேதி தங்கி அவ்விடத்தில் பூஜையை முடித்துக் கொண்டு, நகரமக்களுக்குச் தரிசனம் கொடுத்துவிட்டு மறுநாள் அவ்விடமிருந்து புறப்பட்டார்கள்.

**நைஜாம் ராஜ்ய வடபகுதியில் யாத்திரை—கோதாவரி ஸ்நானம்**

1934-ஆவது வருடம் ஏப்ரல் மாதம் 24ஆம் தேதி ஸ்வாமிகள் சிகந்தராபாத்திலிருந்து புறப்பட்டு **மேச்சல், தூப்ரான், நரசிங்கி, பிக்னூர், காமரெட்டிபேட், இன்டல்வாய் மேட ராஜ்பல்லி** மார்க்கமாகக் கோதாவரிக் கரையிலுள்ள **சொண்ணு** என்னும் இடத்திற்கு மே மாதம் 5-ஆம் தேதி விஜயமானுர்கள். பம்பாய் மாகாணம் **திரயம்பகம்** என்னும் தலத்திற்கு அருகில், மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகின்ற இந்தக் கோதாவரி நதியானது, நைஜாம் சம்ஸ்தானத்தின் வழியாகப் பாய்ந்து பின்னர் ஆந்திர தேசத்தில் பிரவேசித்து, அந்நாட்டைச் செழிப்புறச் செய்யும் ஓர் புண்ணியநதியாகும். மிகப் புனிதமான இந்த நதியில் ஸ்வாமிகள் அன்று நீராடி, வேதமோதிய அந்தணர்களுக்குத் தானங்களை வழங்கினுர்கள். மறுநாள் ஸ்வாமிகள் அவ்விடமிருந்து பறப்பட்டு **நீர்மல், அதிலாபாத்,** மார்க்கமாக மத்திய மாகாணத்தைச் சார்ந்த **பெண்டல்வாடா** என்னும் இடத்திற்கு மே மாதம் 15-ஆம் தேதி விஜயமானுர்கள். இவ்விடங்களிலெல்லாம் மக்கள் ஸ்வாமிகளுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்துகொடுத்துப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை நடத்தி அதுவரை கண்டிராத ஸ்வாமிகளின் சந்திரமௌளீச்வரர் பூஜையைக் கண்டு மகிழ்ச்சியுற்றனர். ஒவ்வொரு ஊரிலும் ஸ்வாமிகளின் வரவை தகுந்த உற்சாகத்துடன் திருவிழாப் போல், அவ்வூர் மக்கள் கொண்டாடினுர்கள்.

**பெண்டல்வாடாவில் சங்கர ஜயந்தி**

மத்திய மாகாணத்தைச்* சேர்ந்த **பெண்டல்வாடா** என்னும் இடத்தில் ஸ்வாமிகள் மே மாதம் 15-ஆம் தேதி முதல் 22-ஆம் தேதி வரை தங்கியிருந்தார்கள். அவ்வருடத்து ஆதிசங்கரரின் அவதார மகோத்ஸவத்தை ஸ்வாமிகள் அந்த ஊரில் கொண்டாடினுர்கள். வேத பாராயணம், பிரம்மசூத்திர பாஷ்ய பாராயணம், கீதா பாஷ்ய பாராயணம், உபநிஷத் பாராயணம் இவைகளையெல்லாம் நன்கு கற்றறிந்த வித்வான்களைக் கொண்டு நான்கு நாட்கள்

* Central, Provinces and Berar மத்திய மகாணம் பீரார்) என்று அச்சமயம் அம்மகாணத்தின் பெயர்.

உற்சவம் நடைபெற்றது. ஆதிசங்கரரது மகிமையைப்பற்றியும், அவர்கள் பாரததேசத்தில் திக் விஜயம் செய்தது பற்றியும் ஸ்வாமிகளே உபந்யாஸம் செய்தார்கள். இந்தச் சங்கரஜயந்தி உத்ஸவமானது கோதாவரியின் உபநதியான **பெண்கங்கா** என்று கூறப்படும் நதியின் கரையில் நடைபெற்றது. அவ்விடத்தில் மகாராஷ்டிர தேசப் பண்டிதர் பலர் ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டார்கள். அதன் பிறகு, ஸ்வாமிகள் மேலும் யாத்திரையைத் தொடர்ந்து, **கரஞ்சி, மர்சாடா, வனி (வன்), வரோரா, தேமுட்டா** இவ்வூர்களின் வழியாக மே மாதம் 31ஆம் தேதி **நந்தூரி** என்னும் இடத்திற்கு விஜயமானார்கள்.

**நாகபுருக்கு விஜயம்**

*1934*-ஆவது வருடம் ஜூன் மாதம் 1ஆம் தேதி ஸ்வாமிகள் **ஜாம்** என்னும் ஊரில் தங்கி அவ்விடமிருந்து **காந்தினி, அசோசா, தங்கர்தாம்** முதலான ஊர்கள் மார்க்கமாக ஜூன் மாதம் 5-ஆம் தேதி **நாகபுருக்கு** விஜயமானார்கள். நாகபுரில் மகாராஷ்டிரர்கள், ஆந்திரர்கள், தமிழ்நாட்டு மக்கள் யாவரும் ஒருங்கே கூடி, ஸ்வாமிகளுக்கு அன்று ஒரு பெரிய வரவேற்பை அளித்தார்கள். நகரத்தின் முக்கிய வீதிகளின் வழியாகப் பெரியதொரு ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பல்லாயிரக்கணக்கான மக்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். சுமார் நான்கு மணிநேரம் ஊர்வலம் நடைபெற்றது. ஸ்வாமிகள் ஜாகையை அடைந்தவுடன் பொது மக்கள் சார்பாக ஸ்வாமிகளுக்கு வரவேற்பு பத்திரங்கள் வடமொழிலும், மகாராஷ்டிரத்திலும், தமிழிலும் வாசித்தளிக்கப்பட்டன. தேசியத் தலைவர்களும், சர்க்கார் உயர்தர உத்தியோகஸ்தர்களும் அங்கு ஏராளமாகக் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் மூன்று பாஷைகளிலும் பேசி, நமது சநாதன தர்மத்தைக் காப்பாற்ற யாவரும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், தர்மத்திலிருந்து வழுவி நடப்பதால் தான் மக்களுக்குப் பல துன்பங்கள் ஏற்படுகின்றனவென்றும் கூறினார்கள். ஸ்வாமிகள் ஜூன் மாதம் 18-ஆம் தேதி வரை நாகபுரில் **தந்தோலியில்** கவர்ன்மெண்ட் பென்ஷனர், **கிருஷ்ணய்யர்** ஜாகையில் தங்கியிருந்தார்கள். அவ்விடமிருக்கும் தமிழ் நாட்டு மக்கள் அப்பொழுது மிகுந்த ஒற்றுமையுடன் ஸ்வாமிகளின் விஜயத்திற்கு வேண்டிய பணிகளையெல்லாம் எவ்விதக் குறைபாடின்றிச் செய்தனர். மேலும் ஒவ்வொரு நாளும் பல சமூகத்தினர் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலானவைகளைச் செய்து வைத்தனர். **உயர் நீதிபதி பரண்டே** என்பவர் ஸ்வாமி

களைத் தரிசித்து ஸ்வாமிகளின் அருளைப் பெற்றார். மத்ய மாகாணத்தில் சிறந்த பண்டிதர்களாக விளங்கும், **ஸ்ரீ வர்ணேகர்** என்பவரும் **ஸ்ரீ தானே சாஸ்திரி** என்பவரும் ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களிடம் காஷ்மீர் சால்வை முதலிய பரிசுகளைப் பெற்றார்கள்.

**விந்திய மலைப்பிரதேசத்தின் வழியாக யாத்திரை**

1934-ஆவது வருடம் ஜூன் மாதம் 19-ஆம் தேதி ஸ்வாமிகள் நாகபுரிலிருந்து புறப்பட்டு **காம்டி, மன்ஸேர், தியோல்பார், காவாஸா, கோராய், ஶூர்க்கான்** மார்க்கமாகச் **சியோனி** என்னும் ஜில்லாத் தலைநகருக்கு விஜயமானார்கள். தியோல்பார் என்னும் இடமும் காவாஸா என்னும் இடமும் விந்திய மலைப் பிரதேசத்தைச் சார்ந்தவையாகும். அந்த வனப்பிரதேசத்தில் தண்ணீர் கிடைப்பதும் மிக அரிதாக இருந்தது. உஷ்ண நிலையும் ஜூன் மாதமாதலால், அவ்விடம் சுமார் 120 டிகிரி வரையில் எட்டியிருந்தது. ஸ்வாமிகளின் ஸ்நானத்திற்கும், பூஜைக்கும், கால் நடைகளுக்கும் நூற்றுக்கணக்கான சிப்பந்திகளுக்கும் தண்ணீர் வசதியும், உணவு வசதியும் செய்து கொடுப்பதற்கு மிகவும் கஷ்டப்பட வேண்டியாதாயிற்று. பகலெல்லாம் வனப்பிரதேசங்களில் கூடாரங்கள் அமைத்து, அவைகளில் தங்கியிருந்து இரவில் பெரிய தீவர்த்திகளின் உதவியுடன் பிரயாணத்தைத் தொடங்க வேண்டியதாக இருந்தது. பிரயாணம் எவ்வளவு கடுமையாக இருந்தபோதிலும், வழியில் எவ்வளவு இன்னல்கள்நேர்ந்த போதிலும், மிகவும் திடச்சித்தத்துடன் பசி, தாகம் இரண்டையும் மறந்தவர்களாகி ஆசார்யமூர்த்திகளின் சேவையேதங்களது லக்ஷியம் என மதித்து, எவ்வகையிலும் ஸ்வாமிகளின் கங்கா யாத்திரையை முடிக்கச் சேவை செய்யவேண்டுமெனத் தீர்மானித்துக்கொண்ட அந்தச் சிப்பந்திகளின் பெருமையையும், அவர்கள் ஆசார்யமூர்த்திகளின்பால் வைத்திருந்த பக்தியையும் ஈடற்றனவெனக் கொள்ள வேண்டும். அவர்களில் பலர் எவ்வித ஊதியமும் பெறாது, ஸ்வாமிகளுக்குக் கைங்கர்யம் செய்து வந்தனர்; பலர் வைதிக வாழ்க்கையில் நன்குத்தோய்ந்த ஆசாரசீலர்கள்; நாள் ஒன்றுக்குச் சுமார் 25 கிலோ மீட்டர் செல்லக்கூடிய யாத்திரையானது, அப்பிரதேசத்தில் சுமார் 40 கிலோ மீட்டருக்கு மேல் செல்ல வேண்டியதாயிற்று. பாதையில் தண்ணீர்த்தடங்கள் சில கிலோ மீட்டர்களுக்கு அப்பால் ஆங்காங்கு வெகு அரிதாகவே காணப்பட்டன. மத்திய மாகாண போலீஸ் இலாகா ஸ்வாமிகளின் மகாமுக்குச் சிறந்த வகையில் பந்தோபஸ்து அளித்து வந்ததால், அவர்கள்

மூலம் ஒருவாறு சில வசதிகள் செய்துகொள்ளச் சௌகரியமாக இருந்தது. ஸ்வாமிகளின் இந்த யாத்திரை முழுவதும் கால்நடையாகவே நிகழ்ந்தது என்பதை இங்குக் குறிப்பிடவேண்டியது அவசியமாகிறது. பல்லக்கைச் சுமப்பவர்களுக்கு ஓய்வு கொடுக்க வேண்டுமென்னும் கருணையுடன் பல சமயங்களில் ஸ்வாமிகள் பல தடவைகளில் சிவிகையில் ஏருது, வெகு தூரம் கால்நடையாகவே சென்ருர்கள்; அப்பொழுது பல்லக்குச் சுமப்பவர்களான போகிகள் எனக் கூறப்படும் சிப்பந்திகள் கண்ணீர் வடித்து, ஸ்வாமிகளைச் சிவிகையில் ஏறும்படி வேண்டிக்கொள்வார்கள். ஸ்வாமிகளின் பரிவாரங்களான யானை, குதிரைகள், மாடுகள் முதலிய வாயில்லா ஜீவன்களும் இக்கடுமையான பிரயாணத்தை மேற்கொண்டு நல்ல புண்ய பயனைப் பெற்றன. (அவைகளுக்கும் அடுத்த ஜன்மா உயர்ந்த ஜன்மாவாகக் கிடைக்குமென்று நாம் உறுதியாக நம்பலாம்.) சிப்பந்திகள் சம்பந்தப்பட்ட வரையில் பாஷை பிரச்சினை எளிதில் சமாளிக்க முடியாததாக இருந்தது. ஸ்வாமிகள் அந்தந்தப் பிரதேச பாஷைகளை எளிதில் பேசக்கூடியவர்களாதலால் அவசியம் நேர்ந்தபோதெல்லாம் அவர்களே அந்த அந்தப் பாஷையைப் பேச வேண்டியிருந்தது. (பாரத நாடு முழுவதும் ஒரு பொது பாஷை அமைய வேண்டுமெனத் தேசத் தலைவர்கள் கூறி வருவதை ஸ்வாமிகள் ஆதரித்துள்ளார்கள் என்பது இங்குக் குறிப்பிட வேண்டியதொன்று.)

மத்திய மாகாணத்தின் ஒரு ஜில்லா தலைநகராகிய **சியோனி** என்னும் ஊரில் பொது மக்கள் ஸ்வாமிகளுக்குத் தக்கதொரு வரவேற்பை அளித்து, ஸ்வாமிகள் தங்குவதற்கும் தகுந்த வசதிகள் கூடிய இடமொன்றையும் அமைத்திருந்தார்கள். ஒரு வாரமாவது அங்குத் தங்கிச் சிப்பந்திகள் ஓய்வு பெற்ற பிறகு, அவ்விடமிருந்து புறப்படலாமென அவ்வூர்வாசிகள் விண்ணப்பித்துக் கொண்டனர். ஆனுல் சாதுர்மாத சங்கல்பத்தை மேற்கொள்ள அது முதல் ஒரு மாத காலமே இருந்ததாலும், அந்தச்சங்கல்பத்தை **அலாகாபாத் என்னும் பிரயாகையில்** முடிப்பதென ஸ்வாமிகள் தீர்மானம் செய்துகொண்டுவிட்டபடியாலும், மேலும் தொடர்ந்து சுமார் 600 கிலோமீட்டர் யாத்திரை செல்லவேண்டியிருந்ததாலும், அவர்களது பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

### ஜபல்பூர் விஜயமும் நர்மதை ஸ்நானமும்

ஸ்வாமிகள் **சியோனியில்** ஒரு நாள் தங்கிவிட்டு அவ்விடமிருந்து **மண்டோல், சப்ரா, லக்னடோம், தூமா, சுக்ரீ, பர்க்கீ,** இவ்வூர்களின் மார்க்கமாக 1934–ஆவது வருடம் ஜுலை மாதம் 3-ஆம்

தேதி ஜபல்புரை அடைந்தார்கள். அவ்விடம் பெரியதொரு ரெயில்வே தொழிற்சாலை அமைந்துள்ளது. அத்தொழிற்சாலையில் சென்னை மாகாணவாசிகள் ஆயிரக்கணக்கில் வேலைபார்த்து வருகின்றனர். ஜுலை 3-ஆம் தேதி முதல் 6–ஆம் தேதி வரையில் ஸ்வாமிகள் நான்கு நாட்கள் ரெயில்வே காலனியில் தங்கியிருந்தார்கள். அங்கு வசித்து வந்த சென்னை வாசிகள் ஸ்வாமிகளின் பூஜைக்கு எல்லா வசதிகளையும் அமைத்துக் கொடுத்தனர். ஆயிரக்கணக்கில் மக்கள் அங்கு ஸ்வாமிகளின் பூஜையைத் தரிசித்துத் தீர்த்தம், அக்ஷதை இவைகளைப் பெற்றுப் போனார்கள். நான்கு நாட்கள் அங்குத் தங்கியதால் சிப்பந்திகளுக்கும் சிறிது ஓய்வு கிடைத்தது. ஸ்வாமிகள் ஜபல்புரில் தங்கியபொழுது (ஜுலை 4-ஆம் தேதி, புதன்கிழமை) நர்மதை நதி கௌரி கட்டத்தில் அவர்கள் விதிப்படி சங்கல்பம் செய்துகொண்டு நீராடினார்கள். (பாரத தேசத்தில் ஓடும் புண்ணிய நதிகளில் நர்மதையும் ஒன்றாகும். அப்புண்ய நதிகளாவன:—1. சிந்து, 2. கங்கை, 3. யமுனை, 4. ஸரஸ்வதி, 5. நர்மதை, 6. கோதாவரி. 7. காவிரி.)

**மைகார், ரீவா சமஸ்தானங்கள் வழியாக யாத்திரை**

ஸ்வாமிகள் ஜபல்புரிலிருந்து **பண்ராகர், கோசல்புர், சிஹோரா, சீம்னாபாத்** முதலான ஊர்களின் மார்க்கமாகக் **கத்தினி** என்னும் ஊரை ஜுலை மாதம் 10-ஆம் தேதி அடைந்தார்கள். அவ்விடமிருந்து அடுத்த நாள், **ஜுக்கேரி** என்னும் இடத்திற்கு விஜயமானார்கள். அந்த ஊர் **மைகார்** என்னும் சமஸ்தானத்தைச் சேர்ந்ததாகும். சமஸ்தான அதிகாரிகள், ஸ்வாமிகள் அவ்விடம் தங்குவதற்குத் தக்க வசதிகளைச் செய்திருந்தார்கள். அதனைக் கடந்து ஸ்வாமிகள் **ரீவா** சமஸ்தான எல்லைக்குள் விஜயம் செய்ய, அந்த எல்லைக்குள் ஜுலை 15-ஆம் தேதி முதல் 21-ஆம் தேதி வரையில் யாத்திரை நடைபெற்றது. சமஸ்தானப் போலீஸ் அதிகாரிகளும், ரெவின்யூ அதிகாரிகளும் ஆங்காங்கு ஸ்வாமிகளுக்குத் தக்க வசதிகளைச் செய்து கொடுத்தார்கள். ஸ்வாமிகளின் அடுத்த முகாம் **ஜாரி** என்னும் தலம். இது ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்ததாகும்.

**அலாகாபாத் விஜயம்,—இராமேசுவரத்தில் எடுத்த மணலைக் கங்கையில் கலந்தது**

1934-ஆவது வருடம் ஜுலை மாதம் 23-ஆம் தேதி திங்கட்கிழமை ஸ்வாமிகள் **அலாகாபாத்** என்னும் பிரயாகை க்ஷேத்திரத்

* **மைகார், ரீவா** சமஸ்தானங்கள் இப்போது மத்திய ப்ரதேசத்துடன் இணைந்துள்ளன.

திற்கு விஜய மானுர்கள். இந்நகரத்தின் எல்லையில் ஸ்வாமிகளை ச் சர்வ கலாசாலை உப அத்யக்ஷதர் **மகாமகோபாத்யாய கங்காநாத் ஜா,** மாஜி ஹைகோர்ட் ஜட்ஜ் **கன்யாலால்,** லீடர் பத்திரிகை ஆசிரியர் **ஸி. ஒய். சிந்தாமணி,** நகரசபை அங்கத்தினர் **வேங்கடேச சாஸ்திரி** முதலான பிரமுகர்கள் அடங்கிய வரவேற்புக் கமிட்டியினர் பூர்ணகும்பத்துடனும், அந்தத் தேசத்து வாத்யங்களுடனும் ஆயிரக்கணக்கான மக்கள் சூழ வரவேற்றனர். ஸ்வாமிகளுக்கு **தாராகஞ்ச்** தர்மசாலையில் ஜாகை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நகரின் பிரதான வீதிகளின் வழியாக **தாராகஞ்ச்** வரையில் சென்ற ஸ்வாமிகளின் ஊர்வலக் காட்சியைப் பல்லாயிர மக்கள் கண்டு களித்தனர். ஸ்வாமிகளின் திருமேனியைத் தரிசித்து, அவர்கள் **'குரு மகராஜ் கீ ஜய்!'** எனக் கோஷமிட்டனர்.

1922-ஆவது வருடம் அக்டோபர் மாதத்திலேயே கங்கையில் கலப்பதற்கென இராமேசுவர க்ஷேத்திரத்தில் ஸ்வாமிகள் சேது மாதவர் ஸந்நிதியில் எடுத்துக்கொண்ட மணலை அன்று முதல் தம் பூஜையிலேயே வைத்திருந்தார்கள். அந்த மணலைக் **கங்கை, யமுனை, ஸரஸ்வதி** ஆகிய இம்மூன்று நதிகளும் சேருமிடமாகிய **பிரயாகை** யிலுள்ள **திரிவேணி** சங்கமத்தில் கலப்பதற்கென 1934 ஜுலை மாதம் 25-ஆம் நாள் குறிப்பிடப்பட்டிருந்தது. அன்று காலையில் ஸ்வாமிகள் தம் பரிவாரங்களுடன் திரிவேணி சங்கமத்திற்கு விஜயமானுர்கள். ஆயிரக்கணக்கான மக்கள் ஸ்வாமிகளின் பின் சென்றனர். இந்த க்ஷேத்திரவாசிகளாகிய புரோகிதர்களும், மற்றும் வித்வான்கள் பலரும் அப்பொழுது அங்கு விஜயமாயிருந்தார்கள். ஸ்வாமிகள் விதிப்படி சங்கல்பம் செய்துகொண்டு புரோகிதர்களுக்கும், மற்ற அந்தணர்களுக்கும் தானங்கள் வழங்கி விட்டு, சேதுவில் எடுத்துக்கொண்டதும் ஒரு வெள்ளிப் பேழையில் வைக்கப்பட்டிருந்ததுமான அந்த மணலைக் கையில் தாங்கி **வேணி மாதவர் சந்நிதியில்** புனித கங்கையில் கலந்தார்கள். அந்த வெள்ளிப் பேழையையும் ஒரு பண்டாவுக்குத் தானமாக அளித்தார்கள். அதே சமயத்தில் அங்குக் கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்களும் ஸ்வாமிகளுடன் ஸ்நானம் செய்து தங்களைப் புனிதமாக்கிக் கொண்டனர். அங்கு ஸ்வாமிகள் தாமாகவே **கங்கை** எடுத்து, தென்னுட்டிலுள்ள எல்லா க்ஷேத்திரங்களுக்கும் அனுப்பினுர்கள். அப்பொழுது காணப்பெற்ற திவ்ய தேஜோ மயமான ஸ்வாமிகளின் திருமேனியையே யாவரும் தரிசித்து அவர்களை வணங்கி நின்றுர்கள். அந்தக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது. ஸ்வாமிகள் கங்கையி

விருந்து திரும்பி வரும் வழியில் அந்த க்ஷேத்திரத்திலுள்ள **சோமேச்வரர் ஆலயத்தில்** சுவாமி தரிசனம் செய்துகொண்டார்கள்.

மறு நாளாகிய ஜூலை மாதம் 26–ஆம் தேதி வியாஸபூர்ணமி ஆதலால் அன்றைய விசேஷ பூஜைக்குத் தனியாக ஓர் மண்டபம் அமைக்கப்பெற்றிருந்தது. அந்தப் பூஜையைக் காணப் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர். தென்னாட்டிலிருந்தும் மடத்தின் சிஷ்யர்கள் பலர் அப்பொழுது அந்தப் பூஜையைத் தரிசிக்க அங்கு வந்திருந்தனர். வழக்கம்போல் அந்தப் பூஜை மிகுந்த வைபவத்துடன் நடைபெற்றது. ஸ்வாமிகளும் அன்று சாதுர்மாஸ சங்கல்பத்தை முறைப்படி செய்துகொண்டார்கள். அன்று சந்திரகிரஹணமாதலால் ஸ்வாமிகள் இரவில் கங்கை நதியில் கிரஹணஸ்நானத்தைச் செய்துவிட்டுப் பூர்ணமி பூஜையை விசேஷமாக ஜாகையில் நடத்தினார்கள். அன்று முதல் செப்டம்பர் மாதம் 21-ஆம் தேதி வரை நான்கு பக்ஷங்கள் ஸ்வாமிகள் அலாகாபாத்திலேயே தங்கியிருந்தார்கள்.

ஸ்வாமிகள் ஆலகாபாத்தில் தங்கியிருந்தபொழுது 1934-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 1ஆம் தேதி ஒரு பெரிய வித்வத் சபை கூட்டப்பட்டது. அந்தச் சபைக்கு வடநாட்டு வித்வான்கள் பலர் விஜயம் செய்து வாக்யார்த்த தத்துவ விசாரங்களில் கலந்து கொண்டனர். அவர்கள் யாவருக்கும் ஸ்வாமிகள் தகுந்தவாறு சம்மானங்களை அளித்தார்கள். செப்டம்பர் மாதம் 18-ஆம் தேதி ஸ்வாமிகள் **வாசுகி** தரிசனத்தையும், **பரத்துவாஜ ஆசிரம** தரிசனத்தையும் செய்துகொண்டார்கள். 20-ஆம் தேதி **சிவகோடி** என்னும் தலத்தைத் தரிசித்தார்கள். 21-ஆம் தேதி காசி பொது மக்களின் சார்பாக ஒரு கோஷ்டி ஸ்வாமிகளை நேரில் தரிசனம் செய்துகொண்டு, அடுத்து வரும் நவராத்திரி விழாவைக் காசியிலேயே நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். 22-ஆம் தேதி பிரயாகையில் ஸ்வாமிகள் **அக்ஷயவட** (வடவால விருக்ஷம்) தரிசனம் செய்து கொண்டார்கள். 24-ஆம் தேதியாகிய பூர்ணமி அன்று சாதுர்மாஸ சங்கல்பம் முடிவுற்றது. அன்று ஸ்வாமிகள் வபனம் செய்துகொண்டு கங்கையில் நீராடினார்கள். அந்த நாளை மடத்தில் விச்வரூப யாத்திரை எனக் கூறுவார்கள்; அன்று தான் யாத்திரை மேலும் தொடங்குவது வழக்கம். அலாகாபாத் நகரமக்கள் அன்று திரள் திரளாகவந்து, ஸ்வாமிகளின் நித்ய பூஜையைத் தரிசித்துக்கொண்டு தங்களை அனுக்ரகிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். ஸ்வாமிகளும் அவர்களுக்கு அக்ஷதை அளித்து ஆசிர்வதித்தார்கள்.



3-10-1934-இல் காசிமாநகர மஹாஜனங்கள் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு அளித்த மகத்தான வரவேற்பு: ஸ்ரீ ஆசார்யர்களுக்கு இடதுபுரம் காசிமகாராஜாவும், யுவராஜாவும இருக்கிருர்கள்.



1935-இல் வாரணசி (காசி) டவுன்ஹாலில் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு
காசிமஹாஜனங்கள் அளித்த அபிநந்தனம்.



காசியில் ஸ்ரீபரமாசாரியர்களுக்கு தண்டி சந்நியாசிகள் வந்தனம் செலுத்துகிருர்கள்



ஸ்ரீ ஆசார்யர்களுக்கு காசியில் பக்தர்கள்
அளித்த வந்தனோபசாரம்



1939-இல் அகில இந்தியா இரபத்தோராண்டு விஜயயாத்திரையை
முடித்துக்கொண்டு கும்பகோணம் ஸ்ரீமடத்திற்கு வந்தசமயம்
ஸ்ரீமடம் சிப்பந்திகளுடன் ஸ்ரீஆசார்யர்கள் இருக்கிறார்கள்



1948-இல் கொச்சிமகாராஜா அவர்களுக்கு 'தர்சன கலாநிதி' பட்டம் ஸ்ரீஆசார்யர்களால் அளிக்கப்பட்டது; நடுவில் கொச்சி மகாராஜாவும், ஸ்ரீமடத்தின் பிரதிநிதிகளான மஹாமஹோபாத்யாய அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள், தர்மரக்ஷாமணி கெ. பாலசுப்பிரமண்யஅய்யர் ஸ்ரீ கெ. பஞ்சாபகேசய்யர் இருக்கிறார்கள்.



1934-இல் ஜபல்பூர் விஜயத்தின் போது தர்சிக்கவந்தவர்களுக்கு உபதேசமளிக்கிறார்கள்.



வட இந்தியா யாத்திரை செய்தசமயம் 1935-இல் ஸ்ரீ ஆசார்யர்களுடன் வேதவிற்பன்னர்களும் பக்தர்களும்

**காசி மாநகரத்தில் பிரவேசம்: ஐந்து மணி நேர ஊர்வலம் லக்ஷம் ஜனங்களுக்கு மேல் கூடி தரிசனக் காட்சி**

அலாகாபாத்திலிருந்து காசி 130 கிலோ மீட்டர் தூரத்தி லுள்ளது இந்த வழி முழுவதையும் ஸ்வாமிகள் கால்நடையாகவே கடந்து சென்றூர்கள். 1934-ஆம் வருடம் அக்டோபர் மாதம் 3-ஆம் தேதி ஸ்வாமிகள் காசி பஞ்சக்ரோச எல்லைக்குள் பிரவேசித் தார்கள். 6-ஆம் தேதி சனிக்கிழமை அன்று ஸ்வாமிகள் கால்நடை யாகப் பாரத பூமியின் புனித நகரமும், முக்தி கொடுக்கும் க்ஷேத் திரமுமான காசி மாநகரத்தில் பிரவேசித்தார்கள். நகர எல்லையில் காசி மகாராஜவும், மதன்மோகன மாளவீய முதலிய பிரமுகர் களும், காசி பண்டிதர்களும், சந்நியாசிகளும் மற்றும் பொது மக்களும் ஆயிரக்கணக்கில் கூடி ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து வரவேற்றனர். நகர மண்டபத்தில் (டவுன் ஹால்) பல சங்கங்களும், பண்டிதர்களும் ஸ்வாமிகளுக்கு வரவேற்புப் பத்திரிகைகளை வாசித்தளித்தார்கள். பலர் ஸ்வாமிகளுக்குப் பாத பூஜை செய்தனர். அன்றிரவே ஸ்வாமிகள் ஸ்ரீ விச்வநாதரையும், அன்னபூரணியையும் தரிசித்துக்கொண்டார்கள். அன்று நகரம் முழுவதும் ஒரே கோலாகலமாக விளங்கிற்று. ஸ்வாமிகளைத் தரிசிக்க லக்ஷம் ஜனங்களுக்கு மேல் அன்று நகரத்தில் கூடினர். இவ்வைபவத்தைப் பற்றிய விவரங்களைக் காசியிலிருந்து வெளி வரும் பண்டித பத்திரிகை 8-10-1934-ஆம் தேதி இதழில் ஹிந்தியில் வெளியிட்டதை இங்குத் தமிழில் தருகிறோம்.

"ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கரா சாரிய ஸ்வாமிகள் பிரயாகையிலிருந்து கால்நடையாகவே யாத்திரை செய்துகொண்டு, இன்று (6-10-1934) பகல் 2 மணிக்கு கமச்சாசௌ முகானிக்கு விஜயம் செய்தார்கள். காலையி லிருந்தே காசிப் பொதுமக்கள் ஆயிரக்கணக்கில் அங்குக் கூடி ஸ்வாமிகளின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு, வரவேற்புக் குள்ள ஏற்பாடுகளில் முனைந்து ஈடுபட்டிருந்தனர். தவத்தினுல் சிறந்த அப்பெரியோரின் வதனத்தைத் தரிசித்த உடனேயே அவர்களது மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடியது. ஜய! ஜய! என மக்களிட்ட கோஷம் வானைப் பிளந்தது. கமச்சாசௌ முகானில் பெரியதொரு வரவேற்பு வளைவு மிகவும் அழகுடன் அமைக்கப் பட்டிருந்தது. அதில் மனிதருள் பெரிய கடவுளைப் போன்றவர் என ஸ்வாமிகளின் விலாசம் எழுதப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் ஒரு மண்டபம் அமைக்கப்பட்டிருந்தது. அதில் காசி ராஜாவின் தலைமையில், காசியில் பிரபல சீமான்களும் வித்வான்

களும், மேலும் பிரமுகர்களும் குழுமியிருந்தனர். காசி மக்களின் சார்பாகக் காசி மகாராஜாவும், வரவேற்புக் கமிட்டித் தலைவர் என்ற முறையில் இளவரசருடன் அங்கு விஜயம் செய்திருந்தார். காசி மக்களின் சார்பாக அவர் ஸ்வாமிகளை வரவேற்று அவர்களுக்குப் பூஜையும் செய்தார். இதற்கு முன்னரே அவர் **காலியா ஸாகேப்** என்னும் தமது நந்தவனத்திற்கு யுவராஜாவுடன் சென்று, தமது சொந்த முறையில் சாஸ்திர முறைப்படி ஸ்வாமிகளுக்குப் பாத பூஜை நடத்தினார். மேலும் காணிக்கையாக ரூபாய் 1001 சமர்ப்பணம் செய்தார்.

கமச்சாசௌ முகானியில் யானைகள், ஒட்டகம், குதிரைப் படை, பாண்டு வாத்யம், கொடி, தோரணம் இவை பவனியாக நின்றமை கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. 2-30 மணிக்கு அங்கிருந்து ஊர்வலம் கிளம்பிற்று. அது நகரத்தின் முக்கியமான வீதிகளின் வழியாக, இரவு 7-மணிக்கு **ராவ் ஸாகேப் மாதவராம் ஸந்த்** அவர்களின் (விருந்தாளிகள் தங்கும்) மாளிகையை அடைந்தது. நகரத்தில் ஒவ்வொரு இடமும் கொடிகளாலும், வாழை மரங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. **ஸ்ரீ சத்தியநாராயணர் ஆலயத்தில்** செய்யப்பட்டிருந்த அலங்காரம் மிகவும் அழகு வாய்ந்ததாக அமைந்திருந்தது. **ஸ்ரீ பாக்லா** அவர்களின் காரியஸ்தர் மெச்சத் தகுந்த வகையில் மிகுந்த உற்சாகத்துடன் பலவகையான ஏற்பாடுகளை அங்குச் செய்து வைத்திருந்தார். அங்கு, ஜகத்குரு அவர்களுக்குப் பூஜை, கற்பூர ஹாரத்தி முதலியன நடைபெற்றன. ஸ்வாமிகள் அந்த ஆலயத்திற்குள் சென்று தரிசனம் செய்து கொண்டார்கள். ஸ்வாமிகள் சென்ற இடங்களெல்லாம் அவர்களுக்கு ஹாரத்திகளோடு, மலர்களாலும், பணம், காசுகளாலும் மக்கள் மரியாதை செய்தனர். பணத்தை மழைபோல் பெய்யச் செய்தார்கள். தெருக்களில் உள்ள எல்லாக் கட்டிடங்களிலும் கீழிருந்து மேல் வரை ஆண்களும், பெண்களும் நிறைந்து நின்றனர். தெருக்கள் முழுமையும் ஒரே கூட்டமாக இருந்தது. ஒருவரோடு ஒருவர் இடித்துக்கொண்டும் மக்கள் நெருங்கி நின்றுகொண்டுமிருந்தனர். இளைஞர் கூட்டம், வர்ணாச்ரம சுயம் சங்கத்தின் தர்ம வீரர்கள் கூட்டம், **ஸ்வாமிலால் நாத்தின்** தலைமையில் சாரணர் கூட்டம், ஹிந்து வாலிபர் சங்கக் கூட்டம், காசி சுயம் சேவா சங்கத்தின் தொண்டர்கள், மற்றும் போலீஸ் படைகள் இவ்வளவு பேர்களும் சேர்ந்து கூட்டத்தை ஒழுங்குபடுத்தப் படாதபாடு பட்டார்கள். ஆனால் எவ்வளவு முயற்சித்தும் ஒன்றும் பயனில்லாது போய்க்கொண்டிருந்தது.

சுமார் 25,000 பேர் அக்கூட்டத்தில் இருந்தனர். மேலும் காண வந்தவர்களின் கூட்டம் ஒரு லக்ஷத்துக்கு மேலாக உயர்ந்தது. பாரதிய சுயம் சங்கத்தின் தலைவர் **ஸ்ரீ சதர் யதந்ஜீ பாண்டேயும். பண்டித மதன்மோகன மாளவீயவும்** ஸ்வாமிகளைத் தரிசிக்க அக்கூட்டத்துடன் வந்திருந்தார்கள். ஸ்ரீ பாண்டே ஊர்வலத்தில் முழுவதும் கால் நடையாகவே தொடர்ந்து வந்தார். ஊர்வலத்தின் முன்னால் யானைமீது ஸ்வாமி **சிவானந்த பிரம்மச்சாரி** ரிஷபக் கொடியைத் தாங்கிக் கொண்டு வீற்றிருக்க, பின்னால் மற்றொரு யானையின் மீது **ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கராசார்யருடைய உருவப் படம்** சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஸ்வாமிகளும் கால்நடையாகவே வந்துகொண்டிருந்தார்கள். அவர்களின் பாதங்களைத் தொடவேண்டுமென்ற ஆவலுடன் பாய்ந்து வரு கின்ற மக்களிடமிருந்து அவர்களைக் காப்பாற்றச் சுயம் சேவகர் களுக்கு மிகுந்த சிரமம் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. **ஸ்ரீ ராய் ஸாகேப் மாதவ ராம்ஜீ ஸந்த்** அவர்கள் மட்டும் மிகவும் உறுதியுடன் நின்று மக்கள் கூட்டத்தைத் தடுத்து, ஜகத்குருவின் சமீபத்தில். நிலைமையை ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தார். பல இடங்களில் **ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள்** தம் பல்லக்கின்மீது ஏறி நின்று மக்க ளுக்குத் தரிசனம் கொடுக்க வேண்டியதாயிருந்தது. மணிக்கணக் காகத் தரிசனத்திற்காக வீதிகளின் ஓரங்களில் உட்கார்ந்து கொண்டிருந்தவர்களுக்கு எண்ணில் அடங்காத இம் மாபெரும் கூட்டம் பெரும் தடையை ஏற்படுத்தி விட்டது. ஸ்வாமிகளின் வரவேற்பிற்காகச் செய்யப்பட்டிருந்த இத்தகைய உயர்ந்த ஏற் பாடும், இந்த மாபெரும் கூட்டமும் காசியின் சரித்திரத்திலேயே மிகவும் மகத்துவம் வாய்ந்ததெனச் சொல்லப்படுகிறது. அன்றிரவு ஸ்வாமிகள் **ராம்கட்டிலுள்ள ஸாங்க வேத வித்யா லயத்திற்கு** விஜயம் செய்தார்கள். அங்கு வித்யாலயத்தின் தலைவர் **தர்மமூர்த்தி ஸ்ரீ மேஹ்தா முராரி லால்**அவர்கள் ஸ்வாமி களுக்கு மலரினால் பாதபூஜை செய்து ரூபாய் 501 காணிக்கை யாகச் சமர்ப்பணம் செய்தார்.''

**காசியில் நவராத்திரி விழா**

ஸ்வாமிகள் அக்டோபர் மாதம் 7-ஆம் தேதி **மணிகர்ணிகை கட்டத்தில்** ஸ்நானம் செய்து ஸ்ரீ விச்வநாதர் ஆலயத்திலேயே ஸ்ரீ சந்திரமௌளீசுவரர் நித்ய பூஜையை நடத்தினார்கள். **அனுமந்த கட்டத்திலுள்ள** ஸ்ரீ காமகோடி பீடத்தைச் சார்ந்த மடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் ஆதி சங்கர பகவத்

பாதர்களின் விக்ரஹத்தை ஸ்வாமிகள் அன்று தரிசித்து வந்தார்கள். 8-ஆம் தேதி திங்கள்கிழமை சாரதா மடத்திலும், பஞ்ச கங்கா மடத்திலும் அளித்த பாத பூஜைகளை ஏற்றுக் கொண்டு, **கேதாரேச்வரர்** ஆலயத்திலும், **பிந்துமாதவர்** ஆலயத்திலும் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். அக்டோபர் 9-ஆம் தேதி அவ்வருடத்து நவராத்திரி விழா ஆரம்பமாயிற்று. ஸ்வாமிகள் நவராத்திரி பூஜையை **ராய் ஸாகேப் மாதவ ராம் ஸந்த்** அவர்களின் இல்லத்தில் நடத்தினார்கள். நவராத்திரியை முன்னிட்டு அக்டோபர் 16-ஆம் தேதி வரையில் கீழே கண்டவாறு ஜபம், பாராயணம், ஹோமம் ஆகியவை நடைபெற்றன: 1. ரிக்வேத ஸம்ஹிதா ஹோமம். 2. ஸ்ரீ வித்யா ஹோமம். 3. சண்டிகா ஹோமம். 4. மகாருத்ர ஹோமம். 5. ரிக்வேத பாராயணம். 6. சுக்ல யஜுர் வேத பாராயணம். 7. கிருஷ்ண யஜுர் வேத பாராயணம். 8. ஸாமவேத பாராயணம். 9. அதர்வண வேத பாராயணம். 10. உபநிஷத் பாராயணம். 11. பாஷ்ய பாராயணம், 12. ஸ்ரீ வித்யா மூல மந்த்ர ஜபம். 13. பாலா மந்த்ர ஜபம். 14. துர்க்கா ஸப்தசதி பாராயணம். 15. லலிதோபாக்யான பாராயணம். 16. தேவி பாகவத பாராயணம். 17. லலிதா ஸஹஸ்ரநாம திரிசதி-அஷ்டோத்தர பாராயணம். 18. விஷ்ணு சகஸ்ஹரநாம பாராயணம். 19. ராமாயண பாராயணம். 20. கீதா பாராயணம். 21. மூன்று வேதங்களிலும் முறைப்படி தனித்தனியே சூரிய நமஸ்காரம். 22. நவக்ரஹ ஜபம். 23. மஹந்யாஸ ஏகாதச ருத்ர ஜபம்.

16-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை மகாநவமியன்று கன்யா பூஜையும் ஸரஸ்வதி பூஜையும் நடைபெற்றன. கன்னிகைகளுக்கும் சுமங்கலிகளுக்கும் அன்னதானம், வஸ்திர தானம், ஸுவர்ண தானம் ஆகியவை வழங்கப்பட்டன. அன்றிரவில் ஹோமங்களுக்குப் பூர்ணாகுதி நடைபெற்றது. காசி மகாராஜாவும், மற்ற நகரப் பிரமுகர்களும் கூட இருந்து இவற்றை நடத்தி வைத்தார்கள். விச்வநாதர் ஆலயத்தில் அன்று விசேஷமாக அபிஷேகம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அக்டோபர் மாதம் 17-ஆம் தேதி விஜயதசமி அன்று, யாக முடிவை ஒட்டி ஸ்வாமிகள் கங்கை நதியில் **அவப்ருத ஸ்நானம்** செய்தார்கள். ஜபம், ஹோமம், பாராயணம் இவைகளில் கலந்துகொண்ட வித்வான்களுக்குத் தகுந்தவாறு சம்மானங்கள் அளிக்கப்பட்டன. இதுவரை கண்டிராத இந்த

வைபவங்களைக் காசி மக்கள் ஆயிரக்கணக்காக வந்து தரிசித்துப் புண்யபயனை அடைந்தனர்.

**காசி நகரத்தின் புனிதத் தன்மை**

நமது பாரத தேசத்தின் புனிதமான 7 நகரங்களுக்குள் காசி ஒன்றாகும். அந்நகரங்கள் முறையே அயோத்தியா, மதுரா, (வட மதுரை), மாயாபுரி, (ஹரித்வாரம்), காசி, காஞ்சி, அவந்தீ, துவாரகை இவைகளாகும். காசியை அவைகளுக்குள் முதன்மையாகக் கூறலாம். இவை போலவே, புனிதமான நதிகளும் 7 உள்ளன. அவ்வேழு புண்ய நதிகளுள் கங்கை மிகச் சிறந்ததாகும். தேவீ பாகவதத்தில் கூறப்பட்டுள்ள 16 சக்தி பீடங்களில் காசியும் ஒன்றாகும். தீர்த்த விசேஷமும், ஸ்தல விசேஷமும் ஒருங்கே அமைந்து முக்தி க்ஷேத்திரமாக விளங்குவது காசி. வாரணாசி என்னும் மற்றொரு பெயரும் இத்தலத்திற்கு அமைந்துள்ளது. வாரணா, அசி என்னும் இரண்டு நதிகள் இந்நகரைச் சூழ்ந்திருப்பதால் இதற்கு அப்பெயர் வந்தது. வா என்னும் எழுத்தானது பா வாக மாறியதால் இதைப் பனாரஸ் என ஆங்கிலத்தில் கூறுகின்றனர். அந்த க்ஷேத்திரத்தை மஹா ஸ்மசானம் எனக் கூறுவதும் உண்டு. **'காச்யாந்து மரணான் முக்தி:'** என வட மொழியில் ஒரு பழமொழி உண்டு. 'காசியில் மரணமடைந்தோர்க்கு மறு பிறப்பு இல்லை' என்பது இதன் பொருள்.

காசியைப் போலத் தமிழ் நாட்டிலும் சில முக்கிய க்ஷேத்திரங்கள் அமைந்துள்ளன. 'ஸ்மரணாத் அருணாசலம்' எனக் கூறப்படுவதால், திருவண்ணாமலையை நினைத்தாலே முக்தி கிட்டும் என்பர் பெரியோர்; 'திருவாரூரில் பிறந்தார்க்கு மறு ஜன்மம் இல்லை'யென்று சொல்லப்பட்டிருக்கிறது. தரிசனத்தினாலேயே முக்தி தருவது சிதம்பர க்ஷேத்திரம் என்பதை முன்பே கூறியுள்ளோம்.

சாஸ்திரங்களில் நம்பிக்கை கொண்ட பலர் காசியில் இறப்பதற்கெனவே தங்கள் பிற்காலங்களைக் காசி மா நகரத்தில் கழித்து வருகின்றனர். காசியில் கங்கா நதி உத்தரவாகினியாக (வடக்கு நோக்கி) ஓடுகின்றது; வில் வடிவமாக வளைந்தும் செல்கின்றது. அதன் கரையில் 64 ஸ்நான கட்டங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுபவை **மணிகர்ணிகா கட்டம், பஞ்ச கங்கா கட்டம், அசி கட்டம், தசாச்வமேத கட்டம், வாரணா ஸங்கம கட்டம்** இவைகளாகும். ஆதி சங்கரர் இத்தலத்தில் தங்கி, அநேக அற்புதமான செயல்களைப் புரிந்திருக்கிறார்கள்.

காசியிலுள்ள விச்வநாதர் ஆலயம் நம் நாட்டு ஆலயங்களைப் போல விசாலமாகவும், உயர்ந்த கோபுரங்களுடனும் அமையப் பெருவிடினும், உட்புறமெல்லாம் மிகவும் அழகான சலவைக்கற்களால் அமைக்கப் பெற்றிருக்கிறது. (உச்சிகாலத்திலும், அர்த்த ஜாமத்திலும் பண்டாக்கள் எனக் கூறப்படும் அர்ச்சகர்கள் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்து முறைப்படி பூஜிக்கிறார்கள். இதற்கென ஏராளமான பொருள் செலவில் **நாட்டுக்கோட்டை நகரத்தார்** கட்டளை ஏற்படுத்தியுள்ளார்கள். (இந்தப் பூஜாகாலங்களில் தென்னாட்டு நாதசுர வாத்யம் அங்கு வாசிக்கப்படுகிறது.) இவ்வாறு குறிப்பிட்ட சில நேரங்களைத் தவிர, பிற காலங்களில் அடியார்கள் தாங்களே லிங்கத்திற்கு அபிஷேகம் செய்து பூஜிக்கலாம். ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான மக்கள் காசியை அடைந்து இவ்விதம் விச்வநாதரைப் பூஜித்துச் செல்கின்றனர். **சக்தி பீடமாகிய அன்னபூரணியின்** சந்நிதியில் ஆதி சங்கரர் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இந்த அம்பிகையின் பேரில் அவர்கள் பாடிய **அன்னபூர்ணாஷ்டகம்** மிகப் பிரசித்தி வாய்ந்த தோத்திரங்களில் ஒன்றாகும். காசி விசாலாக்ஷி அம்மன் ஆலயம் விச்வநாதர் ஆலயத்திலிருந்து சிறிது தூரத்தில் அமைந்துள்ளது. மகாராஜாக்களும், கோடீசுவரர்களும் இத்தலத்தில் அன்ன சத்திரங்கள் பல அமைத்துள்ளார்கள். காஷாயம், தண்டம், கமண்டலு இவைகளைத் தாங்கி வரும் ஸந்யாசிகள் பலரை நாம் இத்தலத்தில் தரிசிக்கலாம்.

**காசி க்ஷேத்திராடனம்-பக்தர்கள் நடத்திய பிக்ஷை, பாதபூஜை**

1934-ஆவது வருடம் அக்டோபர் மாதம் 17 ஆம் தேதி புதன் கிழமை விஜயதசமி அன்று ஸ்வாமிகள் கங்கையைக் கடந்து எதிர்க்கரையிலுள்ள **தக்ஷிணாமூர்த்தி மடத்திற்குச்** சென்று அங்குத் தக்ஷிணாமூர்த்தியைத் தரிசனம் செய்துகொண்டு, பக்தர்கள் செய்வித்த பாதபூஜையையும் ஏற்றுக்கொண்டார்கள். அக்டோபர் 19-ஆம் தேதி **கோகட்டத்தில் தர்பங்கா மகாராணி** ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டு, ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை செய்தார். 27ஆம் தேதி சனிக்கிழமை காசியிலுள்ள வடநாட்டு ஸந்யாசிகள் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை அளித்தனர். அதற்கு மறுநாள், அத்தலத்தில் வசிக்கும் தென்னாட்டு ஸந்யாசிகளும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை அளித்தார்கள். வடநாட்டு ஸந்யாசிகளுக்கு **கௌட ஸந்யாசிகள்** என்றும், தென் நாட்டு ஸந்யாசிகளுக்கு **திராவிட ஸந்யாசிகள்** என்றும் அங்குப் பெயர்கள் வழங்கி வருகின்றன.

நவம்பர் மாதம் 15-ஆம் தேதி ஸ்வாமிகள் **ஹனுமந்த கட்டத்தில் அசி** நதியில் ஸ்நானம் செய்தார்கள். நவம்பர் 19-ஆம் தேதி ஹனுமந்த கட்டத்தில் **பஞ்ச கங்கா ஸ்நானம்** செய்துவிட்டு, காசியின் நகர தேவதையையும் குகையையும் தரிசனம் செய்து கொண்டார்கள். டிசம்பர் 17-ஆம் தேதி மார்கழி தனுர்மாஸ பூஜை ஆரம்பமாயிற்று. அம்மாதம் 19-ஆம் தேதி ஸ்வாமிகள் **வியாச காசிக்குச்** சென்று அவ்விடம் வேத வியாசரைத் தரிசனம் செய்து கொண்டார்கள்; டிசம்பர் 21-ஆம் தேதி கேதார கட்டத்தில் **கௌரீ கும்பத்தில்** ஸ்நானம் செய்தார்கள். 1935-ஆவது வருடம் ஜனவரி மாதம் 19-ஆம் தேதி சந்திரகிரஹணம் ஏற்பட்டது. அன்றிரவு ஸ்வாமிகள் கங்கைக் கரையிலேயே தங்கி முறைப்படி கிரஹண ஸ்நானத்தைச் செய்து கொண்டார்கள். பிப்ரவரி மாதம் 3-ஆம் தேதி அர்த்தோதய புண்ய காலம் சம்பவித்தது. அன்று ஸ்வாமிகள் புனித கங்கையில் நீராடினர்கள்.

1934-ஆவது வருடம் அக்டோபர் மாதம் முழுவதும் கோகட்டத்திலுள்ள **ஸ்ரீராய் ஸாகேப் மாதவராம் ஸந்த்** அவர்களின் மாளிகையிலேயே தங்கியிருந்தார்கள். அதன் பின்னர் ஹனுமந்த கட்டத்திலுள்ள தம் சொந்த மடத்திற்கு விஜயம் செய்து, காசியை விட்டுப் புறப்படும் வரையில் அவ்விடத்திலேயே தங்கி இருந்தார்கள்.

**காசி ஹிந்து ஸர்வ கலாசாலைக்கு விஜயம்**

பண்டித மதன்மோகன மாளவீய அவர்களின் அழைப்பை ஏற்றுக்கொண்டு ஸ்வாமிகள் 1935 பிப்ரவரி மாதம் 9-ஆம் தேதி காசி ஹிந்து ஸர்வ கலாசாலைக்கு விஜயமானர்கள். அன்று, ஸர்வ கலாசாலையின் கட்டிடங்களெல்லாம் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஸ்வாமிகள் ஸர்வ கலாசாலையின் பிரதான வாயிலில் வந்ததும் **மாளவீய** அவர்களும், ஸர்வ கலாசாலையின் மற்ற அதிகாரிகளும், பேராசிரியர்களும் மாணவர்களும் ஸ்வாமிகளை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றனர். பண்டித மாளவீய முக்கியமானவர்களை ஸ்வாமிகளுக்கு அறிமுகம் செய்துவிட்டு ஸர்வகலாசாலையின் ஒவ்வொரு பகுதிக்கும் அவர்களை அழைத்துச் சென்று ஆங்காங்கு நடைபெறும் கல்வி போதனைகளைப் பற்றி விவரித்துக் கூறினர். பின்னர் பிரதான மண்டபத்தில் அமைக்கப் பெற்றிருந்த பிரத்யேகமான ஆசனத்தில் ஸ்வாமிகள் அமர்ந்திருந்தார்கள். யாவரும் ஸ்வாமிகளை வணங்கியவுடன், தாம் இயற்றிய ஐந்து சுலோகங்கள் அடங்கிய, (கீழேகண்ட) வர

வேற்பைப் பண்டித மாளவீய வாசித்து ஸ்வாமிகளிடம் ஸமர்ப் பணம் செய்தார்.

यद्वाचां लसितैस्त्रिलोकजनता मोहान्धकारक्षयः
पादाब्जस्मरणेन यस्य कलुषध्वंसात् प्रसादः स्थिरः ।
तस्याद्वैत गिरांगुरोर्भगवतः श्रीशंकरस्योन्नतं
काञ्चीपीठपदं यतीश्वरमहन् स्थाने त्वयाधिष्ठितम् ॥ १ ॥

तत्त्वज्ञान तपः समाधि करुणौदार्य प्रसादादिभिः
पुण्यं भारतवर्षमेतदनघं प्राप्नोति लाभं परम् ।
कीर्त्या तेऽमलया यतीन्द्र! महतामादर्शतां प्राप्तया
सन्तः सन्ततमुल्लसन्ति च दिशः सर्वाः समुद्भासिताः ॥ २ ॥

स्वामिन्! स्वागतमस्तु ते शिवपुरी श्रीविश्वविद्यालये
शिक्षाकेन्द्र वरेऽत्र भारतभुवां विद्यार्थिनां सर्वतः ।
श्रीमद्वक्त्र सरोरुहोदित शुभाशीर्गीस्सुधाधारया
साफल्यं श्रुतिजन्मनो भवतु नः शान्त्यै स्रवन्त्या भुवः ॥ ३ ॥

घोरे कलौ प्रतिदिशं भुवि सत्यधर्मो हन्तापकर्षमधुना नितरामुपैति ।
तस्योन्नतिः पुनरिहाकिलमङ्गलार्थो भूयाद्यथा, करुणयोपदिशेति याचे ॥ ४ ॥

प्राच्य प्रतीच्यशुभभावसमन्वयेन भोगापवर्गद सुशिक्षणदानशीलः ।
एषोऽखिलाभ्युदयकृद्यतिवर्य! विश्वविद्यालयस्तव शुभागमनेन धन्यः ॥ ५ ॥

माघ शुक्ल सप्तमी सं० १९९१] —इति निवेदयति–मालवीयो मदनमोहनः ।

பண்டித மாளவீய அவர்கள் வாசித்தளித்த மேலே கண்ட ஐந்து ஸ்லோகங்களின் கருத்து கீழே தரப்பட்டுள்ளது.

"எவரது திருவடியை மனிதன் எண்ணியவுடன் எல்லாவித அஞ்ஞான இருளும் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து விடுமோ, எந்த மகானது திருவாக்கிலிருந்து வெளிப்படும் தேன் மொழிகள் உலகத்தில் எல்லாத் திசைகளிலும் பரவி ஒலிக்கின்றனவோ, எவரிடம் எல்லாச் சாஸ்திரங்களின் உட்பொருளும் அடங்கிப் பிறர் அறியக் கண்ணாடியைப்போல் பிரதிபலித்து வருகின்றனவோ, அவ்வித மகிமைகள் வாய்ந்த ஸ்ரீ சங்கரரது காஞ்சீ பீடத்தில் அவர்களது ஸ்தானத்தில் விளங்கிவரும் அண்ணலே!

பாரத நாட்டின் தவப்பயனுய், தத்துவம், ஞானம், தவம், கருணை, கொடை, அருள் முதலிய குணங்களின் உருவாகத் தோன்றியிருக்கும் தங்கள் கீர்த்தியும், கருணையும் நாடு முழுவதும் பரவி மக்களைப் புனிதராக்கிப் பிரகாசித்து வருகின்றன.

பாரத நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பல கலைகளைக் கற்க இங்குக் குழுமியுள்ள மாணவர்கள் சார்பாகவும் எங்கள் சார்பாகவும் வணக்கத்துடன் தங்களுக்கு நல்வரவளிக்கின்றோம்.

மிகவும் கொடிய இக்கலியில் தருமங்களுக்குக் குறைவு ஏற்பட்டு வரும் இத்தருணத்தில் என்று மழியாத நலனை மக்கள் அடைவதற்கு ஆதாரமாக உள்ளனவும், தங்கள் திருவாக்கிலிருந்து வெளி வரப்போவனவுமான தேன் மயமான உபதேசமொழிகளைப் பருக நாங்கள் காத்து நிற்கின்றோம். தங்கள் உபதேசம் உலகத்தின் நன்மைக்கே அஸ்திவாரமாக விளங்கும்.

உலக வாழ்க்கைக்கும், தெய்வத் தன்மையை அடையவும் பயன்படக் கூடியவாறு மேல்நாட்டு, கீழ்நாட்டு முறைகளில் எவை உயர்ந்தனவையாகக் கருதப்படுகின்றனவோ, அந்த முறைகளிலேயே கல்வி கற்பிக்கப்படும் இந்தக் கலாசாலையும் நமது நாடும் நம் மக்களும் தங்கள் விஜயத்தினுலும், கருணை மிக்க உபதேச மொழியினுலும் உயர் நிலையை அடையுமெனத் திண்ணமாய் நம்புகிறோம்.''

பண்டித மதன்மோகன மாளவீய இந்த வரவேற்பை வாசித்தளித்த பிறகு ஸ்வாமிகள் கீழே கண்டவாறு உபதேச மொழிகளை அருளினுர்கள். அவர்கள் அன்று வடமொழியில் பேசிய கருத்து இங்குத் தரப்பட்டுள்ளது.

''உள்ளத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அமைதி நிலவுகின்றதோ', அவ்வளக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறதென்பது உலக அனுபவம். மன அமைதியின் உயர் நிலையே மேலான புருஷார்த்தமாகும். அமைதி குறையக் குறையத் துன்பமும் வளரும். மனிதர்கள் தங்கள் துன்பங்கள் நீங்குவதற்கு முயற்சிக்கும்பொழுது, பிறரை அவர்கள் துன்புறுத்தவும் நேருகிறது. இவ்விதம் ஒவ்வொருவரும் சந்தர்ப்பங்களை ஒட்டி மற்றவர்களைத் துன்புறுத்த முயலும் பொழுது சமுதாயத்தில் குழப்பம் ஏற்படுகிறது. அவ்விதம் குழப்பம் நேரும்பொழுதெல்லாம் அதை அடக்கி அமைதியையும், சமாதானத்தையும் நிலைநிறுத்த அரசாங்க அதிகாரிகள் சட்டத்தின் மூலம் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள முன்வருகிறுர்கள். மக்கள் எல்லோரும் புலன்களைப் பறிக்கும் வெளி விஷயங்களிலிருந்து தங்கள் மனஸைத் திருப்பி

அதைத் தங்கள் வசமாக்கி அமைதியாக இருக்க எப்பொழுது முற்படுகின்றார்களோ, அப்பொழுதுதான் துன்பம் அவர்களை அணுகாமலிருக்கும். உலகில் அமைதிக்குக் குறைவு ஏற்படும்பொழுது ராஜ நீதி, தண்டனை, சட்டம் இவைகளின் அமுலும் அதிகரிக்கும். நல்ல கல்வியைப் பயிலும் பயனால்தான் அமைதி சித்திக்க வேண்டும். அதிலும் ஸர்வ கலாசாலைகளில் கல்வி கற்பதினாலும், குறிப்பாக இந்தக் காசி மாநகரத்திலுள்ள ஹிந்து ஸர்வ கலாசாலையில் கல்வி பயிலுவதாலும் மிகவும் உயர்ந்த அமைதியை உங்களிடம் எதிர்பார்க்கலாம். அமைதியை மாணவர்களுக்குள் நிலைக்கச் செய்வதே இங்குள்ள பெரியோர்களின் கடமையாகும். நாட்டில் அமைதி நிலைத்தால் அரசாங்கத்திற்கும், போலீஸ் இலாகாவிற்கும், ராணுவத்திற்கும் ஏற்படும் செலவு ஒருவாறு குறையும்.

நம் பாரத நாட்டின் முற்காலக் கல்வியின் முதல் நோக்கம் மன அமைதியை அடைவதேயாகும். புதிது, புதிதாகத் தோன்றும் பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சித் துறைகளில் மேன்மேலும் கல்வியைப் பெருக்கி, அதன் பயனைத் தர்ம மார்க்கத்தில் உதவுமாறு செய்தால், நாடும் மக்களும் உயர்வான அமைதி நிலையை அடைய முடியும். இவ்வாறில்லாமல் புலன்கள் போன வழியே அவைகளை விட்டுக்கொண்டிருந்தால் கெட்ட எண்ணங்களும் ஆசைகளும் வளரும். வெளி இன்னல்களும் துன்பங்களும் பெருகும்.

கல்வியினால்தான் மக்கள் அமரத்துவம் (மரணமில்லாத் தன்மை) அடைகின்றார்கள். ஆகையால் எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ, அந்தப் பயனைக் கல்வி அளிக்கின்றது அமரத்துவத்தைக் கொடுப்பதே மேலான கல்வியாகும். மற்ற விதமான கல்விப் பயிற்சிகளெல்லாம் உலகப் பயனை அளிக்கின்றன. ஆனாலும் அவைகளும் படிப்படியாக இறைவனைச் சேர உபயோகப்படலாம். உலகப்பயன் என்பது பொருள் திரட்டுவதையே குறிக்கின்றது. பொருளும் பலவித தருமங்களைச் செய்யப் பயன்படுகிறது. இந்தத் தருமங்களும் பிரம்மஞானத்திற்குச் சாதனமாகின்றது. 'தனக்கு விதிக்கப்பட்ட தர்மங்களைச் சரிவர நடத்துவதாலும். தவத்தினாலும், இறைவனை வணங்கி வழிபடுவதாலும் ஒருவன் ஆத்மஞானத்தை அடைகின்றான்' என ஆதி ஆசாரியர்கள் கூறியுள்ளார்கள்.

ஆத்மஞானத்தை அளிக்கும் கல்வியைப் பரவித்யை எனவும், மற்றவற்றை அபர வித்யை எனவும் கூறுவர். பரவித்யை

எனும் பிரம்ம ஞானம் நேரான பலனை அளிக்கின்றது; அஞ்ஞான இருளைப் போக்குகின்றது. இந்தக் காசியிலுள்ள வித்யாலயமோ ஆஸ்திக முறையில் ஹிந்து என்னும் சொல்லுடன் பிணைக்கப் பெற்று, வெளி உலகிலும் மிகப் புகழுடன் விளங்குகிறது. மேலும் எல்லாவிதமான கலைகளையும் தன்னிடமிருந்து பிரகாசிக்கச் செய்கின்றது. இறைவனது அருளால்தான் இத்தகைய விரிவான கட்டிடங்களுடன் இணையற்றதாக இந்தச் சர்வ கலாசாலை விளங்கி வருகின்றது. இதைக் கண்ணுறும் ஒவ்வொருவரது உள்ளத்திலும் எல்லையில்லாத மகிழ்ச்சி தானாகவே ஏற்படுமெனச் சொல்லத் தேவையில்லை. இக்கலா மண்டபத்தை காணும் ஒவ்வொரு மனிதனது உள்ளத்திலும் பெருந்தகையோரான பண்டித மாளவீயாவின் வியக்கத்தக்க மனோசக்தியும் பெருமையும் தானாகவே புலப்படும். இங்குத் தரும சாஸ்திரம், தத்துவஞானம், சட்ட ஞானம், சிற்பம், வேத வேதாந்தங்கள், ஸ்ம்ருதி முதலியனவும், மற்றும் பலவித கலாஞானங்களும் இடம் பெற்றிருக்கின்றன. தவிரவும், இக்காலத்திய மேல் நாட்டுப் பௌதிக ஆராய்ச்சிகளும் இங்குப் போதிக்கப்படுகின்றன. மேலும் இங்குப் போதிக்கப்படும் (கண்களுக்குப் புலனாகும் பொருள்களை அறிவிக்ககூடிய) வானசாஸ்திரம் முதலிய கலைகளும் வேதத்தின் அங்கங்களின் ஒரு பகுதியாகவே போதிக்கப்படுமென நான் நினைக்கிறேன். கண்களுக்குப் புலனாகாத தர்மத்தின் பயனை வேதம், ஸ்ம்ருதி இவைகளின் மூலமாகத் தான் அறிய முடியும். ஞானத்திற்கோ என்றால் வேதம், யுக்தி, அனுபவம் இவ்வகையான பிரமாணங்கள் ஆதாரமாக இருக்கின்றன. இது ஆதி பகவத் பாதாசாரியர்களின் தீர்மானம். ஆனாலும், மனிதனது புத்தி நுட்பத்தால் கண்களுக்குப் புலனாகும் பயனை விளக்கக் கூடிய வான சாஸ்திரம், அரசியல், பொருளாதாரம் இவைகளும் வெளி நாட்டாரது ஆராய்ச்சி முறைகளும் இங்குக் கற்பிக்கப் படுவது இக் கலாசாலையின் முன்னேற்றத்திற்கு உதவியாக இருக்கிறதென்பது மகிழ்ச்சியைத் தரக்கூடியதாகும். ஆயினும் நமது ஆஸ்திக மயமான கல்வி போதனைகளுடன் அன்னிய நாட்டாரின் முறைகளைக் கலந்து போதிப்பதில் நாம் மிகவும் நிதானத்துடன் நடந்து கொள்ளவேண்டும். ஏனெனில் நமது ஆத்ம சுத்தி, அந்தரங்க சுத்தி, ஒழுக்கம், இவை ஆஸ்திகத்தை வளர்க்க உதவியாக இருக்கின்றன. நம் புலன்களுக்கு உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் எளிதில் தரக்கூடிய வகையில் உள்ள எல்லா அம்சங்களையும் போதனா முறையிலிருந்து விலக்கவேண்டும். மேல்

நாட்டாரின் நடை, உடை, பாவனை, உணவு, உரையாடல் முதலி யவைகளில் ஈடுபட்டு அவைகளைக் கையாளுவோமானால் படிப்படி யாக நமது நிலை, அறம் இவைகளிலிருந்து நாம் நழுவுவதுடன் நமது நன்மைக்கும் இடையூறு ஏற்பட்டு, புண்ணிய பூமியாகிய இந்தப் பாரத நாட்டிற்கே கெடுதி ஏற்பட்டுவிடும்.

அயல் நாட்டாரிடமிருந்து நாம் அறிந்துகொள்ளும் நவீன விஞ்ஞான ஆராய்ச்சிகளும் நாம் காணும் அளவில் நமக்கு எவ் விதப் பயனையும் தரக் கூடியதாயில்லையென்று தெரிந்தால் அவை களை மேன்மேலும் கற்பதில் என்ன பயன் என்பதைப் பற்றிச் சிந்திக்கவும் இடமுண்டாகிறது. பாரத நாட்டில் தற்காலம் நமது மக்கள் பெரும்பாலும் சிறு பிராயம் முதலே ஒழுக்கம், இறை வணக்கம் இவ்விதமான பழக்கமே இல்லாமலும், கலாசாரங்கள், விஞ்ஞானம் இவைகளைப் பயில்வதில் வெளிநாட்டாரது பழக்கங் களையே பின்பற்றியும் வருகின்றனர். இதனால் மக்களுக்கு இந்த உலகத்திலும் மறு உலகத்திலும் பேரின்ப வழியை அடையத் தடை ஏற்படுகிறதென்பது தெளிவு. ஆஸ்திக மயமான இந்த விச்வ வித்யாலயத்திலும் இத்தகைய பழக்கங்கள் புகுந்திருப் பதும் விசனிக்கத் தக்கதே.

ஆதலால் ஆஸ்திக பரம்பரையில் தோன்றிய நமது குழந்தை களுக்குச் சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தருமம், ஒழுக்கம் உண்மை முதலியவைகளைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு அனு கூலமான கல்வியைப் போதிக்கவேண்டுமென்பதே எனது விருப்பம். இக்கலாசாலை தோன்றிய அக்காலத்திலேயே இதைத் தோற்றுவிக்கக் காரணமாக இருந்த மிகுந்த சீலம் படைத்த பண்டித மாளவீயாவின் தார்மீக வாழ்க்கையையும், சீரிய ஒழுக் கத்தையும் நன்குணர்ந்த நமது தேச மக்கள் மாளவீய அவர் களின் தார்மீகக் கொள்கைகள் இங்கு லக்ஷியத்துடன் போதிக்கப் படுமென்று எதிர்பார்த்ததையே நான் இப்பொழுது எல்லோரு டைய நினைவிற்கும் கொண்டு வருகிறேன்.

இப்பொழுது நமது தேசம் முழுவதும் பழமையான பண்பாடு களைப் போதிக்கும் முறைகளைக் கீழ்த்திசைக் கல்வி (Oriental Learning) என்றழைப்பதை நினைக்க மிகவும் வருந்த வேண்டி யிருக்கிறது. உலகின் கிழக்குப் பாகத்தில் வசிக்கும் நம்மைக் கீழ் நாட்டாரென்றும், நமது சாஸ்திரப் பயிற்சிகளைக் கீழ்த்திசைப் பகுதியென்றும் மேல் நாட்டார் கூறுகின்றனர். அதனோடு, நம் மவர்களே மேல் நாட்டுப் பழக்கத்திலுள்ள மயக்கத்தினால் நமது சாஸ்திரங்களைக் கீழ்நாட்டுப் படிப்பு என்று கூறிக்கொள்வது

விந்தையாக இருக்கிறது. எவ்வகையிலும் இது பொருந்தாத தாகும். இஃது இருக்கட்டும். மேல் நாடுகளில் எங்காவது அவர் களது கல்விச் சாலைகளுக்கு மேல் நாட்டுக் காவியம், விஞ்ஞானம், கற்பிக்குமிடம் என விளம்பரம் செய்கிறார்களா? இவ்விதம் பெயரளவில் உள்ள மாறுதல்களைப் பற்றி நான் மிகுந்த கவலை கொள்ளவில்லை. ஆயினும் நமது பழமையான கல்வியின் அமைப்பு, புராதன பண்பாடு, தருமம் முதலியவைகளுக்கு உறைவிட மாயிருக்க வேண்டிய இந்த விச்வ வித்யாலயத்திலும் இந்தக் கருத்துகள் நுழைந்து விடாமல் இருக்க வேண்டுமென்ற எண்ணத் துடனேயே இங்கு இதைக் குறிப்பிட விரும்புகிறேன். ஏனெனில் பெரும் முயற்சியுடன் அரும் பாடுபட்டு, பாலப் பருவத்தில் வரக் கூடிய இன்னல்களையெல்லாம் கடந்து, தருமத்திற்கும், நமது புராதன பண்பாட்டிற்கும் ஜீவநாடியாக இந்த ஸர்வகலாசாலை இருக்கவேண்டுமென்று நினைத்துக் கண்ணும், கருத்துமாகப் பண்டித மாளவீய இதைத் தோற்றுவித்தார். இந்த ஸர்வகலா சாலையானது மனுநீதி தர்மத்திலிருந்து ஓர் இழையேனும் பிறழா மல் சுயேச்சையாக விளங்கவேண்டுமென்று நான் மிகுந்த மகிழ்ச்சி யுடன் ஆசி கூறுகின்றேன். பரமசிவனது அருளால் இந்த விச்வ வித்யாலயத்தில் யாவரும் ஒரே மனமுள்ளவர்களாகவும், ஆஸ்திக புத்தியிலிருந்து விலகாதவர்களாகவும், முன்னோர்களின் நல்ல ஆசாரங்களைப் புறக்கணிக்காதவர்களாகவும், நாட்டிலுள்ள ஏழை மக்களின் ஏழைமையைப் போக்கி அவர்களுக்கு ஜீவனோபா யத்திற்கு வழி தேடிக் கொடுப்பவர்களாகவும் இருந்து உலகிற்கே நன்மை பயக்கக்கூடிய வழியில் இதைத் திகழ வைக்க யாவரும் ஈடுபட வேண்டுமென்பதே, நான் இதுவரை பேசியதன் கருத்தாகும்.

அரசியல் முன்னேற்றத்தைப்பற்றிக் கவனம் செலுத்த நமது நாட்டின் தலைவர்கள் பலர் இருக்கின்றனர். மக்களுக்கும், தலைவர் களுக்கும் நமது மதாசார சம்பிரதாயங்களைப் பற்றிய விஷயங் களில் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சம்பிர தாயங்கள் அரசியல் முன்னேற்றத்திற்கு இடையூறுகள் போல் அவர்களுக்குக் காணப்படுகின்றன. தலைவர்கள் ஒழுக்கமுள்ளவர் களாகவும், தார்மிக நெறியில் பண்பாடு உடையவர்களாகவும் இருக்கவேண்டும். இந்த விச்வ வித்யாலயத்திலிருந்து கல்வி பயின்று வெளிவரும் வித்வான்கள் ராஜரிஷிகளைப் போல மக் களைச் சீரிய வழியில் நடத்தத் திறன் படைத்தவர்களாக இருக்க வேண்டும்.

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் நமது நாட்டில் ஒவ்வொரு சுரோத்திரியப் பண்டிதரது வீடும் ஒரு கலாசாலையாகத் திகழ்ந்திருக்கிறது. அக்காலத்தில் படிப்புக்காகச் சம்பளம் கொடுப்பதும், சம்பளம் பெற்றுக்கொள்ளுவதுமான வழக்கம் இல்லை. அப்பொழுது இங்குள்ளது போல் ஒரே இடத்தில் கணக்கற்ற மாணவர்கள் கூடி இருக்கமாட்டார்கள். இக்காலத்தில் படிப்பு தொழிலின் லக்ஷியமாக மாறிவிட்டதால் சங்கடங்கள் தோன்றிவிட்டன. முன்பெல்லாம், ஆசிரியர்களின் வீடுகளுக்குப் பக்கத்திலேயே மக்களும் வசித்து வந்தனர். மாணவர்களோ அன்றாடம் அவர்களது உணவைச் சில வீடுகளுக்குச் சென்று யாசித்து அதைக் கொண்டு ஜீவித்து வந்தனர். மன்னர்களும், பிரபுக்களும் பண்டிதர்களை ஆதரிப்பது தங்கள் கடமை என எண்ணி, அவர்கள் எக்கவலையும் இன்றி வாழுமாறு அவர்களைக் காத்து வந்தனர். அதுபோல் கல்வி கற்றுக் கொடுப்பதே தங்கள் கடமையென மதித்துப் பண்டிதர்கள் மாணவர்களுக்குக் கல்வி போதித்து வந்தனர். இருசாராரிடையும் இவ்விதம் சம்பளம் கொடுப்பது-வாங்குவது என்ற பழக்கம் இல்லாதிருந்ததால்தான் ஆங்காங்கு ஒவ்வொரு கிராமத்திலும் மாணுக்கர்கள் ஒரு வரையறைக்குள் அடங்கியவர்களாக இருந்தனர். உண்மை, ஒழுக்கம் முதலிய குணங்களை அவர்கள் கடைப்பிடிக்க ஆசிரியர்கள் செய்து வந்த முயற்சியும் நல்ல பயனை அளித்தது.

ஆசிரியர்கள் பொருளில் ஆசையில்லாமலும், மாணவர்களிடம் அன்புடனும் அக்காலத்தில் கல்வி போதித்து வந்தனர். ஆதலால் மாணவர்கள் குருபக்தி, ஒழுக்கம், சீலம், பொறுமை, அடக்கம் இவைகளுடன் இருந்து கல்வி பயின்றார்கள். ஆசிரியர்களும் சுதந்தரத்துடன் வாழ்ந்து வந்தமையால், எவரது விருப்பு வெறுப்புக்களையும் பாராட்டாமல் சாஸ்திரங்களின் தத்துவங்களை உள்ளபடி மாணவர்களுக்குப் போதித்து வந்தார்கள். அக்காலத்தில் எங்கும் கடவுள் நம்பிக்கையும், ஆஸ்திகமும் நிறைந்து மக்கள் தங்களது வாழ்க்கையைக் கஷ்டமின்றி நடத்தி வந்தனர். இப்பொழுதோ வென்றால், அத்தகைய பண்டிதர்கள் எங்கெங்கோ மூலை முடுக்குகளில் தேடிப்பிடிக்கும் நிலையிலிருக்கின்றனர். இதற்குக் காரணம் யாவரும் நன்கு தெரிந்துகொண்டதுதான். தேச கால வர்த்தமான நிலைகளை அனுசரித்துப் பணம் படைத்தவர்கள் வெளிநாட்டுக் கல்வி, பழக்கம் இவைகளைப் பின்பற்றி அந்த வாசனையிலேயே ஊறியிருப்பதால் நாட்டில் ஆஸ்திகத்திற்குப் பஞ்சம் தோன்ற ஆரம்பித்தது. இந்த விச்வ வித்யா

லயத்தின் பண்டிதர்களும் நிர்வாகிகளும் சுதந்தரம் உள்ளவர்களாக இருக்கவேண்டும். மாணவர்களும் கிராமங்களுக்குச் சென்று பிக்ஷை எடுப்பதின் மூலம் ஜீவயாத்திரையை நடத்தி அடக்கம், ஒழுக்கம், உண்மை முதலிய நற்குணங்களைப் பெற்றவர்களாக ஆக வேண்டும்.

எனக்கு இங்கு ஓர் உபாயம் தோன்றுகின்றது. முன் காலத்தில் எவ்விதம் பயனை எதிர்பாராது பிரபுக்கள் வித்வான்களை ஆதரித்தார்களோ, அதே போல் இந்த வித்யாலயமும் பண்டிதர் விஷயத்தில் ஆதரவு காட்டவேண்டும். வேதத்தில் ஒரு சாகையையும், தரிசனங்களில் ஒரு தரிசனத்தையும் அவற்றுடன் ஓர் ஸ்ம்ருதியையும் நன்குக் கற்று, நல்ல தேர்ச்சி பெற்ற சுரோத்திரியர் ஒருவருக்கு அவரது குடும்ப காலக்ஷேபத்திற்குக் கஷ்டமின்றி அவரது ஆயுள் வரை வாழ்க்கை நடத்த நமது நாட்டுப் பிரமுகர்கள் ஒவ்வொருவரும் வசதி செய்துகொடுப்பார்களானால், நமது பாரத நாட்டில் முன்போலத் தருமமும், ஆஸ்திகமும், ஒழுக்கமும் வளர்ந்து உலகத்திற்கு மேலான நன்மை ஏற்படும். இதுதான் தருமத்தை ரக்ஷிக்கும் வழி.

இங்குக் கூடியுள்ள மாணவர்களுக்குச் சில வார்த்தைகள் கூறவேண்டுமென்று எனக்கு ஆசை ஏற்படுகிறது. உங்களது புண்ணியம் எத்தகையது என்று எளிதில் கூற முடியாது. ஞானம், விவேகம் இவை இரண்டும் வாழ்க்கையில் பயன் தரக் கூடிய வகையில் புனிதமான இம் மனித ஜன்மாவை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். நாட்டின் நலனுக்கும் அபிவிருத்திக்கும் இவை இரண்டும் உதவுமாறு நீங்கள் ஊழியம் செய்யவேண்டும். முன் காலத்தில் பண்டிதர்களுக்குக் கஷ்டம் அதிகமாக இருந்ததில்லை. ஆங்காங்கு மக்கள் ஒற்றுமையுடன் கூடித் தரும காரியங்களைச் செவ்வனே நடத்தி வந்தனர். இப்பொழுதோவென்றால் கால வேறுபாட்டினால் மக்கள் மனத்தில் பலவித மாறுபாடான எண்ணங்கள் தோன்றி வருகின்றன. ஆற்றின் வெள்ளம் போல் பாய்ந்து வரும் அரசியல் மாறுபாடுகளால் உதவியின்றித் தனித்து நிற்கும் இந்த ஸநாதன தர்மமானது துன்புறுத்தப்படும் நிலையிலும் இருந்து வருகிறது. ஜன சமுதாயமும் மாறிக்கொண்டே வருகிறது. ஆகையால் இந்த ஸர்வகலாசாலையில் கல்வி கற்று விவேகிகளாகவும், வித்வான்களாகவும் வெளி வருகிறவர்கள் மிகவும் தீரத்துடன் அரசியல் விஷயங்களில் முன்னேறும் வழிகளில் பிரவேசித்துத் தருமத்திற்கு இடையூறு இல்லாமல் நாட்டின் நன்மைக்காக உழைக்க முற்பட வேண்டும். உங்கள்

படிப்பின் தன்மையானது மக்களின் நல்வாழ்வுக்கு உதவும்படியாகவும், அரசியல் நிர்வாகத்தை எளிதாகச் செய்யக்கூடியதாகவும் இருக்கவேண்டுமென்பது எனது அவா.

இங்கிருந்து வெகு சமீபத்தில் வடபுறமாகக் கங்கை நதி ஓடுகின்றது. அதன் கரையில் நின்று வணங்கும் புண்ணியவான்களின் எதிரில் சூரியன் பிரகாசிக்கிறார். எல்லாத் தருமங்களையும் விட ஆசாரமே உயர்வானது, ஆசாரத்தைப் பின்பற்றித் தருமத்தைக் கடைப்பிடிக்க மிகவும் புனிதமான இந்த இடம் நல்ல வசதியளிக்கக் கூடியதாயிருக்கிறது. இந்தப் பாரத நாட்டின் பல பக்கங்களிலிருந்தும் தங்கள் பெற்றோர்களால் இவ்விடத்திற்கு அனுப்பப்படும் மாணவன் ஒவ்வொருவனும் தனக்கு நேரம் கிடைக்கும்பொழுதெல்லாம் புனிதமான கங்கைக் கரையில் அமைந்திருக்கும் இந்த விசாலமான மண்டபத்தில் அவரவர்களது வழக்கப்படி கடவுள் வழிபாட்டைச் செய்து அன்பை வளர்த்துத் தருமத்தினின்றும். ஒழுக்கத்தினின்றும் பிறழாமலிருக்க உறுதி கொள்ள வேண்டும். அதனால் உங்களுக்கு எல்லாவிதமான நன்மைகளும் கீர்த்திகளும் உண்டாகும். நாமெல்லோரும் பார்த்து மகிழ்ச்சி அடையக் கூடிய மங்களகரமான செயல்களில் அதுவே எல்லாவற்றிலும் மேம்பட்ட மங்களச் செயலாகும்.''

ஸ்வாமிகள் இந்த உபதேச மொழிகளைக் கூறிய பிறகு பண்டித மாளவீய சிறியதொரு சொற்பொழிவை ஆற்றினார். அவர் பேசுகையில் ஸ்வாமிகளின் உபதேச மொழிகளைக் கேட்டுத் தாம் மிகவும் ஆனந்த பரவசம் அடைந்திருப்பதாயும், அவர்களின் உபதேசங்களில் கூறப்பட்டவைகளைச் சாத்தியமான வகையில் நடவடிக்கைக்குக் கொண்டு வருவதாகவும் உறுதி கூறினார். மேலும் 2000 வருடங்களுக்கு முன்னர், ஆதி சங்கரர் இந்தக் காசி மாநகரத்திற்கு விஜயம் செய்து உலக க்ஷேமத்தின் பொருட்டு பல அற்புதச் செயல்களைப் புரிந்துள்ளார்களெனப் புராணங்கள் மூலமே தாம் அறிவதாகவும், இன்றோ அவர்களின் அவதாரமாகவே ஸ்வாமிகளை இப்புனித நகரில் நேரில் காணும் பாக்கியம் எல்லோருக்கும் கிடைத்திருக்கிறதெனவும், தவத்தினால் சிறந்த இந்த மகான் கால்நடையாகவே இக் காசியம்பதியில் திக்விஜயம் செய்வது ஆதி சங்கரரது விஜயத்தையே நினைவிற்குக் கொண்டு வருகிறதென்றும், இம்மகானது தரிசனமே நம்மைப் புனிதமாக்கக் கூடியதெனவும், தனது வேண்டுகோளுக்கு இணங்கி ஸ்வாமிகள் இந்த ஸர்வகலாசாலைக்கு விஜயம் செய்தது மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், நிர்வாகிகளுக்கும், கிடைப்பதற்கரிதான

பாக்கியமென்றும் குறிப்பிட்டார். பிறகு மாளவீய எல்லோருடைய சார்பிலும் தமது பக்தி நிறைந்த வணக்கத்தை ஸ்வாமிகளுக்குத் தெரிவித்துக்கொண்டார். யாவரும் ஸ்வாமிகளது ஆசியைப் பெற்று அகமகிழ்ந்தனர்.

**ஹரித்துவார் பண்டித கோஷ்டியை வெகுமானித்தது**

1935-ஆவது வருடம் பிப்ரவரி 11-ஆம் தேதி **ஹரித்துவாரத்திலிருந்து** இரண்டு பண்டித கோஷ்டியினரும், **ஸ்வர்க்காச்ரமத்திலிருந்து** ஒரு பண்டித கோஷ்டியினரும் ஸ்வாமிகளைத் தரிசிப்பதற்கெனக் காசிக்கு வந்தனர். காசியில் ஹனுமந்த கட்டத்திலுள்ள மடத்தில் ஸ்வாமிகளை அக்கோஷ்டியினர் அன்று தரிசித்துக்கொண்டார்கள். அவர்களில் பலர் சாஸ்திரங்களில் நல்ல தேர்ச்சி பெற்றுப் புலமை வாய்ந்திருந்தமையால், ஸ்வாமிகள் அவர்களுடன் சாஸ்திர விசாரங்கள் செய்தார்கள். பண்டிதர்கள் யாவரும் அப்பொழுது ஸ்வாமிகளின் புலமையைக் கண்டு மிக வியந்து, தவத்திலும், சாஸ்திர ஞானத்திலும் சிறந்து விளங்கும் இத்தகைய ஒரு மகாபுருஷரை இதுவரை தாங்கள் கண்டதில்லையெனக் கூறினார்கள். ஸ்வாமிகள் ஹரித்துவாரத்திற்கு விஜயம் செய்யவேண்டுமென்று அவர்கள் விண்ணப்பித்துக்கொண்டார்கள். ஆனால் ஸ்வாமிகள் அச்சமயம் ஹரித்துவாரத்திற்கு விஜயம் செய்ய திட்டமிடவில்லையென்றும், பின்னர் நேருமானால் ஒரு முறை வருவதாகவும் கூறினார்கள். அந்தப் பண்டிதர்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் காஷ்மீர் சால்வைகளைக் கொடுத்தும் ஸம்மானம் அளித்தும் அவர்களை வெகுமானித்தார்கள்.

**காசி ஸாங்க வேத வித்யாலயத்திற்கு விஜயம் : காசி மகாராஜா அளித்த பாராட்டு**

1935 பிப்ரவரி மாதம் 16–ஆம் தேதி ஸ்வாமிகள் **ராம்கட்டிலுள்ள ஸாங்க வேத வித்யாலயத்திற்கு** விஜயம் செய்தார்கள். ஸ்வாமிகளைத் தரிசிக்க ஆயிரக்கணக்கில் அங்குப் பொது மக்கள் கூடி இருந்தனர். காசி மகாராஜாவும் தமது குடும்பத்துடன் அங்கு விஜயம் செய்தார். வித்யாலயத்தைச் சேர்ந்த பண்டிதர்களும் நிர்வாகிகளும் வடமொழியில் 10 சுலோகங்களை இயற்றி அவைகளைப் படித்து ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார்கள். வித்யார்த்திகளையெல்லாம் ஸ்வாமிகள் பரீக்ஷித்து அவர்களை ஆசீர்வதித்தார்கள். வித்யாலயம் மிகவும் சிறந்த முறையில் ஸநாதன தர்மத்திற்கு உழைத்து வருவதைப்பற்றி ஸ்வாமிகள் மகிழ்ச்சி

அடைந்தார்கள். பிராம்மணர்கள் வேதத்தைக் கற்க வேண்டிய அவசியத்தைப் பற்றி ஸ்வாமிகள் சில உபதேச மொழிகளைக் கூறினார்கள். காசி மகாராஜா பாராட்டுரை ஒன்றைத் தமது கையால் வடமொழியில் வசன ரூபமாக எழுதிக் கையெழுத்து இட்டு, அதை ஸ்வாமிகளின் சரணங்களில் அர்ப்பணம் செய்தார். ஸ்வாமிகள் அந்த வித்யாலயத்தில் வேத வியாசரைப் பற்றியும், ஆதி சங்கர பகவத்பாதர் அவர்களின் மகிமையைப் பற்றியும் உபன்யசித்தார்கள். அன்று, காசி மகாராஜா தமது அரண்மனையி லிருந்து கொண்டுவந்த **ஸ்ரீபாதராயணர்** படத்தையும், ஸ்வாமி களின் கட்டளைப்படி ஹனுமந்த கட்டத்திலுள்ள மடத்திலிருந்து கொண்டுவரப்பட்ட **ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாத மூர்த்திகளின்** திருவுருவப் படத்தையும் ஸ்வாமிகள் ஸாங்க வேத வித்யால யத்தில் ஸ்தாபனம் செய்தார்கள். ஸ்வாமிகள் தமது மடத்திற்கு விஜயமான பின்னர் அவர்களின் திருவுருவப் படம் ஒன்றை அந்த வித்யாலயத்தில் மக்கள் உற்சாகத்தின் மத்தியில் காசி மகாராஜா திறந்து வைத்தார். நன்கு அலங்கரிக்கப்பட்ட அம்மூன்று படங்களுக்கும் வித்யாலயத்தார் அன்று விசேஷமான பூஜை ஏற்பாடு செய்திருந்தார்கள்.

**காசி டவுன் ஹாலில் நடைபெற்ற மாபெரும் பாராட்டுக் கூட்டம்**

ஸ்வாமிகள் காசியை விட்டுப் புறப்படப் போவதை உத்தே சித்துத் தங்கள் மரியாதையை ஸ்வாமிகளுக்குத் தெரிவிக்க வேண்டி 1935 மார்ச் 9-ஆம் தேதி காசி மக்கள் டவுன் ஹாலில் ஒரு பொதுக் கூட்டம் கூட்ட ஏற்பாடு செய்திருந்தனர். நகரத்தின் பிரதான பண்டிதர்களும், மற்றும் பிரமுகர்களும் 75 பேர்களுக்கு மேல் கையெழுத்திட்ட அழைப்புப் பத்திரிகையை நகர மக்களுக்கு ஏராளமாக வழங்கியிருந்தனர். அன்று டவுன் ஹால் மைதானத் தில் பல்லாயிரக் கணக்கான மக்கள் ஸ்வாமிகள் விஜயம் செய்வ தற்கு வெகு நேரத்திற்கு முன்பாகவே கூடி விட்டார்கள். மைதானம் அடங்க முடியாதவாறு ஜனத்திரள் அங்குக் கூடி இருந்தது. சேவா சமிதியைச் சேர்ந்த சாரணர்களும், போலீஸ் படையினரும் ஜனக் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந் தனர். விளம்பரத்தில் குறிப்பிட்டிருந்தபடி சரியாக மாலை 4 மணிக்கு ஸ்வாமிகள் அங்கு விஜயம் செய்திருந்தார்கள். ஸ்வாமி களின் வரவை அறிந்தவுடன் மக்கள், 'ஜகத்குரு மகாராஜ் கீ ஜய்!' எனக் கோஷமிட்டனர். ஸ்வாமிகளுக்கு வடமொழியிலும், ஹிந்தியிலும் உபசாரப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன.

மகாபண்டிதர்களான ஜய்புர் **மகாமகோபாத்யாய கிரிதர் சர்மாவும், மகாமகோபாத்யாய பஞ்சானன தர்க்க ரத்தினம்** அவர்களும், **தேவநாயகாசாரியர்** அவர்களும், அன்று கூட்டத்தில் பேசினார்கள். ஸ்வாமிகளின் தவ மகிமையைப்பற்றியும் அவர்களது விஜயத்தினால் காசி மக்கள் அடைந்த நன்மையைப்பற்றியும் அவர்கள் விரிவாகச் சொற்பொழிவாற்றினார்கள். அன்று ஸ்வாமிகள் ஹிந்தியில் சில உபதேச மொழிகளை அளிக்கையில் பொது மக்கள் ஏராளமாகக் கூடியிருப்பதைக் கண்டு தாம் மகிழ்ச்சியுறுவதாகவும், அம் மாபெரும் கூட்டத்தைக் காணும் பொழுது மக்கள் உள்ளத்தில் எவ்வளவு தூரம் ஆசார்ய பக்தியானது ஆழ்ந்து பதிந்திருக்கிறது என்பது விளங்குகிறதென்றும், ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதரது அடிச்சுவடுகளைப் பின்பற்றியே இந்த யாத்திரையைத் தாம் மேற்கொண்டிருப்பதாயும், கரைபுரண்டு ஓடும் மக்களது உற்சாகத்தைக் காணத் தாம் மிகவும் மகிழ்ச்சியுறுவதாயும் கூறி, விச்வநாதர், விசாலாக்ஷி, அன்னபூரணி அவர்களின் அனுக்ரகத்தினால் உலகம் முழுவதற்கும் நன்மை ஏற்பட்டுத் தருமத்தில் சுதந்தரம் உள்ளவர்களாக யாவரும் வாழ வேண்டுமென்றும் ஸ்வாமிகள் ஆசீர்வதித்தார்கள். அன்றிரவு 8 மணிக்கு சௌகின் மார்க்கமாக ஓர் பெரிய ஊர்வலம் புறப்பட்டு விச்வநாதர் ஆலயத்திற்குச் சென்றது. ஊர்வலத்தில் பண்டிதர்களும், சந்நியாசிகளும், பொதுமக்களும் ஏராளமாகக் கலந்துகொண்டனர். இந்த ஊர்வலத்தில் ஸ்வாமிகள் எப்பொழுதும் போல் கால் நடையாகவே சென்றார்கள். விச்வநாதர் ஆலயத்தில் சிஷ்யர்களுடன் அமைந்த ஆதி சங்கரரின் பெரிய படமொன்றை அன்றிரவு ஸ்வாமிகள் திறந்து வைத்தார்கள். ஆலயத்தின் நிர்வாகிகள் இதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு கூடிய சீக்கிரத்தில் ஆதி பகவத்பாதரது சிலா உருவ ப்ரதிஷ்டையும் அங்கு நடைபெற வேண்டுமென்றும், காசி க்ஷேத்திரத்திற்கு அது மிகவும் பொருத்தமாயிருக்குமென்றும் கூறி, அதற்கறிகுறியாகவே இந்தப் படம் ஸ்வாமிகளால் அங்கு ஸ்தாபனம் செய்யப்பட்டிருப்பதாக அவர்கள் எண்ணுவதாகவும் விண்ணப்பித்துக்கொண்டனர்.

**காசி நகர மத்ய மண்டபத்தில் பண்டித மஹா சபை**

ஸ்ரீ ஆதி சங்கரர் ஸ்தாபித்த ஆம்னாய பீடங்களைப் பற்றித் தத்துவவிசாரம் செய்து அதிலிருந்து ஒரு முடிவைக் காணவேண்டுமென்ற நோக்கத்துடன் காசியில் 9-3-1935 அன்று காசி பண்டிதர்களின் மகா சபை ஒன்று கூட்டப்பட்டது. காசியி

லுள்ள பிரபல பண்டிதர்கள் யாவரும், மதிப்பிற்குரிய தண்டி சந்யாசிகள் பலரும் அன்று சபைக்கு விஜயம் செய்திருந்தார்கள். விஜயம் செய்த பண்டிதர்களில் முதன்மையானவர்கள் சிலரின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன:

1. பஞ்சானன தர்க்க ரத்ன, 2. ஸ்ரீ ஹரிஹர கிருபாலு, 3. ஸ்ரீ கிரிதர சர்மா, 4. ஸ்ரீ தைலிங்க லக்ஷ்மண சாஸ்திரி, 5. ஸ்ரீ பிரதமநாத தர்க்க பூஷண, 6. ஸ்ரீ துர்க்கா சரண், 7. ஸ்ரீ முகுந்த ஜா பக்ஷ, 8. ஸ்ரீ பண்டித ராஜ சண்டீ பிரஸாத சுக்லா, 9. ஸ்ரீ பாலகிருஷ்ண மிச்ரா, 10. ஸ்ரீ ராம யசஸ் திரிபாடி, 11. ஸ்ரீ வாமாசரண் பட்டாசாரியா. 12. பட்டபல்லி ஸ்ரீ ஜீவந்யாய தீர்த்த.

தண்டி ஸ்வாமிகள் 1. காசி சாரதா சாகை மடத்தின் அதிபர்கள், 2. ஸ்வாமி கரபாத்ரஜீ என்னும் பெயர் பெற்று விளங்கும் அவந்தி சங்கரானந்த, 3. ஸ்வாமி மாதவானந்த தீர்த்தர், 4. ஸ்வாமி நிஜபோதாச்ரமி, 5. ஸ்வாமி பௌமாச்ரமி, 6. ஸ்வாமி வாசுதேவாச்ரமி.

இத்தகைய பண்டிதர்களும், சந்யாசிகளும் அடங்கிய மாபெரும் சபையில் பீடங்களின் தத்துவங்களை விளக்கக்கூடிய கிரந்தங்கள் பலவற்றைப் பண்டிதர்கள் பரிசீலனை செய்தார்கள். காசி மகாராஜாவின் புத்தகசாலையிலிருந்து கிடைத்த ஏட்டுப் பிரதிகளாகவும் புஸ்தகங்களாகவுமிருந்த சிவரகஸ்யம், ஆனந்த கிரி சங்கர விஜயம் போன்ற கிரந்தங்களையும் மற்றும் பழமை யான வேறு கிரந்தங்களையும் பரிசீலனை செய்து, **ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீ சங்கர பகவத்பாதரது சாக்ஷாத் பீடமென்பதாக** முடிவு செய்து, அந்த முடிவையும் ச்லோகங்கள் மூலமாக எழுதி யாவரும் கையெழுத்திட்டு ஸ்வாமிகள் முன் சமர்ப்பித்தனர்.

இதைப் போன்றே, கல்கத்தாவில் வங்காள பிராம்மண மகா சபையின் ஆதரவில் (இதற்குச் சில நாட்களுக்கு முன்னரே) வங்கத்தில் பிரசித்தி பெற்ற 130 பண்டிதர்களுக்கு மேல் கூடி, ஸ்ரீ சங்கர மட ஆம்னய விஷயமாக, நூற்றுக்கணக்கான நூல்களை ஆராய்ச்சி செய்து, **ஸ்ரீ காமகோடி பீடம் ஆதி சங்கரரது அதிஷ்டான பீடமென்ற** தீர்மானத்தைச் செய்து அத்தீர்மானங்களிலும் யாவரும் கையெழுத்திட்டனர். கையெழுத்திட்டவர்களில் முதன்மையான சில பண்டிதர்களின் பெயர்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன :—

1. கல்கத்தா பிராம்மண மகா சபையின் தலைவர் ஸ்ரீ பஞ்சானன தர்க்க ரத்ன.
2. நவத்வீபத்தைச் சார்ந்த மகா மஹோபாத்யாய காமாக்ஷ்ய நாத் தர்க்கவாகீசர்.

3. மகாமகோபாத்யாய ஸ்ரீ துர்க்கா சரண் ஸாங்க தீர்த்த.
4. ,, ஸ்ரீ யோகீந்த்ரநாத் தேவ சர்மா.
5. ,, ஸ்ரீ சிதிகண்ட வாசஸ்பதி சர்மா.
6. ,, பண்டித ஸ்ரீ ஸீதாராம சாஸ்திரி.
7. ,, ஸ்ரீ அனந்தகிருஷ்ண சாஸ்திரி.
8. மகாமகோபாத்யாய ஸ்ரீ குஞ்சவிஹாரி தர்க்கஸித்தாந்த
9. ,, ஸ்ரீ ஹரிதாஸ ஸித்தாந்த வாகீச.
10. ,, ஸ்ரீ ஸகல் நாராயண சர்மா.
11. ,, ஸ்ரீ தேவநாயகாசார்ய.

இந்தத் தீர்மானத்தைப் பண்டிதர்களின் சார்பாக ஸ்வாமிகளிடம் நேரில் சமர்ப்பணம் செய்வதற்காக **மகாமகோபாத்யாய ஸ்ரீ துர்க்காசரண் ஸாங்க தீர்த்தரும், ஸ்ரீ தாமோதர தாஸ் கன்னுவும்** 1-3-1935-ஆம் தேதி காசியை அடைந்து ஸ்வாமிகள் டவுன் ஹாலில் விஜயம் செய்திருந்த பொழுதே அவர்களிடம் அதைச் சமர்ப்பித்தார்கள். ஸ்வாமிகளின் விஜய யாத்திரையின்பொழுது ஸ்வாமிகளைக் கல்கத்தாவிற்கு விஜயம் செய்ய வேண்டுமாய்ப் பிரார்த்தனை செய்து கொள்ளவே அவர்கள் அங்கு வந்ததாகவும், தவறாது வங்காளத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்து வங்க மக்களை ஆசீர்வதிக்க வேண்டுமெனவும் அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். ஸ்வாமிகளும் கூடிய சீக்கிரம் அவர்கள் பிரார்த்தனையைப் பூர்த்தி செய்து வைப்பதாக வாக்களித்தார்கள்.

**காசியிலிருந்து புறப்படுதல்**

1935 மார்ச் 11-ஆம் தேதி காசியில் **பிராம்மண மகாசபையிலும், வர்ணாச்ரம சுயராஜ்ய சங்கத்திலும்** ஸ்வாமிகளுக்கு உபசாரப் பத்திரங்கள் அளித்துப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை நடத்தி வைத்தார்கள். மார்ச் மாதம் 18-ஆம் தேதி காசியிலுள்ள தென்னாட்டு மக்கள் ஹிந்து ஸர்வ கலாசாலையின் சரித்திரப் **பேராசிரியர் கே. வி. ரங்கஸ்வாமி ஐயங்காரைத்** தலைமையாகக் கொண்டு ஸ்வாமிகளுக்கு பிக்ஷை, பாதபூஜை நடத்திவைத்தார்கள். சுமார் 100 தென்னிந்தியர் கையெழுத்திட்டு ஸ்வாமிகளுக்குத் **தமிழில்** ஓர் உபசாரப் பத்திரத்தையும் அன்று வாசித்தளித்தார்கள். மார்ச் மாதம் 20-ஆம் தேதி ஸ்வாமிகள் ராஜ் கட்டத்தின் வழியாகக் கங்கையைக் கடந்து **கயா யாத்திரையை** முன்னிட்டு காசியிலிருந்து புறப்பட்டார்கள். **மகாமகோபாத்யாய சின்ன ஸ்வாமி சாஸ்திரிகள் பண்டிதராஜ ராஜேச்வர சாஸ்திரிகள்** முதலான சில பிரபல பண்டிதர்களும் ஸ்வாமிகளின் யாத்திரையில் கலந்து கொண்டனர்,

**கயாவுக்கு யாத்திரை: கஸ்தர் மஹாதேவ் க்ஷேத்திரத்திற்கு விஜயமும், ஸந்யாசிகள் செய்த பூஜையும்**

1935 ஏப்ரல் 2-ஆம் தேதி ஸ்வாமிகள் **கஸ்தர் மஹாதேவ்** என்னும் க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்குள்ள சிவாலயத்திலுள்ள ஈசனுக்கும் **கஸ்தர் மஹாதேவ்** என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. அந்த க்ஷேத்திரத்தில் சந்யாசிகள் ஏராளமாக வசிக்கின்றனர். நூறு வயதிற்கு மேற்பட்ட துறவிகள் பலரை அவ்விடம் தரிசிக்கலாம். அவர்களில் **தண்டிபாபா** என்னும் சந்யாசி மிகவும் பெருமை வாய்ந்தவர். தமது இளமைப் பருவத்தில் ஸ்ரீ காமகோடி பீடத்தின் பூர்வாசார்யர்களின் ஆசியைத் தாம் பெற்றிருப்பதாக அவர் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டார். அத்தலத்தில் அவரது ஆதீனத்தில் ஒரு மடமும் அதைச் சுற்றி ஒரு தேவாலயமும் அமைந்துள்ளன. ஸ்வாமிகளை அவர் தமது மடத்திற்கு அழைத்து, அவ்விடம் அவர்களைத் தங்கச் செய்து அவர்களுக்குத் தக்கவாறு உபசாரணைகளையெல்லாம் செய்தார். அந்த மடத்தின் பண்டிதர்கள் ஸ்வாமிகளுக்கு ஒரு வரவேற்புப் பத்திரத்தை வாசித்தளித்தனர். ஸ்வாமிகள் மஹாதேவ் ஆலயத்திற்கும், மடத்தில் அமைந்துள்ள தேவாலயத்திற்கும் சென்று ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். அவ்வூரிலுள்ள சந்யாசிகள் யாவரும் அவ்விடம் கூடி ஸ்வாமிகளுக்கு ஒரு பெரிய வரவேற்பை அளித்தனர். வட இந்தியாவில் **கரபாத்ரஜி** என்னும் பெயர் பெற்றுப் புகழுடன் விளங்கும் சந்யாசி அங்குக் கூடியிருந்தவர்களின் சார்பாக வடமொழியில் உபசாரப் பத்திரம் ஒன்றை ஸ்வாமிகளுக்கு வாசித்தளித்தார். அதில் ஸ்ரீ காமகோடி பீடத்தின் பெருமையைப் பற்றியும் ஸ்வாமிகள் கங்கா யாத்திரை செய்து வரும் நோக்கத்தைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருந்தது.

ஏப்ரல் மாதம் 4-ஆம் தேதி ஸ்வாமிக்ள் **சுராஜ்புர** என்னும் சம்ஸ்தானத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்த சம்ஸ்தான மன்னர் ஸ்வாமிகளைத் தக்க மரியாதைகளுடன் வரவேற்று, அவர்களுக்குத் தமது அரண்மனையில் பாதபூஜை முதலியவைகளைச் செய்து வைத்தார். தண்டிபாபாவின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்வாமிகள் மறுமுறையும் 6-ஆம் தேதி கஸ்தர் மஹாதேவிக்கு விஜயம் செய்தார்கள். பின்னர் அவ்விடமிருந்து புறப்பட்டுக் **காஸிபுரி, பக்ஸார்** மார்க்கமாக ஏப்ரல் மாதம் 19-ஆம் தேதி ஆரா என்னும் நகரத்தை அடைந்தார்கள். அந்த நகரம் காசியிலிருந்து சுமார் 200 கிலோ மீட்டர்கள் தூரத்திலுள்ளது.

அந்த நகரத்திலும் ஸ்வாமிகளுக்குப் பெரிய வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தனர். அங்குள்ள **மகாமகோபாத்யாய பண்டித ஸகல் நாராயண சர்மாவும்,** மற்றும் பல பண்டிதர்களும் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தனர். ஸ்வாமிகள் அவர்களுடன் ஹிந்துஸ்தானி பாஷையில் வெகு எளிதாக உரையாடினார்கள். சாஸ்திர சம்பந்த மான சர்ச்சைகள் எல்லாம் ஹிந்துஸ்தானி பாஷையிலேயே அப் பொழுது நடைபெற்றன. ஸ்வாமிகள் பக்தர்கள் கூட்டத்தில் **பக்தியைப்** பற்றி அன்று உபன்யசித்தார்கள். தேச பாஷையில் ஸ்வாமிகள் செய்த உபன்யாசம் மக்கள் மனத்தில் நன்கு பதிந்தது. ஸ்வாமிகளை அவர்கள் வெகுவாகப் புகழ்ந்தனர்.

**கோயில் கார்**

1935 ஏப்ரல் 21-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஸ்வாமிகள் **கோயில்கார்** என்னும் க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்தத் தலம் **சோன்** எனக் கூறப்படும் **சோணபத்ரா** நதியின் கரையில் அமைந்துள்ளது. அந்த நதி பாட்னு நகரத்திற்கு மேற்கே 30 கிலோமீட்டர் தூரத்தில் கங்கையில் சேருகிறது. ஸ்வாமிகள் அந்தப் புண்ணிய நதியில் விதிப்படி ஸங்கல்பம் செய்து கொண்டு நீராடி, அன்று அவ்வூரில் தங்கி நித்திய பூஜையை முடித்துக் கொண்டார்கள். அந்த நதியின் அடித்தளத்தில் **சோண பத்ரம்** எனக் கூறப்படும் விநாயகர் உருவங்கள் கிடைப்பதை அறிந்து, ஸ்வாமிகளே தண்ணீரில் மூழ்கி அந்த மூர்த்தங்களை எடுத்தார்கள்; அந்த விநாயக மூர்த்தங்கள் இன்றும் மடத்தின் பூஜையில் வைக்கப்பட்டுள்ளன.

**பாட்னு நகரப் பிரவேசம் : பீஹார் மக்களின் குதூகல வரவேற்பு**

கோயில்கார் என்னும் ஊரிலிருந்து ஸ்வாமிகள் தானுபுர் மார்க்கமாக 1935 ஏப்ரல் 24, புதன் கிழமை மாலை **பாடலீ புத்ரம்** என்று சரித்திரப் புகழ் பெற்றதும் பிஹார் மாகாணத்தின் தலைநகருமான **பாட்னுவுக்கு** விஜயம் செய்தார்கள். பாட்னு நகரத்தின் வழியே புனிதமான கங்கை நதி ஓடுகின்றது. **அத்வா மகாராஜா, அமாவான் மகாராஜா** மற்றும் நகரத்தின் பிரமுகர்கள் பலர் சேர்ந்து அன்று ஸ்வாமிகளுக்குப் பெரிய தொரு வரவேற்பை அளித்தனர். நகர எல்லையில் ஓர் அலங்கார மான கொட்டகை அமைக்கப் பெற்றிருந்தது. அதில் உயர்ந்த மேடையொன்றும் அமைத்திருந்தார்கள். அந்த மேடையின் மீது ஸ்வாமிகள் சிம்மாசனத்தில் அமர்ந்து, பல்லாயிரக்கணக்கான மக்களுக்குத் தரிசனம் அளித்தார்கள். பல சங்கங்களின் சார்பாக

ஸ்வாமிகளுக்கு வரவேற்புப் பத்திரங்கள் ஹிந்தியிலும், வடமொழியிலும் வாசித்தளிக்கப்பட்டன. இரண்டு மகாராஜாக்களின் துருப்புகள், பரிவாரங்கள், குதிரைப்படைகள் முன் செல்ல, பெரியதொரு ஊர்வலம் நகர எல்லையிலிருந்து புறப்பட்டது. ஸ்வாமிகள் தந்தச் சிவிகையில் அமர்ந்து வீதிகளின் இரு புறங்களிலும் கூட்டங் கூட்டமாக நின்றிருந்த ஜனத்திரளுக்குத் தரிசனம் அளித்து, யாவரையும் ஆசீர்வதித்தார்கள். ஊர்வலம் ஜாகையை அடைந்ததும் மகாராஜாக்களும், பிரமுகர்களும் ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை செய்தார்கள். ஏப்ரல் மாதம் 26ஆம் தேதி ஸ்வாமிகள் பண்டிதர்களின் மகாசபை ஒன்றுக்கு விஜயம் செய்தார்கள். அங்கு மகதம், விதேஹம் முதலான தேசங்களின் பண்டிதர்கள் நூற்றுக்கணக்காகக் கூடி ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து அவர்களை வரவேற்றனர். **பாட்னா விஹார பண்டித சமாஜத்தார்** அப்பொழுது ஸ்வாமிகளுக்கு ஒரு வரவேற்புப் பத்திரத்தை வடமொழியில் வாசித்தளித்தார்கள். 1935 மே 3-ஆம் தேதி பாட்னா **ஹரி** சபையின் வேண்டுகோளுக்கிணங்கி அந்தச் சபைக்கு விஜயம் செய்தார்கள். அதன் அங்கத்தினர்களின் சார்பாக ஸ்வாமிகளுக்கு அங்குப் பாத பூஜை நடத்தப்பட்டது. ஏப்ரல் 26, 27 தேதிகளில் **அத்வா மகாராஜா** ஸ்வாமிகளைத் தரிசித்து சிறந்த முறையில் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை முதலான பணிகளைச் செய்து வைத்தார். ஸ்வாமிகளது பாட்னா விஜயத்தைப்பற்றி அந்த ஊரில் வெளியாகும் **ஸர்ச்சு லைட்** என்னும் ஆங்கிலத் தினசரிப் பத்திரிகை ஏப்ரல் 28-ஆம் தேதி எழுதிய தலையங்கத்தின் ஒரு பகுதி கீழே தரப்பட்டுள்ளது.

"Bihar accords a cordial and respectful welcome to Jagad guru Swami Sankaracharya of Kamakoti Pitam. Heir to a great and honouredtradition, Swamiji Maharaj is an object of veneration to Hindus all over India and his presence in our midst is a rare privilege. Religious leadership is on the wane in these modern days but there is something truly majestic and inspiring in some of these traditions of old that had their roots in the spiritual needs and requirments of the people. The many Pitas established in India served a definite purpose and were parts of the closely knit religious organisation of the times. We have no doubt Swamiji's message will leave an abiding impression on all who recieve it, for what he has to say is the result of study and Tapas."

**பாட்னாவில் சங்கர ஜயந்தி உத்ஸவம்**

1935-ஆவது வருடத்திய **சங்கர ஜயந்தியை** ஸ்வாமிகள் பாட்னாவிலுள்ள அத்வா மகாராஜாவின் அரண்மனையில் நடத்தினார்கள். அப்பொழுது பெரிய பண்டித சபை ஒன்று கூட்டப்பட்டது. ஆதி சங்கரர் பிறந்த நாளாகிய மே மாதம் 7-ஆம் தேதி செவ்வாய்க் கிழமை அன்று கங்கைக் கரையிலுள்ள பாகீரதி கட்டத்திற்கு பெரிய ஓர் ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மடத்தின் கம்பீரமான ஆண் யானையின்மீது ஆதி சங்கரரின் திரு உருவப் படத்தையும், ஆசார்ய பாதுகைகளையும் வைத்து மடத்தின் ஜாகையிலிருந்து வேத கோஷத்துடனும், மடத்தின் நாதஸ்வர கோஷத்துடனும் பெரியதோர் ஊர்வலம் புறப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் இந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ஸ்வாமிகள் ஊர்வலத்துடன் கால்நடையாகவே வந்து கொண்டிருந்தார்கள். ஊர்வலம் கங்கைக் கரையை அடைந்ததும் அவ்விடம் ஆசார்ய பாதுகைகளுக்கு அபிஷேகம் நடைபெற்றது. அந்த அபிஷேகத்தைக் காண மக்கள் கூட்டங் கூட்டமாக அங்குக் கூடியிருந்தனர். பின்னர் ஊர்வலம் திரும்பி ஜாகை அடைந்ததும், ஆதி சங்கரரது திருவுருவப் படத்திற்கும், பாதுகைகளுக்கும் பூஜை, ஆராதனைகள் செய்விக்கப்பட்டன. ஆதி சங்கர பகவத்பாதரது ஜனனத்தைப் பற்றி, ஸ்வாமிகள் ஹிந்துஸ்தானி பாஷையில் சொற்பொழிவாற்றினார்கள். வித்வான்களுக்கெல்லாம் பரிசுகள் வழங்கப்பட்டன. சங்கர ஜயந்தி சம்பந்தமான எல்லாச் செலவுகளையும் **டிகாரி மகாராஜா** ஏற்றுக்கொண்டார். மறுநாள் பாட்னா **பண்டித சபையார்** சுவாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை இவைகளை நடத்தி வைத்தார்கள்.

பாட்னாவில் மாஜி ஹைகோர்ட்டு **ஜட்ஜ் சடர்ஜியும்**, ஹைகோர்ட்டின் பிரதம நீதிபதியும், மற்ற நீதிபதிகளும், பிரதம என்ஜினீயர், மற்றுமுள்ள சர்க்கார் அதிகாரிகளும் **பாபு ராஜேந்திர பிரசாத் குடும்பத்தினரும்** ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டனர். அக்காலத்தில் அங்கு மராமத்து இலாகா உத்தியோகம் வகித்து வந்த திருவிடைமருதூர் வாசியான **ராவ்சாகேப் ஆர். மகாலிங்க ஐயர்** மடத்திற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார். ஓய்வு பெற்ற பிறகு அவர் திருவிடை மருதூரில் மடத்தின் காரியங்களில் ஈடுபட்டுச் சலியாது உழைத்து வந்தார்,

**கயா க்ஷேத்திர யாத்திரா மார்க்கம்—கண்டகி நதி ஸ்நானம்**

ஸ்வாமிகள் பாட்னுவை விட்டுப் புறப்பட்டு 1935 மே மாதம் 11–ஆம் தேதி ஹரிஹர க்ஷேத்திரத்தை அடைந்தார்கள்; இந்த க்ஷேத்திரம் கங்கையின் வடகரையில் அமைந்துள்ளது. இவ்விடம் கூடும் வாரச் சந்தையில் நமது நாட்டில் மாடுகள் விற்பனைக்கு வருவது போல், யானைகள் ஏராளமாக விற்பனைக்கு வரும். அவ்விடம் கண்டகி நதியில் முறைப்படி ஸ்வாமிகள் நீராடினார்கள். மறுநாள் **புன்புன்** என்னும் தலத்தில் புண்ணிய நதியாகிய **புன்புனுவில்** ஸ்நானம் செய்தார்கள். பின்னர் **டேஹடா** என்னும் சிறியதொரு கிராமத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்த ஊர் கிழக்கிந்திய ரயில்வேயிலுள்ள ஒரு சிறிய நிலையம். அன்று **நரசிம்ம ஜயந்தி** ஆதலால் மடத்தில் விசேஷ ஆராதனையும் பானக பூஜையும் நடைபெற்றன. பஞ்ச கௌடர்களில் ஒரு பிரிவான கன்யாகுப்ஜ பிராம்மணர்கள் அவ்வூரில் ஸ்வாமிகளைச் சிறப்புடன் வரவேற்றுப் பாதபூஜை முதலியவைகளை நடத்தி வைத்தார்கள். அவர்களில் **ஸ்ரீ மாதவ மிச்ரா** என்பவராலும், அவர்கள் சகாக்களாலும் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட ஒரு புஷ்ப விமானத்தில் ஸ்வாமிகள் அமர்ந்து ஊர்வலமாக வந்தார்கள். குரு பீடத்தின் ஆசார்ய புருஷர்கள் இவ்விதம் வருவதை அதுவரை கண்டிராத அந்தக் கிராம மக்களுக்கு ஸ்வாமிகளின் வரவு பெரு மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. ஆண், பெண் அடங்கலாக அவ்வூர்வாசிகள் யாவரும் ஸ்வாமிகளுக்குத் தங்களாலான பணிகளைச் செய்தார்கள். பின்பு, சில கிராமங்களின் வழியாக **கயா க்ஷேத்திரத்தை** நோக்கி ஸ்வாமிகளின் விஜய யாத்திரை தொடங்கிற்று. பாட்னுவிலிருந்து கயா நகரம் தெற்குத் திசையில் சுமார் 100 கிலா மீட்டர் தூரத்திலுள்ளது.

**கயா க்ஷேத்திரத்திற்கு விஜயம்**

1935-ஆவது வருடம் மே மாதம் 20ஆம் தேதி ஸ்வாமிகள் **கயா க்ஷேத்திரத்திற்கு** விஜயம் செய்தார்கள். அந்த நகரத்தின் எல்லையில் **டிகாரி மகாராஜாவும்** தலத்தின் மகந்துக்களும், புரோகிதர்களும், கயாவாசிகளும் மற்றுமுள்ள ஊர் மக்களும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் ஸ்வாமிகளை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்று டிகாரி மகாராஜாவின் அரண்மனைக்கு ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். ஏராளமான ஜனத்திரள் ஸ்வாமிகளைத் தரிசிக்க வீதிகளில் முழுவதும் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் அந்தத் தலத்தை அடைந்ததும் **பல்குனி** நதியில் ஸ்நானம் செய்து

விஷ்ணு பாதங்களைத் தரிசித்து அவைகளைத் தமது தண்டத்தினால் தொட்டு வணங்கிப் பூஜை முதலிய வழிபாடுகளை யெல்லாம் செய்தார்கள். அன்றும் மறுநாளும் ஸ்வாமிகள் டிகாரி மகாராஜாவின் அரண்மனையிலேயே தங்கியிருந்தார்கள். ஸ்வாமிகளின் பூஜைக்கும், பரிவாரங்களுக்கும் எல்லாவித வசதிகளையும் அத்தலத்தின் பிரதான மகந்து செய்து கொடுத்து ஸ்வாமிகளுக்கும் பாதபூஜை செய்தார். மே மாதம் 22-ஆம் தேதி ஸ்வாமிகள் **காசீநாத் சிம்ஹா** என்னும் பிரமுக ருடைய **ஆனந்த பவனம்** என்னும் பெயர் பெற்று விளங்கும் விசாலமான அரண்மனைக்கு விஜயமானார்கள். அவ்விடம் **கயா ஸநாதன தர்ம சபையார்** ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்புப் பத்திரத்தை வாசித்தளித்தனர். அந்த வரவேற்புக்கு ஸ்வாமிகள் ஹிந்துஸ்தானியில் பதிலளித்தார்கள். அன்று **முக்ஸுபுரம் மகாராஜா ஸ்ரீ சந்திரேச்வர பிரஸாத்** ஸ்வாமிகளைத் தரிசித்துப் பாதபூஜை நடத்தினார்.

### புத்த கயாவுக்கு விஜயம் செய்தது

1935 மே மாதம் 25-ஆம் தேதி சனிக்கிழமை ஸ்வாமிகள் **புத்த கயாவுக்கு** விஜயம் செய்தார்கள். புத்த கயாவின் ஆலய நிர்வாகியான மகந்து ஸ்வாமிகளைத் தக்க மரியாதையுடன் வர வேற்று, நகரத்தின் முக்கியமான வீதிகளின் வழியாக ஊர்வலத் துடன் ஆலயத்திற்கு அழைத்துச் சென்றார். அவ்விடமுள்ள புராண பிரசித்தி பெற்ற போதி விருக்ஷத்தையும், புத்தரது சிலை யையும் தரிசித்துவிட்டு, அவைகளுக்கு முன்பாக ஸ்ரீ ஆதி சங்கர ரால் ஸ்தாபிக்கப்பட்ட சிவ லிங்கத்தையும் தரிசித்துக்கொண் டார்கள். அதற்கடுத்த நாளும் ஸ்வாமிகள் புத்தகயாவிலேயே தங்கினார்கள். அன்று ஸ்வாமிகள் பல்குனி நதியைக் கடந்து **தர்மாரண்யத்தை** அடைந்து, அவ்விடம் **மதங்க தீர்த்தத்தில்** சங்கல்பம் செய்துகொண்டு ஸ்நானம் செய்தார்கள். அவ்விடமுள்ள **மதங்கேசுவரர்** ஆலயத்திலும் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டு, தர்ம கூபத்தையும் (கிணறு) தர்ம யூபத்தையும் (யாகத்தூண்) தமது தண்டத்தினால் தொட்டு வணங்கினார்கள். புத்த கயாவி லிருந்து திரும்பி ஸ்வாமிகள் மே 27-ஆம் தேதி கயைக்குச் சென்று 28-ஆம் தேதி அக்ஷய வட (ஆலமரம்) தரிசனத்தை செய்துகொண்டார்கள். அவ்விடம் முதுகு மாத்திரம் காணும் **முண்ட பிரஷ்ட சிலையையும்** தமது தண்டத்தினால் தொட்டு வணங்கினார்கள்.

**பிகார் மாகாணத்தின் வழியாக யாத்திரை**

1935 ஜுன் மாதம் 4-ஆம் தேதி ஸ்வாமிகள் **புதோலி** கிராமத்தை அடைந்து, அவ்விடமுள்ள மகந்தினால் உபசரிக்கப் பட்டு அங்கு 3 நாட்கள் தங்கியிருந்தார்கள். அடுத்த முகாம் **டோடா** மடத்தில் போடப்பட்டது. அந்த மடத்தின் மகந்தும் ஸ்வாமிகளுக்குப் பலவித உபசரணைகளைச் செய்து மடத்தின் பரிவாரங்கள் தங்குவதற்கு விசேஷ ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தார். பின்னர் **நவாடா, சிகந்திரா** மார்க்கமாக 11-ஆம் தேதி **ஜமுயி** நகரத்திற்கு ஸ்வாமிகள் விஜயமானார்கள். அவ் விடம் **ஸ்ரீ சிவஸோஹனு** தலைமையில் நகரப் பிரமுகர்கள் ஸ்வாமிகளுக்குத் தக்கவாறு மரியாதைகள் செய்தார்கள். பின்னர் 14-ஆம் தேதி **கிதோர்** என்னும் பட்டணத்திற்கு விஜயமானார்கள். அந்தப் பட்டணம் அதன் பெயராலுள்ள சுதேச சம்ஸ்தானத்தின் தலைநகரமாகும். **க்ருக்ரகூடம்** என்று அதற்கு மற்றொரு பெயரும் உண்டு. அந்தச் சம்ஸ்தானத்தின் மகாராஜா ஸ்வாமிகளை ராஜ மரியாதைகளுடன் தமது அரண்மனைக்கு அழைத்துச் சென்று பாதபூஜை முதலான வந்தன வழிபாடுகளையெல்லாம் செய்தார். அரண்மனையின் சம்ஸ்தான பண்டிதர்களால் ஸ்வாமிகளுக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது.

**வைத்யநாத க்ஷேத்திரத்திற்கு விஜயம்**

பிஹார் மாகாணத்திலுள்ள இந்த க்ஷேத்திரம் பாரத நாட்டில் பழமையானதொரு ஸ்வயம்பூ க்ஷேத்திரம்; இத்தலத்தைத் **தேவ்கர்** எனக் கூறுகின்றனர். தேவ்கர் என்னும் சொல்லுக்கு **கடவுளது வீடு** என்பது பொருள். இப்புனிதத் தலத்திற்கு ஸ்வாமிகள் 1935 ஜுன் மாதம் 21-ஆம் தேதி வெள்ளிக்கிழமை அன்று விஜயமானார்கள். ஸ்வாமிகள் ஊர்வலத்துடன் நகரத்தில் பிர வேசித்து, அங்குள்ள சம்ஸ்கிருத வித்யாலயத்திற்கு முதலில் விஜயம் செய்தார்கள். அவ்விடத்தில் ஸ்வாமிகளுக்கு நகர மக்களும், பண்டிதர்களும், தேவஸ்தான நிர்வாகிகளும் பண்டாக் களும் வரவேற்புப் பத்திரங்களை வாசித்தளித்தார்கள். ஸ்வாமிகள் யாவருக்கும் ஆசி கூறி விடை கொடுத்து அனுப்பி விட்டு, அத்தலத்தின் புண்ணிய தீர்த்தமாகிய சிவகங்கையில் விதிப்படி நீராடினார்கள்.

பின்னர் ஸ்வாமிகள் வைத்யநாதர் ஆலயத்திற்கு விஜயம் செய்தார்கள். ஆலய நிர்வாகிகளும், பண்டாக்களும் ஸ்வாமிகளைத் தேவஸ்தான மரியாதைகளுடன் எதிர்கொண்டு ஆலயத்தினுள்

அழைத்துச் சென்றார்கள். ஸ்வாமிகள் அவ்வாலயத்தின் லிங்கத்தைத் தரிசித்து வெகு நேரம் தியானத்தில் இருந்தார்கள் இவ்வாலயத்தின் அம்பிகையாகிய **கிரிஜா தேவியின்** சந்நிதானத்தையும் ஸ்வாமிகள் தரிசித்துக் கொண்டார்கள். எல்லாச் சந்நிதிகளுக்கும் ஸ்வாமிகள் பட்டு, பீதாம்பரங்களை வழங்கி அலங்கரிக்கச் செய்தார்கள். அன்று ஆலயத்தில் விசேஷமாகப் பூஜைகள் அர்ச்சனைகள் நடைபெற்றன. அன்று மாலை தலத்தின் பண்டிதர்களுக்கும், தேவஸ்தான பண்டாக்களுக்கும் ஸ்வாமிகள் சால்வைகளைக் கொடுத்து முதலான மரியாதை செய்தார்கள். அதற்கு மறுநாள் ஸ்வாமிகள் அவ்வூரிலுள்ள **ஸ்வர்க்காச்ரமத்திற்கு** விஜயம் செய்தார்கள். அந்த ஆச்ரமமானது **பாலானந்த பிரம்மசாரி** என்பவரால் ஸ்தாபனம் செய்விக்கப்பட்டது. அவர் ஸ்வாமிகளைத் தமது ஆச்ரமத்திற்கு வரவழைத்துப் பாதபூஜை முதலான மரியாதைகளைச் செய்தார். அவர் ஸ்வாமிகளுக்குச் கௌரிசங்கர ருத்ராக்ஷ மாலை ஒன்றையும் சமர்ப்பணம் செய்தார். அந்தப் பிரம்மசாரி ஸ்வாமிகளைக் கடவுளது அம்சமெனவே நினைத்து அவர்களுக்குப் பக்தியுடன் நடத்திய வழிபாடுகளைக் கண்டு அத்தேச மக்கள் பரவசமடைந்தார்கள்.

வைத்யநாத க்ஷேத்திரத்திலிருந்து **கல்கத்தா** தென் கிழக்கில் சுமார் 400 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. அந்த வருஷ வியாஸ பூஜையை ஸ்வாமிகள் கல்கத்தா நகரத்தில் நடத்துவதெனத் தீர்மானித்திருந்தார்கள். மேலும் நாட்கள் 23 தான் இருந்தன. நாள் ஒன்றுக்கு 20 மைல்களுக்கு மேல் யாத்திரை செய்து கல்கத்தாவைக் குறித்த காலத்திற்குள் அடைய முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன. இந்த ஏற்பாட்டின்படி எந்த ஊரிலும் ஒரு நாள்கூட முழுவதும் தங்கமுடியவில்லை. ஆங்காங்கு மக்கள் அளித்த வரவேற்புக்களையும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அன்றாடம் பூஜைக்கு மாத்திரம் ஒவ்வொரு இடத்தில் தங்கிப் பூஜையை முடித்துக் கொண்டு வெயில் சாய்ந்ததும் பிரயாணத்தைத் தொடங்க வேண்டியிருந்தது. அந்த மார்க்கத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்த முக்கிய இடங்களில் **டும்கா, குரி, காட்வா, பர்த்துவான்** இவைகளைக் குறிப்பிடலாம்.

### கல்கத்தா நகரப் பிரவேசம்—மக்களின் குதூகல வரவேற்பு

1935 ஜூலை 13-ஆம் தேதி சனிக்கிழமை ஸ்வாமிகள் ஹூக்ளி எனக் கூறப்படும் பாகீரதி நதியின் தென்கரையில் உள்ள **ஹௌராவுக்கு** விஜயம் செய்தார்கள். அங்கு நகரப் பிரமுகர்கள்

ஏராளமாகக் கூடி ஸ்வாமிகளை வரவேற்றார்கள். நகரத்திலுள்ள வங்க மக்களுடன், கல்கத்தாவில் குடியேறியிருக்கும் குஜராத்திகள், மகாராஷ்டிரர்கள், ஹிந்துஸ்தானிகள், மார் வாடிகள் தென்னிந்தியர்களான ஆந்திர, திராவிட, கேரள, கர்னாடக நாட்டு மக்களும் மிகுந்த ஒற்றுமையுடனும், உற்சாகத் துடனும் இருந்து ஸ்வாமிகளின் வரவேற்பில் பணியாற்றினார்கள். நகர சபை அங்கத்தினரான **வஸந்தகுமார்** என்பவராலும் மற்றும் சில பிரமுகர்களாலும் புஷ்ப அலங்காரத்துடன் வெகு அழகாகத் தயாரிக்கப்பட்டிருந்த பிரத்யேகமான சிவிகையில் ஸ்வாமிகள் அமர்ந்து நகரத்தின் பிரதான வீதிகளின் வழியே சென்றார்கள். இந்தியாவின் நகரங்களுக்குள் பெரிய நகரமாக விளங்கும் கல்கத்தாவின் வீதிகளின் இருபுறங்களிலும் பல்லா யிரக்கணக்கான மக்கள் நின்று ஸ்வாமிகளைத் தரிசித்தார்கள், போலீஸ் படைகள் ஊர்வலத்தில் பின் தொடர்ந்து கூட்டத்தைச் சமாளித்து யாவரும் ஸ்வாமிகளை நன்கு தரிசிக்க ஏற்பாடு செய்தனர். அன்று பகலில் ஸ்வாமிகள் ஹௌராவில் தங்கி யிருந்து, அன்று இரவு கங்கையைக் கடந்து **அகில இந்திய வர்ணாச்ரம சுயராஜ்ய சங்கத்தின் காரியலாயத்திற்கு** விஜயம் செய்தார்கள். அந்தச் சங்கத்தார் ஸ்வாமிகளுக்கு அப்பொழுது ஒரு வரவேற்புப் பத்திரத்தை வாசித்தளித்தார்கள். அங்கு ஆயிரக் கணக்கான மக்கள் கூடியிருந்தனர். அவர்களில் சுதேச சம்ஸ்தான மன்னர் சிலரும், அரசாங்க உயர்தர அதிகாரிகள் பலரும், பத்திரிகைப் பிரதிநிதிகள் பலரும் காணப்பட்டனர். காளி கட்டத்தில் ஆதி கங்கைக் கரையில் அமைந்துள்ள **நாட்டுக் கோட்டை நகரத்தார் விடுதிக்கு** ஸ்வாமிகள் அன்று இரவு விஜயமானார்கள். ஸ்வாமிகளின் கல்கத்தா நகர விஜயத் தைப் பற்றிய செய்திகளை நகரத்தின் ஆங்கிலத் தினசரிகளும், வங்காளி, ஹிந்திப் பத்திரிகைகளும் விரிவாக வெளியிட்டன.

**கல்கத்தாவில் 1935-ஆவது வருஷ வியாஸ பூஜை**

1935-ஆவது ஆண்டு ஜூலை மாதம் 16-ஆம் தேதி செவ்வாய்க் கிழமை யுவ வருடத்திய ஆஷாட சுக்ல பூர்ணமி அன்று நிகழ்ந்த வியாஸ பூஜையைக் கல்கத்தா காளி கட்டத்திலுள்ள நகரத்தார் சத்திரத்தில் ஸ்வாமிகள் நடத்தினார்கள். அன்று காலை ஸ்வாமிகள் வபனம் செய்து கொண்டு, கங்கையில் நீராடி, வழக்கமாக அன்று பூஜைக்குப் பிரதிஷ்டை செய்யப்படும் ஸ்ரீ கிருஷ்ண விக்ரகத்துடன் ஊர்வலமாக ஜாகைக்கு வந்து

சேர்ந்தார்கள். தமிழ் நாட்டின் முக்கிய தேவாலயங்களி லிருந்தும், காசி, கயை முதலிய வடநாட்டுத் தேவாலயங்களி லிருந்தும், பிரசாதங்களும், சம்ஸ்தானங்களிலிருந்து மரியாதை களும் பிரதிநிதிகள் மூலம் அன்று ஸ்வாமிகளுக்குச் சமர்ப்பணம் செய்விக்கப்பட்டன ; ஸ்வாமிகள் அவைகளை யெல்லாம் பூஜை யில் அமர்ந்திருந்தவாறே ஏற்றுக்கொண்டார்கள். பூஜை முடிந் ததும் பண்டிதர்கள் பிரம்ம சூத்திரத்தில் வாக்கியார்த்தம் நடத்தி ஞர்கள். மறுநாள் பண்டிதர்களுக்குச் சம்மானங்கள் அளிக்கப் பட்டன. அன்று முதல் சாதுர்மாஸ விரதத்திற்காக ஸ்வாமிகள் கல்கத்தாவிலேயே இரண்டு மாதங்கள் தங்கியிருந்தார்கள்.

**கல்கத்தாவில் பல சங்கங்களுக்கு விஜயம் செய்தது**

1935 ஜூலை 19 ஆம் தேதி சனிக்கிழமை அன்று ஸ்வாமிகள் சிறந்த தொரு பக்தரான **தாமோதர தாஸ் கன்னு** அவர்களது **தேவி மந்திரத்திற்கு** விஜயம் செய்தார்கள். அவ்விடம் **மகாமகோ பாத்யாய ஸீதாராம சாஸ்திரிகள்** முதலான பிரபல பண்டிதர் களால் வரவேற்புப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. ஆகஸ்ட் மாதம் 2 ஆம் தேதி சனிக்கிழமை கல்கத்தா **தேவாலயப் பாதுகாப்புச் சங்கம், மார்வாடி மகாஜன சபை, விசுத்தானந்த வித்யாலயத்தின் நிர்வாக சபை** இவைகளால் ஸ்வாமிகளுக்குப் பாத பூஜை செய்விக்கப்பட்டது. அன்று மாலை ஸ்வாமிகள் அந்த வித்யாசாலைக்கு விஜயம் செய்தார்கள். அங்கு **மகாமகோ பாத்யாய துர்க்கா சரண்** அவர்களால் ஸ்வாமிகளுக்கு வடமொழி யில் ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. அப் பொழுது நூற்றுக்கணக்கான பண்டிதர்கள் விஜயம் செய்திருந் தனர். ஸ்வாமிகளின் பூஜைக்கென வெள்ளி கட்டிய வலம்புரிச் சங்கு ஒன்றைப் பண்டிதர்கள் காணிக்கையாக அளித்தார்கள். ஆகஸ்ட் 7 ஆம் தேதி ஸ்வாமிகள் பக்தர்களின் அழைப்புக்கு இணங்கி, **ரதன் சர்க்கார் கமுராரி லால் மேத்தா** நகர **சமாஜ மண்டபத்திற்கு** விஜயம் செய்தார்கள். சமாஜ கட்டிடத்தில் அப்பொழுது ஆயிரக்கணக்கான பக்தர்கள் கூடியிருந்தார்கள். சமாஜத்தின் பிரதிநிதிகளான முர்ட **வீதியிலுள்ள கிரிதர்லால்** முதலான பிரமுகர்கள் ஸ்வாமிகளை வரவேற்றனர். ஸ்வாமிகள் அங்கு அவர்களுக்கென அமைக்கப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தவுடன் அவர்களுக்கு வங்காள பாஷையில் ஓர் வரவேற் புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. ஸ்வாமிகள் ஸம்ஸ் கிருதத்திலும், ஹிந்தியிலும் அந்த உபசாரத்திற்குப் பதில்

அளித்து, ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவரும் அவரவர்களது சுயதர்மத்தைக் கைவிடாது ஆஸ்திகத்தை வளர்க்க வேண்டுமென்றும் குழந்தைகளுக்கு நல்ல வழியில் பயிற்சி அளிக்கவேண்டுமென்றும் கூறினார்கள். ஆகஸ்ட் மாதம் 23-ஆம் தேதி வெள்ளிக்கிழமை **விதேஹ** தேசத்திலிருந்தும், **சௌராஷ்டிர** ராஜ்யத்திலுள்ள **சோமநாத்** க்ஷேத்திரத்திலிருந்தும், **மிதிலா** தேசத்திலிருந்தும் மிகவும் பிரசித்தி பெற்ற பண்டிதர்கள் பலர் ஸ்வாமிகளைத் தரிசிக்கக் கல்கத்தாவுக்கு விஜயம் செய்து அவர்களைக் காளிகட்டத்தில் தரிசித்து, தங்கள் தேசங்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் விஜயம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டனர். அப் பிரார்த்தனையை விஞ்ஞாபனம் மூலம் எழுதியும் ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார்கள். ஸ்வாமிகளோ அந்தத் தேசங்களுக்கெல்லாம் வரவேண்டுமென்ற அவா தமக்கு இருப்பதாகவும், ஆனால் இந்த யாத்திரையில் அவ்விடங்களுக்கெல்லாம் விஜயம் செய்யும் முன்னேற்பாடுகள் எதையும் தாம் செய்துகொள்ளாததால், பின்னர் அவ்விஷயத்தை ஆலோசிப்பதாயும் கூறினார்கள். அந்தப் பண்டிதர்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் காஷ்மீர் சால்வைகள் அளித்து மரியாதை செய்து அவர்களைப் பெருமைப்படுதினார்கள்.

**காளி தேவியின் ஆலயத்தில் நடை பெற்ற பெரிய வரவேற்பு**

1935 செப்டம்பர் மாதம் முதல் தேதி கல்கத்தா **காளி கோவிலின்** தேவஸ்தான தர்மகர்த்தர்கள் ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்பை அளித்தார்கள். பக்தர்கள் அங்கு ஆயிரக் கணக்கில் கூடியிருந்தனர். அம்பிகைக்கு ஆடுகளைப் பலியிடக் கூடாதென்று ஓர் இயக்கமானது அப்பொழுது கல்கத்தாவில் ஒரு சிலரால் தோற்றுவிக்கப்பெற்றது. அந்த இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் ஒவ்வொரு நாளும் தேவியின் ஆலயத்திற்கு முன்னர் சத்தியாக்ரகமும், மறியலும் செய்யத் தொடங்கினர். தொன்றுதொட்டுப் பலியிடும் வழக்கமானது அவ்வாலயத்தில் இருந்து வந்திருக்கிறது. ஆடுகளைப் பலியிடுவதில் நம்பிக்கை கொண்ட பெரும்பாலான பொதுமக்கள் இவ்வியக்கத்தைக் கண்டு கவலையுற்றனர். அதனால் அதற்கு ஒரு எதிர்ப்பு இயக்கமும் கிளம்பிற்று. எவ்வித விபரீதச் செயல்களும் அப்பொழுது நடைபெறுமலிருக்க அரசாங்கத்தார் மிக நிதானத்துடன் நிலைமையைச் சமாளித்து வந்தனர். அன்று ஸ்வாமிகளுக்கு வட மொழியிலும் வங்காளி பாஷையிலும், ஆங்கிலத்திலும் உபசாரப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. தேவாலயத்தின் தர்மகர்த்தர்கள், பூஜகர்



1935-இல் கல்கத்தா நகரில் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு வரவேற்பு அளித்த மாபெரும் ஜனசமுத்திரம்



1935-இல் கல்கத்தாவிற்கு ஸ்ரீ ஆசார்யர்கள் விஜயம் செய்தசமயம் அவர்கள்
தர்சனத்திற்காக அணிவகுத்துக் காத்திருக்கும் மகாஜனங்கள்



திருவிடைமருதூரில் ஸ்ரீசங்கரமடத்தில் பிரதிஷ்டை செய்திருக்கும் ஸ்ரீ சங்கரர் பாதுகைக்கு ஸ்ரீ புதுப்பெரியவர்கள் 108 ஜரிகை சால்வைகளால் அர்ச்சனை செய்கிறார்கள்; ஸ்ரீ பரமாசார்யர்கள். மற்ற சந்நியாசிகளுடன் தர்சிக்கிறார்கள்



திருவிடமருதூரில் புதிதாகநிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீ சங்கர மண்டப விமானத்திற்கு ஸ்ரீ புதுப்பெரியவர்கள் கும்பாபிஷேகம் செய்கிறார்கள்.

கள், இவர்களின் சார்பாக அந்த வரவேற்பை '**தர்சனசாகர்**' **ஸ்ரீ குருபாத சர்மா ஹால்தார்** வாசித்தளித்தார். அந்த வரவேற்பில் ஆதி சங்கரர் முதலில் சிருங்கேரி, பூரி, துவாரகை, பத்ரி, (ஜோதிர் மடம்) இவ்விடங்களில் நான்கு மடங்களை ஸ்தாபித்து அவைகளில் முறையே சுரேச்வரர், பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், இவர்களை நியமித்துப் பின்னர் காஞ்சியை அடைந்து அங்கு சர்வக்ஞபீடம் ஏறி, **காஞ்சீ** என்னும் மத்ய ஸ்தானத்தில் தமக் கென ஒரு மடத்தை ஸ்தாபனம் செய்துகொண்டார்களென்றும், அதுவே இன்று **ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்** என்று பாரத பூமி முழுவதும் பிரசித்தி அடைந்துள்ள தென்றும், தற்காலத்தில் அந்தப் பீடத்தை அலங்கரிக்கும் மகானுகிய **ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** ஆதி சங்கரரைப்போலவே கால் நடை யாகப் பாரத தேசத்தில் விஜய யாத்திரையை மேற்கொண்டுள் ளார்களென்றும், நாட்டில் தோன்றியுள்ள நாஸ்திகத்தை ஒழித்து ஆஸ்திகத்தைப் பரவச்செய்து இந்த விஜய யாத்திரையைக் கூடிய சீக்கிரம் பூர்த்தி செய்துகொண்டு பரமேச்வரரது அனுக்ரகத்தி னுலும் மகாகாளியின் வரப்பிரசாதத்தினுலும் ஸ்வாமிகள் வெற்றிக்கொடியுடன் ஸ்ரீ காஞ்சியை அடைய வேண்டுமென்றும் கோரப்பட்டிருந்தது.

இந்த உபசாரப் பத்திரமானது ஸ்வாமிகள் காளி கட்டத் திற்கு விஜயம் செய்த உடனடியாக ஏன் அளிக்கப்படவில்லை என்னும் கேள்வியை எழுப்பி அதற்கு விடையளிக்கும் வகையில் வண்டுகள் முதலில் சிறிது நேரம் புஷ்பங்களைச் சுற்றி வட்ட மிட்டுக் கொண்டே வருமென்றும், பின்னர் புஷ்பத்தின் மேல் உட்காரும் என்றும், அதன் பின்னரே புஷ்பத்திலுள்ள தேனை முகர்ந்து அதைப் பருகி அதன் சுவையை அனுபவிக்கும் என்றும், அதுபோலவே அவர்கள் படிப்படியாக ஸ்வாமிகளது பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டார்களென்றும், அந்த உபசாரப் பத்திரத்தில் அழகாகக் கூறப்பட்டிருந்தது.

அந்த உபசாரத்திற்கு ஸ்வாமிகள் ஹிந்தியிலும், வங்காளி யிலும் பதிலளிக்கையில் தேவாலய நிர்வாகஸ்தர்கள் தமக்குச் செய்த உபசாரங்களையெல்லாம் ஆதி சங்கர பகவத்பாதருக்கே செய்ததாகத் தாம் ஏற்றுக்கொள்வதாகக் கூறி எல்லோரையும் ஆசீர்வதித்தார்கள். மேலும் காளி மந்திரத்தில் ஆடு பலியிடும் சம்பந்தமாகச் சத்யாக்ரகமும் மறியலும் நடைபெறுவதைக் குறிப் பிட்டு ஸ்வாமிகள் பேசிய பொழுது, தேவிக்கு அர்ப்பணமாகப் பலியிடும் வழக்கம் நமது நாட்டில் வெகு காலமாக இருந்து வருகிற

தென்றும், சாஸ்திரங்களிலுள்ள நம்பிக்கையினாலேயே புலால் உண்ணும் சமூகத்தைச் சார்ந்த மக்கள் இந்த வழக்கத்தை மேற் கொண்டுள்ளார்களென்றும், இவ்விதம் பலியிடுவதால் பலியிடு வோருக்கும் பலியிடப்படும் பிராணிகளுக்கும் நன்மையே ஏற்படு மென்பது சாஸ்திரங்கள் அனுமதித்துள்ள உண்மையென்றும் கூறி, ஜீவஹிம்சை தடுப்பில் அக்கறை கொண்டவர்கள் ஆகாரத் திற்கெனக் கோடிக்கணக்காக உயிர்ப் பிராணிகள் உலகெல்லாம் அன்றாடம் கொல்லப்படுவதைத் தடுக்க ஏன் முயற்சிக்கக் கூடா தென்றும் வினவினார்கள். சாஸ்திரங்களில் நம்பிக்கை வைத்திருக் கும் ஆஸ்திகர்களுக்கு எதிராக நடத்தப்படும் இயக்கமாக இஃது இருப்பதால், இதைத் துவக்கி வைத்தவர்களின் எண்ணம் எவ்வா ருக இருந்தபோதிலும், இந்த இயக்கத்தைத் தாம் ஆதரிக்க முடி யாதென ஸ்வாமிகள் மேலும் தமது அபிப்ராயத்தைத் தெரிவித் தார்கள்.

**கல்கத்தா பிரமுகர்கள் செய்த விசேஷப் பணிகள்**

1935 செப்டம்பர் 4-ஆம் தேதி கல்கத்தா ஹைகோர்ட்டு **ஜட்ஜ் மன்மதநாத் முகர்ஜி** ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாத பூஜை முதலியவற்றைச் செய்துவைத்தார். செப்டம்பர் 12-ஆம் தேதி வியாழக்கிழமை சாதுர்மாஸ சங்கல்பமும் முடிவடைந்தது. அன்று ஸ்வாமிகள் கங்கையைக் கடந்து ஊர்வலத்துடன் நகரத்தை அடுத் துள்ள **அகர்** என்னும் கிராமத்திற்கு விஜயம் செய்தார்கள். அவ்விடம் **சிவராம் கிருஷ்ணு** என்பவரது ஜாகையில் அவர்கள் தங்கியிருந்தார்கள். அந்தக் கிராம மக்கள் மிகுந்த மரியாதை களுடன், ஸ்வாமிகளை வரவேற்றுப் பாதபூஜை முதலியவைகளைச் செய்து வைத்தார்கள். அதை அடுத்து **பர்த்வான் மகாராஜாவும், நாடோர் மகாராஜாவும்** ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளை நடத்தினார்கள். செப்டம்பர் மாதம் 14-ஆம் தேதி சனிக்கிழமை ஸ்வாமிகள் **மகா மகோபாத்யாய என். எஸ். அனந்த கிருஷ்ண சாஸ்திரிகள்** ஜாகையில் தங்கி, அவர் அளித்த பிக்ஷையை ஏற்றுக்கொண்டார்கள். அன்று கல்கத்தா அரசாங்க ஸம்ஸ்கிருத கலாசாலையின் தலைவர் **துவாரகநாத் மித்தர்** முதலான பல பிரசித்தி பெற்ற பண்டிதர்கள் ஸ்வாமிகளுக்கு வடமொழியில் உபசாரப் பத்திரங்களை வாசித்தளித்தார்கள். செப்டம்பர் 18-ஆம் தேதி **பட்டபள்ளி** என்னும் கிராமத்திற்கு விஜயமானார்கள். அந்தக் கிராமம் சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற பண்டிதர்கள் பலர் வசிக்குமிடம். இது **பாகீரதி** நதியின் கரையில் அமைந்துள்ளது.

அங்கு ஐந்து சிவாலயங்களின் நடுவில் பெரியதோர் அலங்காரக் கொட்டகை அமைத்து அதில் ஸ்வாமிகளை வரவேற்றுப் பண்டித சபையார் தாங்கள் தயாரித்த வரவேற்பிதழ்களை வாசித்துக் கொடுத்தனர். வேதங்களையும், தருமங்களையும் பிரசாரம் செய் வதற்குப் பண்டிதர்கள் எடுத்துக்கொள்ள வேண்டிய முயற்சி களைப் பற்றி ஸ்வாமிகள் அன்று சில உபதேச மொழிகளைக் கூறி னார்கள். செப்டம்பர் மாதம் 19-ஆம் தேதி ஸ்வாமிகள் **நவத்வீ பத்தைச்** சார்ந்த **காஞ்சன்பள்ளி** என்னும் இடத்தில் நிறுவப்பட் டிருக்கும் கோசாலையைப் பார்வையிட்டார்கள். அப்பொழுது அங்கு ஒரு கோ பூஜையும் நடைபெற்றது. செப்டம்பர் 23-ஆம் தேதி வங்காளப் பிராம்மண சபையின் அழைப்பை ஏற்றுக் கொண்டு, ஸ்வாமிகள் அந்தச் சபையின் காரியாலத்திற்கு விஜயம் செய்தார்கள். வங்கப் பிராம்மண சமூகத்தினரும், மற்றும் ஹிந்துஸ்தானி, குஜராத்தி, மகாராஷ்டிரம், ஆந்திரம், திரா விடம் முதலான தேசங்களின் பிராம்மண சமூகத்தினரும் அங்கு ஏராளமாகக் கூடியிருந்தனர். அந்தச் சபையின் தலைவர் வங்கத் தில் மிகவும் பிரசித்தி பெற்ற **பண்டித பஞ்சானன தர்க்க ரத்ன** என்பவராவர். வங்கத்தில் இவர் மிகுந்த மதிப்பு வாய்ந்த பண்டி தர். அரசாங்கம் சாரதா சட்டத்தை அமலுக்குக் கொண்டு வந்ததின் காரணமாக அவர் தமது மகாமகோபாத்யாய பட்டத் தைத் துறந்த பண்டிதர்களில் அவர் முதல்வராவர். ஸ்வாமிகளுக்கு அன்று அவர் வடமொழியில் ஓர் உபசாரப் பத்திரத்தை வாசித் தளித்தார். அந்த உபசாரப் பத்திரத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு கீழே தரப்பட்டுள்ளது.

**பண்டித பஞ்சானன தர்க்க ரத்ன அளித்த வரவேற்புரை**

"ஸ்ரீமத் ஆதி சங்கரரது பரம்பரையின் ஜோதியாகிய ஸ்ரீகாம கோடி பீடத்தை அலங்கரிக்கின்றவர்களும், சிவபிரானது மானிட உருவமோ என நினைக்கும் வண்ணம் துறவிகளுக்கெல்லாம் வேந் தராக விளங்கி வருகின்றவர்களுமான தங்கள் வரவு நல்வரவாகுக!

நமது தர்மம் இன்னதென அறியமாட்டாமல் துன்பக்கடலில் மூழ்கித் தவிக்கும் மக்களை ஸன்மார்க்க உபதேசங்களாலும், கருணை மிக்க அருளினாலும் கைகொடுத்துக் கரை ஏற்றி நல்வழி யில் ஈடுபடும்படி செய்யும் தங்கள் விஜயமானது இந்தக் கல்கத்தா நகரத்திற்கு இத்தருணம் கிடைத்தது நாங்கள் செய்த புண்ணியத்தின் பயனே அன்றி வேறில்லை. மானிட உருவத் துடன் வந்த சிவபெருமான் போல எங்கள் முன் காட்சி அளிக்கும்

தங்கள் திருவடித்தாமரைகளை வணங்கிச் சிற்சில சொற்களைச் சொல்ல விரும்புகின்றேன்.

இந்தக் கௌட மண்டலத்தில் அமைந்துள்ள கல்கத்தா நகரமானது புதிதாக நிர்மாணிக்கப்பட்டதேயாகும். இந்த நகரத்திற்குச் சரித்திரப் பிரசித்தி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. **வராஹமிஹிரர்** இயற்றிய மிகப் பழமையான பிருஹத்ஸம்ஹிதை என்னும் நூலை ஆராய்ந்து பார்த்ததில் சுமார் 2,500 வருடங்களுக்கு முன்னர் இந்தப் பிரதேசம் முழுவதும் பெரிய சமவெளியாகவும், மணற்பாங்காகவும் இருந்து வந்ததாகவே புலப்படுகிறது. இந்த நகரத்திற்குத் தற்காலம் அமைந்துள்ள கல்கத்தா என்னும் பெயரும் காரணப் பெயரேயாகும். பொதுவாகப் **பரங்கிகள்** என அழைக்கப்பட்டு வந்த ஐரோப்பியர்கள் இந்த நகரத்தில் குடியேறிய பிறகும் வெகுகாலம் வரையில் இந்த இடம் தாக்குத் தாக்காக அமைந்து, மனிதர்கள் வாழ்வதற்கு முழு வசதிகளும் அற்றதாகவே இருந்து வந்திருக்கிறது. ஆகையால் இந்த நகரமானது தோன்றிய காலம் முதலே தங்களைப் போன்ற பெரிய மகான்களது வரவால் புனிதமாக்கப்படவில்லை என்றே நான் நினைக்கிறேன். ஸ்ரீ ஆதி சங்கரரது காமகோடி பீடத்தின் 68-ஆவது ஆசாரியர்களாகவும், ஜகத் குருவாகவும் விளங்கும் தாங்கள் மிகுந்த கருணையுடன் இங்கு விஜயம் செய்து இந்த இடத்தைப் புனிதமாக்கியது எங்களது பெரிய பாக்யமேயாகும்.

காசி மகாராஜாவின் புத்தகசாலையில் பாதுகாத்து வைக்கப்பட்ட பழமையான ஏட்டுப் பிரதிகளில் **சிவ ரஹஸ்யம்** என்னும் நூலைக் கண்ணுற்று அதைப் படித்து ஆராய்ச்சி செய்து பார்க்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. ஸ்ரீ ஆதி சங்கரர் பாரத நாட்டின் நான்கு திசைகளிலும் துவாரகை, ஜகந்நாதம், பதரிகாச்ரமம், சிருங்ககிரி என்ற நான்கு இடங்களில் மடங்களை ஸ்தாபித்து, பின்னர் **காஞ்சியில் ஸர்வக்ஞ பீடம்** ஏறி அங்குத் தமக்கென ஓர் மடத்தை அமைத்து அவ்விடத்திலேயே ஸித்தி பெற்றதாகவும் அந்த நூலில் கூறப்பட்டுள்ளது. மேலும் **ஸ்ரீ சுரேச்வராசாரியர்**, தமது குருவான ஸ்ரீ சங்கரரால் காஞ்சியில் ஸ்தாபிக்கப்பட்ட பீடத்தைப் பாதுகாத்துக்கொண்டு தமது குருநாதனின் அருகில் வசித்து வந்ததாகவும் **ஆனந்தகிரி சங்கர விஜயம்** என்னும் பழமையான நூலின் வாயிலாக அறிகின்றோம். பரம்பரையாக வரும் **இந்த்ர ஸரஸ்வதி** என்னும் பட்டத்தைத் தாங்கள் அடைந்திருக்கிறீர்கள். இதனால் "इन्द्रो मायाभिः पुरुरूप ईयते" என்னும் வேதச் சொற்கள் நினைவுக்கு வருகின்றன. பரமாத்ம

வாசகத்தைக் குறிக்கும் இந்திர பதமும், பிரம்ம வாசகமான ஆனந்தத்தைக் குறிக்கும் ஸரஸ்வதி பதமும் சேர்ந்து தங்களது பிரம்மத்தன்மையை எடுத்துக்காட்டுகின்றன. சுரேச்வராசாரியரது காலந்தொட்டே இந்தப் பட்டத்தைப் பீடத்தின் அதிபர்கள் அடைந்து வந்திருப்பதாகவும் சிலர் கூறுகின்றனர்.

இந்தப் பரம்பரையில் தோன்றி ஆதி சங்கரரைப் போலவே தாங்கள் ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்து வருவதுடன், சுகமாக சஞ்சாரம் செய்ய நவீன காலத்தில் பலவித சாதனங்கள் இருந்தும் அவைகளுள் எதையும் ஏற்காது, பழைய முறைப்படி சிவிகையையே வாகனமாக உபயோகித்துப் பாரத பூமியைச் சுற்றி வருகிறீர்கள்.

தங்கள் திருவடிகளைக் கண்டு போற்றுவது எங்களுக்குக் கிடைப்பதற்கரிய பெரும் பேருகும். 'தீர்த்தங்கள், க்ஷேத்திரங்கள், ஆலயங்கள் முதலியவைகளைச் சேவிப்பதால் பின்னர் ஏதோ ஒரு காலத்தில்தான் பயனை அடையமுடியும். ஆனால் பெரியோர்களைத் தரிசித்த மாத்திரத்திலேயே ஒருவனது ஜன்ம கடைத்தேறுகிறது,' என்னும் உண்மையைப் பாகவதம் நமக்கு உணர்த்துகிறது.

ஸ்ரீ ஆதி சங்கரரது காலத்தில் பௌத்தர்களாலும், ஜைனர்களாலும் நமது தர்மத்திற்கு இடையூறுகள் ஏற்பட்டிருந்தது போல், தற்காலத்திலும் இடையூறுகள் காணப்படுகின்றன. வேத மதத்திற்குப் புறம்பாயுள்ள மார்க்கங்கள் ஒருவாறு கண்டிக்கப் பட்டிருந்த போதிலும் அவை முற்றிலும் அகற்றப்படவில்லை. ஆதி குருவைப் போலவே அவைதிக மதங்களை முற்றிலும் அகற்றுவதில் தாங்களே தீவிரமாக முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறீர்கள்.

இத்தகைய பெருமை வாய்ந்த தங்களை நாங்கள் எவ்வாறு போற்றுவதென்பதை அறிய முடியவில்லை, எனது வாக்கோ தடுமாறுகிறது; தொண்டை விம்முகின்றது; சரீரமோ ஆனந்தத்தினுல் மயிர்க்கூச்செறிகின்றது; கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகுகின்றது; மிகவும் மங்களகரமான இந்நாளில் ஸநாதன தர்மத்தைப் பிரதிஷ்டை செய்துவரும் ஆசார்யமூர்த்திகளான தங்களுக்கு எங்களது தழுதழுத்த குரலினுல் ஜய கோஷத்துடன் நல்வரவு கூறுகின்ருேம்.''

மேலும் இந்தச் சபையின் சார்பாக ஸ்வாமிகளுக்கு அவர் பாத பூஜை முதலான மரியாதைகளைச் செய்து வைத்தார். ஸ்வாமிகளும் பண்டிதர்களுக்குச் சில உபதேசமொழிகளைக் கூறி

அவர்களை ஆசீர்வதித்தார்கள். அங்குக் கூடியிருந்த மக்கள் யாவரும் ஸ்வாமிகளை ஜய கோஷத்துடன் வழியனுப்பினார்கள். செப்டம்பர் மாதம் 28-ஆம் தேதி அவ்வருடத்திய **சாரதா நவராத்திரி விழா** ஆரம்பமாயிற்று. தேவியைக் குறித்துக் கொண்டாடப் படும் இவ்விழா மற்ற நாடுகளைவிட வங்கத்தில் மிகுந்த சிறப்புடன் மக்களால் கொண்டாடப்படுகிறது. இந்தப் பூஜையை ஸ்வாமிகள் **அக்கௌண்டென்ட் ஜெனரல் எம். சுப்ரமண்யம்** அவர்கள் ஜாகையில் நடத்தினார்கள். அன்று முதல் ஒன்பது நாட்களும் ஸ்வாமிகள் நடத்திய அம்பிகையின் பூஜையை ஆயிரக்கணக்கான மக்கள் தரிசித்துப் பெரும் பயனை அடைந்தனர். ஒவ்வொரு நாளும் கன்னிகைகளின் பூஜை வழக்கம்போல் நடைபெற்றது. இந்த நவராத்திரி பூஜையின் செலவுகளை நகரத்தில் வாழும் வங்க, குஜராத்தி, மார்வாரி, தென்னிந்திய மக்கள் ஆகியோர் ஏற்றுக்கொண்டனர். கன்னிகைகளுக்கும், ஸுவாஸினிகளுக்கும் வஸ்திரம் முதலான தானங்கள் வழங்கப் பெற்று வெகு விமரிசையாக அவ்வருடத்து நவராத்திரி விழா கல்கத்தா நகரத்தில் கொண்டாடப்பட்டது. 1935 அக்டோபர் 6-ஆம் தேதி ஸரஸ்வதி பூஜையன்று சண்டீ ஹோமம் முதலான யக்ஞ ஹோமங்கள் பூர்த்தியடைந்தன. அக்டோபர் மாதம் 7-ஆம் தேதி விஜயதசமி அன்று ஸ்வாமிகள் தமது விஜய யாத்திரையை மேலும் தொடங்கினார்கள்.

### ஸ்வாமிகளின் தொண்டில் ஈடுபட்ட கல்கத்தா பிரமுகர்கள்

கல்கத்தாவில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தபோது அடிக்கடி ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டு அவர்களது ஆசியைப் பெற்ற பிரமுகர்கள் பலரில் **பண்டித பஞ்சானன தர்க்க ரத்ன,** கல்கத்தா ஹைகோர்ட்டின் பிரதான நீதிபதி **ஸ்ரீ மன்மதநாத் முகர்ஜி,** ஹைகோர்ட்டு நீதிபதி **ஸ்ரீ துவாரகநாத் மித்ரா, சுபாஷ் சந்திர போஸின் சகோதரர் ஸ்ரீ சரத் சந்திர போஸ், பர்த்துவான் மகாராஜா, ஸ்ரீ தாமோதர தாஸ் கன்னு, டி. என். மோகன்** இவர்களைக் குறிப்பிடலாம். இவர்களைத் தவிர பண்டிதர் பலரும் பல தொழில்களில் ஈடுபட்ட பிற மக்களும் ஸ்வாமிகளிடம் நெருங்கிய தொடர்பை வைத்துக்கொண்டிருந்தார்கள். இடச் சுருக்கம் காரணமாக அவர்களின் பெயர்களை எல்லாம் இவ்விடம் குறிப்பிட முடியாதது பற்றி வருந்த வேண்டியிருக்கிறது. அப்பொழுது இந்தியா கவர்ன்மென்டின் நிர்வாக சபை அங்கத்தினராக இருந்த **ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயரும்** ஸ்வாமிகளைக் கல்கத்தாவில்

தரிசித்துப் பல மணி நேரம் ஸ்வாமிகளுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். ஸ்வாமிகள் அந்த நகரத்தில் தங்கியிருந்த போது, போலீஸ் இலாகாவினர் ஸ்வாமிகளது முகாமிற்கு வேண்டிய எல்லா உதவிகளையும் அளித்து வந்தார்கள். அவ்வப் போது ஸ்வாமிகள் ஜாகையிலிருந்து புறப்பட்டுச் சிவிகையில் வெளி இடங்களுக்குச் சென்று வந்த சமயங்களிலெல்லாம் போலீஸார் உதவி மிகவும் உபயோகமுள்ளதாக இருந்தது. யானை, குதிரை முதலான பரிவாரங்களுடன் பல்லக்கில் ஸ்வாமிகள் வீதிகளில் செல்லும்போது முன்னறிக்கையின் பேரில் போலீஸார் ஸ்வாமிகள் செல்லும் பாதைகளில் மற்ற எல்லாப் போக்குவரத்துக் களையும் நிறுத்தி வைத்துத் தடையின்றி ஸ்வாமிகள் சென்றுவர அவர்கள் வகைசெய்து தந்தார்கள். மேலும் ஸ்வாமிகளது சவாரியுடன் குதிரைமீது ஏறிய போலீஸ் சார்ஜண்டுகளும் தொடர்ந்து வந்து, ஸ்வாமிகளை ஜாகை வரையில் கொணர்ந்து விடும் ஏற்பாட்டையும் செய்துவந்தார்கள். ஸ்வாமிகளது கல்கத்தா விஜயத்தின் போது நமது தமிழ் நாட்டு மக்கள் நூற்றுக்கணக்கானவர்கள் ஸ்வாமிகளது பணியில் ஈடுபட் டிருந்தார்கள். அவர்களில் **மகா மகோபாத்யாய என். எஸ். அனந்த கிருஷ்ண சாஸ்திரிகள், கே. கே. எஸ். ஐயர், ஜி. வி. ராமன் வி.டி. சுவாமி,** ரெயில்வே என்ஜினியர் **ராமஸ்வாமி ஐயர்,** இந்தியன் ஸ்டோர்ஸ் டிபார்ட்மெண்டு அகௌண்டெண்ட் **ராவ் சாகேப் வி. சுப்பிரமணிய ஐயர், ஸர் ஆர். எஸ். சர்மா, மந்தரேசுவர சர்மா, பி. வி. சுந்தரமய்யர், வி. ஆர். சுந்தரராமன்** இவர்களை முதன் மையாகக் குறிப்பிடலாம். இச்சிறு புத்தகத்தில் இடச் சுருக்கம் காரணமாக மற்றவர்களின் பெயர்கள் சேர்க்கப்படாததைத் தன்னலம் கருதாது ஊழியம் செய்த அவர்கள் யாவரும் மன்னித்து விடுவார்கள் எனக் கருதி இங்குக் குறிப்பிடவில்லை. ஸ்வாமிகளின் சிப்பந்திகளுக்கும், மற்றப் பரிவாரங்களுக்கும் அவர்கள் அவ்வப்போது செய்து வந்த உதவி ஒருநாளும் மறக்க முடியாததாகும். ஸ்வாமிகளது கல்கத்தா விஜயம் மடத்தின் சரித்திரத்தில் என்றும் நிலைபெற்றிருக்கும். பக்தர்களின் ஒப்பற்ற சேவையே இதற்குக் காரணம்.

**கல்கத்தாவிலிருந்து புறப்பட்டது**

1935 அக்டோபர் மாதம் 3-ஆவது வாரத்தில் ஸ்வாமிகள் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டார்கள். ஆதிகங்கையில் சேரும் **தாமோதர், ரூப்நாராயண்** நதிகளைச் சாலை மார்க்கமாகக் கடக்க அதிக தூரம் சுற்றி வரவேண்டியிருந்ததால் ஸ்வாமிகளது

பிரயாணத்திற்கென ஒரு சிறு நீராவிக் கப்பல் ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்வாமிகளின் பரிவாரங்களான யானை, குதிரைகள், மாடுகள், வண்டிகள், பல்லக்குகள் இவைகளெல்லாம் அந்தக் கப்பலில் ஏற்றப்பட்டுப் பிரயாணம் தொடங்கிற்று. துறைமுகத்தில் நூற்றுக்கணக்கான பக்தர்கள் ஸ்வாமிகளை அன்று வழியனுப்பிய காட்சி மனத்தை உருக்கும்படி செய்தது. ஸ்வாமிகளது தரிசனத்தையும், அவர்கள் பூஜை செய்யும் காட்சியையும் இனி எப்பொழுது காணப்போகின்றோமென பக்தர்கள் ஏங்கி நின்றார்கள். ஸ்வாமிகள் அங்குக் கூடியிருந்த எல்லோருக்கும் மந்திராக்ஷதை அளித்து, ஒவ்வொருவரிடமும் இரண்டொரு வார்த்தைகள் பேசி அவர்களை ஆசீர்வதித்தார்கள். கல்கத்தா சம்ஸ்கிருத கலாசாலையின் தலைவர் **பண்டித ஸ்ரீ ஜீவன் நியாய தீர்த்தவு எம். ஏ.** ஸ்வாமிகளது யாத்திரையில் அப்பொழுது கலந்துகொண்டார். அன்று கயாவிலிருந்து வந்த **காசீநாத் சிங்** என்னும் பிரமுகர் ஸ்வாமிகளைக் கப்பலிலேயே தரிசனம் செய்துகொண்டார். கப்பலிலேயே நதிகளைக் கடந்து ஸ்வாமிகள் அக்டோபர் மாதம் 20-ஆம் தேதி **கோலாகாட்** என்னும் இடத்திற்கு விஜயம் செய்து அவ்விடம் பக்தர்கள் அளித்த பாதபூஜை முதலிய மரியாதைகளை ஏற்றுக்கொண்டு அங்கு மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். அடுத்த முகாம் **பஞ்ச்கூரா** என்னும் ஊர். அவ்விடத்திலிருந்து 64 சக்தி பீடங்களில் ஒன்றாகிய **தாம்பிரலிப்தி** என்னும் சரித்திர பிரசித்தி பெற்ற பழமையான துறைமுகப் பட்டினத்திற்கு விஜயமானார்கள். அக்டோபர் மாதம் 25, 26-ஆம் தேதிகளில் ஸ்வாமிகள் **ஜனார்தன்புரில்** தங்கினார்கள். அவ்வருடத்து தீபாவளி அவ்விடத்தில் நடைபெற்றது, அன்று மடத்தின் சிப்பந்திகள் ஒவ்வொருவருக்கும் புது வஸ்திரங்கள் அளிக்கப்பட்டன.

### மிட்னபுரில் மக்களின் குதூகல வரவேற்பு

1935 அக்டோபர் மாதம் 27-ஆம் தேதி அமாவாசை அன்று ஸ்வாமிகள் கல்கத்தாவிற்கு மேற்கில் சுமார் 100 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **மிட்னபுருக்கு** விஜயமானார்கள். அது அப்பெயருடன்விளங்கும் ஜில்லாவின் தலைநகர். இவ்வூர் வங்காளத்தின் சுதந்தர இயக்கத்திற்கு அஸ்திவாரமாக இருந்துவந்திருக்கிறது. அரசாங்கத்திற்கு எதிராக அவ்வப்போது அவ்வூரில் தோன்றிய இயக்கத்தைப் **பயங்கர இயக்கம்** எனவும் கூறுவர். ஸ்வாமிகள்

ஜனார்த்தன்புருக்கு விஜயமானதை அறிந்த மிட்னபுர் மக்கள் எவ்வகையிலும் தங்கள் ஊருக்கும் ஸ்வாமிகளை விஜயம் செய்விக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அவ்விதம் தீர்மானித்த சில மணி நேரங்களுக்குள் அதற்கென ஒரு வரவேற்புக் கமிட்டியையும் நிறுவிக்கொண்டார்கள். ஆனால் அவ்வூரில் எவ்விதமான ஊர்வலங்களோ, பொதுகூட்டங்களோ நடைபெறக் கூடாதென்பதும், இரவு ஒன்பது மணிக்கு மேல் வீதிகளில் எவரும் நடமாடக் கூடாதென்பதும் சர்க்கார் விதித்திருந்த நிபந்தனைகளாகும். இவ்வித நிபந்தனைகள் பல வருடங்களாக அவ்வூரில் அமலிலிருந்து வந்தது. மக்கள் அங்கே சுதந்தரம் அற்று இருந்தபோதிலும் அவர்களது மனத்திலும், உடலிலும் ஊறியுள்ள சுதந்தர எண்ணம் எவ்வித கட்டுப்பாடுகளுக்கும் அடங்காமல் எல்லையற்றதாக இருந்தது. வரவேற்புக் கமிட்டியின் அங்கத்தினர்கள் சிலர் ஜனார்தன்புருக்குச் சென்று ஸ்வாமிகளை நேரில் தரிசித்துக் கொண்டார்கள். அந்த ஊரில் சட்டம் அமலிலிருந்து வருவதை ஸ்வாமிகள் அறிந்திருந்தார்கள்; அவ்விதமிருந்தும் எவ்விதத்திலும் அவ்வூர் மக்களை அனுக்ரகிக்க வேண்டுமென்று எண்ணி, அவர்களது அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள். இச் செய்தியை மக்கள் கலெக்டருக்கும் கல்கத்தாவிலுள்ள உயர்தர அதிகாரிகளுக்கும் அறிவித்தனர். ஸ்வாமிகள் மிட்னபுரில் விஜயமான நாளன்று ஊரடங்குச் சட்டத்தின் சில ஷரத்துக்களையும், ஜில்லா அதிகாரிகள் தளர்த்தி மக்களை மகிழ்விக்கச் செய்தனர். பல வருடங்களாகக் கிடைக்கப் பெருத இந்த நாளை ஒரு சுதந்தரத் திருநாளாக அவ்வூரார் கருதினார்கள். மேலும் மதத்தலைவர் ஒருவரை வரவேற்பதில் அவர்களது உற்சாகம் கரைபுரண்டு ஓடியது. ஊரையெல்லாம் அவர்கள் தோரணங்களாலும், வரவேற்பு வளைவுகளாலும் நன்கு அலங்கரித்தனர். இந்த ஏற்பாடுகளையெல்லாம் தலைமை தாங்கி நடத்தியவர் **ஜமீந்தார் ப்ரபுல்ல குமார் மல்லிக்** என்னும் பிரமுகர் ஆவர். அவருடன் பல வியாபாரிகளும் வக்கீல்களும், டாக்டர்களும் கலந்துகொண்டார்கள். சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தவர்களும் ஸ்வாமிகளை வரவேற்கும் பணியில் மிகுந்த ஊக்கத்தைக் காட்டினர். முன் கூறியபடி 1935 அக்டோபர் 27-ஆம் தேதி காலையில் ஸ்வாமிகள் அவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். முக்கியமான வீதிகளின் வழியாக மக்கள் ஸ்வாமிகளை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். ஆண், பெண், குழந்தைகள் ஈருக, மக்கள் வீதிகளின் இரு புறங்களிலும் தங்கி

ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டனர். அன்று ஸ்வாமிகளுக்கு 12 இடங்களில் வரவேற்பு அளிக்கப்பட்டது. ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்திலும், ஹிந்தியிலும் அவைகளுக்குப் பதிலளித்துத் தர்மத்தைப் பற்றியும் பக்தியைப் பற்றியும் உபதேசம் அருளினார்கள். ஆங்காங்குப் பக்தர்கள் ஸ்வாமிகளுக்குப் பாத பூஜை செய்து வைத்தனர். அன்று காலை புறப்பட்ட ஊர்வலம் பகல் 2 மணிக்கு ஜாகையை அடைந்தது. அதற்கு மேல் ஸ்வாமிகளது நித்ய பூஜை நடைபெற்றது. ஸ்வாமிகளின் பூஜையைத் தரிசிக்க மக்கள் அன்று அவ்விடத்தில் ஆயிரக்கணக்காகக் கூடியிருந்தனர். பூஜை முடிந்ததும் ஸ்வாமிகள் யாவருக்கும் தீர்த்தப் பிரசாதம் கொடுத்தார்கள்.

### காவல் கைதிகளுக்குத் தரிசனம் அளித்தது

ஸ்வாமிகள் மிட்னபுருக்கு விஜயம் செய்த செய்தியானது அவ்வூர் சிறைச்சாலைக்குள்ளும் பரவி விட்டது. நாட்டின் சுதந்தரத்திற்காகத் தங்கள் வாழ்வையே அர்ப்பணம் செய்து விட்ட தேச பக்தர்கள் பலர் அச்சிறையில் அடைத்து வைக்கப் பட்டிருந்தனர். தேச பக்தியுடன் மத பக்தியும் அவர்கள் ரத்தத்தில் தோய்ந்திருந்தது. அவர்களில் சிலர் கல்லூரி மாணவர்கள், சிலர் பட்டதாரிகள், சிலர் வக்கீல், டாக்டர் போன்ற தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்கள். அவர்கள் தங்கள் வருமானங்களையெல்லாம் துறந்து, தேச விடுதலையின் பணியிலேயே தங்களை ஈடுபடுத்திக்கொண்டவர்கள். அவர்களில் சிலருக்கு ஸ்வாமிகளை எவ்வகையிலாவது தரிசித்துவிட வேண்டுமென்ற எண்ணம் உதித்தது. சிறைச்சாலை அதிகாரி ஓர் ஆங்கிலேயர். அப்படியிருந்தும் அவர்கள் தங்களது அவாவை அந்த அதிகாரியிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். மதத் தலைவர் ஒருவர் அவ்வூருக்கு விஜயம் செய்திருந்தது அந்த அதிகாரிக்கும் தெரிந்திருந்தது. அந்தக் காவல் கைதிகளின் மத உணர்ச்சியை மதித்து, சில நிபந்தனைகளின் பேரில் அவர்களை அந்த அதிகாரி வெளியில் சென்று வர அனுமதித்தார். கூண்டில் அடைக்கப்பட்டிருந்த அந்தக் கிளிகள் வெளியேறியவுடன் பறந்துபோகாமல் இருக்க வேண்டியதைக் கண்காணிப்பதற்காகத் துப்பாக்கியும் கையுமாகப் போலீஸ் வீரர்கள் அவர்களைத் தொடர்ந்து வந்தனர். மாலை 6 மணிக்குள் ஜெயிலுக்குள் திரும்பி வந்துவிட வேண்டுமென்பது அவர்களுக்கு அந்த அதிகாரி விடுத்த நிபந்தனைகளில் ஒன்றாகும். இவ்வித நிபந்தனைகளையெல்லாம் ஏற்றுக்கொண்டு இளைஞர்

களான சில காவல் கைதிகள் ஸ்வாமிகள் தங்கியிருந்த ஜாகைக்கு வந்து சேர்ந்தனர். அப்பொழுது மணி சுமார் 5-30 இருக்கும். சிறிது நேரத்திற்கு முன்தான் நித்திய பூஜையை முடித்துக் கொண்டு சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ள ஸ்வாமிகள் ஒரு தனிமை யான இடத்திற்குச் சென்றிருந்தார்கள். அச்சமயத்தில் ஸ்வாமி களுக்குச் சிரமத்தைக் கொடுக்க மடத்தின் அதிகாரிகள் விரும்ப வில்லை. ஆயினும் 10 நிமிடங்களில் ஸ்வாமிகள் வெளியே வந்து விடுவார்களென அவர்கள் எதிர்பார்த்தனர். அது வரை சற்றுக் காத்திருக்கும்படி அந்தக் காவல் கைதிகளிடம் அதிகாரிகள் தெரி வித்தனர். தாங்கள் 6 மணிக்குச் சிறைக்குள் சென்றுவிடவேண்டு மென்றும், அதற்குப்பின் காலம் கடந்துவிட்டால் காவலாளி களின் கைகளிலுள்ள துப்பாக்கியின் குண்டுகள் தங்கள் மேல் பாய்ந்துவிடுமென்றும், தங்கள் உயிர் போவதைப்பற்றி அவர்கள் சிறிதேனும் கவலைப்படவில்லையென்றும், ஆனால் ஸ்வாமிகளைத் தரிசிக்க நேராது அப்பொழுது உயிர் துறப்பதை அவர்கள் விரும்ப வில்லையென்றும் கூறிவிட்டு, மிகுந்த ஏமாற்றத்துடன் பக்கத்தி லிருந்த சிறைச்சாலையை நோக்கித் திரும்பினர். இவர்கள் திரும்பிய சில நிமிடங்களுக்குள் ஸ்வாமிகள் தாமாகவே வெளியில் வந்து தரிசனத்திற்கு யாராவது காத்துக்கொண்டிருக்கிறார்களா என வினவினார்கள். அப்பொழுது மடத்தின் அதிகாரி, சற்று முன் சில காவல் கைதிகள் தரிசனத்திற்காக வந்தார்களென்றும், சில நிமிடங்களுக்கு முன்தான் அவர்கள் திரும்பிச் சென்றார்க ளென்றும், அவர்கள் இப்பொழுது சிறிது தூரம்தான் சென்றிருப் பார்களென்றும் கூறினார். ஸ்வாமிகள் உடனே ஓர் ஆளை அனுப்பி அவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்கள். அதன்படி அவர்கள் யாவரும் அங்கு மறுபடியும் அழைத்து வரப்பட்டனர். அவர்கள் வந்தவுடன் ஸ்வாமிகளை வணங்கி அன்னிய ஆட்சியால் தேச மக்கள் பல வகையிலும் துன்புறுத்தப்படுகின்றனரென்றும், நாடு சுதந்தரம் அடைந்து மக்கள் யாவரும் துன்பம் நீங்கியவர் களாகி இன்பமுற வாழ வேண்டுமென ஸ்வாமிகள் அனுக்ரகம் புரியவேண்டுமெனவும், அதுவே அவர்கள் கோரிக்கை என்றும் கூறிவிட்டு, வேறொன்றும் கூறாது ஸ்வாமிகளை வணங்கி விரைவில் திரும்பினர். அவர்கள் ஸ்வாமிகளைத் தரிசித்த மகிழ்ச்சியுடன் குறிப்பிட்ட நேரத்திற்குள் சிறைச்சாலைக்குள் சென்று விட்டனர். ஸ்வாமிகள் இவர்களது தேசபக்தியைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி யுற்றார்கள். இந்த நிகழ்ச்சியைக் கண்ணுற்ற அவ்விடம் கூடி யிருந்த மக்கள் மிகவும் வியப்படைந்தனர்.

**கரக்புருக்கு விஜயம்**

1935 அக்டோபர் 27-ஆம் தேதி மாலை ஸ்வாமிகள் மிட்னபுரி லிருந்து புறப்பட்டு **கோசை, கபீசா** என்னும் இரண்டு நதிகளையும் கடந்து, அன்றிரவே பக்கத்திலுள்ள **கரக்புரை** அடைந்தார்கள். கரக்புர் பி. என். ஆர். ரெயில்வே * தொழிற்சாலை உள்ள ஒரு சிறிய பட்டணம். ரெயில்வேயில் வேலை பார்க்கும் தொழிலாளிகளும், உத்தியோகஸ்தர்களுமாகத் தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் ஆயிரக் கணக்கான மக்கள் அங்குக் குடியேறியுள்ளார்கள். மற்ற வர்களைவிடத் தென்னிந்தியர்கள் சற்று அதிகமாக அங்கு வசிப்ப தாகத் தெரிகிறது. அவ்வூரில் வட இந்தியர், தென்னிந்தியர் என்ற பாகுபாடில்லாமல் ஸ்வாமிகளுக்கு ஹிந்துக்கள் யாவரும் தகுந்த வரவேற்பு அளித்து ஸ்வாமிகளது பணியில் ஈடுபட்டிருந் தார்கள். தென்னிந்திய மக்களின் பிரார்த்தனைக்கிணங்கி ஸ்வாமிகள் அவ்வூரில் 1935 நவம்பர் 24-ஆம் தேதி வரையில் சுமார் ஒரு மாத காலம் தங்கியிருந்தார்கள். அங்குத் தங்கள் சொந்த நாட்டு மக்களுடன் பழகும் வாய்ப்புப் பெற்ற மடத்தின் சிப்பந்திகள் தங்களது உறவினர்களுடன் எவ்விதம் பழகுவார் களோ அவ்விதம் அவர்களுடன் பழகி இரண்டு ஆண்டுகளாக ஓய்வு இல்லாமல் நடைபெற்று வந்த இந்த யாத்திரையில் அப் பொழுது சிறிது ஓய்வைப் பெற்றார்களெனக் கூறலாம்.

**டாட்டா நகருக்கு விஜயம்**

இந்தியாவின் இரும்புத் தொழிற்சாலைகளுள் மிகப் பெரியத் தொழிற்சாலை அமைந்துள்ள **டாட்டா நகருக்கு** விஜயம் செய்ய வேண்டுமென அங்குக் குடியேறியிருக்கும் பக்தர்கள் விண்ணப் பித்துக்கொண்டனர். கரக்புரிலிருந்து வடமேற்கே சுமார் 220 கிலோ மீட்டர் தூரமுள்ள அவ்வூருக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 1935 நவம்பர் 24-ஆம் தேதி இரவு கரக்புரிலிருந்து 25-ஆம் தேதி **மாணிக்பர்ஹாவிலும்**, 26, 27-ஆம் தேதிகளில் **ஜர்க்ராம்** என்னும் சிறிய சம்ஸ்தானத்திலும், 28-ஆம் தேதி **போர்ஹிஹாடியிலும்**, 29, 30-ஆம் தேதிகளில் **சகூலியாவிலும்**, டிசம்பர் மாதம் முதல் தேதி **நரஸிங்கர் சம்ஸ்தானத்திலும்**, 2-ஆம் தேதி **கட்ஸிலாவிலும்**, 3-ஆம் தேதி தாமிரச் சுரங்கம் உள்ள **மௌபந்தரிலும்**, 4-ஆம் தேதி மார்வாரிகள் தங்கியிருக்கும் **கலூதிஹ்** என்னும் ஊரிலும் தங்கி, **சந்திரலேகா** என்னும் சிற்றூரில் **சொர்ணலேகா** நதியைக்

* பி. என். ஆர். ரெயில்வே என்பது இப்போது ஈஸ்டர்ன் ரெயில்வே யாக பெயர் மாற்றப்பட்டுள்ளது.

கடந்து, டிசம்பர் மாதம் 5-ஆம் தேதி **டாட்டா** நகரை அடைந்தார்கள். 1936 ஜனவரி 27-ஆம் தேதி வரையில் ஸ்வாமிகள் டாட்டா நகரிலேயே தங்கியிருந்தார்கள். அவ்வருடத்திய தனுர் மாத பூஜை அங்கு நடைபெற்றது. ஸ்வாமிகள் 54 நாட்கள் சேர்ந்தாற்போல் அவ்விடம் விஜயம் செய்திருந்தபொழுது குளிரின் காரணமாகவும், ஓய்வில்லா பிரயாணத்தின் காரண மாகவும் சிப்பந்திகள் பலர் கடுமையாக நோயுற்றிருந்தார்கள். அங்குள்ள தென்னிந்தியக் குடும்பத்தினர், அவர்களையெல்லாம் தங்கள் நெருங்கிய உறவினர்களைப் போல மதித்துத் தங்கள் வீடுகளில் அவர்களைத் தங்கச் செய்து வைத்திய உதவிகளை அளித்துத் தக்கவாறு போஷித்துக் குணமடையச் செய்தனர். இச்செயல் மடத்தின் சிப்பந்திகள் ஒருநாளும் மறக்க முடியாததாகும். டாட்டா நகரில் ஸ்வாமிகள் தங்கியிருந்தபொழுது ஸ்வாமிகளை இரும்புத் தொழிற்சாலைக்கு விஜயம் செய்யவேண்டுமெனத் தொழிற்சாலையின் நிர்வாகிகள் கேட்டுக் கொண்டனர். அவர்கள் கோரிக்கையை ஏற்றுக்கொண்டு ஸ்வாமிகள் மாபெரும் உருக்கு இரும்புத் தொழிற்சாலைக்கு விஜயம் செய்து தேசத்தின் தேவைக்கு வேண்டிய இரும்புச் சாமான்கள் எவ்விதம் தயாரிக்கப்படுகின்றன என்பதைப் பார்வையிட்டார்கள். அப்பொழுது அங்குத் தொழிற்சாலையின் நிர்வாகியாக இருந்த **எஸ். சாம்பசிவ தீக்ஷிதர்** ஸ்வாமிகளை எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று வேலை முறையையும் காண்பித்தார். ஸ்வாமிகளும் பல வேலை நுட்பங்களைப் பற்றிக் கேட்டறிந்து கொண்டார்கள். ஸ்வாமிகள் டாட்டா நகரில் தங்கியபொழுது சந்திரகிரஹணம் நிகழ்ந்தது. அந்தக் கிரஹணத்தன்று ஸ்வாமிகள் **சுவர்ணலேகா** நதியில் கிரஹண ஸ்நானம் செய்தார்கள்.

**பிஹாரின் சுதேச சம்ஸ்தானங்கள் அளித்த வரவேற்பு**

1936 ஜனவரி 27-ஆம் தேதி ஸ்வாமிகள் டாட்டா நகரத்தை விட்டுப் புறப்பட்டு **செரய்கெல்லா** என்னும் சுதேச சம்ஸ்தானத்திற்கு விஜயமானார்கள். அவ்வூர் மன்னர் ஸ்வாமிகளைத் தகுந்தவாறு வரவேற்றுத் தம் அரண்மனையில் ஓர் தர்பார் கூட்டி ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை நடத்தி வைத்தார். ஸ்வாமிகள் அந்த ஊரில் ஜனவரி மாதம் 28-ஆம் தேதி முதல் நான்கு நாட்கள் தங்கினார்கள். இந்த இடம் வங்காளி பாஷைக்கும், ஒரியா பாஷைக்கும் எல்லைப்புறமாக அமைந்துள்ளது. ஸ்வாமிகள் செரெய்கெல்லாவிலிருந்து புறப்பட்டுப் பிஹார் மாகாணம் **சிங்பூம்** ஜில்லாவின் தலைநகரான **சைபாசா** என்னும்

பட்டணத்திற்கு விஜயம் செய்து அவ்விடத்திலும் இரண்டு நாட்கள் தங்கி, பிறகு மேற்கே 20 கிலோமீட்டர் தூரத்திலுள்ள **சக்ரதர்புருக்கு** விஜயம் செய்து அங்கும் நான்கு நாட்கள் தங்கினார்கள். அந்த ஊரிலும் ஓர் ரெயில்வே தொழிற்சாலை அமைந்துள்ளது. அங்கிருந்து ஸ்வாமிகள் **கார்ஸ்வான்** என்னும் சம்ஸ்தானத்திற்கு விஜயம் செய்து, அவ்வூர் மன்னரால் மிகவும் விமரிசையுடன் வரவேற்கப்பட்டு, பிப்ரவரி 6, 7, 8-ஆம் தேதிகளில் அவ்விடத்திலேயே தங்கியிருந்தார்கள். அந்த மன்னரும் தம் அரண்மனையில் ஓர் தர்பார் கூட்டி அந்தத் தர்பாரில் ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை செய்தார். 8-ஆம் தேதி பெரியதொரு ஊர்வலமும் அங்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கார்ஸ்வான் சம்ஸ்தானத்திலிருந்து புறப்பட்டு மறுபடியும் **சைபாசா** வந்து அவ்விடம் 1936 பிப்ரவரி, 9-ஆம் தேதி முதல் 17-ஆம் தேதி வரை 9 நாட்கள் தங்கி ஸ்வாமிகளின் பரம குருவின் ஆராதனையை அவ்விடம் நடத்தினார்கள்.

**கியோஞ்சர் சம்ஸ்தானத்திற்கு விஜயம்**

**கியோஞ்சர்** என்னும் நகரம் கியோஞ்சர் சம்ஸ்தானத்திற்குத் தலைநகரமாகும். இந்த நகரம் **சைபாசாவிலிருந்து** தெற்கே சுமார் 95 கிலோ மீட்டர் தூரத்தில் ஒரியா நாட்டிலுள்ளது. இந்தப் பகுதி முழுவதும் மலைகளும், காடுகளும் அடர்ந்த இடமாகும். இவைகளைக் கடப்பதற்கு அந்த ராஜ்ய சர்க்கார் வேண்டிய பந்தோபஸ்துகள் செய்து வழி முழுமையும் ஆங்காங்கு ஸ்வாமிகளும், பரிவாரங்களும் தங்குவதற்கு அழகிய பர்ணசாலைகளை அமைத்திருந்தார்கள். போலீஸ் பந்தோபஸ்து ஏராளமாக ஏற்படுத்தப்பட்டிருந்தது. வழியில் **ஹாடகனேரியா** நதியின் கரையில் உள்ள **சாம்பௌ** மற்றும் **போலஸ் பொங்கா,** பிரிட்டிஷ் எல்லையில் **கமேரியா** முதலான இடங்களில் ஸ்வாமிகள் தங்கி, 1936 பிப்ரவரி, மாதம் 23-ஆம் தேதி **கியோஞ்சர்** நகரத்திற்கு விஜயமானார்கள். சம்ஸ்தான அரண்மனையில் ஸ்வாமிகளுக்கு சிறந்தொரு வரவேற்பு அளிக்கப்பட்டது. வரவேற்புக்குப் பின் ஸ்வாமிகள் ஹிந்தியில் பதிலளித்துப் **பக்தியைப்** பற்றி உபன்யசித்தார்கள். அந்தச் சம்ஸ்தானத்தின் மன்னர் வயதில் இளையவராக இருந்தும், தெய்வ பக்தி நிறைந்தவராக விளங்கினார். அவர் ஸ்வாமிகளைத் தமது தலைநகருக்கு வரவழைக்க வேண்டுமென பெரும் முயற்சி எடுத்துக் கொண்டு தமது சம்ஸ்தான அதிகாரிகளைச் சைபாசாவுக்கு அனுப்பியிருந்தார். கியோஞ்சரில்

ஸ்வாமிகளின் குருவின் ஆராதனையும் அவ்வருடத்து சிவராத்திரி பூஜையும் நடைபெற்றன. அந்தச் சம்ஸ்தானத்தின், மிகப் பழமையாகவும் கம்பீரமாகவும் விளங்கும் சில தேவாலயங்களுக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்து, அவ்விடங்களில் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள். அவைகளில் முதன்மையானது **தரணீ தேவியின் ஆலயம்.** ஆலய விக்ரகங்களுக்கெல்லாம் அலங்காரத்திற்கென ஸ்வாமிகள் காசி பீதாம்பரங்களை அளித்தார்கள். அந்தத் தேவியின் சிலையை அந்தச் சம்ஸ்தானத்தில் ஸ்தாபனம் செய்த **கோவிந்த்பஞ்ச் தேவ்** என்பவர் அதைக் காஞ்சி நகரத்திலிருந்து கொண்டு வந்து பிரதிஷ்டை செய்ததாக அந்தச் சம்ஸ்தானச் சரித்திரம் கூறுகின்றது. அந்தச் சம்ஸ்தானத்தில் மேலும் பல புனிதத் தலங்கள் அமைந்துள்ளன. **பிராம்மண சாஸனங்கள்** எனக் கூறப்படும் **அக்ரகாரங்கள்** பல அங்குள்ளன. மலைப் பிரதேசங்களிலும், காட்டுப் பிரதேசங்களிலும் உள்ள பழங்குடி மக்களிடம் பழமையான நாகரிகமும், கலையும் இன்றும் அங்கு நிலை பெற்றிருப்பதைக் காணலாம். ஸ்வாமிகள் அவ்வூருக்கு விஜயம் செய்த நாளன்று, மடத்தின் உக்ராணத்திலிருந்து அவ்வூரிலுள்ள 150 ஏழைக் குடும்பங்களுக்கு மூன்று நாட்களுக்கு உணவுப் பொருள்கள் அளிக்கப்பட்டன. இவ்விதம் அளிக்கப்படும் உணவுப்பொருளுக்கு **உலுப்பை** என்பது மடத்தில் வழங்கப்படும் பெயராகும்.

**மயூர்பஞ்ச் சம்ஸ்தானத்திற்கு விஜயம்**

ஸ்வாமிகளது யாத்திரை கியோஞ்சர்கரிலிருந்து மறுபடியும் வடக்கு நோக்கிச் **சைபாசாவிற்குத்** திரும்பிற்று. 1936 பிப்ரவரி 29-ஆம் தேதி சைபாசாவை அடைந்து அவ்விடமிருந்து மார்ச் மாதம் 1-ஆம் தேதி புறப்பட்டு மயூர்பஞ்ச் சம்ஸ்தானம் வழியாக யாத்திரை தொடங்கிற்று. வழியில் மார்ச் மாதம் 2–ஆம் தேதி **பகல்டாவிலும்,** ஆம்-3 தேதி **ராயன்ரங்கன்புரிலும்,** 4, 5–ஆம் தேதிகளில் டாட்டா இரும்புச் சுரங்கம் இருக்கும் **பேசை** என்னும் இடத்திலும், 6-ஆம் தேதி மிகப் பெரிய மலையின் அடிவாரத்திலுள்ள **பங்கிரிபோசி** என்னும் இடத்திலும் ஸ்வாமிகள் முகாம் செய்தார்கள். இவைகளெல்லாம் அடர்ந்த காடுகள் நிறைந்த இடங்களாகும். வன விலங்குகள் அங்கு ஏராளமாக சஞ்சரிக்கும். ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊரைக் காண சுமார் 20 கிலோ மீட்டர் செல்ல வேண்டும். சாலை வழிகளிலெல்லாம் மயூர்பஞ்ச் சம்ஸ்தான அதிகாரிகள் தக்கவாறு போலீஸ்

பந்தோபஸ்துகளை அமைத்திருந்ததுடன், ஸ்வாமிகளது சவாரி* யுடன் ஆயுதம் தாங்கிய போலீஸ் படைகள் பின்தொடர்ந்து வர ஏற்பாடு செய்திருந்தனர்.

சைபாசாவிலிருந்து **மயூர்பஞ்ச்** சம்ஸ்தானத்தின் தலைநகர மாகிய **பாரிபாடா** என்னும் பட்டணம் தென் கிழக்கில் 35 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. ஸ்வாமிகள் மார்ச் மாதம் 7-ஆம் தேதி **பாரிபாடாவுக்கு** விஜயம் செய்தார்கள். சம்ஸ்தான திவான் **கே. ஸி. நியோகியும்,** நியாயாதிபதிகளும், மற்ற உயர்தர உத்தி யோகஸ்தர்களும் ஸ்வாமிகளை அவ்வூர் எல்லையில் வரவேற்று ஊர்வலமாக அவ்வூர்த் தர்மசாலைக்கு அழைத்து வந்தார்கள். ஸ்வாமிகள் அவ்வூரிலுள்ள **வாரணேச்வரர்** ஆலயத்தை அடைந்து அவ்விடமுள்ள மகாலிங்கத்தைத் தரிசித்துக்கொண்டார்கள். அந்த ஆலயத்தில் கருங்கல் தரையில் ஓர் கிணறு அமைந்துள்ளது. அக் கிணற்றின் சுற்றுப்புறமும் கல்பாறையாகவே காணப்படு கின்றது. அந்தக் கிணற்றிலிருந்து கைப்பிடி சுவரில் உள்ள துவாரங்கள் வழியே எப்பொழுதும் குறையாது தண்ணீர் வழிந் தோடிக் கொண்டிருக்கிறது. இது மிகவும் அதிசயிக்கத் தக்கதாக இருக்கிறது. பாரிபாடாவில் ஸ்வாமிகள் மார்ச் மாதம் 7–ஆம் தேதி முதல் 13-ஆம் தேதிவரை ஒரு வாரம் விஜயம் செய்திருந் தார்கள். ஊர் மக்களும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாத பூஜை முதலியவைகளை நடத்திவைத்தார்கள். பாரிபாடாவிலிருந்து 13-ஆம் தேதி மாலை புறப்பட்டு 14, 15–ஆம் தேதிகளில் **குண்டா** என்னும் ஊரிலும் 16-ஆம் தேதி **உட்லா** என்னும் இடத்திலும் 17, 18-ஆம் தேதிகளில் **கப்தீபாடா** என்னும் இடத்திலும் விஜயம் செய்தார்கள். கப்தீபாடா என்னும் இடம் மயூர்பஞ்ச் சம்ஸ்தா னத்திற்கு உள்ளடங்கிய ஓர் சிற்றரசாகும். மகாபாரதத்தில் பிரசித்தி பெற்று விளங்கும் **விராடநகர்** என்று இதைக் கூறு கின்றார்கள்.

**நீலகிரி சம்ஸ்தானத்தின் வழியாக யாத்திரை**

மயூர்பஞ்ச் எல்லையைக் கடந்து ஸ்வாமிகள் யாத்திரை **நீலகிரி** சம்ஸ்தானத்தின் வழியாகத் தொடங்கிற்று. 1936 மார்ச் மாதம் 19-ஆம் தேதி ஸ்வாமிகள் அந்தச் சம்ஸ்தானத்திலுள்ள **சுஜனகட்** என்னும் தலத்திற்கு விஜயமானார்கள். அத்தலத்தில் **சண்டிதேவி**

* **சவாரி** என்னும் சொல், பழைய காலத்தில் மன்னர்களும் மதத் தலைவர்களும் குதிரை மீதோ பல்லக்குகளிலோ பரிவாரங்கள் புடை சூழ வெளிக்கிளம்புவதைக் குறிப்பதாகும்.

யின் ஓர் விசாலமான ஆலயம் அமைந்துள்ளது. சாதாரணமாக எங்கும் சிம்ஹத்தை வாகனமாகக் கொண்டுள்ள தேவி அங்கு வராகத்தின் (பன்றியின்) மேல் வீற்றிருப்பது ஓர் அதிசயமாகும். அத்தலத்தில் ஸ்வாமிகள் மார்ச் 22-ஆம் தேதி வரை நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூர் உயர்தரப் பள்ளியின் நிர்வாகிகளும், ஆசிரியர்களும் ஸ்வாமிகளை அப்பள்ளிக்கு விஜயம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்கள். ஸ்வாமிகளும் அங்கு விஜயம் செய்து ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் சில உபதேச மொழிகளைக் கூறினார்கள். ஸ்வாமிகளது யாத்திரைக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் நீலகிரி சம்ஸ்தான அதிகாரிகள் செவ்வனே செய்திருந்தார்கள். பின்னர் தாது வருடத்திய **யுகாதி பண்டிகை** (சாந்திரமான வருடப் பிறப்பு) **கண்டபாரா** என்னும் சிற்றூரில் 23-ஆம் தேதி நடைபெற்றது. அந்த ஊர் **ஒரிஸா மாகாணத்தின் பலாசூர்** ஜில்லாவில் அமைந்துள்ளது. அங்கு ஸ்வாமிகள் 2 நாட்கள் தங்கி **சோரா, பத்ரக், பண்டாரிபுக்கூர்** என்னும் ஊர்களின் வழியாக யாத்திரையை மேலும் தொடங்கினார்கள். 1936 மார்ச் 31ஆம் தேதி முதல் ஏப்ரல் 3-ஆம் தேதி வரை பண்டாரிபுக்கூரில் **ஸ்ரீராமநவமி** கொண்டாடப்பட்டது. அன்று ஸ்வாமிகள் **வைதரணி** நதியில் ஸ்நானம் செய்துகொண்டார்கள்.

**ஒரிஸாவின் கலைக்கோவிலாகிய ஜாஜ்புருக்கு விஜயம்**

1936 ஏப்ரல் மாதம் 4-ஆம் தேதி பண்டாரிபுக்கூரிலிருந்து ஸ்வாமிகள் ஒரிஸா மாகாணம் **கட்டாக்** ஜில்லாவிலுள்ள **ஜாஜ்புருக்கு** விஜயமானார்கள். ஒரிஸாவின் புராதன கலைகளுக்குச் சின்னமாக விளங்குவது ஜாஜ்புர் நகரம். இங்கு **வைதரணீ** நதியானது உத்தரவாகினியாக வடக்கு நோக்கிச் செல்கின்றது. வருடம் முழுவதும் இவ்வூர் ஓர் யாத்திரைத் தலமாக விளங்கி வருகின்றது. மகாபாரதத்தில் கூறப்பட்ட பதினெட்டு சக்தி பீடங்களில் **விராஜபீடம்** எனப் பெயர் பெற்று இது விளங்கி வருகின்றது. **கயாசுரனது** தலை கயையிலும், நாபி (தொப்புள்) இந்த ஜாஜ்புர் க்ஷேத்திரத்திலும் இருப்பதாகப் புராணம் கூறுகின்றது. விராஜ பீடத்திற்கு அருகில் உள்ள **நாபிகயாவில்** பித்ருக்களின் பொருட்டு இன்றும் மக்கள் பிண்டம் போட்டு வருகின்றார்கள். ஜாஜ்புரைச் சுற்றிலும் கியாதி பெற்ற 12 தேவாலயங்களும், தீர்த்தங்களும் விளங்கிவருகின்றன. ஒரியா நாட்டின் சிற்பக் கலையை விளக்கும் வண்ணம் அங்கே மிகப் பெரிய கோபுரங்கள் அமையப்

பெற்றவைகளாகவும் சித்திரங்கள் செதுக்கப்பட்டவைகளாகவும் விளங்கிவருகின்றன. இந்த 12 ஆலயங்களையும் தவிர மற்றும் கணக்கற்ற ஆலயங்களும் அங்குக் காணப்பெறுகின்றன. அங்குள்ள எண்ணிறந்த ஆலயங்களைக் காணும்பொழுது அவைகளைக் காசி, காஞ்சி, கும்பகோணம் இவ்விடங்களிலுள்ள ஆலயங்களுக்கே ஒப்பிடலாம். அங்கு **ஸப்த மாதாக்களின்** விக்ரகங்கள் வேறு எங்கும் காணமுடியாதபடி அவ்வளவு பெரியவையாக அமைந்துள்ளன. சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர் இத்தலத்தில் 100 சோமயாஜிகள் நிறைந்திருந்தனர் எனக் கூறப்படுகிறது.* அதே காரணமாகவே இந்நகருக்கு **யாஜீபுரம்** அல்லது **ஜாஜ்பூர்** என்று பெயர் வழங்கலாயிற்று.* வைதரணீ நதியின் கீழ்ப்பாகத்தில் மறைமுகமாக **அந்தர்வேதி** அல்லது **யாகவேதீ** என்னும் மேடை அங்கு அமைந்திருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதன் காரணமாகவே அங்கு இன்றுகூட **வைதரணீ கோதானங்கள்** செய்யப்பட்டு வருகின்றன. அங்குப் பண்டிதர்கள் புராதனக் கலைகளை நன்கு காப்பாற்றிவருகின்றனர்.

இத்தலத்தில் மக்கள் ஸ்வாமிகளை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்று ஸ்வாமிகளும் அவர்களின் பரிவாரங்களும் தங்குவதற்கு ஏற்ற இடங்களை அமைத்துக்கொடுத்து முறைப்படி ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை முதலியவற்றைச் செய்து வைத்தனர். அத்தலத்தில் ஸ்வாமிகள் 5 நாட்கள் தங்கியிருந்தார்கள். அச்சமயம் அங்குள்ள 12 தேவாலயங்களையும் மற்றும் பல சிறிய தேவாலயங்களையும் ஸ்வாமிகள் தரிசித்துக்கொண்டார்கள். தேவாலய நிர்வாகிகளும், பண்டாக்களும் ஸ்வாமிகளுக்குத் தனிச்சிறப்புடன் ஆலயங்களில் மரியாதைகளைச் செய்தார்கள். அவ்விடமுள்ள **பண்டித சபையினர்**, 7-ஆம் தேதி ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார்கள். அத்தலத்தில் **மகா பிரதோஷத்தன்று** ஸ்வாமிகள் வைதரணீ நதியில் ஸ்நானம் செய்து, **ஸ்ரீவித்யாதர பதி** என்னும் புகழ்பெற்ற பண்டாவுக்கு கறவைப் பசு ஒன்றைத் தானமாக அளித்தார்கள். அதனுடன் பால் கறக்க வெள்ளிப் பாத்திரங்களையும் அளித்து விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்களையும் அவருக்குப் பரிசாக அளித்தார்கள்.

---

* சோமயாகம் என்னும் யாகத்தைச் செய்தவர்களே சோமயாஜிகள் எனக் கூறப்படுவர்.

* இலக்கணத்தின் ஓர் விதிப்படி **யா** என்னும் எழுத்து **ஜா** வாக மாறி யிருக்கிறது.

**கட்டாக்கில் சங்கர ஜயந்தி**

1936 ஏப்ரல் மாதம் 8-ஆம் தேதி இரவு ஸ்வாமிகள் ஜாஜ் புரிலிருந்து புறப்பட்டு, 9-ஆம் தேதி **ஹரிபுரில்** தங்கி, அவ்விட மிருந்து ஒரே மணல் மயமாக இருந்த **பிராம்மணி** நதியைக் கடந்து, 10-ஆம் தேதி **தர்மசாலா** என்னும் கிராமத்திற்கு விஜயம் செய்து அங்கு 3 நாட்கள் தங்கியிருந்து அவ்விடமிருந்து மணல் பிரதேசங் களை வெகு பிரயாசையுடன் கடந்து, 13, 14-ஆம் தேதிகளில் **டாங்கி** என்னும் ஊரில் விஜயம் செய்து, அவ்விடம் மகாநதியின் கிளை நதி ஒன்றையும் பின்னர் **மகாநதியையும்** கடந்து 15-ஆம் தேதி **கட்டாக்கை** அடைந்தார்கள். கட்டாக்கிலுள்ள மயூர்பஞ்ச் சம்ஸ்தான அரண்மனையில் ஸ்வாமிகளும் பரிவாரங்களும் தங்கு வதற்கு இட வசதிகள் செய்துகொடுக்கப்பட்டன. ஓரிஸாவின் புதிய தலைநகராகிய **புவனேச்வரத்திற்கும்** ஸ்வாமிகள் விஜயம் செய்து, அங்கு ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டார்கள். ஓரிஸா கவர்ன்மெண்டின் கட்டிடப் பிரிவில் ஸ்பெஷல் என்ஜீனியராக அக்காலத்தில் அங்கு வேலை பார்த்துவந்த **எல். வேங்கடகிருஷ்ண ஐயரது** ஜாகையின் காம்பௌண்டின் முன்புறத்தில் அமைக்கப் பெற்ற பெரியதொரு அலங்காரக் கொட்டகையில் அவ்வருடத்திய சங்கரஜயந்தி நடைபெற்றது. பெரிய வித்வத் சபை ஒன்றும் அப்பொழுது கூட்டப்பட்டது. பண்டிதர்கள் பலர் ஸ்ரீ ஆதி சங்கராசாரிய ஸ்வாமிகளின் அவதாரத்தைப் பற்றியும், அவர் களின் அத்வைத சித்தாந்தத்தைப் பற்றியும் சொற்பொழிவாற்றி னார்கள். ஜயந்தி அன்று யானைமீது ஆதி சங்கரர் படத்தையும், பாதுகைகளையும் வைத்து ஓர் மிகப் பெரிய ஊர்வலம் **மகாநதிக்குச்** சென்றது. மகாநதியில் பாதுகைகளுக்கு விதிப்படி அபிஷேகம் செய்விக்கப்பட்டது. இரவில் அங்கிருந்து பெரியதொரு ஊர்வலம் புறப்பட்டது. மடத்தின் நாதஸ்வர கோஷ்டியுடனும் அத்தேசத்து வாத்திய கோஷ்டிகளுடனும் கால்நடையாக வந்து கொண்டிருந்த ஸ்வாமிகளை ஆயிரக்கணக்கான நகர மக்கள் அன்று தரிசித்துக் கொண்டார்கள். அன்று ஓர் பெரிய வாண வேடிக்கையையும் அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த ஏற்பாடுகளெல்லாம் என்ஜீனியர் **எல். வேங்கிடகிருஷ்ண ஐயரது** மேற்பார்வையில் மிகுந்த சீரிய முறையில் நடைபெற்றன. ஸ்வாமிகள் கட்டாக்கில் விஜயம் செய்திருந்த பொழுது **புரி கோவர்த்தன மடத்தின்** நிர் வாகிகள் கட்டாக்கிற்கு வந்து, ஸ்வாமிகளைப் **புரிக்கு** விஜயம் செய்யவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

**சாக்ஷி கோபால் தர்சனம்**

1936 ஏப்ரல் 15-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதி வரை 10 நாட்கள் ஸ்வாமிகள் கட்டாக்கில் முகாம் செய்து, 25-ஆம் தேதி அவ்விடமிருந்து புறப்பட்டு, சிறிய கிராமங்களின் வழியாக 30ஆம் தேதி **பலியநாத்** என்னும் ஊரிலும், அடுத்த மே மாதம் 1-ஆம் தேதி **பால்கட்டீ** என்னும் ஊரிலும், 2-ஆம் தேதி **முகுந்தபுரிலும்** விஜயம் செய்தார்கள். முகுந்தபுரில் ஸ்வாமிகள் முகாம் செய்திருந்தபொழுது, ஜகன்னாத முக்தி மண்டப சபையார் ஓர் அவசரக் கூட்டம் கூட்டி, ஸ்வாமிகளை ஜகந்நாதத்திற்கு விஜயம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொள்வதாக ஓர் தீர்மானம் நிறைவேற்றினார்கள். அத்தீர்மானத்தின் கையெழுத்துப் பிரதியுடன் சபையின் பிரதிநிதிகள் **முகுந்தபுரில்** ஸ்வாமிகளைத் தரிசித்துக் கொண்டு, ஸ்வாமிகளிடம் அதைச் சமர்ப்பித்தனர். ஸ்வாமிகளும் அவர்கள் வரவேற்பை ஏற்றுக்கொண்டு இரண்டொரு நாட்களில் புரிக்கு விஜயம் செய்வதாக வாக்களித்தார்கள்.

1936 மே மாதம் 3-ஆம் தேதி ஸ்வாமிகள் **சாக்ஷிகோபால்** என்னும் பழமையான புகழ் பெற்ற தலத்திற்கு விஜயம் செய்தார்கள். சாக்ஷிகோபாலைப் பற்றிய ஓர் கதையை ஒரிஸா மக்கள் கர்ண பரம்பரையாகக் கூறி வருகின்றனர். அந்த சாக்ஷிகோபால் விக்ரகம் வடமதுரையில் இருந்ததென்றும், ஓர் அந்தணருக்குச் சாக்ஷி சொல்ல அந்தக்கோபாலனே காஞ்சீபுரத்திற்கு ஒரு சமயம் வந்ததாகவும் கூறப்படுகிறது. பின்னர் காஞ்சீபுரத்திலிருந்து புரி மன்னனாகிய **புருஷோத்தம மகாராஜா** அந்தக் கோபால மூர்த்தியை புரிக்கு எடுத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது. அவ்வந்தணரது கதைச் சுருக்கம் பின் வருமாறு:—

காஞ்சீ மண்டலத்திலிருந்து இரண்டு அந்தணர்கள் கங்கா யாத்திரை சென்றனர். அவர்களில் ஒருவர் வயது சென்றவர்; மற்றொருவர் இளைஞர். அவ்விளைஞர் பிரம்மசாரி. போகும் வழியில் வயது சென்றவர் உடல்நிலை குன்றி, அவதியுற்றார். அப்பொழுது இளைஞர் அவரைத் தூக்கிச் சென்று, அவரது வியாதியைக் குணப்படுத்தி யாத்திரையைச் செவ்வனவே நடக்கச் செய்தார். மகிழ்ச்சியுற்ற அந்தக் கிழவர் அப்பொழுது தம் பெண்ணை அவ்விளைஞருக்கு மணம் செய்துவைப்பதாக வாக்களித்தார். அவ்விதம் வாக்களிப்பு வடமதுரையில் இந்தக் கோபாலன் சந்நிதானத்திலேயே நடைபெற்றது. ஊர் திரும்பிய இளைஞர் கிழவரைப் பார்த்து அவருடைய பெண்ணைத் தமக்குத் திருமணம் செய்து வைத்து அவர் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி

வைக்கும்படி கேட்டுக்கொண்டார். ஆனால் அந்தக் கிழவரோ, (ஜாதியில் அந்த வாலிபர் தம்மைவிடக் கீழ்ப்பட்டவர் என்பதின் காரணமாக) தம் பெண்ணை அவருக்கு விவாகம் செய்துகொடுக்க மறுத்து விட்டார். வாலிபர் இந்த வழக்கைப் பற்றி அவ்வூர் அரசனிடம் முறையிட்டுக்கொண்டார். கிழவரது வாக்குறுதிக்கு ஏதாவது சாக்ஷி உண்டாவென்று அரசன் கேட்க, மதுராபுரியில் வீற்றிருக்கும் கோபாலனே தமக்குச் சாக்ஷியென அந்த வாலிபர் கூறினர். அந்தக் கோபாலனை அழைத்து வரும்படி அப்பொழுது அந்த அரசன் வாலிபரிடம் கட்டளையிட, மறுமுறையும் அந்த இளைஞர் மதுரா நகரம் சென்று, கோபாலனிடம் முறையிட்டு நிகழ்ந்தனவற்றையெல்லாம் விண்ணபித்துக்கொண்டார். கோபாலனும் தாம் நேரில் வந்து, அரசனிடம் சாக்ஷி கூறுவதாக அருளிய அசரீரியான சொற்கள் அந்த இளைஞரின் காதில் விழுந்தன. அப்படியே கோபாலன் அந்த இளைஞரைத் தொடர்ந்து வரும் பொழுது, இளைஞர் பின்புறம் திரும்பிப் பார்க்கக்கூடா தென்றும், அவ்விதம் திரும்பிப் பார்த்தால், அவர் எந்த இடத்தில் தன்னைத் திரும்பிப் பார்க்கின்றாரோ, அதே இடத்தில் தாம் தங்கி விடுவதாகவும் அந்த அசரீரிச் சொற்கள் கூறின. இந்த நிபந்தனையுடன் கோபாலன் பின்தொடர, இளைஞர் பல நாடுகளைக் கடந்து காஞ்சீபுரத்தை அடைந்தார். அந்நகரை அடைந்ததும் தமது சொந்த ஊரை அடைந்த மகிழச்சியாலும், பின்னர் நடைபெறப்போகும் நிகழ்ச்சிகளை எண்ணியதாலும், அந்த இளைஞர் திடீரெனப் பின்புறம் திரும்பிப் பார்க்க, அக்கணத்திலேயே கோபாலன் சிலை உருவமாக மாறி அங்கேயே தங்கி விட்டார். இந்த அதிசய நிகழ்ச்சி ஊரெங்கிலும் பரவ, அரசனும் நேரில் வந்து சாக்ஷிகோபாலரைத் தரிசித்துக்கொண்டார். வயோதிக அந்தணரும் பெரும் மகிழ்ச்சியுற்றவராகித் தமது பெண்ணை அந்த வாலிபருக்குத் திருமணம் செய்துவைத்தார்.

பின்னர் ஒரு சமயம் புரி மன்னர் காஞ்சி மன்னரது பெண்ணை மணம் புரிய வேண்டிக் காஞ்சிக்கு வந்து, **பத்மாவதி** என்னும் ராஜகுமாரியை மணந்து அவளுடன் புரிக்குச் சென்றபோது, அந்தக் கோபால விக்ரஹத்தையும் மன்னரிடம் கேட்டு வாங்கி எடுத்துச் சென்றாரென ஒரு வரலாறு கூறப்படுகிறது. இந்தக் கதை மிகவும் விரிவாக **ஒரிஸாவில்** வழங்கப்பட்டு வருகிறது. அதன் கருத்து மாத்திரம் இவ்விடம் தரப்பட்டுள்ளது. கண்ணனே சாக்ஷி கூற வந்ததின் காரணமாக இந்த மூர்த்திக்கு **சாக்ஷிகோபாலன்** எனப் பெயர் விளங்குகிறது. ஸ்வாமிகள் மே

மாதம் 2, 3-ஆம் தேதி இத்தலத்தில் தங்கியிருந்து சாக்ஷி கோபாலரைத் தரிசித்துக் கொண்டார்கள். ஸ்வாமிகள் வரவை ஒட்டித் தேவஸ்தானத்தில் விசேஷமான ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன. தேவஸ்தான பண்டாக்களும், நிர்வாகிகளும் ஸ்வாமிகளைத் தேவஸ்தானத்தில் வரவேற்று மரியாதை செய்தனர்.

**புரி ஜகந்நாதத்திற்கு விஜயம்**

மே மாதம் 4-ஆம் தேதி இரவு, ஸ்வாமிகள் **ஹரிகிருஷ்ணபுர் சாஸனத்திற்கு** (அக்ரஹாரம்) விஜயம் செய்தார்கள். அவ்வூரி லுள்ள பண்டிதர்களும் கவிகளும் ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார்கள். 5-ஆம் தேதி விடியும் முன்னர் ஸ்வாமிகள் புரி ஜகந்நாதத்தின் எல்லைப்புறத்திலுள்ள **சந்தன்-தாலாப்** என்னும் தடாகத்தில் நீராடினார்கள். அந்தத் தடாகத்தி னருகில் ஓர் அலங்காரக் கொட்டகை அமைக்கப் பெற்றிருந்தது. புரியிலுள்ள பிரமுகர்கள் பலர் ஸ்வாமிகளை வரவேற்பதற்கு அதிகாலையிலேயே அவ்விடம் கூடியிருந்தனர். அவர்களில் புரியி லுள்ள நான்கு அத்வைத மடங்களின் சந்நியாசிகளும், **புரி ராஜாவும்,** முக்திமண்டப பண்டிதர்களும், சர்க்கார் அதிகாரிகளும் மற்றும் பொதுமக்களும் கூட்டம் கூட்டமாக நிறைந்திருந்தனர். ஜகக்குருவைத் தரிசிப்பதற்கென பல்லாயிரக்கணக்கான மக்கள் அதிகாலையில் அங்குக் கூடியிருந்த காட்சி எவருக்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. ஊர் முழுவதும் அன்று தோரணங் களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொருவரும் தங்களால் இயன்றவரை ஸ்வாமிகளது வரவேற்புப் பணியில் ஈடுபட்டவ ராகக் காணப்பட்டனர். காலை 7 மணிக்கு சந்தன்தாலாப்புக்கருகில் ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. அதன் பின் சிறிது நேரத்திற்கெல்லாம் அவ்விடத்திலிருந்து ஓர் பெரிய ஊர்வலம் கிளம்பிற்று. அந்த ஊர்வலத்தில் தேவஸ் தானத்தைச் சேர்ந்த விருதுகளும், புரி ராஜாவின் விருதுகளும், மடத்தின் யானை, குதிரை, பாலா, மகரத்தோரணம், குடைகள் முதலான விருதுகளும் முன்செல்ல, மடத்தின் நாதஸ்வர வித்வான் களுடைய மேளவாத்யத்துடன் ஊர்வலம் கிளம்பிற்று. வீதிகளின் இரு புறங்களிலும் மக்கள் ஏராளமாகக் கூடி ஸ்வாமிகளைத் தரிசித்தனர். ஊர்வலம் காலை 10 மணிக்குக் கடற்கரையிலுள்ள **கோவர்த்தன மடத்தை** அடைந்தது. அந்த மடத்தின் வாயிலில் ஸ்வாமிகளுக்குப் பூர்ணகும்ப மரியாதைகள் அளிக்கப்பட்டன.

பின்னர் ஸ்வாமிகளுக்கு மக்கள் பாதபூஜை செய்தனர். ஸ்வாமிகள் கோவர்த்த மடத்தின் சிம்மாஸனத்தில் அமர, **கோவர்த்தன மடம், சங்கரானந்த மடம், சிவதீர்த்த மடம், கோபால தீர்த்த மடம்,** இந்த நான்கு மடங்களின் சந்நியாசிகளும் நிர்வாகிகளும் ஸ்வாமி களை வணங்கினர். ஸ்வாமிகளுக்கு அப்பொழுது காணிக்கைகளும் செலுத்தப்பட்டன. அன்று பகல் ஒரு மணிக்கு ஸ்வாமிகள் புரியின் பிரதான ஆலயமான **நீலாத்ரிக்கு** விஜயம் செய்தார்கள். அங்குத் தேவஸ்தான நிர்வாகிகளும், பண்டாக்களும் தேவஸ்தான மரியாதைகளுடன் ஸ்வாமிகளை வரவேற்று **ஜகந்நாதர், பலராமர் சுபத்ரா தேவி, ஸ்ரீதேவி, பூதேவி, விமலாதேவி, காஞ்சி கணபதி, நரசிம்மமூர்த்தி** இவைகளின் சந்நிதிகளில் ஸ்வாமி தரிசனம் செய்து வைத்தார்கள். பொன்னுல் ஆன புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட மாலைகளை எல்லாச் சந்நிதிகளுக்கும் ஸ்வாமிகள் சமர்ப்பணம் செய்தார்கள். அன்றிரவு கோபால தீர்த்த மடத்தின் அதிபரும், மற்றும் **ஸ்ரீமத் வாசுதேவ தீர்த்த ஸ்வாமிகளும்** அவர்களின் மடங் களின் சார்பாக ஸ்வாமிகளுக்குக் காணிக்கைகள் செலுத்தி மரியாதை செய்தனர்.

**ஜகந்நாதம் முக்தி மண்டப சபையின் பீடத்தில் அமர்ந்தது**

ஜகந்நாதத்தில் பண்டிதர்களின் மகா சபை ஒன்று பழங்காலந் தொட்டு இருந்து வருகிறது. ஜகந்நாதத்தின் ஆலயம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமை வாய்ந்தது இந்தச் சபை. புரியை அடுத்த 18 சாஸனங்களின் பண்டிதர்கள் இந்தச் சபையில் அங்கம் வகிக்கிருர்கள். இந்தச் சபையும் புரியின் ஆலயத்திலேயே அமைந்துள்ளது. புரியிலுள்ள நான்கு அத்வைத மடங்களில் எந்த மடத்தின் அதிபர் அதிக வருடங்கள் சந்யாஸ ஆசிரமத்துடன் இருந்துள்ளாரோ, அவரே அந்தச் சபைக்குத் தலைவராக இருந்து வருவது பழங்காலத்து ஏற்பாடாகும். அந்த நாட்டில் தர்ம சாஸ்திரம் சம்பந்தமான சர்ச்சைகள் எழும்போதெல்லாம், அவை பற்றி இந்தச் சபை செய்யும் தீர்ப்பே முடிவானதாகும். இந்தச் சபை கூடும் இடம் ஆலயத்திலுள்ள முக்தி மண்டபமாகும். ஆகவே இதற்கு **முக்தி மண்டப சபை** என்று பெயர் வழங்கலா யிற்று. இந்த மண்டபத்தின் நடுவில் அமைந்துள்ள புனிதமான தும் பழமையானதுமான பீடத்தில் ஆதி சங்கரரின் நேர் பரம் பரையைச் சார்ந்த ஆசார்ய புருஷர்களே அமர்வதற்குத் தகுதி யுள்ளவர்களென ஓர் விதி ஏற்பட்டுள்ளது. இம்மாதிரி ஓர் சந்தர்ப்பம் நிகழ்வது சரித்திரத்திலேயே மிகவும் அரிதாக இருக்கு

மாதலால், இதை ஓர் பெரும் விழாவாக அன்று கொண்டாட வேண்டுமென முக்தி மண்டப சபையார் தீர்மானித்தார்கள். இத் தீர்மானத்தை ஸ்வாமிகளிடம் அவர்கள் விண்ணப்பித்துக் கொள்ள, ஸ்வாமிகளும் அன்றிரவு மறுமுறை தேவாலயத்திற்கு விஜயம் செய்து, முதலில் எல்லாச் சந்நிதிகளிலும் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டார்கள். பண்டிதர்கள் ஸ்வாமிகளைத் தக்க மரியாதைகளுடன் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்த முக்தி மண்டப சபைக்கு அழைத்துச் சென்று அச்சபையின் பீடத்தில் அமர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்கள். ஸ்வாமிகள் அந்தப் பீடத்தில் அமர்ந்தவுடன் எல்லோரும் ஸ்வாமிகளைப் புஷ்பங்களினால் அர்ச்சித்து அவர்களை வணங்கி, ஜய கோஷத்தை எழுப்பினார்கள். இந்தக் கோலாகலமான வைபவத்தைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் ஆலயத்தில் அப்பொழுது கூடியிருந்தனர். சபையின் சார்பாக ஸ்வாமிகளுக்கு வடமொழியில் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. சங்கரானந்த மடத்தின் அதிபரும், முக்தி மண்டபத்தின் தலைவருமான வயது முதிர்ந்த ஸ்வாமிகளும், மற்றும் பல பண்டிதர்களும் ஆதி சங்கரர் பாரத பூமி முழுவதும் திக் விஜயம் செய்ததைப் பற்றியும், அவர்கள் ஸ்தாபித்த மடங்களைப் பற்றியும், அத்வைத சித்தாந்தத்தைப் பற்றியும் விரிவாகப் பேசி, நம் ஸ்வாமிகள் ஆதிசங்கரரைப் போலவே இந்நாளில் பாரத பூமியில் திக்விஜயம் செய்து உலக க்ஷேமத்திற்குப் பாடுபட்டு வருகிறார்களென்றும், இம்மாதிரி மகா புருஷர்கள் விஜயம் செய்வது மிகவும் அரிதாகவே நேரும் என்றும் கூறினார்கள். மேலும் ஸ்வாமிகள் புரிக்கு விஜயம் செய்தது ஒரிஸா மக்கள் செய்த புண்ணியப் பயனேயாகும் என்றும், ஸ்வாமிகள் அத்தலத்தில் தங்கியிருக்கும் வரை மக்கள் அவர்களது விஜயத்தை மிகவும் சிறப்பாகக் கொண்டாட அவரவர்களாலானவைகளை உள்ளன்புடன் நடத்திவைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். பின்னர் ஸ்வாமிகள் வடமொழியில் ஒரு சொற்பொழிவாற்றினார்கள். அதில் பாரத நாட்டின் மற்றப் பாகங்களை விட ஒரிஸா மாகாணத்தில் வேதக் கலை நன்கு காப்பாற்றப்பட்டு வருவதைக்காண தாம் மிகவும் மகிழ்ச்சியுறுவதாகவும், புனிதமான அந்த ஜகந்நாத க்ஷேத்திரத்திலுள்ள முக்தி மண்டப சபையார் தமக்கு அன்று அளித்த பெருமைகளெல்லாம் எவருடைய திருவடிகளை யாவரும் வணங்குகின்றோமோ, நாட்டிலிருந்த பல துர்மதங்கள் எவரது அவதாரத்தினால் மறைந்தனவோ, அப்படிப்பட்ட ஆதிசங்கரருக்கே சாரும் என்றும், ஜகந்நாத பண்டிதர்கள்

பாரத பூமிக்கே வழிகாட்டியாக இருந்து உலகத்தில் தர்மம் பரவ பாடுபட வேண்டுமென்றும் கூறினர்கள்.

**புரியில் சமுத்திர ஸ்நானம்**

1936 மே மாதம் 6-ஆம் தேதி ஸ்வாமிகள் புரியிலுள்ள **தாஸ்புர் ராஜாவின்** அரண்மனையில் தங்கியிருந்தார்கள். அன்று பௌர்ணமி; சந்நியாசிகள் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை பௌர்ணமியில்தான் வபனம் செய்து கொள்ளுவது வழக்கம், அன்றே வபன பௌர்ணமியும் நேர்ந்தது. அந்த நாட்களில் அநேகமாக ஆறுகளிலேயே ஸ்வாமிகள் ஸ்நானம் செய்வார்கள்; கடலில் ஸ்நானம் செய்ய நேர்ந்தால் அது மேலும் புனிதமாகக் கருதப் படும். ஸ்வாமிகள் அன்று கடல் ஸ்நானத்திற்குச் சென்றபொழுது கடல் கரையில் ஏராளமாக மக்கள் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் அன்று **மஹோததி** என்னும் கிழக்குக் கடலில் விதிப்படி நீராடினர்கள். (கிழக்கேயுள்ள வங்கக்கடலுக்கு மஹோததியென்றும், மேற்கிலுள்ள அரபிக் கடலுக்கு ரத்னுகரம் என்றும் பெயர் விளங்கி வருகின்றது.) புரியிலுள்ள சந்நியாசிகள் பலர் அன்று ஸ்வாமிகளுடன் சமுத்திர ஸ்நானம் செய்துகொண்டார்கள்.

**புரியில் பண்டிதர்களுக்குப் பரிசுகள் வழங்கியது**

1936 மே மாதம் 3–ஆம் தேதி ஸ்வாமிகள் புரியிலுள்ள **சங்கரவித்யா பீடத்திற்கு** விஜயம் செய்து, அவ்விடம் பயிலும் மாணவர்களுக்கும், ஆசிரியர்களான பண்டிதர்களுக்கும் உபதேச மொழிகளைக் கூறினர்கள். மே மாதம் 8-ஆம் தேதி **தாஸ்புர் ராஜாவின்** அரண்மனையில் ஸ்வாமிகளுக்குப் பொதுமக்கள் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளைச் செய்துவைத்தார்கள். 9-ஆம் தேதி ஸ்வாமிகளது முன்னிலையில் ஒரிஸா நாட்டுப் **பண்டிதர்கள் சபை** ஒன்று கூட்டப்பட்டது. அந்தச் சபையில் சுமார் 100 பண்டிதர்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தனர். சாஸ்திரங்களில் விளக்கங்கள் கூறுவதில் பண்டிதர்கள் ஒவ்வொருவரும் தங்களது புலமையை ஸ்வாமிகளின் முன்பு காட்டிக்கொண்டனர். ஸ்வாமிகள் அந்தச் சபையில் விஜயம் செய்திருந்த பண்டிதர்களில் 70 பேருக்குக் காஷ்மீர் சால்வைகளையும், சம்மானமும் அளித்தார்கள். மற்றவர்களுக்கும் அவரவர்கள் பெருமைக்குத் தக்கவாறு பரிசுகள் வழங்கப்பட்டன. வித்வான்களின் சமூகத்தை அதுவரை எவரும் பெருமைப் படுத்தியதில்லை என அங்குள்ள மக்கள் பேசிக்கொண்டனர். பண்டிதர்களும் பெரும் மகிழ்ச்சியுற்றனர். அவர்களில் முதியோர்கள் சிலர் அன்றைக்கு 50 வருடங்

களுக்கு முன்னர், 1886-ஆவது வருடம், ஸ்ரீ காமகோடி பீடத்தின் 65-ஆவது ஆசாரியர்களான ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் புரிக்கு விஜயம் செய்து பண்டிதர்களை ஆதரித்த பெருமைகளைப்பற்றி ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டு, 50 வருடங்களுக்குப் பின்னர் நடைபெறும் அதே காட்சியை அன்று தாங்கள் காணும் பாக்யம் பெற்றதாகக் கூறினார்கள். ஸ்வாமிகள் மே மாதம் 5-ஆம் தேதி முதல் 9-ஆம் தேதி முடிய, 5 நாட்கள் புரியில் தங்கி விட்டு 10-ஆம் தேதி மறுமுறையாக சாக்ஷிகோபால் தலத்திற்கு விஜயம் செய்தார்கள்.

**சில்கா ஏரியையும் மலைப் பிரதேசத்தையும் கடந்தது**

1936-ஆவது வருடம் மே மாதம் 10-ஆம் தேதி இரவு, ஸ்வாமிகள் சாக்ஷி கோபால் தலத்திலிருந்து புறப்பட்டு மறுநாள் **டிலாங்** என்னும் ஊரில் தங்கி, 18-ஆம் தேதி **குர்தாவுக்கு** விஜயமானார்கள். குர்தா புரி ஜில்லாவிலுள்ள ஒரு பெரிய பட்டணம். புரியிலிருந்து சுமார் 60 கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. அன்று பகல் அவ்விடம் தங்கிவிட்டு அன்றிரவே யாத்திரையை மேலும் தொடங்கினார்கள். அவ்விடமிருந்து சுமார் தெற்கே 125 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **சத்ரபுரை** நோக்கி யாத்திரை புறப்பட்டது. இந்தத் தூரத்தைக் கால்நடையாகக் கடப்பது எளிதான காரியமன்று. பாதையில் இருபுறங்களிலும் உயர்ந்த மலைத்தொடர்ச்சிகள்; சேர்ந்தாற்போல் பல கிலோ மீட்டர்கள் வரை அடர்ந்த கானகம். இங்கெல்லாம் வன விலங்குகள் ஏராளமாக வசிக்கும். பகலிலேயே துப்பாக்கி முதலான பந்தோபஸ்துகளுடன்தான் அந்தப் பகுதியைக் கடக்க வேண்டும். சுமார் 25 கிலோ மீட்டர் அகலமும், 75 கிலோ மீட்டர் நீளமுமுள்ள **சில்கா ஏரியின்** மேற்குப் பகுதியில் அமைந்துள்ள உயர்ந்த மலைகளின் அடிவாரத்தில் இந்த மலைப்பிரதேசம் அமைந்துள்ளது. அங்குத் தங்குவதற்கு வசதியான இடமோ, குடி தண்ணீர் வசதியோ கிடைப்பது மிகவும் அரிதாக இருந்தது. சில கிலோமீட்டர்கள் கடந்ததும் வெகு தூரம் ஒரே மணற்பாங்கான பிரதேசம்; மலை மீது செல்லும் பாதைகள் ஏற்றம் இறக்கத்துடன் வளைந்து, வளைந்து செல்லும் காட்சி; கிழக்குப் பாகத்தை நோக்கினால் கடல்போல் காணப்படும் சில்கா ஏரி; மேற்கில் காடுகள் அடர்ந்த மலைகளின் பயங்கரத் தோற்றம்; ஜன சஞ்சாரமற்ற பிரதேசம்; இவைகளுடன் வெயிலின் கொடுமையும் தாங்கமுடியாதவாறு இருந்தது. இந்தப் பிரதேசத்தைச் சிப்பந்திகள் மிகுந்த பிரயாசையுடன் கடந்தார்கள். ஸ்வாமி

களிடம் அந்தச் சிப்பந்திகளுக்கு இருந்த ஒப்பற்ற பக்தியே இந்தக் கடுமையான பிரயாணத்தைக் கடக்க அவர்களுக்கு மன உறுதியையும், உடல் வலிமையையும் கொடுக்கக் காரணமாயிருந்ததெனக் கூறலாம்.

நாள் ஒன்றுக்கு சுமார் 35 கிலோ மீட்டர்கள் பிரயாணம் செய்து, மே மாதம் 17-ஆம் தேதி ஸ்வாமிகள் **சத்ரபுருக்கு** விஜயமானார்கள். வழியில் 13-ஆம் தேதி **ஜாங்கியாவிலும்,** 14-ஆம் தேதி **டங்கியிலும்,** 15-ஆம் தேதி **பாலுகோனிலும்,** 16-ஆம் தேதி **ரம்பா** என்னும் ஊரிலும் தங்கினார்கள். இங்கெல்லாம் வசதிகள் வெகு குறைவாயிருந்த போதிலும் ஒருவாறு சமாளித்துக் கொண்டு ஸ்வாமிகள் யாத்திரையை மேலே தொடங்கினார்கள். **சத்ரபுர்** சில்கா ஏரியின் தெற்குக்கோடியிலுள்ள கடலை ஒட்டிய ஒரு பட்டணம்; கஞ்சம் ஜில்லாவின் தலைநகரம்; அவ்விடம் ஆதி சங்கரரது ஆலயம் ஒன்று அமைந்துள்ளது. ஸ்வாமிகள் அங்கு 17-ஆம் தேதி முதல் 23-ஆம் தேதி முடிய 7 நாட்கள் தங்கி இருந்தார்கள். அவ்விடமுள்ள மார்வாரி சமூகத்தினரும், மற்றும் அந்நகரவாசிகளும் ஸ்வாமிகளை வெகு குதூகலத்துடன் வரவேற்று, ஸ்வாமிகளின் விஜயத்தை மிகவும் வெற்றிகரமாகக் கொண்டாடினார்கள். மே மாதம் 24-ஆம் தேதி ஸ்வாமிகள் அவ்வூரிலிருந்து புறப்பட்டு தென்மேற்கில் 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள **பர்ஹாம்புருக்கு** விஜயமானார்கள். அவ்விடம் ஸ்வாமிகள் 1936-ஆவது வருடம் ஜூன் மாதம் 15-ஆம் தேதி வரை, 23 நாட்கள் தங்கியிருந்து, பின்னர் ஜூன் மாதம் 16-ஆம் தேதி முதல் 21-ஆம் தேதி வரை **இச்சாபுரிலும்,** 22, 23, 24-ஆம் தேதிகளில் **நௌபாஸா விலும்** 25-ஆம் தேதி **பத்மநாபபுரிலும்,** 26 **திக்பாஹண்டியிலும்,** 28-ஆம் தேதி **செருகாடாவிலும்** 29, 30, ஜூலை 1-ஆம் தேதியில் **தாமோதர்பள்ளியிலும்,** ஜூலை 2-ஆம் தேதி **ஹிங்கில்லிக்காட்டிலும்** விஜயம் செய்தார்கள். இவ்விடங்களிலெல்லாம் மக்கள் ஸ்வாமிகளை மிகுந்த பக்தியுடன் வரவேற்று, ஒவ்வோர் ஊரிலும் அவர்களுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலிய உபசரணைகளைச் செய்தார்கள். ஆங்காங்கு ஸ்வாமிகள் அத்தேச பாஷையில் மக்களுக்கு உபதேசம் அருளினார்கள்.

### பர்ஹாம்புரில் 1936-ஆவது வருடத்திய வியாஸ பூஜை

1936-ஆவது வருடம் ஜூலை மாதம் 4-ஆம் தேதி நடைபெற்ற வியாஸ பூஜையை முன்னிட்டு ஸ்வாமிகள் 2-ஆம் தேதி இரவு **பர்ஹாம்புருக்குத்** திரும்பவும் விஜயமானார்கள். **பர்லாகிமிடி மகாராஜாவின்** தலைமையில் பர்ஹாம்புர் பொது மக்கள் ஸ்வாமி

களின் பூஜைக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் சிறந்த முறையில் செய்திருந்தார்கள். அதற்கென அமைக்கப் பெற்றிருந்த ஓர் அலங்கார மண்டபத்தில் ஸ்வாமிகளது வியாஸபூஜை வெகு விமரிசையுடன் நடைபெற்றது. ஏராளமான மக்கள் கூடிப் பூஜையைத் தரிசித்துக்கொண்டனர். ஆந்திர நாட்டுப் பண்டிதர்கள் பலர் அப்பொழுது ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டு தங்கள் புலமையைக் காட்டி ஸ்வாமிகளிடம் சம்மானம் பெற்றுப் போனார்கள். சாந்திரமான ரீதியாக வரும் மாதங்களில் அந்த வருடத்தில் பாத்திரபத மாதத்தில் ஒரு மாதம் அதிக மாதமாக வந்ததால், சாதாரணமாக இரண்டு மாதங்களில் முடிவு பெறும் சாதுர் மாத சங்கல்பம் அவ்வருடத்தில் மூன்று மாதங்களுக்கு நீடித்தது. 1936-ஆவது வருடம் செப்டம்பர் மாதம் 28-ஆம் தேதி பர்ஹாம்புரில் ஒரு சநாதன தர்ம மகாநாடு கூடிற்று. அந்த மகா நாட்டை ஸ்வாமிகளே திறந்து வைக்க வேண்டுமெனப் பர்லாகிமிடி மகாராஜாவும் **தாரகோடா ராஜாவும்** விண்ணப்பித்துக் கொண்டதற்கிணங்க, ஸ்வாமிகள் அந்த மகாநாட்டுப் பந்தலுக்கு விஜயம் செய்து, ஆயிரக்கணக்கான மக்கள் மகிழுமாறு அந்த மகா நாட்டைத் துவக்கி வைத்தார்கள். அன்று, அவர்கள், **நமது தர்மம்** என்பதைப்பற்றித் தெலுங்கில் மிகவும் தெளிவாக உபதேசம் அருளினார்கள். அந்த மகாநாடு பின்னர் பர்லாகிமிடி மகாராஜாவின் தலைமையில் கூடிப் பல தீர்மானங்களை நிறைவேற்றிற்று. ஸ்வாமிகள் ஆந்திர நாட்டுக்கு விஜயம் செய்வதைக் குறித்து மகாநாடு மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டது.

**ஸ்ரீகூர்ம க்ஷேத்திரத்திற்கு விஜயம்**

1936 ஆவதுவருடம் செப்டம்பர் மாதம் 30-ஆம் தேதி ஸ்வாமிகள் பர்ஹாம்புரிலிருந்து புறப்பட்டு அக்டோபர் மாதம் 1, 2-ஆம் தேதிகளில் **இச்சாபுரிலும்**, 3-ஆம் தேதி முதல் 5-ஆம் தேதி முடிய **சோம்பேட்டாவிலும்**, 6-ஆம் தேதி **பருவாவிலும்** 7-ஆம் தேதி **பலாசாவிலும்**, 8-ஆம் தேதி **டக்காலியிலும்**, 9-ஆம் தேதி **நரசன்னப்பேட்டையிலும்** முகாம் செய்துகொண்டு 10-ஆம் தேதி **சிகாகோலுக்கு** விஜயம் செய்தார்கள். வழி நெடுகிலும் ஒவ்வொரு ஊரிலும், அந்த நாட்டு மக்கள் ஸ்வாமிகளைத் தக்கவாறு உபசரித்து, ஸ்வாமிகளது ஆசியைப் பெற்றார்கள். சிகாகோலில் ஸ்வாமிகள் குஜராத்திப் பேட்டையில் தங்கியிருந்தார்கள். பர்ஹாம்புரிலிருந்து சிகாகோல் 145 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. செப்டம்பர் 10-ஆம் தேதி சிகாகோலை அடுத்துக்

கடற்கரையில் அமைந்துள்ள **ஸ்ரீ கூர்ம** என்னும் தலத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். **கூர்மாவதாரம்** என்னும் பெயருடன் ஆமை உருவத்தில் மகாவிஷ்ணு அவ்விடத்தில் காட்சி அளிக்கின்ருர். மந்தர மலையை மத்தாக வைத்துத் தேவர்கள் அமிர்தத்தைக் கடைந்தனர். அந்த மந்தர பர்வதத்தைக் கீழே முழுகவிடாமல் தாங்கவே திருமால் கூர்மாவதாரம் எடுத்தார். அந்தக் * **கூர்மக்ஷேத்திரம்** விஜயநகர சம்ஸ்தானத்தின் நிர்வாகத்திலுள்ளது. ஸ்வாமிகள் அந்தத் தேவாலயத்திற்கு விஜயம் செய்த பொழுது, சம்ஸ்தானத்தின் உத்தியோகஸ்தர்கள் ஸ்வாமிகளுக்குத் தக்கவாறு மரியாதைகள் அளித்துச் சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். ஸ்ரீ கூர்மக்ஷேத்திரத்திற்கு விஜயம்செய்து திரும்பும்பொழுது ஸ்வாமிகள் அரசவல்லி என்னும் இடத்தில் **சூர்யநாராயணஸ்வாமி தேவாலயத்தைத்** தரிசனம் செய்துகொண்டார்கள். அத்தலத்தில் இன்றும் வேதக் கலை நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகிறது. வைதிக முறைகளையும் மக்கள் செவ்வனே கடைப்பிடித்து வருகின்றனர்.

**விஜய நகர சம்ஸ்தானத்திற்கு விஜயம் : 1936-ஆவது வருட நவராத்திரி பூஜை**

1936-ஆவது வருடம் அக்டோபர் 12-ஆம் தேதி ஸ்வாமிகள் சிகாகோலிலிருந்து புறப்பட்டு 13-ஆம் தேதி **சுமத்ராபுரத்திலும்** 14-ஆம் தேதி **சிபூர்பள்ளியிலும்,** 15-ஆம் தேதி முற்பகல் **நெல்லிமர்லாவிலும்** தங்கி, அன்று மாலை **விஜய நகரத்தை** அடைந்தார்கள். அன்று அவ்வூர் முழுவதும் ஒரு திருவிழாவைப் போல் விளங்கிற்று. நான்கு மாதங்களுக்கு முன்னரே ஸ்வாமிகளது விஜயத்திற்காக அவ்வூர்ப் பொது மக்களும், மகாராணியும், எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து வந்தார்கள். **ஸ்ரீ எச்சூரி நரசிம்ம பந்துலு** தலைமையில், 4-6-1936 அன்று ஓர் வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பெற்று, ஸ்வாமிகளின் அவ்வூர் விஜயத்தை மிகவும் சிறந்த வகையில் கொண்டாட வேண்டுமென்று மக்கள் ஏற்பாடு செய்திருந்தனர். இந்த வரவேற்புக் கமிட்டியின் பிரதிநிதிகள் 11-10-1936-ஆம் தேதி ஸ்வாமிகளை ஸ்ரீகாகுளம் முகா

---

* **ஸ்ரீ இராமானுஜர்** காலத்திற்கு முன்பு அத்தலத்தில் கூர்மநாதரைச் சுற்றிலும் சிவ சம்பந்தமான விக்ரஹங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தன வென்றும், ஸ்ரீ இராமானுஜர் அவைகளைக் கடலில் எறிந்துவிட்டதாகவும், ராமனுஜாசாரியர் என்பவர் இயற்றியுள்ள ஸ்ரீ ராமானுஜ சம்பூ என்னும் காவியத்தில் கூறப்பட்டுள்ளது.

யில் தரிசித்து 16-10-1936-ஆம் தேதி முதல் அவ்வருட நவராத்திரி விழாவை விஜயநகரத்திலேயே நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதற்கு 50 வருடங்களுக்கு முன்னர் 1885-ஆவது வருடத்தில் ஸ்ரீ காமகோடி பீடத்தின் 65-ஆவது ஆசார்ய ஸ்வாமிகளாக விளங்கிய **ஸ்ரீ மகாதேவேந்திர ஸரஸ்வதி** ஸ்வாமிகள் விஜய நகர சம்ஸ்தானத்திற்கு விஜயம் செய்து, அவ்வருட நவராத்திரி பூஜையை அங்கு நடத்தி இருப்பதை அக் காலத்தில் எழுதி வைக்கப்பட்ட தினக் குறிப்புகள் மூலம் ஸ்வாமி களிடம் அவர்கள் தெரிவித்துக் கொண்டார்.

1936 அக்டோபர் 15-ஆம் தேதி விஜயநகரம் முனிஸிபல் தண்ணீர்த் தேக்கத்தின் அருகில், ஸ்வாமிகளின் வரவேற்பிற்கென ஓர் பெரிய அலங்காரக் கொட்டகை அமைக்கப்பெற்றிருந்தது. அன்று மாலே சூரியன் மேற்குத் திசையில் மறையும் பொழுது, ஸ்வாமிகள் அவ்விடத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்குச் சம்ஸ்தான திவானும், மற்ற அதிகாரிகளும், பொது மக்களும் ஆயிரக்கணக்காகக் கூடி ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து, ஸ்வாமிகளே வரவேற்று, ஓர் வரவேற்புப் பத்திரத்தையும் வாசித் தளித்தார்கள். அவ்விடம் ஸ்வாமிகள் தந்தச் சிவிகையில் அமர்ந்ததும் சம்ஸ்தான விருதுகளுடன் ஓர் பெரிய ஊர்வலம் நகரத்தின் முக்கிய வீதிகளின் வழியே சென்றது. பொது மக்கள் ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பங்கள் அளித்து, புஷ்ப ஹாரங்களும் அணிவித்து, கற்பூர ஆரத்தி முதலான மரியாதைகளேச் செய்தனர். ஊர்வலமும் அன்றிரவு 9 மணிக்கு **டாக்டர் காதே ராமய்யங்காரின்** ஜாகையை அடைந்தது. ஸ்வாமிகள் பல்லக்கி லிருந்து இறங்கி அந்த வீட்டின் முன்புறம் ஓர் சிம்மாசனத்தில் அமர்ந்து அங்குக் கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்களுக்கு ஆசி கூறினார்கள். மறு நாள் 16-10-1936 வெள்ளிக்கிழமை அவ் வருட நவராத்திரி விழா ஆரம்பமாயிற்று. அன்று முதல் ஒன்பது நாட்கள் ஸ்வாமிகள் மௌன விரதத்தையும் உபவாசத் தையும் ஏற்றுக்கொள்வது வழக்கம். அந்தப் பூஜைக்கெனப் பொது மக்கள் விசேஷ ஏற்பாடுகளேச் செய்திருந்தனர். பூஜா மண்டபமும் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. வழக்கம் போல் கன்னியா பூஜை, ஹோமம், பாராயணம் இவைகளெல்லாம் முறைப்படி நடைபெற்றன. ஒவ்வொரு நாளும் பகலிலும் இரவிலும் ஸ்வாமிகள் நிகழ்த்திய பூஜையை ஆயிரக்கணக்கான மக்கள் தரிசித்துத் தங்களேப் புனிதமாக்கிக் கொண்டனர்.

1936 அக்டோபர் 25 ஆம் தேதி, விஜயதசமி அன்று ஸ்வாமிகள் மௌன விரதத்தை முடித்துக்கொண்டார்கள். அன்று ஓர் **பண்டித மகாசபை** கூட்டப்பட்டது. அந்தச் சபையில் ஆந்திர மாகாணத்தில் மிகவும் புகழ் பெற்று விளங்கிய பண்டிதரான **மகாமகோபாத்தியாய தாத சுப்பராய சாஸ்திரிகளுக்கு சாஸ்திர ரத்னகரம்** என்னும் பட்டத்தை வழங்கி, இரட்டைக் காஷ்மீர் சால்வைகள், மற்றும் வெள்ளிப் பாத்திரங்கள் இவைகளை ஸ்வாமிகள் அளித்தார்கள். அன்று மாலை, ஸ்வாமிகள் விஜய நகரத்திலுள்ள ஆறு தேவாலயங்களுக்கும் சென்று அவ்விடங்களில் ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டார்கள். 25—10—36-ஆம் தேதி ஸ்வாமிகள் **வேத விஞ்ஞான பரிஷத்** கட்டிடத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்குப் புகழ் பெற்ற பண்டிதர்களான **மூலராமப்ரிய காணுகுர்த்தி வேங்கடகிருஷ்ண ராவ், ஆகின்ன சத்ய நாராயண, மகாமகோபாத்யாய தாத சுப்பராய சாஸ்திரி, மகாமகோபாத்யாய நொதூரி வேங்கட சாஸ்திரி, நியாய ரத்ன பேரி லக்ஷ்மீநாராயண சாஸ்திரி, ஸ்ரீமத் கோயில் கந்தாடை வேங்கட ராமாசாரியர்** இவர்கள் ஸ்வாமிகளை வரவேற்று ஓர் உபசாரப் பத்திரத்தை வாசித்தளித்தார்கள். ஸ்வாமிகள் அவர்களது உபசரிப்பை ஏற்றுக்கொண்டு, **வேதத்தின் பெருமையைப் பற்றி** உபந்யசித்தார்கள். வேதங்களிலும், சாஸ்திரங்களிலும் நன்குத் தேர்ச்சி அடைந்த நூற்றுக்கணக்கான பண்டிதர்களும், மற்றும் பொது மக்களும் ஸ்வாமிகளது உபந்யாசத்தைக் கேட்டு மகிழ்வுற்றனர். ஸ்வாமிகள் அங்குக் கூடியிருந்த பண்டிதர்களை அவர்களுக்குத் தக்கவாறு சம்மானங்கள் அளித்து யாவரையும் ஆசீர்வதித்தார்கள். (27—10—36) செவ்வாய்க் கிழமை அன்று ஸ்வாமிகள் விஜய நகர சம்ஸ்தான அரண்மனைக்கு விஜயம் செய்து, அங்குத் **தேவஜர் மகாராணி ஸ்ரீலலிதா குமாரி தேவியால்** செய்விக்கப்பட்ட பாதபூஜையை ஏற்றுக்கொண்டார்கள். (30—10—1936), ஸ்வாமிகள் அவ்வூர் மகாராஜா ஆங்கில கலாசாலைக்கு விஜயம் செய்தார்கள். அங்குக் கலாசாலையின் அதிபரும், மற்றும் தத்துவ சாஸ்திர **பேராசிரியர் என். வேங்கடராமனும்,** மற்ற ஆசிரியர்களும் ஸ்வாமிகளை வரவேற்று அவர்களுக்கு ஓர் உபசாரப் பத்திரத்தையும் வாசித்தளித்தார்கள். **பேராசிரியர் என். வேங்கடராமன்** சென்னை கணேஷ் கம்பெனியார், 1923-வது வருடம் வெளியிட்ட "Sankaracharya the great and his Successors in Kanchi" என்னும் புத்தகத்தின் ஆசிரியர் ஆவர். அன்று அவர் ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை செய்து ஸ்வாமிகளது

அருளைப் பெற்றார். ஏராளமான மாணவர்கள் அன்று அவ்விடம் கூடி ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களது ஆசியைப் பெற்றார்கள்.

1936 அக்டோபர் 31-ஆம் தேதி பண்டிதர்களும், பொது மக்களும் நிறைந்த ஒரு பெரிய கூட்டத்தில் ஸ்வாமிகள் **அத்வைத ஸித்தாந்தத்தைப் பற்றி** உபந்யசித்தார்கள். சிவ விஷ்ணு அபேதத்தைப் பற்றிக் குறிப்பிட்டு, அதுவே **ஹரிஹராத்வைதம்** எனக் கூறி, **ஸமர்த்த ராமதாஸ்** முதலான பக்தர்கள் பக்தியின் பெருமையினாலும், உபாசனா மார்க்கத்தினாலும் இந்தப் பேதமற்ற அத்வைதத்தை மேற்கொண்டே மோக்ஷமடைந்தார்களெனக் கூறினார்கள். ஸ்வாமிகள் ஞான மார்க்கத்தைப் பற்றி விளக்கம் செய்தபொழுது ஞானியானவன் குருவின் உபதேசத்தினால் சிறிது சிறிதாக உலகப் பற்றை நீக்கி, வைராக்யத்துடன் இருந்து, தனது சொந்த அனுபவத்தைக்கொண்டு மோக்ஷமடைவதாயும் இதுவே **ஜீவபிரம்ம அத்வைதம்** எனவும் விளக்கினார்கள். மேலும் உபாசனா மார்க்கமும், ஞான மார்க்கமும் முடிவில் ஒரே நிலைமையை அடைவதற்குப் பயன்படுவதாயும் கூறினார்கள். பெண்கள் எவ்விதம் நடந்து கொள்ள வேண்டுமென்பதைப் பற்றியும் ஸ்வாமிகள் சில உபதேச மொழிகளை அருளினார்கள். அன்று மாலை, சம்ஸ்தான சங்கீத வித்வான் **வீணை வேங்கடரமண தாஸ்** ஸ்வாமிகள் முன்னிலையில் வீணை கச்சேரி செய்தார். ஸ்வாமிகள் அவரது திறனை மெச்சி அவருக்குப் பீதாம்பரம் அளித்து அவரைப் பெருமைப்படுத்தினார்கள். அன்று விஜய நகரத்திலிருந்து புறப்பட எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. தேவஜர் மகாராணியும் அன்று ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை செய்து வைத்தார். நகர மக்கள் பலர் பாத பூஜை செய்து வைத்தனர்.

ஸ்வாமிகளை வழியனுப்ப ஆயிரக்கணக்கான மக்கள் ஜாகை முன் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் புறப்படும் சமயம் ஸ்வாமிகளைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆவலுடன் ஜனக் கூட்டம் ஸ்வாமிகளின் சிவிகையை நகரமுடியாதபடி செய்துவிட்டது. அதனால் கூட்டத்தை வெகு பிரயாசையுடன் விலக்கவேண்டியதாயிற்று. அன்றிரவு ஸ்வாமிகள் விஜய நகரத்தை விட்டுப் புறப்பட்டு **பத்மநாப க்ஷேத்திரத்திற்கு** விஜயம் செய்து, மறு நாள் (1—11—1936) விடியற் காலை **கோஸ்தனீ** நதியில் ஸ்நானம் செய்து, பத்மநாப சுவாமியை தரிசித்துக் கொண்டார்கள். அன்று அவ்விடம் தங்கி, அவ்வூர் மக்கள் செய்த பாத பூஜை முதலிய வழிபாடுகளை ஏற்று, மறுநாள் 2 ஆம் தேதி **பீம்லிபட்டணத்திற்கு** விஜயம் செய்தார்கள். பீம்லி பட்டணம் பழைய நாட்களில்



1938-இல் குண்டூர் அனந்தலக்ஷ்மி கோசம்ரக்ஷண சங்கத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள்



1939-இல் நெல்லூரில் காலை கோபூஜை, கஜபூஜை முடிந்தவுடன்
ஸ்ரீ ஆசார்யர்கள் தர்சனம் கொடுக்கிறார்கள்



1963–இல் ராமேச்வரம் அக்னி தீர்த்தகரையில் அமைந்துள்ள ஸ்ரீ ஆதிசங்கர மண்டப விமான கலசத்திற்கு ஸ்ரீ புதுப்பெரியர்கள் ஆயிரக்கணக்கான பக்தர்கள் தர்சிக்க கும்பாபிஷேகம் செய்கிருர்கள்



ராமேச்வரம் ஸ்ரீசங்கரமடத்திற்கு பரமாமுன் அக்னிதீர்த்த
கரையோரம் ஸ்ரீஆசார்யர்கள்

ஆந்திர தேசத்தின் ஓர் முக்கிய துறைமுகமாக அமைந்திருந்தது. அவ்வூரில் கடற்கரையை அடுத்தாற்போல், ஓர் குன்றின் மீது **ஸ்ரீ நரசிம்மஸ்வாமி** ஆலயம் அமைந்துள்ளது. அந்த ஆலயத்திலும் ஸ்வாமிகள் சுவாமி தரிசனம் செய்துகொண்டு மறுநாள் 3-ஆம் தேதி **ஆனந்தபுரம்** என்னும் இடத்தில் தங்கி, அதற்கு மறுநாள் **சிம்ஹாசல க்ஷேத்திரத்திற்கு** விஜயமானுர்கள்.

**ஸிம்ஹாசல யாத்திரை**

ஆந்திர நாட்டில் சிவாலயங்களை விட, விஷ்ணு ஆலயங்களே அதிகமாக அமைந்துள்ளன எனக் கூறலாம். அதிலும் நரஸிம்ம அவதாரத்தையே ஆந்திரர்கள் விசேஷமாகக் கொண்டாடுகிருர்கள். நரஸிம்ம மூர்த்தியின் ஆலயங்கள் ஆந்திர நாட்டின் பல பாகங்களிலும் அமைந்துள்ளன. கர்நூல் ஜில்லாவில் நந்தியாவிலிருந்து 55 கிலோ மீட்டர் தூரத்தில் ஜன சஞ்சாரமில்லாத விசாலமான கானகத்தின் நடுவில் **அகோபிலம்** என்னும் க்ஷேத்திரமுள்ளது. அதுவும் மிகப் பழமை பெற்ற **நரஸிம்ம க்ஷேத்திரமாகும்.** அழகிய சிங்கர் என்னும் சிறப்புப் பெயரை வைணவ வடகலைச் சம்பிரதாய மடாதிபதிகளான ஜீயர் ஸ்வாமிகள் தாங்கி வருகிருர்கள். சிங்கர் என்னும் சொல் நரசிம்மத்தையே குறிக்கும். அகோபிலத்திலுள்ள நரசிம்மப் பெருமாள் அந்த மடத்தின் உபாசனு மூர்த்தியாக அமைந்திருப்பதால், அந்த மடத்திற்கு **அகோபிலமடம்** என்னும் பெயர் அமைந்துள்ளது. இதைப்போல் புராணப் பிரசித்தி பெற்ற பல நரஸிம்ம ஆலயங்களில் ஸிம்ஹாசல ஆலயமும் ஒன்ருகும். இது விஜய நகர சம்ஸ்தானத்தின் நிர்வாகத்திலுள்ளது. இந்த க்ஷேத்திரத்தில் அமைந்துள்ள நரசிம்ம மூர்த்தியை **பக்தஞன பிரஹலாதனே** பிரதிஷ்டை செய்ததாக அந்நாட்டு மக்கள் கூறுகின்றனர். சுமார் 300 மீட்டர் உயரமுள்ள ஸிம்ஹாசலம் என்னும் மலையில், 250 மீட்டர் உயரத்தில் இந்த நரஸிம்ம ஆலயம் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. ஆலயத்தின் அமைப்பும் குறிப்பாக விமானத்தின் தோற்றமும் வெகு அழகாக அமைந்துள்ளன. விமானத்தின் பக்கச் சுவர்களிலும், தூண்களிலும் பார்ப்பவர்கள் வியக்கும்படி விசித்திரமான வேலைப்பாடுகள் செய்து, சிற்பிகள் தங்கள் கைத்திறனைக் காட்டியுள்ளார்கள். கண்களைக் கவரும் இவ்விதச் சிற்பங்களை மிக அரிதாகவே மற்ற இடங்களில் காணமுடியும். ஆலயமும் மலைமீது அடர்ந்த கானகத்தில் இயற்கை அழகு

பெற்றதும் ஜன சஞ்சாரமற்றதுமான இடத்தில் அமைந்திருப்பது இத்தலத்திற்கு இன்னும் அதிகப் பெருமையைக் கொடுக்கின்றது. இவ்வாலயத்திற்கு நிகராக பாண்டிய நாட்டிலுள்ள மதுரைக் கடுத்த **அழகர்கோவிலை** ஒப்பிடலாம்.

1936 நவம்பர் மாதம் 4-ஆம் தேதி, ஸ்வாமிகள் ஸிம்ஹாசலத்திற்கு விஜயமாவதை முன்னிட்டு, விஜய நகர சம்ஸ்தான அதிகாரிகள் எல்லாவித முன்னேற்பாடுகளையும் செய்துவைத்திருந்தனர், ஸ்வாமிகள் தங்குவதற்கென மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள தேவஸ்தான விடுதியும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. தேவஸ்தான பண்டிதர்களும் தேவஸ்தான அதிகாரிகளும் அங்கு ஸ்வாமிகளுக்கு ஓர் வரவேற்பை அளித்தார்கள். அன்று மடத்தின் செலவுகளெல்லாம் தேவஸ்தான நிதியிலிருந்தே நடைபெற்றது. மறுநாள் அதிகாலையில் ஸ்வாமிகள் ஸ்நான அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, மலைமீது ஏறி, வழியிலுள்ள ஆஞ்சனேயர் ஆலயத்தில் முதலில் சுவாமி தரிசனம் செய்துகொண்டார்கள். அந்த மலையின் இயற்கை அழகைப் பற்றிக் கவிதைகள் மூலம் விவரணம் செய்துகொண்டு வந்த பண்டிதர்கள் பலரும், மற்றும் நூற்றுக்கணக்கான அந்தக் கிராமவாசிகளும், ஆதிவாசிகளும், சம்ஸ்தான அதிகாரிகளும் பின் தொடர ஸ்வாமிகள் அந்த மலையின் மீது கால் நடையாக ஏறிய காட்சி அதைத் தரிசித்தவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. தேவஜர் மகாராணியும் ஸ்வாமிகளுடன் வந்து தரிசனத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் நேரில் கவனித்து வந்தார்கள். கோவிலை அடைந்ததும் ஸ்வாமிகள் அதை வலம் வந்து, கோவிலுக்குள் பிரவேசித்து, காலை $7\frac{1}{2}$–மணிக்கு ஸிம்ஹாத்ரி நாதரைத் தரிசனம் செய்துகொண்டார்கள். சுவாமிக்குப் பட்டுப் பீதாம்பரங்கள் அளிக்கப்பட்டன. பின்னர் அங்குள்ள வராக, லக்ஷ்மீ நரஸிம்ம ஸந்நிதிகளையும், மற்ற ஸந்நிதிகளையும் ஸ்வாமிகள் தரிசித்துக்கொண்டார்கள். எல்லா ஸந்நிதிகளிலும் ஸஹஸ்ர நாம அர்ச்சனை முதலான ஆராதனங்கள் நடைபெற்றன. சேவை முடிந்ததும் தேவஸ்தான அதிகாரிகளும், அர்ச்சகர்களும் ஸ்வாமிகளுக்கு விசேஷ மரியாதைகளைச் செய்தனர். அங்குக் கூடி இருந்த பண்டிதர்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் பலவிதமான சம்மானங்களைச் செய்தார்கள். ஸிம்ஹாசலத்தின் தல மகிமையைப் பற்றி விவரித்து அத்தலம் மிகவும் பவித்திரம் (புனிதத் தன்மை) அடைந்ததென ஸ்வாமிகள் கூறினார்கள். பின்னர் அருகிலுள்ள **ஸ்ரீ திருபுராந்தகேசுவரர் ஆலயத்திற்குச்** சென்று

அங்கு அமைந்துள்ள சிவலிங்கத்திற்கு ருத்ராபிஷேகம், அர்ச்சனை முதலானவை நடைபெறச் செய்து அங்கும் அவ்வாலயத்தில் அமைந்துள்ள அம்பிகை முதலான மற்ற ஸந்நிதிகளையும் தரிசித்துக் கொண்டார்கள். அதன் பின்னர் அம்மலையில் அமைந் துள்ள **கங்காதாரா** நீர்வீழ்ச்சிக்குச் சென்று, அப்புனித நதியில் ஆசமனம் செய்து மார்ஜனம் செய்துகொண்டு, தமது தண்டத் தினால் நீரைத் தொட்டு அதைப் புனிதமாக்கிக்கொண்டார்கள். பிறகு நாற்புறமும் செடி கொடிகள் அடர்ந்து வெகு அழகாகக் காணப்பட்ட ஓர் பாறையின்மீது ஸ்வாமிகள் சுமார் ஒரு மணி நேரம் தியானத்தில் அமர்ந்திருந்தார்கள். அங்கு அமரும்பொழுது மகாராணியின் வேண்டுகோளின்படி எடுக்கப்பெற்ற ஸ்வாமி களது புகைப்படம் இவ்விதழின் முன்புறம் காட்சியளிக்கின்றது. பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்வாமிகள் அவர்களுக் கென புதிதாகத் தயாரிக்கப்பட்ட டோலியில் அமர்ந்து மலையின் இயற்கை அழகை அனுபவித்தவாறு மலையிலிருந்து கீழே இறங் கினார்கள். தேவஸ்தான விடுதியில் ஸ்வாமிகளின் அன்றைய பகல் பூஜை நடைபெற்றது. ஏராளமாகப் பக்தர்கள் கூடிப் பூஜை யைத் தரிசித்துக்கொண்டனர். நவம்பர் மாதம் 6-ஆம் தேதி, ஸிம்ஹாசல கிராம மக்களின் பிக்ஷையும் பாதபூஜையும் நடை பெற்றன. 7-ஆம் தேதி ஸிம்ஹாசல மக்கள் ஸ்வாமிகளுக்கு ஓர் ஊர்வலம் நடத்தி வைத்தார்கள். வேத சாஸ்திரக் கலைகளில் தேர்ச்சி பெற்ற வித்வான்களை ஆதரிப்பதும், அக்கலைகளைப் பாது காப்பதும் ஸிம்ஹாசல தேவஸ்தானத்தின் கடமைகளில் ஒன்றாக அமைந்துள்ளபடியால், அவ்விடத்தில் வேதம் ஓதியவர்களும், சாஸ்திரங்களைக் கற்றவர்களுமாகப் பலர் இன்றும் வசித்து வருவது பாராட்டுதற்குரியதாகும்.

### விசாகப்பட்டணத்தில் பண்டித சபை

1936 நவம்பர் 7-ஆம் தேதி இரவு ஸிம்ஹாசலத்திலிருந்து **விசாகப்பட்டணத்திற்கு** விஜயம் செய்தார்கள். அவ்வூர்ப் பொது மக்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், வக்கீல்களும், வியா பாரிகளும் மற்றும் பிற தொழில் புரிகின்றவர்களும் ஸ்வாமி களை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்று அவ்வூருக்கு அவர்கள் விஜயம் செய்ததை மிகவும் சிறப்புடன் கொண்டாடினார்கள். இரவு நேரங்களில் பூஜை முடிந்ததும் ஸ்வாமிகள் செய்த உப தேசங்களைக் கேட்க ஆயிரக்கணக்கில் மக்கள் கூடினர். துறைமுக அதிகாரிகளின் வேண்டுகோளுக்கிணங்கி அவ்வூரில் அமைந்

துள்ள இயற்கைத் துறைமுகத்தையும், கப்பல் தளத்தையும் ஸ்வாமிகள் பார்வையிட்டார்கள். ஸ்வாமிகள் அங்குத் தங்கி யிருந்த பொழுது ஒரு பெரிய பண்டித மகாசபை கூட்டப்பட்டது. இந்தச் சபைக்கு அவ்வூர் ஜில்லா ஜட்ஜ் சாகித்ய ரத்நகர **டாக்டர் எம். கிருஷ்ணமாசாரியர்** தலைமை தாங்கினர். ஸிம்ஹாசல பண்டிதர்களும், மற்றும் அந்நாட்டிலுள்ள பண்டிதர்களும் அந்தச் சபையில் கலந்துகொண்டார்கள். சாஸ்திர சம்பந்தமான பல விஷயங்கள் சபையில் ஆராயப்பெற்றன. ஸ்வாமிகள் நேரில் இந்தச் சபைக்கு விஜயம் செய்து பண்டிதர்களுக்கும், பொது மக்களுக்கும் உபதேச மொழிகளை அருளினர்கள். அந்தச் சபையை நடத்தி வைத்த எல்லாப் பொறுப்பையும், செலவுகளையும் ஸ்வாமிகளிடம் ஒப்பற்ற பக்தி பூண்ட அட்வகேட் **பிரபலா லக்ஷ்மீநரசிம்ம பந்துலு** ஏற்றுக்கொண்டார். டிசம்பர் மாதம் 2-ஆம் தேதி வரையில் ஸ்வாமி கள் விசாகப்பட்டணத்திலேயே தங்கியிருந்தார்கள். சபைக்கு வந் திருந்த பண்டிதர்களுக்கெல்லாம் சால்வை முதலான வெகுமானங் களால் அளித்து ஸ்வாமிகள் பெருமைப்படுத்தினர்கள்.

**விசாகப்பட்டணம் ஜில்லாவில் யாத்திரை**

1936 டிசம்பர் 3-ஆம் தேதி ஸ்வாமிகள் விசாகப்பட்டினத்தி லிருந்து புறப்பட்டு **அகனம்பூண்டி** என்னும் ஊரில் தங்கி, அன்று இரவு **காசீம் கோட்டாவுக்கு** விஜயம் செய்தார்கள். **காசீம் கோட்டா ராஜா** ஸ்வாமிகளை மிகுந்த பக்தியுடன் வரவேற்றுத் தமது அரண் மனையில் பாதபூஜை முதலானவைகளை நடத்திவைத்தார். டிசம்பர் 4, 5-ஆம் தேதிகளில் அவ்விடம் தங்கி 6-ஆம் தேதி ஸ்வா மிகள் **சோடாவரத்திற்கு** விஜயம் செய்தார்கள். அவ்விடம் 3 நாட் கள் தங்கினர்கள். 10-ஆம் தேதி **அனகபள்ளியில் வேதுல திராவிடர்கள்** எனக் கூறப்படும் அந்தணப் பிரிவினர் ஸ்வாமி களுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலான வழிபாடுகளைப் பக்தி யுடன் செய்து வைத்தார்கள். இவர்களும் **காசீம்கோட்டாவிற்கு** அருகிலுள்ள **வேதூர்பர்த்தி** என்னும் ஊரில் வசிக்கும் இவர்களின் மரபினர்களும் இன்றும் வேதக்கலையை நன்கு பரிபாலித்து வருவது குறிப்பிடத்தக்கது. இவர்கள் பிறரிடம் எவ்வித ஊதியமும் பெறு மல் தங்களது பூர்விக ஆஸ்தியின் சிறு வருமானத்தை இக்கலைக்கே அர்ப்பணம் செய்து மிகவும் ஆசாரசீலர்களாக விளங்கி வருகின் றனர். ஸ்வாமிகள் **வேதூர்பர்த்திக்கும்** விஜயம்செய்து, டிசம்பர் 20, 21 இவ்விரண்டு நாட்களிலும் அவ்விடம் தங்கி, அவ்வந்தணர்கள் செய்வித்த பூஜை, மரியாதைகளையும் ஏற்றுக்கொண்டார்கள்.

1936 டிசம்பர் மாதம் 21-ஆம் தேதி இரவு வேதூர்பர்த்தியி லிருந்து ஸ்வாமிகள் **எல்லமஞ்சிலி** என்னும் ஊருக்கு விஜயமானுர் கள். அப்பொழுது அவ்வூரில் ஜில்லா முனிசீபாக இருந்த **ஸ்ரீ முத்து கிருஷ்ண நாயுடு** (Bar-at-law)வின் தலைமையில் அவ்வூர்ப் பொது மக்கள் ஸ்வாமிகளுக்கு சிறந்ததொரு வரவேற்பு அளித்துப் பிக்ஷை பாதபூஜை முதலியவற்றைச் செய்தனர். ஸ்வாமிகள் **எல்லமஞ் சிலியில்** விஜயம் செய்திருந்தபொழுது, காசியிலுள்ள பிரபல பண்டிதரான **ராஜேச்வர சாஸ்திரி திராவிட்** ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டார். அவ்வூரில் ஸ்வாமிகள் 1937 ஜனவரி மாதம் 2-ஆம் தேதி வரை முகாம் செய்திருந்தார்கள். பின்னர் **பெனுகல், தர்மாவரம், கொருப்லேரு, நக்கப்பல்லி,** இவ்வூர்களின் வழியாக ஜனவரி மாதம் 11–ஆம் தேதி **துனி** என்னும் பட்டணத்தை அடைந்தார்கள். அவ்வூர் ராஜா **ஸ்ரீ வேங்கட நாராயண கஜபதி ராஜா பகாதுர்** ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாத பூஜை முதலியவைகளை நடத்தி வைத்தார். சென்ற 1886-ஆவது ஆண்டில் 65–ஆவது ஆசாரியர்களான **ஸ்ரீ மகா தேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** துனிக்கு விஜயம் செய்துள்ளார்கள். ஸ்வாமிகள் துனியிலிருந்து 21-ஆம் தேதி புறப்பட்டு **ஹம்ஸவரம், தட்டகுண்டா, தொட்டாங்கி, அன்னவரம், கொல்லப்போராலு** மார்க்கமாக 28-ஆம் தேதி இரவு **பித்தாபுரத்திற்கு** விஜய மானுர்கள். பித்தாபுரத்தில் ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பு அளிக்கப்பட்டது. மக்கள் அங்கு ஓர் ஊர்வலமும் ஏற்பாடு செய்திருந்தார்கள். பித்தாபுரத்திலுள்ள **பாதகயா** தீர்த்தத்தில் ஸ்வாமிகள் நீராடினுர்கள். கயாசுரனது தலை பிஹாரி லுள்ள **கயா** க்ஷேத்திரத்திலும், தொப்புள் ஒரிஸாவிலுள்ள **ஜாஜ்புரிலும்,** கால்கள் ஆந்திர நாட்டிலுள்ள **பித்தாபுரத்திலும்** அமைந்திருப்பதாகக் கூறுவர். அந்தப் பாதகயா குளத்தின் கரையில் அமைந்துள்ள **குக்குடேசுவரர்** ஆலயத்தை அன்று ஸ்வாமிகள் தரிசனம் செய்து கொண்டார்கள். ஆந்திர நாட்டின் பெயர் பெற்ற தர்க்க சாஸ்திர வித்வானுன **வடலீ லக்ஷ்மீ நாராயண சாஸ்திரிகள்** ஸ்வாமிகளுக்கு ஜனவரி மாதம் 29-ஆம் தேதி பிக்ஷை நடத்தி வைத்தார். **ஸ்ரீபாத லக்ஷ்மீநரஸிம்ம சாஸ்திரிகள்** என்னும் மகா பண்டிதரது தலைமையில் அன்று ஓர் வித்வத் சபை கூடிற்று. அங்குக் கூடியிருந்த வித்வான்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் சால்வை முதலான மரியாதைகளை அளித்தார்கள்.

**காக்கிநாடா விஜயமும், பீமேசுவர தரிசனமும்**

1937 ஜனவரி 29-ஆம் தேதி இரவு ஸ்வாமிகள் **காக்கிநாடா விற்கு** விஜயம் செய்தபொழுது, அவ்வூர் மக்கள் ஏராளமாகக் கூடி ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பு அளித்தனர். அவ்வூரில் ஸ்வாமிகள் பிப்ரவரி மாதம் 28-ஆம் தேதி வரை ஒரு மாத காலம் தங்கியிருந்தார்கள். பிப்ரவரி மாதம் 10-ஆம் தேதி அமாவாசை அன்று துல்ய கோதாவரி நதி அவ்வூருக்கருகில் கடலில் சேரும் இடத்தில் ஸ்வாமிகள் ஸங்கம ஸ்நானம் செய்தார்கள். அன்றைய அமாவாசைக்கு அந்நாட்டில் **சோளங்கி** அமாவாசை என்று பெயர். நம் நாட்டில் மஹாளய அமாவாசையைப் போல் அது ஓர் புனித நாளாகக் கருதப்படுவதால், அன்று ஒரு லக்ஷம் ஜனங்களுக்கு மேல் அந்த ஸங்கமத்தில் நீராடிய காட்சி கண் கொள்ளாக் காட்சியாக அமைந்திருந்தது. கோதாவரி நதி ஏழு ரிஷிகளின் பெயர்களால் ஏழு கிளைகளாகப் பிரிந்து ஸப்த கோதாவரி என்னும் பெயர்பெற்று அந்நாட்டில் ஓடுகின்றது. அவைகளில் துல்ய கோதாவரி என்னும் கிளைநதி மிகவும் புனிதத் தன்மை வாய்ந்ததெனக் கூறப்படுகிறது.

ஸ்வாமிகள் காக்கிநாடாவில் தங்கியிருந்தபொழுது, அந்த அமாவாசை அன்றே **துவாதச ஜோதிர்லிங்க க்ஷேத்திரமான பீமவரத்திற்கு** விஜயம் செய்தார்கள். பாரத நாட்டில் அமைந்துள்ள பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களைப் பற்றி முன் பகுதிகளில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விடம் ஸ்வாமிகள் பீமேசுவர ஜோதிர்லிங்கத்தையும், மாணிக்க அம்பிகையையும் தரிசித்துக் கொண்டார்கள். அன்று லிங்கத்திற்கு விசேஷ அபிஷேகமும், அர்ச்சனைகளும் நடைபெற்றன. ஸ்வாமிக்கும், அம்பிகைக்கும் அலங்காரத்திற்கென ஸ்வாமிகள் பட்டு, பீதாம்பரங்களை அளித்தார்கள். பிப்ரவரி மாதம் 23-ஆம் தேதி ஸ்வாமிகள் **ஜனார்த்தன கிரிக்கு** விஜயம் செய்து, அவ்விடம் நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள்.

**கோடிபல்லிக்கு விஜயம்**

1937 பிப்ரவரி 28-ஆம் தேதி ஸ்வாமிகள் காக்கிநாடாவிலிருந்து புறப்பட்டு மார்ச் 1-ஆம் தேதி **கோடிபல்லிக்கு** விஜயம் செய்தார்கள். கோடிபல்லியிலுள்ள **கோடீசுவர லிங்கம் இந்திரனாலும், சோமேசுவர லிங்கம் சந்திரனாலும்** பிரதிஷ்டை செய்யப்பட்டதாக அந்நாட்டு மக்கள் கூறுகின்றனர். **ஸ்ரீ சந்திரசேகர இந்திர ஸரஸ்வதி** என்னும் திருநாமம் தாங்கிய நம் ஸ்வாமிகள்

இவ்விரண்டு லிங்கங்களையும் ஒருங்கே தரிசித்தது ஓர் விசேஷமான நிகழ்ச்சியாகும். **கோடிபல்லி** என்னும் தலம் சப்த கோதாவரி நதிகளுக்குத் தாய்போல் விளங்கும் மாத்ரு கோதாவரி நதியின் கரையில் அமைந்துள்ள புனிதத் தலமாகும். ஸ்வாமிகள் அந்தப் புனித நதியில் நீராடி ஆலயங்களைத் தரிசனம் செய்துகொண்டார்கள். தேவஸ்தான அதிகாரிகள் அங்கு ஸ்வாமிகளுக்கு உரிய மரியாதைகளைச் செய்தனர்.

**கோதாவரி தீர யாத்திரை**

ஸ்வாமிகள் **கோடிபல்லி, முக்தேசுவரம்** முதலான தலங்களைத் தரிசித்துவிட்டுக் கோதாவரி நதியின் கீழ் டெல்டா பிரதேசமான **கோனசீமா** எனக் கூறப்படும் செழிப்புற்ற பிராந்தியத்தில் தமது யாத்திரையைத் தொடங்கினார்கள். அவ்விடங்களில் காவிரி நதியின் தீரத்தைப் போலவும் நாட்டின் தென் கோடியிலுள்ள தாம்பிரபரணியின் தீரத்தைப் போலவும் ஏராளமான அக்ரஹாரங்கள் அமைந்துள்ளன. ஸ்வாமிகள் விஜயம் செய்த ஒவ்வொரு அக்ரஹாரத்திலும் ஆயிரக்கணக்கான மக்கள் ஸ்வாமிகளை வரவேற்று உபசரித்து ஸ்வாமிகளது நித்ய பூஜையைத் தரிசித்து அவர்களின் ஆசியைப் பெற்றனர்கள். ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகள் மாலை நேரத்தில் ஆந்திர பாஷையில் தர்மத்தைப் பற்றி உபதேச மொழிகளை அருளி வந்தார்கள். டெல்டா பிரதேசத்தில் ஸ்வாமிகள் **கன்னவரம், ரஜூல், வேமவரம்** முதலான இடங்களுக்கு விஜயம் செய்தார்கள். அவ்வருட சங்கர ஜயந்தி உத்ஸவம் **கௌசிக கோதாவரி நதிக்கரையில்** அமைந்துள்ள **முக்கமாலா** என்னும் ஊரில் 1937 மே மாதம் 14-ஆம் தேதி முதல் 20-ஆம் தேதி வரை ஏழு நாட்கள் கொண்டாடப்பட்டது. அப்பொழுது ஒரு பெரிய பண்டித சபையும் கூட்டப்பட்டது. ஆந்திர நாட்டுப் பிரபல பண்டிதர்கள் அந்தச் சபையில் பிரசன்னமாயிருந்தனர். விஜயநகர சம்ஸ்தான பண்டிதர் **வேதாந்தம் சேஷய்ய சாஸ்திரிகளும்** அந்தச் சபைக்கு வந்திருந்தார். ஒவ்வொரு நாளும் அத்வைத சித்தாந்தத்தைப் பற்றியும், ஸ்ரீ ஆதி சங்கரரது சரித்திரத்தைப் பற்றியும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. அவ்வருட வியாஸ பூஜை **நரஸபுருக்கு** அடுத்த **பாலக்கோல்** என்னும் இடத்தில் 1937 ஜூலை மாதம் 23-ஆம் தேதி நடைபெற்றது. சாதுர் மாத சங்கல்பத்தை நிறைவேற்றுவதின் பொருட்டு ஸ்வாமிகள் அங்குச் செப்டம்பர் மாதம் 20-ஆம் தேதி வரை தங்கியிருந்தார்கள். அப்

பொழுது ஸ்ரீ வீரபத்திர ஸோமயாஜி என்னும் பெரியவர் ஸ்வாமி களது பணியில் ஈடுபட்டிருந்தார். அவ்வருடத்திய நவராத்திரி பூஜை ஹுக்கும்பேட்டை என்னும் இடத்தில் நடை பெற்றது. பின்னர் ஸ்வாமிகள் போலவரம், கோவூரு, ஏலூரு, மார்க்கமாக 1937 அக்டோபர் முதல் தேதி ராஜமகேந்திரபுரத்திற்கு விஜய மானார்கள். சுமார் நான்கு மாதங்கள் ராஜமகேந்திரபுரத்தில் தங்கி, அவ்வப்போது பக்கத்து ஊர்களுக்கும் அவர்கள் விஜயம் செய்துவந்தார்கள். ராஜமகேந்திரவாசிகள் தங்களது இணையற்ற பக்தியை ஸ்வாமிகளிடம் காட்டி ஸ்வாமிகள் அங்குத் தங்கியிருந்த பொழுது ஸ்வாமிகளது முகாமிற்கு வேண்டிய எல்லா வசதிகளை யும் செய்துகொடுத்து ஸ்வாமிகளது ஆசியைப் பெற்றார்கள். ராஜமகேந்திரபுரத்திற்கு வடக்கில் 40 கிலோ மீட்டர் தூரத்தில் அகண்ட கோதாவரி நதியானது சுமார் 650 மீட்டர் உயரமுள்ள இரண்டு மலைகளின் நடுவில் பாய்ந்து வரும் காட்சியைக் காண் பதற்காக ஸ்வாமிகள் பிரத்யேகமான ஓர் நீராவிப்படகில் சென்று வந்தார்கள். அந்த இடத்திற்கு பாப்பி குன்றுகள் எனப் பெயர். சுமார் 100 மீட்டர் அகலத்தில் கோதாவரி நதியானது இங்கு ஓடுகின்றது. ஸ்வாமிகள் அந்த இயற்கைக் காட்சியைக் கண்டு மகிழ்ச்சியுற்று அப்புனிதமான கோதாவரியில் நீராடினார்கள். மேலும் அங்குக் கோயில் கொண்டுள்ள மஹாநந்தீசுவரர் ஆலயத் திலும் ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 1938 ஜனவரி மாதம் 31-ஆம் தேதி நிகழ்ந்த மகோதயபுண்ய காலத்தில் சமுத்திர ஸ்நானம் செய்யவேண்டுமென ஸ்வாமிகள் விரும்பினார்கள். அதற் காக ராஜமகேந்திரபுரத்திலிருந்து 60 கிலோ மீட்டர் தூரத்தி லுள்ள காக்கிநாடாவிற்கு விஜயம் செய்து அங்கு விதிப்படி சங்கல்பம் செய்துகொண்டு சமுத்திர ஸ்நானம் செய்தார்கள். புனித காலத்தை முன்னிட்டு அன்று காக்கிநாடாவில் ஒரு லக்ஷம் ஜனங்களுக்கு மேல் கூடி கடலில் நீராடினர். கோதாவரி தீரவாசி கள் ஒவ்வோர் இடத்திலும் ஸ்வாமிகளின் விஜயத்தை மிகுந்த மகிழ்ச்சியுடன் கொண்டாடி, ஆங்காங்கு தக்கவாறு ஸ்வாமி களுக்கு வரவேற்பு அளித்து ஸ்வாமிகளது ஆசியைப் பெற்றார்கள்.

### கிருஷ்ணா, குண்டூர், நெல்லூர் ஜில்லாக்களில் யாத்திரை

கோதாவரி தீர யாத்திரையை முடித்துக்கொண்டு ஸ்வாமிகள் 1938 மார்ச் மாதம், கிருஷ்ணா நதி தீரத்திற்கு விஜயம் செய்தார்

கள். அவ்வருட சங்கர ஜயந்தி உத்ஸவம், 1938 ஏப்ரல் மாதம் 30-ஆம் தேதி முதல் மே மாதம் 4-ஆம் தேதி வரை, ஐந்து நாட்கள் **பீமவரத்தில்** மிகவும் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. ஸ்வாமிகள் **விஜயவாடாவில்** கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்து அவ்விடமுள்ள **கநகதுர்க்கா** ஆலயத்தில் அம்பிகையைத் தர்சித்துக் கொண்டார்கள். அந்த நகர மக்கள் ஸ்வாமிகளுக்கு விசேஷ வரவேற்பு அளித்து, சுமார் ஒரு வாரம் அவ்விடம் தங்க எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தனர். விஜயவாடாவி லிருந்து 10 கிலோமீட்டர் தூரத்திலுள்ள **மங்களகிரி** என்னும் க்ஷேத்திரத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். அந்த க்ஷேத்திரத்திலும் ஸிம்மாசலத்தைப் போலவே அழகிய ஓர் குன்றின் மீது நரஸிம்மஸ்வாமி ஆலயம் அமைந்துள்ளது. இந்தச் சந்நிதிக்குப் **பானக நரசிம்மர்** எனப் பெயர் விளங்குகிறது. இத்தலத்தில் சுவாமியின் நிவேதனத்திற்காக ஒவ்வொரு நாளும் பானகம் கரைத்து வைக்கப்படுவதாகவும், அவ்விதம் வைக்கும் பானகத்தில் ஒரு பகுதி குறைந்துவிடுவதாகவும் கூறப்படுகிறது. குறைந்து போகும் பானகமானது நரஸிம்மசுவாமியால் ஏற்றுக் கொள்ளப் படுகிறதென அங்கு மக்கள் கூறுகின்றனர்.

**கோவூர்** என்னும் ஊரில் அமைந்துள்ள சம்ஸ்கிருத கலா சாலைக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்து, அங்கு நடைபெறும் போதனா முறைகளைப் பற்றியெல்லாம் விசாரித்து, மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் சம்ஸ்கிருத பாஷையில் சில உபதேச மொழிகளை அருளினார்கள். கலாசாலையின் தலைவர் **ஸ்ரீ புருஷோத்தம பந்துலு** எம். ஏ., எல். டி., ஸ்வாமிகளுக்கு வடமொழியில் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்தளித்தார். பின்னர் **தாடேபள்ளிக்கூடம், குடிவாடா, கபிலேசுவரம், அயிலூரு, தெனாலி** முதலிய இடங்களுக்கு அவர்கள் விஜயம் செய்து சாதுர்மாஸ சங்கல்பத்திற்கெனக் **குண்டூரை** அடைந்தார்கள். குண்டூரில் 1938 ஜூலை மாதம் 12-ஆம் தேதி ஸ்வாமிகள் வியாஸ பூஜையை மிகச் சிறப்பாக நடத்தி னார்கள். அவ்வூர் மக்கள் ஸ்வாமிகள் தங்கி இருந்த ஜாகையில் அந்தப் பூஜைக்கெனத் தனி மண்டபம் ஒன்றை அமைத்துக் கொடுத்திருந்தனர். ஆயிரக் கணக்கான மக்கள் அன்று அங்குப் பூஜையைத் தரிசித்துக்கொண்டனர். அன்று முதல் இரண்டு மாதங்கள் ஸ்வாமிகள் அவ்விடம் தங்கியிருந்தார்கள். அப் பொழுது ஒவ்வொரு நாளும் நடைபெற்ற வித்வத் சபையில் அந் நாட்டுப் பண்டிதர்கள் பலர் கலந்து கொண்டு தங்கள் பாண்டி யத்தை ஸ்வாமிகளின் முன் புலப்படுத்தி அவர்களிடம் சம்மானம்

பெற்ருர்கள். அகில ஆந்திர தேச தார்மிக பண்டித பரிஷத்தின் பிரதான காரியதரிசியும், கோதாவரி தீரம் முனிகண்ட அக்ரஹாரவாசியும், பிரபல வியாகரண பண்டிதருமான **புல்யம் உமாமகேசுவர சாஸ்திரிகள்** அப்பொழுது ஸ்வாமிகளின் பேரில் வடமொழியில் 170 சுலோகங்களை இயற்றி, அவைகளை ஸ்வாமிகளின் முன்னிலையில் அரங்கேற்றினுர். அவருடைய அரிய அக்கவிதைகள் புத்தக வடிவமாக வெளிவந்துள்ளது. சாதுர் மாதம் முடிவு பெற்றவுடன் ஸ்வாமிகள் குண்டூரிலிருந்து புறப்பட்டுக் கர்னூல் ஜில்லாவிலுள்ள **மார்க்கபுருக்கு** விஜயமானுர்கள். அவ்வூரில் அவ்வருடத்து நவராத்திரி பூஜையை ஸ்வாமிகள் மிகுந்த விமரிசையுடன் நடத்தினுர்கள். அங்கு மராமத்து இலாகாவில் ஓவர்ஸியர் வேலை பார்த்து வந்த **ஓம் ராமசந்திர ஐயர்** என்னும் பக்தர் அந்தப் பூஜைக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்துகொடுத்தார்.

1938 நவம்பர், டிசம்பர், 1939 ஜனவரி இம்மாதங்களில் ஸ்வாமிகள் **நெல்லூரில்** விஜயம் செய்திருந்தார்கள். நெல்லூர் பொதுமக்கள் மிகுந்த பக்தியுடன் ஸ்வாமிகளை 3 மாதங்களுக்கு மேல் ஆராதித்து ஸ்வாமிகளது அவ்வூர் விஜயத்தை மிகவும் சிறப்புடன் கொண்டாடினுர்கள். அப்பொழுது **வக்கீல் கோடா நரஸிம்ம பந்துலு, இங்குவ ஸ்ரீ கிருஷ்ணய்யா** முதலான பிரமுகர்கள் விசேஷமாக மடத்தின் பணியில் ஈடுபட்டார்கள். நெல்லூரில் விஜயம் செய்திருந்தபொழுது ஸ்வாமிகள் **தும்மகுண்ட** முதலான பக்கத்துக் கிராமங்களுக்கும் விஜயம் செய்துவந்தார்கள். 1939 பிப்ரவரி மாதம் 6-ஆம் தேதி ஸ்வாமிகள் நெல்லூரிலிருந்து புறப்பட்டு **வேங்கடகிரியில்** அவ்வூர் மகாராஜாவின் வேண்டுகோளுக்கிணங்கி, மார்ச் 12-ஆம் தேதி முதல் 25-ஆம் தேதி வரை தங்கினுர்கள். பின்னர் **கோடூர், நாயுடு பேட்டை, சூலூர்** மார்க்கமாக விஜய யாத்திரை செய்து கொண்டு **அல்லாடி** என்னும் கிராமத்தை அடைந்தார்கள். அந்த ஊர், சென்னை வழக்கறிஞர் **ஸர். அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயரின்** சொந்த ஊராகும். ஐயர் அவர்களும் அப்பொழுது அங்கு வந்திருந்து தமது இல்லத்தில் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவற்றைச் செய்து வைத்தார்.

### காளஹஸ்தி, திருப்பதி க்ஷேத்திரங்களுக்கு இரண்டாவது முறை விஜயம்

சென்ற 1932-ஆவது வருடம் சிவராத்திரியின் பொழுது ஸ்வாமிகள் காளஹஸ்திக்கு விஜயம் செய்திருந்ததைப் பற்றி

முன் பகுதிகளில் கூறப்பட்டுள்ளது. அதற்கு 7 வருடங்களுக்குப் பின்னர் 1939 ஏப்ரல் மாதம் 7-ஆம் தேதி முதல் 17-ஆம் தேதி வரை 11 நாட்கள் ஸ்வாமிகள் காளஹஸ்தியில் தங்கியிருந்தார்கள். அப்பொழுது ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளும் **சுவர்ணமுகி நதியில்** ஸ்நானம் செய்து **ஸ்ரீ காளஹஸ்தி நாதரைத்** தரிசனம் செய்துகொண்டார்கள். பின்னர் ஏப்ரல் 19, 20-ஆம் தேதிகளில், **திருப்பதிக்கு** அவர்கள் விஜயம் செய்து **திருமலையில் ஸ்ரீ வேங்கடேச்வர பெருமாளைச்** சேவித்துக் கொண்டார்கள். தேவஸ்தான அதிகாரிகள் ஸ்வாமிகளுக்கு வழக்கம்போல் செய்ய வேண்டிய மரியாதைகளைச் செய்து, விசேஷமான **பூலங்கி சேவையையும்** செய்துவைத்தார்கள். அந்த வருடத்திய சங்கர ஜயந்தி உத்ஸவம் **நகரியை** அடுத்த **புக்கை** க்ஷேத்திரத்தில் ஏப்ரல் மாதம் 24-ஆம் தேதி நடைபெற்றது. அந்த க்ஷேத்திரத்தில் சென்ற 1932 செப்டம்பர் மாதம் 11-தேதி ஸ்வாமிகள் ஆதி சங்கரரது விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்திருப்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

**திருத்தணி, காஞ்சி, சிதம்பரம் க்ஷேத்திரங்களைத் தர்சனம் செய்துகொண்டது**

ஸ்வாமிகள் புக்கையிலிருந்து புறப்பட்டு 1939 ஏப்ரல் மாதம் 30-ஆம் தேதி **திருத்தணியில்** குன்றின்மீது அமைந்துள்ள ஸ்ரீ முருகப் பெருமானைத் தரிசித்துக்கொண்டு, மே மாதம் முதல் தேதி **திருமால் புரில்** தங்கி 2-ஆம் தேதி **காஞ்சீபுரத்தை** அடைந்தார்கள். காஞ்சீபுரத்தில் ஏகாம்பர நாதரையும், காமாக்ஷி அம்பிகையையும் தரிசித்துக்கொண்டு, **ஆரணி, செஞ்சி, விழுப்புரம், பண்டுருட்டி, திருப்பாதிரிப்புலியூர், பறங்கிப்பேட்டை** மார்க்கமாக மே மாதம் 17-ஆம் தேதி **சிதம்பர க்ஷேத்திரத்திற்கு** விஜயமானார்கள். சிதம்பரம் பொதுமக்களும், நடராஜர் ஆலயத்தின் பொது தீக்ஷிதர்களும், ஸ்வாமிகளைத் தகுந்த மரியாதைகளுடன் வரவேற்றார்கள்; ஆலயத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் ஸ்வாமிகளின் பூஜைக்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். அன்று ஸ்வாமிகள் சபாநாயகர் சந்நிதியிலும், கோவிந்தராஜர் சந்நிதியிலும் சுவாமி தரிசனம் செய்துகொண்டார்கள். இரு சந்நிதிகளிலும் ஸ்வாமிகளுக்கு உகந்த மரியாதைகள் செய்யப்பட்டன. அன்று ஸ்வாமிகளது நித்ய பூஜை ஆயிரக்கால் மண்டபத்தில் நடைபெற்றது. ஆயிரக்கணக்கான மக்கள் அன்று ஸ்வாமிகளது பூஜையைத் தரிசித்துக்கொண்டனர்.

**இரண்டாவது ராமேச்வர யாத்திரையும், ராமநாத ஸ்வாமிக்கு செய்வித்த கங்காபிஷேகமும்**

ஸ்வாமிகள் 1922-ஆவது வருடம் செப்டம்பர் மாதத்தில் ராமசேதுவில் மணல் எடுத்துக் கங்கா யாத்திரைக்குச் சங்கல்பம் செய்துகொண்டது பற்றி முன்பகுதிகளில் கூறப்பட்டுள்ளது. கங்கா யாத்திரையை முறையாக மேற்கொள்ள வேண்டிய நியதிப்படி அப்பொழுது எடுத்த மணலை 1934-ஆவது வருடம் ஜுலை மாதம் 25-ஆம் தேதி அலாகாபாத்தில் த்ரிவேணி சங்கமத்தில் சேர்த்தார்கள் என்பது முன்னரே கூறப்பட்டுள்ளது. ஸ்ரீராமநாத சுவாமிக்கு அபிஷேகம் செய்யவேண்டி, அவ்விடம் கங்கை எடுத்து அதைத் தமது பூஜையிலேயே வைத்துக்கொண்டிருந்தார்கள். ஸ்வாமிகள் சிதம்பரத்திலிருந்து புறப்பட்டு **சேத்தியா தோப்பு, அணக்கரை, ஒழுகுசேரி, கோனேரிராஜபுரம், முடிகொண்டான், திருவாரூர், மூலங்குடி, தண்ணீர்குன்னம், சாத்தனூர், மன்னுர்குடி, பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, ஆவுடையார் கோவில், உப்பூர், தேவி பட்டணம்** இந்த ஊர்களின் வழியாக 1939 ஜுன் 10-ஆம் தேதி, ராமேச்வரத்தை அடைந்தார்கள். தேவஸ்தான அதிகாரிகளும், பண்டாக்களும் மற்றப் பொது மக்களும் அப்பொழுது ஸ்வாமிகளுக்கு விசேஷமான வரவேற்பை அளித்தனர். காலையில் ஸர்வ தீர்த்தத்தில் ஸ்வாமிகள் சமுத்திர ஸ்நானம் செய்தபொழுது மக்கள் ஏராளமாகக் கூடி ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டனர். பின்னர் ஸ்வாமிகள் ராமநாத சுவாமி தேவாலயத்திற்கு விஜயம் செய்தார்கள். சுவாமிக்கு முறைப்படி ஏகாதச ருத்திரத்துடன் ஸ்வாமிகள் கொணர்ந்த கங்கை அபிஷேகம் செய்விக்கப்பட்டது. அன்று ஸ்வாமிகளது கங்கா யாத்திரையும் பூர்த்தி அடைந்தது. மறுநாள் ஜுன் மாதம் 11-ஆம் தேதி முதல் ஸ்வாமிகள் மௌனத்தை மேற்கொண்டு விட்டார்கள். அந்த மௌனம் 6 மாதங்களுக்கு மேல் நீடித்திருந்தது. மௌனத்தை மேற்கொண்ட அன்றே ஸ்வாமிகள் **தனுஷ்கோடியில்** நீராடிப் பின்னர் **தர்ப்பசயனம், நவபாஷாணம்** முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு அவ்வருட வியாஸ பூஜையைக் கும்பகோணத்தில் நடத்த வேண்டிய தீர்மானத்துடன் வழியில் அதிகமாகத் தங்காமல் யாத்திரையை விரைவாக மேற்கொண்டார்கள்.

**ராமநாதபுரம், சிவகங்கை முதலான இடங்களுக்கு விஜயம்**

1939 ஜுன் மாதம் 13-ஆம் தேதி ஸ்வாமிகள் **ராமநாதபுரத்திற்கு** விஜயம் செய்திருந்தபொழுது, **சேதுபதி ராஜா** ஸ்வாமி

களைத் தக்கவாறு வரவேற்று தமது ராஜாங்க விருதுகளுடன் ஊர்வலமாகத் தமது அரண்மனைக்கு அழைத்துச் சென்று, அவ்விடம் பாதபூஜை முதலிய மரியாதைகளை வழக்கம்போல் செய்துவைத்தார். ஜூன் மாதம் 14-ஆம் தேதி ஸ்வாமிகள் மானு மதுரையில் முகாம் செய்தார்கள். 15-ஆம் தேதி **சிவகங்கைக்கு** விஜயம் செய்தபொழுது **சிவகங்கை ராஜாவும்** ஸ்வாமிகளை வரவேற்று ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவற்றைச் செய்வித்தார். ஊர் மக்களும் ஸ்வாமிகளுக்கு மரியாதை செலுத்தி அவர்களது நித்ய பூஜையைத் தரிசித்துக்கொண்டனர். 16-ஆம் தேதி ஸ்வாமிகள் **திருப்பத்தூரில்** தங்கினார்கள். 17-ஆம் தேதி **இளையாற்றங்குடியில்** தமது பரமேஷ்டி குருவான ஸ்ரீமகா தேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தைத் தரிசித்துக்கொண்டார்கள். 18-ஆம் தேதி **கடியாபட்டியில்** முகாம் செய்து, அன்றிரவு திருமயத்தில் **ஸ்ரீ சத்திய மூர்த்தி பெருமாளையும், ஸ்ரீ சத்தியகிரீசுவரரையும்** தரிசித்துக்கொண்டு மறுநாள் காலை 5 மணிக்குப் **புதுக்கோட்டைக்கு** விஜயமானார்கள். கடியாபட்டியில் உ. மு. உ. குடும்பத்தார் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை நடத்திவைத்தார்கள். அவ்வூரை அடுத்த **ராயவரம்** நகரத்தார்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அவ்வூருக்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தபொழுது ஊர்மக்கள் பெரியதொரு ஊர்வலத்தை ஏற்பாடு செய்தார்கள்.

**புதுக்கோட்டையில் குதூகல வரவேற்பு**

1939 ஜூன் மாதம் 19-ஆம் தேதி காலை புதுக்கோட்டை சம்ஸ்தானம் உதவி நிர்வாகி (Assistant Administrator) **ராவ்பகாதூர் கிருஷ்ணமாசாரியர்** மற்ற சம்ஸ்தான அதிகாரிகளுடனும், தானாதிகாரி முதலான பண்டிதர்களுடனும் மற்றும் அரசாங்க மரியாதைகளுடனும் நகர எல்லையில் ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து வரவேற்றார். ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி கொண்ட புதுக்கோட்டை மக்கள் 16 வருடங்களுக்குப் பின்னர் அவர்களைத் தரிசிப்பதில் மிகுந்த ஆவல் கொண்டவர்களாகி அதிகாலையிலேயே திரள் திரளாக வீதிகளில் கூடிவிட்டனர். அன்று காலை அரசர் கல்லூரியிலிருந்து ஓர் பெரிய ஊர்வலம் புறப்பட்டது. அரசாங்க குதிரைப்படை, போலீஸ்படை, மிலிடரி பாண்டு, தேவஸ்தான விருதுகள், இவைகளுடன் ஸ்வாமிகளின் ஊர்வலம் கீழ ராஜ வீதியை அடைந்ததும் ஜனக் கூட்டம் தாங்க முடியாதவாறு இருந்தது. புதுக்கோட்டை நகர மக்கள் பலர்

ஸ்வாமிகளுக்கு அறிமுகமானவர்களாதலால் ஸ்வாமிகள் மௌன மாயிருந்த நிலையிலும் அவர்கள் ஒவ்வொருவரையும் கருணை மிக்க தமது பார்வையினாலும், புன்சிரிப்பினாலும் அனுக்ரகித்தார்கள். ஸ்வாமிகளுக்கு **ஸ்ரீ சாந்தநாதர் கோவிலுக்குச்** சமீபமுள்ள சம்ஸ்தான தர்ம சத்திரத்தில் பூஜைக்கான ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஜூன் மாதம் 19, 20 ஆகிய இரண்டு நாட்களுக்கும் ஸ்வாமிகளது விஜயத்தை முன்னிட்டு சம்ஸ்தானம் முழுவதும் பொது விடுமுறை நாட்களாக சம்ஸ்தான தர்பார் பிரகடனம் செய்தார்கள். அவ்விரண்டு நாட்களிலும் ஸ்வாமிகள் செய்து வந்த நித்ய பூஜையை மக்கள் தரிசித்து ஸ்வாமிகள் அருளிய அபிஷேக தீர்த்தத்தையும், விபூதி, அக்ஷதை பிரசாதங்களையும் பெற்று, தங்களைப்புனிதமாக்கிக்கொண்டனர். சம்ஸ்தான உயர்தர அதிகாரிகள் பலருக்கும், பொது மக்களுக்கும் ஸ்வாமிகள் பேட்டி அளித்து தனித்தனியே ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்தார்கள். முதல் நாள் சம்ஸ்தானத்தின் சார்பாக ஸஹஸ்ர பாதபூஜை, பிக்ஷை முதலானவைகள் நடைபெற்றன. பல அன்பர்கள் ஸ்வாமிகளைத் தங்கள் வீடுகளுக்கு அழைத்துச் சென்று பாதபூஜை செய்தார்கள். புதுக்கோட்டையில் இரண்டு நாட்களே தங்கத் திட்டம் இட்டிருந்த போதிலும் அவ்வூர்ப் பேட்டையர்கள் எனக் கூறப்படும் வியாபாரச் சங்கத்தாரின் வேண்டுகோளுக்கிணங்கி மற்றொரு நாளும் அவ்விடம் தங்க ஸ்வாமிகள் இசைந்தார்கள். அன்று பேட்டையர்கள் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை, பாதபூஜை முதலியவைகளைச் செய்வித்து, அன்றிரவு ஓர் பெரிய ஊர்வலத்தையும் ஏற்பாடு செய்திருந்தனர். புஷ்பங்களால் வெகுநேர்த்தியாக அலங்கரிக்கப் பட்ட தந்தச் சிவிகையில் ஸ்வாமிகள் அமர்ந்து அன்றிரவு புதுக்கோட்டை நகரின் முக்கிய வீதிகளின் வழியே ஊர்வலம் வந்த காட்சி இன்னும் மக்களால் மறக்க முடியாத காட்சியாகும். ஸ்வாமிகள் 22-ஆம் தேதி காலை புதுக்கோட்டையிலிருந்து **கீரனூருக்கு** விஜயமானார்கள். கீரனூர் சிவாலயத்தில்

**குறிப்பு :**—ஸ்வாமிகளது புதுக்கோட்டை விஜயத்தின் நினைவாக அவ்வூர் பொதுமக்கள் அம்பாள்புரம் என்னும் பகுதியில் **சங்கரமடம்** ஒன்றை அமைத்து அதில் ஸ்ரீ ஆதிசங்கரரது பிம்பத்தையும் ஸ்ரீ ராஜ ராஜேசுவரி அம்பிகையின் பிம்பத்தையும் பிரதிஷ்டை செய்தனர். அவ்வாலயக் கும்பாபிஷேகம் சென்ற 1951—ஆவது வருடம் ஜூன் மாதம் 24—ஆம் தேதி நடைபெற்றது. இவ்வாலயம் எழுப்பப்பட்டிருக்கும் நிலத்தை வக்கீல் ஆர். ராம கிருஷ்ணய்யர் என்னும் பக்தர் இனமாக வழங்கினார்.

ஸ்வாமிகளின் நித்ய பூஜை அன்று நடைபெற்றது. ஏராளமான மக்கள் பூஜையைத் தரிசித்துக்கொண்டார்கள்.

**இருபத்தொரு வருட சங்கல்ப யாத்திரையின் நிறைவு: கும்பகோணத்தில் வியாஸ பூஜை விழா: ஸ்வாமிகளைத் தரிசிக்க மக்கள் கொண்ட ஆர்வம்**

கீரனூரிலிருந்து ஸ்வாமிகள் 1939 ஜூன் 23-ஆம் தேதி, திருச்சிராப்பள்ளிக்கு விஜயம் செய்து திருவானைக்காவில் தமது மடத்தில் தங்கி, திருச்சி மக்கள் செய்த மரியாதைகளை ஏற்றுக் கொண்டார்கள். ஸ்வாமிகள் அப்பொழுது ஜம்புகேச்வரத்தில் ஸ்ரீ அகிலாண்டேச்வரி அம்மனையும், திருச்சியில் மாத்ருபூதேச்வரரையும், ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதரையும் தரிசித்துக் கொண்டார்கள். ஸ்வாமிகள் சென்ற இடமெல்லாம் அவர்களுக்கு மக்கள் பூர்ணகும்பம் அளித்து அவர்களை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றார்கள். மூன்று நாட்கள் திருச்சியில் தங்கிப் பின்னர் பூதலூர், வல்லம், தஞ்சாவூர், ஈச்சங்குடி, ஸ்வாமிமலை மார்க்கமாக ஜூன் மாதம் 29-ஆம் தேதி கும்பகோணத்தை அடைந்தார்கள். ஸ்வாமிகளின் இருபத்தொரு வருடத்திய சங்கல்ப யாத்திரையும் மிகுந்த வெற்றியுடன் அன்று பூர்த்தி அடைந்தது.

வெகு நாட்களாக ஸ்வாமிகளின் தரிசனத்தை எதிர்பார்த்திருந்த கும்பகோண நகர மக்கள் அன்று ஸ்வாமிகளுக்கு மிகச் சிறந்த முறையில் வரவேற்பு அளித்தனர். அப்பொழுது ஸ்வாமிகள் மௌன விரதத்தை மேற்கொண்டிருந்ததால் அவர்களின் திருவாக்கிலிருந்து வரும் உபதேச மொழிகளைக் கேட்டுப் பயனையடையலாம் என்று நம்பியிருந்த பலருக்கு அது பெரிய ஏமாற்றத்தை அளித்தது. ஆயினும் ஸ்வாமிகள் ஊருக்குள் பிரவேசித்த பொழுது, ஒவ்வொரு வீதியிலும் ஒவ்வொரு வீட்டிலுள்ள சிறு குழந்தைகள் முதல் தள்ளாத பருவத்திலுள்ள வயோதிகர்கள் ஈறாக, எல்லோரையும் கண்டு தமது முக ஜாடையினாலும், கை ஜாடைகளினாலும் அவர்களின் நலன்களைப் பற்றியெல்லாம் கேட்டறிந்து அவர்களை ஆசீர்வதித்தார்கள். சாதாரணமாகக் கும்பகோணத்திலிருந்து ஸ்வாமிகள் யாத்திரை புறப்படும் பொழுதும், யாத்திரையிலிருந்து திரும்பி வரும்பொழுதும், முதலில் அவ்வூர்ச் சௌராஷ்டிர பிரமுகரும், தார்மிகருமான அரண்மனை கிருஷ்ணய்யர் ரெயிலடி சத்திரத்தில் தங்குவது வழக்கம். அதுபோல் ஸ்வாமிகள் கிருஷ்ணய்யரின் சந்ததியார்களின் வேண்டுகோளுக்கிணங்கி அந்தச் சத்திரத்தில்

தங்கி, அன்று அவர்கள் அளித்த பிக்ஷை, பாதபூஜைகளை ஏற்றுக் கொண்டார்கள். அன்றிரவு நகர மக்கள் மிகப் பெரியதொரு ஊர்வலத்தை ஏற்பாடு செய்ய, அவ்வூர்வலம் காவிரியின் கரையில் அமைந்துள்ள ஸ்ரீ மடத்தை இரவு 2 மணிக்கு வந்தடைந்தது.

மறுநாளாகிய 1939 ஜூன் 30-ஆம் தேதி அவ்வருட வியாஸ பூஜை நிகழவிருந்ததால் அந்தப் பூஜைக்கென மடத்தின் பெரிய முற்றத்தின் நடுவே ஓர் அலங்கார மண்டபம் அமைக்கப் பெற்றிருந்தது. அன்று காலை ஸ்வாமிகள் காவிரியில் நீராடி மடத்திற்குள் நுழைந்தபொழுது ஸ்வாமிகளைத் தரிசிக்க ஆவலுடன் காத்திருந்த கூட்டம் கட்டுக்கடங்காதவாறு இருந்தது. அப்பொழுது ஸ்வாமிகள் மடத்தின் மாடி மீது ஏறி, கைப்பிடி சுவரை ஒட்டி ஓர் உயர்ந்த பீடத்தில் நின்று, வீதியிற் கூடியிருந்த யாவருக்கும் தரிசனம் அளித்தார்கள். அன்றைய வியாஸ பூஜையைத் தரிசிக்க வட இந்தியாவிலிருந்தும், ஆந்திர நாட்டிலிருந்தும் மைசூர் சம்ஸ்தானத்திலிருந்தும் பக்தர்கள் பலர் தம் குடும்பங்களுடன் வந்திருந்தனர். நம் நாட்டிலுள்ள பிரபலமான வடமொழிப் பண்டிதர்கள் அன்று அங்கு விஜயம் செய்திருந்தனர். சிதம்பரம், திருவானைக்கா, ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் முதலான பல வெளி ஊர் தேவஸ்தானங்களிலிருந்தும், உள்ளூர் தேவஸ்தானங்களிலிருந்தும் அர்ச்சகர்களும், தேவஸ்தான அதிகாரிகளும் பிரசாதமும், மாலை முதலியவைகளையும் ஸ்வாமிகளிடம் சேர்ப்பித்தார்கள். பல ராஜாக்களிடமிருந்தும், ஜமீன்தார்களிடமிருந்தும் பிரதிநிதிகள் வந்து ஸ்வாமிகளுக்குப் பாதபூஜை செய்வித்தார்கள். அன்று பகல் 11 மணிக்கு ஆரம்பமான வியாஸ பூஜை மாலை 4 மணி வரையில் நடைபெற்றது. மறுநாள் மடத்தில் ஓர் வித்வத்சபை கூடிற்று. பண்டிதர்கள் அப்பொழுது அத்வைத சித்தாந்தத்தைப் பற்றி விளக்கம் கூறினார்கள். அவர்கள் யாவருக்கும் ஸ்வாமிகள் தகுந்த சம்மானங்களை வழங்கினார்கள். ஆந்திர நாட்டிலிருந்து, ஏலூரு **சாஸ்திர ரத்னாகர மண்டலிக வேங்கட சாஸ்திரி** என்னும் மகா வித்வானும் அந்தச் சபையில் கலந்துகொண்டார். அவ்வருட நவராத்திரி பூஜையும் கும்பகோணம் மடத்திலேயே நடைபெற்றது.

### தேப்பெருமாநல்லூர் சிவனது மறைவு

ஸ்வாமிகளுடன் பழகிய நல்லோர்கள் பலர் என்றாலும், அவர்களுள் ஒருவரான **தேப்பெருமாநல்லூர் சிவன்** அவர்கள் ஸ்வாமிகளிடம் வைத்திருந்த பக்தி ஒரு தனிச்சிறப்புள்ளதாதலால், அவரைபற்றிச் சில வரலாறுகள் இங்கு கூறப்படுகிறது.

அன்னதான சிவனது பெயரைக் கேட்ட அளவிலேயே சோழ நாட்டு மக்களது உள்ளத்தில் ஓர் உணர்ச்சி எழும் என்பதில் ஐயமில்லை. அன்னதானம் என்ருல் ஆயிரம் பேருக்கா? பதினுயிரம் பேருக்கா? லக்ஷம் பேருக்கா? அல்லது கோடி பேருக்கா எனக் கணக்கிட்டால் அவரது அன்னதானம் கணக்கி லடங்காது என்று சொல்லுமாறு அவரது வாழ்நாளில் அன்ன தானம் சுமார் 50 ஆண்டுகள் அவரால் நடத்தப்பட்டது. அந்தத் தனி மனிதர், அதிலும் ஓர் ஏழை அந்தணர், அறுசுவையுடன் இவ்வளவு பெரிய அன்னதானத்தைச் செய்வித்தாரென்ருல் அதனுடைய மர்மம்தான் என்னவென்பதை அறிய ஆவல் கொண்டார்கள்.

இவர் கும்பகோணத்திற்கடுத்த தேப்பெருமாநல்லூரில் சென்ற 1852-ஆவது ஆண்டில் ஓர் எளிய பிராம்மண குடும்பத்தில் உதித்தவர். இவர் பெயர் ராமசுவாமி. இவருக்கு இவருடைய தந்தை வேதத்தை மாத்திரம் சிறு வயதில் கற்றுக்கொடுத்தார். பள்ளிப் படிப்பைப் பெற இவருக்குச் சந்தர்ப்பமே வாய்க்கவில்லை. இவரது இளமைப் பருவத்தில் **கயத்தூர் சீனிவாச ஐயர்** என்னும் தஞ்சை ஜில்லா மிராசுதார் ஒருவர் திருவிழா நடைபெறும் இடங்களிலெல்லாம் அன்னதானம் செய்து வந்ததை அவர் நேரில் கண்டிருந்தார். சில காலம் அவருக்குப் பணிவிடைகளையும் செய்தார். பசித்தவருக்கு அன்னமளிப்பதே மனிதன் கடவுளுக் கும் மக்களுக்கும் செய்யக்கூடிய முதல் பணி என்னும் எண்ணம் இவர் உள்ளத்தில் அப்பொழுது உதித்தது. இவருடைய தாய், தந்தையரும் இவரது இளமைப் பருவத்திலேயே உயிர் துறந் தனர். இவருக்கு மணம் செய்விக்கப்பட்ட அம்மையாரும் சிறிது காலத்தில் இம்மண்ணுலகை நீத்தார். தமக்கிருந்த ஒரு வீட்டை யும், சிறிது நிலத்தையும் இவர் விற்று, அப்பொருளைக்கொண்டு அவ்வூரிலுள்ள ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ம பெருமாள் ஆலயத்தில் நடைபெற்ற திருவிழாவில் ஏழை மக்களுக்கு அன்னதானம் செய்தார். அக்காலத்தில் தமது வீட்டையும், ஆஸ்தியையும், அவர் இழந்து ஒரு வேலையுமில்லாமல் இருந்ததால், சில நண்பர் களின் வற்புறுத்தல்களின் பேரில், அவர் அவ்வூருக்குப் பக்கத் திலுள்ள **திருபுவனம்** என்னும் க்ஷேத்திரத்தின் சிவாலயத்தில் பரிசாரகர் வேலைக்கு அமர்ந்தார். இந்த வேலையில் அவருக்கு மன நிம்மதி ஏற்படவில்லை. தாம் செய்யும் குற்றம், குறைகளால் சிவாபராதம் ஏற்படுமோ என்று அவர் பயந்தார். அதனுல் அந்த வேலையையும் சில காலத்திற்குள் விட்டுத் துறந்து, முன் கூறிய

வாறு மக்களுக்கு அன்னம் அளிப்பதே தாம் கடவுளுக்குச் செய்யும் பணியென்ற தீர்மானத்துடன் தஞ்சை ஜில்லாவிலுள்ள பல க்ஷேத்திரங்களில் அன்னதானம் செய்யத் தொடங்கினர்.

1897-ஆவது வருடம் மாசி மாதத்தில் நிகழ்ந்த மகாமகத்தில் கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரியர் மடத்தில் அதுவரை செய்திராத ஓர் பெரிய அன்னதானத்தை அவர் செய்ய மேற்கொண்டார். நாள் ஒன்றுக்கு ஐயாயிரம், பதினுயிரம் ஜனங்களுக்கு அளிக்க எவ்வளவு உணவுப்பொருள் வேண்டுமென்பதை நாம் ஒருவாறு ஊகிக்கலாம். அவரோ கையில் ஒரு காசுகூட இல்லாத ஏழை; அப்பொழுது அவரது ஆர்வத்தையும், மன உறுதியையும் கண்ட தஞ்சை ஜில்லா மிராசுதார்களும், வியாபாரிகளும், அன்னதானத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தாமாகவே அவருக்கு உதவ முன்வந்தனர். பணம் பெருது ஊழியம் செய்யப் பல இளைஞர்கள் சிவனை அடைந்தனர். அப்பொழுது நடந்த மாபெரும் அன்னதானத்தில் சிவன் பெரியதொரு வெற்றியைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தபோதிலும், அதனுடன் நிற்காது மேலும் அவர் இப்பணியில் ஈடுபடத் தொடங்கினர். அன்று முதல் அநேகமாக ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு ஊரில் அன்னதானம் செய்வதென அவர் திட்டமிட்டுக்கொண்டார். அதன்படி சித்திரை மாதம் திருச்செங்காட்டங்குடி அமுதுபடித் திருவிழாவிலும், வைகாசி மாதம் திருவம்பர் மாகாளம் சோமயாகத்திலும், ஆனி மாதம் காரைக்கால் மாம்பழத் திருவிழாவிலும், ஆடி மாதம் காவிரிப்பட்டினத்தில் ஆடி அமாவாசைப் புண்ய காலத்திலும், ஐப்பசி மாதம் மாயவரம் துலாமாத உற்சவத்திலும் கார்த்திகை மாதம் திருநாகேசுவரம் சோமவார விழாவிலும், மார்கழி மாதம் நாச்சியார் கோவில் தெப்ப உற்சவத்திலும், தை மாதம் திருவிடைமருதூர் தைப்பூச விழாவிலும், மாசி மாதம் கும்பகோணம் மக உற்சவத்திலும், பங்குனி மாதம் எட்டுக்குடி பங்குனி உத்தரத்திலும் இவ்விதம் பல ஊர்களில் அவர் அன்னதானங்களைச் செய்யத் தொடங்கினர்.

இவ்வாறு அவர் பல ஊர்களில் செய்து வந்த அன்னதானத்துடன், அவ்வப்பொழுது பல க்ஷேத்திரங்களில் நடைபெறும் கும்பாபிஷேகங்களிலும், அவர் அன்னமளித்து வந்தார். சுமார் 47 ஆண்டுகளுக்கு முன்னர் திருவிடைமருதூரில் நடைபெற்ற மாபெரும் கும்பாபிஷேகத்திலும், பின்னர் திருச்சி மலைக் கோட்டையில் நடைபெற்ற கும்பாபிஷேகத்திலும், இவரது அன்னதானம் நடைபெற்றது. 1916–ஆவது ஆண்டில் கும்ப

கோணம் ஸ்ரீ சங்கர மடத்தில் நவராத்திரி காலத்தில் நடைபெற்ற லக்ஷார்ச்சனை, லக்ஷதீபம் லக்ஷப் பிராம்மண போஜனம், இந்த விழாவின் போது அன்னதானம் முழுவதையும் சிவன் அவர்களே ஏற்றுக்கொண்டு நடத்தினுர். 1923-ஆவது ஆண்டில் திருவானைக் காவில் ஸ்ரீ அகிலாண்டேச்வரி அம்மனுக்கு நடைபெற்ற **தாடங்கப் பிரதிஷ்டையிலும்** சிவன் அன்னதானம் செய்திருக்கிருர். இந்த விழாக்களிலெல்லாம் ஐந்து நாட்கள் முதல் பத்து நாட்கள் வரை வேளை ஒன்றுக்குப் பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு அன்னம் அளிக்கப்பட்டிருக்கிறது. இவைகளெல்லாம் சிவன் அவர்கள் செய்வித்த அன்னதானங்களில் மிகப் பெரியவையாகும்.

1909-ஆவது வருட மகாமக காலத்தில் சிவன் நமது ஸ்வாமி களை அவர்களின் 15-ஆவது பாலப்பிராயத்தில் முதன் முறையாகச் சந்தித்தார். அன்று முதல் சிவனுக்கு ஸ்வாமிகளிடம் ஒப்பற்ற அன்பும் பக்தியும் ஏற்பட்டன. தெய்வத்தன்மை வாய்ந்த மகா புருஷர் என ஸ்வாமிகளைப் பற்றி இவர் கூறி வந்தார். பிராயம் செல்லச் செல்ல ஸ்வாமிகளின் பெருமை உலகத்திற்கு நன்கு விளங்குமென இவர் அடிக்கடி கூறி வருவதுண்டு. சிவன் 1916-ஆவது ஆண்டு முதல் மடத்தில் நெருங்கிய தொடர்பு கொண்டு, அநேகமாக தமது வாசத்தை மடத்திலேயே வைத்துக் கொண்டு, அவ்விடத்திலிருந்தவாறே அவ்வப்போது அன்ன தானம் செய்வதற்கு வெளியூர்களுக்குப் போய்வருவார். மடத்தின் அதிகாரிகளும் அவரது சொல்லுக்கு மறு சொல் இல்லாமல் அவருடைய கட்டளைகளை அவ்வப்போது நிறைவேற்றி வந்தனர்.

சென்ற 1921-ஆவது ஆண்டில் ஸ்வாமிகள் தஞ்சை ஜில்லா வில் விஜய யாத்திரை செய்து கொண்டிருந்தபொழுது, ஒரு சமயம் ஸ்வாமிகள் பல நாட்கள் பிக்ஷை ஏற்றுக்கொள்ளாமல் உபவாசம் இருப்பதாகவும், அதனுல் ஸ்வாமிகளது சரீரம் மெலி வடைந்து வருவதாகவும், சிலர் சிவனிடம் தெரிவிக்க, சிவன் ஸ்வாமி களிடம் வைத்துள்ள அன்பின் பெருக்கினுல் மிகுந்த உணர்ச்சி யுடன் கண்ணீர் விட்டு ஸ்வாமிகளுக்கு ஒரு நீண்ட கடிதத்தை எழுதினுர். அக்கடிதத்தில் ஸ்வாமிகள் இவ்விதம் உபவாசம் இருக்கலாகாது என்றும், வெகு காலம் ஸ்வாமிகள் திடகாத்திரர் களாக இருந்து மக்களுக்கு அருள் புரியவேண்டுமென்று சிஷ்யர்கள் விரும்புவதாகவும், எளிய உணவாக சிறிதளவாவது ஒவ்வொரு நாளும் அன்ன பிக்ஷையை ஏற்றுக்கொள்ளவேண்டு மென்றும், உடல்நலம் குன்றியிருக்கும்பொழுது வெந்நீரிலேயே ஸ்நாநம் செய்யவேண்டுமென்றும், ஆற்றிலோ, குளங்களிலோ,

கடலிலோ நீராடப் போகும்பொழுது நீளமான கம்பைக்கொண்டு முன்பே ஒருவரை ஆழத்தைப் பார்க்கச்செய்து பிறகே தண்ணீரில் இறங்க வேண்டுமென்றும், ஸ்வாமிகள் எக்காரணத்தைக்கொண்டும் தனிமையில் தண்ணீரில் இறங்கக் கூடாதென்றும் அவ்விடங்களில் நீராடும் பொழுது ஸ்வாமிகளைச் சுற்றிலும் பாதுகாப்பிற்காக மனிதர்கள் நிற்கவேண்டுமென்றும், இரவில் வெகு நேரம் கண்விழித்துக் கொண்டிருக்கலாகாதென்றும், நித்யபூஜையை வெகு நேரம் கழித்துச் செய்யாமல் காலத்தில் முடித்துக்கொண்டு சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் சிவன் குறிப்பிட்டருந்தார். தனது வேண்டுகோளின் படி ஸ்வாமிகள் நடந்துகொள்வதை அறியத் தாம் மிகவும் ஆவலுள்ளவனாக இருப்பதாயும், அது சம்பந்தமாய்த் தனக்கு மடத்தின் அதிகாரிகள் மூலம் ஓர் கடிதம் எழுதியனுப்ப உத்தர விட வேண்டுமென்றும் அக்கடிதத்தில் கேட்டுக்கொண்டார். இங்ஙனம் அன்பான ஓர் கடிதத்தை ஸ்வாமிகளுக்குச் சிவனைத் தவிர வேறு எவர்தான் எழுத முடியும்? கடிதத்தை ஸ்வாமிகளிடம் மடத்தின் நிர்வாகி வாசித்துக் காட்டியபொழுது, ஸ்வாமிகள் புன்முறுவல் செய்து, மறுமுறையும் அதை வாசிக்கும்படி கட்டளையிட்டார்கள். ஓர் தந்தை அன்புடன் தனது அருமைப் புதல்வனுக்கு எழுதிய கடிதம் போல அது அமைந்திருந்தது. எனினும் ஸ்வாமிகள் அப்பொழுது அதைப் பற்றி எதுவும் கூறாமலிருந்து விட்டார்கள். மறு நாள் சிவனுக்கு என்ன பதிலெழுதுவதென்று மடத்தின் அதிகாரிகள் கேட்க, எல்லாம் சிவனது மனம் போலவே நடைபெறும் என்று ஆள் மூலம் சொல்லியனுப்பும்படி ஸ்வாமிகள் உத்தரவிட்டார்கள். ஆனால் சிவனே இந்தப் பதிலால் திருப்தி அடையாதவராகி நேரில் ஸ்வாமிகளைத் தரிசித்து தம் மனசில் தோன்றியவற்றையெல்லாம் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொள்ள வேண்டி ஸ்வாமிகள் தங்கியிருந்த கிராமத்திற்கு வந்தார். ஸ்வாமிகளும் அவரிடம் மிகுந்த அன்புடன் பேசி சாத்யமான வரையில் அவர் கோரிக்கைப்படி நடந்துகொள்வதாகக் கூறினார்கள்.

1925-ஆவது வருடம் முதல் 1932-ஆவது வருடம் வரை, நடைபெற்ற மடத்தின் திருப்பணி சம்பந்தமாய் சிவன் ஆலோசனைகளைக் கூறிவந்ததுடன் அதற்கெனச் சில மிராசுதார்களிடமிருந்து பொருளையும் சேகரித்தார். சிவனது வயோதிக காலத்தில் மடத்தின் சிப்பந்திகள் சிலரை அவருடன் கூடவே இருந்து அவரது உடல் நலனையும், ஆகாரத்தையும் கவனித்துக்

கொள்ளும்படி ஸ்வாமிகள் உத்தரவிட்டிருந்தார்கள். பின்னர் தாம் வெகு காலம் ஜீவித்திருக்க முடியாதென்பதை உணர்ந்த சிவன் தம்மைத் **திருபுவனத்துக்குக்** கொண்டுபோய் விடும்படி கேட்க, அவ்வாறே செய்யப் பட்டது. திருபுவனத்தில் தாம் வழி பட்ட **ஸ்ரீ கம்பஹரேசுவரர் சந்நிதானத்திலேயே** சிவன் தமது பூத வுடலை 1939 மே மாதம் 19-ஆம் தேதி விடுத்தார். அன்றே நமது ஸ்வாமிகளும் கங்கா யாத்திரையை முடித்துக்கொண்டு சோழநாட்டில் அடிவைத்தார்கள்.

சிவன் ஓர் துறவியின் ஆசிரமத்தை ஏற்றுக்கொள்ளா விடினும் அவர் ஒரு உண்மைத் துறவியாகவே விளங்கினர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவரது புகழ் உலகில் என்றும் அழியாததாகும். சிவன் சிவபிரான் அடி சேர்ந்த செய்தி ஸ்வாமிகளுக்கு அறிவிக்கப்பட்டவுடன், சந்நியாசம் பெரு மலும் ஞான மார்க்கத்தில் சாதனை இல்லாமலும் இந்த ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பயனுல் சிவன் மோக்ஷ நிலையை அடைந்து விட்டாரென்றும், அவருக்கு இனி மறு ஜன்மமில்லையென்றும், ஸ்வாமிகள் கூறினுர்கள். அன்று கும்பகோணத்திலும், திரு புவனத்திலும் உள்ள ஆலயங்களில் மோக்ஷதீபம் ஏற்றும்படி ஸ்வாமிகள் கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவ்வாலய கோபு ரங்கள் மீது தீபங்கள் ஏற்றப்பட்டன. ஸ்வாமிகளின் விருப்பப் படி அவர் மோக்ஷமடைந்த பத்தாவது நாள் கும்பகோணம் மடத்தில் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளிக்கப் பட்டது. சிவன் தமது இறுதி நாளில் தம்மிடம் இருந்த ரூ. 160-யையும் **பூர்த்த தருமம்** எனக் கூறப்படும் குளம் வெட்டும் கைங்கரியத்தில் செலவிடும்படி, திருச்சி வக்கீல் ஆர். ஸ்ரீநிவாஸ ஐயரிடம் கொடுத்திருந்தார். அந்தத் தொகையை ஐயர் ஸ்வாமி களிடம் சமர்ப்பணம் செய்தார். ஸ்வாமிகள் திருவள்ளூரில் ஹரி ஜனங்களின் உபயோகத்தில் இருந்த ஓர் குளத்தைச் சீர்திருத்தம் செய்ய அதைச் செலவிட உத்தரவிட்டார்கள்.

## 9. சமூக சேவையும் தருமத் தொண்டும்

### ஸ்ரீ மடம் முத்திராதிகாரிகள் சங்கம் நிறுவியது

மடத்திற்கும், மக்களுக்கும் ஓர் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு மதப்பிரசாரம், சமூகத்தொண்டு இவைகளைச் செய்ய வேண்டி மடம் **முத்ராதிகாரிகள் சங்கம்** என்னும் ஓர் சங்கத்தைத்

தோற்றுவித்து, அதற்குச் சில விதிகளையும் ஏற்படுத்தி முதலில் தஞ்சை ஜில்லாவில் அநேகமாக ஒவ்வொரு கிராமத்திலும் அதை நிறுவ ஸ்வாமிகள் உத்தேசம் கொண்டார்கள். இந்தத் திட்டத்தை அமலுக்குக் கொண்டுவர 1939-ஆவது வருட இறுதியிலும், 1940, 1941, 1942-ஆவது வருடங்களிலும் ஸ்வாமிகள் தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் பல கிராமங்களுக்கு விஜயம் செய்தார்கள். இந்தச் சங்கத்தின் நோக்கங்கள் பலவற்றுள் முதன்மையானவை கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1. **சமூகசேவை** :—கிராம மக்கள் ஒற்றுமையுடனிருந்து சமூகசேவை செய்தல்.
2. **தேவாலயக் கட்டிடப் பாதுகாப்பு** :—கிராமத்திலுள்ள ஆலயங்களின் நிலை மேலும் சீர்கெட்டுப் போகாமல், பழமையின் காரணமாக அவ்வாலயத் திருப்பணிகளுக்கு நேரும் சிறிய பழுதுகளை அவ்வப்போதே சீர்திருத்தம் செய்தல் ; கோவில் மண்டபங்களிலும், கோபுரங்களிலும் முளைக்கும் ஆல், இச்சி, அரசு முதலிய செடிகளை முளையிலேயே பெயர்த்து எடுத்து, அவ்வழகிய கட்டிடங்களை அழியாதவாறு காப்பாற்றுதல் ; ஆலயங்களின் பிராகாரங்களில் முளைத்திருக்கும் நெருஞ்சி முதலான முட் செடிகளையும், பிற செடி வர்க்கங்களையும் கிராம மக்களே அவ்வப்போது அப்புறப்படுத்தி, ஆலயங்களை வலம் வருவதற்கு அனுகூலமாக அவ்விடங்களைச் சுத்தம் செய்தல்.
3. **ஆலய நிர்வாகம்**:—சீரிய முறையில் நிர்வாகம் நடைபெறுமலிருக்கும் இடங்களில் அந்த நிர்வாகத்தைச் சீர்படுத்த முயலுதல்.
4. **ஏகாதசி புராண படனம்** :—ஒவ்வொரு ஏகாதசி அன்றும் கிராம மக்கள் யாவரும் ஓர் பொது இடத்தில் கூடிப் புராணம் படிக்கக் கேட்டல் ; ஹரிஜனங்கள் உட்பட எல்லாச் சமூகத்தினருக்கும் இப்புராணங்கள் கேட்பதற்கு வசதி அளித்தல் ; புராணங்கள் தமிழிலேயே படிக்கப்படவேண்டும் ; ஒவ்வொரு ஏகாதசியிலும் படிக்க வேண்டிய புராணம் பத்திரிகை வாயிலாக முன் கூட்டியே முத்திராதிகாரிகளுக்கு அனுப்பப்படும்; அவை பெரும்பாலும் பெரிய புராணம், திருவிளையாடல் புராணம், இவைகளிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படும் ; வடநாட்டு வைணவ பக்தர்களின் சரித்திரங்களும்

தமிழில் மொழி பெயர்த்துச் சேர்க்கப்படும். இந்தப் புராண படனம் முடிந்தவுடன் யாவரும் பகவன் நாமாவைச் சொல்லிக் கொண்டு கலைய வேண்டும்.

5. **ஆவினத்தைக் காப்பாற்றுதல்:**—ஒவ்வொரு நாளும் ஹிந்து ஒவ்வொருவனும் பசுமாட்டிற்கு ஒரு கைப்பிடி பசும் புல்லாவது கொடுக்க வேண்டும். வீடுகளில் பசு மாடு வளர்க்கச் செய்து, அந்தப் பசுவிலிருந்து கிடைக்கும் பாலின் ஒரு சிறிய பாகத்தையாவது நெய்யாக்கி, அதை அந்த ஊர் ஆலயத்தில் பிரதி வெள்ளிக்கிழமையாவது விளக்கேற்ற உபயோகப்படுத்தவேண்டும். கறவை நின்ற பசுமாடுகளை அடிமாட்டுக்காக விற்காமல் ஜீவித காலம் வரை அவைகளைக் காப்பாற்ற வேண்டும். மக்கள் காபி குடிக்கும் கெட்ட பழக்கத்தை விட்டால் நாட்டில் பாலும், நெய்யும் ஏராளமாகப் பெருகும்.

6. **மரம் வளர்ப்பு:**—அரசு, ஆல், வில்வம், நெல்லி, மா, வேம்பு முதலான மரங்களை நட்டு அவைகளைச் சரிவர வளர்க்கச் செய்தல். அவரவர்கள் தோட்டங்களிலேயே ஆகாரத்திற்கு உதவும் கிழங்கு வகைகளைப் பயிரிடுதல்.

7. **பூர்த்த தர்மம்:**—கிராமங்களிலுள்ள கிராமங்கள், குளங்கள் இவைகளைத் தூர்வெடுத்து ஆழமாக்கி மக்களுக்கு உதவும்படி செய்தல். அவசியமான இடங்களிலெல்லாம் புதிதாகக் கிணறுகள், குளங்கள் இவைகளை வெட்டுதல்; இந்தப் பணியைக் கூலியாட்களைக் கொண்டு செய்யாமல், பணக்காரன், ஏழை என்னும் பாகுபாடு எதுவுமின்றி, வீட்டிற்கு ஒரு மண்வெட்டியுடன் நேரில் வந்து இந்தப் பணியில் ஈடுபடுதல்; பெண்களும் இப் பணியில் ஈடுபடலாம்; இதையே **பூர்த்த தர்மம்** என்று நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

8. **தர்ம சாஸ்திரம்:**—ஆசாரம், அனுஷ்டானம், தர்ம சாஸ்திரம் இவைகளில் மக்களுக்கு எழும் சந்தேகங்களை முத்ராதிகாரிகள் மூலம் மடத்திற்கு எழுதி மடத்திலிருந்து வரும் தீர்மானத்தின்படி நடந்துகொள்ளுதல்.

9. **விருந்தோம்பல்:**—ஒவ்வொருவரும் தமக்குக் கிடைக்கும் உணவுப் பொருளின் ஒரு சிறிய பாகத்தைப் பிறர்க்கென ஒதுக்கினால் நாட்டின் பசிப்பிணி எளிதாகத் தீருமாகையால் மக்கள் இக்கருத்தை மனத்தில் கொண்டு அன்றாடம் இதை நிறைவேற்றி வைத்தல்.

இவைகளைத் தவிர இன்னும் பல நோக்கங்கள் இந்தச் சங்கத்திற்காக வகுக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் திட்டத்தில் தஞ்சை ஜில்லாவில் மாத்திரம் சுமார் 2000 சங்கங்களுக்கு மேல் நிறுவி, ஒவ்வொரு சங்கத்திற்கும் ஒவ்வொரு முத்ராதிகாரியையும், ஓர் உப முத்ராதிகாரியையும், தொண்டர்களையும் ஸ்வாமிகள் தேர்ந்தெடுத்து நியமனம் செய்தார்கள். ஒவ்வொரு முத்ராதிகாரிக்கும் அடையாளமாக வில்லையும் அளிக்கப்பட்டது. **தாலுக்கா கமிட்டிகள்** என்றும், **கோட்டகக் கமிட்டிகள், கிராமச் சங்கங்கள்** என்றும் இதைப் பலவாருகப் பிரித்தார்கள். பட்டணங்களில் தெருவுக்கு ஒரு முத்திராதிகாரியும், ஓர் உப முத்திராதிகாரியும் நியமிக்கப்பட்டார்கள். இந்தச் சங்கங்களை நிறுவுவதற்கு ஸ்வாமிகள் பல கிராமங்களுக்குத் தாமே ஓய்வின்றி நேரில் விஜயம் செய்து தம் பூஜை நேரத்தைத் தவிர மிகுதியுள்ள காலத்தைப் பகல், இரவு இரண்டு நேரங்களிலும் தீவிரமாக ஈடுபடுத்தி உழைத்தார்கள். பூர்வாங்கமாக இந்தத் திட்டத்தை நிறுவுவதற்கு முதல் இரண்டு வருடங்களில் ரூபாய் முப்பதினாயிரத்திற்கு மேல் மடத்திலிருந்து செலவிடப்பட்டது. தஞ்சை ஜில்லாவில் அநேகமாக ஒவ்வொரு கிராமத்திலும், மடத்திற்கெனப் **பட்டயமான்யம்** என்ற பெயருடன் ஒரு சிறிய பகுதி நிலம் உளது. இந்த நிலங்களின் வருமானம் இந்த முத்திராதிகாரியின் திட்டத்திற்கே பயன்படுமாறு அவைகளின் நிர்வாகத்தையும் அந்த அந்த ஊர் முத்திராதிகாரிகளிடம் ஒப்படைத்து விட்டார்கள். இந்தத் திட்டத்தை ஒட்டிக் **காமகோடி*** என்னும் பெயருடன் ஓர் **செய்தித் தாளும்** ஆரம்பிக்கப்பட்டது. அப்பத்திரிகையில் முத்ராதிகாரிகளுக்கு அவ்வப்போது தெரிவிக்க வேண்டிய அறிக்கைகளும் மத சம்பந்தமாக ஸ்வாமிகள் அருளும் உபதேச மொழிகளும், ஏகாதசி அன்று படிப்பதற்கெனச் சரிதைகளும், சங்கத்தின் நடவடிக்கைகளும் வெளியிடப்பட்டு வருகின்றன. இந்தச் சங்கத்திற்கு ஓர் மத்திய ஆலோசனைக் கமிட்டியும் நிறுவப்பட்டுள்ளது. மடத்தில் இதற்கென ஒரு தனி இலாகாவும் வேலைசெய்து வருகிறது. குறிப்பாகத் தஞ்சை ஜில்லாவின் பல பாகங்களில் இந்தச் சங்கம் நல்ல வேலை செய்து மக்களுக்குச் சேவை செய்துவருகிறது. இதன் உதவியால் பல கோவில்கள் சீர்திருத்தம் செய்யப்பட்டிருக்கின்றன; பல குளங்கள் சீர்திருத்தப்பட்டும் புதுக்குளங்கள் வெட்டப்பட்டும் இருக்கின்றன. ஜில்லாவின் பெரிய தனவந்தர்கள் அவர்களது குடும்பங்களுடன் தங்கள்

* இந்த பத்திரிகை மாதமிருமுறை வெளியாகிறது. விலாஸம், டபீர் நடுத்தெரு, கும்பகோணம்.

தோள்களிலும் தலைகளிலும், இடுப்புகளிலும் மண் சுமந்து பணி செய்வதைக் கண்ட சாதாரண மக்கள் தாங்களாகவே இப்பணியில் ஈடுபடலாயினர். சில ஊர்களில் காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை பன்னிரண்டு மணி நேரம் ஆயிரக்கணக்கான மக்கள் சேர்ந்து இப்பணிகளை நிறைவேற்றியுள்ளார்கள். தஞ்சை ஜில்லாவில் மட்டும் சுமார் 5000 தொண்டர்கள் ஸ்வாமிகள் வகுத்த இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளனர். இவர்களில் பெரும்பாலோர் பல சமூகங்களைச் சார்ந்த மிராசுதார்கள். பிரசாரத்திற்காக நல்ல கல்வி அறிவும் சொல்வன்மையும் படைத்த தமிழ்ப் பண்டிதர்கள் பலர் இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளார்கள்.

**1940ஆவது வருட வியாஸ பூஜையும், நவராத்திரி விழாவும்**

1940ஆவது வருடத்தில், ஸ்வாமிகள் முத்திராதிகாரிகளின் சங்கங்களை நிறுவுவதற்காக, தஞ்சை ஜில்லாக் கிராமங்களில் சிறிதும் ஓய்வில்லாது மிகவும் தீவிரமான யாத்திரையை மேற்கொண்டதின் காரணமாக ஸ்வாமிகளின் உடல்நலம் குன்றிச் சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்பொழுது ஸ்வாமிகள் திருச்சேறைக்கருகில் கீழவடையல் என்னும் கிராமத்திற்கு அடுத்த **குப்பசமுத்திரம்** என்னும் இடத்தில் சுமார் இரண்டு மாதங்கள் தங்கிப் பின்னர் **பட்டுக்கோட்டை, அறந்தாங்கி** தாலுக்காக்களில் விஜய யாத்திரையைத் தொடங்கினர்கள். அவ்வருட வியாஸபூஜை பட்டுக்கோட்டையை அடுத்த **துவரங்குறிச்சியில்** 19-7-1940–ஆம் தேதியில் நடைபெற்றது. ஸ்வாமிகள் அவ்விடம் இரண்டு மாதங்கள் தங்குவதற்கு வசதிகளை **மன்னங்காடு விசுவநாதய்யர்** குடும்பத்தினர் செய்து கொடுத்தனர். அவ்வருட நவராத்திரி விழாவும் அறந்தாங்கி தாலுக்கா **சொர்ணக்காடு** என்னும் கிராமத்தில் நடைபெற்றது. அவ்வருட இறுதியில் ஸ்வாமிகள் **ஆவுடையார் கோவிலுக்கு** விஜயம் செய்து, ஸ்ரீ ஆத்மநாத சுவாமியைத் தரிசித்துக் கொண்டார்கள். அப்பொழுது அங்குக் கட்டளைத் தம்பிரானுகவிருந்த **ஸ்ரீலஸ்ரீ நமச்சிவாய தம்பிரான்** அவர்கள் நம் ஸ்வாமிகளைத் தேவஸ்தான மரியாதைகளுடன் வரவேற்று மடத்திற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்.

**தஞ்சை பங்காரு காமாக்ஷி அம்மன் கோயில் கும்பாபிஷேகம்**

1941–ஆவது ஆண்டின் துவக்கத்தில் ஸ்வாமிகள் பட்டுக்கோட்டை தாலுகாவில் பேராவூரணிக்கடுத்த **மாவடைக்குறிச்சி** என்னும் மடத்தைச் சார்ந்த கிராமத்திற்கு விஜயம் செய்து அவ்விடம் சில மாதங்கள் தங்கியிருந்தார்கள். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர்த் தஞ்சையில் பிரதிஷ்டை செய்யப்பட்ட

பங்காரு காமாக்ஷி அம்மன் ஆலயத்திற்கு ஜீர்ணோத்தாரணத் திருப்பணிகள் நடைபெற்று வெகு காலம் சென்று விட்டதால், அந்த ஆலயத் திருப்பணிகளைச் செய்ய ஸ்வாமிகள் ஏற்பாடு செய்திருந்தார்கள். அவ்வாலயத்தின் கும்பாபிஷேகமும் (1941 ஜூன் 4 ஆம் தேதி) விஷு வருடம் வைகாசி 22ஆம் தேதி புதன்கிழமை நடைபெற்றது. அந்தக் கும்பாபிஷேகத்திற்கென ஒரு வாரத்திற்கு முன்பே ஸ்வாமிகள் தஞ்சைக்கு விஜயம் செய்திருந்தார்கள். வைதிக முறைப்படி நடைபெற்ற யாகசாலை, பூஜை முதலானவைகளை ஸ்வாமிகளே நேரில் கவனித்தார்கள். கும்பாபிஷேகத்தன்று தஞ்சை மக்களும் வெளியூர் வாசிகளும் பல்லாயிரக்கணக்கில் தஞ்சையில் கூடி அம்பிகையைத் தரிசித்துக்கொண்டார்கள்.

அவ்வருடத்து வியாஸ பூஜை 8-7-1941-ஆம் தேதி **நாகப்பட்டினத்தில், ஸ்ரீ நீலாயதாக்ஷி சமேத ஸ்ரீ காயாரோகணேச்வரர் ஆலயத்தில்** நடைபெற்றது. ஜில்லாவின் பல பாகங்களிலிருந்தும் வெளி ஜில்லாக்களிலிருந்தும் பக்தர்கள் ஏராளமாகக் கூடிப் பூஜையைத் தரிசித்துக்கொண்டனர். அவ்வருடத்து நவராத்திரி விழா **முத்துப் பேட்டைக்கடுத்த ஆலங்காட்டில்** நடைபெற்றது.

### 1942-ஆவது ஆண்டில் நடைபெற்ற அதிருத்ர யாகம்

உலக யுத்தத்தின் காரணமாக மக்களுக்கு நேர்ந்த பலவிதத் துன்பங்களைப் போக்குவதற்குப் **பரமேச்வரனை ஸ்ரீ ருத்ர மந்திரத்தைக்** கொண்டு உபாசனை செய்தும், **திருமாலை ஸஹஸ்ரநாமத்தினுல்** துதித்தும் வரவேண்டுமென்று ஸ்வாமிகள் ஆங்காங்குள்ள தேவாலய நிர்வாகிகளுக்கும், அற நிலைய இலாகா அதிகாரிகளுக்கும் ஓர் அறிக்கை விடுத்திருந்தார்கள். அவ்வறிக்கைப்படி நாடெங்கும் பல தேவாலயங்களில் விசேஷமாக **ருத்ரஜப பாராயணமும் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும்** நடைபெற்று வந்தன. பலர் தங்கள் இல்லங்களில் இந்தப் பாராயணங்களையும், அதைச் சார்ந்த ஹோமங்களையும் செய்து வந்தனர்.

ஸ்வாமிகள் 1942 ஏப்ரல் மாதத்தில் மன்னார்குடிக்கடுத்த **பூவனூரில்** விஜயம் செய்திருந்தபொழுது **வேங்கடகிரி மகாராஜாவின்** வேண்டுகோளின்படி அவ்வூரில் (பூவனூரில்) ஓர் **அதிருத்ர ஹோமம்** நடத்தப்பட்டது. நூற்றிருபத்தொரு ரித்விக்குகளைக் கொண்டு, பதினொரு நாட்கள் நடைபெற்ற இந்த ஹோமத்தைத் தஞ்சை ஜில்லாவின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் ஏராளமாக வந்து தரிசித்தனர். அந்த யக்ஞத்தின் செலவில் பெரும் பகுதியை வேங்கடகிரி மகாராஜாவே ஏற்றுக்கொண்டார். இந்த

யாகத்திற்குச் சுமார் ரூபாய் 25,000 வரையில் செலவானதாக மதிப்பிடப்படுகிறது. இந்த யாகம் நடைபெற இடவசதி முதலான வற்றைத் தார்மிகர் பூவனூர் ராஜு முதலியாரது திருக்குமாரர் **சுப்பராய முதலியார்** செய்து கொடுத்தார்.

**புதுக்கோட்டை சம்ஸ்தானத்தில் விஜயம்**

மன்னார்குடி தாலுகாவில் யாத்திரை செய்துகொண்ட பின்னர் ஸ்வாமிகள் முத்ராதிகாரிகள் சங்கங்கள் நிறுவ வேண்டிய உத்தேசத்துடன் புதுக்கோட்டைச் சம்ஸ்தானத்திலுள்ள சில கிராமங்களுக்கு விஜயம் செய்தார்கள். இந்த யாத்திரையில் ஸ்வாமிகள் 1942 ஜூன் மாதம் 6-ஆம் தேதி **தஞ்சாவூரில் தங்கி**, அவ்விடம் ஸ்ரீ பங்காரு காமாக்ஷியைத் தரிசனம் செய்துகொண்டு, 7ஆம் தேதி **வல்லத்திலும்**, 8-ஆம் தேதி **செங்கிப்பட்டியிலும்** முகாம் செய்து, 9-ஆம் தேதி புதுக்கோட்டை சம்ஸ்தானத்திலுள்ள கிள்ளுக்கோட்டை மார்க்கமாக மறுநாள் கீரனூர் தாலுகா **மலையடிப்பட்டிற்கு** விஜயம் செய்தார்கள். அங்கு மலையில் வெட்டப் பட்ட **ஸ்ரீ வடிவுடையாம்பாள் சமேத வாகீச்வரர் ஆலயத்தையும், ஸ்ரீ ரங்கநாதர் ஆலயத்தையும்** தரிசித்துக்கொண்டார்கள். அவ் வாலயங்களின் கர்ப்பக்கிருஹம், அர்த்த மண்டபம் எல்லாம் மலையிலேயே குடையப்பட்டுள்ளன. அன்றே ஸ்வாமிகள் **விசலூர்** என்னும் கிராமத்தை அடைந்து, அவ்வூர்ச் சிவாலயத்தில் அன்று பூஜையை நடத்திவிட்டு, மறு நாள் ஜூன் மாதம் 10-ஆம் தேதி, **குண்டாண்டர் கோவிலுக்கு** விஜயம் செய்தார்கள். அன்று பகலில் அவர்கள் மலையிலுள்ள சுனையில் நீராடி, உமாதேவியை யும் மலை மீதுள்ள முருகப் பெருமானையும் தரிசித்துக்கொண் டார்கள். மறு நாள் 11-ஆம் தேதி **ஆரணிப்பட்டிக்கு** விஜயம் செய்து, அவ்வூரிலுள்ள சிவாலயத்தில் **ஸ்ரீ மங்களாம்பிகா சமேத தானவனேச்வர** சுவாமியைத் தரிசித்துக் கொண்டார்கள். அவ் விடமிருந்து 12-ஆம் தேதி காலை ஸ்வாமிகள் **பெருங்களூருக்கு** விஜயம் செய்தார்கள். அப்பொழுது அவ்வூருக்குப் புதுக் கோட்டையிலிருந்து நூற்றுக் கணக்கான பக்தர்கள் வந்து ஸ்வாமி களைத் தரிசித்துக் கொண்டார்கள். 13-ஆம் தேதி ஸ்வாமிகள் **வாராப்பூரில்** தங்கி, 14-ஆம் தேதி **அம்புக்கோவிலுக்கு** விஜய மானார்கள். அம்புக்கோவிலில் ஸ்வாமிகள் ஐந்து நாட்கள் தங்கி யிருந்தார்கள். அப்பொழுது அந்நாட்டு குடி மக்கள் ஏராள மாகக் கூடி ஸ்வாமிகளை வரவேற்றார்கள். புதுக்கோட்டை மன்னர்கள் இந்த அம்புக்கோவில் நாட்டைச் சேர்ந்தவர்களா

வார்கள். அம்புக்கோவில் நாட்டார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் மடத்திற்குத் தாமிரபட்டய சாஸனம் செய்து கொடுத்திருக்கின் றனர். ஸ்வாமிகள் 19, 20-ஆம் தேதிகளில் **ஆலங்குடியில்** தங்கி யிருந்து, 21-ஆம் தேதி **திருவரங்குளத்தில்** மூன்று காலபூஜையை யும் முடித்துக்கொண்டு, அன்றிரவே 10 மணிக்கு பட்டுக் கோட்டை தாலுகா, **நகரத்திற்கு** விஜயம் செய்தார்கள். பின்னர் **மாவிடைக்குறிச்சி, புக்கரம்பை, ஆண்டிக்காடு, பட்டுக்கோட்டை, மன்னார்குடி** மார்க்கமாக ஜூலை மாதம் 1, 2-ஆம் தேதிகளில் கும்பகோணத்திற்கு விஜயம் செய்து, பின்பு 9-ஆம் தேதி முதல் 15-ஆம் தேதி முடிய, **உடையார்பாளையம்** சம்ஸ்தானாதிபதியின் வேண்டுகோளுக்கிணங்கி அந்த ஊரில் தங்கிப் பிறகு **அரியலூர், லால்குடி, திருச்சி, முசிரி** மார்க்கமாக அகண்ட காவிரியின் வட கரையில் அமைந்துள்ளதும் **காட்டுப்புத்தூருக்குச்** சமீபத்திலுள் ளதுமான **நத்தம்** என்னும் ஊருக்கு விஜமானார்கள். அவ்வூரில் ஜூலை மாதம் 27-ஆம் தேதி திங்கட்கிழமை அவ்வருஷ வியாஸ பூஜை நடைபெற்றது.

**மற்றோர் அதிருத்ர யக்ஞம்**

சாதுர் மாத சங்கல்பத்தின் நடுவில் பதினொரு நாட்கள் 14-9-42 தேதி முதல் 24-9-42-ஆம் தேதி முடிய (பூவனூரில் நடை பெற்றது) போல ஓர் **அதிருத்ர யக்ஞத்தை** நத்தத்தில் நடத்த வேண்டுமென ஸ்வாமிகள் உத்தரவிட்டார்கள். அதற்காகக் காவிரியின் வடகரையில் மாபெரும் கொட்டகை ஒன்று அமைக்கப் பெற்றது. அதில் 11 பெரிய ஹோம குண்டங்கள் வகுத்து, அந்தக் குண்டங்களை மக்கள் சுற்றி வரவும், ஹோமம் நடைபெறு வதைத் தரிசிக்கவும் இடங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. ஹோம குண்டம் ஒவ்வொன்றைச் சுற்றிலும் வேதக் கலையில் தேர்ச்சி அடைந்த 11 அந்தணர்கள் அமர்ந்து ஹோமத்தை நடத்தி வந்தனர். ஒவ்வொரு குண்டத்திற்கும் 11 பேராக, மொத்தம் 121 பேர்கள் இந்த யக்ஞத்தை நடத்திய காட்சி ஓர் புனிதக் காட்சியாக அமைந்திருந்தது. ஜில்லாவின் பல பாகங்களி லிருந்தும், வெளி ஜில்லாக்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் அந்தப் பெரிய யக்ஞத்தைத் தரிசிக்க வந்திருந்தார்கள். **நங்கவரம் எஸ்டேட் என். எ. ரங்கநாத ஐயர்** இந்த யக்ஞத்தின் நிர் வாகத்தின் பொறுப்பை ஏற்று நடத்தினர். சென்னை அட்வகேட் **கே. பாலசுப்பிரமணிய ஐயர்,** சூணம்பட்டு ஜமீன்தார் **திவான் பகாதுர் எஸ். அருணசல முதலியார்** மற்றும் பல பிரமுகர்களும் 11 நாட்

களும் அவ்விடம் தங்கி, யக்ஞத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் கவனித்து வந்தனர். யக்ஞத்தின் முடிவு நாளான 24-9-42-ஆம் தேதி பௌர்ணமி அன்று, பூர்ண ஆகுதி ஆனபிறகு வேதியர்கள் யக்ஞ மேடையில் ஸ்தாபனம் செய்யப்பட்டிருந்த கும்பங்களை எடுத்து, அவைகளைத் சிரஸில் சுமந்து மேள வாத்யங்கள், யானைகள் முன்செல்ல, ஊர்வலமாகக் காவிரி நதிக்குச் சென்றனர். ஸ்வாமிகள் முன்பே அங்குச் சென்று, தண்ணீரின் நடுவில் நின்றுகொண்டிருந்தார்கள். அந்தணர்கள் எடுத்துச் சென்ற கும்பங்களில் உள்ள தீர்த்தங்களை அவர்கள் அப்பொழுது ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்தனர். இந்த அபிஷேகம் ஆனவுடன் ஸ்வாமிகள் புனிதக் காவிரியில் நீராடிய பொழுது, அங்குக் கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்களும் அதே சமயத்தில் நீராடினார்கள். அந்த 121 அந்தணர்களைத் தவிர, மேலும் சுமார் 250 வேதியர் வேத பாராயணம் செய்வதற்கென தருவிக்கப்பட்டிருந்தனர். இவர்களுக்கெல்லாம் கொடுக்கப்பட்ட தக்ஷிணை முதலான வெகுமதிகளைச் சூணும்பட்டு ஜமீன்தார் ஏற்றுக்கொண்டார். **காட்டுப்புத்தூர் ஜமீன்தாரும்** இந்த யாகத்திற்கென அரிசி முதலான உணவுப்பொருள்களை ஏராளமாக வழங்கினார். மற்றும் பல அன்பர்கள் இந்த யாகச் செலவிற்குத் தாராளமாகப் பண உதவி செய்தனர்.

1942-ஆவது வருடம் இறுதியிலும் ஸ்வாமிகள் திருச்சி ஜில்லாவிலேயே யாத்திரை செய்துகொண்டிருந்தார்கள். நவம்பர் மாதம் 27-ஆம் தேதி நங்கவரத்தில் தங்கிப் பெரிய பண்ணை **ரங்கநாத ஐயரால்** அளிக்கப்பட்ட பாதபூஜை, பிக்ஷை இவைகளை ஏற்றுக் கொண்டு டிசம்பர் மாதம் 2-ஆம் தேதி, **திருப்பராய்த்துறையில்** சுவாமி தரிசனம் செய்து கொண்டார்கள். அன்று **அந்தநல்லூரிலும்,** 3-ஆம் தேதி **பழுவூரிலும்** விஜயம் செய்தார்கள். பழுவூரில் வேதாந்த பாடசாலையின் இரண்டாவது வருடக் கொண்டாட்டத்தில் ஸ்வாமிகள் கலந்துகொண்டு வித்யார்த்திகளுக்கு அரிய சில உபதேச மொழிகளை அருளினார்கள்.

**சங்கர மலை நாமகிரி தரிசனம்**

1943-ஆவது வருட துவக்கத்திலும் ஸ்வாமிகள் திருச்சி ஜில்லாவில் அகண்ட காவிரியின் இரு கரைகளிலும் உள்ள அக்ரஹாரங்களில் விஜய யாத்திரை செய்து கொண்டு வந்தார்கள். திருச்சிக்கு மேற்கில் 45 கிலோ மீட்டர் தூரத்தில் **மதுக்கரை** என்னும் இடத்திலிருந்து மூன்றுகிலோ மீட்டருக்கு அப்பால் **சங்கர**

மலை என்னும் பெயருடன் ஒரு குன்று உள்ளது. அக் குன்றின், உச்சியில் ஓர் ஆலயம் அமைந்திருக்கிறது. அதில் ஒரு மகாலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பெற்றிருக்கிறது. ஸ்வாமிகள் கிருஷ்ணராஜபுரம் முகாமிலிருந்து, 1943 மார்ச் 2-ஆம் தேதி அவ்விடம் சென்று, குன்றின் மேல் ஏறி, அந்த மகாலிங்கத்தைத் தரிசனம் செய்து கொண்டார்கள். காஷ்மீரத்திலுள்ள ஸ்ரீநகரிலும் இவ்வாறு ஸ்ரீசங்கராசாரிய மலை என்று ஒரு மலை உளது. அதில் ஆதிசங்கரர் சிவாலயப் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். **இதனால் காஷ்மீரத்திற்கும், சோழநாட்டிற்கும் உள்ள ஒற்றுமையை ஸ்வாமிகள் அப்பொழுது விளக்கினார்கள்.** அந்த யாத்திரையில் ஸ்வாமிகள் **நாமக்கல்லுக்கு** விஜயம் செய்து, அவ்விடம் மார்ச் மாதம் 26-ஆம் தேதி முதல் ஏப்ரல் 2-ஆம் தேதி வரையில் 8 நாட்கள் தங்கி, குன்றின் மீதுள்ள **ஸ்ரீ ரங்கநாதரையும், நாமகிரி அம்மனையும்,** கீழுள்ள **நரசிம்ம மூர்த்தியையும், ஆஞ்சனேயரையும்** தரிசித்துக் கொண்டார்கள். ஸ்வாமிகளின் விஜயத்தை நாமக்கல் மக்கள் மிகவும் விமரிசையாகக் கொண்டாடினார்கள்.

**திருவானைக்காவில் உள்ள பஞ்சமுகேசுவர ஆலயம்**

திருவானைக்காவல் வடக்கு வீதியில் ஸ்ரீ சங்கர மடத்தை யொட்டி வடகிழக்குப் பாகத்தில் **ராஜராஜேச்வரர் ஆலயம்** எனக் கூறப்படும் ஓர் பழைய ஆலயம் பல வருடங்களாகப் பூஜைகள் செய்விக்கப்படாமல் செடி கொடிகள் மரங்கள் ஏராளமாக முளைத்தும், கட்டிடங்கள் இடிந்தும் உள்ளே புகமுடியாதபடி கவனிப்பார் அற்ற நிலையில் இருந்தது. ஸ்வாமிகள் 1943-ஆவது ஆண்டில் திருவானைக்காவுக்கு விஜயம் செய்த பொழுது, இந்த ஆலயத்தின் நிலையை நேரில் கண்டு, அங்கு முளைத்திருந்த பெரிய மரங்களையும், புதர்களையும் வெட்டி உட்புகுந்து பார்த்த பொழுது, அதனில் இரண்டு சிவாலயங்கள் காணப்பெற்றன. அவ்விரண்டில் ஒரு சிவாலயத்தில் நான்கு புறங்களிலும் நான்கு வாயில்களும், மேலே ஒரு வாயிலுமாக ஐந்து வாயில்கள் அமைந்திருந்தன. அதன் நடுவில் அமைந்துள்ள லிங்கத்தில் நான்கு திசைகளிலும் பரமசிவனது அழகிய உருவமாக நான்கு முகங்களும், மேலே ஆகாயத்தை நோக்கிய ஊர்த்துவ முகம் அரூபமாகவும், ஜோதிர் மயமாகவும் காணப்பட்டன. ஸ்ரீ ருத்ர மஹான்யாச மந்திரத்தில் **தத்புருஷம், அகோரம், ஸத்யோஜாதம், வாமதேவம், ஈசானம்** என ஐந்து வேத மந்திரங்களால் கூறப்பட்டுள்ள பரமசிவனின் ஐந்து முகங்களே

இந்தப் பஞ்சமுக லிங்கத்தின் தத்துவமாககும்.* கிழக்கு முகமாக உள்ளது **தத்புருஷம்**, (சாம வேதம்); தெற்கு முகமாக உள்ளது **அகோரம்** (அதர்வண வேதம்); மேற்கு முகமாக உள்ளது **ஸத்யோ ஜாதம்** (ருக் வேதம்); வடக்கு முகமாக உள்ளது **வாமதேவம்** (யஜுர் வேதம்); ஐந்தாவது முகமாயுள்ளது ஈசானம் **தேஜோ ரூபம்**; அது அரூபமாக விளங்குகிறது. மிகவும் புனிதத் தன்மை வாய்ந்த இந்த ஆலயங்களைப் பழுது பார்க்கச் செய்து, சென்ற 13-6-1943 அன்று கும்பாபிஷேகத்தையும் மிகச் சிறப்பாக ஸ்வாமி கள் நடத்தி வைத்தார்கள். அன்று முதல் அந்த ஆலயங்களுக்குப் பூஜையும் நடைபெற்று வருகிறது. இந்த ஆலயம் **குபேரனுல்** பிரதிஷ்டை செய்யப்பட்டதெனத் திருவானைக்கா தல புராணம் கூறுகிறது. நம் நாட்டில் வேறு எங்கும் காணமுடியாத இந்த ஆலயத்தைச் சிவ பக்தர்கள் தவருது தரிசிக்க வேண்டும்.

**நேபாளத்தில் பஞ்சமுக மஹாலிங்கம்**

இவ்விதமான ஐந்துமுக மகாலிங்கமும் ஐந்து வாயில்க ளோடு கூடிய சிவாலயமும் இங்குள்ளன போலவே, **நேபாள ராஜ் யத்தில் ஆதி சங்கரரால்** பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஆலயத்திற்குப் **பசுபதீசுவரர்** ஆலயம் என்று பெயர். ஒவ் வொரு வருடமும் சிவராத்திரி காலத்தில் லக்ஷக்கணக்கான மக்கள் அங்குச் சென்று அந்தப் பசுபதீசுவர லிங்கத்தைத் தரிசித்து வரு கின்றனர். நம் நாட்டிலிருந்து அங்குச் செல்வதற்கு நேபாள சர்க் காரின் அனுமதி வேண்டும். அவ்வித அனுமதியை அந்தச் சர்க்கார் சிவராத்திரி காலத்தில் யாத்ரிகர்களுக்குத் தாராளமாக அளிக்கின் ருர்கள். அங்கு அந்த மகாலிங்கத்திற்குப் பூஜை செய்கின்றவர் கள் கன்னட நாட்டைச் சார்ந்த ஸ்மார்த்த பிராம்மணர்களாவர். தென்னுட்டவர்களுக்கு அங்கு பூஜை செய்யும் உரிமை எவ்விதம் கிடைத்ததென்பது ஆராய்ச்சிக்குரிய விஷயமாகும். ஆதி சங்கரர் காலந்தொட்டே இந்த ஏற்பாடு அவ்விடம் நடந்து வருவதாகக் கூறுகின்றனர்.

**பதரிகாசிரமத்தில் நம்பூத்திரி பூஜை**

ஹிமாலயப் பிரதேசத்திலுள்ள பதரிகாசிரமத்தில் **அலக நந்தா** என்னும் பெயருடன் விளங்கும் கங்கை நதிக்கரையில்

---

* இந்தப் பஞ்சமுக லிங்கத்தின் உருவத்தை எல்லாக் கோணங் களிலிருந்தும் சித்திரம் வரைந்து, ஆனந்தவிகடன் பத்திரிகையில் 27-12-1953-ஆம் தேதி இதழில் சில்பி என்னும் சைத்திரிகர் தத்ரூபமாகக் காட்டியுள்ளார்.

**ஸ்ரீ பதரி நாராயண மூர்த்தியின்** ஆலயம் அமைந்துள்ளது. இந்த ஆலயம் ஒரு காலத்தில் கங்கையில் மூழ்கி விட்டதென்றும், ஸ்ரீ ஆதி சங்கரர் அந்தப் பிரதேசத்தில் யாத்திரை செய்தபொழுது அந்த நாராயண மூர்த்தியை மறுபடியும் .ஸ்தாபனம் செய்தார்களென்றும் ஒரு புராண வரலாறு கூறுகிறது. அது முதல் அங்கு உஷ்ண கங்கையும் (சூடான நீர் ஊற்று) வெளிப்பட்டு யாத்ரீகர்களுக்கு மிகவும் உதவியாக இருந்து வருகிறது. அன்று முதல் இன்றுவரை அந்தப் பதரி நாராயணரைப் பூஜை செய்கின்றவர்கள் கேரள நாட்டைத் சார்ந்த **நம்பூதிரி பிராம்மணர்கள்** ஆவர். ஆதி சங்கரரும் நம்பூதிரிகளின் மரபில் உதித்தவர்களே. வருடத்தில் ஆறு மாதங்கள் பதரீநாத் ஆலயம் பனிக்கட்டியால் மூடப்பட்டிருக்கும். அப்பொழுது ஆலயக் கதவுகளும் பூட்டப்பட்டு யாவரும் கீழே இருக்கும் ஜோதிர் மடத்திற்கு வந்து தங்கியிருப்பார்கள். அங்குப் பூஜை செய்கின்றவர்களுக்கு இரண்டு ஸ்தானங்கள் உள்ளன. முதல் ஸ்தானம் ராவல் என்ற பெயருடனும், இரண்டாவது ஸ்தானம் **நாயிப் ராவல்** என்ற பெயருடனும் வழங்கி வருகின்றன. இருவரும் பிரம்மச்சாரிகளாகவே இருக்க வேண்டுமென்பது ஒரு விதியாகும். நாயிப் ராவல் ஸ்தானத்திற்கு ஓர் நம்பூத்ரியைத் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டுமெனப் பதரீநாத் ஆலயத்தை நிர்வாகம் செய்யும் **டெஹ்ரி சம்ஸ்தானச் சர்க்கார்** ஓர் கடிதம் மூலம் நம் ஸ்வாமிகளைக் கேட்டுக்கொண்டார்கள். அதன்படி கொச்சி, சம்ஸ்தானத்தைச் சார்ந்த **புது எடத்து கிருஷ்ண நம்பூத்ரி** என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டு மடத்தின் காரியஸ்தர் ஒருவரது துணையுடன் சென்ற 1943 ஏப்ரல் மாதத்தில் பத்ரீநாத்திற்கு அனுப்பி வைக்கப் பட்டார். மடத்தின் காரியஸ்தர் அவரை டெஹ்ரி சம்ஸ்தானத் தலைநகராகிய **நரேந்திர நகருக்கு** அழைத்துச் சென்றதும், அந்த ராஜ்யத்தின் அதிகாரிகள் அவரை மரியாதைகளுடன் வரவேற்றுப் பத்ரீநாத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அவ்வருடம் ஹிமாலயத்தின் பனி கரைந்த பின்னர், சித்திரை மாதம் 28-ஆம் தேதி (11-5-1943) பதரீநாராயணருடைய ஆலயம் திறக்கப்பட்டு பூஜைகள் ஆரம்பிக்கப்படும் நாளாக அமைந்திருந்தது. நரேந்திர நகரத்திலிருந்து அந்த நம்பூத்ரி பதரீநாத் சென்ற விவரங்களைக் கண்டு ஸ்வாமிகளுக்கு ஓர் கடிதம் எழுதியிருந்தார். மலையாளத்தில் எழுதப்பட்ட அக்கடிதம் தமிழ் எழுத்துக்களில் கீழே பிரசுரிக்கப் பட்டிருக்கிறது.

"**பதரீநாத தர்சனுல் முக்தி:** என்னு ஆதிபுராணமாயிருக்குன்ன பத்ம புராணம் முதல் பல புராணங்களிலும் உள்ளதாயி

பண்டிதன்மார் பரயின்னு. பதரிநாத தர்சனம் சாதிப்பிச்சுதன்னு அனுக்ரகிச்ச ஸ்வாமி! அங்ஙக்கு நமஸ்காரம்.

இனியிக்கு சகசரநாயி அயச்ச அத்தேகம் சுகமாயி மடங்ஙி எத்தியிருக்குமென்னு விசுவசிக்குன்னு, பாஷா வைஷம்யம் கொண்டு காரியம் தரிப்பிக்குவான் ஞான் செய்த சிரமங்களில் சில தெங்கிலும், அத்தேகத்தின்ன ஹிதமாயி தோன்னிட்டெங்கில் அவ பொருத்து மாப்பு தருவான் அபேக்ஷிக்குன்னதாயி பரயணம். அத்தேகத்தின்றே அனுவச்யத்தின்னில்லயீகையும், ஆவச்யத்தின்னுள்ளதில ததிகவும் அத்யாதரணீயம் தன்னே:

நரேந்திர நகரம் வரையும் உள்ள சரித்திரங்கள் அத்தேகம் பரஞ்சிருக்குமல்லோ. மேடம் 14-ஆம் தேதி காலத்தூணு கழிச்சு ஸ்டேட் காரில் ராவல்ஜீ ஒருமிச்சு வைகுன் நேரம் கீர்த்தி நகரத்திலெத்தி, பிற்றே நாள் குதிரபுறத்து அவிடே நின்றும் புறப்பெட்டு எட்டு திவஸம் கொண்டு, ராவல், மஞ்சுகாலத்து தாமஸிக்குன்ன ஸ்தலமாய ஜோஷி மடத்திலெத்தி. யீ ஜோதீச்வர மடமான—த்ரெ ஆசார்ய ஸ்வாமிகளுடே ஆதிமஸ்தாபனம். இருபத்தாரும் தேதி ஊணு கழிச்சி, ராவல் ராஜோசிதமாய ரீதியில் அலங்கரிச்சு மாமுல் பிரகாரமுள்ள சில சடங்குகளெல்லாம் நிர்வகிச்சு கனகமயமாய ஓர் பல்லக்கில் எட்டு ஆளுகளெக் கொண்டடிப்பிச்சு, வாத்ய கோஷத்தோடும் பரிவாரங்களோடும் அதே வரெ அவிடே கூடியிருந்த தீர்த்த யாத்திரக்காரரோடும் மற்றும் கூடி புறப்பெட்டு வைகும் நேரம் பாண்டகேசுவரத்து, பிற்றே திவசம் காலத்ஊணு கழிச்சு புறப்பெட்டு அஞ்சு மணிக்கு மும்பு பதரீகாச்மரத்தில் எத்தி க்ஷேத்திரத்தின்னு பிரதக்ஷிணம் வெச்சு தொழுது, ஸ்வஸ்தானத்திலிருந்து இனியிக்கும் வாகனம் உண்டாயிருந்து பிற்றே திவசம், 28-ஆம் தேதி எட்டரை மணிக்கு சேஊம் ராஜப்ரோகிதன்றே நேத்ருத்துவத்தில், பக்த ஜனங்களுடே ஹிருதயம் கவிஞ்ஞொழுகுன்ன வேதத்தோத்திராதி நாஞகோஷங்களுக்கிடையில் நடதுரன்னுஒரு நெய் விளக்கின்றே வெளிச்சத்து தேவதரிசனம்செய்து, இனியிக்கு தாமசிக்குவான் பிரத்தியேகஸ்தலம் தன்னிட்டுண்டு. ஆசாரியஸ்வாமிகளோடு ஞான் நமஸ்கரிக்குன்னதாயி உணர்த்திகுவான் அபேக்ஷ.

**"புதியெடத்து கிர்ஷ்ணன் நம்பூதிரி, நாயிப் ராவல் சாகிப், பதரிநாதம் போஸ்ட், கார்வான் டிஸ்ட்ரிக்ட், யூ. பி."**

---

**குறிப்பு:** பத்ரீநாதர் சன்னிதியின் கதவுகள் பனிக் காலத்தில் ஆறு மாதங்கள் மூடப்பட்டிருந்த போதிலும், அங்கு ஏற்றிவைக்கப் பட்டிருக்கும் நெய் விளக்கு அப் பனிக்காலம் முழுவதும் அணைவதில்லையெனச் சொல்லப்படுகிறது.

**திருவானைக்காவில் முத்ராதிகாரிகள் சம்மேளனம்**

1943 ஏப்ரல் 23-ஆம் தேதி ஸ்வாமிகள் திருச்சி ஜில்லா முசிரிக்கு விஜயம் செய்து அவ்விடம் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூரில் வக்கீல்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், மிராசுதார்களும் ஸ்வாமிகளைச் சிறப்புடன் வரவேற்றுப் பாத பூஜை முதலியவைகளைச் செய்துவைத்தார்கள். அம்மூன்று நாட்களிலும் ஸ்வாமிகள் கீதையைப் பற்றிய உபதேச மொழிகளைப் பக்தர்கள் கூட்டத்தில் அருளினார்கள். 1943 மே மாதம் முதல் அக்டோபர் மாதம் முடிய ஸ்வாமிகள் திருவானைக்கா மடத்திலேயே தங்கியிருந்தார்கள். மே மாதம் 20-ஆம் தேதி பொன்மலையிலுள்ள சிஷ்யர்களின் அழைப்பிற்கிணங்கி அங்குள்ள பஜனை மடத்திற்கு ஸ்வாமிகள் விஜயம் செய்தார்கள். அன்றிரவு ஸ்வாமிகளுக்கு அங்கு ஓர் பெரிய ஊர்வலம் நடைபெற்றது. அவ்வருட சங்கர ஜயந்தி, வியாஸ பூஜை, நவராத்திரி இவ்விழாக்களெல்லாம் திருவானைக்கா மடத்திலேயே மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டன. அக்காலத்தில் திருச்சியிலிருந்தும், வெளி ஊர்களிலிருந்தும் ஏராளமாக மக்கள் திருவானைக்காவில் கூடி ஸ்வாமிகளையும், அவர்களின் பூஜையையும் தரிசித்துக் கொண்டனர். அவ்வருடத்திய முத்ராதிகாரிகளின் வருடாந்தரச் சம்மேளனம் திருவானைக்கா மடத்தில் நடைபெற்றது. ஆயிரம் முத்ராதிகாரிகளுக்கு மேல் தஞ்சை ஜில்லாவிலிருந்தும், பக்கத்து ஜில்லாக்களிலிருந்தும் இந்தச் சம்மேளனத்திற்காக அங்கு வந்து கூடினர். முத்ராதிகாரிகளின் கடமையைப் பற்றி ஸ்வாமிகள் அந்தச் சம்மேளனத்தில் பேசியதுடன், முத்ராதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பேட்டி அளித்து, அவர்கள் நடந்து கொள்ள வேண்டியதைப்பற்றி அவர்களிடம் சில வார்த்தைகள் கூறி அவர்களுக்கு ஊக்கத்தை அளித்தார்கள். அச்சமயத்தில் பகல், இரவு இரு நேரங்களிலும் சிறிதுகூட ஓய்வின்றி ஸ்வாமிகள் தர்மப் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்ததைக் கண்டு யாவரும் ஆச்சரியமடைந்தார்கள். நவராத்திரி விழா முடிந்தவுடன் 1943 அக்டோபர் 25-ஆம் தேதி ஸ்வாமிகள் **உத்தமர் கோவிலுக்கு** விஜயம் செய்தார்கள். பின்னர் **பூதலூர்**, **ரங்கநாதபுரம்** மார்க்கமாக, தஞ்சை ஜில்லாவை அடைந்தார்கள். ரங்கநாதபுரத்தில் ஸ்வாமிகளால் **திராவிடக் கவி மணி** என்னும் பட்டம் அளித்துக் கௌரவிக்கப்பட்ட வித்வான் **வே. முத்துஸ்வாமி ஐயர், எம். ஏ., எல். டி.** ஸ்வாமிகளின் மீது தமிழில் கவிதைகள் இயற்றி,

அவைகளைப் பக்தர்கள் முன்னிலையில் பாடிப் பக்தர்களை மகிழ்வுறச் செய்தார். 1943 டிசம்பர் மாதம் 11-ஆம் தேதி ஸ்வாமிகள் கும்பகோணத்திற்கு விஜயம் செய்து அம்மாதம் முழுவதும் தஞ்சை ஜில்லாவிலேயே யாத்திரையை நடத்திக்கொண்டிருந்தார்கள்.

**திருவிடைமருதூரில் நடைபெற்ற சிவாலயத் திருப்பணி**

திருவிடைமருதூரில் வீரசோழன் ஆற்றங்கரையில் பழைய சிவாலயம் ஒன்று பல வருடங்களாகப் பழுதடைந்தமை நம் ஸ்வாமிகளின் கவனத்திற்கு வந்தது. அவ்வாலயத்தைச் சீராக்கி அன்றாடம் பூஜைகள் நடைபெறச் செய்யவேண்டுமென்றும், ஆற்றின் கரையில் அமைந்திருப்பதால் நீராட வரும் பக்தர்களின் வழிபாட்டிற்கு அவ்வாலயம் பெரிதும் உதவுமென்றும் ஸ்வாமிகள் கருதினார்கள். ஸ்வாமிகளின் இக்கருத்தை நிறைவேற்றி வைக்க ஸ்வாமிகளிடம் ஒப்பற்ற பக்திகொண்டவரும், அவ்வூர் வாசியும், சென்னைப் பிரபல பிரசுரகர்த்தர்களான B. G. பால் அண்டு கம்பெனியின் உரிமையாளருமான **ஸ்ரீ D. பால சுப்ரமணிய ஐயர்** முன்வந்து அவ்வாலயத் திருப்பணிகளைத் தமது சொந்தச் செலவில் செய்து முடித்தார். **ஸ்ரீ விசாலாக்ஷி சமேத ஸ்ரீவிச்வநாதர்** எனப் பெயர் பூண்ட அந்த ஆலயத்திற்கு ஜீர்ணோத்தாரண கும்பாபிஷேகம் சுபானு வருஷம் கார்த்திகை மாதம் 16-ஆம் தேதி (1-12-1943) புதன்கிழமை ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் நடைபெற்றது. அந்த ஆலயத்தின் நித்திய பூஜைக்கு உதவுமாறு ஐயர் அவர்களது விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் அவர்களது மனைவியார் **ஸ்ரீமதி சுந்தராம்பாள் அம்மாள்** இரண்டு வேலி நஞ்சை புஞ்சை நிலத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் விருப்பப்படி ட்ரஸ்டாக ஏற்படுத்தியுள்ளார். இந்த ட்ரஸ்டு வருமானத்திலிருந்து ஒரு பகுதி கோவிந்தபுரம் ஸ்ரீ போதேந்திர ஸ்வாமிகள் அதிஷ்டானத்திற்கும், திருவிசநல்லூர் ஸ்ரீ அய்யாவாள் மடத்திற்கும் நிவேதனத்திற்கென வழங்கப் பெற்று வருகிறது.

இந்தக் கும்பாபிஷேகம் முடிவு பெற்றவுடன் பீடத்தின் அதிஷ்டான தெய்வமான ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்பிகையின் ஆலய கும்பாபிஷேகத்தை நடத்தவேண்டியதற்காகக் கும்பகோணத்திலிருந்து ஸ்வாமிகள் காஞ்சீபுரத்திற்கு யாத்திரையை மேற்கொண்டார்கள்.

## ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்பிகையின் ஆலய கும்பாபிஷேகம்

1944-ஆவது வருடம் ஜனவரி மாதம் துவக்கத்தில் கும்ப கோணத்திருந்து புறப்பட்டு, அம்மாதம் 27-ஆம் தேதி **காஞ்சீபுரத்தை** அவர்கள் அடைந்தார்கள். அன்று காஞ்சி பொதுமக்களால் அவ்வூர் ஸர்வ தீர்த்தக் கரையில் முக்தி மண்டபத்தில் ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பு அளிக்கப் பட்டது. பரம்பரையாக மடத்தின் நிர்வாகத்திலிருந்து வரும் ஸ்ரீகாமாக்ஷி அம்பிகையின் ஆலயத்தில் சில பகுதிகள் காலத்தின் மிகுதியினுல் ஜீரணம் அடைந்திருந்தது. அவற்றைச் சீர்திருத்தம் செய்ய ஸ்வாமிகள் கட்டளை பிறப்பித்தார்கள். அதன்படி மடத்திலிருந்து ரூபாய் ஐம்பதினுயிரத்திற்கு மேல் செலவிடப் பட்டது. ஆதிகாலந்தொட்டு நம் நாட்டு மன்னர்கள் பலர் இந்த ஆலயத் திருப்பணியை நடத்தியுள்ளார்கள். விஜயநகர சாம் ராஜ்யத்தின் சக்ரவர்த்தியாக இருந்த **ஹரிஹர மன்னன்** காலத்தில் சாலிவாகன சகம் 1315-ல் (கி. பி. 1392) இந்த அம்பிகையின் ஆலயத்தின் கர்ப்பக்கிருக விமானத்திற்குத் தங்கத் தகடு பதித்துக் கும்பாபிஷேகமும் நடை பெற்றதெனச் சிலா சாஸன இலாகாவினர் சேகரித்துள்ள பட்டயங்களிலிருந்து புலனு கிறது. சென்ற 1840-ஆவது வருடம் விகாரி தை மாதம் 10-ஆம் தேதி புதன்கிழமை ஸ்ரீ காமகோடி பீடத்தின் 64-ஆவது ஆசார்யர்களாக அமைந்திருந்த **ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி** ஸ்வாமிகளால் இந்த ஆலயத்திற்கு மிகச் சிறப்புடன் **கும்பாபிஷேகம்** செய்து வைக்கப்பட்டிருக்கிறது. அவர்களே அக் காலத்தில் திருவானைக்காவல் **ஸ்ரீஅகிலாண்டேச்வரி அம்மனுக்கும் தாடங்கப் பிரதிஷ்டையும்** செய்திருக்கிறுர்கள். அவர்கள் தம் பூர் வாச்சிரமத்தில் தஞ்சை நாயக்கர் மன்னர்களிடம் அமைச்சராக அமைந்திருந்த **கோவிந்த தீக்ஷிதரின்** பரம்பரையைச் சார்ந்த கன்னட ஸ்மார்த்த பிராம்மண வகுப்பைச் சார்ந்தவர்கள்.

நம் ஸ்வாமிகளின் கட்டளைப்படி 1944 பிப்ரவரி 7-ஆம் தேதி சுபானு வருடம் தை மாதம் 25-ஆம் தேதி திங்கட்கிழமை காலை மீன லக்கினத்தில், இந்த ஆலயக் கும்பாபிஷேகத்திற்கு நாள் குறிப்பிட்டு முன்னேற்பாடுகளெல்லாம் ஸ்வாமிகளின் நேற் பார்வையில் நடைபெற்று வந்தன. இந்தக் காமாக்ஷி ஆலயமே ஸ்ரீ சக்ர வடிவமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதெனக் கூறப் படுகிறது. இங்குச் சாந்நித்யம் பெற்று விளங்கும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின்முன், **ஆதி சங்கர பகவத் பாதர் ஸ்ரீ சக்ர பிரதிஷ்டையைச்** செய்துள்ளார்கள். இன்றைக்கும் அம்பிகைக்குச் செய்யப்படும்

அர்ச்சனை (குங்கும அர்ச்சனை) இந்த ஸ்ரீ சக்ரத்திலேயே செய்யப் பட்டு வருகிறது. இவ்வாலயத்தில் காணப்படும் சந்நிதிகள் பின் வருமாறு :—

1. தவக்கோலத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ காமாக்ஷி அம்பிகை.
2. சிஷ்யர்களுடன் புருஷ ஆகிருதியில் வீற்றிருக்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்.
3. கர்ப்பக்கிருகத்திற்கு வலப்புறம் அமைந்துள்ள ரூப லக்ஷ்மி சமேத கள்ளர் பெருமாள் (மகாவிஷ்ணு) இந்தச் சந்நிதி 108 வைணவத்திருப்பதிகளில் ஒன்ருகும்.
4. கச்சிக் காமகோட்டத்தின் காவலனுகிய சாஸ்தா (ஐயப்பன்).
5. ஸ்ரீ ச்யாமளா, ஸ்ரீ வராகி, ஸ்ரீ அன்னபூரணி, ஸ்ரீ மந்திர பூரணி.
6. ஸ்ரீ அர்த்தநாரீச்வரர்.
7. பஞ்ச தீர்த்தக் கரையில், நின்ருன், கிடந்தான், இருந்தான் என்னும் பெயர் பெற்று விளங்கும் மூன்று மூர்த்திகள்.

இந்த ஆலயத்திலிருந்து தஞ்சைக்கு மாற்றப்பட்ட பங்காரு காமாக்ஷி அம்பிகையின் சந்நிதி இரண்டு நூற்ருண்டுகளுக்கு மேலாகக் காலியாகவே இருந்து வந்தது. அங்கு, இரண்டு தங்கப் பாதுகைகளை ஸ்வாமிகள் பிரதிஷ்டை செய்தார்கள்.

சுபானு, தை மாதம் 18-ஆம் தேதி திங்கட்கிழமை அன்று, எல்லாச் சந்நிதிகளிலும் கலாகர்ஷணம் செய்து, அன்றே யாக சாலையும் ஆரம்பிக்கப்பட்டது. வேதக்கலையிலும் ஆலய வைதிக பூஜையிலும் தேர்ச்சி பெற்ற அந்தணர்கள் நூற்றுக்கணக்காக அவ்விடம் கூடி, யாகசாலையின் பூர்வாங்க வேள்விகளையெல்லாம் சாஸ்திரங்களில் கூறியவாறு மிகச் சிறப்புடன் நடத்தி வைத்த னர். அதற்கடுத்த திங்கட்கிழமை அன்று, சுப முகூர்த்தமான மீன லக்னத்தில் கும்பாபிஷேகம் மிகவும் சிறப்புற நடைபெற் றது. அம்பிகையின் விமான கலசத்திற்கு ஸ்வாமிகளே தமது திருக்கரங்களால் அபிஷேகம் செய்தார்கள். அன்று நமது நாட்டி லுள்ள பிரபல தேவஸ்தானங்களான திருவானைக்கா, சிதம்பரம் ஆவுடையார்கோவில், இராமேச்வரம் முதலான ஆலயங்களிலிருந்து பிரசாதம், புஷ்ப மாலை முதலான மரியாதைகளை ஆலய பூஜகர் களும், தேவஸ்தான அதிகாரிகளும் கொண்டுவந்து ஸ்வாமிக ளிடம் சேர்ப்பித்தனர். இராமேச்வரம் தீர்த்தவாசிகள் அவ்வூரில் புனிதமாக விளங்கும் கோடி தீர்த்தத்தை அம்பிகையின் கும்பாபி ஷேகத்திற்கென முன்னரே கொணர்ந்திருந்தனர். புத்தகயா

மடம் ஸ்ரீ ஹரிஹர மகந்த், பம்பாய் மாகாணத்திலுள்ள ஸ்ரீ சங்கேச்வர மடம், பம்பாய் கோகுல்நாத்ஜீ வல்லபாசாரிய மகாராஜா, சிதம்பரம் ஸ்ரீ ஸபாநாயகர் ஆலயப் பொது தீக்ஷிதர்கள், அகோர சிவாசாரியர் மடம், தர்மபுரம் ஆதீனம், திருநாரையூர் ஆதீனம் இவ்விடங்களிலிருந்து பிரதிநிதிகள் பத்திரிகைகளுடனும், காணிக்கைகளுடனும் வந்திருந்து கும்பாபிஷேகத்தைச் சிறப்பித்தனர். உடையார்பாளையம், விஜயநகரம், வேங்கடகிரி, காளஹஸ்தி, கத்வால் முதலான சம்ஸ்தானங்களிலிருந்தும், சூணும்பட்டு ஜமீன்தார், அலங்காநத்தம் மிட்டாதார், ஐதராபாத் சம்ஸ்தானத்திலுள்ள ஸ்ரீ ராஜா ராம் ராய் முதலான பிரமுகர்களிடமிருந்தும் காணிக்கைகள் அன்று சேர்ப்பிக்கப்பட்டன. தஞ்சை ஜூனியர் பிரின்ஸ் ஸ்ரீ பிரதாபசிம்ம ராஜா நேரில் வந்து ஸ்வாமிகளுக்குப் பொன்னுடை சூட்டி அவர்களை வழிபட்டார். இராமநாதபுரம், மதுரை, சென்னை, தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை, தென்னூர்க்காடு, வடஆர்க்காடு, செங்கல்பட்டு, சித்தூர், நெல்லூர் இவ்விடங்களிலுள்ள சிஷ்ய கோடிகள் பல்லாயிரக்கணக்காக வந்து காஞ்சியில் கூடி அம்பிகையையும், குருநாதரையும் தரிசித்துக் கொண்டனர். தஞ்சை ஜில்லாவிலிருந்து வந்தவர்கள் தீபத்திற்கும், ஹோமத்திற்கும் எனத் தங்கள் வீடுகளில் தயாரித்த பசு நெய்யை ஏராளமாகக் கொண்டுவந்து சேர்த்தார்கள். ஆந்திர நாட்டுப் பக்தர்களும் நூற்றுக்கணக்காக அங்குக் கூடிக் கும்பாபிஷேகத்தைத் தரிசித்துக்கொண்டனர். மேலே கூறப்பட்ட பக்தர்கள் செலுத்திய காணிக்கைகளைத் தவிர காஞ்சீபுரம் பட்டு–ஜவுளி வியபாரிகள் ரூ. 4052-ம், மடத்திற்கு அவ்வப்போது தாராளமாகக் கைங்கர்யம் செய்து வரும் எசையனூர் கோகிலத்தம்மாள் என்னும் பாட்டி ரூபாய் 2500–ம் ஸ்வாமிகளிடம் நெருங்கிய தொடர்புகொண்டு மடத்திற்கு விசேஷ பணிகளைப் புரிந்து வந்த பாலக்காடு டாக்டர் சங்கர ஐயரது பாரியை அன்னபூரணி அம்மாள் ரூபாய் 5500-ம், இவ்விதம் ஆயிரக்கணக்கில் பக்தர்கள் கும்பாபிஷேகச் செலவிற்கெனக் காணிக்கை அளித்தனர். திருநெல்வேலியில் ஓர் சிறிய கடைவைத்துவியாபாரம் செய்து வரும் அன்பர் ஒருவர் ஏழமையின் காரணமாகத் தாராளமாக இப்பணிக்கு உதவ முடியவில்லையேயென வருந்தி, ஸ்வாமிகளுக்கு நீண்டதொரு கடிதத்தை எழுதி, தமது காணிக்கையாக ஒரு ரூபாயை மணியார்டர் மூலம் அனுப்பி வைத்திருந்தார். அவ்விதம் அவர் மன முருகித் தந்த காணிக்கையை ஸ்வாமிகள் மிகவும் பாராட்டி அதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார்கள்.

இக்கும்பாபிஷேகத்தைப் பற்றி முன் கூட்டி எவ்வித விளம்பரமும் செய்யப்படவில்லையாயினும், அன்று ஆலயத்தினுள் மாத்திரம் சுமார் 50,000 பக்தர்கள் கூடிக் கும்பாபிஷேகத்தைத் தரிசித்தனர். கும்பாபிஷேகம் முடிவடைந்தவுடன் பக்தர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க ஆவலுள்ளவர்களாகக் காத்திருந்தனர். அப்பொழுது ஸ்வாமிகள் உயரமுள்ள ஓர் மண்டபத்தின் மீது ஏறி ஒரு மணி நேரத்திற்கு மேல் அங்கு நின்று யாவருக்கும் தரிசனம் அளித்தார்கள். எல்லோரையும் தம் கருணை மிகுந்த பார்வையினால் ஸ்வாமிகள் அனுக்ரகிக்க, ஸ்வாமிகளுக்கு அறிமுக மானவர்கள் யாவரும் அப்பெருங்கூட்டத்தில் தங்களை 'ஸ்வாமிகள் நேரில் கண்டுகொண்டுவிட்டார்கள்,' என மன மகிழ்ச்சி அடைந் தனர். கும்பாபிஷேகத் தீர்த்தத்தை ஸ்வாமிகளே தம் திருக் கரத்தினால் பக்தர்கள் மீது தெளித்தார்கள். அப்பொழுது மக்கள் பரவச மடைந்து ஜயகோஷத்துடன் ஸ்வாமிகளைப் போற் றினர். அன்று காமாக்ஷி அம்பிகையையும், குருநாதரையும் ஒருங்கே தரிசித்துப் பக்தகோடிகள் பரவசமடைந்தார்கள். யாவருக்கும் மடத்தில் அன்னம் அளிக்க ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. இந்தக் கும்பாபிஷேகம் மடத்தின் சரித்திரத் திலேயே ஓர் முக்கியமான சம்பவமாகும். இந்த வைபவத்தை யொட்டி மூக பஞ்சசதி என்னும் ஸ்ரீமூககவியால் இயற்றப்பட்ட 500 ஸ்லோகங்களைக் கொண்ட ஓர் உயர்ந்த நூலைக் காமகோடி கோசஸ்தானத்தினர் வெளியிட்டார்கள்.

கும்பாபிஷேகம் முடிவுற்றதும் ஸ்வாமிகள் காஞ்சீபுரத்தில் **ஸ்ரீ கைலாசநாதர் ஆலயத்திலும், ஸ்ரீ ஏகாம்ரநாதர் ஆலயத்திலும்** ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டார்கள்.

கும்பாபிஷேகத்தை அடுத்து, மண்டலாபிஷேகம் 1944, மார்ச் மாதம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இந்த வைபவங்களுக்குப் பின்னர் ஸ்வாமிகள் செங்கற்பட்டு ஜில்லாவில் **திருவள்ளூர்** முதலான இடங்களுக்கும், வடஆர்க்காடு ஜில்லாவில் கிராமங்கள் சிலவற்றிற்கும் விஜயம் செய்து, அவ்விடங்களில் பக்தர்கள் அளித்த வழிபாடுகளை எல்லாம் ஏற்றுக்கொண் டார்கள்.

### அம்பி என்னும் அம்பிகாபுரம்: கம்பன் பிறந்த நாட்டைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி

1944 மார்ச் மாதம் 23-ஆம் தேதி ஸ்வாமிகள் காஞ்சீபுரத் திற்கு 4 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **அம்பி** என்னும் கிராமத் திற்கு விஜயம் செய்தார்கள். இந்தக் கிராமம் பதினோராவது நூற்

ருண்டில் **ஸ்ரீ விஜயகண்ட கோபால சோழ** மன்னனால் ஒவ்வொரு நாளும் நூற்றெட்டு அந்தணர்களுக்கு அன்னதானம் செய்வதற் கெனத் தானமாக அளிக்கப்பெற்றதாகும். இந்தத் தான சாஸனம் ஓர் தாம்பிர பட்டயமாக அமைந்துள்ளது. இந்தச் சாஸனத்தையும் மடத்தின் சம்பந்தமான மற்றும் பல சாஸனங் களையும் திருவனந்தபுரத்தில் சிற்ப இலாகா அதிகாரியாக இருந்த **ஸ்ரீ து. அ. கோபிநாத ராவ்** என்பவர் ஆராய்ச்சியுடன் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அந்தச் சாஸனத்தில் இவ்வூரை **அம்பிகா புரமெனக்** குறிப்பிடப்பட்டுள்ளது. காஞ்சீ புராணத்திலும் அம்பிகாபுரமென்ற இவ்வூரின் பெயர் காணப்படுகிறது. இவ்வூர் சிவாலயத்திலுள்ள மகாலிங்கத்திற்கு **அம்பிகாபதி** என்னும் பெயர் வழங்கி வருகிறது.

அம்பி என்னும் இச்சிற்றூர் வேகவதி என்னும் பெயர் பெற்று விளங்கும் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது. அந்த ஆற்றில் தண்ணீர் வற்றிய கோடைக்காலத்திலும், தோண் டப்பட்ட ஊற்றுக்களின் வழியே, தண்ணீர் பெருகிப் பாய்ந்து வருகிறது. தற்காலம் அந்தக் கிராமத்தில் பதினான்கு காணி நிலம் மட்டுமே மடத்தின் வசம் உள்ளது. காமகோடி பீடத்தின் குருபரம்பரையை அலங்கரித்த ஆசாரிய ஸ்வாமிகள் ஒருவரது பிருந்தாவனம் (ஸமாதி) இவ்வூரில் விளங்கி வருகின்றது. அந்தப் பிருந்தாவனம் அமைந்துள்ள விசாலமான ஓர் இடத்தை அவ்வூர் மக்கள் இன்றும் **சந்நியாசி மேடு** என்று கூறுகின்றனர். அவ்வூர் அக்ரஹாரத்தின் நடுவில் ஒரு பெரிய தோட்டம் அமைந் துள்ளது. அந்த இடத்தை ஊர் மக்கள் **மடம்** என்றே குறிப் பிடுகிறார்கள். ஆகையால் அவ்விடத்தில் ஒரு காலத்தில் மடம் ஒரு பெரிய கட்டிடமாக அமைந்திருத்தல் வேண்டுமெனவும், குருபரம்பரையின் ஆசாரியர்கள் பலர் அவ்விடம் தங்கியிருந் திருக்கக் கூடுமெனவும் ஊகிக்க இடமிருக்கிறது.

மேலும் இந்தக் கிராமத்தைக் கம்பனுடன் சம்பந்தப்படுத்தி ஒரு நூதன ஆராய்ச்சியை, பல ஆண்டுகள் கம்ப ராமாயணத்தின் ஆராய்ச்சியில் திகழ்ந்து பிரசங்கங்கள் புரிந்துவந்த வயது முதிர்ந்த புலவர் ஒருவர், ஸ்வாமிகளிடம் வெளியிட்டார். அவரது ஆராய்ச்சியின் கருத்து பின் வருமாறு :—

"காஞ்சீபுரத்தில் கோவில் கொண்டருளும் ஸ்ரீ ஏகாம்ர நாதர் **கம்பநாடர்** என்னும் சொல்லாலும் குறிக்கப்படுவதால், கம்பர் காஞ்சி மண்டலத்தில் பிறந்தவராகவே இருத்தல் வேண்டும். ஏகம்பன் என்னும் சொல் கம்பன் என

மருவியது. காஞ்சி மண்டலத்தில் கம்பா என்னும் ஆறு பாய்வதால் அந்நாட்டிற்கு கம்ப நாடு என்னும் பெயர் அமைந்துள்ளது. அம்பிகாபுரத்தின் சிவாலயத்தில் அமைந்துள்ள ஈசனது திருநாமம் அம்பிகாபதி என்றிருப்பதால், அத் திருநாமத்தையே கம்பர் தமது மைந்தனுக்கு இட்டிருக்கலாம். கம்பநாட்டாழ்வார் என ஒரு நாட்டின் பெயரால் அவர் அழைக்கப்படுவதால், பிற நாட்டாரே அவரை அப்பெயர் கொண்டு அழைத்திருத்தல் வேண்டும். திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப வள்ளல் அவரைப் போற்றி அவருக்கு ஆதரவு அளித்து வந்தார். கம்பர் அவருக்கு உயிர்த் தோழராகப் பல வருடங்கள் அவ்வூரிலேயே வாழ்ந்து வந்திருக்கிறார். தேரழுந்தூர், நாட்டரசன் கோட்டை இவ்விடங்கள் கம்பரது வாழ்க்கையில் இணைக்கப் பெற்றிருப்பதால் இவ்விடங்களிலும் கம்பர் சில காலம் தங்கியிருக்கக் காரணமுண்டு. இப்பிற நாட்டினர் யாவரும் கம்பரைக் கம்பநாடர் என அவரது நாட்டின் பெயரைக் குறித்து அழைத்திருப்பார்கள்."

நூதனமான இந்த ஆராய்ச்சியை ஸ்வாமிகளிடம் அந்தப் புலவர் தெரிவிக்க, ஸ்வாமிகள் இக் கருத்துக்கள் யாவும் மிகப் பொருத்தமாக அமைந்துள்ளனவென்றும், இவைகளைப் புலவர்களது ஆழ்ந்த ஆராய்ச்சிக்கு விடவேண்டுமென்றும் கூறினார்கள். மேலும், ஸ்வாமிகள் கூறுகையில், அவர்களது ஆராய்ச்சியின் முடிவு எவ்விதம் அமைந்தபோதிலும். கம்பரது ஊர் மடத்தின் ஊராக அமைந்திருக்குமானால் அது மடத்திற்கு ஓர் பெருமையைத் தருமென மொழிந்தார்கள்.

**சித்தூர் ஜில்லாவில் யாத்திரை தொடக்கம்: ராஜுக்களது நாட்டிற்கு விஜயம்**

1944 மே மாதம் 11-ஆம் தேதி ஸ்வாமிகள் அம்பியிலிருந்து புறப்பட்டு, அதற்கு வடக்கே 40 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **மகேந்திரவாடி** என்னும் ஊருக்கு விஜயம் செய்தார்கள். அவ்விடமிருந்து யாத்திரை தொடங்கி 30 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **சோழங்கிபுரத்தில்** மே 16-ஆம்தேதி வரை தங்கினார்கள். 17-ஆம் தேதி **ரமணராஜு கண்டிகை** என்னும் ஊருக்கு விஜயம் செய்து, பின்னர் **ராமகிருஷ்ணராஜபேட்டை, குமரமெட்டா, நரசுராஜ கண்டிகை, துச்சுலி** முதலான கிராமங்களுக்கு விஜயம் செய்தார்கள். இவ்விடங்களிலெல்லாம் பெரும்பாலும்

ராஜுக்கள் என்னும் சமூகத்தினர் வசித்து வருகின்றனர். இந்த ராஜுக்கள் **விஜய நகரத்தில்** அரசாண்ட **கிருஷ்ணதேவராயரது** மரபைச் சார்ந்தவர்களெனக் கூறப்படுகிறது. இவர்கள் நல்ல கல்வி அறிவு படைத்தவர்களாக விளங்கிவருகின்றனர். எப்பொழுதுமே எளிய வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். அநேகமாக இவர்கள் கூரை வீடுகளிலேயே வசிக்கின்றனர். தங்கள் வீடுகளை மிகவும் சுத்தமாக வைத்துக்கொள்கிறார்கள். அவர்கள் வசிக்கும் வீதிகளில் அசுத்தமே காணப்படுவதில்லை. சோளிங்கருக்கருகில் **போடகொண்டா** என்னும் ஊரில் இவர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கும் பெரிய தனகாரர் ஒருவர் இருக்கிறார். அவரிடம் இந்தச் சமூகத்தினருக்கு நல்ல மதிப்பு இருந்து வருகின்றது. இவர்கள் வசித்துவரும் இடங்களெல்லாம் மலையடிவாரங்களைச் சார்ந்தவைகளாகும். மலை ஊற்றுக்களால் தண்ணீர் வசதியும் அங்கு நன்கு அமைந்துள்ளது. ஸ்வாமிகளை இந்தச் சமூகத்தினர் யாவரும் தங்கள் ஊர்களுக்கு அழைத்துச் சென்று, ஸ்வாமிகளின் பூஜைக்கென ஆங்காங்கு பர்ணசாலைகள் அமைத்துக் கொடுத்து, அவர்களது விஜயத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். ஸ்வாமிகளுக்கு ஒவ்வொரு ஊரிலும் ஊர்வலமும் நடத்தி வைத்தார்கள்.

*1944* மே மாதம் இறுதியில் ஸ்வாமிகள் **அத்திமாஞ்சேரிப் பேட்டை** என்னும் ஊரில் சுமார் ஒரு வாரம் தங்கியிருந்தார்கள். அவ்வூரில் வசிக்கும் மக்களில் பெரும்பாலோர் செங்குந்தர்கள். இவர்கள் யாவரும் தெலுங்குச் செங்குந்தர்களாவர். **வங்கனூர்** என்னும் ஊரில் தமிழ்ச் செங்குந்தர்களும் வாழ்ந்துவருகின்றனர். ஸ்வாமிகள் **வீரகாவேரி ராஜபுரத்தை** அடைந்தபொழுது, நூற்றுக்கணக்கான ஹரிஜனங்கள் சேரிகளுக்கடுத்தாற்போல் கூட்டம் கூட்டமாக நின்று, தேங்காய் உடைத்து, கர்ப்பூரம் கொளுத்தி ஸ்வாமிகளை வழிபட்டார்கள். ஸ்வாமிகள் சுமார் அரை மணி நேரம் அவ்விடம் தங்கி, அவர்களது நலனைப்பற்றியும், வாழ்க்கைத் தரத்தைப் பற்றியும், வழிபடும் தெய்வங்களைப் பற்றியும், நாகரிகத்தைப் பற்றியும், அவர்கள் பேசும் பாஷையைப் பற்றியும் பல கேள்விகள் கேட்டு, மிகுந்த அக்கறையுடன் அவர்களது நிலையையெல்லாம் அறிந்து, பின்னர் அவர்களை ஆசீர்வதித்து, யாவருக்கும் விபூதிப் பிரசாதம் வழங்கினார்கள்.

**கைலாஸ கோனே நீர்வீழ்ச்சியில் ஸ்நானம்—ராமகிரிமலை தரிசனம்**

*1944* ஜூன் மாதம் 2-ஆம் தேதி வெள்ளிக்கிழமை, ஸ்வாமிகள் சித்தூர் ஜில்லா நகரிக்கருகிலுள்ள **நாராயணவனத்**

திற்கு விஜயமானார்கள் அன்று ஸ்வாமிகள் அவ்வூர் சிவாலயத்தில் தங்கி, தம் நித்ய பூஜைகளை முடித்துக் கொண்டார்கள். மறு நாள் அதிகாலையில் அவர்கள் அவ்விடமிருந்து புறப்பட்டு, 8 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள கைலாஸகோனை நீர்வீழ்ச்சிக்கு விஜயம் செய்தார்கள். அங்குக் காணப் பெறும் மலை ஒரு குதிரை குளம்பின் வடிவத்தில் அமைந்துள்ளது. மலையின் அமைப்பையும் அதன் மீது காணும் அடர்ந்த கானகத்தின் அழகையும் சொற்களால் வர்ணிக்க இயலாது.

அம்மலையின் ஒரு மூலையில் மிகுந்த உயரத்தினின்று ஓர் நீர் வீழ்ச்சி விழுந்தவாறே இருக்கிறது. அது அதிகக் கனமின்றியும், வேகமின்றியும் இருப்பதால் யாவரும் வெகு எளிதில் பயமின்றி அங்கு நின்று நீராடுவதற்கு வசதியுள்ளதாக இருக்கிறது. வருடம் முழுவதும் அந்த நீர்வீழ்ச்சியில் தண்ணீர் பெருகிக்கொண்டே இருக்கிறது. இதற்குச் சற்றுத் தூரத்தில், வேகமாக விழும் இரண்டு நீர்வீழ்ச்சிகளும் அமைந்துள்ளன. நீர்வீழ்ச்சிக்கு 100 மீட்டர் தூரம் வரை மோட்டார் வண்டிகள் சென்று வர நல்ல பாதை அமைந்துள்ளது. அன்று காலை ஸ்வாமிகள் அந்தக் கைலாசகோனை நீர்வீழ்ச்சியில் ஸ்நானம் செய்துவிட்டு, தம் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அதற்கு அடுத்த குகைகளில் அமைந்துள்ள மகாலிங்கத்தையும், அம்பிகையையும், வீர பத்ர சுவாமியையும் தரிசித்துக் கொண்டார்கள்.

ஸ்வாமிகள் அன்றே, அவ்விடமிருந்து கிழக்கே 12 கிலோ மீட்டர் தூரமுள்ளதும், அப்பக்கத்திலேயே மிகப் பெரியதாய் அமைந்துள்ளதுமான ஸ்ரீராமகிரி மலையை அடைந்தார்கள். அங்கு நீர்வீழ்ச்சி எதுவும் காணப்படவில்லையாயினும், மலையின் அடிவாரத்தில் தண்ணீர் பல ஊற்றுக்களாகக் கிளம்பி, ஓர் சிறிய ஆறுகப் பெருகுகின்றது. அது மற்றொரு புறமுள்ள வேறோர் ஊற்றுடன் கலந்து பின்னர் சற்றுப் பெரிய ஆறாக மாறுகின்றது. இவ்விதம் வருடம் முழுவதும் அங்கு நீர்வளம் பெருகிக் கொண்டே இருக்கிறது. ஸ்வாமிகள் இந்த ஊற்றுப் பெருக்கிலும் நீராடி, அதன் கரையில் அமைந்துள்ள மரகதவல்லி சமேத ஸ்ரீ வாலீச்வரரையும், மற்றும் பத்ர காளி, பைரவ மூர்த்திகளையும் தரிசித்துக் கொண்டார்கள். சாதாரணமாக இவ்விடங்களில் மனிதர்களின் நடமாட்டமே காணப்படுவதில்லை. ஆலய மண்டபத்தின் மேல் தளத்தில் புல்லும் செடிகளும் அடர்த்தியாக முளைத்திருக்கின்றன. மலை மீது ஓர் ஆலயமும், தடாகமும் அமைந்துள்ளன. மலையின் உச்சியை அடைவதற்கே சுமார் 5 மணி நேரம் பிடிக்குமாதலாலும்

அன்று வெயிலும் மிகக் கடுமையாயிருந்ததாலும் மாலை பிரதோஷ பூஜையை அடுத்த ஊராகிய **நாகலாபுரத்தில்** நடத்த வேண்டியிருந்ததாலும், அந்த மலை மீது ஸ்வாமிகள் அன்று ஏறவில்லை. ஆனால் சற்று உயரத்தில் ஒரு குன்றின் மீது அமைந்துள்ள முருகன் ஆலயத்தை மாத்திரம் ஸ்வாமிகள் அன்று தரிசித்துக் கொண்டார்கள். இம்மலைத்தொடரை ஒட்டிப் பரவியிருக்கும் **காளஹஸ்தி** மலையானது அவ்விடத்திலிருந்து சுமார் 50 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது.

அன்று மாலை ஸ்வாமிகள் **ராமகிரிக்கு** மூன்று கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **நாகலாபுரம்** என்னும் சிற்றூருக்கு விஜயம் செய்தார்கள். அங்குத் தெலுங்கு செங்குந்தர்களும் இதர குடிமக்களும் ஸ்வாமிகளை மேள வாத்தியத்துடன் வரவேற்று ஊர்வலத்துடன் ஜாகையில் கொண்டுவந்து விட்டார்கள். ஸ்வாமிகளின் அன்றைய பிரதோஷ பூஜையானது மிகச் சிறப்பாக நடைபெற்றது. பக்தர்கள் நூற்றுக் கணக்கில் அங்குக் கூடி ஸ்வாமிகளின் பூஜையைத் தரிசித்துக் கொண்டார்கள். பக்கத்து ஜில்லாக்களிலிருந்தும் பக்தர்கள் பலர் ஸ்வாமிகளைத் தரிசிக்க அவ்விடத்திற்கு வந்திருந்தார்கள்.

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை**

வேதத்தை ஆதாரமாகக் கொண்டதே நமது மதம். அதன் காரணமாகவே இது வைதிக மதமெனக் கூறப்படுகிறது. தற்காலத்தில் வேதத்தை அத்யயனம் செய்துள்ள பலருக்கு அதன் பொருளும், மந்திரங்களில் குறித்த காரியங்களுக்கு உபயோகிக்கும் விதிகளும் (ப்ரயோகம்) புலப்படுவதில்லை. இவைகளை அறிந்தவர்களின் தொகையும் வரவரக் குறைந்துகொண்டே போகிறது. வேதத்தைப் பயில மாணவர்கள் முன்வருவதில்லை. அதற்குப் பெற்றோர்களும் ஒருவாறு காரணமாயிருக்கிறார்கள். இந்த வேதக் கலையில் புலமை பெற்றவர்களிடம் வருடத்திற்கு ஒருவராவது இக்கலையைக் கற்று முழுவதும் தேர்ச்சி பெற்றவராக வெளிவர வேண்டுமென்பது ஸ்வாமிகளின் விருப்பம். சில வருடங்களுக்கு முன்பிருந்தே, இவ்விதம் படித்து நல்ல தேர்ச்சி பெற்ற வித்வான்களுக்கு மடத்தில் வருடாவருடம் ஒரு பரீக்ஷை வைத்து, அதில் தேறியவர்களுக்கு ரூபாய் 150 சம்மானமும், காஷ்மீர் சால்வையும், தங்க மோதிரமும், **தர்மக்ஞ** என்னும் பட்டமும் அளித்துவரப்படுகின்றன. இதைவிடச் சற்று எளிதான ஒரு பரீக்ஷையை வைத்து, அதில் தேறியவர்களுக்கு ரூபாய்

50 சம்மானமும், க்ருஹயக்ஞ என்னும் பட்டமும் அளிக்கப்படு கின்றன. ஆனால் இந்த ஏற்பாட்டினால் கிடைக்கும் பயன் மிகவும் குறைவாகவே இருக்குமாதலால், இத்தகைய வித்வான்களை அவர்கள் ஆயுள் காலம் முழுவதும் ஆதரித்து வர, நிரந்தர மான ஓர் ஏற்பாட்டைச் செய்ய வேண்டுமென்னும் நோக்கத்துடன் **வேத தர்ம பரிபாலன சபை** என்னும் பெயருடன் ஓர் சங்கமமானது ஸ்வாமிகளது விருப்பப்படி 1944-ஆவது வருடம் ரிஜிஸ்டர் செய்யப்பட்டது. இதற்கு ஆரம்பத்தில் ஏற்படுத்திய உத்தேச மூலதனம் ரூபாய் 4,00,000; வசூலான மூலதனத் தொகையின் வட்டியைக் கொண்டு ஸ்வாமிகளின் நோக்கத்தைப் பூர்த்திசெய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இன்னும் தர்க்கம், வியாகரணம், மீமாம்சை, வேதாந்தம், இந்த நான்கு சாஸ்திரங்களிலும், மற்றும் சிற்ப சாஸ்திரம், வான சாஸ்திரம் இவைகளிலும் தேர்ச்சி பெற்ற தகுதி வாய்ந்த ஆறு வித்வான்களை மடத்தில் நிரந்தரமாக வைத்து அவர்கள் மூலம் இந்தச் சாஸ்திரங்கள் உலகிற்கு பயன்படுமாறு செய்யவேண்டு மென்பதும் ஸ்வாமிகளின் அவா. மேலும், அந்த வித்வான்களைக் கொண்டே தற்காலம் மங்கி இருக்கும் நாடி சாஸ்திரம், பிரச்ன சாஸ்திரம், யோக சாஸ்திரம், ரசவாத சாஸ்திரம், சாயாபுருஷ சாஸ்திரம் முதலான பல புராதன கலைகளையும், மற்றும் நவீன மாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் நமது வாழ்க்கைக்கு அவசிய மான மேல்நாட்டுக் கலைகளையும் ஆராய்ச்சி செய்யலாமென்பதும் ஸ்வாமிகளின் விருப்பமாகும்.

சென்ற 35 ஆண்டுகளாக இந்தச் சபையின் ஆதரவில் நம் நாட்டின் பல பாகங்களிலும் ஒவ்வொரு வருடமும் சபைகள் கூட் டப்பெற்று ஆங்காங்கு வேதக் கலையில் தேர்ச்சி பெற்ற வித்வான் களுக்குச் சம்மானங்கள் அளிக்கப்பெற்று வருகின்றன. மேலும் வித்வான்களைக் கொண்டு வேத தர்மங்களைப் பற்றிய சொற் பொழிவுகளும் நடைபெற்று வருகின்றன வடநாட்டிலும் பம்பாய், புனா, நாகபுர், டெல்லி, கல்கத்தா இவ்விடங்களில் இந்தச் சபைகள் நடைபெற்று வருகின்றன. ஆங்காங்கு மக்கள் இம் முயற்சிக்குப் பேராதரவு காட்டி வருவது மிகவும் மெச்சத் தகுந்ததாகும். இந்தச் சபைகள் நடைபெறும் இடங்களிலெல்லாம் ஒவ்வொரு பிராம்மணக் குடும்பத்தினின்றும் சிறு தொகையான ஒரு ரூபாய் வீதம் வசூலிக்கப்பட்டு, அத்தொகையைக் கொண்டே அந்த ஊர்களில் சபை நடத்தப்பட்டு வருகிறது. இந்தச் சபை யின் நிர்வாகத்திற்கென்றே ஒரு கமிட்டியும் நிறுவப்பெற்று

அந்தக் கமிட்டியின் காரியதரிசியால் சபையின் அலுவல்கள் மிகச் சிறந்த முறையில் கவனிக்கப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் இந்தச் சபையின் நோக்கங்களை அனுசரித்தே தம் பரமகுருவின் பெயரால் **கலவை பிருந்தாவன ட்ரஸ்டு** என்று ஓர் நிதியை ஏற்படுத்தி வேதவித்பன்னர்களுக்கு வருடாவருடம் பெருந் தொகைகளைச் சம்மானமாக ஸ்வாமிகள் அளித்துவருகிறார்கள்.

**வட ஆர்க்காடு ஜில்லாவில் யாத்திரை**

ஆறு காடுகள் சுற்றியுள்ளதால் இந்தப் பகுதிக்கு ஆறுகாடு எனப் பெயர் அமைந்துள்ளது என்பர். (ஆர் என்னும் மரங்கள் நிறைந்த காடாயிருந்ததால் ஆர்க்காடு என்ற பெயர் வந்த தென்றும் சொல்வர்). இவ்விடத்திற்கு ஷடாரண்ய க்ஷேத்திர மென வடமொழிப் பெயரும் உண்டு. இங்கு ஆறு காடுகளில் ஆறு ரிஷிகள் தவம் செய்தனர் என்பர். இந்த ஆறு ரிஷிகளும் தங்களுக்கென தனித் தனியே ஒவ்வொரு ஆசிரமத்தை அமைத் துக்கொண்டு அதனருகில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டையையும் செய்துள்ளார்கள். அவை :

1. புதுப்பாடி—பாரத்வாஜ ஆசிரமம் ; லிங்கத்தின் பெயர் —பாரத்வாஜேச்வரர்.
2. குடிமல்லூர்—அத்ரியாசிரமம் ; லிங்கத்தின் பெயர் —அத்ரீச்வரர்.
3. காரைக்காடு—அகஸ்தியாசிரமம் ; லிங்கத்தின் பெயர் —அகஸ்த்யேச்வரர்.
4. வேப்பூர்—வசிஷ்டாசிரமம் ; லிங்கத்தின் பெயர் —வசிஷ்டேச்வரர்.
5. விஷாரம்—வால்மீகி ஆசிரமம் ; லிங்கத்தின் பெயர் —வால்மீகநாதர்.
6. நவலாத்தோப்பு—கச்யபாசிரமம் ; லிங்கத்தின் பெயர் —கச்யபேச்வரர்.

ஸ்வாமிகள் இந்த க்ஷேத்திரங்களையெல்லாம் தரிசித்து விட்டுத் தாரண வருஷ வியாச பூஜையை 1944 ஜுலை 7-ஆம் தேதி காவேரிப்பாக்கத்திற்கருகிலுள்ள **இசையனூரில்** நடத்தி னார்கள். சாதுர்மாச சங்கல்பம் முடிவுபெற்றவுடன் ஸ்வாமிகள் அவ்வூருக்கு 10 கிலோ மீட்டர் தூரத்தில் கலவை என்னும் ஊரி லுள்ள தம் குருவினுடையதும், பரம குருவினுடையதுமான இரண்டு அதிஷ்டானங்களையும் தரிசித்துக்கொண்டார்கள். அவ் வருடம் நவம்பர் மாதம் 29-ஆம் தேதி ஸ்வாமிகள் திருவண்ணா

மலையில் கார்த்திகை தீப தரிசனம் செய்துவிட்டு, டிசம்பர் மாதம் 2-ஆம் தேதி அண்ணாமலை கிரிப்பிரதக்ஷிணத்தையும் செய்தார்கள். பின்னர் தாமரைப்பாக்கம், காஞ்சீ, கடலாடி, மாம்பாக்கம், எலத்தூர் முதலான ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள்.

**கடலாடியில் பர்வத ப்ரதக்ஷிணம்**

திருவண்ணாமலைக்கு வடமேற்கே 28 கிலோ மீட்டர் தூரத்திலமைந்துள்ள **கடலாடி** என்னும் இடத்தில் பர்வதமலை என்ற பெயருடன் ஓர் மலை உள்ளது. அதற்கடுத்து, மிகவும் உயர்ந்த கம்பீரமாக விளங்கும் கற்பாறை ஒன்று காட்சி அளிக்கின்றது. அந்தப் பாறையின் உச்சியில் ஒரு சிவாலயம் இருக்கிறது. அந்த ஆலயத்தில் அமைந்துள்ள சிவலிங்கத்திற்கு **மல்லிகார்ஜுனர்** என்பது பெயர். ஸ்ரீசைலத்தின் சிவலிங்கத்தின் பெயர் அங்கு அமைந்திருப்பதுடன், அங்கு ஓர் பாதாள கங்கையும் காணப்படுகிறது. மலையின் மீதுள்ள வில்வ மரங்களில், ஒன்பதும், பதினொன்றும் தளங்கள் உள்ள **மஹா பில்வவிருக்ஷம்** காணப்படுகிறது. அந்த மகாபில்வம் வெகு அரிதாகவே காணப்படுமென்றும், அது பரமசிவனது பூஜைக்கு மிகவும் ஏற்றதென்றும் பெரியோர்கள் கூறுகின்றார்கள். மலை மீது ஏராளமாகக் கல் மூங்கில் வளருவதால் ஸ்வாமிகளின் தண்டத்திற்கென இவ்விடத்திலிருந்தே அடிக்கடி மூங்கில் கம்புகள் வரவழைக்கப்படுவது வழக்கம். 1905-ஆவது வருடத்தில் பீடத்தின் 66-ஆவது ஆசாரியர்களான **ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** அவ்வூருக்கு விஜயம் செய்திருந்த பொழுது, இந்த மலையின் மீது ஏறி **ஸ்ரீ மல்லிகார்ஜுனரைத்** தரிசித்துள்ளார்கள். நம் ஸ்வாமிகளும் சென்ற 1930-ஆவது ஆண்டு இந்தப் பர்வதத்தின்மீது முன்பு ஒருமுறை ஏறியுள்ளார்கள். இந்தப் பர்வதத்தின் அமைப்பை நோக்கும்பொழுது துங்கபத்ரா, கிருஷ்ணா இவ்விரு மகா நதிகளால் இருபுறமும் சூழப்பெற்ற **ஸ்ரீ சைல பர்வதத்தின்** நினைவே வருகிறது. இந்த மலையைச் சுற்றிலும் இரண்டு சிறிய நதிகள் பாய்கின்றன. இந்த மலையில் ஏறுவதைவிட இதைக் கிரிபிரதக்ஷிணம் செய்வதே அதிக கடினமான காரியமாகும்.

இந்தப் பர்வதத்தைப் பிரதக்ஷிணம் செய்யவேண்டி ஸ்வாமிகள் 1944 டிசம்பர் 15-ஆம் தேதி மாலை 3 மணிக்குக் கால் நடையாகச் சில குறிப்பிட்ட சிஷ்யர்களுடனும் அவ்வூர்க் கிராம அதிகாரிகளுடனும் புறப்பட்டார்கள். மனித சஞ்சாரமே இல்லாததும் கரடுமுரடானதும், முள் செடிகள், முள் மரங்கள் நிறைந்

ததுமான அந்தப் பாதையை வெகு சிரமத்துடன் கடந்து, மாலை 6 மணிக்குச் செய்யாறும், மிருகண்டு நதியும் சேரும் இடத்தை அடைந்தார்கள். மாலை அனுஷ்டானங்களை அங்கே முடித்துக்கொண்டார்கள். அன்று அமாவாசை ஆதலால் தீவட்டிகள் முதலான வெளிச்சங்களுடன் இந்தக் கிரிப்பிரதக்ஷிணம் மேலே தொடங்கப் பெற்றது. குன்றுகளின் மீது ஏறியும், இறங்கியும் சுமார் 40 கிலோமீட்டர் நடந்து இரவு 10 மணிக்குக் கடலாடி விஷ்ணு ஆலயத்தில் அமைக்கப் பெற்றிருந்த ஜாகையை அவர்கள் அடைந்தார்கள். அன்றிரவு வெள்ளிக்கிழமை பூஜையை ஸ்வாமிகள் அவ்வாலயத்திலேயே நடத்தினார்கள்.

**சேலத்திற்கு விஜயம் செய்தது**

ஸ்வாமிகள் பின்னர் **செங்கம்** மார்க்கமாகத் **திருப்பத்தூர்** முதலான ஊர்களில் தங்கி 1945-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 24-ஆம் தேதி சேலம் ஜில்லா **கிருஷ்ணகிரிக்கு** விஜயம் செய்தார்கள். ஸ்வாமிகள் பிப்ரவரி மாதத் தொடக்கத்தில் சேலத்தில் சுமார் 10 நாட்கள் தங்கியிருந்தார்கள். அவ்வூர் வக்கீல்கள் **என். கோபால ஸ்வாமி ஐயர், எஸ். பாலசுப்பிரமணிய ஐயர், ஹரிஜன சேவா சங்கக் காரியதரிசி சேவாப்பேட்டை வி. வாஞ்சிநாத ஐயர்,** பென்ஷன் பெற்ற ஜில்லா **ஜட்ஜ் டி. சுந்தரமையர்,** சென்னை சட்டசபைக் காரியதரிசி **ஆர். வி. கிருஷ்ணய்யர்** முதலானவர்கள் அடங்கிய ஒரு வரவேற்புக் குழு ஸ்வாமிகளைத் தகுந்த முறையில் வரவேற்றுப் பாதபூஜை, பிக்ஷை முதலானவைகளைச் செய்து வைத்தது; மேலும் ஷராப் **ஏ. வி. ராமசந்திர செட்டியார்,** மிட்டாதார் **ஸ்ரீநிவாச குப்தா. ஆர். வி. நாராயணஸ்வாமி செட்டியார்** முதலான பிரமுகர்களும் ஸ்வாமிகளுக்கு மிகுந்த பக்தியுடன் பணிகளைப் புரிந்தனர். அவ்வூரிலிருந்து புறப்படும் முன்னர், **சேலம்** மக்கள் ஸ்வாமிகளுக்கு ஒரு பெரிய ஊர்வலத்தை நடத்திவைத்தார்கள். அந்த மாதத்தின் இறுதியில் மகாமகம் நிகழ்வதை ஒட்டி ஸ்வாமிகள் தம் யாத்திரையை வேகமாகத் தொடர்ந்து சென்று **ஆத்தூர், சின்னசேலம், கள்ளக்குறிச்சி, விருத்தாசலம், அரியலூர்** மார்க்கமாகக் கும்பகோணத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

1945-ஆம் வருஷம் பிப்ரவரி 22-ஆம் தேதி கும்பகோணத்திற்கு வடக்கே 10 கிலோ மீட்டர் தூரத்தில் ஸ்வாமிகள் கொள்ளிடத்தைக் கடந்து, அதன் வட கரையில் அமைந்துள்ள **மதனத்தூர்** சத்திரத்தில் அன்று பகலில் தங்கி, மாலை அவ்விடமிருந்து புறப்பட்டுக் கும்பகோணம் பழைய பாலத்திற்கு அருகில் உள்ள

கல்யாணராம ஐயர் சத்திரத்தில் தங்கினார்கள். அப்பொழுது அந்நகர மக்கள் பல்லாயிரக்கணக்காக அவ்விடம் கூடி, ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பை அளித்தனர். அவ்விடமிருந்து முக்கிய வீதிகளின் வழியே ஸ்வாமிகள் ஊர்வலமாகச் சென்று இரவு 10-30 மணிக்குத் தம் மடத்தை அடைந்தார்கள்.

**கும்பகோணத்தில் 1945-ஆவது வருட மகாமகம்**

1945 பிப்ரவரி 26-ஆம் தேதி மகாமகத்தன்று காலை சுமார் 4 மணிக்கு ஸ்வாமிகள் மடத்தின் விருதுகளுடன் தந்தச் சிவிகையில் அமர்ந்து ஊர்வலமாகக் காமாக்ஷி ஜோஸ்யர் தெரு, ஸ்ரீ சக்ரபாணி ஸ்வாமி கீழவீதி, அந்த ஆலயத்தின் தெற்கு வீதி, பெரிய கடைத் தெரு, பொற்றாமரை வடகரை, உச்சிபிள்ளையார் கோவில், நாகேச்வரஸ்வாமி வடக்கு வீதி, கீழ வீதி, ரெயில்வே ஸ்டேஷன் ரோடு இவைகளின் வழியாகச் சென்று, மகாமகக் குளத்தை வலம் வந்து தென்கரையில் வழக்கமாகத் தங்கும் மண்டபத்தில் தங்கி சூரியோதயத்திற்கு முன்னரே அப்புனித தீர்த்தத்தில் நீராடினார்கள். நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அன்று அவ்விடம் வந்திருந்த பல்லாயிரக்கணக்கான மடத்தின் சிஷ்யர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க விரும்பியதால், ஸ்வாமிகள் காலை 7 மணி வரை அந்த மண்டபத்திலேயே தங்கி, யாவருக்கும் தரிசனம் அளித்தார்கள். அன்று அதிகாலை 3 மணி முதல் விடியும் வரை சுமார் 5 லக்ஷம் ஜனங்களுக்கு மேல் அக்குளத்தில் நீராடியதாக மதிப்பிடப்பட்டது. திருச்சி ரேடியோ நிலயத்தார் அன்று காலை மகாமக ஸ்நாநக் காட்சி வருணனையை ஒலிபரப்பினார்கள். காலை 8 மணிக்கு ஸ்வாமிகள் மடத்தை அடைந்தார்கள். நடுப்பகலிலும் மறு முறை தடாகத்தை அடைந்து உச்சிக்காலத்தில் செய்யவேண்டிய ஸ்நானத்தைச் செய்து முடித்தார்கள். குளத்தின் வட கரையில் ஓர் மண்டபத்தில் அமர்த்தப்பட்டிருந்த ஸ்ரீ ஆதி கும்பேசர், ஸ்ரீ நாகேச்வரர் ஆகிய உற்சவ மூர்த்திகளை அவர்கள் தரிசித்துக்கொண்டு, காசி விச்வநாதர் ஆலயத்தில் ஒன்பது கன்னிகைகளின் சிலைகளையும் தரிசித்துக்கொண்டார்கள்.

ஜில்லா போலீஸ் அதிகாரி ஸ்வாமிகளின் ஊர்வலத்துக்குப் பந்தோபஸ்தாக ரிஸர்வ் படை அடங்கிய போலீஸ் வான் ஒன்றைக் கூடவே தொடர்ந்து வரும்படி கட்டளையிட்டுத் தாமும் மோட்டார் சைக்கிள் ஒன்றில் ஏறி அந்த ஊர்வலத்திற்கு முன் சென்று, கூட்டங்களை விலக்கி, ஸ்வாமிகள் குளத்தில் நீராடுவதற்குத் தகுந்த வசதிகளைச் செய்து கொடுத்தார்.

**மகாமகத்தில் அன்னதானம்**

அவ்வருட மகாமகத்தின்பொழுது ரேஷன் சட்டம் அமலில் இருந்தபடியால் முன் மகாமகங்களைப் போல அவ்வளவு தாராள மாக அன்னதானம் நகரத்தில் நடைபெறவில்லை என்றே கூற வேண்டும். ஆயினும் நகரத்தின் பல பாகங்களிலும் பல சமூகத் தினர் ரேஷன் அதிகாரிகளின் அநுமதி பெற்று அன்னதானத்தை நடத்தினார்கள். அவைகளில் மிகப் பெரிய அன்னதானம் காலஞ் சென்ற **தேப்பெருமாநல்லூர் சிவனது** பெயரால் கும்பகோணம் சங்கர மடத்தில் நடைபெற்றதாகும். மகாமகத்தன்று மாத்திரம் சுமார் 8,000 மக்களுக்கு அங்கு அன்னம் அளிக்கப்பட்டது. இதைத் தவிர, ஸ்வாமிகளின் கட்டளைப்படி நகரத்தின் எல்லை களிலுள்ள கிராமங்களில் கொட்டகைகள் அமைத்து, அங்கு எல்லாச் சமூகத்தினருக்கும் அன்னதானம் அளிக்கப்பட்டது. சிவன் பெயரால் நடைபெற்ற அன்னதானமானது திவான் சேஷையா சாஸ்திரிகளின் பேரன் **ஸ்ரீ கல்யாணசுந்தர சாஸ்திரி களின்** மேற்பார்வையில் நடைபெற்றது. ஆனந்தவிகடன், கல்கி, சுதேசமித்திரன் முதலான பத்திரிகைகள் விளம்பரம் செய்ததின் மூலம் பாரத நாட்டின் பல பாகங்களிலுள்ள அன்பர்கள் ஏராள மாக இந்தக் கைங்கர்யத்திற்குப் பொருளுதவி புரிந்தனர். ரேஷன் அதிகாரிகளும் பொது மக்களுடன் ஒத்துழைத்து இவ்வித அன்ன தானங்கள் நடைபெற உதவி புரிந்தனர். சிவனது அன்னதானத் திற்கு வழக்கமாகப் பண உதவியோ, பொருளுதவியோ செய்து வந்தவர்கள் அவ்வருடத்திலும் அவ்வுதவிகளைச் செய்து அந்தப் பணியில் பங்கெடுத்துக்கொண்டார்கள்.[1]

**ஸ்ரீ மடம் தர்மத் தொண்டு சபை**

முத்திராதிகாரிகளின் இயக்கத்தின் ஒரு பகுதியாகச் சென்ற 1945-ஆவது வருடத்தில் **ஸ்ரீமடம் தர்மத் தொண்டு சபை** என்னும் பெயருடன் ஒரு சபையை ஸ்வாமிகள் நிறுவினார்கள். நம் தர்மங் களைக் குறித்துத் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு அவை களை இனமாக இந்தச் சபையின் மூலம் பொதுமக்களுக்கு வழங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இதன் தொண்டர்கள் அநேக மாகச் சர்க்கார் உத்தியோகங்களிலிருந்து விலகி உபகாரச் சம்ப ளங்களைப் பெற்றுவருபவர்கள். அவர்கள் சில சமயங்களில் வீடு வீடாகச் சென்று ஸ்வாமிகளின் உபதேசங்களைப் பற்றிப் பிரசார மும் செய்து வந்தார்கள். இந்தத் தொண்டர் சபை மூலமாகத் திருச்சி முதலான இடங்களிலுள்ள ஆஸ்பத்திரிகளில் இருக்கும்

ஹிந்து நோயாளிகளுக்கு ஸ்வாமிகள் அளித்த விபூதி, குங்குமம், அக்ஷதை, பிரசாதங்கள் கங்காதீர்த்தம் முதலியன விநியோகிக்கப் பட்டு வருகின்றன. இறக்கும் தருவாயிலிருக்கும் ஹிந்து மக்களுக்கு அவரவர் காதுகளில் அவரவர் கோட்பாட்டின் படி சிவ நாமாவையோ விஷ்ணு நாமாவையோ சொல்லச் சில தொண்டர்களேயும் ஸ்வாமிகள் நியமித்துள்ளார்கள். இவர்கள் யாவரும் எவ்வித ஊதியமும் பெருமல் இப்பணியில் ஈடுபட்டிருப்பது பாராட்டுதற்குரியதாகும்.

**அத்வைத சபையின் பொன் விழா : 108 பண்டிதர்களுக்குப்பொன் மோதிரம் பரிசளிப்பு**

அத்வைத சித்தாந்தத்தை உலகில் பரப்பவும், அந்தச் சித்தாந் தத்தில் தேர்ச்சி பெற்ற பண்டிதர்களுக்கு ஊக்கம் அளிக்கவும், வருடா வருடம் பரிக்ஷைகள் வைத்து, அதில் தேறியவர்களுக்கு அவர்களது ஆயுள் முழுமைக்கும் சம்மானம் அளிக்கவும், தர்ம சாஸ்திரங்களில் வரும் சந்தேகங்களேத் தீர்த்து வைக்கவும், சென்ற 1894-ஆவது ஆண்டில், காமகோடி பீடத்தை அலங்கரித்த 66-வது ஆசாரிய ஸ்வாமிகளான ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளது பரிபூர்ண ஆதரவால், அத்வைத சபை என்னும் பெயருடன் ஒரு சபையானது கும்பகோணம் ஸ்ரீ சங்கர மடத்தில் துவக்கப் பட்டது. அக்காலத்தில் வடமொழியில் மகா பண்டிதர் களாக விளங்கிய மன்னுர்குடி மகாமகோபாத்யாய ராஜு சாஸ்திரிகள், திருவையாறு மகாமகோபாத்யாய பாலகிருஷ்ண சாஸ்திரிகள், சிதம்பரம் மகாமகோபாத்யாய ஹரிஹர சாஸ்திரிகள் மற்றும் மடத்தின் ஆஸ்தான வித்வான்களாக இருந்த திருவை யாறு மீமாம்ஸா குப்புஸ்வாமி சாஸ்திரிகள், திருவிசலூர் மகாலிங்க சாஸ்திரிகள், கோமல் நீலகண்ட தீக்ஷிதர், சுவேதாரண்யம் நாராயண தீக்ஷிதர் இவர்களும் இந்தச் சபையின் பண்டிதர்களாக இருந்து அந்தச் சபையைத் துவக்கிவைத்தார்கள். இவர்களுக்கு ஊக்கம் அளித்துச் சபையைத் தோற்றுவிக்கவும் பிரகாசிக்கவும் உதவிய அக்காலத்துப் பிரமுகர்களில், திவான் சர். ஏ. சேஷையா சாஸ்திரிகளேயும், வக்கீல் வி. கிருஷ்ண ஐயரையும், கும்பகோணம் காலேஜ் பேராசிரியர் வைத்தியனுத ஐயரையும், கும்பகோணத்தில் ஸ்ரீ வித்தியா அச்சுகூடத்தை ஸ்தாபித்த கோனேரிராஜபுரம் சாம்பசிவ ஐயரையும், கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூலே ஸ்தாபித்த ராவ் பகாதுர் அப்பு சாஸ்திரிகளேயும் முதன்மையாகக் கூறலாம். இந்தப் பிரமுகர்களின் உதவியினுலும் மற்றும் பல பிரமுகர்களின் உதவியினுலும் ஒத்துழைப்பினுலும் ஆரம்பிக்கப்

பட்ட இந்தச் சபையானது ஆரம்பித்தது முதற்கொண்டு இது வரை சேர்ந்தாற்போல் அத்வைத சித்தாந்தத்தையும், ஸநாதன தர்மத்தையும் நாட்டில் பரப்பப் பல பணிகள் ஆற்றியுள்ளது. (இந்தச் சபையில் பின்பு பங்கெடுத்துக்கொண்டு பணி ஆற்றி யுள்ள வித்வான்களில் பின் வருகிறவர்களேயும் கூறலாம்.)

1. மகாமகோபாத்யாய பைங்காநாடு கணபதி சாஸ்திரிகள்.
2. ,, கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள்.
3. ,, திருவிசநல்லூர் வேங்கடசுப்பா சாஸ் திரிகள்.
4. ,, சிதம்பரம் தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர்.
5. ,, மன்னூர்குடி யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள்.
6. புதுக்கோட்டை தானுதிகாரி திருவையாறு விச்வநாத சாஸ்திரிகள்.

**பேராசிரியர் கே. சுந்தரராம ஐயர்** பல ஆண்டுகள் இந்த சபைக்குக் காரியதரிசியாக இருந்து அரும் பணியாற்றியுள்ளார்.

இந்தச் சபையின் பொன் விழாவானது 1945 பிப்ரவரி மாதம் 28-ஆம் தேதி முதல் 10 நாட்கள் நம் ஸ்வாமிகள் சந்நிதானத்தின் முன்னிலையில் கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. சிறந்த பண்டிதர்களான **போலகம் ராம சாஸ்திரிகள், போலகம் சுந்தர சாஸ்திரிகள், பிராந்தியங்கரை சுப்ரமண்ய சாஸ்திரிகள்,** அண்ணுமலைச் சர்வகலாசாலையைச் சார்ந்த **வேப்பத்தூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள்** இவர்கள் நால்வரும் அவ்வருடம் பரீக்ஷாதிகாரிகளாக அமைந்து சபையை வெகு அழகாக நடத்தி வைத்தார்கள். சென்னையிலிருந்து **திவான்பகாதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகளும்** அட்வகேட் **கே. பாலசுப்ரமண்ய ஐயரும்,** மேலும் மதுரை வக்கீல் **என். நடேச ஐயரும்,** திருக் கருகாவூர் **டி. எல். சுப்பய்யரும்,** டவுன் ஹைஸ்கூல் முன்னுள் தலைமை ஆசிரியர் **ஆர். சுவாமிநாத ஐயரும்,** மற்றும் உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களும் இவ்விழாவில் பங்கெடுத்துக் கொண்டு பணியாற்றினுர்கள். ஒவ்வொரு நாளும் ஸூத்திரபாஷ்யத்தில் வாக்கியார்த்தங்கள் நடைபெற்றதுடன் சிறந்த பண்டிதர்களால் நமது தர்மங்களேப் பற்றி இரவு நேரங்களில் உபந்யாசங்களும் நடைபெற்றன.

முடிவு நாளன்று ஸ்வாமிகள் பண்டிதர்களுக்குச் சில உப தேச மொழிகளே அருளிவிட்டு அவரவர்களது புலமைக்குத் தக்கவாறு சால்வை, பீதாம்பரம் முதலிய சம்மானங்களேயும்

தாராளமாகச் செய்ததுடன் நூற்றுக்கு மேற்பட்டு அந்தச் சபைக்கு விஜயம் செய்திருந்த பண்டிதர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சவரன் எடையில் பொன் விழா நினைவாக, ஆதி பகவத் பாதரது உருவம் அமைக்கப்பட்ட **தங்க மோதிரத்தைப்** பரிசாக அளித்தார்கள். இவ்விதம் ஸ்வாமிகள் பண்டிதர்களுக்கு இது வரை எவரும் அளிக்காத பேராதரவை அளித்ததை யாவரும் போற்றினார்கள்.

**அத்வைத வித்யையைப் பற்றி ஸ்வாமிகள் அருளிய பொன் மொழிகள்**

அத்வைத சபையின் பொன் விழாவின் போது ஸ்வாமிகள் அத்வைத சாஸ்திரத்தைப் பற்றிப் பக்தர்களுக்கு அருளிய சில உபதேச மொழிகள் கீழே தரப்பட்டுள்ளன. "ஆத்மா ஒன்று; அதுதான் சத்யம்; மற்றெல்லாம் மித்யை" என்பது ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதரது அத்வைத சித்தாந்தமாகும். இதிலுள்ள மித்யா என்னும் சம்ஸ்கிருதச் சொல்லுக்கு பொய் எனப் பொது வாகப் பொருள் கூறப்படுவதால், அப்பொருளை வைத்துக் கொண்டு சிலர் நமது அத்வைத சித்தாந்தத்தைக் குறை கூறுகின் றனர். ஆனால் **குறைவற்றதும் உண்மையை உணர்த்துவதும்** அத்வைத சித்தாந்தமே ஆகும்.

உலகிலுள்ள எல்லா வஸ்துக்களையும் சேதனம், அசேதனம், அதாவது அறிவுள்ளது, அறிவில்லாதது என இரு வகையாகப் பிரிக்கலாம். அதில் அறிவுள்ள **வஸ்துவை ஜீவாத்மா** எனவும், **பரமாத்மா** எனவும் மேலும் இரு வகையாகப் பிரிக்கலாம். இவ்விதம் பிரிக்கப்படும்பொழுது, (1) **அசேதனம்** எனக் கூறப் படும் அறிவில்லாத வஸ்துக்கள், (2) எங்கும் நிறைந்துள்ள **பரமாத்மா**, (3) ஒவ்வொரு சரீரத்திலும் தனியே காணப்படுகிற **ஜீவாத்மா** என்றவாறு இவ்விதம் மூன்று பிரிவாக நிற்கின்றன. இவற்றுள் **பரமாத்மா** ஒன்றைத் தவிர மற்ற இரண்டும் மித்யை. பிரம்மமே ஸத்யம்; ஜகத் மித்யை. ஜீவனும் பிரம்மத்தைத் தவிர வேறில்லையென நமது ஆசாரிய பகவத்பாதர் சித்தாந்தம் செய்திருக்கிறார்கள்.

இவ்விதம் சித்தாந்தம் இருக்கும்பொழுது குரு, சிஷ்யன், உபாசிக்கப்படும் பொருள், உபாசிப்பவன் என்னும் பேதங்கள் எவ்விதம் ஏற்பட்டுள்ளன என்ற சந்தேகம் எழலாம். உலகம் மித்யை என்று கூறப்படுவதாலேயே, அது முயல் கொம்பைப் போல் முழுவதுமே இல்லாத வஸ்துவெனக் கொள்ளலாகாது.

ஜீவனுக்கு ஆத்ம ஞானம் ஏற்படும் பொழுது இவ்வுலகம் மறைந்து விடும்; அல்லது நசித்துவிடும். இதையேதான் மித்யை என்னும் சொல்லால் நமது ஆசார்யர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஆகையால் ஆத்ம ஞானம் ஏற்படும் வரையில் உலகம் இருப்பதால், அதுவரை அதை ஒருவாறு சத்யம் என்றே கூறவேண்டும். இதையே **வியாவஹாரிக ஸத்யம்** என்று நமது சாஸ்திரம் கூறுகின்றது. ஆத்மா எப்போதும் இருப்பதால் அதற்குப் **பாரமார்த்திக ஸத்யம்** என்பது பெயர். சிப்பியில் தோன்றும் வெள்ளியானது அவ்விதம் தோன்றும் வரை வெள்ளியாகவே இருப்பதால் அது **பிராதிபாஸிக ஸத்யம்** எனக் கூறப்படுகிறது.

உலகில் பிறவி எடுத்த யாவருக்கும் உண்மைப் பொருளாகிய பரம்பொருளை விளக்கக் கூடியது **அத்வைத வித்யை** ஆகும். இந்த உண்மையை உணர்பவன் மயக்கத்தையும், துயரத்தையும் அடைய மாட்டான். உபநிடதங்கள் எல்லாம் இதையே வற்புறுத்துகின்றன.

ஒவ்வொருவனும் துயரத்தையும், அச்சத்தையும் நீக்க வேண்டும். உபாசனை, வேள்வி, தியானம் முதலியவைகளால் சிறிதளவு துயரத்தை நீக்கிக்கொள்ளலாம். ஆனால் துயரத்தின் மூலத்தை மறுமுறை தளிர்க்காமல் ஒழிப்பதையே மனிதன் தன் லக்ஷ்யமாகக் கொள்ளவேண்டும். துயரத்திற்கு மூல காரணம் பிறவி. பிறவிக்குக் காரணம் கருமம். கருமங்களுக்கு அடிப்படை பற்று. பற்றினால் ராகத் துவேஷம், அச்சம் இவை ஏற்படுகின்றன. ஆன்மாவைத் தவிர இரண்டாம் பொருளின் தோற்றம் இல்லையானால் பற்று, வெறுப்பு இவைகளுக்கு இடமில்லை.

இரண்டாம் பொருளின் தோற்றத்திற்குக் காரணம் பொய் அறிவு, அல்லது அக்ஞானம். இரண்டற்ற ஒன்றை, உணர்ந்து அனுபவிப்பதனால் அப் பொய் அறிவு நீங்கும். இந்த முறையில் ஜீவன்களுக்கு அத்வைத வித்யை பெரிதும் உதவுகின்றது. உண்மை ஞானத்தினால் மட்டுமே அஞ்ஞானத்தை நீக்கமுடியும்.

மன அமைதி, இறைவனருள் முதலிய யாவும் அத்வைத ஸாக்ஷாத்காரத்தையே கொடுக்கின்றன. "இது முழுவதும் பிரம்மமே." "அறிவும், ஆனந்தமும் பிரம்மம்." என்றெல்லாம் வேதங்கள் கூறுகின்றமையால், அந்தப் பிரம்மத்தை அடைவதே ஜீவர்களது புருஷார்த்தமாகின்றது.

காரியத்தைவிடக் காரணத்தையே முதன்மையாகக் கொள்ள வேண்டும். குடத்திற்குக் காரணம் மண்ணே ஆகும். குடத்தில்

மண்ணுருண்டையைத் தவிர வேறு எதுவும் இல்லை. அதற்குக் குடம் என்பது பெயர் மாற்றம்; வடிவம், உருமாற்றம், அவ்விரண்டையுமே நாமரூபங்கள் என வேதங்கள் கூறுகின்றன. இவை கற்பனைப் பெயர்கள் ஆகும். சிந்தித்துப் பார்க்கும் அளவில் மண் மாத்திரமே உண்மையாகிறது. வேதங்களும் அவ்விதமே மொழிகின்றன. இரண்டாவதாகக் காணப்படுவதே மாயை.

காரணத்தின் காரணம், அக்காரணத்தின் காரணம், என்று காரண வரிசையை மேன் மேலும் ஆராய்ந்து கொண்டே போனால் முடிவில் **பரம காரணம் பிரம்மம்** என்பது தெளிவாகும். அதுவே பரம்பொருள்; அதுவே ஸத்யம்; ‘அது நீயாகிறாய்’ என்கிற அத்வைதத் தன்மையைச் **சாந்தோக்கிய உபநிடதம்** எடுத்துக்காட்டு கிறது.

ஒருவன் உயிருடன் இருக்கும்பொழுதே, ஞானத்தினால் மாயையை விலக்கி, **ஸர்வபாவா பத்தியை** அடைவதுதான் உண்மையான மோக்ஷம். இதுதான் ஜீவன் முக்தி; அதாவது இறப்பதற்கு முன் முக்தி எனக் கூறப்படுகிறது. இதற்குச் சுருதி, ஸ்மிருதி, நியாயம் என்கிற ப்ரஸ்தான த்ரயத்திலும் பிரமாணம் இருக்கின்றது. ஜீவனே அம்ருதன்: இவனுக்கு மரணம் என்பது இல்லை.

இந்த ஜீவன்முக்தனுக்கு உலகம் எவ்விதம் தோன்றும் என்னும் சந்தேகம் எழலாம். அவனுக்கும் மற்றவனைப் போலவே உலகம் தோன்றத்தான் செய்யும். ஆனால் அவன் அதைப் பார்க்கும் வகையில்தான் மாறுபாடுகள் காணப்படுகின்றன அவன் உலகத்தைப் பொய்யாக நினைப்பான். நாற்புறமும் கண்ணாடி பதிப்பிக்கப்பட்ட ஓர் அறையின் நடுவில் ஒரு மாட்டைக் கொண்டு போய் நிறுத்தினால், அது எல்லாத் திசைகளிலும் தெரியும் மாடுகளின் உருவம் அனைத்தையும் உண்மை மாடுகள் எனவே நினைக்கும். ஆனால் மனிதனோ தன் கண்களுக்குப் புலப்படும் அவ்வுருவங்களையெல்லாம் பொய் உருவங்களாகவே மதிப்பான்.

ஆகவே ஜீவன்முக்தன் இந்த உலகத்தை எல்லாம் பொய் யெனக் கொள்வான். ஜீவன்முக்தியை அடைவதற்குச் சாஸ் திரங்களில் ஏழு படிகள் கூறப்பட்டுள்ளன. அதில் முதலாவது படி சுபேச்சை. நமக்கு இன்றியமையாததாகத் தேவையுள்ளதும் இந்தச் சுபேச்சைதான்,

மற்ற மதத்தினர் தங்கள் மதத்தைத் தவிர வேறு மதங்களினால் மோக்ஷம் கிட்டாதென்று கூறுகின்றனர். ஆனால் அத்வைதிகளாகிய நாம் மட்டும் அவ்விதம் கூறுவதில்லை. ஈசுவர பக்தியால்தான் அத்வைதம் சித்திக்கும் என்பது நமது கொள்கை. பக்திக்குச் சாதனமாக அவரவர்களது ருசிக்குத் தக்கவாறு மக்கள் எந்த மதத்தையும் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் முடிவில் உண்மையை அத்வைதத்தினால் தான் காண முடியும். தற்கால விஞ்ஞானிகள் கூட எல்லாவற்றிற்கும் **மூல சக்தி ஒன்றே** தான் எனக் கண்டுபிடித்துள்ளார்கள். ஆனால் அவர்களது ஆராய்ச்சியோ ஜடப்பொருளுடன் நின்று விடுகின்றது.

ஒரு வஸ்துவை அறியக் கண், வெளிச்சம், மனம், ஆத்மா இவை வேண்டும். இவைகளுள் ஆத்மாவே முதன்மையானது. எலெக்டிரிக் வேவ் எனக் கூறப்படும் மின்சார அலையானது, வெட்டவெளி (Atmosphere) எங்கும் பரவியிருப்பது போல, எங்கும் வியாபகமாயுள்ளது ஆத்மா ஒன்றுதான். பல மார்க்கங்களைக் கடைப்பிடிப்பவர்கள் வெவ்வேறு விஷயங்களைக் கூறுவதாக வெளிப்பார்வைக்குத் தோன்றினாலும் அவர்களது மனம் அத்வைதத்தையே நாடும்.

மோக்ஷத்திற்கு உபாயமாக ராகத்துவேஷங்களை விலக்க வேண்டுமென நியாய சூத்திரம் கூறுகின்றது. ஒன்றை இரண்டாகப் பாவிக்கும் தன்மை ஒருவனிடம் இருக்கும் வரை அவனிடமிருந்து ராகத்துவேஷமும் விலகாது. பிரிக்கப்படாத ஒரே வஸ்துவாக உலகத்தைக் காண்பவன் எவ்வித ராகத்துவேஷத்தாலும் பாதிக்கப்படமாட்டான்.

இதர சித்தாந்திகள் சிலர் அத்வைதிகளைப் பிரச்சன்ன பௌத்தர்கள் என்றும், மாயாவாதிகள் என்றும் கூறுகிறார்கள். அத்வைதிகள் பொதுவாக மாயை என்னும் சொல்லை உபயோகிப்பதாலேயே அவர்கள் மாயாவாதிகளாக ஆகிவிடமாட்டார்கள்.

**வியாசர்** முதலிய மகரிஷிகள் வேதத்தைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டு, பல தரிசன நூல்களை இயற்றி, உலகத்திற்குப் பரோபகாரத்தைச் செய்திருக்கிறார்கள். வியாஸ சூத்திரத்திற்கு **ஸ்ரீ சங்கர பகவத் பாதர்** பாஷ்யம் இயற்றி உள்ளார்கள். இந்தப் பாஷ்யத்திற்கு எண்ணற்ற உரைகள் பிற் காலத்தில் ஏற்பட்டுள்ளன. அத்வைத சாஸ்திரத்திற்குத்தான் நூல்கள் மிக அதிகம். ஹிமாசலம் முதல் குமரி வரை, பல மகான்கள் அத்வைதத்திற்கு விளக்கம் கூறி நூல்களை இயற்றியுள்ளார்கள். **கௌடபாதர், வித்யாரண்யர், அப்பய்யதீக்ஷிதர், பிரம்மாநந்தர்** முதலிய

பெரியோர்களை இவ்வரிசையில் சேர்க்கலாம். இவர்களின் நூல் களைக் கற்று நாம் நற்பயனைப் பெறுவோமாக.''

* * * * *

**1945, 1946-ஆவது ஆண்டுகளில் தஞ்சை ஜில்லாவில் தங்கியது**

1945-ஆவது வருடத்து மகாமகம் முடிவு பெற்றவுடன் ஸ்வாமிகள் கும்பகோணத்திற்கு அடுத்த **மணஞ்சேரி** என்னும் கிராமத்தில் சில மாதங்கள் தங்கியிருந்தார்கள். அவ்வருட வியாச பூஜை 24–7-1945-இல் பாபநாசத்தை அடுத்த **திருக்கருகாவூரில்** நடைபெற்றது. அதை அடுத்த நவராத்திரி விழாவும் அவ்வூரி லேயே கொண்டாடப்பட்டது. ஸ்வாமிகளின் கருணைக்குப் பாத் திரமான **டி. எல். சுப்பய்யர்** என்னும் பெரியார் தலைமையில் அவ் வூரார் அவ்விடம் ஸ்வாமிகள் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடு களைக் குறைவற்ற முறையில் செய்திருந்தனர். 1945-ஆவது வருஷம் அக்டோபர் முதல் 1946-ஆம் வருஷம் ஏப்ரல் வரை சுமார் ஆறு மாதங்கள் கும்பகோணம்–காரைக்கால் ரோடில், ஆடுதுறைக்கு அடுத்த **மேலூர்** என்னும் கிராமத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தார்கள். ஸ்வாமிகளின் பக்தர்களில் மிகச் சிறந்து விளங்கின. அவ்வூர் **ராமசந்திர ஐயர்** என்னும் மிராசு தார் தம் சொத்துக்களைத் தருமத்திற்கு அளித்துவிட்டு ஸ்வாமி களது கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்ததைப் பலர் அறிவர். ஸ்வாமி களது பூஜாமண்டபத்தில் எக்காலத்திலும் அவர் கைங்கரியம் புரிவதைப் பக்தர்கள் பார்த்திருப்பார்கள். 1946-ஆவது வருடம் வியாஸ பூஜை கும்பகோணம் மடத்தில் 14-7-1946-இல் நடை பெற்றது. அன்று முதல் சுமார் நான்கு மாதங்கள் ஸ்வாமிகள் தம் மடத்திலேயே தங்கியிருந்தார்கள்.

1946-ஆம் வருடம் டிசம்பர் மாதம் 12-ஆம் தேதி பண்டித மதன்மோகன மாளவீய காசியில் காலமான செய்தியைக் கேட்டு ஸ்வாமிகள் மனம் கசிந்து அவரது குடும்பத்தாருக்கு ஓர் அனுதாபச் செய்தியை அனுப்பினார்கள்.

**ஜீவாத்ம கைங்கரியம்**

1946-ஆவது ஆண்டு பிப்ரவரி மாதம் 5-ஆம் தேதி ஸ்வாமிகள் முத்ராதிகாரிகளுக்குக் கீழே கண்ட சுற்றறிக்கை ஒன்றை விடுத் தார்கள்.

"ஒவ்வொரு ஜீவனும் உடலைவிட்டுப் பிரிந்து செல்லும் காலத்தில் எந்த எண்ணத்துடன் செல்லுகின்றானோ, அது நல்லதா

யினும், கெட்டதாயினும் அந்த எண்ணமே அவனுக்கு மறு ஜன்மமாகி விடுகிறது. இறுதிக் காலத்தில் ஈசனது நாமத்தைக் காதினுல் கேட்பவனுக்கு மோக்ஷம் என்னும் மேல்பதவி கிட்டும். ஒருவன் தனது ஜன்மத்தின் நடுவில் எவ்வளவு பாபியாயிருந்திருப் பினும் கடைசி வினாடியில் பகவானது நாமத்தைக் கேட்பதால் அவன் பரிசுத்தனுகி விடுகிருன். அவனுக்கு நற்கதியும் சித்திக் கின்றது. ஒவ்வொரு ஜீவனும் இவ்விதம் நற்கதியை அடைய மக்கள் உதவி புரிவது மிகவும் அவசியமாகும்.

"முத்ராதிகாரிகள் அக்ரஹாரம், குடித்தெருவு முதலிய இடங்களில் எந்த வீட்டில் யார் மரண அவஸ்தையிலிருப்பினும், அவர்களுக்குப் பிரக்ஞை தப்புவதற்கு முன், அவ்வூர்க் கோவில் பிரசாதத்துடன் அவர் அருகில் சென்று, ஸ்ரீமடத்திலிருந்து பகவத் சிரவண விஷயமாக அச்சிடப்படும் பத்திரிகையிலுள்ள தமிழ்த் தாத்பரியத்தை மூன்று முறைவாசித்துக் காட்டி, 1008 தடவை ஈசுவர நாமாவையாவது, விஷ்ணு நாமாவையாவது உரக்க உச்சாடனம் செய்துவிட்டுப் பிரசாதத்தையும் கொடுத்து வர வேண்டும்".

"அவ்விதமாகவே சேரிகளிலுள்ள நாட்டாண்மைக்காரர்கள் மூலம் கோவில் பிரசாதத்தைச் சேர்ப்பித்து, அவரைக்கொண்டே மரணுவஸ்தையில் இருப்பவர்களின் முன்னிலையில் ஈசன் நாமாவை 1008 தடவை உரக்க ஜபிக்கச் செய்யவேண்டும். முக்கியமாக ஹிந்து மதத்திலுள்ள ஒவ்வொரு ஜீவனுக்கும் கடைசிக் காலத்தில் நமது முத்திராதிகாரி ஏற்பாட்டின் மூலம் பகவத் சிரவணம் காதில் விழும்படி செய்வதே இதன் நோக்கமாகும்."

* * * * *

## தேச கலகக் காலத்தில் ஸ்திரீ புருஷர்களுக்கு சுத்திச் அனுமதி

1946-ஆவது ஆண்டின் பிற்பகுதியில் நமது பாரத நாட்டைத் துண்டாக்க வேண்டுமென்ற கிளர்ச்சியை முகம்மதியர்கள் மேற் கொண்டதின் காரணமாக, வங்காளத்தில் மதவெறி பிடித்த அந்தச் சமூகத்தினர் நவகாளி முதலிய இடங்களில் ஹிந்துக்களைக் கொலை, களவு, தீ வைத்தல் முதலிய செய்கைகளால் துன்புறுத்த முற்பட்டனர். அவர்கள் அவற்ருேடு நிற்காமல் ஹிந்துக்களைப் பலாத்காரமாக மதம் மாற்றுவதும், ஹிந்துப் பெண்களைத் தூக்கிச் சென்று துன்புறுத்திப் பலாத்காரம் செய்வதுமான செயல்களில் ஈடுபட்டனர். இதைக் கேள்வியுற்ற நாட்டு மக்கள் மிகவும் கவலை கொண்டனர், காந்திஜீயும் இந்த நிலைமையை நேரில் காண

நவகாளிக்குச் சென்ருர். இவ்விதம் பலவந்தமாக மதம் மாற்றப் பட்டவர்களையும் பலாத்காரம் செய்யப்பட்ட ஸ்திரீகளையும் மறு படியும் நமது மதத்தில் சேர்த்துக்கொள்ள மதம் எவ்வாறு இடம் தருகின்றது என்பதை விளக்கி, ஸ்வாமிகள் ஓர் அறிக்கையை விடுத்தார்கள். அந்த அறிக்கை பின்வருமாறு :—

"பலாத்காரமாக மதம் மாற்றப்பட்டவர்கள் தங்களது மதத்தை இழந்ததாகக் கொள்ளக்கூடாது. பலாத்காரமாகத் தூக்கிச் செல்லப்பட்டும் மானபங்கப் படுத்தப்பட்டவர்களுமான ஹிந்து ஸ்திரீகளை ஹிந்து சமயம் நிராகரிக்கக்கூடாது. இப்படிப் பட்டவர்களை மீட்பதற்குப் பிராயச்சித்த வழிகள் நமது சாஸ்தி ரங்களில் கூறப்பட்டுள்ளன. மேலும் மானபங்கப்படுவதை விட இறப்பதையே மேலாகக் கருதிய ஹிந்து ஸ்திரீகள் எல்லோ ருடைய பெயர்களையும் சேகரிக்கவேண்டும். அப் பெண்மணிகளைப் பற்றித் தினமும் காலையில் எல்லா ஹிந்துக்களும் ஸ்மரித்து அவர் களைக் கௌரவிக்க வேண்டும். கலவர சமயத்தில் அபாய நிலையி லிருந்தும் கஷ்டங்களிலிருந்தும் பிற சமூகத்தினரை மீட்டு உதவி செய்த உத்தம புருஷர்கள் இந்துக்களாயிருந்தாலும், அல்லது அவர்கள் முஸ்லிம்களாக இருந்தாலும் தேச மக்கள் அவர்களைக் கௌரவிப்பது தகுதியாகும்."

மேற்கண்ட அறிக்கையை விடுத்ததுடன், திக்கற்றவர் களுக்குப் பண உதவியும் போர்வை துணிமணிகளும் அனுப்பும் படி ஸ்வாமிகள் தம் சிஷ்யர்களுக்கு ஓர் ஆக்ஞையையும் விடுத் தார்கள். மடத்திலிருந்தும் அவர்களுக்கு உதவி அனுப்பப் பட்டது.

**பிராசீன இந்தியக் கலை : எகிப்து முதல் ஜாவா வரையில் ஹிந்து நாகரிகம்**

*1947*-ஆவது வருடம் ஜனவரி மாதத்தில் ஸ்ரீ மடத்தில் நடை பெற்ற **அய்யுவய்யர் வேதாந்த பாடசாலையின்** வருடாந்தரக் கொண் டாட்டத்தில், **நமது புராதனக் கலையின் புனருத்தாரணமும்—தற்கால நெருக்கடியைத் தீர்க்கும் வழியும்**—என்னும் விஷயம் பற்றி ஸ்வாமிகள் அரியதோர் சொற்பொழிவாற்றினார்கள். அதன் சுருக்கம் பின்வருமாறு :—

"பண்டைக் காலத்தில் இந்தியக் கலையின் நாகரிகம், மேற்கில் எகிப்து முதல் கிழக்கில் ஜாவா வரையில் பரவி மிகுந்த உன்னத நிலையை அடைந்திருந்தது. அதன் மேன்மையை நாம் இன்று நன்கு உணர்வதன் மூலம், நமது நாடானது மீண்டும் அதற்கேற்ற

உயர் நிலையை அடையுமாறு நாம் செய்யக்கூடும். நமது நாட்டுக்கும் அந்நாடுகளுக்கும் இடையே தேசிய ஒற்றுமையை நாம் மீண்டும் வளம் பெறச் செய்யலாம். ஹிந்து கலாசாரங்களின் அறிவானது வெளி நாடுகளில் வேரூன்றியிருக்கிறது. அதன் அடையாளங்களை இன்றும் நாம் அந்நாடுகளில் காணலாம்.

நம் புராதன சம்ஸ்கிருத நூல்கள் பலவற்றை, ஜெர்மன் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்த நிபுணர்கள் பலர் எடுத்துச் சென்று அந்நாட்டின் தேசீய புஸ்தகசாலைகளுக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டனர். அந் நூல்களையெல்லாம் சென்ற மகாயுத்தத்தின் நஷ்ட ஈடாக இந்தியாவுக்குத் திருப்பித் தர வேண்டுமென நமது அரசாங்கத்தார் கோரியிருப்பதைப் பற்றி நாம் மிகவும் பெருமைப்படவேண்டும். இக்காலத்தில் அரசியல் தான் ஜனங்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. மதத்தைப்பற்றி அதிகமாகக் கவலைப்படுவோரில்லை. அப்படியிருந்தும் சம்ஸ்கிருதத்தின் அருமையை உணர்ந்து நம் பிரதிநிதிகள் ஜெர்மன் நாட்டிடம் அவ்விதம் கோரியிருப்பதானது நமது கலையின் சக்தி மக்களது மனஸில் வேரூன்றி இருப்பதைத் தெளிவாக்குகின்றது. ஜாவா நாட்டின் தலைவரான டாக்டர் சுகர்ணோ (சுகர்ணன்) இந்தியாவின் வாழ்த்துக்களை ஏற்றுக் கொண்டு, இந்திய மக்களிடை தமது பரிவைக் காட்டிக் கொண்டிருக்கிறார். இந்தியாவிலிருந்து அந்நாட்டிற்குள் பரவிய கலாசார ஞானத்தின் மூலம் இவ்விரு நாடுகளுக்குள் ஏற்பட்டுள்ள தொடர்பைப் பாராட்டி நம்முடன் உறவு கொண்டாடியிருக்கிறார். இன்றும் ஜாவா நாட்டில் இந்தியச் சின்னங்களை நாம் காண்கிறோம். அங்கு மக்களின் பெயர்கள் ஹிந்துப் பெயர்களுடன் சம்பந்தப்பட்டுள்ளன. நம் தேசத்தின் ஆலயங்கள் இன்றைக்கும் அங்குக் காணப்பெறுகின்றன.

புத்தமதம் வேதமதத்தின் ஒரு பிரிவேதான். புத்தரை விஷ்ணு பகவானது அவதாரமெனவே நாம் கொண்டாடுகிறோம். அவர் அஹிம்சையையும் சத்தியத்தையும் விசேஷமாக வற்புறுத்தினார். வேதமும் இவையிரண்டையும் வற்புறுத்துகின்றது. ஆனால் வேதத்தில் கூறப்பட்டுள்ள யாகம் முதலான கர்மாக்களை மட்டும் புத்தர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதிகாரி பேதத்தை ஒப்புக் கொள்ளாத வைதிக மதந்தான் புத்த மதம். அந்த மதத்தை இதர நாடுகளில் பரவும்படி நாம் விட்டுவிட்டோம். மிகப் புராதனமான சீன மத நூல்களில் கௌடபாதரது காரிகை சீன

பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதை நாம் காண்கிறோம். **சாந்திநிகேதனத்தில்** சீன அறிவாளிகளைக்கொண்டு அந்நாட்டுடன் கலைத் தொடர்பைப் புதுபித்துக்கொள்ள **ரவீந்திரநாத் டாகுர்** முயன்றிருக்கிறார். நமக்கும் சீன மக்களுக்குமுள்ள பொதுவான கலை அறிவைப்பற்றி அந்த நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கின்றனர்.

எகிப்தின் பண்டைய காலத்திற்கும் புராதன இந்தியாவுக்கும் இணைப்பு இருந்ததென ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளார்கள். ஸஹாரா பாலைவனத்துக்கு அடுத்துள்ள பல இடங்களுக்கு ராமரது பெயருடன் சம்பந்தப்படுத்திப் பெயர்கள் இடப்பட்டுள்ளன. ஸஹாரா பாலைவனமே வற்றிப்போன கடல் இருந்த இடமெனக் கூறப்படுகிறது. ஸாகரம் என்னும் சொல்லே ஸஹாரா என்று மருவுற்றிருத்தல் வேண்டும். இவ்வாறு இந்த இருநாடுகளின் தொடர்புக்கு அங்குச் சில சின்னங்கள் காணப்படுகின்றன.

கிறிஸ்தவர்களால் பழைய வேதம் எனக் கூறப்படும் பைபிளில் காணப்படும் **ஆதம்** என்னும் சொல் **ஆத்மா**வையும், **ஈவான்** என்னும் சொல் **ஜீவன்** என்பதையும் குறிப்பிடுகின்றன. அதில் கூறப்பட்டுள்ள ஆப்பிள் என்னும் சொல் **பிப்பலம்** என்னும் கனியைக் குறிப்பிடுகின்றது. இது ஆசையைக் காட்டுகிறது. ஆதம் என்பது தோஷங்கள் அற்ற பரமாத்ம ஸ்வரூபம்; ஈவான் அல்லது ஜீவன் பாபத்தில் சம்பந்தப்பட்டதாகும். இதுவே பிறப்பு இறப்பு இவைகளுக்குக் காரணம்.

"**த்வா ஸுபர்ணா—பிப்பலம்**" என்னும் உபநிடத மந்திரம் இவ் விஷயத்தை அறிவுறுத்துகிறது. பழைய பைபிளை யூதர்களும், முஸ்லிம் அராபியர்களும், கிறிஸ்தவர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அதில் அடங்கியிருக்கும் கதைகளும், உபதேசங்களும் ஹிந்து சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொண்டுள்ளனவெனக் கூறலாம்.

ஆரியன், திராவிடன், ஸெமிட்டிக் என்றெல்லாம் வெவ்வேறு பிரிவுகளாகச் சமூகத்தைப் பிரித்துக் கூறியவர்கள் மேனாட்டு ஆராய்ச்சியாளர்களாவர். அவர்களில், முதன்மையாக இந்தியாவில் குடி ஏறிய மேல்நாட்டு கிறிஸ்தவப் பாதிரிகளே இவ்வித பேதங்களைக் கற்பனை செய்தார்கள். பிளவுக்கான விதைகளை முதலில் விதைத்தவர்களும் கிறிஸ்தவ மிஷனரிகள் தான். அதைக் கொண்டு அவர்கள் நம் தேசத்தினர்மீது தங்களுக்கு ஆதிக்கத்தையும் உறுதிப் படுத்திக்கொண்டனர். அரசியல்

வாதிகள் அதைத் தங்களுக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக் கொண்டனர்.

எகிப்து முதல் ஜாவா வரையில் இந்திய தேசத்துக்கு ஏற்பட்ட கலைத் தொடர்பைக் கொண்டு இப்பொழுது இந்நாடுகளுக்குள் உறவையும் ஒற்றுமையையும் உண்டு பண்ணிக்கொள்ள வேண்டும். இத்தகைய உண்மைகளை உணர்ந்து நம் நாட்டிலும் பல சமூகத்தினரிடையே சகோதரத் தன்மையையும், நல்லுணர்வையும் ஏற்படுத்த முயலவேண்டும். தெய்வ வழிபாடு பாஷை முதலிய சிறு பேதங்களைக் காரணமாகக் கொண்டு இந்தியாவைப் பல பாகங்களாகப் பிரிக்க முயலக்கூடாது. தவறான சரித்திரங்களை படிப்பதன் மூலம் பொய்யான பிரிவினைகளை ஏற்படுத்தி அரசியல் நோக்கத்துடன் மக்கள் போராட்டத்தை நடத்துவார்களானால், நமது ஆசிய நாடே பிளவுபட்டுச் சிதறுண்டு போகும். மற்றொரு மூன்றாவது கட்சியினருக்கே அது இடம் தருவதாகும்.

ஒரு முஸ்லிம் நாட்டின் பிரதிநிதியான டாக்டர் சுகர்ணோ இத்தேசத்திற்கும், தமது நாட்டிற்கும் பொதுவாகவுள்ள பழைய நாகரிகத்தைப்பற்றி ஆதரவுடன் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அதுபோல் மேற்கு ஆசிய நாடுகளுடனும் நமது கலைத் தொடர்பைத் திரும்பவும் கண்டு அவர்களுடன் சமரசத்தையும், சகோதரத் தன்மையையும் வளர்த்து, ஆசிய கண்டத்தின் பரிபூர்ண ஒற்றுமைக்கும், உலக சமாதானத்திற்கும் வழி தேட வேண்டும். இதுவே இத்துறையில் சிறந்த வழியென நான் கருதுகிறேன். இந்தத் துறையில் ஆராய்ச்சி நடத்தச் சர்க்காரும், தனிப்பட்டவர்களும் உதவிபுரியவேண்டும்.

சீனர், பாரசீகர், கிரேக்கர் ஆகிய எல்லா ஜாதியினரைப் பற்றியும் மநு குறிப்பிட்டிருக்கிறார். இவர்கள் யாவரும் க்ஷத்திரிய அம்சம் பெற்றவர்களென அவர் கூறியிருக்கிறார். நாம் அவர்களுடன் நட்புக் கொண்டாடலாம். இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு அரசியல் தூதுகோஷ்டிகள் அனுப்புவதைவிட, கலைஞர் கோஷ்டிகளை அந்நாடுகளுக்கு அனுப்புவதால் ஒற்றுமையை நாம் நன்கு வளர்க்கலாம். அவர்களிடையே பரஸ்பர நல்லெண்ணத்தையும் ஏற்படுத்திக்கொள்ளலாம். பழைய காலத்தில் நம் முன்னோர்கள் ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்ததுபோல் நாமும் வாழ்ந்து கலையையும் சாஸ்திரங்களையும் காப்பாற்றுவோமாக.”

* * * * *

## காஞ்சி ஸ்ரீ காமாக்ஷி அம்பிகையின் வெள்ளி ரதத்திருப்பணி

காஞ்சி ஸ்ரீ காமாக்ஷியம்மன் ஆலயத்திற்குக் கும்பாபிஷேகம் செய்த பின் அந்த அம்பிகைக்கு ஓர் வெள்ளி ரதத்தையும் செய்து வைக்கவேண்டுமென்று ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண்டார்கள். இந்தப் பணியை நிறைவேற்றிவைக்கும் பொறுப்பை மடத்தின் சிஷ்யர்களில் ஒருவரான, சென்னை **தர்மரக்ஷாமணி கே. பால சுப்பிரமணிய ஐயரிடம்** சுவாமிகள் ஒப்படைத்தார்கள். ஐயரவர்கள் தமக்கிருக்கும் பல அலுவல்களுக்கிடையே இந்தத் திருப்பணியைத் தொடக்கம் செய்தார்கள். திருப்பணிக்குச் சுமார் ரூபாய் எழுபத்தையாயிரம் வரை செலவாயிற்று. இதில் பாதித் தொகை மடத்திலிருந்து ரொக்கமாகவும், வெள்ளியாகவும் கொடுக்கப்பட்டது. மீதித் தொகையானது ஐயரவர்களது தீவிரமான உழைப்பினுல் சேகரிக்கப்பட்டது. ரதத்தை நிறுத்துவதற்கெனச் சுமார் பதினுயிரம் ரூபாய் செலவில் ஒரு மண்டபம் கட்டப்பட்டது. அந்தச் செலவில் ரூபாய் நான்காயிரத்தைக் காஞ்சீபுரம் ஜவுளி-மளிகை வியாபாரிகள் ஏற்றுக்கொண்டனர்.

1947 பிப்ரவரி 16-ஆம் தேதி விய வருடம் மாசி மாதம் 4-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அந்த வெள்ளி ரதத்தை வெள்ளோட்டம் விடுவதற்கு நாள் குறிப்பிடப்பட்டிருந்தது. ஸ்வாமிகளும் அன்று காஞ்சீபுரத்திற்கு விஜயம் செய்தார்கள். அன்று காலையில் ஸ்ரீ அம்பிகையைச் சிறந்த முறையில் அலங்கரித்து, மிகுந்த வேலைப்பாடுகளுடன் கைதேர்ந்த சிற்பிகளால் வெகு அழகாக நிர்மாணிக்கப்பட்ட அந்த ரதத்தில் ஆரோகணிப்பித்து வழக்கமாக அம்பிகை பவனி வரும் ராஜ வீதியின் வழியே ஊர்வலம் நடைபெற்றது. ஸ்வாமிகளும் ஊர்வலத்துடன் முழுவதும் கால்நடையாகவே வந்தார்கள். உள்ளூர் வாசிகளும், சென்னையிலிருந்தும் மற்றும் வெளியூர்களிலிருந்தும் வந்தவர்களுமான பல்லாயிரக்கணக்கான மக்கள் அந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு களித்தனர். அவர்கள் யாவருக்கும் வெள்ளி ரதத்தில் பவனி வரும் அம்பிகையையும், கால் நடையாக உடன் வரும் ஆசாரிய மூர்த்திகளையும் அன்று ஒருங்கே தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்தது. சுமார் நான்கு மணி நேரம் நடைபெற்ற இந்த ஊர்வலம் பகல் 12 மணிக்குக் கோயிலை அடைந்தது. இந்தத் திருப்பணியில் மிகுந்த சிரத்தையுடன் ஈடுபட்ட **ஸ்ரீ பால சுப்பிரமணிய ஐயரவர்களுக்கு** ஸ்வாமிகள் பொன்னுடை போர்த்தி அவருடைய பணியைப் புகழ்ந்து அவரை ஆசீர்வதித்தார்கள்.

அப்பொழுது சென்னையில் தங்கியிருந்த **புரி ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளும்** காஞ்சீபுரத்திற்கு விஜயம் செய்து அம்பிகையைத் தரிசித்துக்கொண்டு, நமது ஸ்வாமிகளையும் சந்தித்து, தர்ம பிரசார சம்பந்தமாய் ஸ்வாமிகளிடம் வெகு நேரம் உரையாடினார்கள்.

**ஸந்த கிருஷ்ணபுரத்தில் சாதுர்மாஸம்**

அவ்வருட சிவராத்திரி பூஜையை ஸ்வாமிகள் **காஞ்சீபுரத்திலேயே** நடத்தினார்கள். பின்னர் **உத்திரமேரூர், மதுராந்தகம், திருக்கழுக்குன்றம்** முதலான க்ஷேத்திரங்களுக்கு அவர்கள் விஜயம் செய்துவிட்டு, சங்கர ஜயந்தி உத்ஸவத்தை 1947-ஆவது வருடம் ஏப்ரல் மாதம் 26-ஆம் தேதி வட ஆர்க்காடு ஜில்லா **எசையனூரில்** கொண்டாடினார்கள். அவ்வருட வியாச பூஜை திருக்கோயிலூருக்கு அருகிலுள்ள **வஸந்த கிருஷ்ணபுரம்** என்னும் சிற்றூரில் ஜூலை மாதம் 3-ஆம் தேதி நடைபெற்றது. சாதுர் மாத சங்கல்பத்திற்காக அவ்விடம் ஸ்வாமிகள் இரண்டு மாதங்கள் தங்கியிருந்தார்கள். ஸ்வாமிகள் அங்குத் தங்கியிருந்த பொழுது திருக்கோவிலூர் வக்கீல் V. G. ராமசந்திர ஐயர் முதலான பிரமுகர்கள் மடத்தின் பணிகளில் ஈடுபட்டிருந்தார்கள்.

**சுதந்தர தினச்செய்தி**

1947-ஆம் வருடம் ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி நமது நாடு சுதந்தரமடைந்ததை ஒட்டி ஸ்வாமிகள் 1947 ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதியில் தேச மக்களுக்கு விடுத்த செய்தி கீழே பிரசுரிக்கப்பட்டுள்ளது.

"நமது பாரத நாடு விடுதலை அடைந்திருக்கும் இத்தருணத்தில் இந்தப் புராதன நாட்டு மக்கள் யாவரும் ஒரே மனத்துடன் ஸ்ரீ பகவானை மனமுருகித் துதிக்கவேண்டும். நமக்கு மேன் மேலும் மனோபலத்தையும் ஆத்மிகத்துறையில் ஈடுபடச் சக்தியையும் கொடுத்தருளுமாறு வேண்டுவோம். அவரது அருளால் தான் நமக்குக் கிடைத்திருக்கும் இந்தச் சுதந்தரத்தை நாம் காப்பாற்றிக்கொள்ளவும், உலகின் கண்ணுள்ள எல்லா ஜீவன்களும் ஆனந்த வாழ்க்கையைப் பெற உதவி செய்யவும் முடியும்.

"பாக்யவசமாக நமது நாட்டின் கொடியின் நடுவில் தர்ம ஸ்வரூபியான பகவானது சக்கரம் அமைக்கப்பெற்றிருப்பது போற்றத்தக்கதாகும். அதனுடன் சரித்திரப் பிரசித்திபெற்ற தேவானும் பிரியன் என்னும் **அசோக சக்கரவர்த்தியால்** வகுக்கப்

பட்ட நீதிகளோடு அந்தச் சக்கரம் நம்மைச் சம்பந்தப்படுத்து கிறது. பகவத் கீதையில் பகவானுல் உபதேசிக்கப்பட்ட ஆத்மிகத் துறையில் அது நம்மை ஈடுபடச்செய்கிறது. கீதை 3-ஆவது அத்தியாயம் 16-வது சுலோகத்தில் ஏவம் பிரவர்த்திதம் சக்ரம்' என்று பகவான் கூறியிருப்பதால் தர்மம் சக்ரத்தின் உருவத்திலேயே பிரகாசிப்பது விளக்கமாகின்றது. மேலும் அந்த அத்தியாயம் 14, 15 சுலோகங்களில், உணவிலிருந்து உடல் உண்டாகிறது என்றும், மழையிலிருந்து உணவு விளைகிறது என்றும், யாகங்கள் செய்வதால் மழை பொழிகிறதென்றும், கர்மத்தினுல் யாகங்கள் செய்யப்படுகின்றனவென்றும், கர்ம மானது வேதங்களிலிருந்து பிரதிபாதிக்கப்படுவதென்றும், வேத மானது அக்ஷர ஸ்வரூபமான பிரமத்தினின்று வெளிவருவ தென்றும், இக்காரணங்களைக் கொண்டு பிரம்மம் வேள்விகளில் அடங்கியுள்ளதாக இந்தத் தர்ம சக்கரமானது நமக்கு விளக்கம் கூறுகின்றது. அசோக சக்கரவர்த்தியின் உரிய நினைப்புடன் தொடங்கும் இந்தச் சுதந்தரமானது கடவுள் அருளால் அறம், பொருள், இன்பம், வீடு இத்தகைய அரிய பயன்களை அளிக்கட்டும்.

"வெகு காலமாக நாடு சுதந்தரத்திற்காகப் பாடுபட்டுள்ளது. கடவுள் அருளாலும், மகான்களின் ஆசியினுலும், மக்களின் ஒப்பற்ற தியாகத்தினுலும் கிடைத்த இந்தச் சுதந்தரத்தினுல் நமது நாடு செழித்தோங்கி, பஞ்சம் விலகி, தேசமக்கள் சமூகச் சச்சரவுகள் எதுவுமின்றி, ஒற்றுமையுடன் அன்புகொண்டு வாழ அருள் பொழியவேண்டுமென எங்கும் நிறைந்த கடவுளைப் பிரார்த்திப்போமாக.

"நம் நாடு சுதந்தரம் அடைந்ததை ஒட்டி நாமும் சுதந்தரம் அடைய முற்பட வேண்டும். நம்மை நாம் முற்றிலும் அறிந்து கொண்டால் தான் நாம் சுதந்தரம் அடைந்தவர்களாவோம். நமது மனமோ நம் இந்திரியங்களுக்கு வசப்படுவதில்லை. ஆசை யையும் கோபத்தையும் நம்மால் அடக்க முடியவில்லை. இவை இரண்டுமே நம்மை எப்பொழுதும் துன்புறுத்தி வருகின்றன. எந்தப் பொருளை எவ்வளவு அடைந்தபோதிலும், போதும் என் னும் மன நிம்மதி நமக்கு ஏற்படுவதில்லை. உலகத் துயரம் நம்மை விட்டபாடில்லை. துயரத்தைக் கண்டு மனமும் கலங்கத்தான் செய்கிறது. இதிலிருந்து கரை ஏற வழியென்ன?

"நமது மனம் நமக்கு வசமாகவேண்டும். எவ்வளவோ கால மாகத் தீவிரமாக வேலை செய்துகொண்டிருந்த இந்த மனஸைத் தன்னுள் அடக்கச் சிறிது சிறிதாகவே முயற்சிக்கவேண்டும்.

மனம் அடங்கிவிட்டால் நமக்கு வேறொன்றும் தேவையில்லை. அதுதான் நாம் பெற வேண்டிய பூர்ண சுதந்தரமாகும்.

''ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனஸைச் சாந்தமாக வைத்துக்கொண்டு, வேறு நினைவுகளை மனஸில் செலுத்தாமல் கடவுளது தியானத்தில் அமரவேண்டும். வேறு நினைவுகள் இல்லாமல் தியானம் செய்வதால் நாளடைவில் புத்தியானது தெளிவடையும். ஆசையையும், கோபத்தையும் அடக்குவதற்கு இது ஓர் சாதனமாகும். இவ்வித சாதனையைப் படிப்படியாக மேற்கொண்டவனுக்குச் சீக்கிரமாக ஆத்ம ஞானம் உண்டாகும். குறைவில்லாத ஞானத்தைப் பெறுபவன்தான் உண்மையான சுதந்தரனாகின்றான்.

''பிற ஸ்திரீகளைத் தாயார்களாக மதிக்கவேண்டும். பிற உயிரைத் தன்னுயிர் போல் மதிக்க வேண்டும். உயிர் போவதாயிருந்தாலும் உண்மையே பேசவேண்டும். சமூகச் சச்சரவுகள் செய்வதை அறவே ஒழிக்கவேண்டும். ஒவ்வொருவனும் தனது அறிவு வளர்ச்சிக்கும், ஆத்ம முன்னேற்றத்திற்கும் பாடுபட வேண்டும். எல்லோரிடமும் சம அன்பு கொண்டு ஒழுக வேண்டும். மக்களெல்லாம் சுகமாக வாழவேண்டுமென ஒவ்வொருவனும் நினைக்கவேண்டும்.''

* * * * * *

### ஆத்மபோதேந்திரர் அதிஷ்டான தரிசனம்

வசந்தகிருஷ்ணபுரத்தில் சாதுர்மாச சங்கல்பம் முடிவடைந்த பிறகு அதற்கடுத்த ஒரு வருடம் தென்னார்க்காடு வாசிகளின் பிரார்த்தனைக்கு இணங்கி ஸ்வாமிகள் அந்த ஜில்லாவிலேயே விஜயம் செய்திருந்தார்கள். 1948 பிப்ரவரி 9-ஆம் தேதி நிகழ்ந்த **மகோதய புண்ணிய காலத்தன்று** திருப்பாதிரிப்புலியூருக்குக் கிழக்கில் தென்பெண்ணையாறு கடலில் சங்கமம் ஆகும் இடத்தில் ஸ்வாமிகள் சமுத்திர ஸ்நானம் செய்தார்கள். அவ்வருட சங்கர ஜயந்தி, வியாச பூஜை, நவராத்திரி இவ்விழாக்களெல்லாம் விழுப்புரத்திற்கடுத்த **சேந்தனூர்** ரெயில் நிலையத்திலிருந்து 5 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள **வேங்கடாத்திரி அகரம்** என்னும் ஊரில் நடைபெற்றது. ஸ்வாமிகள் அங்கே விஜயம் செய்திருந்தபோது அவ்விடமிருந்து 5 கிலோ மீட்டர் தூரமுள்ள **வடவாம்பலத்தில்** காமகோடி பீடத்தின் 58-வது ஆசார்யர்களான **ஆத்மபோதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின்** அதிஷ்டானத்திற்கு அடிக்கடி சென்று அவ்விடம் வெகு நேரம் தியானத்தில் அமர்ந்திருப்பார்கள்.

ஏகாந்தமான அந்த இடத்தில் பல மணி நேரம் அவர்கள் தங்கிப் பண்டிதர்களுடன் வேதாந்த தத்துவ விசாரத்தையும் செய்து கொண்டிருப்பார்கள். வெளி ஜில்லாக்களிலிருந்தும் சென்னையி லிருந்தும் பக்தர்கள் பலர் ஒவ்வொருநாளும் அந்த ஊருக்கு வந்து ஸ்வாமிகளைத் தரிசித்தவண்ணமாக இருந்தனர். அக்காலத்தில் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்த **ஸ்ரீ என். சந்திரசேகர ஐயர்** பல நண்பர்களுடன் ஸ்வாமிகளை ஒரு நாள் தரிசிக்க வந்தார். அந்த நண்பர்கள் பலர் ஆங்கிலம் படித்துப் பெரிய சர்க்கார் உத்தியோகத்திலும், வக்கீல் முதலிய பிற தொழில்களிலும் ஈடுபட்டுள்ளவர்கள். அவர்களது பக்குவத்திற்குகந்தவாறு அவர் களுக்கு உபதேச மொழிகளை அருளவேண்டுமென்று ஐயரவர்கள் ஸ்வாமிகளை வேண்டிக்கொள்ள, உலக சரித்திர சம்பந்தமாகவும், விக்ஞானத்தைக்கொண்டும் பரம் பொருளின் தத்துவத்தைப் பற்றி மிகவும் தெளிவாக ஸ்வாமிகள் அவர்களுக்கு உபதேசம் அருளினார்கள்.

**மகாத்மா காந்தி அவர்களது மறைவு**

1948 ஜனவரி 30-ஆம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு டில்லியில் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் செல்லுகை யில் மகாத்மா காந்தி துஷ்டன் ஒருவனால் சுடப்பட்டுக் காலகதி யடைந்துவிட்டார். தியாகம், தபஸ் முதலான ஆத்ம குணங் களுடன் விளங்கி, பாரத நாட்டில் இருக்கும் எல்லா மக்களிடமும் பேதமற்ற அன்பு வைத்து, தம் உள்ளத்திற்குத் தோன்றிய பல வழிகளில் உறுதியுடன் மக்களது நலனுக்கு அவர் பாடுபட்டு வந்தார். அவர் ஒரு மகாபுருஷர். எவரும் எதிர்பாராத வகையில் அவர் காலகதியடைந்ததானது உலகத்தார் அனைவரை யும் துக்கத்தில் ஆழ்த்திற்று. காந்திஜியின் பிரிவினால் நாட்டுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை விளக்கி ஸ்வாமிகள் பத்திரிகைகளுக்கு ஒரு செய்தி அனுப்பியிருந்தார்கள். அதில் சென்ற 1927-ஆவது ஆண்டில் பாலக்காட்டில் மகாத்மாவைச் தாம் சந்தித்ததைப்பற்றியும், ராமநாம மகிமையில் அவருக்கு இருந்த பக்தியைப்பற்றியும் குறிப்பிட்டிருந்தார்கள். அவரது ஆத்மா சாந்தியடையவேண்டு மென்று மக்கள் யாவரும் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டுமென அச்செய்தியில் ஸ்ரீ ஸ்வாமிகள் குறிப்பிட்டிருந்தார்கள்.

**குற்றாலத்தில் அகில முத்ராதிகாரிகளின் சம்மேளனம்**

1948-ஆம் வருடத்தின் பிற்பகுதியில் ஸ்வாமிகள் சில மாதங்கள் தஞ்சை ஜில்லா **குற்றாலத்தில்** விஜயம் செய்திருந்

தார்கள். அப்பொழுது ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளும் இரவு 1 மணிக்குக் கிளம்பி மாயவரம் சென்று துலாஸ்நானம் செய்து கொண்டுதிரும்பிப் பூஜைக்குக் குற்றாலம் வருவது வழக்கம். அப்பொழுது அங்கு வந்த ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் ஸ்வாமிகளைத் தரிசித்து, உலக மக்களிடையே கடவுள் பக்தியைப் பரப்பும் விஷயம்பற்றியும் ஸம்ஸ்கிருத பாஷையைக் காப்பாற்றும் விஷயம்பற்றியும் பல மணி நேரம் அவர்களுடன் உரையாடி அவர்களின் அரிய ஆலோசனைகளையும் கேட்டறிந்தார்.

அநேகமாக ஒவ்வொரு வருடமும் முத்திராதிகாரிகளை நேரில் வரவழைத்து அதற்கு முன் வருடத்தில் அவர்களால் நடத்தப் பெற்ற கைங்கரியங்களைப்பற்றியும், அடுத்த வருடம் நடைபெற வேண்டிய வேலைகளைப்பற்றியும் ஸ்வாமிகள் பரிசீலனை செய்வது வழக்கம். அதன்படி, குற்றாலத்தில் 1948 நவம்பர் மாதம் 6, 7, 8, 9-ஆம் தேதிகளில் ஒரு சம்மேளனம் கூட்டப்பட்டது. பகுதிபகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு நாளும் சில குறிப்பிட்ட முத்ராதிகாரிகளை அங்கு வரும்படி ஸ்வாமிகள் கட்டளையிட்டிருந்தார்கள். அவ்விதம் நாளொன்றுக்குச் சுமார் 300 முத்ராதிகாரிகள் அங்குக் கூடி ஸ்வாமிகளின் உபதேச மொழிகளைக் கேட்டனர். ஒவ்வொரு முத்ராதிகாரியையும் தனிமையில் அழைத்து முன் வருடத்தில் அவர் இலாகாவில் நடைபெற்ற கைங்கரியத்தைப் பற்றி ஸ்வாமிகள் கேட்டறிந்தார்கள்.

### மாயவரத்தில் ஸ்வாமிகள் செய்த உபந்யாசம்

1948 நவம்பர் மாதத்தில் ஸ்வாமிகள் துலா காவேரி ஸ்நானத்திற்காக மாயவரத்திற்கு விஜயம் செய்தபொழுது ஸர். டி. முத்துஸ்வாமி அய்யரின் பேரன், **ஸ்ரீ கோபாலஸ்வாமி சாஸ்திரிகள்** ஸ்வாமிகளைத் தமது இல்லத்திற்கு வரவேற்றுப் பாதபூஜை, பிக்ஷை முதலானவற்றை நடத்திவைத்தார். ஸ்வாமிகளைத் தரிசிக்கவும், அவர்களின் உபதேசமொழிகளைக் கேட்கவும் ஆயிரக் கணக்கான ஸ்திரீ புருஷர்கள் அவ்விடம் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் அப்பொழுது ஸம்ஸ்கிருதம் கற்கவேண்டிய அவசியம் பற்றிச் சிஷ்யர்களுக்கு உபதேசிக்கையில் பின்வருமாறு கூறினார்கள் :

"உலகம் நன்மை பெற வேதங்கள் வளரவேண்டும். ஒவ்வொரு பிராம்மணனும் சிறிதாவது வேதம் கற்கவேண்டும். வேதக்கலையைக் கற்பதற்கு ஸம்ஸ்கிருத பாஷை இன்றியமையாததாகும். பள்ளிக்கூடங்களில் அந்தப் பாஷைக்கு ஆதரவு

குறைந்து வருகிறது. அவ்விதம் குறைந்து வருவதற்கு மக்களது சிரத்தைக் குறைவே காரணம். ஒவ்வொரு ஹிந்துச் சிறுவனும் சிறுமியும் குறைந்தது ஆறு மாதங்களாவது இந்தப் பாஷையைக் கற்கவேண்டும். ராமோதந்தம் போன்ற எளிய புத்தகங்களைக் கற்பதினுல் அந்தப் பாஷையிலுள்ள உயர்ந்த நூல்களின் பொருளைச் சிரமமின்றி அறியலாம். இதற்காக ஒவ்வொரு ஊரிலும் ஒரு சிறிய பள்ளிக்கூடம் அமைக்கவேண்டும். அந்த அந்த ஊரிலுள்ள மக்கள் இதை நடத்தி வரவேண்டும். இதற்கென ஒவ்வொரு ஊரிலும் ஓர் ஆஸ்திக சபை அமைத்துக் கொள்ளலாம்.''

அன்று ஸ்வாமிகளைத் தரிசிக்க அங்கு வந்த சாஸ்திர ரத்னுகரம் தேதியூர் **சுப்பிரமணிய சாஸ்திரிகள்** ஸ்வாமிகளுக்குக் காணிக்கையாக ரூ. 1,008 சமர்ப்பணம் செய்தார். அத்தொகை ஸம்ஸ்கிருத பாஷையின் அபிவிருத்தியின் பொருட்டுச் செலவிடப்படுமென ஸ்வாமிகள் கூறினுர்கள். ஸ்திரீகளுக்கு உபதேசம் செய்கையில் ஸ்வாமிகள் குடும்பப் பெண்களுக்கு நாட்டியம் கற்றுக்கொடுத்து வயது வந்த அவர்களைப் பல புருஷர்கள் முன்னிலையில் ஆடவைப்பது தவறு என்றும், ஆகையால் குழந்தைகளுக்கு நாட்டியம் பயில்விக்க வேண்டாமென்றும் எச்சரிக்கை செய்தார்கள்.

**கொச்சி மஹாராஜாவுக்குத் ''தர்சன கலாநிதி'' என்னும் பட்டம் அளித்தது : எர்ணுகுளத்தில் நடைபெற்ற விசேஷ தர்பார்**

இந்தியாவின் சுதேச சம்ஸ்தான மன்னர்களுள் மிகப் பெரிய பண்டிதராக விளங்கியவர் கொச்சி மன்னராகிய **ஸ்ரீ ராமவர்ம மகாராஜா** ஆவார். ஸ்வாமிகள் சென்ற 1928-ஆவது ஆண்டில் கொச்சி சம்ஸ்தானத்திற்கு விஜயம் செய்திருந்தபொழுதே ராஜ குமாரராயிருந்த மன்னர் ஸ்வாமிகளை நேரில் தரிசித்துள்ளார். அக்காலத்திலேயே அன்னுரின் வித்வத் தன்மைகளையெல்லாம் ஸ்வாமிகள் மிகவும் பாராட்டியுள்ளார்கள். இந்த மன்னர் 1948-ஆவது ஆண்டில் விநாயக சதுர்த்தியன்று சிம்மாஸனம் ஏறி, **மகாராஜா** பதவியை ஏற்றுக்கொண்டார். இவரது கலைத்திறனைப் பாராட்டி ஸ்வாமிகள் இவருக்குத் **தர்சன கலாநிதி** என்னும் உயர்ந்ததொரு பட்டத்தை அன்று அளித்தார்கள். அந்தப் பட்டத்தையும், அதற்கான சின்னங்களையும் வழங்குவதற்கென 1948-ஆவது ஆண்டு டிசம்பர் மாதம் 4-ஆம் தேதி மாலை 3 மணிக்கு **எர்ணுகுளத்தில்** அரசாங்க தர்பார் ஹாலில், ஒரு விசேஷ தர்பார்

கூட்டப்பட்டது. சர்க்கார் நியதிப்படி 2-45 மணிக்கே பிரதம மந்திரி **ஸ்ரீ இக்கண்டவாரியர்**, சட்ட மந்திரி **ஸ்ரீ பனம்பள்ளி கோபால மேனன்**, ரெவின்யூ மந்திரி **ஸ்ரீ கே ஐயப்பன்**, கல்வி மந்திரி **ஸ்ரீ ஸி. ஏ. ஊசேப்** இவர்கள் தர்பார் ஹாலுக்கு வந்துசேர்ந்தனர். மற்றும் சட்டசபைத் தலைவர் **ஸ்ரீ எல். எம். பைலி**, ஹைகோர்ட்டு பிரதம நீதிபதி **ஸ்ரீ ஸி. வி. அனந்தகிருஷ்ணய்யர்** இவர்களும் மற்ற நீதிபதிகளும், ராஜ குடும்பத்தினரும், மகாராஜாவின் சர்வாதிகாரி, சேனாதிபதி, பல்வேறு இலாக்காக்களின் அதிகாரிகள், சர்க்கார் பிரதம காரியதரிசி, மற்றக் காரியதரிசிகள், பிரபல பத்திரிகைகளின் ஆசிரியர்கள், நிருபர்கள், செய்தி ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள், சட்டசபை அங்கத்தினர்கள், பொதுமக்களில் பிரபலஸ்தர்கள் இவர்களடங்கிய சுமார் 500 பேர்கள் விசேஷ அழைப்பின் பேரில் தர்பார் ஹாலில் முன்னதாகவே கூடியிருந்தனர்.

இவர்களைத் தவிர, பேராசிரியர்கள் பலரும், சென்னைச் சர்வ கலாசாலையின் ஸம்ஸ்கிருத இலாகாவின் தலைவர் **டாக்டர் ஸி. குஞ்சன் ராஜா**, திருவனந்தபுரம் **மகாகவி உல்லூர் ஸ்ரீ எஸ். பரமேச்வரய்யர்**, **ஸ்ரீமதி அம்பாடி மீனாக்ஷி அம்மாள்**, சாகித்திய குசலன் **ஸ்ரீ எ. டி. ஹரி சர்மா** இவர்களும் சம்ஸ்தான ஆஸ்தான வித்வான்களும் அங்கு விஜயம் செய்திருந்தனர். இளைய ராஜா பகல் 2-55 மணிக்கு விஜயம் செய்தார். அவரைப் பிரதம காரியதரிசி அரசாங்க மரியாதைகளுடன் வரவேற்றார். மகாராஜா திருப்பணத்துறை அரண்மனையிலிருந்து பகல் 2-40-க்கு புறப்பட்டுச் சரியாக 3 மணிக்குத் தர்பார் ஹாலுக்கு வந்து சேர்ந்தார். மகாராஜாவை இளைய ராஜா, பிரதம நீதிபதி, பிரதம மந்திரி இவர்கள் தக்க முறையில் வரவேற்றார்கள். சம்ஸ்தான ராணுவக் காலாட்படை வெளி மைதானத்தில் அணிவகுப்புடன் நின்று மகாராஜாவுக்கு மரியாதை செலுத்திற்று. அப்பொழுது ராணுவ பாண்டு வாத்தியம் முழங்கிற்று.

ஸ்வாமிகளின் பிரதிநிதியாக அங்கு விஜயம் செய்திருந்த சென்னை ஹைக்கோர்ட்டு நீதிபதி **ஸ்ரீ எஸ். பஞ்சாபகேச சாஸ்திரிகள்**, மகாமகோபாத்யாய **ஸ்ரீ என். எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள்**, சென்னை மாகாண மாஜி பிரதம எஞ்சினியர் **ஸ்ரீ எம். கே. ரங்கநாதய்யர்**, சென்னை அட்வகேட் **ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர்** ஆகியோர் தர்பார் ஹாலின் வாயிலில் நின்று மகாராஜாவை வரவேற்று அவரை மேடைக்கு அழைத்துச் சென்றனர். ஹாலுக்குள் மகாராஜா பிரவேசித்தபொழுது அங்குக் கூடியிருந்த யாவரும் அவருக்கு மரியாதை செலுத்தும் வண்ணம் தங்கள் தங்கள்

ஆஸனங்களிலிருந்து எழுந்து நின்றனர். மகாராஜா தமது ஸிம்மாஸனத்தில் அமர்ந்தவுடன் மற்றவர்களும் அவரவர்களுக்குரிய ஸ்தானங்களில் அமர்ந்தனர். மகாராஜாவின் வலப் புறத்தில் நமது ஜகத்குரு ஸ்வாமிகளின் பிரதிநிதிகளும், இடப் புறத்தில் இளைய ராஜாவும் பிரதம மந்திரியும், மற்ற மந்திரிகளும் அமர்ந்திருந்தனர்.

சங்கீத கலாநிதி **செம்பை ஸ்ரீ வைத்தியநாத பாகவதர்** மங்கள கீதத்துடன் கடவுள் வாழ்த்துப் பாடத் தர்பார் துவங்கிற்று. நம் ஸ்வாமிகள் **தர்சனகலாநிதி** என்னும் பட்டத்தை மகாராஜாவுக்கு அளித்து அனுப்பியிருந்த ஸ்ரீமுகத்தை **மகாமகோபாத்யாய ஸ்ரீ அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள்** படித்தார். வடமொழியில் எழுதப்பட்ட அந்த ஸ்ரீமுகத்தின் ஒரு பகுதி பின் வருமாறு:—

"எல்லா நற்குணங்களுக்கும் ரத்தினம்போல் விளங்கி, தர்மங்களிலும், ஆசாரங்களிலும் ஈடுபட்டு எப்பொழுதும் பரமசிவனது திருவடித் தாமரைகளை வணங்கி லக்ஷ்மி கடாக்ஷத்துடன் விளங்கும் கொச்சி ராஜ்ய மன்னர் ஸ்ரீ ராமவர்மா அவர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களும் சித்திக்குமாறு நாராயண ஸ்மரணம் செய்யப்படுகிறது.

நியாயம், வைசேஷிகம் முதலிய தர்சன சாஸ்திரங்களில் பரிபூர்ண ஞானத்தைப் பெற்றுள்ள நீங்கள் அவற்றை மேன்மேலும் பிரசாரம் செய்து பரப்புவதில் கொண்டுள்ள விசேஷ முயற்சியையும், சாஸ்திர கலாசாலைகளை நடத்திவருவதாலும், அவ்வப்போது வித்வத் பரிஷத்துக்களைக் கூட்டுவதாலும், பண்டித சிரேஷ்டர்களை ஆதரிப்பதாலும், ரிஷிகளால் வகுக்கப்பட்ட சாஸ்திரங்களைக் காப்பாற்றுவதில் நீங்கள் கொண்டுள்ள ஆர்வத்தையும் பாராட்டுகிறோம். வழிவழியாக வந்துள்ள இந்தத் தன்மையுடன் சாஸ்திரங்களில் நல்ல தேர்ச்சி பெற்றுப் பண்டிதர்கள் மெச்சத்தக்கவாறு அவைகளுக்கு விளக்கம் கூறுவதில் நல்ல திறமை வாய்ந்த தங்களுக்கு ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் கிருபையால் மேன்மேலும் நன்மைகள் உண்டாகவேண்டுமென ஆசீர்வதித்து, **தர்சனகலாநிதி** என்னும் பட்டத்தைத் தங்களுக்கு அளிக்கின்றோம்."

இந்த ஸ்ரீமுகத்தை ஜகத்குரு அவர்களின் சார்பாக நீதிபதி **பஞ்சாபகேச சாஸ்திரிகள்** மகாராஜாவிடம் அளித்தார். மகாமகோபாத்யாய ஸ்ரீ அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள் ஸ்வாமிகள் அனுக்ரஹித்தனுப்பியிருந்த விபூதி, குங்குமம், அக்ஷதை இவைகளை மகாராஜாவுக்கு அளித்து, விலை உயர்ந்த பொன்னாடை ஒன்றை மகாராஜாவுக்குப் போர்த்தினார். ஸ்ரீ ஆதி சங்கரரின்

உருவம் அமைந்ததும், நவரத்தினங்களால் இழைக்கப்பட்டது மான **மோதிரம்** ஒன்றும், தர்சனகலாநிதி என்னும் பெயர் பொறிக்கப்பட்ட மற்றொரு **தங்கமோதிரமும்** ஜகத்குருவின் சார்பாக மகாராஜாவுக்கு வழங்கப்பட்டன. ஸ்ரீ எஸ். பஞ்சாபகேச சாஸ்திரிகளும், ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயரும் மகாராஜாவின் நற்குணங்களைப்பற்றியும், கலைத்திறனைப்பற்றியும், சம்ஸ்கிருத மொழிக்கு அவர் காட்டி வரும் ஆதரவைப்பற்றியும் பாராட்டிப் பேசினார்கள். டாக்டர் ஸ்ரீ குஞ்சன் ராஜா மகாராஜாவின் பேரில் தொகுத்த சம்ஸ்கிருத சுலோகங்களை அப்பொழுது படித்துக் கொடுத்தார்.

ஸ்வாமிகள் தமக்களித்த இந்தக் கௌரவத்திற்கு மகாராஜா நன்றி செலுத்தும் வகையில் கீழ்க்கண்டவாறு ஓர் சொற்பொழிவாற்றினார்.

"மிகவும் மகிமை வாய்ந்த ஸ்ரீமத் ஆசார்ய ஸ்வாமிகளின் அருளுக்குப் பல வருடங்களாகவே பாத்திரமாகவுள்ள நான் இந்த விசேஷ அனுக்கிரகத்தினால் என்னை மேலும் புனிதமடைந்தவனாகக் கருதுகிறேன். சாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்ற பல சம்ஸ்தான பண்டிதர்களும் என்னைப்போலவே ஸ்வாமிகளால் அனுக்ரஹிக்கப்பட்டிருப்பதை அறிந்து நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். என் சம்பந்தப்பட்ட வரை இங்குச் சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். எவ்வளவு, ஆலோசனை செய்து பார்த்தும் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளால் எனக்கு அளிக்கப்பட்ட இந்தப் பெருமைக்குரிய தகுதி எதுவும் என்னிடமிருப்பதாக நான் கருதவில்லை. எனக்கு அளித்த இந்தக் கௌரவத்திற்காக எனது நன்றியைத் தெரிவிக்கப் போதிய சொற்கள் எதுவும் அகப்படவில்லையே யென எனது மனம் சஞ்சலமடைகிறது. என்றால் இதற்குமேல் எதுவும் கூறமுடியவில்லை.

மகான்கள் எல்லாத் தத்துவங்களையும் அறிந்தவர்கள். மனஸில் கருணை நிறைந்தவர்கள். தங்களிடமிருந்துவரும் உத்தம குணங்களின் நிறைவை அவர்களின் அன்பிற்குப் பாத்திரமான மற்றவர்களிடமும் காண்பது அவர்களின் இயற்கை. இஃது அவர்களின் சம திருஷ்டியைக் காட்டுகிறது. ஆனால் நான் இவ்வாறு நினைப்பது எனது மனஸில் தோன்றும் பிரமையாகவிருக்கலாம். ஏனென்றால், உத்தம குருவின் வாக்கானது உலகிலுள்ள பாமர மக்களின் வார்த்தைகளைப்போல் புலப்படுகிற பொருளை மறுபடியும் சொல்லிக்கொண்டிராது. ஆனால் பூர்வ காலத்தில் ரிஷிகளது முகத்தினின்றும் வெளிவந்த வாக்குக்களைப் போலவே

நமது குருநாதருடைய சொற்களோடு அவற்றின் பொருளும் தொடர்ந்தே வந்தடைகிறதென்பது யாவரும் அறிந்த விஷயம். ஆகையால், ஸ்ரீமத் ஆசார்ய மூர்த்திகளின் ஆக்ஞா பத்திரத்தில் எது கட்டளையாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த வாக்கானது வருங்காலத்தில் அப்படியே நடக்கும் என்று நிச்சயமாகச் சொல்லுகிறேன்.

ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்களைப் போலவே உலக மக்களை உய்விப்பதையே விரதமாகப் பூண்டுள்ள ஸ்ரீ ஜகத்குரு ஆசார்ய ஸ்வாமிகளின் கருணை வெள்ளத்தையே சரணடைகிறேன். புராதன காலங்களில் சக்கரவர்த்திகள் கூடத் தங்களது நாட்டுக்கு ஏற்பட்ட துயர்களைத் தீர்ப்பதற்குத் தவத்தையே செல்வமாகக் கொண்ட மகான்களின் மலரடிகளை அடைக்கலமாக அடைந்தனர். அங்க தேச மன்னரான ரோமபாதர் ரிஷ்யசிருங்க மகரிஷியைத் தமது ராஜ்யத்திற்கு அழைத்துவந்து வெகு காலமாக அந்த ராஜ்யத்தில் மழையின்மையினல் ஏற்பட்ட துயரத்தை அவர் அருளால் நீக்கி வைத்தார். புத்திரப்பேறில்லாமல் வருந்திய திலீப சக்கரவர்த்தி முதலானவர்கள் வசிஷ்டர் முதலிய மகரிஷிகளது அருளால் வம்ச விருத்தியைப் பெற்று, சோகக் கடலிலிருந்து கரை ஏறினர்கள். இவ்விதமாகப் பலர் இத்தகைய தபஸ்விகளின் அருளினல் தம் கோரிக்கைகளை நிறைவேற்றியுள்ளார்கள். இவைகளைப் பாரத நாட்டின் புராணங்களிலிருந்து கேட்டறிந்திருக்கிறோம்.

இப்பொழுது நவீன விஞ்ஞானக் கலைகளில் தேர்ச்சி பெற்ற நூற்றுக்கணக்கான நிபுணர்கள் ராஜ்யத்தில் ஏற்பட்டுள்ள கஷ்டங்களைப் போக்குவதற்குப் பல உபாயங்களைக் கூறிவருகின்றனர்கள். அவைகளால் கூட நிலையுள்ள பயனெதுவும் கிடைக்கவில்லை. நாகரிகத்தின் முன்னேற்றத்தினலும், விஞ்ஞானத்தின் பெருக்கினலும் மனிதன் அனுபவிக்கக்கூடிய சுக சாதனங்கள் உலகில் ஒவ்வொரு வினடியும் கணக்கற்றுப் பெருகிக்கொண்டே வருகின்றன. மேலும் பணப் பெருக்கத்தினல் செல்வங்கள் எங்கும் பரவி வருகின்றன. இவ்விதமிருந்தும் மக்கள் சாதாரண நிலையில் அனுபவிக்கும் கஷ்டங்களைவிட இன்னும் மிகக்கொடுமையான துயரத்தில்தான் உழன்று வருகின்றனர்கள். நமது தேசம் முழுவதும் மக்கள் இவ்விதம் நிம்மதியற்று இருப்பதை நாம் கண்கூடாகக் காணுகின்றோம். இந்தத் துயரைத் தீர்ப்பதற்கு எவ்வித பரிகாரத்தையும் இதுவரை காண முடியவில்லை. நாட்டில் விபரீதமான சச்சரவுகள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீஆசார்ய ஸ்வாமிகளின் ஆக்ஞையைக் கொண்டு வந்துள்ள சிறப்பு வாய்ந்த பிரதிநிதிகளிடம் நான் ஒரு விஷயம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஸ்வாமிகளின் திருமுகத்தில் கூறப்பட்டுள்ள சுபிட்சத்திற்குச் சாதகமான காரியங்களை நிறைவேற்றுவதற்கு இடைவிடாமல் உழைப்பவர்களும் மக்களுக்கு நலனைக் கொடுக்கும் சிறந்த வகையில் ஆலோசனை கூறுகின்றவர்களுமான திறமை வாய்ந்த மந்திரிகளைப் பெற்றுள்ள இந்தச் சம்ஸ்தானத்து மக்களின் முயற்சிகள் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளின் கருணையினால் நல்ல பயனை அளிக்குமென நம்புகிறேன்.

மேலும், ஒப்பற்ற இத்தகைய கௌரவப் பட்டத்தை எனக்கு அளித்ததற்குத் தக்க முறையில் கைம்மாறு செய்வதற்கு நான் சக்தியற்றவனாக இருக்கிறேன். எனது அன்பிற்குப் பாத்திரர்களான பிரஜைகளையும், என் ஆத்மாவையும் பகவான் ஸ்ரீ ஜகத்குரு ஆசார்ய ஸ்வாமிகளது சரணங்களில் சமர்ப்பணம் செய்து ஒருவாறு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.''

மகாராஜா அவர்களின் மேற்கண்ட சொற்பொழிவு முடிந்தவுடன் ஸ்ரீ மடத்தின் பிரதிநிதிகளுக்கு மரியாதை செய்விக்கப்பட்டது. யாவருக்கும் சந்தன தாம்பூலம் வழங்கிய பின்னர் சம்ஸ்தான தேசீய கீதம் முழங்க, அந்த விசேஷ தர்பார் மிகுந்த விமரிசையுடன் முடிவுற்றது.

* * * * *

## திருவிடைமருதூரில் நடைபெற்ற அதிருத்திர ஹோமம்

1949-ஆவது வருட முழுவதும் அனேகமாக ஸ்வாமிகள் திருவிடைமருதூரிலேயே விஜயம் செய்திருந்தார்கள். சென்னை பி. ஜி. பால் அண்டு கம்பெனியின் சொந்தக்காரர் காலஞ்சென்ற **ஸ்ரீ D. பாலசுப்பிரமணிய ஐயருக்குச்** சொந்தமானதும், திருவிடைமருதூரில் பச்சையப்ப முதலியார் அக்கிரஹாரத்தில் புதிதாகக் கட்டப்பட்டதுமான ஒரு வீட்டையும், அதைச் சுற்றியுள்ள தோப்பையும் அவரது விருப்பத்தின்படி தானமாக அவரது பார்யை ஸ்ரீமதி சுந்தராம்பாள் அம்மாள் மடத்திற்குத் தான சாஸனம் செய்து கொடுத்தார். அந்த வீடும் தோப்பும் வீரசோழன் ஆற்றுக்கு வெகு அருகில் அமைந்துள்ளதால் ஸ்வாமிகள் தங்குவதற்கு ஏற்ற வசதியுடன் அந்த இடம் காணப்பட்டது. அவ்வப்போது உரிய காலங்களில், வேறு சில கிராமங்களுக்கு விஜயம் செய்த காலத்தைத் தவிர, சுமார் மூன்று வருடங்கள் ஸ்வாமிகள் அந்த இடத்திலேயே தங்கிப் பக்தகோடிகளுக்குத் தரிசனம் அளித்து வந்தார்கள். **ஸ்ரீமதி சுந்தராம்பாள் அம்மாளும்** தம் காலஞ்சென்ற கணவ

ரைப்போல் இன்னும் மடத்திற்கு அவ்வப்போது கைங்கர்யம் செய்துவருவதுடன், அன்ருடம் உபவாசமிருந்து ஸ்வாமிகளின் பூஜையைத் தரிசித்துத் தீர்த்தப் பிரசாதம் பெற்ற பின்னரே ஆகாரம் உட்கொள்ளுவதென்ற நியமத்துடன் இருந்தார். பின்னர் 1955-ஆவது வருடத்தில் அந்த அம்மையார் அந்தக் கட்டிடத்திற்கு அடுத்த வீட்டையும் தோப்பையும் அவ்வூரில் நடைபெற்றுவரும் ஸ்ரீமடம் வேதசாஸ்திர பாடசாலையின் உபயோகத்திற்காக விலைக்கு வாங்கி மடத்திற்குத் தான சாஸனம் செய்திருக்கிருர்.

1942-ஆவது வருடம் மன்னுர்குடிக்கு அடுத்த பூவனூரிலும், பிறகு திருச்சி ஜில்லா அகண்டகாவேரி தீரம் நத்தம் என்னும் இடத்திலும் நடைபெற்ற அதிருத்திர ஹோமத்தைப் போல் திருவிடைமருதூரில் 1949 பிப்ரவரி 16-ஆம் தேதி முதல் 26-ஆம் தேதி முடிய 11 நாட்களுக்கு மற்ருெரு ஹோமத்தை நடத்த வேண்டுமென ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண்டார்கள். இந்த ஹோமத்திற்குக் குறைந்தது சுமார் ரூ.25,000 செலவாகுமாதலால் அந்தச் சமயம் மடத்திலிருந்து அப்பெருந் தொகையைச் செலவிட வசதியில்லையேயென மடத்தின் அதிகாரிகள் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். ஆனுல் ஸ்வாமிகளோ ஹோமம் எவ்விதமாவது நடைபெறவேண்டுமென்றும், ஹோமத்தின் செலவிற்கென மடத்தின் சிஷ்யர்களிடமும் அபிமானிகளிடமும் முன்னதாகத் தெரிவித்து எவ்விதத் தொகையும் வசூலிக்கக் கூடாதென்றும் கட்டளை பிறப்பித்து விட்டார்கள். அந்தக் கட்டளையை மேற்கொண்டு மடத்தின் அதிகாரிகள் ஹோமத்திற்கென எல்லாப் பொருள்களையும் சேகரிக்கவும், வேதக் கலையில் தேர்ச்சிபெற்ற அந்தணர்கள் சுமார் 350 பேர்களை அங்கு வரவழைக்கவும் ஏற்பாடு செய்தார்கள். இந்த ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்த போது ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்த சில தனவந்தர்கள் தாமாகவே சுமார் ரூ. 5000 வரையில் இதற்கெனக் காணிக்கை செலுத்தினர். பின்னர் ஹோமம் நடைபெற்றுக்கொண்டிருந்தபொழுது ஆயிரக் கணக்கான பக்தகோடிகள் ஹோமத்தைத் தரிசிக்க வந்தனர். அவர்கள் பலர் தாமாகச் செலுத்திய காணிக்கைகளைக் கொண்டு அந்த ஹோமம் தக்க முறையில் முடிவுற்றது.

இந்த ஹோமத்திற்கென பெரியதொரு கொட்டகை நிர்மாணிக்கப்பட்டு, அதில் 11 குண்டங்கள் அமைத்து, ஒவ்வொரு குண்டத்தைச் சுற்றிலும் 11 அந்தணர்கள் அமர்ந்து இப்பெரிய ஹோமத்தை 11 நாட்கள் நடத்தினர். மேலும் நூற்றுக்கணக்கான

அந்தணர்கள் வேதம், ஸப்தசதி, பாகவதம், ராமாயணம் முதலியவைகளைப் பாராயணம் செய்துவந்தனர்.

முடிவு நாளன்று **வஸோர்த்தாரை** முடிந்தவுடன் மாலை 3 மணிக்கு அங்கு ஸ்தாபனம் செய்விக்கப்பட்ட தீர்த்தம் நிறைந்த கும்பங்களை அந்தணர்கள் தலையில் ஏந்தி மேளவாத்தியத்துடன் ஊர்வலமாகக் காவிரியாற்றுக்கு எடுத்துச் சென்றனர். ஸ்வாமிகள் முன்னரே அங்குச் சென்று இடுப்பளவு தண்ணீரில் நின்றுகொண்டிருந்தார்கள். அங்குக் குடங்களிலுள்ள புனித தீர்த்தத்தை அவ்வந்தணர்கள் ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வித்தனர். அப்பொழுது சுமார் 5000 பேர்களுக்கு மேல் பக்தர்கள் காவிரியில் நீராடினர். அந்த ஹோமத்தில் பங்கெடுத்துக்கொண்ட அந்தணர்கள் யாவருக்கும் தட்சிணை, வஸ்திரம், பாத்திரம், கம்பளத்தினால் தயாரிக்கப்பட்ட பைகள், இவைகளை ஸ்வாமிகள் தாராளமாக வெகுமானம் அளித்தார்கள். இந்த ஹோமத்தின் நிர்வாகத்தின் பொறுப்பை அவ்வூர் வாசியான **ராவ் சாகிப் ஆர். மகாலிங்கய்யர்,** கோவிந்தபுரம் **கணேசய்யர்,** மற்றும் பலரும் நிர்வகித்து நடத்தினார்கள்.

**'கல்வைத்த வாரம்' என்னும் வேதபரீக்ஷை**

திருவிடைமருதூரில் அதிருத்ர ஹோமம் நடைபெற்ற பொழுது வேதத்தை நன்கு கற்றவர்களுக்கு ஊக்கம் அளிக்கும் பொருட்டு **கல்வைத்த வாரம்** என்னும் ஒரு பரீக்ஷையை நடத்தும்படி ஸ்வாமிகள் கட்டளை இட்டார்கள். அதில் தேறியவர்களுக்குப் பொன் நாணயங்களாகவும், பொன் ஆபரணங்களாகவும் பரிசளித்தார்கள். யஜுர் வேதத்தில் இந்தப் பரீக்ஷை நடைபெற்றது. வேதத்தில் பதம், க்ரமம், கனம் என்னும் மூன்று வரிசைகளையும் பூர்ணமாக அத்தியயனம் செய்தவர்கள் பலர் அப்பொழுது அங்குக் கூடியிருந்தனர். இந்தப் பரீக்ஷையானது சோழிகளைக்கொண்டு ஓர் எண்ணிக்கையைத் தெரிந்தெடுத்து, அந்தக் குறிப்பிட்ட எண்ணிக்கையில் வரும் வேதப் பிரச்னத்தில் கண்ட அன்வாகம் முதல், முறையாகப் பதம் சொல்ல ஆரம்பித்து, 250 பதங்கள் வரையில் எவ்விதமான சொற்பிழையும், ஸ்வரப் பிழையும் இல்லாதவாறு, முன் சொன்ன பதத்தைத் திருப்பிச் சொல்லாமலும், எண்ணிக்கைகளில் கூடுதல் குறைவில்லாமலும் கணக்குடன் எவர் வேதத்தை ஒப்பிக்கிறாரோ அவரே அந்தப் பரீக்ஷையில் தேறியவராவர். இந்தக் காட்சியைக் காண ஆயிரக் கணக்கான மக்கள் அங்குக் கூடியிருந்தனர். முதல் நாள் பரீக்ஷை மாலை 7-மணிக்குத் தொடங்கி, இரவு 11-மணிக்கு முடிவுற்றது.

அன்று பரிசையில் மூவர் தேறினார்கள். அம்மூவருக்கும் தலைக்கு மூன்றே அரைக்கால் பவுன் வீதம் ஸ்வாமிகள் கருணை யுடன் வெகுமதி அளித்தார்கள், பரிசையில் தவறிய 40 பேர் களுக்கும் தங்கக் காசுகளையும் கொடுத்தருளினார்கள். இவ்விதம் மூன்று நாட்கள் பரிசை நடைபெற்றது. இரண்டாவது நாளில் 6 பேர்கள் இந்தக் கடினமான பரிசையில் தேறினார்கள். அவர் கள் யாவருக்கும் ரத்தினக் கல் இழைந்த மோதிரங்களை வெகுமதி யாக அளிக்கவேண்டுமென ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண் டார்கள். இதை அறிந்த சிஷ்யர்கள் சிலர் இவ்வித மோதிரங் களைத் தாங்களே தயாரித்துத் தருவதாக ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். ஆனால் அதே சமயத்தில் வெகு மதிகளை அளித்துவிடவேண்டுமென்று ஸ்வாமிகள் எண்ணி, அங்குக் கூடியிருந்தவர்கள் அணிந்திருந்த கல் வைத்த மோதிரங் களை யெல்லாம் கழற்றி ஓர் தாம்பாளத்தில் சேர்ப்பிக்கும்படி கட்டளை இட்டார்கள். மோதிரங்கள் யாருடையனவென அடையாளங்கள் கண்டுபிடிக்க ஓர் காகிதத் துண்டில் ஒவ்வொரு வருடைய பெயரையும் எழுதி அந்தக் காகிதத்தினாலேயே மோதிரத்தைச் சுற்றி தாம்பாளத்தில் அவை வைக்கப்பட்டன. அப்பொழுது கூட்டத்தில் பிரமுகர்கள் பலர் இருந்தபடியால் சுமார் 25 மோதிரங்களுக்கு மேல் தாம்பாளத்தில் சேர்ந்து விட்டன. அந்த மோதிரங்களிலிருந்து தம் திருக்கரத்தினால் ஆறு மோதிரங்களை எடுத்துப் பரிசையில் தேறின இந்த 6 பேர் களுக்கும் ஸ்வாமிகள் வெகுமானம் அளித்தார்கள். ஸ்வாமிகள் அவைகளை எடுக்கும்போது அவை யாருக்குச் சொந்த மென்பதும் அவைகளின் மதிப்பு என்னவென்பதும் ஒருவரும் அறியார். மிகுதியிருந்த மோதிரங்களையும் மடத்திலேயே வைத்துக்கொண்டு அவைகளைத் தக்கவர்களுக்கு வெகுமானம் அளிக்கும்படி அவைகளை அணிந்திருந்தவர்கள் ஸ்வாமிகளை வேண்டிக்கொண்டனர். ஆனால் ஸ்வாமிகளோ அத்தருணத்தில் 6 மோதிரங்களே தேவை என்றும் அவை கிடைத்து விட்டதால் மற்றவைகளை அவைகளின் சொந்தக்காரர்கள் எடுத்துக்கொண்டு விட வேண்டுமென்றும் கட்டளையிட்டுவிட்டார்கள். பரிசாக அளிக்கப்பட்ட மோதிரங்களின் சொந்தக்காரர்கள் இவ்வித வாய்ப்பு தங்களுக்குக் கிடைத்ததைப்பற்றி மகிழ்ச்சி அடைந்த வர்களாகித் தங்களை மிகுந்த பாக்யவான்களாகக் கருதி உள்ளம் குளிர்ந்தார்கள். எதிர்பாராத வண்ணம் இவ்விதமான உயர்ந்த பரிசுகளைப் பெற்ற வேதவித்பன்னர்கள் மனம் திருப்தி அடைந்த

வர்களாகி, வேதக்கலைக்கு இவ்வித உயர்வு கொடுத்ததைப்பற்றி ஸ்வாமிகளை மனமாரப் புகழ்ந்தார்கள். இந்த வைபவங்களை யெல்லாம் கண்ணுற்ற சிஷ்யகோடிகளும் பொதுமக்களும் அது வரை வேறெவராலும் அளிக்கப்படாத அந்தப் பெருங் கொடையைப்பற்றி பெருமையாகப் பேசிக்கொண்டனர்.

மூன்றாவது நாள் வேதத்தின் வர்ணக் கிரமங்களை லக்ஷணத்துடன் கூறுவதில் பரீக்ஷைகள் வைக்கப்பட்டன. அதில் தேறியவர்களுக்குத் தக்கவிதமாக உயரிய சம்மானங்கள் அளிக்கப்பட்டன.

### ஸ்வாமி ஸ்ரீ கரபாத்ரஜீ ஸ்வாமிகளைத் தரிசித்துக்கொண்டது

ஸ்வாமிகள் திருவிடைமருதூரில் தங்கியிருந்தபோது வட இந்தியாவிலிருந்து **ராமராஜ்ய பரிஷத்தின் அதிபரான ஸ்ரீ கரபாத்ரஜீ ஸ்வாமிகள்** நம் ஸ்வாமிகளைத் தரிசித்து, தர்மப் பிரசார சம்பந்தமாய் ஸ்வாமிகளின் ஆலோசனைகளைக் கேட்டுக்கொண்டார். மேலும் ஹிந்துகோடு மசோதா சம்பந்தமாய் மக்கள் தங்கள் ஆக்ஷேபணைகளைச் சர்க்காருக்குத் தெரிவிக்கவேண்டிய விஷயமாகவும் அன்று ஆலோசனைகள் நடைபெற்றன. நம் ஸ்வாமிகளின் ஆலோசனையின்படி நாடெங்கும் ஸநாதனிகளின் பொதுக் கூட்டம் கூட்டி அந்த மசோதா சம்பந்தமான மக்களது அபிப்பிராயத்தைச் சர்க்காருக்குத் தெரிவிப்பதென முடிவு செய்யப்பட்டது.

### 1949-50-ஆவது வருடங்களின் சாதுர் மாத சங்கல்பங்கள்

*1949*-ஆவது வருடத்திய சங்கரஜயந்தி உத்ஸவம், சாதுர் மாத சங்கல்பம், நவராத்திரி விழா இவைகளை யெல்லாம் ஸ்வாமிகள் திருவிடைமருதூரிலேயே நடத்தினார்கள். அவ் வருடத்தில் ஸ்வாமிகள் ராமநாதபுரம் தமிழ் வித்வான் **மு. இராகவய்யங்காரைக்** கௌரவித்து, அவருக்கு இரட்டைக் காஷ்மீர் சால்வைகளைப் போர்த்தி அநுக்ரஹம் செய்தார்கள். *1950*-ஆவது ஆண்டில் சாதுர்மாத சங்கல்பத்திற்கு ஸ்வாமிகள் திருவிடைமருதூருக்கு மேற்கே 5 கிலோ மீட்டர் தூரத்தில் காவிரியின் வடகரையிலுள்ள திருவிசைநல்லூர் என்னும் தலத்தில் தங்கியிருந்தார்கள். இந்த ஊர் மகான்கள் பலருக்கும், வித்வத் ரத்னங்கள் பலருக்கும் பிறப்பிடமாகும். **ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர், ஸ்ரீதர ஐயாவாள்** எனப் பிரசித்திபெற்ற **ஸ்ரீதர வேங்கடேசர்** ஆகிய பெரியோர்கள் இவ்வூரில் பிறந்தவர்கள். சென்ற *19*-ஆவது நூற்றாண்டிலும், நாளது *20*-ஆவது நூற்றாண்டின் துவக்கத்

திலும் மகாபண்டிதராக விளங்கிய **மகாமகோபாத்யாய ராமசுப்பா சாஸ்திரிகள்** இவ்வூரில் வசித்துவந்து, பல வித்வான்களுக்குச் சாஸ்திரம் போதித்துவந்ததும், அவர்களது சிஷ்யர்களாகப் பல மகா வித்வான்கள் தோன்றியுள்ளதும் யாவரும் அறிந்த விஷயமே. ஸ்வாமிகள் திருவிசைநல்லூரில் ஐயாவாள் மடத்திலேயே வியாஸ பூஜையை நடத்தி, சாதுர் மாஸ சங்கல்பத்தையும் அவ்விடத்திலேயே முடித்துக் கொண்டார்கள்.

**ஐயாவாள் என்னும் ஸ்ரீதர வேங்கடேச்வரர் வரலாறு**

ஸ்வாமிகள் திருவிசைநல்லூருக்கு விஜயம் செய்யும்பொழுதெல்லாம், ஸ்ரீதர வேங்கடேச்வரர் என்னும் பெரியார் வாழ்ந்த இல்லத்திற்கு விஜயம் செய்வது வழக்கம். அப்புனித இல்லம், தஞ்சை ஜில்லாவில் ஓர் யாத்திரைத் தலமாக இன்றும் கருதப்பட்டு வருகிறது. ஸ்ரீதர வேங்கடேச்வரர் ஓர் கிருஹஸ்தராக வாழ்ந்து மறைந்தபோதிலும், அந்த வீட்டை அந்த ஊரில் **மடம்** என்றே இன்றும் குறிப்பிடுகிறார்கள். அவர் மகா பண்டிதராக விளங்கி, தூய வாழ்வு நடத்தி, பக்தி மார்க்க சம்பந்தமாய், பல நூல்களை வடமொழியில் இயற்றியுள்ளார், அவைகளில் **ஆக்யாஷஷ்டி, குலீராஷ்டகம், தாராவளி, கங்கா அஷ்டகம்** என்பவை முதன்மையானவை. **ஆக்யாஷஷ்டியில்** ஒரு செய்யுளில் அம்பிகையைக் குறித்து அவர் துதிக்கும்பொழுது, "உன்னை அண்டியவர்களைச் சிவனிலும் பெரியவர்களெனக் கூறலாம். ஏனென்றால் காமனை வெல்ல எண்ணிய பரமசிவனோ கோபத்தை அடைந்து அவனை எரித்தார்; உனது அடியார்களோ என்றால், காமத்தையும் கோபத்தையும் ஒருங்கே ஒழித்துவிடுகிறார்கள்." எனப் பொருள் படக் கூறியுள்ளார்கள். **குலீராஷ்டகம்** என்னும் செய்யுளை இயற்றி, ஸ்ரீதரர் ஒரு சமயம் மழை பொழியும்படி செய்தார். **கங்காபஞ்சகம்** என்னும் செய்யுளைக் கொண்டு, தமது வீட்டின் கொல்லைப் புறத்திலுள்ள கிணற்றில் கங்கையை வந்தடையும்படி அவர் செய்தார். அவரது ஜீவிய சரித்திரத்தில் மிகவும் மகிமையுடன் கொண்டாடப் படும் இந்த நிகழ்ச்சியின் வரலாறு பின்வருமாறு :—

அவர் தந்தையின் சிராத்ததினம் ஒன்றில், ஒரு பஞ்சமன் கொல்லைப்புறத்தில் நின்று, 'பசி பசி' எனக் கூவ, அப்பஞ்சமனுக்கு முதலில் அவர் அன்னம் இட்டுவிட்டார். அதன் காரணமாக ஊர் வேதியர்கள் அவரது இல்லத்தில் அன்று உணவு ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். அதனால் அவர் பித்ரு

தேவதைகளைத் தர்ப்பைப் புல்லில் ஆவாகனம் செய்து அன்றைய சிராத்தத்தை ஒருவாறு முடித்துக்கொண்டார். அவர் செய்ய வேண்டிய அடுத்த சிராத்தம் வந்தபோது, அந்தணர்களை வரிக்காமல் சிராத்தம் செய்ய மனமில்லாமல் அவ்வேதியர்களை நெருங்கித் தாம் செய்த தவற்றை நீக்கக்கூடிய பிராயச்சித்தம் ஒன்றை விதிக்கும்படி வேண்டிக் கொண்டார். அவ்வந்தணர்களோ, 'நீர் செய்த தவறுக்குக் கங்கா ஸ்நானமே பிராயசித்தம்; ஆகையால் கங்கையில் மூழ்கி வாரும்' எனக் கூறினார்கள். அந்நாளில் கங்கா ஸ்நானம் செய்துவருவதானால் சுமார் ஒரு வருட காலமாவது பிடிக்கும். அவ்விதம் கங்கா ஸ்நானம் செய்துவந்த பிறகு சிராத்தத்தைச் செய்து முடிப்பது சாத்தியமில்லை.

அப்பொழுது ஸ்ரீதரர் தம் மனஸில் சற்று சிந்தனை செய்து, தமது இஷ்ட தேவதையை ஸ்மரித்தவராய், **கங்கா அஷ்டகம்** என்னும் எட்டுச் சுலோகங்களால் கங்கா தேவியைத் துதிக்கலானார். அப்பொழுது அவர் வீட்டுக் கொல்லைப்புறத்திலுள்ள கிணற்றில் எதிர் பாராதவாறு தண்ணீர் பெருகிற்று. பெருகிய வெள்ளமும் கிணற்றின்மேல் வழிந்து ஓடியதைக் கண்ட அவ்வூர் அந்தணர்கள் அவரை ஓர் பெரிய மகான் என்பதாக அப்பொழுதுதான் கண்டு கொண்டனர். பின்னர் அவர்கள் ஸ்ரீதர்களின் திருவடிகளில் வணங்கித் தாங்கள் செய்த தவற்றுக்கு அன்னாரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள். அக்கிணற்றில் அன்று யாவரும் நீராடி ஸ்ரீதரர் செய்ய வேண்டிய சிராத்தத்தை முறைப்படி நடத்தி வைத்தனர். இது சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சியாகும். **கார்த்திகை மாத அமாவாசை** யன்று இது நிகழ்ந்தது. அந்த அமாவாசையன்று இன்றும் அவ்வூரில் ஆயிரக்கணக்கான மக்கள் அந்தக் கிணற்றில் தண்ணீர் மொண்டு அதனில் நீராடித் தங்களைப் புனிதமாக்கிக் கொள்ளுகிறார்கள். ஆயிரக் கணக்கான குடங்களில் தண்ணீர் மொண்டபோதிலும் கிணற்றின் தண்ணீர் மட்டம் குறைவதேயில்லை. ஸ்ரீதர வேங்டேச்வரரை 'ஐயாவாள்' என்னும் மரியாதைப் பெயருடன் மக்கள் இன்றும் அழைத்து வருகிறார்கள். கார்த்திகை மாத அமாவாசைக்குப் பத்து நாள்கள் முன் தொடங்கி, அவ்வூரில் ஸ்ரீ ஐயாவாள் உத்ஸவம் கொண்டாடப்படுகிறது. ஐயாவாள் உத்ஸவம் நடைபெறும் பொழுது, பக்தர்கள் ஏராளமாக அங்குக் கூடுகின்றார்கள். சிறப்பாக அன்னதானமும் நடைபெற்று வருகின்றது; பஜனைகளும் சங்கீதக் கச்சேரிகளும் கதாகாலக்ஷேபங்களும், வித்வான்களின் சொற்பொழிவுகளும் அந்தப் பத்து தினங்களிலும் அங்கு

பெற்றுக்கொண்டேயிருக்கும். பிரபல சங்கீத வித்வான்கள் அப்பொழுது அங்குக் கூடுவார்கள். இந்த உத்ஸவத்தைத் தமது வயோதிகத்தையும் பாராட்டாமல், மிகுந்த சீரிய முறையில், அவ்வூர் வாசிகளின் ஒத்துழைப்புடன், நம் ஸ்வாமிகளால் **ஹாஸ்ய கலா சக்ரவர்த்தி** என்னும் பிருதைப் பெற்றிருந்த **விகடம் ராமஸ்வாமி சாஸ்திரிகள்** பல வருடங்களாகத் தொடர்ந்து நடத்தி வந்தார்கள்.

**கோவிந்தபுரத்தில் பகவந்நாம போதேந்திரர் அதிஷ்டானம்**

கோவிந்தபுரமென்பது திருவிடைமருதூருக்குக் கிழக்கே 3 கிலோ மீட்டர் தூரத்தில் காவிரியின் தென் கரையில் அமைந்துள்ள சிறிய ஊர். தென்னை மரச்சோலைகளாலும் வாழைத் தோட்டங்களாலும் நிறைந்துள்ள இந்த ஊர் இயற்கை அழகுடன் விளங்குகிறது. **ஸ்ரீ பகவன் நாம போதேந்திரர்** என்னும் மகானது அதிஷ்டானம் இங்கே அமைந்திருப்பதால், இந்த ஊருக்கு அது மேலும் பெருமையைத் தருகிறது. ஸ்ரீ போதேந்திரர் என்னும் மகான் ஸ்ரீ காமகோடி பீடத்தின் 59-ஆவது ஆசார்ய ஸ்வாமிகளாவர். ஸ்ரீதர வேங்கடேச்வரர் தமது ஞான குருவாக இவரை வழிபட்டு, இவர்மீது சில தோத்திரங்களையும் இயற்றியுள்ளார். அந்தத் தோத்திரமானது இந்நாளிலும் ஹரிபஜனை நடைபெறும் இடங்களிலெல்லாம் குரு ஸ்துதியாகப் பாடப்பட்டு வருகின்றது. ஸ்ரீ போதேந்திரர் காஞ்சீபுரத்தில் மண்டனமிச்ர அக்ரகாரத்தில் பிறந்தவர். இவருடைய தந்தையின் பெயர் **கேசவபாண்டுரங்** என்பதாகும். இவரது பூர்வாசிரமப் பெயர் **புருஷோத்தமர்.** புருஷோத்தமர் பிரம்மசாரியாக யிருந்தபொழுது காசிக்குச் சென்றூர். ஸ்ரீ காமகோடி பீடத்தின் 58-ஆவது ஆசார்ய ஸ்வாமிகளான **ஸ்ரீ ஆத்மபோதரை** அவர் முதலில் காசியில் தரிசித்தார். புருஷோத்தமர் வாலிபத்திலேயே நல்ல சாஸ்திரப் பயிற்சியும், ஒழுக்கமும் வசீகரத் தோற்றமும் பெற்று விளங்கியதால் ஸ்ரீ ஆத்மபோதருக்கு இவர்பால் கருணை பிறந்தது. தம்மைச் சீடராக அடைந்த புருஷோத்தமர் சந்நியாசம் பெற விரும்பியதற்கிணங்க, புருஷோத்தமருக்குக் குருநாதர் சந்நியாச ஆச்ரமம் கொடுத்தருளினூர். பின்னர் குருவும் சீடருமாக தென்தேசத்தை அடைந்தனர். அவர்களிருவரும் சிறிதுகாலம் காஞ்சியில் சங்கர மடத்தில் தங்கியிருந்தனர். பின்னர் ஆத்மபோதர் தென் பெண்ணை நதிக்கரையில் சஞ்சாரம் செய்துகொண்டிருந்த பொழுது, வட **வாம்பலம்** என்னும் இடத்தில் நிர்விகல்ப சமாதி அடைந்து

விட்டார்கள். சீடரான போதேந்திரர் குருநாதருக்குச் செய்ய வேண்டிய மகாபூஜை முதலியவைகளை முடித்துக்கொண்டு, மேலும் தென் நாட்டில் யாத்திரையைத் தொடங்கினர். அப்பொழுது அவர் காமகோடி பீடத்தின் 59-ஆவது **ஆசார்ய ஸ்வாமிகளாகத்** தேசமெங்கும் **பிரகாசிக்கலானர்**. ஸ்வாமிகள் பின்பு ராமேசுவரம் சென்று அங்கு ஸ்ரீ ராமநாதஸ்வாமியைத் தரிசனம் செய்துகொண்டார். பின்பு ஜம்புகேசுவரம் என்னும் திருவானைக்காவை அடைந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அகிலாண்டேச்வரி அம்பிகையின் தாடங்கங்களை ஜீர்ணோத்தாரணம் செய்து மறுபடியும் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்ரீ போதேந்திர ஸ்வாமிகளது மனம் பிற்காலத்தில் மக்களிடையே பக்தி மார்க்கத்தைப் பரப்புவதில் ஈடுபட்டது. திரேதா யுகத்தில் வேள்விகளாலும், துவாபரயுகத்தில் அர்ச்சன மார்க்கத்தினலும் அடையக்கூடிய பயனைக் கலியுகத்தில் நாமசங்கீர்த்தனத்தைக் கொண்டு பகவானைத் துதி செய்வதால் எளிதாக அடையக் கூடுமென விஷ்ணுபுராணம் கூறுகிறது. இவ்வுண்மையை விளக்கி, **நாமாமிருத ரஸாயனம்** என்னும் நூலையும், மற்றும் சில பக்தி மார்க்க நூல்களையும் அவர் இயற்றினர். அவர் செல்லுமிடமெல்லாம் **ராமநாமமும், கோவிந்தநாமமும்** ஒலித்துக் கொண்டே இருக்கும். அக்காலத்தில் சீடர்கள் நூற்றுக்கணக்காக ஸ்ரீ போதேந்திரரைப் பின்தொடர்ந்தார்கள். தென் நாட்டில் பக்திமார்க்கம் உச்ச நிலையை அடைந்தது அவரது காலத்தில்தான். போதேந்திர ஸ்வாமிகள் இவ்விதம் சோழ நாட்டில் சஞ்சரித்துக் கொண்டு 1692-ஆவது ஆண்டில் பிரஜோத்பத்தி வருடம் கோவிந்தபுரத்தில் நிர்விகல்ப சமாதி அடைந்தார்கள். அம்மகானது ஆராதனை மகோத்ஸவமானது புரட்டாசி மாதம் பௌர்ணமிக்கு அடுத்த மகாளயபக்ஷத்தில் யதிமகாளயம் என்று கூறப்படும் துவாதசியில் கொண்டாடப்படுகிறது. புரட்டாசிப் பௌர்ணமியன்றே அந்த உத்ஸவம் ஆரம்பமாகிறது. பக்திமார்க்கத்தில் ஈடுபாடுடையவர்கள் அந்தப் பிருந்தாவனத்தில் கூடி, வருடா வருடம் ஆராதனையை மிகச் சிறப்புடன் நடத்திவருகிறர்கள்.

கோவிந்தபுரத்திற்குப் பதினைந்து கிலோ மீட்டர்களுக்குள் நம் ஸ்வாமிகள் விஜயம் செய்யும் பொழுதெல்லாம் இந்தக் குருநாதருடைய சமாதியைத் தரிசிக்கத் தவறமாட்டார்கள். அவ்விதம் தரிசிக்கும் பொழுதெல்லாம் பல மணி நேரம் அங்கே தியானத்தில் அமர்ந்திருப்பார்கள். சில சமயங்களில் எவரும் அறியாதவாறு அந்தப் பிருந்தாவனத்துக்கு ஸ்வாமிகள் சென்று

வருவதுண்டு. அசரீரியாக ராமநாமா அவ்விடம் கேட்கப்படுவ தாக அனுபவம் வாய்ந்த பெரியவர்கள் பலர் கூறுகின்றனர். மனஸிற்கு மிகுந்த சாந்தியைத் தரும்படி காவிரி நதியின் ஓர் பிரிவான வீரசோழன் ஆற்றை ஒட்டி இந்தப் பிருந்தாவனம் வெகு அழகுடன் அமைந்துள்ளது. ஸ்ரீ ராமநாமாவை ஒவ்வொருவரும் அவர்களால் முடிந்தவரையில் ஒவ்வொரு நாளும் எவ்வளவு தடவை எழுத முடியுமோ அவ்வளவு தடவை எழுதவேண்டு மென்று பக்தர்களுக்கு நம் ஸ்வாமிகள் உபதேசிப்பது வழக்கம். அதன்படி சிறு குழந்தைகள், ஸ்திரீகள், வயது வந்தவர்கள், முதியோர்கள் யாவரும் அவரவர் சக்திக்குத் தக்கவாறு ராமநாமங் களை எழுதிவருவார்கள். இவ்விதம் எழுதிவருவதில் லட்சக்கணக் காகவும், கோடிக் கணக்காகவும் நாமாக்களை எழுதிய பக்தர்கள் அந்த நாமாக்களடங்கிய புஸ்தகங்களை ஸ்வாமிகளிடம் சமர்ப் பணம் செய்து, அதற்கு அனுக்கிரகமாக அவர்கள் அளிக்கும் காமாக்ஷி அம்பிகை அமைக்கப்பெற்ற வெள்ளிக்காசுகளையோ, தங்கக் காசுகளையோ பெற்றுப்போவார்கள். அவ்விதம் எழுதப் பட்ட புஸ்தகங்களெல்லாம் கோவிந்தபுரத்தில் ஸ்ரீ போதேந்திரர் அதிஷ்டானத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன.

### திருப்பாவை, திருவெம்பாவை, திருமறை ஆறங்க மகாநாடு

நாடெங்கும் திருப்பாவை திருவெம்பாவை ஆறங்க மகா நாட்டைக் கூட்டிவைக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும், அதன் நோக்கங்களைப் பற்றியும் சென்ற 1950-ஆவது ஆண்டின் இறுதியில் ஸ்வாமிகள் விடுத்த அறிக்கை ஒன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள் :

“ நம் தமிழ் நாடு முழுவதிலும் ஒவ்வொரு ஊரிலும் சிவாலய மும் விஷ்ணு ஆலயமும் நிறுவப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். ஒவ்வொரு சிவாலயத்திலும் நாயன்மார்களது திருவாக்கான திரு முறைகளும், விஷ்ணு ஆலயங்களில் ஆழ்வார்களின் பிரபந்தங் களும், இரு ஆலயங்களிலும் ஆறு அங்கங்களுடன் கூடிய ரிக், யஜுஸ், ஸாமம் என்னும் மூன்று வேதங்களும் தொன்று தொட்டுப் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றன.

மார்கழி மாதத்தில், **ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகளது** திரு வெம்பாவையும், **ஸ்ரீ ஆண்டாளுடைய** திருப்பாவையும் முறையே சிவாலயங்களிலும் விஷ்ணு ஆலயங்களிலும் ஓதப்பட்டு வரு கின்றன. சென்ற 80 ஆண்டுகளாக நம் தமிழ் நாட்டு மக்கள், சிறு பிராயம் முதலே மேல்நாட்டாரின் மொழியையும், நாகரி

கத்தையும் பயின்று, அரசியல் கிளர்ச்சிகளில் மாத்திரம் பெரும்பாலும் ஈடுபட்டு வந்தமையால், தாய்நாட்டின் தெய்விக முறைகளை அறியாது அருள் வழியில் பெரும் நஷ்டத்தை அடைந்து விட்டார்கள். நம் முன்னோர்கள் அருளிய அத்திருமுறைகளின் கருத்துக்களையும் அவர்களது தூய வாழ்க்கையையும் நம் மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டியது எஞ்சியுள்ள பண்டிதர்களின் கடமையாகும்.''

இந்த நோக்கத்துடன் ஸ்வாமிகள் திருவிடைமருதூரில் விக்ருதி வருடம் மார்கழி மாதம் 10-ஆம் தேதி முதல் (1950 டிசம்பர் 25-ஆம் தேதி) எட்டு நாட்கள் பெரியதொரு மகாநாட்டைக் கூட்ட வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டார்கள். அதற்கென, தேவகோட்டை **திரு. மெ. லெ. மெ. மகாலிங்கம் செட்டியாரைத்** தலைவராகவும், மாயவரம் **ஸ்ரீ ஏ. வி. வேங்கடராமையரைக்** காரியதரிசியாகவும் கொண்டு, மற்றும் 18 பேர்களடங்கிய ஓர் வரவேற்புக்குழு அமைக்கப்பெற்றது. மகாநாடு அவ்வூர் மகாதானத் தெருவில் அமைந்துள்ள ரா. ந. மெ. சத்திரத்தில் நடைபெற்றது. தேவகோட்டை **திரு. அள. அரு. சொக்கையா செட்டியார்** மகாநாட்டைத் திறந்து வைத்தார். தமது வாழ்நாளின் பெரும்பகுதியை தர்மப் பிரசாரத்திலேயே ஈடுபடுத்தி, அண்மையில் துறவுபூண்ட '**ஸ்ரீ சச்சிதானந்த ஸ்வாமிகள்** மகாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்கள். சுமார் ஆயிரம் பேர்களுக்கு அழைப்புக் கடிதங்கள் அனுப்பப்பட்டிருந்தன. ஒவ்வொரு நாளும் ஆயிரக் கணக்கான மக்கள் மகாநாட்டில் கலந்துகொண்டு மகா வித்வான்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பெரும் பயனடைந்தனர். **திருவாடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சன்னிதானம்** அவர்கள் தமது ஆதீன வித்வான் குலசேகரப்பட்டணம் **திரு. வீர. சிவசுப்பிரமணிய பிள்ளை** அவர்களைத் தமது பிரதிநிதியாக மகாநாட்டிற்கு அனுப்பி ஆசியளித்தார்கள். தர்மபுரம் ஆதீனம் **ஸ்ரீலஸ்ரீ மகாசன்னிதானம்** அவர்களும் மகாநாட்டிற்கு ஆசி உரை ஒன்றை அனுப்பியிருந்தார்கள்.

ஸ்ரீமான்கள் ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர், எம். ஆர். ஜயகர், சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரியர், எம். அனந்தசயனம் அய்யங்கார், வி. வி. சீனிவாச அய்யங்கார், ஏ. லக்ஷ்மணஸ்வாமி முதலியார், பிரதம நீதிபதி ராஜமன்னார், சென்னை மேயர் ஆர். ராமநாதன் செட்டியார், எஸ். ஜி. மணவாள ராமாநுஜம், டி. எம். நாராயண ஸ்வாமி பிள்ளை, டி. கே. சிதம்பரநாத முதலியார், டி. கே. சங்கரவடிவேல், சென்னை டி. ராமஸ்வாமி அய்யங்

கார், ஹிந்து பத்திரிகை உதவி ஆசிரியர் ரகுநாதய்யர், ஸர்தார் வேதரத்தினம் பிள்ளை, எம். எல். ஏ. முதலான பிரமுகர்கள் இந்த மகாநாட்டின் நோக்கங்களை ஆதரித்துச் செய்திகளை அனுப்பி யிருந்தனர்.

மகாநாட்டின் நோக்கங்களைப்பற்றிச் சென்னை அட்வகேட் **கே. பாலசுப்பிரமணிய ஐயர்** தொடக்கத்தில் ஓர் சொற்பொழி வாற்றினுர்கள்.

கீழே குறிப்பிட்டுள்ள வித்வான்கள் மகாநாட்டின் நிகழ்ச்சி களில் பங்கெடுத்துக்கொண்டு அரிய விஷயங்களைப்பற்றிச் சொற் பொழிவாற்றினர்.

1. திருவாடுதுறை ஆதீன வித்வான் குலசேகரப் பட்டணம் திரு. வீர. சிவசுப்ரமணிய பிள்ளை.
2. திருவிடைமருதூர் திரு. நடராஜ தேசிகர்.
3. திருவிடைமருதூர் திரு. சிதம்பர தேசிகர்.
4. தர்மபுரம் ஆதீன வித்வான் திரு. தண்டபாணி தேசிகர்.
5. தர்மபுரம் திரு. வேலாயுத ஓதுவார்.
6. திருவையாறு அரசர் கல்லூரி தலைமைத் தமிழ் ஆசிரியர் திரு. இராம கோவிந்தசாமி பிள்ளை.
7. கும்பகோணம் நகர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. சுப்பராவ்.
8. ரங்கநாதபுரம் திராவிட கவிமணி வெ. முத்துசாமி அய்யர், எம். ஏ., எல். டி.
9. கூறைநாடு முனிஸிபல் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் திரு. இராமலிங்கம் பிள்ளை.
10. கும்பகோணம் நேடிவ் உயர்நிலைப்பள்ளி மாஜி தமிழ் ஆசிரியர். திரு. பி. ஸ்ரீநிவாஸ ஐயர்.
11. சென்னை கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன்.
12. திருவிடைமருதூர் ஆதீன உயர்நிலைப்பள்ளி தமிழ் ஆசிரியர் திரு. மகாலிங்க தேசிகர்.
13. தேவகோட்டை திரு. சக்திவேல் பிள்ளை.
14. தாம்பரம் சைவ சமயப் பிரசாரகர் திரு. சமரபுரி முதலியார்.
15. கும்பகோணம் உப. வே. இளையவல்லி ஸ்ரீனிவாஸா சாரியர்.
16. திருவழுந்தூர் தேவஸ்தானம் உப. வே. சேஷாத்திரி ஐயங்கார்.
17. திருவையாறு அரசர் கல்லூரி உப தலைவர் எஸ். டி. ஸ்ரீனிவாஸாசாரியர், எம். ஏ., எல். டி.

18. காரைக்கால் வைஷ்ண மத போதகர் திரு. ஸ்ரீகாந்த இராமானுஜ நாயுடு.
19. தேரழுந்தூர் உப. வே. ஸ்ரீனிவாஸாசாரியர்.
20. கும்பகோணம், தென்திருப்பேரை உப. வே. வேங்கட வரதாசாரியார்.
21. மாயூரம் உப. வே. நரசிம்மாசாரியர்.
22. திருப்பனந்தாள் ஆதீனம் செந்தமிழ்க் கல்வி விரிவுரை யாளர் திரு. கோபாலய்யா.
23. கும்பகோணம் உப. வே. ஸ்ரீநிவாஸ கோபாலாசாரியர்.
24. ஸ்ரீரங்கம் குண்டலம் உப. வே. ரங்காசாரியர்.
25. நாகர்கோயில் தொண்டன் ஆசிரியர் திரு. ஆறுமுக நாவலர்.
26. திருவாடுதுறை திரு. பா. ஸ்ரீநிவாஸ ஐயர்.
27. மன்னார்குடி வேதபாடசாலை கனபாடி உப. வே. நரசிம் மாசாரியர்.
28. அண்ணாமலைச் சர்வகலாசாலை சம்ஸ்கிருத ஆசிரியர் ஸ்ரீ கே. ஏ. சிவராமகிருஷ்ண சாஸ்திரி.
29. கள்ளக்குறிச்சி வழக்கறிஞர் உப. வே. தாத்தாசாரியர்
30. மன்னார்குடி ஸ்ரீ ராமநாத தீக்ஷிதர்.
31. கணபதி அக்கிரகாரம் வித்வான் ஸ்ரீராமஸ்வாமி சர்மா.
32. சிதம்பரம் ஸ்ரீ ரத்னவேலுப் புலவர்.
33. கும்பகோணம் ஆர்யதர்மம் பத்ராதிபர், தர்மப்ரவர்த் தகர் அக்நிஹோத்ரம் உப. வே. கோபால தேசிகா சாரியர்.

வைணவப் பெரியோர்கள் பரமசிவனது பெருமையையும், சைவப்பெரியோர்கள் ஸ்ரீமன் நாராயணன் கருணையையும் எடுத்துக் கூறியபொழுது பெரியதோர் மதப் புரட்சியை அன்பர்கள் அங்குக் கண்டார்கள். ஆனால் அந்தப் புரட்சி எல்லாம் பக்தி வெள்ளமாக மாறி, எல்லோரின் உள்ளங்களையும் குளிரச் செய்தது. ஒவ்வொரு நாளும் ஸ்ரீ ஸ்வாமிகள் மகாநாட்டிற்கு நேரில் விஜயம் செய்து அறிஞர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

மகாநாட்டின் 6-ஆவது நாளன்று, சங்கீத வித்வான் சாத்தூர் **திரு. சுப்ரமண்யம்** அவர்கள் கச்சேரியும், முடிவு நாளன்று அரியக்குடி **இராமானுஜய்யங்கார்** அவர்கள் கச்சேரியும் நடைபெற்றன. இவ்விரு வித்வான்களும் தேவாரம், திருவாசகம், திருப்பாவை இவைகளிலிருந்தே பாட்டுகளைத் தாமே ஸ்வரப்படுத்தியவாறு மிகவும் அழகாகக் கானம் செய்தார்கள். அவ்விரு வித்வான்களை

யும் ஸ்வாமிகள் மிகவும் பாராட்டி ஆசீர்வதித்தார்கள். மகாநாட்டில் கலந்துகொண்டு, சொற்பொழிவாற்றிய வித்வான்களுக்குச் சம்மானங்கள் அளிக்கப்பட்டன. போட்டிப் பரீக்ஷையில் கலந்து கொண்ட சிறுவர் சிறுமிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. மகாநாட்டின் முடிவு நாளன்று இரவில் ஸ்வாமிகள் நிகழ்த்திய அரியதொரு உபந்நியாசத்தின் சுருக்கம் பின்வருமாறு:

"புனிதமான கங்கை நதி கிழக்கு நோக்கி ஓடுகிறது. நர்மதை மேற்கே செல்லுகிறது. மகாநதி தெற்கிலிருந்து வடக்கே செல்கிறது. பல நதிகள் பல திசைகளில் ஓடுகின்றன. எல்லாம் முடிவில் கடலில் கலக்கின்றன. சேரும் இடம் ஒன்றே என்ற எண்ணம் நதிகளுக்கு இல்லை. அவை எங்குப் போனாலும் கடலும் அவைகளைச் சூழ்கிறது. அதைப்போல் நாம் பல வழிகளில் இறைவனை வழிபடுகிறோம். பாதைகளில் வேற்றுமை உள ஆட்கொள்ளும் வஸ்து ஒன்றே. பல வழிகளில் இறைவனை அடைய நாம் முயற்சிக்கலாம். ஆனால் வேற்று வழிகளில் செல்கையில் ஒற்றுமையை மறந்து கடவுளின் ஏகத்வத்தைக் கைவிடக் கூடாது. வேற்றுமையை நினைத்தால் ஆனந்தம் இல்லை.

இம்மகாநாட்டில் நம் வைதிக மதத்தைச் சேர்ந்த எல்லா வழிபாடுள்ளவர்களும் கலந்துகொண்டது மிகுந்த சந்தோஷத்தைக் கொடுக்கிறது. இதுபோன்ற மகாநாடுகள் எங்கும் நடக்க வேண்டும். எல்லோரும் ஒருங்கு கூடி இறைவனை நினைத்து நம் துக்கத்தையும் கஷ்டத்தையும் சற்று மறந்து இருப்போம். தெய்விக ஒளி வீசட்டும்.

பண்டை நாட்களில் நம் நாட்டில் லஞ்சம், பொய் என்பது ஜனங்களுக்குத் தெரியாமலிருந்தன. இப்பொழுது அவை எங்கும் காணப்படுகின்றன. இந்நிலை மாற இதைப்போன்ற மகாநாடுகள் உதவவேண்டும்.

ஆலய வழிபாடு நம் நாட்டில் தொன்றுதொட்டு இருக்கிறது. எல்லாம் கடவுளின் ஸ்வரூபம் என்ற பக்குவநிலை ஞானிகளுக்குத்தான் கிட்டும். ஸாமானிய ஜனங்களுக்குக் கடவுளை நினைக்க ஆலயவழிபாடு அவசியம் வேண்டும். தத்துவம் அறிந்த ஞானிகள் கூடத் தங்களுக்கு ஞானநிலையை அடைவித்த மூர்த்திகளை வணங்குகிறார்கள்.

எல்லாவற்றையும் மறந்து, பொய்யே இல்லாமல் ஆனந்தமாக இருந்த நாயன்மார்களையும் ஆழ்வார்களையும் ஸ்மரிப்போம். அவர்கள் வார்த்தைகள் தெய்விக வார்த்தைகள் ; முற்றிலும் உண்மையானவை. ஆகவே அவை இன்றும் அழியாமல் இருக்கின்றன.

நல்வழியில் ஈடுபட்ட அப்பெரியார்களின் ஆனந்த வாழ்க்கையை அனுபவிப்போம். கடல் ஒன்றே; ஆனால் அதற்குப் பல இடத்தில் பல பெயர்கள் உண்டு. அதேபோல் கடவுள் ஒருவரே. நாமரூபங்கள் பல உள. சில நாட்களாவது நாம் இக்கடவுள் ஒற்றுமையைக் காண்போம். இவ்வொற்றுமையை உணர்த்தும் மகான்களை வணங்குவோம். அவர்களது அன்பு ததும்பும் பாடல்களைப் பாடுவோம். ஆழமானதும் மலைபோல் கனமானதுமான ஞானம் படைத்த அவர்கள் திருவாக்கை அனுபவிப்போம். உண்மை ஆனந்தம் நமக்குக் கிட்டும்.

திருமுறைகளிலும் திவ்யப் பிரபந்தங்களிலும் வேதங்களைப் பற்றியும், வேத ஆறங்கங்களைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. நான்மறைகள், ஆறங்கங்கள், நான்கு உபாங்கங்கள், நான்கு உபவேதங்கள் ஆகப் பதினெட்டு வித்தைகள் நம்முன்னோர் அப்பியசித்தவை. தனுர்வேதம் (ராணுவ சாஸ்திரம்), அர்த்த சாஸ்திரம் (அரசியல்), ஆயுர்வேதம் (வைத்யம்), காந்தர்வம் (சங்கீதம், நாட்டியம் முதலான கலைகள்), இவை உபவேதங்கள். இவ்வித்தைகளைக் கற்றுணர்ந்தவர்கள் இவை ஆண்டவன் அருள் என்ற உணர்ச்சியை அடையவேண்டும்.

எல்லாச் சக்திகளுக்கும் காரணமாயிருப்பது பராசக்தி; மேகத்திற்குச் சமுத்திரம் காரணமாயிருப்பது போல, பராசக்தி எல்லாச் சக்திகளுக்கும் காரணமானவள். மகாபெரும் சக்தியென்று நாம் நினைப்பவைகூடப் பராசக்தியின் அணுவே. கடவுள் இல்லையென்று சொல்லுவோர், நுனிக்கிளையிலிருந்து அடிமரத்தை வெட்டுபவர்களேயாவார்கள். நம் நாட்டில் பக்தி வளர வேண்டும். ஞானம் கமழவேண்டும். ஆஸ்திகம் தழைத்தோங்க வேண்டும்.

தில்லையில் ஒரு மூர்த்தி விளங்குகிறார்; அவர் மெய்ம்மறந்து ஆனந்த நடனம் புரிகிறார். நடன வேகத்தில் விரிந்த சடைகளோடு ஆனந்த மூர்த்தியாகக் காட்சி அளிக்கிறார். அணுக்கள் எல்லாம் ஏககாலத்தில் ஆடிக்கொண்டிருக்கின்றன. அணுக்கள் இயங்க ஆண்டவன் அவ்வேகத்தில் நடனமாடுகிறார். நடனம் ஆடுவதால் அவர் ஆனந்த ஸ்வரூபியாக இருக்கிறார் என்பது விளங்குகிறது. அவரது வலக்கையில் உள்ள உடுக்கையிலிருந்து வரும் ஒலியில் பதினான்கு சப்தங்கள் தோன்றின. பாணினி அவைகளை ஆதாரமாகக்கொண்டு வியாகரண சூத்திரங்களை வெளியிட்டார். நடராஜரது ஊன்றிய வலக்காலின் கீழ் ஓர் அரக்கன் காண்கிறான். அஞ்ஞானத்தை ஈசன் அடக்கியிருப்பதையே இந்நிலை காண்பிக்கின்றது.

பேரானந்தம் அடைந்தவர்கள் ஆனந்த நடனம் செய்வார்கள். அல்லது சாந்தமே உருவாகிக் காட்சி அளிப்பார்கள். அஞ்ஞான அரக்கனைக் காலால் அமுக்கிக்கொண்டு ஆனந்த நடனம் புரியும் நடராஜப் பெருமான்போல் தென்திசை நோக்கிக் காட்சியளிக்கும் மற்றொரு மூர்த்தி பேரானந்தத்தில் சாந்த ஸ்வரூபமாக இருக்கும் தக்ஷிணாமூர்த்தியாவார்.

இவ்விரு ஆனந்த மூர்த்திகளை வணங்குவோருக்கு யமபயம் இல்லை. இவர்களுக்கு பேரானந்தமும் கிட்டும். இதேபோல் திருமாலும் யோக நித்திரையில் காட்சி அளிக்கிறார். சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் உருவங்கள் வேறு; நிறம் வேறு; வாகனங்கள் வேறு; நாமங்கள் வேறு; ஆனால் உண்மையை உணர்பவருக்கு வஸ்து ஒன்றே. இந்த உண்மையைச் **சங்கர நாராயணர்** ஸ்வரூபத்தில் காணலாம்.

நம் மதங்களில் காணப்படும் வேற்றுமைகளிலும் ஒற்றுமை உணர்ச்சி ஊடுருவிச் செல்கிறது. அதை உணர்ந்து அனுபவிப்போம். பல வழிகளிருப்பினும் எல்லாவற்றின் முடிவும் ஒன்றே. நதிகள் பல திசைகளிலும் ஓடவேண்டும். அப்பொழுதுதான் எல்லோருக்கும் க்ஷேமம். ஆனால் முடிவில் எல்லாம் ஓரிடத்தில் கலந்தாகவேண்டும்.

சநாதனமாகிய ஹிந்துமதம் பல்வேறு தத்துவங்களைப் போதித்து அவரவருக்குத் தகுந்த நிலையில் யாவரும் ஒரே லக்ஷியத்தை அடைய வகை செய்கின்றது. அவரவர்கள் தங்கள் தங்கள் ஆசார்யர்கள் உபதேசித்த அனுஷ்டானங்களைப் பின்பற்றவேண்டும். அவ்வனுஷ்டானங்கள் ஒன்றாக இருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. ஆனால் பெரியோர்கள் கடவுளை அடைய எந்த ஆதாரத்தை முக்கியமாக வாழ்க்கையில் கடைப்பிடித்தார்களென்பதில் ஒற்றுமையைக் காணலாம்.

நடனத்தின் மூலமாக அசைவைக் குறிப்பிடும் பகவான் நடராஜரும், சயனத்தில் அசைவற்றுக் காணப்படும் பகவான் விஷ்ணுவும் ஒரே பரபிரம்மத்தின் இரு தத்துவங்களைக் காண்பிப்பவர்களே. இருவரும் ஆனந்த மயமாய் விளங்குகின்றனர்.

மதத்தினால் சண்டை உண்டாகுமென்று சொல்லுவது தவறாகும். உண்மையான மதம் எப்பொழுதும் சச்சரவை உண்டு பண்ணாது. மதத்தின் அடிப்படை யில்லாவிட்டால் அரசியல், பொருளாதாரச் சச்சரவுகள் அதிகரித்து ஆபத்தை விளைவிக்கும். ஆதலால் இறைவன் வழிபாடு மனிதனுக்கு மிகவும் அவசியமாகும். அவ்வழிபாட்டிற்கு, **எம்பாவைகளின் உதவி** அளவிற்கடங்காது."

**நாடெங்கும் பெருகிய பக்தி வெள்ளம்**

அவ்வருடத்திலேயே மாயவரம், குழித்தலை, திருப்புகளூர், நாகப்பட்டினம், உழுந்தூர்ப்பேட்டை, சீர்காழி முதலிய இடங்களில் இம்மகாநாடு மிக விமரிசையாக நடைபெற்றது. இம்மகாநாட்டின் நிகழ்ச்சிகளைப் பொதுமக்கள் நன்கறிந்து பயன்படுத்திக் கொள்ளுமாறு ஹிந்து, மதராஸ் மெயில், இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி, சுதேசமித்திரன், ஆனந்தவிகடன் முதலிய பத்திரிகைகள் அவைகளுக்கு முதல் ஸ்தானம் கொடுத்துச் செய்திகளை வெளியிட்டு வந்தன; இதன் காரணமாக இந்தச் சமரஸ சன்மார்க்க இயக்கத்தில் மக்களின் மனம் பெரிதும் மாறிற்று. இந்த இயக்கத்தை மேலும் வலுப்படுத்த ஒரு மத்தியக் கேந்திரக் குழு அமைக்கப் பெற்றது. குருநாதருடைய கட்டளைப்படி பணி செய்வதே தங்கள் கடமை என உறுதி செய்துகொண்ட சில அன்பர்கள் அதில் ஊழியர்களாகச் சேர்க்கப்பட்டார்கள். மாயவரத்தில் அந்தக் குழுவின் நிர்வாக ஸ்தலம் அமைக்கப்பெற்றது. அதில் தொண்டாற்றிவரும் ஷாப் ராமமூர்த்தி ஐயரது அரிய சேவையும், ஆர். கிருஷ்ணராவின் இணையற்ற ஆர்வமும், காதி வஸ்திராலயம் ஏ. வி. வேங்கட்ராம ஐயரது சலியாத உழைப்பும் மிகவும் பாராட்டத்தக்கவை.

அடுத்த கர வருஷத்தில் (1951-52) இக்குழுவானது நாட்டின் பல பாகங்களிலும் ஆங்காங்கு அன்பர்களின் தொடர்பை ஏற்படுத்திக்கொண்டு பல தொண்டுகளைப் புரிந்தது. அவ்வருடம் மார்கழி மாதம் 38 ஊர்களில் இந்த மகாநாடு நடைபெற்றது. அடுத்த நந்தன வருடத்தில் (1952-53) இந்த மகாநாடு நாட்டில் பல பாகங்களிலும் 61 இடங்களில் நடைபெற்றது. விஜய வருஷத்தில் (1953–54) பாரதநாடு முழுவதும் 117 இடங்களில் மிகுந்த வெற்றிகரமாக இது நடைபெற்றது.

1954-55 ஜய வருடத்தில் கேந்திரக் குழுவினர் மகாநாடு நடைபெறுவதை அவ்வளவு முக்கியமாக வற்புறுத்தவில்லை. பள்ளிச் சிறுவர்களுக்கு திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி முதலான பக்திப் பாடல்களை மனப்பாடம் செய்துவைப்பதையே பண்டிதர்கள் மேற்கொள்ளவேண்டுமென்று ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண்டதால், இவ்வகையிலேயே அவ்வருடம் அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. அப்படியிருந்தும் அவ்வருடத்திலும் சுமார் 57 இடங்களில் மகாநாடு நடைபெற்றதானது குறிப்பிடத் தக்கது. 1955–56 மன்மத வருடம் இம்மகாநாடு 77 இடங்களில் நடைபெற்றது.

இப்போது இந்தோசைனுவில் நடைபெறும் திருப்பாவை திருவெம்பாவை அரசாங்க விழாவைப் பற்றி மாயவரத்தில் ஸ்ரீ வள்ளலார்கோயில் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்திசந்நிதியில் ஸ்ரீ ஸ்வாமிகள் 8-12-52இல் செய்த பிரசங்கத்தின் சுருக்கம் பின்வருமாறு.

"இதுகாறும் திருவெம்பாவை, திருப்பாவை நம் தமிழ் நாட்டிலேயே பிரசாரம் அடைந்து வந்ததாக நாம் நினைத்திருந்தோம். சையாம் தேசத்து சரித்திர ஆராய்ச்சி நூல்களை நம் நாட்டுப் புலவர்கள் ஆராய்ந்து நம் தமிழ் நாட்டிற்கு அழியாப் புகழ் தரக்கூடிய சில அதிசயமான தகவல்களைத் தெரிவித்தார்கள். சையாம் தேசத்து உத்ஸவ விரதங்களைப்பற்றி விவரிக்கும் நூல்களில் வெகுகாலம் தொட்டு கவர்ன்மெண்டாரால் நடத்தப்பட்டுவருவதான ஓர் உத்ஸவத்திற்குத் **த்ரியம்பாவை-த்ரிபாவை** என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நம் தமிழ்நாட்டிலிருந்து 3500 கிலோ மீட்டர்களுக்கப்பால் உள்ள தேசத்தில் **திருவெம்பாவை திருப்பாவை** என்னும் பெயர் ஓர் உத்ஸவத்திற்கு கொடுக்கப்பட்டிருப்பது ஆச்சரியமானதாகும். அந்நாட்டு மக்களுக்குத் தற்சமயம் இப்பெயருக்குப் பொருளும் தெரியாது. அது தமிழ்மொழி என்பதுகூட அவர்களுக்குத் தெரியாமலிருக்கலாம். அத்தகைய தேசத்தில் இப்பெயர் வழங்கிவருவதில் மூன்று முக்கிய விஷயங்கள் வெளியாகின்றன. திருவெம்பாவை, திருப்பாவை என்னும் பெயரால் ஓர் உத்ஸவம் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் ஒரே உத்ஸவமாக நடத்தப்பட்டு வருகிறது; இது நம் நாட்டின் ஆருத்ரா தரிசன உத்ஸவ சமயத்திலேயே அங்கு நடக்கிறது; அவ்வுத்ஸவத்தில் இங்கு நடக்கும் ஊஞ்சல் உத்ஸவம் அங்கேயும் நடக்கிறது. திருவெம்பாவை பாராயணமாக நடக்கும் நம் நாட்டில் இவ்வாருத்ரா தரிசன உத்ஸவத்திற்குத் திருவெம்பாவை—திருப்பாவை என்ற பெயர்களில்லை. தமிழின் பெயரே தெரியாத நாட்டில் தொன்றுதொட்டு நடந்துவரும் உத்ஸவத்திற்கு இப்பெயர் இருந்துவருகிறது. இதுவும் கவனிக்கத்தக்கதாகும். ஹிந்துமத தெய்விக நூல்கள் இந்தோசைனு நாடு முழுவதும் பரவி யிருந்தனவென்பதற்கு அத்தாக்ஷியாக அங்கு, நம் தேசத்தில் காணப்படுவதைவிட தூய்மையான, சம்ஸ்கிருத பாஷையிலுள்ள ஏராளமான கல்வெட்டுகள் இருக்கின்றன. இந்தோசைனு நாட்டில் தெய்விகத் தமிழ் நூல்களும் பழக்கத்திலிருந்தனவென்பதற்கு ஓர் உத்ஸவத்திற்கு இட்டிருக்கும் த்ரியம்பாவை—த்ரிபாவை என்னும் பெயரே அத்தாக்ஷியாக இருக்கிறது.

இவ்விழாவில் சிவன் உருவத்தை நியமங்களோடு தாங்குபவர் ஈசான்ய திக்கிலிருந்து வரவேற்கப்படுகிறார். பிறகு ஊஞ்சலுக்கு வடபாகத்திலும் அழைத்துச் செல்லப்படுகிறார். சிவன் ஆனந்த மூர்த்தி என்பது அவர்களது கொள்கை. நமது கோயில்களில் ஈசான்ய திக்கில் விளங்கும் ஆனந்த தாண்டவ நடராஜ மூர்த்தியை இவ்வழக்கம் குறிக்கின்றதுபோலும். ஆசனத்தில் உட்காரும்பொழுது அவர் தமது வலக் காலை நிலத்தில் ஊன்றியும், இடது காலை வலத்துடை மீது போட்டுக் கொண்டும் உட்காருகிறார் என்று அவ்வாராய்ச்சி நூல்கள் கூறுகின்றன. இது நம் நாட்டின் தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தை ஞாபகப்படுத்துகிறது. சிவ பெருமானின் இவ்விரண்டு உருவங்களில் தக்ஷிணாமூர்த்தி ஞானத்தைக் கொடுக்கிறார் ; நடராஜர் ஆனந்தத்தைக் கொடுக்கிறார். இவ்விருவரும் யமபாதையைக் கண்டிக்கும் முறையில் தென் திசையை நோக்கி இருக்கிறார்கள். அஞ்ஞானம், சோகம் இவைகளுக்குக் காரணமான அபஸ்மாரத்தை ஸ்ரீ நடராஜ மூர்த்தியும், தக்ஷிணாமூர்த்தியும் காலால் மிதித்து இருத்தி நிற்பதை ஆலயங்களில் காணலாம்.

மாயூரத்தில் திருவெம்பாவை, திருப்பாவை வளர்ச்சிக்குத் தமது சான்னித்யத்தால் அருள் புரிவது ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபம். சயாம் நாட்டிலும் திருவெம்பாவை திருப்பாவை உத்ஸவத்திற்குத் தொன்றுதொட்டு நடுநாயகமாக விளங்குவது ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் வடிவமேயாகும். ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் வடிவத்தை **பொய்கை ஆழ்வார், 'அரன் நாரணன்நாமம்..................மேனியொன்று'** என்னும் பிரசித்தமான ஒற்றுமைப் பாசுரத்திற்கு முன் பாசுரமாக இருக்கும்,

> நெறிவாசல் தானேயாய் நின்றானை, ஐந்து
> பொறிவாசல் போர்க்கதவம் சார்த்தி-அறிவானும்
> ஆலமர நீழலறம் நால்வர்க் கன்றுரைத்த
> ஆலமமர் கண்டத் தரன்.

என்னும் பாசுரத்தில் ஆழ்வார் அழகாக நிரூபித்திருக்கிறார். **ஸ்ரீ வேதாந்த தேசிகரும்** தமது 'சங்கல்ப சூர்யோதயம்' எனும் நாடகத்தில், தாண்டவம் புரியும் நடராஜ மூர்த்தியே ஆலமரத்தடியில் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாக உள்ளார் என்பதாகக் கூறி, தக்ஷிணாமூர்த்தியும் நடராஜ மூர்த்தியும் ஒரே ஸ்வரூபமென்பதை நிரூபிக்கிறார்.

ஆனந்தத் தாண்டவ நடராஜமூர்த்தியின் உத்ஸவ காலமான ஆருத்ரா தர்சன காலத்தில் சயாம் நாட்டில் நடக்கும் த்ரியம்

பாவை—த்ரிபாவை உத்ஸவத்திற்குப் பிரதானமாக விளங்குபவர் தக்ஷிணாமூர்த்தி யென்பதும், நம் நாட்டில் திருவெம்பாவை திருப்பாவை மகாநாடுகளுக்குப் பூர்வாங்கமாய் நாம் இன்று கூடியிருக்கும் சந்நிதியும் தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதி என்ற விஷயமும் ஓர் ஒற்றுமையைத் தாங்கி இருப்பது கவனிக்கத்தக்கதாகும். இவ் வியக்கம் நம் நாட்டின் எல்லையைக் கடந்து மீண்டும் எங்கும் பரவ ஈசன் அருள் பாலிப்பாராக.''

* * * * *

**நந்தன வருடப் பிறப்பன்று ஸ்வாமிகள் மக்களுக்கு அருளிய உபதேசம்**

மக்கள் எளிதான வகையில் தெய்வ வழிபாடு செய்ய உதவும் படியான பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர மந்திரங்களையும், **திருநாவுக்கரசு ஸ்வாமிகளின்** நாலாம் திருமுறையிலுள்ள **'சிவாய நம என்று சிந்தித்து'** என்னும் பதிகத்தையும், **திருமங்கை ஆழ்வாரது** பெரிய திருமொழியில் **'குலம் தரும்'** என்னும் பாடலையும் அச்சிட்ட ஒரு சிறு நூலை நந்தன சித்திரை வருடப் பிறப்பன்று நம் நாடு முழுவதும் மக்களுக்கு வழங்க ஸ்வாமிகள் பணித்தார்கள். இதை மக்களுக்கு வழங்குவதான பணியில் ஈடுபடப் பக்தி நிறைந்த அன்பர்கள் தேவையாயிருந்ததால், திருப்பாவை திருவெம்பாவை கேந்திரக் குழுவினர் இதைக் குறித்து, பத்திரிகையில் ஒருவேண்டுகோள் விடுத்தனர். 1600 அன்பர்கள் இப்பணியில் பங்கெடுத்துக் கொள்ள இசைந்து குழுவினருக்குக் கடிதம் எழுதினர். இந்த அன்பர்கள் வாயிலாக 4,20,000 நூல்கள் மக்களுக்கு விநியோகம் செய்யப்பட்டன. இந்த நூல்கள் தமிழுடன் மலையாளம், தெலுங்குப் பாஷைகளிலும் அச்சிடப்பட்டு வழங்கப்பட்டன. பர்மா, இலங்கை, மலாயா முதலான வெளிநாடுகளிலுள்ள அன்பர்களும் இப்பணியில் தொண்டாற்றினார்கள். முறையாக உபதேசங்களைப் பெறுதவர்களும் அவ்விதம் உபதேசங்களைப் பெற வசதியற்றவர்களுமான எல்லா ஹிந்து மக்களுக்கும் இந்த நூலினால் உபதேசத்தை வழங்க வகை செய்யப்பட்டது.

**சட்டசபை அங்கத்தினர்களுக்கு அனுப்பிய திருமுகம்.**

பாரத நாட்டின் எல்லாச் சட்டசபை அங்கத்தினர்களுக்கும், மத்திய சட்டசபை அங்கத்தினர்களுக்கும் நமது தர்மத்தையும் கலாசாரத்தையும் காப்பாற்ற வகை செய்யும் பொருட்டு ஸ்வாமிகள் ஒரு திருமுகத்தை அனுப்பியிருந்தார்கள். மக்களது வாழ்க்கையைச் சம்பந்தப்படுத்திச் சட்டங்கள் இயற்றும்பொழுது, நமது

பண்பாட்டுக்கு ஒவ்வாத சட்டமெதையும் நிறைவேற்றலாகாதென இந்த அங்கத்தினர்களுக்கு ஓர் வேண்டுகோளையும் ஸ்வாமிகள் விடுத்தார்கள். இந்தத் திருமுகம் 4056 சட்டசபை அங்கத்தினர் களுக்கு அனுப்பிவைக்கப்பட்டது. அதேபோல் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களுக்கும் ஓர் திருமுகம் அனுப்பிவைக்கப்பட்டது.

**ஆலய நிர்வாகிகளுக்கு அனுப்பிய வேண்டுகோள்**

ஆலயங்களில் பணியாற்றுகின்ற யாவரும் சிவாலயங்களில் முறையே **திருமுறை, திருவெம்பாவைப்** பாசுரங்களையும், விஷ்ணு ஆலயங்களில் **திவ்ய பிரபந்தம், திருப்பாவைப் பாசுரங்களையும்** மனப் படாம் செய்து பாராயணம் செய்ய வேண்டுமென 1300 ஆலயங் ளின் நிர்வாக அதிகாரிகளுக்கு ஸ்வாமிகளின் கட்டளையின் பேரில் ஒரு வேண்டுகோள் அனுப்பப்பட்டது.

**மார்கழி மாதம் ஆலயங்களில் திருப்பாவை—திருவெம்பாவைப் பாரா யணம்**

மார்கழி மாதத்தில் விடியற்காலையில் விஷ்ணு ஆலயங்களிலும் சிவ ஆலயங்களிலும் முறையே திருப்பாவை, திருவெம்பாவை பாடல்களை இசையுடன் பாராயணம் செய்து, அதை ஒலிபெருக்கி மூலம் பரப்ப வகை செய்யவேண்டுமெனப் பல ஆலய நிர்வாகி களை மகாநாட்டின் கேந்திரக் குழுவினர் ஸ்வாமிகளின் விருப்பப்படி கேட்டுக்கொண்டார்கள். அவ்விதம் ஒலிபெருக்கி அமைத்த 43 ஆலயங்களுக்குத் திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளி யெழுச்சி முதலான பாசுரங்களடங்கிய இசைத் தட்டுகளும், பஜகோவிந்தம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் இசைத்தட்டுகளும் இலவசமாக வழங்கப்பட்டன.

**திருவிழாக்களில் துண்டுப் பிரசுர விநியோகம்**

ஸ்ரீமத் ஆசார்யர்கள் அருளிய **"வாழ்க்கையைச் சீர்படுத்த மூவகை திட்டங்கள்"** என்னும் துண்டுப்பிரசுரங்களை கேந்திரக் குழுவினர் திருவிழாக்கள் நடைபெறும் பல ஊர்களில் ஏராளமாக விநியோகம் செய்தனர். அவ்விதம் விநியோகம் செய்யப்பட்ட தலங் களில் மாயூரம், ஸ்ரீரங்கம், திருவண்ணாமலை, வடலூர், திருவை யாறு முதலான தலங்கள் முதன்மையாகும். இத்துண்டுப் பிரசுரங் களில் 1,00,000 பிரதிகளைக் கோயம்புத்தூர் அசோகா பாக்குத் தூள் தொழிற்சாலையின் அதிபரான **ஸ்ரீ எம். கே. கிருஷ்ணப்ப செட்டியார்** அச்சிட்டு இலவசமாகக் குழுவினருக்கு உதவினர்.

மேலும், அவர் ஹிந்துமதத்தின் அடிப்படைத் தத்துவங்கள் என்னும் பிரசுரத்தின் 80,000 பிரதிகளை அச்சிட்டு வழங்கினார். இந்தப் பிரசுரமும் திருவிழாக் காலங்களில் பல ஊர்களிலும் விநியோகிக்கப்பட்டது. மொத்தம் இந்தப் பிரசுரங்கள் 1,00,000 பிரதிகளுக்கு மேல் வழங்கப்பட்டன.

**சிறுவர், சிறுமியருக்கு இலவசமாகத் திருப்பாவை-திருவெம்பாவைப் புத்தகம் வழங்கப்பட்டது**

திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி, இந்தப் பாசுரங்களைச் சிறுவர் சிறுமியருக்கு மனப்பாடம் செய்துவைக்கும் பணியில் நம் தமிழ்நாட்டிலுள்ள 390 பள்ளிக்கூடங்களில் தலைமை ஆசிரியர்களுக்கு ஓர் வேண்டுகோள் அனுப்பப்பட்டதில், 64 பள்ளிக்கூட ஆசிரியர்கள் இப்பணியில் தீவிரமாக பங்கெடுத்துக் கொண்டு தொண்டாற்றினார்கள். பள்ளிச் சிறுவர்களுக்கெனத் திருப்பாவை திருவெம்பாவைப் புஸ்தகங்களில் 21,000 பிரதிகள் இலவசமாக அனுப்பப்பட்டன, 1664 தனி அன்பர்களுக்கு அவர்களது வேண்டுகோளின்படி இப்பிரசுரங்கள் அனுப்பப்பட்டன. மேலும் இலங்கை, மலேயா, பர்மா முதலான வெளிநாடுகளில் 49 சங்கங்களுக்கும் இப்பிரசுரங்கள் அனுப்பப்பட்டுள்ளன. மொத்தத்தில் 90,000 பிரதிகள் இவ்வாறு இலவசமாக வழங்கப் பட்டுள்ளன.

**ஸ்ரீமத் பாகவத சுருக்கப் புத்தகப் பரிசளிப்பு**

ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய **பஜகோவிந்தம்** என்னும் சுலோகங்கள் முழுவதையும் குறிப்பிட்ட காலத்திற்குள் மனப்பாடம் செய்கின்றவர்களுக்கு ஸ்வாமிகளின் விருப்பப்படி **ஸ்ரீமத் பாகவத சுருக்கப் புத்தகம்** இனாமாக வழங்கப்படுமென்பதாகச் செய்திப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்விக்கப்பட்டது. 1731 அன்பர்கள் அந்தத் தோத்திரங்களை மனப்பாடம் செய்து, அவைகளின் பிரதி தேவை என எழுதியதின் பேரில் அவர்கள் யாவருக்கும் தபால்மூலம் அப் புத்தகங்கள் அனுப்பப்பட்டன. அவர்களில் 265 அன்பர்கள் அப்பாடல்கள் முழுவதையும் மனப்பாடம் செய்துவிட்டதாகத் தெரிவித்துக்கொண்டனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஸ்ரீமத் பாகவதச் சுருக்கப் புத்தகம் இனாமாக வழங்கப்பட்டது.

**விநாயகர் அகவல் திருமுருகாற்றுப்படை**

வைகாசி மாதம் விசாகப் பெருநாளன்று ஆரம்பித்து விநாயக சதுர்த்திக்குள் ஔவையார் அருளிய விநாயகர் அகவலையும்,

திருமுருகாற்றுப் படையையும் மனப்பாடம் செய்ய விரும்பிய 200 நபர்களுக்கு அந்தத் தோத்திரங்களின் பிரசுரங்கள் இனமாக வழங்கப்பெற்றன.

**வாரவழிபாடு சங்கங்கள் நிறுவியது**

தமிழ் நாட்டில் வாரவழிபாட்டுச் சங்கங்கள் நிறுவும்படி 500 அன்பர்களுக்குக் கடிதம் எழுதியதில் பல அன்பர்களின் முயற்சியால் 130 சங்கங்கள் நாட்டின் பல பாகங்களிலும் நிறுவப் பட்டன. அந்தச் சங்கங்களுக்கு தோத்திரப் பாடல்கள் 2000 பிரதிகளும், தெய்வ வணக்கம் 3,700 பிரதிகளும் அனுப்பப் பட்டன. ஞாயிறுதோறும் காலை நீராடியவுடன் அன்பர்கள் சுருதியுடனும், தாளத்துடனும் தோத்திரப் பாடல்களை பாடிக் கொண்டு தங்கள் ஊரிலுள்ள தேவாலயத்தை வலம் வந்து, கோயில் வாயிலில் 12 முறை நமஸ்காரம் செய்து வீடு திரும்ப, வேண்டுமென்பது இச்சங்கத்தின் முக்கிய கடமையாகும். பன்னிரண்டு பேர்களுக்குக் குறையாமல் சேர்ந்து ஒரு ஊரில் இச்சங்கம் ஏற்படுத்திக்கொள்ளலாமென ஸ்வாமிகளின் விருப்பப்படி குழுவினர் ஓர் அறிக்கை விடுத்தார்கள்.

**ஸ்ரீராம நவமியில் ராமாயண பாராயணம்**

ஒவ்வொரு வருடமும் ஸ்ரீராம நவமிக்கு முன்பு, படிப்பதற்குப் போதிய தகுதி உள்ள ஒவ்வொருவரும் வால்மீகி ராமாயணத்தையோ, கம்ப ராமாயணத்தையோ, அல்லது துளசிதாஸரின் ஹிந்தி ராமாயணத்தையோ பாராயணம் செய்து வரவேண்டும் என்றும் அதை இன்ன முறையில் பாராயணம் செய்யவேண்டுமென்றும், ஸ்வாமிகள் ஹிந்து மக்களுக்கு ஓர் வேண்டுகோள் விடுத்திருக்கின்றார்கள். அதன்படி நாடெங்கும் ஆயிரக் கணக்கான அன்பர்கள் ராமாயண பாராயணம் செய்துவருகின்றனர். அவர்கள் யாவருக்கும் ராமநாமாவைச் சொல்லிப் பொறுக்கப்பட்ட முழு அக்ஷதை ஸ்வாமிகள் பிரசாதமாக வழங்கப் பெற்று வருகின்றன. ராமாயண சொற்பொழிவு ஆற்றுகின்றவர்கள் மூலம் **நாம ராமாயணம்** என்னும் புத்தகத்தையும் **ஸ்ரீ கோதண்டராமர் படத்தையும்,** 25,000 பிரதிகள் அச்சிட்டு அவை 320 ஊர்களுக்கு, சென்ற விஜய ஆண்டில் ஸ்ரீராமநவமியன்று அன்பர்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பப்பட்டன. இந்தப் புத்தகங்களையும், படங்களையும் அச்சிடும் பணியைக் கோயம்புத்தூர் **எம். கே. கிருஷ்ணப்ப செட்டியார்** ஏற்றுக்கொண்டார்.

**ஆஸ்திக அன்பர்களுக்கு ருத்ராக்ஷமாலை வழங்கியது**

ஸ்வாமிகளைத் தரிசிக்க வரும் அன்பர்கள் ருத்ராக்ஷம் தரித்துக்கொள்ள விரும்பி. ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டால், ஸ்வாமிகள் அவர்களுக்கு அந்த மாலைகளை வழங்குவது வழக்கம். ருத்ராக்ஷம் அணிய விருப்பமுள்ளவர்கள் மடத்திற்குக் கடித மூலம் தெரிவித்துக்கொண்டாலும் அவர்கள் யாவருக்கும் தபால் மூலம் இலவசமாக ருத்ராக்ஷ மாலைகளை ஸ்வாமிகள் ஆசியுடன் அனுப்பப்படுமென விளம்பரம் செய்ததன் விளைவாகப் பல அன்பர்கள் மடத்திற்கு விண்ணப்பித்துக்கொண்டனர். அவர்கள் யாவருக்கும் ருத்ராக்ஷ மாலைகள் அனுப்பப்பட்டன. தூத்துக்குடியில் மாத்திரம் 250 அன்பர்கள் மடத்திலிருந்து இவ்விதம் மாலைகளைப் பெற்றுக்கொண்டனர்.

**1950, 1951, 1952-ஆவது ஆண்டுகளில் செய்த தருமப் பிரசாரம்**

மேற்கண்ட மூன்று ஆண்டுகளிலும் ஸ்வாமிகள் தீவிரமாகத் தருமப் பிரசாரத்தை மேற்கொண்டு தஞ்சை ஜில்லாவில் பல பாகங்களில் யாத்திரை செய்துகொண்டிருந்தார்கள். பல்வேறு இடங்களில் முத்ராதிகாரிகள் சங்க மகாநாடுகளும், திருப்பாவை-திருவெம்பாவை-திருமுறை-ஆறங்க மகாநாடுகளும் அவ்வருடங்களில் நடைபெற்றன. பல்வேறு துறைகளில் ஈடுபட்ட பிரமுகர்கள் இந்த மகாநாடுகளில் கலந்துகொண்டனர். பொறையாறு சக்திவிலாஸ் மோட்டார் சர்வீஸ் உரிமையாளர் **வீரப்ப பிள்ளை,** தஞ்சை ஜில்லா போர்டு உபதலைவர் மேனுங்குடி **மருதவாணம் பிள்ளை,** வலிவலம் **மனைத்துணைநாத தேசிகர்,** ஏனங்குடி **விஜய ராகவலு நாயுடு,** வடபாதிமங்கலம் **வி. எஸ். தியாகராஜ முதலியார்,** கபிஸ்தலம் **கோவிந்தஸ்வாமி மூப்பனார்,** கும்பகோணம் வக்கீல் **கந்தசாமி மூப்பனார்,** கும்பகோணம் முனிஸிபல் சேர்மன் **ரத்ன சபாபதி செட்டியார்,** சென்னை, ஹைகோர்ட்டு ஜட்ஜுகள் **டி. எல். வேங்கடராமய்யர், பி. ராஜகோபாலன், பஞ்சாபகேச சாஸ்திரிகள், ராகவராவ்,** சென்னை மேயர் **ஆர். ராமநாதன் செட்டியார்,** திருவனந்தபுரம் சர்வகலாசாலை உப அத்யக்ஷகர் **ஸர், ஏ. ராமஸ்வாமி முதலியார்** முதலிய பிரமுகர்களும், மற்றும் தஞ்சை ஜில்லாவில் ஸ்வாமிகளுடன் நெருங்கிப் பழகி, அவர்களிடம் பணிகளைக் குறைவர ஆற்றிவரும் மிராசுதார்கள் பலரும், உயர்தர சர்க்கார் உத்யோகஸ்தர்களும் இந்தப் பிரசாரப் பணிகளில் ஈடுபட்டிருந்தனர்.

**1951, 1952-ஆவது வருட வியாஸ பூஜை**

1951-ஆவது வருட சங்கர ஜயந்தி உத்ஸவத்தை ஸ்வாமிகள் நன்னிலம் தாலூகா செம்மங்குடியில் நடத்தினுர்கள். வியாஸ பூஜையும் சாதுர்மாச சங்கல்பமும் அத்தாலுகா முடிகொண்டானில் நடைபெற்றன. அங்கு நாட்டின் பல பாகங்களிலிருந்தும் சாஸ்திர வித்வான்களும், சங்கீத வித்வான்களும், கலா ரசிகர்களும், ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்காக வந்து ஸ்வாமிகளைத் தரிசித்து, தங்கள் கலைத் திறனை வெளிப்படுத்தி ஸ்வாமிகளிடம் சம்மானம் பெற்றுப்போனுர்கள். ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகளைத் தரிசிக்க வித்வான்களும், பிரமுகர்களும் சுமார் 200 பேர்களுக்கு மேல் தொடர்ந்து மூன்று மாதங்கள் வரை வந்துகொண்டிருந்தனர். இவர்கள் யாவருக்கும் அவ்வூர் மிராசுதார் **மாடி நாாரயண ஸ்வாமி ஐயர்** என்னும் பக்தர் மிகுந்த உபசரணையுடன் யாவருக்கும் நற்சுவை உண்டி அளித்தது பாராட்டத்தக்கது அவ்வருட சாதுர்மாச சங்கல்பம் மிகவும் சிறப்புடன் நடைபெறப் பணி செய்தவர்களில் அவ்வூர் மிராசுதார்களுள் ஸ்வாமிகளிடம் ஒப்பற்ற பக்திகொண்டவரான **வாஞ்சிநாதையரை** முதன்மையாகக் குறிப்பிடவேண்டும். அவ்வருட நவராத்திரி பூஜை பூந்தோட்டம் ஸ்டேஷனுக்கு அடுத்த **ருத்ரகங்கை** என்னும் தலத்தில் நடைபெற்றது. அடுத்த 1952-ஆவது ஆண்டில் வியாஸபூஜை, சாதுர்மாச சங்கல்பம் வீரசோழன் ஆற்றங்கரையிலுள்ள **சாத்தனூர்** என்னும் கிராமத்தில் நடைபெற்றது. அந்தக் கிராம மிராசுதார்களான **ரத்னமய்யரும், எஸ். ஆர். கிருஷ்ணமூர்த்தி ஐயரும்**, மற்றவர்களும் ஸ்வாமிகள் அங்குத் தங்கியிருந்த காலத்தில் விசேஷப் பணிகளைப் புரிந்து நற்பயனைப் பெற்றுர்கள். கார்த்திகை மாதம், ஆறுபாதியில் சனிப்பெயர்ச்சியை உத்தேசித்து, புருஷஸூக்த ஹோமம், ஸ்ரீ ஸூக்த ஹோமம், மகா ருத்ர ஹோமம், ஸ்ரீ வித்யா ஹோமம் முதலியன நடந்தன.

**வேத லக்ஷண வித்வான்கள் 100 பேருக்குத் தங்கத் தோடா பரிசளிப்பு**

ஸ்வாமிகள் 1951–ஆவது வருட சங்கர ஜயந்தி உத்ஸவத்தைத் திருவாரூருக்கு அருகிலுள்ள **செம்மங்குடியில்** நடத்திய பொழுது 22 வேதலக்ஷண பண்டிதர்களை வரவழைத்து, அவர்கள் யாவருக்கும் யாளி முகம் அமைத்துச் சித்திர வேலைப்பாடுகளுடன் தயாரிக்கப்பட்ட தோடா என்னும் தங்கக் கைக்காப்புகளைப் பரிசு அளித்தார்கள். இப்பரிசை முதலில் பெற்றவர் ருக் வேதத்தை

லக்ஷணத்துடன் கற்றவரும், பரம்பரையாக மடத்தின் உபாத்தியா யராக விளங்கிவந்தவரும், பின்னர் சந்நியாச ஆச்ரமம் பெற்றுச் சித்தியடைந்தவருமான திருக்கோடிகாவல் **கிருஷ்ண சாஸ்திரிகள்** ஆவர். தென்னுட்டின் பல பாகங்களில் வசிக்கும் இத்தகைய திறமைவாய்ந்த மற்றப் பண்டிதர்களுக்கும் பின்னர் மடத்திலிருந்து அழைப்புகள் அனுப்பப்பட்டன. அந்த அழைப்புக்கு இணங்கிப் பலர் ஸ்வாமிகள் முகாம் செய்த இடங்களுக்கு வந்து அந்த உயரிய பரிசைப் பெற்றுப் போனுர்கள். வயதின் காரணமாக வெகு தூரத்திலிருந்து பிரயாணத்தை ஏற்றுக் கொள்ள முடியாதவர் களுக்குப் பிரதிநிதிகள் மூலம் அப்பரிசு அனுப்பப்பட்டது. இவ் விதம் 100 பண்டிதர்கள் இப்பரிசைப் பெற்றுள்ளார்கள்.

இவர்களில் 50 பேர்கள் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்தவர்கள். மற்றவர்களின் வாசஸ்தலங்கள் பின்வருமாறு :

(1) திருச்சி ஜில்லா. 16, (2) மைசூர் ராஜ்யம். 10, (3) சென்னை நகரம். 5, (4) புதுக்கோட்டைச் சீமை. 4, (5) மலை யாள ராஜ்யம். 3, (6) பம்பாய் ராஜ்யம். 2, (7) ஆந்திர ராஜ்யம். 3. (8) ஹைதராபாத் ராஜ்யம். 1, (9) செங்கல்பட்டு ஜில்லா. 1, (10) திருநெல்வேலி ஜில்லா. 1, (11) மதுரை ஜில்லா. 1, (12) தென்னுர்க்காடு ஜில்லா. 1, (13) உத்தரப் பிரதேசம். 1, (14) பனரஸ்-காசி க்ஷேத்திரம். 1.

சங்கர, ராமானுஜ, மத்வ சித்தாந்தங்களை அனுசரித்த மூன்று மதத்தினரும் எவ்விதப் பாகுபாடுமின்றி இந்தப் பரிசைப் பெற்றனர். இந்த 100 பண்டிதர்களைத் தவிர குறிப்பிட்ட திறன் பெற்றவர்கள் மடத்திற்கு வரும்பொழுதெல்லாம் அவர்கள் யாவருக்கும் இவ்விதத் தோடாப் பரிசை வழங்கி அவர்களை ஸ்வாமி கள் கௌரவித்தார்கள்.

* * * * *

ஸ்ரீ ராம நாம மகிமையைப்பற்றி ஸ்வாமிகள் சிஷ்யர்களுக்கு உபதேசிக்கையில் கீழ்கண்டவாறு உரைத்தார்கள்.

ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவத் கதா :
ராம பூதம் ஜகத் ஸர்வம் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி
(வால்மீகி ராமாயணம் யுத்த காண்டம் ஸர்க்கம் 131 சுலோகம் 100)

**துயரங்கள் நீங்க மருந்து**

" ராமர் ராஜ்யபாரம் செய்துகொண்டிருந்த காலத்தில் ப்ரஜைகள் எப்பொழுதும் ஸ்ரீராம ராம ராம என்று

சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். ராமரது ராஜ்ய பரிபாலனத்தில் உலகமே ராம மயமாகிவிட்டது.'' என்று கூறியவாறு பகவந் நாம மகிமையால் நாம் நம் துக்கங்களிலிருந்து விடுதலை அடைய வேண்டும். ஒவ்வொரு ஹிந்துவும் ஒவ்வொரு நாளும் 108 தடவையாவது ராம நாமாவை ஜபிக்க வேண்டும். ராம என்னும் இரண்டு எழுத்துக்களும் விஷ்ணு மந்திரத்திற்கும் சிவ மந்திரத்திற்கும் முறையே ஜீவாதாரமான அக்ஷரங்களாய் விளங்குவதால், இவ்விரு அக்ஷரங்களால் ஏற்பட்ட ராம என்னும் நாமத்தைச் சமயம் கிடைத்தபோதெல்லாம் காலவரையின்றி யாவரும் ஜபிக்கலாம்.

ஆங்கிலேயர் கூட அக்ஷரத்தின் மகிமையால் வெற்றியடைந்தார்கள் என்பதைக் கடந்த யுத்தத்தின்பொழுது நாம் கண் கூடாகக் கண்டோம். ரஷ்யாவினுலும் ஜெர்மனியினுலும் மிகுந்த கஷ்டங்களை அனுபவித்த இங்கிலாந்து நாடானது மிகவும் பரிதாபப்படக்கூடிய நிலையிலிருந்தபோது, அப்பொழுது அரசாங்கம் நடத்தியவர்கள் **விக்டரி** என்னும் சொல்லின் வி என்னும் முதல் எழுத்தை ஜீவநாடியாக வைத்து அரசாங்க நடவடிக்கைகளிலும் மற்றும் பொதுஸ்தாபனங்களிலும் அந்த எழுத்தைப் பொறித்து, யாவரும் அதைக் காணவும் அதைக் கூறவும் செய்தார்கள். அதன் பெருமையிலேயே வெற்றியைக் கண்டதாக அவர்கள் நம்புகிருர்கள். அக்ஷரத்தின் மகிமையில் அவர்களுக்கு ஈடற்ற நம்பிக்கை இருந்தது. நாமும் ஆழ்ந்த நம்பிக்கையுடன் **ராம நாமாவை** ஜபிக்க வேண்டும்.''

* * * * *

## மாயவரத்தில் பக்தர்கள் அளித்த வரவேற்பு: பெரிய ஊர்வலம்

1951-ஆவது ஆண்டில் துலா காவிரி ஸ்நானத்தின்பொருட்டு ஸ்வாமிகள் மாயூரத்தில் தங்கியிருந்தபொழுது, பக்தர்கள் ஸ்வாமிகளுக்குப் பெரியதொரு வரவேற்பை அளித்தனர். இந்த வரவேற்பில் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், வக்கீல்களும், வியாபாரிகளும், மிராசுதார்களும், பொது மக்களும் கலந்து கொண்டனர். அப்பொழுது ஸ்வாமிகளுக்குச் சீரிய முறையில் ஓர் ஊர்வலம் நடத்திவைக்க வேண்டுமெனப் பொதுமக்கள் விரும்பினர். அநேகமாகக் கால்நடையாகவே யாத்திரை செய்துவரும் ஸ்வாமிகள் சில வருடங்களாகவே சிவிகையில் அமர்ந்து ஊர்வலம் வருவதை நிறுத்திக்கொண்டுவிட்டார்கள். ஆயினும், மக்களது எல்லையற்ற

ஆர்வமும், பக்தியும் அவர்களது கோரிக்கையை ஸ்வாமிகள் ஒருவாறு ஏற்றுக்கொள்ளும்படி செய்துவிட்டன. ஸ்வாமிகளின் சம்மதத்தைப் பெற்ற மகிழ்ச்சியினுல் மாயூரவாசிகள் மிகுந்த சிறப்பான வகையில் ஊர்வலத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். அப்பொழுது அங்கு சப்ஜட்ஜாக இருந்த ஆர். லக்ஷ்மண ஐயர் மேற்பார்வையில் இவ்வேற்பாடுகளெல்லாம் நடைபெற்றன.

1951–ஆவது வருடம் நவம்பர் மாதம் 20-ஆம் தேதி இரவு, மாயூரத்தில் இந்த ஊர்வலத்தில் ஸ்வாமிகளைத் தரிசிக்கப் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர். ஸ்வாமிகள் அன்று தந்தச் சிவிகையில் அமர்ந்து பக்தர்களுக்குக் காட்சியளித்தது மாயூரவாசிகள் என்றும் மறக்கமுடியாத நிகழ்ச்சியாகும். நம் நாட்டில் புகழ் பெற்ற நாதஸ்வர வித்வான்களான திருவாடுதுறை டி. என். ராஜரத்தினம் பிள்ளை, திருவிடைமருதூர் வீருசாமி பிள்ளை திருவெண்காடு சுப்பிரமண்ய பிள்ளை, செம்பனூர்கோவில் கோவிந்தசாமி பிள்ளை இவர்கள் நால்வரும் சேர்ந்து அவ்வூர்வலத்தின் முன் நாதஸ்வரம் வாசித்துப் பக்தர்களை மகிழ்விக்கச் செய்தார்கள்.

* * * * *

மாயூரத்திற்கடுத்த நாகங்குடி என்னும் கிராமத்தில் ஸ்வாமிகள் விஜயம் செய்திருந்தபொழுது, 23-2-1952 மகா சிவராத்திரி அன்று, சுவாமிகள் விசேஷ பூஜைகளை நிகழ்த்திய பின்னர், அங்குக் கூடியிருந்த பக்தர்களுக்குப் பரமசிவனது மகிமையை விளக்கிக் கீழ்கண்டவாறு உபதேசித்தார்கள்:—

"உஷ்ணத்தினுல் உருக்கப்பட்ட நெய்யை நிறமற்றதாகக் காண்கிறோம். அதே நெய் குளிர்ந்தவுடன் வேறொரு நிறத்தை அடைகிறது. ஈசனை உருவமற்றவர், அரூபி எனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனுல் பக்தர்களின் உள்ளத்தில் ஈசன்பால் அன்பு பரிபூர்ணமாக விளங்கும்பொழுது, அந்தக் குளிர்ந்த நிலையில் உருவமில்லாத கடவுளும், அவர்களது பக்திக்குக் கட்டுண்டு, அவர்களை உய்விக்க ஓர் உருவத்தை அடைகிறார். அவ்விதம் பல உருவங்களை எடுத்துக்கொண்டு ஈசன் நம்மை ரக்ஷிக்கிறார். பரமேச்வரன் மகாவிஷ்ணுவைப் போல் சில அவதாரங்களை எடுக்காவிடினும், அநேக மோகன ரூபங்களை எடுத்துக்கொண்டு பக்தர்களது உள்ளத்தைக் கவர்ந்து வருகிறார்.

ஓர் இடத்தில் ஆபரணம் எதுவுமின்றி இயற்கை எழிலுடன் ஈசன் பிக்ஷாண்டார் மூர்த்தியாகத் திருக்கோலம் கொள்கின்றார்; மற்றொருபுறம் அழகே உருக்கொண்ட சுந்தரேச்வரராக அவர் காட்சியளிக்கிறார். அதே கடவுள் பயமுள்ளவர்களுக்குப் பயத்

தைப் போக்கி அபயத்தை அளிக்கும் பைரவ மூர்த்தியாகத் தோன்றுகிறார். வீரத்தைக் காண்பிக்கும் நிலையில், அவரே வீரபத்ரராகவும் காட்சியளிக்கிறார்; தேவர்கள் விரும்பிய ஆனந்தத்தைக் கொடுக்கச் சிற்சபையில் அந்த ஈசனே நடனமாடுகிறார்; எல்லாவற்றிலும் உயர்ந்ததான ஞானத்தைக் கொடுக்கும் தெய்வமாகத் தக்ஷிணாமூர்த்தி வடிவத்துடன் அமர்ந்து, மௌனத்தினால் ஸனகாதி முனிவர்களுக்கு அவரே உபதேசம் அருளுகிறார். இவைகளெல்லாம் பரமசிவனின் திருக்கோலங்கள்; இவ்விதம் 62 திருக்கோலங்களைப் பரமசிவன் பெற்றிருக்கிறார். ஜகத்தைச் சிருஷ்டி செய்யும் முறையில் பிரம்மா வென்றும், பரிபாலனம் செய்யும் வகையில் விஷ்ணு என்றும் ஸம்ஹாரம் அல்லது தன்னுள் அடக்கி வைத்துக்கொள்ளுதல் என்னும் முறையில் சிவன் என்றும் மூன்று நாமரூப பேதங்களை முழுமுதல் சக்தியான ஸர்வேச்வரன் அடைந்திருக்கிறார்.

அம்மூன்று மூர்த்திகளில் பரமசிவனுக்கே அதிகக் கருணை இருப்பதாக நினைக்க வேண்டியிருக்கிறது. சிருஷ்டி வேலையில் ஈடுபடும் பிரம்மாவுக்கு அதிகக் கருணை தேவையில்லை. அவர் சிருஷ்டி செய்யாமலேயே இருந்தால்கூட, அவரைக் கருணை மிகுந்தவர் என்று முடிவு செய்துவிடலாம். மகாவிஷ்ணுவோ மக்களின் புண்ணிய பாபங்களுக்குத் தக்கவாறு சுக துக்கங்களை அளவிட்டுக் கொடுக்கிறார், பரமசிவனோ பாபம் புரிந்தவன், புண்ணியத்தைச் செய்தவன், ஞானி, அஞ்ஞானி என்னும் பாகுபாடு இல்லாமல் ஸம்ஹார காலத்தில், அதாவது பிரளய காலத்தில் யாவருக்கும் ஓய்வு அளித்து, அவர்களைச் சுக துக்கங்களிலிருந்து சிறிது நேரமாவது விடுதலை அடையும்படி செய்கிறார். ஆகவே அவரே கிருபாசமுத்திரம்; அவரே கருணை வள்ளல்.

முதலாழ்வார்கள் கூட, பரமசிவனை, 'முக்கண்ணப்பா' என மனமுருகிப் பாடியுள்ளார்கள். தாயுமானவர் ஈசனை, 'அம்மையப்பா!' எனப் பரிவுடன் அழைக்கிறார். இவ்விதம் எல்லா ஜீவ ராசிகளுக்கும் அடைக்கலமாக அமைந்திருக்கும் ஈசனது நாளைக் கொண்டாடுவதுதான் சிவராத்திரி. ரூபமற்ற அவர் பக்தர்களது பிரார்த்தனைக்கிணங்கி அரூபத்திற்கும், ஸரூபத்திற்கும் இடையில் லிங்க வடிவமாகக் காட்சி அளிக்கின்றார். ஆதியும், அந்தமும் இல்லாத பரமசிவன் இவ்விதம் லிங்கோத்பவ மூர்த்தியாக, நள்ளிரவில் விச்வரூபம் எடுத்த நன்னாளே சிவராத்திரி ஆகும். இந்த உருவத்தில் முடியைக் காண விரும்பிய பிரம்மா அன்னபட்சி உருவத்துடன் ஆகாயத்தில் பறந்தும், அடியைக் காண மகாவிஷ்ணு

பன்றி உருவத்துடன் பாதாளம் சென்றும், இவ்விருவராலும் அந்த விச்வரூபம் முழுவதையும் காணமுடியவில்லையாம். அந்த உருவம் எல்லாச் சிவாலயங்களிலும் ஈசனது சந்நிதானத்தின்-கர்ப்ப கிருஹத்தின் பின்புறம், மேற்கு நோக்கி, பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அங்கு உட்பிராகாரத்தைப் பிரதக்ஷிணம் செய்து வரும்பொழுது, இந்த உருவத்தைக் காணலாம். மேலும் அன்னபக்ஷியின் உருவத்தை மேல் நோக்கியும்; பன்றி உருவத்தைக் கீழ் நோக்கியும் அங்குக் காண்கின்றோம்.

ஜோதி வடிவத்திலிருந்து லிங்கமாக வெளிவந்து, பின்னர் லாவண்ய சொரூபத்தை ஈசன் அடைந்த இந்தப் புனித நாள் பிரார்த்தனைக்கும், தியானத்திற்கும் சிறந்த நாளாகும். நடுநிசியிலேயே பரமசிவன் இந்த உருவத்தை எடுத்தார். பிறப்பில்லாத பரமசிவன் பக்தர்களின் அன்புக்கிசைந்து லிங்க வடிவமாக உதித்தாரென்றதால் அந்தக் கருணாமூர்த்தியின் நினைவாக, இந்த நாள் முழுவதும் நாம் உபவாசம் இருந்து, தூக்கத்தை ஒழித்து, அவரை நினைத்து அவர் திருநாமங்களை ஸ்மரித்து, சிவாலயங்களில் அவரது உருவத்தைத் தரிசித்து அவரை வழிபடவேண்டும். அந்த ஈசனை நாம் நாள்தோறும் நினையாவிடினும், இந்நன்னாளிலாவது நினைத்து அவரது அருளுக்குப் பாத்திரமாகவேண்டும்.''

**பஞ்சாயதன பூஜையும், ஸ்ரீ சுப்ரமண்யர் ஆராதனையும்**

1952-வது வருடம் ஏப்ரல் மாதம் 29-ஆம் தேதி, சங்கர ஜயந்தி உத்ஸவத்தை ஸ்வாமிகள் **ஆனந்தாண்டவபுரத்தில்** நடத்தியபொழுது, சிஷ்யர்களுக்குக் கீழே கண்ட உபதேச மொழிகளை அருளினார்கள்.

'ஆதித்யம், அம்பிகாம், விஷ்ணும், கண நாதம், மஹேச்வரம் என்னும் ஐந்து மூர்த்தங்களை அர்ச்சிப்பதே **பஞ்சாயதன பூஜை** எனச் சொல்லப்படுகிறது. இந்தப் பஞ்சாயதன பூஜையானது நம் நாட்டில், பொதுவாகப் பலர் இல்லங்களில், தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றது. இந்த வழிபாட்டு முறையில் பரமேச்வரர் நடுவிலும், மகாவிஷ்ணு வடகிழக்கிலும், சூரியன் தென்கிழக்கிலும், விநாயகர் தென் மேற்கிலும், அம்பிகை வடமேற்கிலும் இடம் பெற்றுள்ளனர்.

மேலும், பரமசிவன் லிங்க ரூபத்திலும், மகாவிஷ்ணு சாளக்கிராமத்திலும், சூரியன் ஸ்படிகக் கல்லிலும், விநாயகர் சிவப்புக் கல்லிலும், அம்பிகை தங்கரேக் அமைந்த ஓர் உலோகத்திலும் அமைந்துள்ளார்கள். இவைகளுள் **சிவலிங்கம் நர்மதை நதியிலும், சாளக்கிராமம் நேபாளத்திலும்,** ஸ்படிகம் தஞ்சைக்கடுத்த **வல்லத்**

திலும், சிவப்புக்கல் வடநாட்டிலுள்ள சோண நதியிலும் தங்கரேக்கு அமைந்த உலோகம் இமய மலைப் பிரதேசத்திலும் கிடைக்கின்றன. ஆகையால் எந்த வீட்டில் பஞ்சாயதன பூஜை அமைந்துள்ளதோ, அந்த வீடானது நமது பாரத பூமி முழுவதிலும் உள்ள எல்லாப் புண்ய தீர்த்தங்களுக்கும், புண்ணியத் தலங்களுக்கும் இருப்புத் தலமாக அமைந்துவிடுகிறது. இது பாரத நாட்டின் ஒற்றுமையையும் எடுத்துக் காட்டுகிறது.

பேதமற்ற இந்த ஐந்து தெய்வ வழிபாடுகளுடன் ஸ்ரீ சுப்ரமண்ய வழிப்பாட்டை ஆறுவது வழிபாடாகச் சேர்த்துக்கொள்ளுவது மிகவும் உத்தமமாகும். இந்த ஆறுவிதமான வழிபாடுகளையும் சரியான முறையில் அமைத்து, மக்கள் உஜ்ஜீவிக்கும் வண்ணம் ஸ்ரீ ஆதி சங்கரர் அருள் புரிந்துள்ளார்கள். அக் காரணம் பற்றியே, அவர்களுக்கு ஷண்மத ஸ்தாபனாசாரியர் என்னும் சிறப்புப் பெயர் அமைந்துள்ளது. வடமொழியில் சுமார் ஒன்றரை லக்ஷம் சுலோகங்களுடன் உள்ள ஸ்கந்தபுராணம் தனியே அமைந்திருப்பதுடன், மகாபாரதம், ராமாயணம் முதலான இதிகாசங்களிலும், அமரகாவியமான காளிதாஸனது குமாரசம்பவம் என்னும் காவியத்திலும், குமரக்கடவுளின் சரித்திரம் கூறப்பட்டுள்ளது. தமிழில் சங்க நூல்களிலும், நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப் படையிலும் முருகன் பெருமை விளக்கப்பட்டிருக்கிறது. வட நாட்டில் சுப்ரமண்யக் கடவுளைக் கார்த்திகேயன் என்றும், குமார ஸ்வாமி என்றும் அழைக்கின்றனர். தமிழ் நாட்டிலோ குமரன், முருகன் என்னும் பலவிதப் பெயர்களுடன் அவர் விளங்குகிறார். திருமாலின் மருமகனாக அமைந்திருத்தலால், அருணகிரிநாதர் அவரை மருகன் என்ற அழகிய சொல்லால் தமது திருப்புகழில் அன்புடன் குறிப்பிடுகிறார். குமரன் என்னும் சொல்லில் உள்ள அன்பும், மருகன் என்னும் சொல்லில் அமைந்துள்ள அழகும் ஒருங்கே சேர்ந்து பாலன் வடிவமாக உள்ள முருகப் பெருமான் தர்மத்திற்கும் சத்தியத்திற்கும் மாறாகச் செயலாற்றிய சூரபத்மன் முதலான அசுரர்களை வென்று தேவர்களுக்கு அபயம் அளித்தார்.

மேலும் ஞானமே வடிவம் கொண்டவர் ஸ்ரீ சுப்ரமண்யர். ஞானஸ்கந்தர், ஞான பண்டிதர் என்றும் அவர் அழைக்கப்படுகிறார் ஞானத்தைக் கொடுத்து அருளும் மூர்த்தியும் அவர்தாம். ப்ரம்ம ஸ்வரூபமானது ஸத், சித், ஆனந்தம் என மூன்று வகையாக விவரிக்கப்படுகிறது. பிரபஞ்சத்தின் உற்பத்தி, நாசம் இவைகளுக்கு ஆதாரமாக இருப்பதே ஸத் எனப்படுகிறது; இதைத் தெரிந்து கொள்ளும் அறிவே சித் என்னும் சக்தி; ஸத்தும்,

சித்தும் சேரும்போது ஆனந்தம் வெளிப்படுகிறது. குமரேசன் ஞானகுருவாக இருந்து இந்த மெய்ஞ்ஞானத்தை உலகிற்கு உபதேசிக்கிருர்.

பரமசிவனது வீர்யம் அக்னி. இந்த வீர்யத்திஞல் உண்டானவர் சுப்ரமண்யர்; அதனுல் அவருக்கு அக்னிபூ: என்னும் பெயரும் அமைந்திருக்கிறது. அவரது ஒளி அஞ்ஞான இருளைப் போக்குகின்றது. ஷண்முகநாதர் திருச்செந்தூரில் கடலோரமாக எழுந்தருளியிருப்பதைக் காணும்பொழுது அலைகளெல்லாம் கடலிலேயே அடங்குவதுபோல், பிரளயகாலத்தில் உலகம் எல்லாம் அவரிடமே லயித்து விடும் என்பதை எடுத்துக் காட்டுவதாகத் தோன்றுகின்றது; ஆதி சங்கரரும் திருச்செந்தூரிலுள்ள ஸ்ரீ ஷண்முகநாதரைக் குறித்துப் பாடியுள்ளார்.

தமிழ்நாட்டின் தவப்புதல்வரான ஞானசம்பந்தர் ஸ்ரீ சுப்ரமண்யரது அம்சமாகவே விளங்கினுர்; அக்காரணத்திஞலேயே அவருக்குப் பார்வதி தேவியார் ஞானப்பால் ஊட்டிஞர். கங்கைக் கரையில் வேதவேள்விகளை ஸ்தாபித்த குமாரிலரும் ஸ்ரீசுப்ரமண்யரின் அவதாரமேயாவர். அக்கடவுளை உபாசிப்பதால் மனிதனுக்கு ஏற்படும் எல்லாப் பயங்களும் அவனை விட்டு விலகிவிடும்; மேலும் மோக்ஷமும் கிட்டும். முருகக் கடவுளின் திருவருள் நம் எல்லோருக்கும் கிடைக்க வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக!''

* * * *

**தருமபுரத்திற்கு விஜயம்**

தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களது அழைப்பை அன்புடன் ஏற்றுக்கொண்டு, நம் ஸ்வாமிகள் சென்ற 1952-ஜூன் மாதம் 3-ஆம் தேதி இரவு தருமபுரத்திற்குக் கால் நடையாகவே விஜயம் செய்தார்கள். ஸ்வாமிகள் அத்தலத்திற்கு எழுந்தருளிய பொழுது ஆதீனகர்த்தர் அவர்கள் தம் திருக்கூட்டத்து அடியார்களுடன் பூர்ணகும்பம் முதலான மரியாதைகளை அளித்து ஸ்வாமிகளை வரவேற்ருர். அப்பொழுது தருமபுரம் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பகுதியின் ஆசிரியர்கள், மாணவர்கள், ஸ்ரீ குரு ஞானசம்பந்த கழகத்தார் உயர்தரத் தொடக்கப்பள்ளி, தேவாரப் பாடசாலை இவைகளின் ஆசிரியர்கள், மாணவர்கள் ஞானசம்பந்தம் பதிப்பகத்தார், ஆதீனப் பிரசார கோஷ்டியார், வேதாகம பாடசாலையினர் முதலான பலரும் தத்தம் ஸ்தாபனங்களின் சார்பாக, ஸ்வாமிகளுக்கு வரவேற்பு நன்மலர்கள் அளித்தார்கள். தருமபுரத்தில் ஸ்வாமிகள் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். ஸ்வாமிகளின் பூஜைக்கும், பரிவாரங்களுக்

கும் வேண்டுவன யாவற்றையும் நன்கு கவனிக்க ஆதீனகர்த்தர் அவர்கள் சிறந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். ஒவ்வொரு நாளும் ஸ்வாமிகளிடம் அவர்கள் தனிமையில் பல மணி நேரம் அளவளாவி, மக்களிடம் தெய்வ நம்பிக்கையைப் பரப்பும் விஷய மாய்ப் பற்பல ஆலோசனைகளைச் செய்தார்கள். இரண்டு சமயா சாரியர்களும் சந்தித்துப் பேசியது தருமபுரம் மட்டுமன்று, தமிழ் நாடே மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகும்.

---

## 10. பொதுநலப் பணிகள்

**சில பூர்த்த தருமங்கள்**

ஸ்வாமிகள் நிறுவிய முத்ராதிகாரிகள் திட்டப்படி, குறிப் பாகத் தஞ்சை ஜில்லாவில் **பூர்த்த தருமம்** எனக் கூறப்படும் குளம் வெட்டும் புனிதப் பணியானது பல ஊர்களில் நடைபெற்று வந்திருக்கிறது. இத்திட்டத்தின் கீழ் நூற்றுக்கணக்கான குளங் கள் வெட்டப்பட்டுள்ளன. நன்னிலம் தாலுகா, **திருக்கண்ண புரத்தில்** ஸ்ரீ சௌந்தரராஜப் பெருமாள் சந்நிதியின் புஷ்கரணி பொது மக்களின் சரீரப் பிரயாசையுடன் வெட்டப்பட்டும், செம்பிய மகாதேவி கிராமத்தைச் சேர்ந்த தருமவான்களான **ரங்கஸ்வாமி நாயுடு, கிருஷ்ணஸ்வாமி நாயுடு** இவர்களின் பொருளுதவியைக் கொண்டு ரூபாய் இருபத்தாறுயிரம் செலவில், நான்கு பக்கங்களிலும் சுவரும் படித்துறைகளும் எழுப்பப்பட்டும் உள்ளன. 25-10-1951-இல் ஸ்வாமிகளே நேரில் அங்கு விஜயம் செய்து குளத்திற்குப் புதுத் தண்ணீர் விடும் விழாவைத் துவக்கி வைத்தார்கள்.

இந்தத் திட்டத்தின்படி பொறையாற்றில் 1 ஏக்கர் 38 செண்டு விஸ்தீரணமுள்ள அவ்வூர் விச்வநாத சுவாமி கோவில் குளமானது சென்ற 22-6-52-ஆம் தேதி ஒரே நாளில் வெட்டப் பட்டது. இந்தப் பணியானது பொறையாறு ஸ்ரீ சக்தி விலாஸ் பஸ் சர்வீஸ் சொந்தக்காரரும், மாயவரம் தாலூகா முத்ராதி காரிகள் சங்கத் தலைவருமான **ஜி. வீரப்ப பிள்ளையின்** விசேஷ முயற்சியால் நடைபெற்றது.

அன்று காலை 7-மணிக்கு, சுமார் 1,200 ஜனங்கள் மண்வெட்டி தட்டு, கூடை முதலான சாதனங்களுடன் பஜனை செய்துகொண்டே குளம் வெட்டும் தலத்திற்கு வந்துசேர்ந்தனர். முதலில். நம்

ஸ்வாமிகள் அனுக்கிரகித்து அனுப்பியிருந்த விபூதி பிரசாதம் யாவருக்கும் வழங்கப்பட்டது. தாலூகா முத்ராதிகாரிகள், ஸ்ரீ மடம் சிப்பந்திகள், பிரபல மிராசுதார்கள், சேரி மக்கள், பள்ளிச் சிறுவர்கள், தில்லையாடி சங்கரானந்த ஸ்வாமிகளது குரு குலத்தின் மாணவர்கள், இவர்கள் யாவரும் அந்தக் குளத்தை வெட்டும் திருப்பணியில் இறங்கினர். அவர்களில், மிராசுதார் களின் வீட்டுப் பெண்மணிகள் உள்பட ஆயிரக்கணக்கான ஸ்திரீ களும் காணப்பட்டனர். இவர்கள் யாவரும் ஒருங்கே சேர்ந்து மிகவும் குதூகலத்துடன் சரீரசிரமத்தை மறந்தவர்களாய், இந்தப் பணியைத் துவக்கினர்கள். அவர்கள் 'ஹரோ, ஹர!' என்றும், "ஸ்ரீ ராம; ராம!" என்றும் கோஷங்களை எழுப்பியவாறு, உயர்வு தாழ்வு என்னும் மனப்பான்மை சிறிதுமின்றித் தாங்களே மண்ணை வெட்டி, அதைக் கூடைகளில் தாங்கி, தலையில் சுமந்து கரையில் சேர்த்தனர். இந்தப் பணியில் அந்தக் கிராம மக்களுடன் பக்கத்து ஊர்களாகிய சந்திரவாடி, தில்லையாடி, கோட்டை, சுண் ணும்புப் பாளையம், அரிசிக்காரப் பாளையம், ஆறுபாதி முதலான கிராம மிராசுதார்களும், அவர்களின் பண்ணையாட்களும் கலந்து கொண்டனர். நகர காங்கிரஸ் கமிட்டி மெம்பர்களும் இதில் ஈடுபட்டனர். காலையில் ஆரம்பித்த பணியானது பகல் 12-மணி வரையும் தொடர்ந்து நடைபெற்றது, பின்னர் இடைவேளைக்குக் கூட்டம் கலைந்தது. யாவரும் சிறிது உணவு அருந்தி, சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டனர். மாலை 3 மணிக்கு மறுபடியும் திருப்பணி தொடங்கி, மாலை 6 மணி வரையில் நடைபெற்றது. திருப்பணி நடைபெற்ற பொழுது முத்ராதிகாரித் தொண்டில் இணையற்ற பற்றுடன் உழைத்துவரும் வழுத்தூர் ராமஸ்வாமி ஐயர் தொண்டர்களுக்கு ஊக்கம் அளிக்கும் வண்ணம் மனம் உருகிப் பஜனை செய்துகொண்டிருந்தார்.

மாலை 6 மணிக்கு இந்தக் கைங்கரியம் முடிவுற்றவுடன் யாவரும் படங்களுடன் குளத்தை வலம் வந்து சக்தி விலாஸ் காரியாலத்தை அடைந்தனர். அங்கு மாயவரம் தாலூகா முத்ராதி காரிகள் சங்கக் காரியதரிசி ஆர். கிருத்திவாஸய்யர் இந்தப் புது முறையில் ஸ்வாமிகளின் விருப்பப்படி இத்திருப்பணி நடைபெற்ற ஏற்பாடுகளைப் பற்றி விளக்கம் கூறினர். ஸ்ரீ மடம் சர்வாதிகாரியும், முத்ராதிகாரி சங்கத்தின் பொது நிர்வாகியுமான ஏ. ஆர். சேஷய்யா சாஸ்திரிகள் பேசியபொழுது, வீரப்ப பிள்ளை ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமி களிடம் அளவுகடந்த பக்தி வைத்திருப்பதினால்தான் இம்மாதிரி கைங்கரியத்தைச் செய்து முடிப்பது சாத்தியமாயிற்றென்றும்,

அவர் இந்த இயக்கத்திற்கு ஓர் ஆணிவேர் போல் விளங்குகிறார் என்றும் கூறினர். மேலும், பொறையாறு **ரங்கஸ்வாமி ஐயரும், சேலக்கரை விச்வநாத சர்மாவும்,** சக்தி விலாஸ் மானேஜர் **ராமன் நம்பியாரும்,** மற்றச் சிப்பந்திகளும் இதில் எடுத்துக்கொண்ட முயற்சியைச் சாஸ்திரிகள் மிகவும் பாராட்டிப் பேசினர். இதில் தொண்டாற்றிய ஒவ்வொருவரும் தாங்கள் இப்புவியில் சிறந்த பயனை இச்சிறு பணியின் மூலம் அன்றே அடைந்ததாக எண்ணி மனமகிழ்ந்தார். சமூக உழைப்பின் பெரிய சாதனையைக் கண்டு யாவரும் வியப்படைந்தனர். எளிதான வகையில் ஸ்வாமிகள் வகுத்த அந்தத் திட்டத்தை யாவரும் பாராட்டி, மேன்மேலும் இம்மாதிரித் திருப்பணிகள் நடக்க அநுக்கிரகம் புரியவேண்டுமென சர்வாதிகாரியின் மூலம் ஸ்வாமிகளை வேண்டிக்கொண்டனர்.

**திருவலஞ்சுழியில் மற்றொரு குளம் வெட்டும் திருப்பணி**

பொறையாற்றில் நடைபெற்றதுபோலவே, 1952-ஆவது வருடம் ஜூலை மாதம் 7-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை கும்பகோணம் தாலூகா **திருவலஞ்சுழியில்** குளம் வெட்டும் திருப்பணி ஒன்று நடைபெற்றது. அன்று அவ்வூர் விநாயகர் ஆலயத்திலிருந்து மேள வாத்தியத்துடனும், வேதபாராயணம், பஜனை கோஷ்டி, முதலியவைகளுடனும் தொண்டர்கள் மண்வெட்டி, தட்டு, கூடை சகிதம் குளம் வெட்டும் தலத்திற்கு ஊர்வலமாக வந்து சேர்ந்தனர். சுவாமிமலை **ஸ்ரீ பாலசுப்பிரமண்ய தேசிகர்** கடவுள் தோத்திரம் பாடியவுடன், திருப்பணி ஆரம்பமாயிற்று. சுமார் 1500 பேர்களுக்கு மேல் இத் திருப்பணியில் கலந்து கொண்டனர். அதில் முக்கியமாகக் காணப்பட்ட சிலரது பெயர்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1. பொறையாறு சக்தி விலாஸ் பஸ் உரிமையாளர், ஜி. வீரப்ப பிள்ளை.
2. கபிஸ்தலம் ஆர். கோவிந்தசாமி மூப்பனர்.
3. பாபநாசம் டாக்டர், பி. என். ரத்தினம் ஐயரும், அவருடைய குடும்பத்தினரும்.
4. அலவந்திபுரம், ஏ. லக்ஷ்மணய்யர்.
5. பம்பப்படையூர் சுந்தரராஜ வன்னியர்.
6. மாடாக்குடி முத்தையாப் பிள்ளை.
7. சேஷம்பாடி நடேசப் பிள்ளை.
8. திம்மகுடி சுப்ரமணியய்யர்.
9. திம்மகுடி சீனிவாஸய்யர்.

10. ஸ்வாமிமலை, தேவஸ்தானம் எக்ஸிகூடிவ் ஆபீஸர், கோவிந்தராஜலு நாயுடு.
11. சுவாமிமலை, அப்புராயர் என்னும் B. ராமசந்திர ராவ்.
12. சுவாமிமலை, ஆத்மநாத தீக்ஷிதர்.
13. பட்டீசுவரம், ராஜகோபால் நாயுடு.
14. கோவிந்தபுரம் கணேசய்யர்.
15. திருவலஞ்சுழி பரமசிவம் பிள்ளை.
16. உடையாளூர், பி. வைத்தியனாதய்யர்.
17. கும்பகோணம் டாக்டர், ஆர். மஹாலிங்கய்யர்.
18. கும்பகோணம் முனிஸிபல் சேர்மன், எம். ஸி. எஸ். ரத்தினசபாபதி செட்டியார்.
19. ஸ்ரீ மடம் சர்வாதிகாரி, ஏ. ஆர். சேஷய்ய சாஸ்திரிகள்.
20. பொறையார் என். ரங்கசாமி ஐயர்.
21. கும்பகோணம் கோபு செட்டியார் குடும்பத்தினர்.
22. கும்பகோணம் வக்கில் வி. விச்வேச்வரய்யர்.
23. கும்பகோணம் வக்கீல் டி. சொக்கலிங்கம் செட்டியார்.
24. கும்பகோணம் வக்கீல், ஆர். வேங்கடரமணய்யர்.

இவர்களுடன், திப்பராஜபுரம் மகாஜனங்கள், உள்ளூர் வைத்திலிங்கம் பிள்ளை எஸ்டேட் சிப்பந்திகள், சுந்தரம் பிள்ளை எஸ்டேட் குடிஜனங்கள், அம்மாப்பேட்டை கிராமக் குடிமக்கள், நாட்டாண்மைக்காரர்கள், சேரிமக்கள், கும்பகோணம் தாலூகா முத்ராதிகாரிகள், உப முத்ராதிகாரிகள், ஸ்ரீ மடம் சிப்பந்திகள், தர்மத்தொண்டு சபையின் அங்கத்தினர்கள் இவர்கள் ஏராளமாக இப்பணியில் கலந்துகொண்டனர். உயர்தர மிராசுதாரர்கள் குடும்பத்தைச் சார்ந்த பெண்மணிகள் பலரும் அதில் காணப்பட்டனர். 'ஸ்ரீ ராம! ஸ்ரீ கோவிந்த! ஸ்ரீ முருக!' என்னும் கோஷங்களுடன் இந்தத் திருப்பணி காலை 7 மணிக்குத் துவக்கம் செய்யப்பட்டு பகல் 1 மணி வரை நடைபெற்றது. இந்த அரிய தொண்டில் ஈடுபட்டவர்களுக்கெல்லாம் வைத்திலிங்கம் பிள்ளை எஸ்டேட் தர்மத்திலிருந்து ஆகார வசதி அளிக்கப்பட்டது. பின்னர் பிற்பகல் 3 மணிக்கு, மறுபடியும் திருப்பணி துவக்கப்பட்டு 5 மணிவரை கைங்கரியம் நடைபெற்றது. எவ்வித ஊதியமும் கொடுக்கப்பெருமல், முழுவதும் மக்களின் உழைப்பினாலேயே நடைபெற்ற இத்திருப்பணியின் பெருமையைப்பற்றி அந்தப் பக்கங்களிலுள்ள கிராமத்தார்கள் மிகவும் பாராட்டிப் பேசினர். இந்த அதிசயமான திட்டத்தை மக்களுக்கு வகுத்துக்கொடுத்த ஸ்ரீ ஸ்வாமிகள் இத்துறையில் மக்களுக்கு மேலும் ஊக்கம் அளிக்க

வேண்டுமென பிரார்த்தித்துக்கொண்டார். காரியதரிசி ச. சுப்பிர மணிய ஐயர் யாவருக்கும் வந்தனோபசாரம் கூறியபிறகு அப்பெரும் கூட்டம் கலைந்தது.

**குருவார விளம்பரம்**

தற்காலம் பல தொல்லைகளால் வருந்திவரும் பெரும்பாலான மக்கள் சீராகவும் நேர்மையாகவும், கடன் தொல்லையால் பாதிக்கப் படாமலும், கூடியவரை மன நிம்மதியுடனும் வாழ்வதற்குச் சில உபாயங்களை ஸ்வாமிகள் வகுத்து **குருவார விளம்பரம்** என்னும் பெயருடன் அவைகளை மக்கள் அறியுமாறு சென்ற 1952-ஆவது வருடம் ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் தமிழ் நாட்டின் பிரபல ஆங்கில, தமிழ்த் தினசரி பத்திரிகைகளில் வெளியிட விருப்பம் கொண்டார்கள். ஸ்வாமிகளின் விருப்பப்படி பிரபல தினசரி பத்திரிகைகளான ஹிந்து, மெயில், எக்ஸ்பிரஸ், சுதேசமித்திரன், தினமணி இவைகளின் உரிமையாளர்கள் அவரவர்களின் பத்திரி கைகளில் அவ்விளம்பரங்களைக் கட்டணம் எதுவும் பெறுமல் தொடர்ந்து சில வியாழக்கிழமைகளில் வெளியிட்டனர். பிரபல விளம்பர கம்பெனி ஒன்றின் உரிமையாளரும், ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி பூண்டவருமான அன்பர் ஒருவரின் முயற்சி இத் துறையில் பாராட்டுதற்குரியதாக இருந்தது. அந்த விளம்பரத் தின் வாசகம் பின் வருமாறு:—

1. காபிக்குப் பதிலாக, அரிசி நொய், கோதுமை நொய் இவைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட மோர்க்கஞ்சியைக் கைக்கொண்டால் மக்களுக்குக் காபிப் பித்து குறைந்துவிடும். இதை அனுபவத்தினுல் அறியலாம்.

2. ஆடவர் பள்ளிகளில் படிக்கும் காலம் வரையாகிலும், பெண்கள் எப்பொழுதுமே, சினிமாக் காட்சிகளுக்குப் போகாமல் இருப்பது நலம். ஆனுல் இலவசமாகக் கல்வி அபிவிருத்தியின் பொருட்டுக் காட்டப்படும் படங்களைப் பார்ப்பதில் தோஷமில்லை.

3. ஆடைகள், அதிலும் குறிப்பாகப் புடவைகள், கூடிய வரை ஆடம்பரமில்லாத ரகங்களாகவே வாங்கப்படவேண்டும். இவ் விஷயத்தில் பணக்காரர்கள் வழிகாட்டவேண்டும்.

மேற்கண்ட மூன்று விஷயங்களுடன் சமூகத்திற்குக் கீழ்க் கண்ட உபதேசங்களையும் ஸ்வாமிகள் அந்த விளம்பரத்தில் சேர்த்திருந்தார்கள்.

குடும்ப நிர்வாகமும், சீரான வாழ்க்கையும், தெய்விக அருளும் மக்களிடை வரவரக் குறைந்து வருவதைத் தடுக்கவேண்டும்.

காபியையும், சினிமாவையும், கற்புக்கு ஏற்படும் ஆபத்துக்களையும் கவனத்துடன் சிறிதுசிறிதாவது குறைக்கும் பணியில் ஒவ்வொருவரும் ஈடுபடவேண்டும்.

கலப்புப் படிப்பு வேண்டாம். வயது வந்த பெண்களைப் பள்ளிக்கு அனுப்பாமல் வீட்டிலேயே சாத்தியமானவரை கல்வியைக் கற்றுக்கொடுக்கலாம். வீட்டுப் படிப்பில், முக்கியமாகத் தாய்ப்பாஷையில் மகாபாரதத்தில் பீஷ்மரது உபதேசங்களடங்கிய அனுசாஸன பர்வத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

வயது வந்த பிறகு கல்யாணமாகும்வரை, பெண் குழந்தைகளைக் கண்டபடி வெளியில் விடாமல் காப்பாற்றுவது நமது மதத்தில் அநேக குடும்பங்களில் தொன்றுதொட்டு வழங்கி வருகிறது. காலத்தில் கல்யாணம் செய்ய முடியாதவாறு நிர்ப்பந்தம் ஏற்படும் எல்லாக் குடும்பங்களும் இம்முறையைக் கடைப் பிடிக்கலாம்.

நாடும், குடித்தனமும், உண்மையில் சீராக ஹிந்துக்கள் ஒவ்வொருவரது தனித்தனியான ஒத்துழைப்பும் இம் முயற்சிகளில் அவசியம் தேவையுள்ளதாக இருக்கிறது.

* * * * *

**பிரதோஷ காலத்தில் சிவதாண்டவம்: சம்பு நடனம் அரங்கேற்றம்.**

ஒவ்வொரு நாளும் மாலையில் நேரும் சந்தியாகாலம் பிரதோஷ காலமாகும். ஒவ்வொரு திரயோதசியன்று நிகழும் சந்தியா காலத்தையே மகாபிரதோஷமெனக் கூறுகின்றோம். பரமசிவன் பிரதோஷ காலத்தில்தான் நர்த்தனம் செய்கிறார். இந்த நர்த்தனத்தில் பிரம்மா தாளத்தையும், மகாவிஷ்ணு மத்தளத்தையும் வாசிக்கின்றார்கள். அக்காலத்தில் எல்லா மூர்த்திகளும், தேவர்களும், சிவபிரானின் சந்நிதானத்தை வந்தடைகிறார்கள். அக்காரணமாகவே பெரியோர்கள் சந்தியா காலத்தில் சிவாலயத்தைத் தவிர வேறு ஆலயங்களில் ஸ்வாமி தரிசனம் செய்வது வழக்கமில்லை. மேலும் எல்லா மூர்த்திகளையும் ஒரே காலத்தில் தரிசிக்கும் பயன் சிவாலயத்தில் பிரதோஷ காலத்தில் தர்சனம் செய்வதால் கிட்டும். நம் ஸ்வாமிகளும், சந்திர மௌளீச்வரருக்கு மகா பிரதோஷ பூஜைசெய்யும் காலத்தில் சிவதாண்டவச் சின்னங்களை விளக்குவதையும், முழுவதும் ருத்திராக்ஷங்களினால் அமைக்கப் பெற்றவைகளுமான கிரீடம், கவசம் முதலானவைகளை அணிந்து சிவஸ்வரூபமாகக் காட்சியளித்து வருவதையும் பக்தர்கள் கண்டு பேரானந்தம் அடைந்துள்ளார்கள்.

தத்துவங்களை மொழிகளைக்கொண்டு உபதேசிப்பதைக் காட்டி லும், நாட்டிய அபிநய வாயிலாகக் காட்டும் முறையில் அறிவிப்பது, உள்ளத்தில் ஆழ்ந்து பதியுமாதலால், அதே முறையை நம் முன் னோர்களான முனிவர்களும் கடைப்பிடித்தனர்

சிதம்பரத்தில் சிவபெருமான் பதஞ்தலி முனிவருக்குப் பிரபஞ்ச தத்துவங்களையும் மோக்ஷ தத்துவத்தையும் தம் ஆனந்தத் தாண்டவ நடனத்தின் மூலமே விளக்கிக் காட்டினார். அந்த நடனத்திற்கு உகந்த முறையை அனுசரித்து, சம்பு நடனம் என் னும் விருத்தத்தில் அம்முனிவர் எட்டுச் சுலோகங்களை இயற்றி னார். பதஞ்சலி முனிவரின் அந்தச் சம்பு நடன அஷ்டகத்தில், மத் தள லயத்தின் ஓசையும், ஜலஜ்ஜல ரவத்தின் ஆரவாரமும் ஒலிக் கின்றன. காலும் கொம்புமில்லாத, (சரண சிருங்க ரகித) விருத்தங்களென இவைகளைக் கூறுவதுண்டு. உயிர் எழுத்துக் களான ஆ, ஈ, ஓ போன்ற எழுத்துக்கள் தனியாகவோ, மெய் யெழுத்துக்களுடன் சேர்ந்தோ இந்த விருத்தங்களில் எங்கும் காணப்படாததே இதற்குக் காரணமாகும். மேலும், பதஞ்சலி முனிவர் ஆதிசேஷன் அவதாரமாய்ப் பாம்பின் உருவத்துடன் காலும் கொம்புமில்லாதவராய் விளங்குவதாலும், அவரது பக்கத் தில் காட்சியளிக்கும் நந்திகேச்வரருக்குக் கொம்பும், வியாக்ர பாதருக்கு காலும் இருப்பதாலும், பதஞ்சலி முனிவருக்கு இவ் விரண்டும் இல்லாததை அழுத்தமாகக் குறிப்பிடும் வகையில், காலும் கொம்புமற்ற அந்த முனிவர் இயற்றிய இந்த அஷ்டகத் திற்குச் சரண சிருங்க ரகிதம் (காலும் கொம்பும் இல்லாதது) என்னும் அடைமொழி வந்ததாகவும் ஒருவாறு ஊகிக்கலாம். (சரணம்—கால் ; சிருங்கம்—கொம்பு.)

சிவபெருமான் தாண்டவமாடிக் காட்சியளித்த க்ஷேத்திரங் களிலெல்லாம் இன்றும் இந்த நடனத்தை அனுசரித்த சுத்த மத்தளமும், தாளமும் மாத்திரம் பிரதோஷ காலத்தில் வாசிக்கப் படுகின்றன. ஆனால் இந்த அஷ்டகத்தை நடைமுறையில் பாடும் வகையை இதுவரை எவரும் அமைக்கவில்லை. இக்குறை ஸ்ரீ மடத் தின் ஆஸ்தான சங்கீத வித்வான் ஆஸ்தான கீர்த்தனமணி ஸ்ரீ வாஞ்சியம் ராமசந்திரய்யரால் நீக்கப்பட்டது. ஸ்வாமிகளின் கட்டளையின்படி, இந்த வித்வான் சம்புநடன அஷ்டகத்திற்கு ராகதாளங்களை அமைத்து, அவற்றை அனுசரித்து சுத்த மத்தளத்தையும் சங்கநாதத்தையும் சேர்படுத்தி, நடனமாக அமைத்தார்.



ஸ்ரீ ஆசார்யர்களின் 71-வது ஜயந்தி அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் படம்
நன்கு அலங்கரிக்கப்பட்டு பக்தகோடிகளுடன் ஊர்வலமாக வரும் காக்ஷி



71-வது ஜயந்தியன்று புஷ்பங்களால் நன்குக அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ ஆசார்யர்கள் படம்



ஸ்ரீ ஆசார்யர்கள் உடையார்பாளையம் ஏரியில் படகில் ஏகாந்தமாக அமர்ந்திருக்கும் காக்ஷி



ஸ்ரீ ஆசார்யாள், ஸ்ரீ ஆநந்தானந்த ஸ்வாமிகள்
ஸ்ரீ மடம் மானேஜர் ஸ்ரீ ஸி. எஸ். விச்வனாதய்யர்

## மடாதிபதிகளுக்கு வரவேற்பு



1966 இல் சென்னையில் நடந்த மடாதிபதிகள் மகாநாட்டில் தெய்வீக பேரவையில் கலந்துகொள்ள ஸ்ரீ பரமாசார்யர்கள் வருகிறார்கள். படத்தில் தருமபுரம், திருப்பனந்தாள், குன்றக்குடி, காஞ்சி ஞானப்ரகாச ஸ்வாமிகள் மற்றும் இதர மடாதிபதிகள் இருக்கின்றனர்.

## மடாதிபதிகள் மகாநாடு



சென்னையில் 1966-இல் முதல் தடவையாக நடைபெற்ற மடாதிபதிகள் மகாநாட்டில் (தெய்வீக பேரவையில்) ஸ்ரீ ஆசார்யர்களும், ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் கலந்து கொண்டார்கள். படத்தில் தருமபுர ஆதீனம், காஞ்சி ஞானப்ரகாச ஸ்வாமிகள், குன்றக்குடி அடிகளாரைக் காணலாம்.



ஸ்ரீ ஆசார்யர்கள், ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி
ஸ்வாமிகள், ஸ்ரீ காஞ்சீபுரம் உபநிஷத்
ப்ரம்மேந்த்ர மடத்து ஸ்வாமிகள், ஸ்ரீ ஆனந்தாநந்த
ஸ்வாமிகள் — இவர்களுக்கு
பாஷ்யபாடம் நடத்துகிறார்கள்.



1936-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் ஏகாந்தமாக ஸிம்ஹாசல பர்வதத்தில்
ஓர் சிறிய ஓடையின் சமீபம் அமர்ந்து இருக்கிறார்கள்

ஸ்வாமிகள் சாதுர்மாச சங்கல்பத்திற்காகத் தஞ்சை ஜில்லா **சாத்தனூர்** என்னும் கிராமத்தில் விஜயம் செய்திருந்தபொழுது, (29-8-1952) மகாப் பிரதோஷ காலத்தில் ஸ்வாமிகள் பூஜையில் அமர்ந்திருந்த சமயம், அந்த நடனத்தை அந்த வித்வான் ஸ்ரீசந்திர மௌளீச்வரர் சந்நிதானத்தில் அரங்கேற்றம் செய்தார். அவருடன் அவருடைய நான்கு சீடர்கள் தாளத்துடன் இந்த அஷ்டகத்தைப் பாடினர். நன்னிலம் தாலூகா **நல்லுவச்சேரியிலுள்ள** பரம்பரை சங்கவாத்தியக்காரர்கள் இந்த நடனத்தில் **சங்க வாத்தியம்** வாசித்தனர். கைதேர்ந்த மிருதங்க வித்வான் ஒருவர் **சுத்த மத்தளம்** வாசித்தார். இந்த நர்த்தனத்தை அன்று அங்குத் தரிசனத்திற்குக் கூடியிருந்த அந்தக் கிராமவாசிகளும், நூற்றுக் கணக்கான வெளியூர்ப் பக்தர்களும் கண்டு களித்தனர். அச்சமயம் டில்லி சுப்ரீம்கோர்ட்டு நீதிபதி **என். சுந்திரசேகர ஐயரும்,** சென்னைத் துறைமுகத் தலைமை அதிகாரி **ஜி. வேங்கடேச்வரனும்,** சென்னை நகர மாகாண மாஜிஸ்டிரேட் **ஸி. டி .வேங்கடரமணனும்,** ஸ்வாமிகளைத் தரிசிக்க அங்கு வந்திருந்தனர். அதுவரை கண்டிராத வகையில் அந்த ஆனந்த நடனத்தை ஆடிய அந்த வித்வானை அவர்கள் மிகவும் பாராட்டினர். இந்த நடனத்தின் புனிதத் தன்மைக்கு எவ்விதக் குறைபாடும் ஏற்படாமலிருக்கும் பொருட்டும், மேலும் இது ஒரு கண்காட்சியாக மாறிவிடக்கூடாதென்ற நோக்கத்துடனும் இந்த நடனத்தைத் தமது அனுமதியின்றி அந்த வித்வான் எவ்விடத்திலும் நர்த்தனம் செய்து காட்டக்கூடாதென ஸ்வாமிகள் கட்டளையிட்டுள்ளார்கள். நடனமாடிய வித்வான் **ராமசந்திர அய்யருக்கு** அன்று ஸ்வாமிகள் பீதாம்பரமும் தங்கம் கட்டிய ஸ்படிக மாலையும் அளித்து அவரை மிகவும் பெருமைப் படுத்தினார்கள். அவருடன் பாடிய சீடர்களுக்கும், சங்கவித்வானுக்கும், மிருதங்க வித்வானுக்கும் தக்கவாறு சம்மானங்கள் அளிக்கப்பட்டன.

### ஹிந்து அநாதைப் பிரேத ஸம்ஸ்காரம்

அநாதையாக இறக்கும் ஹிந்துக்களின் சடலங்களை ஹிந்து முறைப்படி ஸம்ஸ்காரம் செய்யவேண்டியதற்காகத் தொண்டர்களைக்கொண்ட சபை ஒன்றை 1953-ஆவது ஆண்டில் ஸ்வாமிகள் கும்பகோணத்தில் நிறுவினார்கள். இந்தக் கைங்கரியத்தில் தொண்டர்களாக வருவதற்கு வெகு சிலரே முன்வருவார்களென்பது யாவரும் அறிந்ததுதான். கும்பகோணம் நகர முத்ராதிகாரி சங்கத்தின் ஒரு கிளையாகவே இது நிறுவப்பட்டது. கிறிஸ்தவர்

கள், இஸ்லாமியர்கள் இவர்களில் எவராவது அநாதையாக இறந்தால், அவர்களது பிரேதத்தைத் தாமதியாமல் எடுத்து அடக்கம் செய்யச் சங்கங்கள் இருக்கின்றன. அதற்கெனச் சிலரால் பணமும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நமது ஹிந்துக்களுக்கோவென்றால் இவ்வித ஏற்பாடுகள் எதுவுமில்லை. தெருக்களின் ஓரங்களில் இறந்துகிடக்கும் ஹிந்து அநாதைப் பிணங்கள் பல மணி நேரம் கேட்பாரற்றுக் கிடந்து, கடைசியாக முனிஸிபாலிட்டி வண்டிகளில் தோட்டிகள் எடுத்துச் செல்லவேண்டிய நிலையில் உள்ளன. இந்த அவலநிலையை ஸ்வாமிகள் மிகவும் வருத்தத்துடன் உணர்ந்தே இந்தச் சபையை நிறுவினார்கள். இது கும்பகோணம் நகரில் முதலில் பரீக்ஷார்த்தமாக ஆரம்பிக்கப்பட்டது. இந்தவகையில் மற்ற நகரங்களிலும், கிராமங்களிலும் இம்மாதிரி சபைகள் ஆரம்பிக்கப்படவேண்டுமென்பது ஸ்வாமிகளின் அவா. இது சம்பந்தமாக ஸ்வாமிகள் விடுத்த ஓர் அறிக்கை பின்வருமாறு :--

"ஜீவாத்ம கைங்கரியம் என்னும் தர்மத்தை அடிக்கடி நினையுங்கள். பஞ்சபூதங்களினாலும், சூரியன் சந்திரன் போன்ற விண்மீன்களாலும், பயிர் பச்சை முதலிய தாவரங்களினாலும், விலங்கு பறவை முதலிய ஜீவஜந்துக்களினாலும், மனித சமூகத்தினாலும் நாம் அடையும் நன்மைகளை எண்ணிப் பாருங்கள். அவற்றிற்கு நாம் செய்யும் கைம்மாறுதான் என்ன? நாம் தனி மனிதர்களாகப் பிறந்து வளர்ந்து சாகவில்லை; சமூகத்திலே பிறந்து வளர்ந்து இருக்கின்றோம்; சமூகமே நம்மை வளர்க்கிறது; அச்சமூகத்திற்கு நாம் செய்யும் நன்றி யாது?

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (குறள்—110)

நாம் பெறும் நன்மைகளுக்கெல்லாம் கைம்மாறு ஜீவாத்ம கைங்கரியமேயாகும். இரவில் படுக்கும்பொழுது ஓர் கேள்வியைக் கேட்டுக்கொள்ளுங்கள். அதாவது, 'இன்று நாம் ஜீவாத்ம கைங்கரியம் என்ன செய்தோம்?' என்பதே; அதன் விடையில்தான் நமது மனிதத்தன்மை நிலைபெறுகிறது."

அச்வமேத யாகம் செய்யும் பயனைக் கொடுக்கும் இந்தக் கைங்கரியத்திற்குக் கும்பகோணம் நகர மக்கள் தாராளமாகப் பணஉதவி செய்ய முன்வந்தனர். 1953 ஜனவரி மாதம் முதல் ஜூன் மாதம் முடிய, கும்பகோணம் சர்க்கார் ஆஸ்பத்திரியில் அநாதையாக இறந்தவர்கள் 19 பேர்கள். தெருக்களில் இறந்தவர்களின் தொகை 14. பிரேத விசாரணைக்கு எடுத்து வரப்பட்டவர்

3 பேர்கள். இந்த 36 பேர்களில் ஹரிஜனங்கள் 4, அந்தணர்கள் 2, இதர ஹிந்துக்கள் 30. இந்த 36 சடலங்களையும் அவரவரது குலா சாரப்படி ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டன. இந்தத் தருமத்திற் கென அன்பர்களிடமிருந்து நேரடியாகவும் உண்டியல் மூலமாக வும் அந்த 6 மாதங்களில் வசூலான தொகை ரூ. 2834-75; ஸம்ஸ் காரங்கள் செய்யச் செலவானது ரூ. 474. இந்த 6 மாதங் களில் பிரசார செலவு ரூ. 205-75. மேலும் இந்தச் சபையானது தொடர்ந்து இந்தக் கைங்கரியத்தில் ஈடுபட்டு அரிய தொண்டாற்றி மக்களுக்குப் பேருபகாரத்தைச் செய்து வருகிறது.

* * * *

**குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிக ஸ்வாமிகள்**

சென்ற 1953-ஆவது ஆண்டு மே மாதம் பிற்பகுதியில் குன்றக் குடி **அடிகளார்** நம் ஸ்வாமிகளைத் தஞ்சை ஜில்லாவில் முதலில் மாயவரத்திலும், இரண்டாவது முறையாகக் கும்பகோணம் தாலூகா வேட்டமங்கலம் என்னும் கிராமத்திலும் சந்தித்துப் பலமணிநேரம் அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள். தமிழ் நாட்டில் அன்புநெறியையும், அருள்நெறியையும் மக்களி டையே வளர்க்கும் முறையைப்பற்றிச் சம்பாஷணைகள் நடை பெற்றன. அடிகளார் நாட்டின் பலபாகங்களிலும் **அருள்நெறித் திருக்கூட்டங்களை** அமைத்துவருவதை ஸ்வாமிகள் மிகவும் பாராட்டினார்கள். மேலும் ஓய்வின்றி மிக ஆர்வத்துடன் அடிகளார் செய்துவரும் சமயப் பிரசாரத்தை ஸ்வாமிகள் மகிழ்ச்சி யுடன் வரவேற்றார்கள். பின்னர் அடிகளார் ஸ்வாமிகளைக் காஞ்சீபுரத்திலும் சந்தித்துப் பிரசாரத்தின் போக்கைப்பற்றியும், மக்களது நிலையைப் பற்றியும் ஸ்வாமிகளிடம் உரையாடி னார்கள்.

**கபிஸ்தலத்தில் வஸந்த நவராத்திரி**

தஞ்சை ஜில்லாவில் திருவையாற்றுக்கும் கும்பகோணத்திற் கும் நடுவில் காவிரியின் வடகரையில் கபிஸ்தலம் என்னும் அழகிய ஊர் அமைந்துள்ளது. அந்த ஊரின் பெரிய மிராசுதார்கள் **மூப்பனார்** என்னும் புகழ்பெற்ற குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். தஞ்சை ஜில்லாவில் பிரசித்தி பெற்ற மிராசுதார்களின் குடும்பங் களில் இஃது ஒன்றாகும். பல நூற்றாண்டுகளாகவே இக் குடும் பத்தார் பலவித தர்மங்களைப் புரிந்து வந்துள்ளார்கள். இந்தக் குடும்பத்தைச் சார்ந்த **ஆர். கோவிந்தசாமி மூப்பனார்** ஸ்வாமிகளைச்

சிலகாலம் தம் ஊரில் தங்கவேண்டுமெனப் பிரார்த்திக்க, அவரது விருப்பத்திற்கிணங்க ஸ்வாமிகள் 1953-ஆவது வருடம் மார்ச் மாதத்தில் சுமார் பதினைந்து நாட்கள் அங்குத் தங்கியிருந்தார்கள்.

அம்பிகைக்கு விசேஷ ஆராதனம் செய்வதைச் சரத்ருதுவில் வரும் நவராத்திரியில் மக்கள் பெரும்பாலாகக் கொண்டாடி வருவதைப்போல, வஸந்த ருதுவிலும் ஒன்பது நாட்களில் அம்பிகை பக்தர்கள் நவராத்திரியைக் கொண்டாடுவதுண்டு. மடத்திலும் வஸந்த நவராத்திரியின் பொழுது விசேஷமான பூஜைகளும், ஹோமங்களும், பாராயணங்களும் நடைபெறுவது வழக்கம். அவ்வருட வஸந்த நவராத்திரியை ஸ்வாமிகள் கபிஸ்தலத்தில் நடத்தினார்கள். மார்ச் மாதம் 16-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதி முடிய, இந்த விழா அங்கு நடைபெற்றது. ஏராளமான பொருள் செலவில் மூப்பனார் இந்த நவராத்திரி விழாவின் ஏற்பாடுகளை நேரில் கவனித்து நடத்திக்கொடுத்தார். அவருக்குப் பக்கபலமாக அவரது நண்பரும், ஆசார்ய பக்தருமான **சந்திரசேகரபுரம் சந்துரு ஐயர்** உடன் நின்று குறைவின்றி எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டார். தஞ்சை ஜில்லாவின் பல பாகங்களிலிருந்தும் பக்தர்கள் ஆயிரக்கணக்காக வந்து இவ்விழாவைத் தரிசித்தனர். முடிவுநாளன்று மாலையில் ஸ்வாமிகள் காவிரியின் மணல்பரப்பில் வீற்றிருந்து, பக்தர்களுக்குச் சில உபதேசங்களை அருளினார்கள். நமது ஆலயங்களின் பெருமையைப்பற்றி அன்று ஸ்வாமிகள் எடுத்துரைக்கையில் **சோழ மண்டலமே ஒரு பெரிய கோயிலெனக்** கூறினார்கள். ஒவ்வொருவரும் சமூகப்பணி செய்ய வேண்டுமென வற்புறுத்தினார்கள். கிராமத்திலுள்ள குளங்களை வெட்டுதல், பாதைகளைச் செப்பனிடுதல் முதலான பணிகளில் கிராம மக்கள் ஒற்றுமையுடன் சரீரப்பிரயாசை எடுத்துக்கொண்டு, உயர்வு தாழ்வு மனப்பான்மையில்லாமல் உழைக்கவேண்டுமென்று கூறினார்கள்.

———

## 11. காஞ்சியில்

### கால்நடையாகக் காஞ்சி யாத்திரை புறப்பட்டது

பீடத்தின் ஆஸ்தானமாகிய காஞ்சி நகரத்தில் சில வருஷங்கள் வாசம் செய்யவேண்டுமென ஸ்வாமிகளுக்கு வெகுகாலமாக ஓர் எண்ணம் இருந்து வந்தது. மேலும், அப் புனிதத்தலத்திலேயே, பீடத்திற்குத் தமக்குப் பின்னுல் அதிபராக வரக்கூடிய ஒருவரை நியமனம் செய்துவிட வேண்டுமெனவும் ஸ்வாமிகள் எண்ணம் கொண்டார்கள்போலும்.

1953-ஆவது வருடத்து சங்கரஜயந்தி உத்ஸவம் கும்பகோணம் தாலூகாவில் கொள்ளிடத்தின் தென்கரையில் அமைந்துள்ள **ஒழுகுசேரி** என்னும் கிராமத்தில் நடைபெற்றது. அதன் பிறகு பக்கத்துச் சில கிராமங்களில் தங்கிவிட்டு, ஜூன் மாத இறுதியில், ஸ்வாமிகள் காஞ்சிக்குக் கால்நடையாகப் பிரயாணமானுர்கள். நாள் ஒன்றுக்கு சுமார் முப்பது கிலோ மீட்டர்கள் நடந்து, ஓர் ஊரில் ஓரிரண்டு நாட்கள் மட்டும் தங்கி யாத்திரை செய்து கொண்டு, அவ்வருடம் ஜூலை 26-ஆம் தேதி நடைபெற வேண்டிய வியாஸ பூஜையை முன்னிட்டு 22-ஆம் தேதியே காஞ்சீபுரத்தை அடைந்தார்கள்.

### சிதம்பர தரிசனம்

சிதம்பர க்ஷேத்திரத்தைத் தரிசிப்பதினுலேயே முக்தியென்பது பெரியோர்களது திருவாக்கு. இந்த உண்மையை உலகிற்கு எடுத்துக்காட்ட ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண்டார்களோவென நினைக்கும் வண்ணம் இந்த அவசரமான பிரயாணத்திற்கிடையில் ஸ்வாமிகள் சிதம்பரத்திற்கப்பால் சுமார் 30 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள ஓர் கிராமத்தில் தங்கியிருந்தபொழுது அவ்விடமிருந்து இரவில் 30 கிலோ மீட்டர்கள் நடந்து. சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, ஸ்ரீ நடராஜர் பவனிவரும் நான்கு தேர்வீதிகளையும் வலம் வந்து, எல்லாக் கோபுரங்களையும் இரவு நடுநிசியில் தரிசித்துக்கொண்டு, அங்குச் சிறிது நேரங்கூடத் தங்காமல், 40 கிலோ மீட்டர்களுக்கப்பாலுள்ள அடுத்த யாத்திரை முகாமிற்கு எழுந்தருளினுர்கள். வீதிகளில் ஸ்வாமிகள் நடந்து வந்ததை அன்றிரவு கண்டிருந்த சிலர் மூலம் சிதம்பரவாசிகள் ஸ்வாமிகளின் வரவைப்பற்றிய இச்செய்தியை மறுநாள் காலையில் தெரிந்து கொண்டனர். இவ்விதம் ஒருவரும் அறியாதவாறு ஸ்வாமிகள் விஜயம் செய்து திரும்பியதுபற்றி மக்கள் சிறிது கவலை

கொண்டனர். ஸ்வாமிகளையொத்த பெரியோர்கள் ஓர் ஊருக்கு விஜயம் செய்யும்பொழுது அவர்களைத் தக்க முறையில் வரவேற்று உபசரிக்க வேண்டுவது ஊர் மக்கள் கடமையாதலால், அந்தக் கடமையிலிருந்து நழுவி விட்டதாக அவர்கள் கவலை கொண்டனர். ஆனால் ஸ்வாமிகள் தமது அடுத்த முகாமிலிருந்து சிதம்பரத்திலுள்ள பக்தர்கள் எவரும் இந்த நிகழ்ச்சியினால் கவலைகொள்ள வேண்டாமென்றும், பின்னர் அவகாசம் கிடைக்கும்பொழுது அங்கு வந்து பக்தர்களின் உபசரணைகளைப் பெற்றுக் கொள்வதாயும் ஓர் செய்தியை விடுத்தருளினார்கள்.

**காஞ்சியில் நடைபெற்ற வியாஸ பூஜை**

ஸ்வாமிகள் பாத யாத்திரையாகக் காஞ்சியை அடைந்து அங்கு முதல் முறையாக காஞ்சியில் 1953-ஆம் வருஷம் ஜூலை 26-ஆம் தேதி (சின்னக் காஞ்சீபுரத்திலுள்ள அவர்களது சொந்த மடத்தில்) ஆஷாட சுத்த பூர்ணிமையன்று வியாஸ பூஜையை மிக விமரிசையாக நடத்தினார்கள். அம்மாதம் 22-ஆம் தேதி ஸ்வாமிகள் அங்கு விஜயம் செய்த பொழுது வைணவர், சைவர், என்னும் மதவேற்றுமையும், ஜாதி பாகுபாடும் இல்லாமல் பொது மக்கள் மிகுந்த குதூகலத்துடன் ஸ்வாமிகளை வரவேற்றார்கள். யானைகட்டித் தெருவில் பழைய மடம் இருந்த இடத்தில் ஸ்வாமிகள் தங்குவதற்கு ஓர் நூதனக் கட்டிடம் நிர்மாணிக்கப் பட்டது. அக்கட்டிடத்தில் நடந்த அந்த வியாஸ பூஜையைச் சென்னையிலிருந்தும், வெளியூர்களிலிருந்தும் வந்திருந்த ஆயிரக் கணக்கான பக்தர்கள் அன்று தரிசித்துக் கொண்டனர். அன்று முதல் சாதுர்மாச விரதமும் தொடங்கப்பெற்றது. அப்பொழுது ஸ்வாமிகள் சுமார் நான்கு மாதங்கள் தீவிரமான மௌன விரதத்தை அனுஷ்டித்தார்கள்.

**ஸ்வாமிகளின் மௌன விரதம்**

பரமசிவன் பாலவடிவத்துடன் தக்ஷிணாமூர்த்தியாக ஆல மரத்தின் கீழ் அமர்ந்து வயோதிகர்களான ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்ற நான்கு முனிவர்களுக்கும் மௌனமாகவே உபதேசமருளினார். தத்துவங்களை உபதேசிப்பதற்குப் பேச்சைவிட, மௌனத்தையே ஞானிகள் சாதனமாகப் பெற்றிருந்தார்கள். மௌனத்தினாலேயே பரம்பொருளை வேதம் விளக்குகிறதெனக் கைவல்யம் கூறுகின்றது. ஸாதகன் ஏறிச் செல்ல வேண்டிய படிகளில் மௌனமும் ஓர் முக்கியமான படியாகும். மௌனத்தினால் ஓர் தனிச்சக்தியை அவன் பெறுகின்றான்.

ஸ்வாமிகள் ஒவ்வொரு வருடத்திலும் சில மாதங்கள் மௌன விரதத்துடன் இருப்பது வழக்கம். ஸ்வாமிகள் மேற்கொள்ளும் மௌனம் மூன்று வகையாக உள்ளது. பிறருக்குத் தெரிவிக்க வேண்டிய விஷயங்களைச் சில சமயம் தம் கைகளினால் தரையில் எழுதிக் காண்பிப்பார்கள். அக்காலங்களில் ஸ்வாமிகளின் கை விரலில் ரத்தம் தோய்ந்து புண்ணாகக்கூடப் போய்விடுவதுண்டு. சில சமயங்களில் முகஜாடை, கண்ஜாடைகளால் தம் எண்ணங்களை மற்றவர்களுக்கு உணர்த்துவார்கள். வேறு சில சமயங்களில் அவர்கள் எவ்வித ஜாடைகளையும் செய்வதில்லை. எப்பொருளையும் தம் திருஷ்டிகளால் உற்றுநோக்குவதுமில்லை. பூஜை செய்யும் வேளையிலோ அல்லது ஒரு குறிப்பிட்ட நேரத்திலோ மாத்திரம் தரிசனத்திற்காக வந்திருக்கும் பக்தர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க முடியும். அப்பொழுது எவரையும் நேரில் நோக்காமல் தம்மைத் தாமே நோக்குபவர்களாய்ப் பிறர் கூறுவதைத் தம் காதுகளிலோ, புத்தியிலோ, மனஸிலே ஏற்றுக்கொள்ளாத ஓர் நிலையை அவர்கள் அடைந்திருப்பார்கள். அவர்களின் முகக் குறிப்பில் எவ்வித மான மாறுதலையும் பிறர் காணமுடியாது. இந்த மூன்றாவது மௌன நிலையைக் **காஷ்டமௌனமெனக்** கூறுவார்கள். இந்த காஷ்டமௌனத்தை ஒவ்வொரு **மூல நக்ஷத்திரத்திலும்** ஸ்வாமிகள் கடைப்பிடித்து வருகிறார்கள்.

ஸ்வாமிகள் இவ்வாறு மௌன நிலையில் இருந்த காலத்தில் பர்மா நாட்டிலிருந்து பௌத்தகோடீசுவரர் ஒருவர் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தார். ஸ்வாமிகளுடன் உரையாடி ஆத்மிகத்துறையில் அறிவு வளர்ச்சிக்கு அனுகூலமான விஷயங்கள் சிலவற்றை அறிந்துபோகவே அவர் அங்கு வந்தார். ஆனால் தீவிர மௌன நிலையிலிருந்த ஸ்வாமிகள் கருணை மிகுந்த தமது பார்வையினால் அவரை அனுக்கிரகித்தார்கள். ஸ்வாமிகள் அவரிடம் எதுவும் பேசாவிடினும் அவர்களது பார்வையினாலேயே பெரிய ஆத்மிகப் பயனைத் தாம் அடைந்ததாக அந்தப் பௌத்த கோடீசுவரர் பிறரிடம் கூறினார். பக்குவமான மனோநிலையிலிருப்பவர்கள் பலர் ஸ்வாமிகளின் தரிசனத்தினாலேயே மனச் சாந்தியை அடைந்துவிடுகிறார்கள் என்பது உலகமறிந்த விஷயம்.

### உபவாசமும் ஆகார நியமும்

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதர் தாம் அருளிய **சோபான பஞ்சகம்** என்னும் தோத்திரத்தில் குறிப்பாகத் துரீய நிலையிலுள்ளவர்களுக்கு உபதேசிக்கும் முறையில் கீழ்கண்டவாறு கூறியுள்ளார்:

क्षुद्व्याधिश्च चिकित्स्यतां प्रतिदिनं भिक्षौषधं भुज्यताम् ।
स्वाद्वन्नं न तु याच्यतां विधिवशात्प्राप्तेन संतुष्यताम् ॥

—ஸ்ரீ ஆதிசங்கரர்.

"நாள்தோறும் பீடிக்கும் பசியென்னும் பிணிக்குப் பிக்ஷையாகிற அன்னத்தை மருந்தாக உட்கொள். ருசியுள்ள ஆகாரத்தைத் தேடாதே. தெய்வ வசத்தினுல் அதுவாகக் கிடைப்பதைக் கொண்டு திருப்தியடைந்தவனுக இரு."

இந்த உபதேசத்தை மனஸில் கொண்டுதானே, நம் ஸ்வாமிகள் சரீரத்தில் பிராணன் நிலைத்திருக்கவேண்டிய அளவுக்கு மட்டில் சிற்சில சமயங்களில் சிறிது உணவை ஏற்றுவருகிறார்கள். ஸ்வாமிகள் பீடத்திலமர்ந்த இரண்டொரு ஆண்டுகளில் புளி, மிளகாய், உப்பு இவைகளை விலக்கி, ஒருவேளை மட்டும் உணவை ஏற்கத் தொடங்கினர்கள். சில வருடங்கள் நடைபெற்று வந்த இந்த ஏற்பாடும் பின்னர் மாறிற்று; அப்பொழுது பாலை மட்டும் பச்சையாக அருந்திவந்தார்கள். சில சமயங்களில் வில்வ இலையையும், வேப்பங்கொழுந்தையும் ஆகாரமாக ஏற்றும் வந்துள்ளார்கள். இந்த மாறுதல்களெல்லாம் ஸ்வாமிகளின் இளமைப்பருவத்தில் அவர்களது உடல்நிலையைப் பாதிக்கச் செய்யாவிடினும், பிற்காலத்தில் ஒருவாறு பாதிக்கவே செய்தன. அப்படியிருந்தும் ஸ்வாமிகள் ஒன்றையும் பொருட்படுத்துவதில்லை. சரீரத்திற்குச் சிகிச்சை செய்துகொள்ளுவதையும் ஏற்பதில்லை. பின்னர் சிலகாலம் மூன்று கைப்பிடி அன்னத்தை மட்டிலும் ஏற்றுவந்தார்கள். சமீபகாலத்தில் அதையும் நீக்கி, எப்பொழுதாவது நெற்பொரியைச் சிறிதளவு ஆகாரமாக ஏற்றுவருகிறார்கள். இவ்விதம் தாமாகவே உடல் வலிமையை ஸ்வாமிகள் குறைத்துவருவதில் சிஷ்யர்கள் பெரும் கவலைகொண்டுள்ளார்கள். ஆனால் உடல்வலிமை குறையக்குறைய மனோவலிமை பெருகி, அதனல் அவர்கள் பல சாதனைகளை நிறைவேற்றி வருகிறார்கள். ஆகாரம் ஏற்றுக்கொள்ளும் நாட்களை விட ஸ்வாமிகளுக்கு உபவாச நாட்களே அதிகமாக நேரும். அவர்களின் ஆச்ரமத்திற்குத் தக்கவாறு ஆகாரம் ஏற்றுக்கொள்வதற்குக் கால நியதிகள் சில உண்டு. அக்காலம் கடந்து விட்டால், ஸ்வாமிகள் எவ்வித ஆகாரத்தையும் ஏற்பதில்லை. அன்றாட பூஜை, சிஷ்யர்களுக்குத் தர்சனம் அளித்தல் முதலான காரியங்களில் காலங் கடந்துவிடும். அந்நாட்களெல்லாம் ஸ்வாமிகளுக்கு உபவாச நாட்களாகவே அமைந்து விடுவதுண்டு. நவராத்திரி காலத்தில் ஸ்வாமிகள் சேர்ந்தாற்போல் ஒன்பது நாட்களும் பூர்ண உபவாசமிருந்து

விசேஷ பூஜைகளை எட்டு மணி நேரத்திற்கு மேல் சோர்வின்றி நடத்துவார்கள். உபவாச காலத்தில் ஸ்வாமிகள் ஆசமன தீர்த் தத்தைத் தவிர வேறு தண்ணீர் கூட ஏற்பதில்லை.

### ஸ்வாமிகளின் வியக்கத் தக்க ஞாபக சக்தி

ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான பக்தர் களுக்குத் தரிசனமளித்து, அவர்கள் தெரிவித்துக்கொள்ளும் பல் வேறு குறைகளைப் பரிவுடன் கேட்டு, அவைகளின் நிவாரணத்திற் கும் வழிகாட்டி, யாவரையும் அனுக்கிரகித்து வருகிறார்கள். இவ் விதம் தர்சனத்திற்கு வருகின்றவர்களின் தொகை ஆயிரக்கணக்கி லும் பதினாயிரக்கணக்கிலுமாகப் பெருகிக்கொண்டே வருகின்றது. அப்படியிருந்தும் தரிசனத்திற்கு ஒருமுறை வந்தவர்களைப் பின்னர் எவ்வளவு வருடங்கள் சென்ற போதிலும் ஸ்வாமிகள் மறப்பதே இல்லை. அவர்கள் தெரிவித்துள்ள அவர்களது குடும்ப விஷயங் களைக் கூட ஸ்வாமிகள் நினைவில் வைத்துக்கொண்டு மறுமுறை அவர்களைச் சந்திக்கும்பொழுது அவைகளைப்பற்றிக் கேட்பார்கள். இவ்விதம் கேட்கும் அதிசயத்தைக் கண்டு சம்பந்தப்பட்டவர்கள் ஆச்சரியமடைவதுடன், தங்களிடம் ஸ்வாமிகள் வைத்திருக்கும் பரிவை நினைத்துப் பெருமை கொள்வார்கள்.

காஞ்சியில் வந்து தங்கிய பின்னர் அவர்கள் செய்துவரும் தருமத் தொண்டின் பெருமை மேன்மேலும் வளர்ந்து வருகிறது.

### அம்ருதலஹரியின் அஞ்சலி

**காஞ்சி பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமி, ஸ்ரீ ரங்கம் ஸ்ரீ மெ. சுந்தரராஜாசாரியர் ஸ்வாமி** இவர்களைப் பத் ராதிபர்களாகக் கொண்டு ஸ்ரீ ரங்கத்திலிருந்து வெளிவரும் **அம்ருத லஹரீ** என்னும் ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயப் பத்திரிகையின் விஜய வருட ஐப்பசி மாத இதழில் நம் ஸ்வாமிகள் செய்துவரும் தருமப் பிரசாரத்தின் பெருமையைப் பற்றிக் கீழேகண்டவாறு வியாசம் ஒன்று எழுதப்பட்டுள்ளது.

''உலகம் நிறைந்த புகழ்வாய்ந்த ஸ்ரீமத் காமகோடிபீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், பல வருஷ காலமாக அநாதிவைதிக மார்க்க சம்ரக்ஷணார்த்தமாக அஹோராத்திரமும் அநேகவிதமான வழிகளில் பாடுபட்டு வருவதை நாம் நீண்டகாலமாக அறிந்து வருகிறோம். அபரிமிதமான பொருட்செலவை அவர் செய்து கொண்டு, ஸம்ஸ்கிருத வித்வான்களிடத்தும், வேதாத்யயனத் தைச் சாங்கோபாங்கமாகச் செய்திருக்கிற வைதிகோத்தமர்

களிடத்தும், சைவ வைஷ்ணவாதி பேதபாவனை சிறிதுமில்லாமல், இப்பெரியார் காட்டி வருகிற அபிமானம் அளவு கடந்ததென்பது ஜகத்பிரசித்தம். இதுவரையில் யாரும் இத்தகைய பெரும் புகழை படைத்ததில்லையென்றால், இது சிறிதும் அதிசயோக்தி யாகாது. இவ்விஷயத்தில் எந்த மதத்தினரும் விவாதம் கொள்ளார். யாவரும் ஒருங்கே இசைந்த புகழ் இது.

இப்பெரியார், சென்ற ஆடி மாதத்துப் பௌர்ணமியன்று சின்ன காஞ்சீபுரத்திற்கு விஜயம் செய்து, யானை கட்டி வீதியி லுள்ள தங்கள் மடத்தில் சகல ஸ்தோமங்களுடனும் பரிஜன பரி வாரங்களுடனும் ஆஸ்தானமலங்கரித்து, உலகிலுள்ள வைதிகர் கள், பண்டிதர்கள், ஆஸ்திகர்கள், தார்மிகர்கள், செல்வர்கள், பக்தர்கள் யாவரும் நாள்தோறும் திரண்டுவந்து தரிசனம் செய்து அனுக்கிரகம் பெற்று ஆனந்திக்கும்படி இருக்கும் பெருமை வாசாமகோசரம். இப்பெரியார் சில மாதங்களாக மௌன விரதம் ஆரம்பித்திருந்தாலும், திவ்யாக்ஞை சொல்லும் அழகு மிக வியக்கத் தக்கது.........இப்பெரியாருடைய தூய திருவுள்ளத் தைப்பற்றி வாய் திறக்க நாமோ அதிகாரி? வைதிகஸ்ரீ பல படி யிலும் வளர்ந்து செல்லவேணுமென்று ஸ்ரீ ஸ்வாமிகள் கொண் டிருக்கிற குதூகலம் இதுவரை ஒரு மகானுடைய உள்ளத்திலும் உதிக்கவில்லையன்றோ? இது ஒன்றேயன்று. இவ்விதமாக க்ஷணந்தோறும் ஸ்ரீஸ்வாமிகளின் அந்தரங்கத்தில் அபூர்வமாகத் தோன்றும் ஆசம்சைகள் அளவுகடந்தவை. அவற்றால் கலி கோலாகலம் கெட்டுக் கிருதயுக தர்மோன்மேஷம் விரைவில் விளையுமென்றே உலகம் நம்பியிருக்கிறது.''

**சின்ன காஞ்சீபுரம் நம்பிள்ளை சந்நிதியில் ஸ்வாமிகளுக்கு பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமி அளித்த வரவேற்பு**

சென்ற விஜய வருட (1953) சாதுர்மாச காலத்தில் வைதிக வித்வான்கள் ஆங்காங்கு தசோபநிஷத் முழுவதையும் ஒருமுறை பாராயணம் செய்யவேண்டுமென்றும், அன்றாடம் படனம் செய்த பாகத்தின் தாத்பர்யத்தை முடிந்தவரை ஸங்கிரகமாகப் பிர வசனம் செய்யவேண்டுமென்றும், நாடுமுழுவதுக்கும் ஓர் ஸ்ரீமுகத்தை ஸ்வாமிகள் விடுத்தார்கள்.

அந்த ஸ்ரீமுகத்தில் கண்ட நியமனப்படி காஞ்சி பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி அவர்களால் சின்ன காஞ்சீபுரம் நம்பிள்ளை சந்நிதியில் 26-10-1953 முதல் பாராயணம்

செய்யப்பட்டு, காலையில் பாராயணமும் மாலை 4 மணி முதல் 9 மணி வரை பிரவசனமும் நடத்தப்பெற்று வந்தன. இந்தப் பிரவசனம் நடைபெற்றபொழுது ஸ்வாமிகள் நேரில் நம்பிள்ளை மண்டபத்திற்கு விஜயம் செய்து, அந்த மகாவித்வானது உபன்யாஸத்தைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

முதல் தடவையாக ஸ்வாமிகள் அங்கு விஜயம் செய்தபொழுது (26-10-53இல்) ஸ்ரீமத் அண்ணங்கராசாரிய ஸ்வாமி வித்வத் கோஷ்டிகளுடனும், வேதவித்பன்னர்களுடனும் உபநிஷத் கோஷம் செய்துகொண்டு, ஸ்வாமிகளைப் பூர்ணகும்பம் கொடுத்து வரவேற்றார். பின்னர் அவர் தம்மால் ஸ்வாமிகள் மீது தொகுக்கப்பட்ட ஐந்து சுலோகங்களையும் வாசித்து அவற்றின் பொருளையும் விளக்கி அவற்றை ஸ்ரீமத் ஆசார்ய ஸ்வாமிகளின் பாதகமலங்களில் சமர்ப்பணம் செய்தார். அந்தச் சுலோக மாலிகையை ஸ்வாமிகள் பரமானுக்கிரகத்துடன் ஸ்வீகரித்து மௌனவிரதத்திற்கு விரோதமில்லாமல் புன்முறுவல் பொருந்திய கருணையான பார்வையினால் தமது சந்தோஷத்தைத் தெரிவித்தார்கள். பின்னர் ஒவ்வொரு நாளும் உபந்யாசம் நடைபெறும்பொழுது ஸ்வாமிகள் தம் காரியங்களில் இதனை முதன்மையாகக் கருதி உபநிஷத் பிரவசனம் தொடங்கும் முன்னரே, சபையை அலங்கரித்த கருணை வருணிக்க முடியாததாகும். ஸ்வாமிகளின் இந்த உத்தம குணத்தைப் புகழாதாரில்லை. பகவான் பக்தர்களது அன்பிற்கு இசைந்து தீனர்களை ரக்ஷிக்கத் தாமாகவே சேவையளித்து, யாவரும் எளிதில் அடையும் தன்மையை ஏற்கின்றார் என்பதை ஏடுகளில் காண்கின்றோம். ஆனால் ஸ்வாமிகளின் விஷயத்தில் இது பிரத்யக்ஷமாகக் காணப்படுவதாக எண்ணிப் பக்தர்கள் மனமகிழ்ந்தனர்.

—அம்ருதலஹரி



## பிரதம சிஷ்யர் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு ஆசிரம உபதேசம் அளித்தது

தமக்குப் பின்னர் பீடத்தை அலங்கரிக்கத் தக்கதொரு மகானை நியமனஞ் செய்து, அவருக்குத் தரவேண்டிய பயிற்சிகளையெல்லாம் தாமே கொடுக்கவேண்டுமென்று ஸ்வாமிகள் பல வருடங்களாக விருப்பம் கொண்டிருந்தார்கள். இந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்யக்கூடிய ஒரு சிஷ்யரை சிலவருடங்களாகவே தம் மனஸிற்குள் அவர்கள் தேர்ந்தெடுத்து, பின்னர் அவருடைய பெற்றோர்களின் சம்மதத்தையும் பெற்றிருந்தார்கள். தஞ்சை ஜில்லா மன்னார்குடி தாலூகாவைச் சார்ந்தவரும், தென் பிராந்திய ரயில்வேயில் திருச்சியில் உத்தியோகம் பார்ப்பவருமான **மகாதேவ ஐயர்** என்பவரின் தவப்புதல்வரான **சுப்பிரமண்யம்** என்னும் அந்தணச் சிறுவரே இந்தச் சிஷ்யராவர். சுமார் பத்தொன்பது பிராயம் நிறைந்த அவர், மடத்திலேயே இளமைப் பருவம் முதல் வேதம் கற்று, நல்ல சீலமும், நற்குணமும் பெற்று விளங்கி வந்தார்.

இந்தப் பாலகருக்குச் சன்னியாச ஆச்ரமும், உபதேசமும் தந்தருளும் வைதிக காரியங்கள் 1954-ஆம் வருஷம் மார்ச் மாதம் 19-ஆம் தேதி முதல் தொடங்கி 22-ஆம் தேதி வரை காஞ்சீபுரத்தில் நடைபெற்றன. மடத்தின் சரித்திரத்திலேயே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இந்த விழாவைக் காண பதினாயிரக் கணக்கில் பக்தர்கள் அப்பொழுது அங்குக் கூடியிருந்தனர். இந்த வைபவங்கள் நடைபெறுவதற்குப் பூர்வாங்கமாக, ஸ்வாமிகள் **கலவை** என்னும் தலத்திலுள்ள தம் குரு, பரமகுரு இவர்களின் அதிஷ்டானங்களையும், காஞ்சிக்கு அடுத்த **அம்பிகாபுரம்** என்னும் ஊரிலமைந்துள்ள பூர்வாசாரியரொருவரது அதிஷ்டானத்தையும் தரிசித்துக்கொண்டார்கள். மார்ச் மாதம் 22-ஆம் தேதி அதிகாலையில், ஸ்வாமிகள் **அனந்தசாகரம்** என்னும் புனித தடாகத்தின் கரையிலுள்ள புராதன **அச்வத்த மரத்தின் அடியிலிருந்து** புனித மண்ணைப் பிரசாதமாகக் கிரகித்துக் கொண்டு, பிறகு மடத்திலுள்ள **ஸ்ரீ சுரேச்வராசாரியரது** பிம்பத்திற்குப் பூசைசெய்தார்கள். பின்னர், காமாக்ஷி அம்பிகை சந்நிதி, அங்குள்ள ஆதிசங்கரரது சந்நிதி இவற்றைத் தரிசித்துக்கொண்டு சாலையிலிருந்தே **குமரகோஷ்டத்தையும், ஏகாம்ரர் ஆலயத்திலுள்ள ஆம்ர** (மாமரம்) விருக்ஷத்தையும் தரிசித்துக் கொண்டார்கள். பின்னர் மடத்தின் அதிஷ்டான தெய்வமான **ஸ்ரீ திரிபுரசுந்தரி**

**ஸமேத ஸ்ரீ சந்திரமௌளீச்வரரையும்** பிரார்த்தனை செய்துகொண்டார்கள்.

உபதேசம் பெறும் சீடர் வேதவிதிப்படி தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் இவர்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகளை யெல்லாம் செய்து முடித்து, பின்னர் அந்நாளுக்கு முதல் நாள் இரவு முழுவதும் மௌனமாகத் தூங்காத நிலைமையில் உட்கார்ந்தவாறே தியானத்தில் அமர்ந்திருந்தார்கள். மறுநாள் அதிகாலையிலேயே **ஸர்வதீர்த்தக்கரையிலுள்ள முக்திமண்டபத்தை** அவர் அடைந்து, பூர்வாங்கமான வைதிக காரியங்களை முடித்துக் கொண்டு, குருநாதரது வரவை எதிர் பார்த்தவண்ணமாக இருந்தார். அன்று காலை முதலே, காஞ்சி நகரம் ஒரு புதிய சோபையுடன் விளங்கிற்று. நாட்டின் பல பாகங்களிலிருந்து அங்கு வந்திருந்த சிஷ்யர்கள் நீராடி, தூய்மையான மனமுடையவர்களாய், ஆயிரக்கணக்காகக் காஞ்சி வீதிகளில் அன்று காணப்பட்டனர். காலை சுமார் 9 மணிக்கு, ஸ்வாமிகள் தம் மடத்திலிருந்து புறப்பட்டுப் பக்தர்கள் குழாத்துடன் எட்டு தண்டி சந்நியாசிகள் பின்தொடர, முக்திமண்டபத்தை அடைந்தார்கள். அப்பொழுது குளத்தின் நான்கு கரைகளிலும், அதையடுத்த வீதிகளிலும் ஸ்வாமிகளையும், சீடரையும் தரிசிக்க ஏராளமான ஜனக்கூட்டம் கூடியிருந்தது.

சுமார் பத்து மணிக்கு, பிரதம சிஷ்யரான **ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** வேதவித்பன்னர்களும், சாஸ்த்திரவித்பன்னர்களும் தொடர்ந்துவர, ஸர்வதீர்த்த தடாகத்தில் இறங்கி, இடுப்பளவு தண்ணீரில் நின்று, உலகபாசம் முழுவதையும் களைந்தார்கள். அந்தப் பாலபருவத்தில் அன்னவர் துறவறம் மேற்கொள்ளுவதையும், அதிலும் லோகாசாரியர்களால் உபதேசம் பெறுவதையும் காண, மக்கள் போட்டியிட்டுக் கொண்டு முன் வந்தனர். பின்னர் ஸ்வாமிகள் **ஸ்ரீ விசுவேச்வரர் சந்நிதியில்** தம் சிஷ்யருக்கு **மகாவாக்யத்தை** உபதேசித்தருளினார்கள். அப்பொழுது அவர்கள் தம் சிஷ்யருக்குக் காஷாய வஸ்திரத்தையும் அளித்தார்கள்.

இந்த வைபவங்கள் முடிவுபெற்றவுடன் சிஷ்யர் பின்தொடர, கால்நடையாக மடத்தின் எல்லா விருதுகளுடனும், மேளவாத்தியத்துடனும் லிங்கப்பய்யர் தெரு வழியாக, பெரிய காஞ்சீபுரம் கங்கைகொண்டான் மண்டபத்திற்கெதிரிலுள்ள தமது மடத்தை அவர்கள் பகல் 12 மணிக்கு அடைந்தார்கள். அப்பொழுது மடத்திற்கு உள்ளும் வெளியிலும் சுமார் பதினாயிரம் ஜனங்

களுக்குமேல் கூடியிருந்தனர். அன்று இரு மகான்களையும் ஒருங்கே தரிசித்தவர்களெல்லாம் மனமுருகி நின்றனர். இக் காட்சியைக் கண்டவர்களே மிகவும் பாக்கியசாலிகள். ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திரமௌளீசுவரர் சந்நிதியை அடைந்ததும், தம் சிஷ்யருக்கு ஓர் ருத்திராக்ஷ மாலையையும், ஓர் ஸ்படிக மாலையையும், திருப்பதி தேவஸ்தானத்தில் தமக்கு மரியாதையாக அளித்த பெரிய பீதாம் பரம் ஒன்றையும் அனுக்கிரகத்துடன் அளித்தார்கள். அன்றைய நித்யபூஜை மாலை சுமார் 3 மணிக்கு முடிவுபெற்றது. அதற்குப் பின்னர் சுமார் 4 மணி முதல், ஸ்வாமிகள் அன்று வெளியூர்களி லிருந்து வந்த சிஷ்யர்களுக்கு விபூதி, அக்ஷதை, குங்குமம் பிரசாதங்களைக் கொடுக்கத் தொடங்கினார்கள். யாவருக்கும் பிரசாதம் கொடுத்து முடிய இரவு 3 மணியாயிற்றென்றால், அன்று ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தவர்கள் எவ்வளவு இருந் திருக்குமென்பதை வாசகர்களே ஒருவாறு ஊகிக்கலாம்.

உபதேசமளித்ததற்கு முதல்நாள் ஸ்வாமிகள் சின்னகாஞ்சீ புரத்தில் தமது மடத்தில் பூஜையை முடித்துக்கொண்டு, அங்குக் கூடியிருந்த ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு, மடத்திற்கும் சிஷ்யர்களுக்கும் இருக்கவேண்டிய தொடர்பைப்பற்றிச் சில உப தேசமொழிகளை அருளினார்கள். அவ்வுபதேசமொழிகளின் சுருக்கம் பின்வருமாறு:—

"எதிர் காலத்தில் இந்தப் பீடத்தை அலங்கரிக்கத்தக்க ஓர் ஸ்வாமிகளுக்குப் புதிதாக ஆச்ரமம் வழங்க ஏற்பாடுகள் செய்து வரும் இச்சமயத்தில் உங்களுக்கும் சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். தற்காலம் இருந்து வரும் நிலையில் மடத்தின் காரியங்களைச் செவ்வனே நடத்திவருவதற்கு மடத்தின் சொத்தி லிருந்து கிடைக்கும் வருமானம் போதுமானதாக இல்லை. வருமா னத்திற்கு மேல் கிட்டத்தட்ட செலவு ஐந்துமடங்காக ஏற்படு கிறது. ஸ்வாமி பூஜை, மற்றும் மதப் பிரசாரம் பற்றிய முக்கிய மான செலவுகள்தாம் மடத்தில் செய்யப்படுகின்றன. மடத்தின் வருவாயைக்கொண்டு மாத்திரம் இவைகளைச் செய்யப் போதுமான தாக இல்லை. புதிதாக ஸ்வாமிகளை நியமனம் செய்வது மாத்திரம் போதாது. மடத்தின் காரியங்களும் சரிவர நடந்துவர வசதிகள் செய்யவேண்டும். சாதாரணமாக நான் இவ்விஷயத்தைப்பற்றி உங்கள் முன் பேசியிருக்கவேமாட்டேன். ஆனால், இப்பொழுது ஸ்வாமிகளொருவருக்கு உபதேசம் செய்யப்போவதால் இவ்விஷ யத்தை நான் இப்பொழுது உங்கள் முன்னிலையில் அவசியமாகத் தெரிவிக்கவேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. இங்குக்

கூடியிருக்கும் நீங்களும்; மற்றும் வெளியிடங்களிலுள்ள பக்தர்களும் மடத்தின் விஷயத்தில் ஆழ்ந்த அபிமானம் வைக்கவேண்டும். ஒவ்வொரு சிஷ்யரும் தம் குடும்பத்தைக் கவனிப்பதுடன், மடத்தையும் தன் குடும்பம் போலவே பாவித்து அவரவர்கள் சக்திக்குத் தக்கவாறு மடத்திற்குத் திரவியசகாயம் செய்வதெனத் தீர்மானம் செய்துகொள்ளவேண்டும். இக்காலத்தில் குடும்ப சம்ரக்ஷணமே பலருக்குச் சிரமமாக இருக்கலாம். ஆயினும், மடத்திற்குச் சிறிதளவாவது உபகரிக்க வேண்டுமென்று எண்ணம் கொள்ள வேண்டும்.

மடத்திற்குத் திரவியசகாயம் செய்வதுடன் சரீரத்தினாலும் சேவை செய்ய நீங்கள் முன்வர வேண்டும். மடத்தின் கைங்கரியத்தை நடத்துவதில் இப்பொழுது பலர் சம்பள மெதுவும் எதிர்பாராது இங்குக் காரியங்களைக் கவனித்துவருகிறார்கள். அவர்களில் சிலர் தங்கள் சாப்பாடு முதலியவற்றிற்குக்கூடத் தங்கள் பணத்தையே செலவிட்டுக்கொண்டு மடத்திலேயே தங்கிக் கைங்கரியங்களைச் செய்துவருகின்றனர். அவ்விதம் எல்லோரும் எக்காலத்திலும் செய்ய முடியாவிட்டாலும் வருஷத்தில் சில குறிப்பிட்ட காலத்திற்காவது இங்கு வந்திருந்து அம்மாதிரிச் சேவைகளைச் செய்ய உங்களில் பலர் முன்வரலாம். மடத்திற்குப் பணம் கொடுப்பதைவிட இவ்வித கைங்கரியமே மிகவும் விசேஷமாகும். கைங்கரியத்தில் ஈடுபட விரும்புவோர் முக்கியமான பிராம்மண தர்மத்தைச் செய்யக்கூடியவர்களாக இருக்க வேண்டும். சந்தியாவந்தனாதி நித்திய கர்மானுஷ்டானங்களையாவது செய்துகொண்டு, சரீர சுத்தியுடனும், மனச் சுத்தியுடனும் அவர்களிருக்க வேண்டும். தற்காலம் பிராம்மணர்களிடையே கர்மானுஷ்டானங்கள் மிகக் குறைந்துவரும் ரீதியைப் பார்த்தால் மடத்தின் கைங்கரியங்களைச் செய்யக்கூட நித்தியகர்மானுஷ்டானம், சிகை, புண்ட்ரம், முதலிய சின்னங்களுள்ளவர்கள் பிற்காலத்தில் எங்கு கிடைக்காமல் போய் விடுவார்களோவென்று அஞ்சவேண்டியிருக்கிறது. அதற்கு நீங்கள் இடம் கொடுக்கலாகாது. ஆகவே, மதானுஷ்டானத்தில் நம்பிக்கை வைத்து, அதைப் பின்பற்றுவதுடன், மடத்தின் காரியங்கள் நடந்துவருவதிலும் நீங்களெல்லோரும் சிரத்தையுள்ளவர்களாக இருக்கவேண்டும். குடும்பத்திலொருவராவது மடத்தின் காரியங்களில் ஈடுபடவேண்டும். ஸ்ரீ திரிபுரசுந்தரி ஸமேத ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமியின் அனுக்கிரகம் உங்களுக்கு எக்காலத்திலும் ஏற்படும்."

———

## ஷஷ்ட்யப்த பூர்த்தி விழா

ஜய வருடம் வைகாசி மாதத்துடன் ஸ்வாமிகளுக்கு அறுபது ஆண்டுகள் நிறைந்ததை நாடெங்கும் மிகவும் விமரிசையாகவும் பக்தி சிரத்தையுடனும் கொண்டாட வேண்டுமென்று சிஷ்யர்கள் பலர் விருப்பம் கொண்டார்கள். ஆனால், படாடோபமான முறையில் தமக்கென எவ்விதக் கொண்டாட்டத்தையும் நடத்தக் கூடாதென ஸ்வாமிகள் அவ்வப்போது சிஷ்யர்களுக்கு வற்புறுத்தி வந்ததன் காரணமாக, சிஷ்யர்கள் அதை மிகவும் சாதாரணமான முறையில் 18-5-1954-இல் கொண்டாடினார்கள்.

அப்பொழுது ஸ்வாமிகள் முகாம் செய்திருந்த காஞ்சீபுரத்தில் சிஷ்யர்கள் ஆயிரக்கணக்காகக் கூடி ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தனர். அன்று விசேஷமான வைபவங்களெதுவும் அங்கு நடைபெறுவிடினும், ஸ்வாமிகளின் விருப்பப்படி பெரிய காஞ்சீபுரம் மடத்திலும், ஸ்வாமிகள் தங்கியிருந்த பாலாற்றங்கரையிலுள்ள **ஓரிக்கை (ஓரிரவிருக்கை)** என்னும் தலத்திலும் விசேஷமாகச் சமாராதனைகளும், நகரின் பல பாகங்களில் ஏழைகளுக்கு அன்னதானமும் நடைபெற்றன. அன்று, காஞ்சி **வரதராஜருடைய கருடோத்ஸவமும்** சேர்ந்ததால். ஏராளமான மக்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்கவந்தனர். ஆற்றங்கரையில் பிரத்யேகமாக அமைக்கப் பெற்ற ஓர் பர்ணசாலையில் அன்று ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமியின் நித்திய பூஜை நடைபெற்றது. பூஜை முடிவு பெற்றவுடன் அங்குக் கூடியிருந்த சிஷ்யர்கள் அந்த முக்கிய நாளில் தாங்கள் நடந்துகொள்ள வேண்டியதைப்பற்றி சில உபதேசங்கள் அருளவேண்டுமென்று ஸ்வாமிகளைக் கேட்டுக்கொண்டனர். அப்பொழுது ஸ்வாமிகள் தம் பிறந்தநாளை வைதிக முறையிலோ, லௌகிக முறையிலோ, ஆடம்பரத்துடன் நடத்தத் தாம் விரும்பவில்லையென்றும், நாட்டில் வேதக்கலையையும் பக்தி மார்க்கத்தையும் மக்களிடையே பரப்பவும், அழியாது அவைகளைக் காக்கவும், சிஷ்யர்கள் தங்களாலானதைச் செய்ய வேண்டுமென்றும், நிலம் பெற்றுள்ளவர்கள் அவற்றிற்கெனப் பூதானம் செய்யவேண்டுமென்றும் தாம் விரும்புவதாகவும் தெரிவித்தார்கள். ஸ்வாமிகளின் அவ்விருப்பப்படி அங்குக் கூடியிருந்த பிரமுகர்கள் அவரவர்கள் அளிக்கக்கூடிய பூமியின் அளவைக் குறிப்பிட்டு ஓர் ஜாப்தாவும் தயாரித்து, ஸ்வாமிகளின் முன்னிலையில் உடனடியாகவே சமர்ப்பணம் செய்தார்கள். மேலும், பென்ஷனர் ஜில்லா ஜட்ஜ் **எல். எஸ். பார்த்தசாரதி ஐயர்** தலைமையில் ஓர்

பிரசார கோஷ்டியும் ஓர் நிர்வாகக் குழுவும் அப்பொழுதே நிறுவப் பட்டன. அந்தக் கோஷ்டியார் தஞ்சை, திருச்சி முதலான ஜில் லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்து சிஷ்யர்களிடமிருந்து பூதா னம் பெற ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஸ்வாமிகளின் விருப் பத்தை முன்பே அறிந்திருந்த கோயமுத்தூர் வாசியான **மங்கை யர்க்கரசி** என்னும் மாது சிரோமணி காவிரி டெல்டா பிரதேசத் தில் திருவெம்பாவை-திருப்பாவை-திருமுறை ஆறங்க டிரஸ்டு என்னும் மற்றொரு தருமத்திற்கு ஒரு ஏக்கர் நிலத்தைத் தானமாக அளிப்பதாகக் கோயமுத்தூரிலிருந்து அன்று தந்தி மூலம் தெரி வித்தார். மற்றும் பல அன்பர்கள் இதற்கெனப் பூதானமும் நிதி யும் அளித்தனர். இதை நிர்வாகம் செய்யச் சிறந்த பக்தர்களில் ஒருவரான சிதம்பரம் நகை வியாபாரம் **செ. ரத்னசபாபதி செட்டியாரை** மானேஜிங் ட்ரஸ்டியாகக் கொண்ட ஓர் நிர்வாகக் குழுவை ஸ்வாமிகள் நியமனம் செய்துள்ளார்கள்.

அன்று ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வதற்காகச் சிஷ்யர் கள் சிலர் காசியிலிருந்து குடங்களில் கங்கை நீரைக் கொணர்ந் திருந்தனர். அந்தத் தீர்த்தத்தை ஸ்வாமிகள் தாமாகவே எடுத்து அபிஷேகம் செய்துகொண்டார்கள். சிஷ்யர்கள் சிலர் கொணர்ந்த காஷாய வஸ்திரங்களையும் ஸ்வாமிகள் ஏற்றுக்கொண்டார்கள். பக்தர்கள் அளித்த காணிக்கைகளையெல்லாம் வேதவித்பன்னர் களுக்கு ஸ்வாமிகள் பரிசாக அளித்துவிட்டார்கள். இந்த விழாவை யொட்டி ஸ்ரீ ஆசார்யர்கள் உத்திரவின் பேரில் காமகோடி கோசஸ்தானத்தாரால் ஸ்ரீ பிரம்மஸூத்திர சங்கர பாஷ்யம் டிப்பணியுடன் நூதனப்பதிப்பாக வெளியிடப்பட்டு ஸ்வாமிகளி டம் சமர்ப்பணம் செய்விக்கப்பட்டது.

அன்று, சென்னை நகரிலும், மற்றும் பல பாகங்களிலும் ஸ்வாமிகளின் சஷ்டயப்த பூர்த்தி எளிய முறையில் கொண்டாடப் பட்டது. ஆலயங்களில் அபிஷேகமும், பிரார்த்தனையும், சில விடங்களில்பொதுக்கூட்டங்களும் நடைபெற்றன.

கும்பகோணம் மடத்தில் நகர முத்ராதிகாரிகள் சங்கத்தார் இந்த விழாவை விமரிசையாகக் கொண்டாடினார்கள். ஹிந்து பத்திரிகையின் உதவி ஆசிரியர் **ரகுநாதையர்** அவ்விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசுகையில், இந்தச் சஷ்டயப்தபூர்த்தி விழா வானது மற்ற விழாக்களைப்போல் நமது திருப்திக்காக மட்டும் ஏற்பட்டதன்றென்றும், அது எதிர்காலத்தில் தேசமக்களின் க்ஷேமத்தைக் கருதிய ஓர் மகத்தான சம்பவம் என்றும், உலக விஷயங்களில் உழன்று விடுதலைக்கு மார்க்கமறியாமல் தவிப்போ ருக்கு ஓர் மார்க்கத்தைக் காட்டும் நமது ஆசார்யர்கள் போன்ற

மகான்கள் உலகில் அவதரித்திருப்பதால்தான் நாம் உஜ்ஜீவிக்க முடிகிறதென்றும் கூறினர். மேலும் ஸ்வாமிகளின் மகிமையைப் பற்றி உபயவேதாந்த **அக்னிஹோத்ரம் தாத்தாசார்ய** ஸ்வாமிகள், **காவேரிப்** பத்திரிகையின் ஆசிரியர் **என். ஆர். ராமாநுஜம்,** விற்பனை வரி அதிகாரி **கல்யாணசுந்தரமையர்,** மித்திரன் நிருபர் **என். ஸ்ரீநிவாசாசாரியர்,** சங்கீத வித்வான் **ராஜாமணி சாஸ்திரிகள்** முதலியோர் பேசினர்கள். அன்று நாகேச்வரஸ்வாமி கோயிலில் பெரியதிட்டத்தில் விசேஷ அபிஷேக ஆராதனையும் வேத பாராயணமும் ருத்ர ஹோமமும் நடைபெற்றன. அன்று மாலை 6 மணிக்கு அவ்வாலயத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் கவர்ன்மென்ட் கல்லூரித் தலைவர் **டாக்டர் எ. சங்கரன்** தலைமை வகித்தார். சுமார் ஐயாயிர மக்கள் அப்பொழுது ஸ்வாமிகளுக்குத் தங்கள் அஞ்சலியைச் செலுத்தினர்.

திருச்சியில் அத்வைதசபையின் ஆதரவில் **ஏ. வி. கோபாலாசாரியர்** தலைமையில் இந்த விழா கொண்டாடப்பட்டது. அங்கும் ருத்ர ஏகாதசி ஹோமம், வேதபாராயணம் முதலியன நடைபெற்றன.

தஞ்சைமக்கள் இவ்விழாவை மேலவீதி சங்கரமடத்தில் மிகவும் விசேஷமாகக் கொண்டாடினர்கள். அன்றிரவு பெரிய ஊர்வலமாக ஸ்வாமிகளின் படத்தை நான்கு பிரதான வீதிகளிலும் பக்தர்கள் பஜனைகோஷ்டியுடனும் வேதபாராயணங்களுடனும் வாத்தியகோஷத்துடனும் எடுத்துச்சென்றார்கள்.

ஸ்வாமிகளின் சஷ்ட்யப்தபூர்த்தி விழா சிதம்பரத்தில் மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. கீழவீதி எம். எஸ். வித்யா சாலையில் நகரசபை உபதலைவர் **டாக்டர் எஸ். நடராஜ ஜடாவல்லபர்** தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் கூடிற்று. இந்த விழாவை **கே. எஸ். கல்யாணஸ்வாமி தீக்ஷிதர், ஞானமூர்த்தி தீக்ஷிதர், ஸி. எஸ். ஸச்சிதானந்த தீக்ஷிதர், இராம தங்கஸாமி தீக்ஷிதர்** இவர்கள் முதன்மையாக இருந்து ஏற்பாடு செய்தனர். அண்ணாமலைச் சர்வகலா சாலை சம்ஸ்கிருதப் பேராசிரியர் **ஸி. எஸ். வேங்கடேச்வர சர்மா,** தமிழ்ப்பேராசிரியர் **இ. எஸ். வரதராஜய்யர்,** தத்துவப் பேராசிரியர் **ஸி. ராமலிங்கம்** மற்றும் **கே. முத்துகிருஷ்ணப்பிள்ளை** முதலியோர் ஆஸ்திகத்தைப் பரப்ப ஸ்வாமிகள் செய்துவரும் அரிய பெரிய சாதனைகளைப்பற்றி விவரித்துக் கூறி, ஸ்வாமிகள் ஓர் அவதார புருஷர் என்றும், அவர்கள் பல ஆண்டுகள் ஜீவித்திருந்து பாரத நாட்டிற்கு மேலும் பல நன்மைகளைச் செய்ய வேண்டுமென்றும், அம்பலத்தாடும் ஸ்ரீ நடராஜமூர்த்தியை வேண்டிக் கொண்டனர்.

புதுக்கோட்டையில் பென்ஷன் ஜட்ஜ் என். சேதுராமய்யர் தலைமையில் இந்த விழா மிகவும் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. அன்று காலையில் சங்கர ஆலயத்தில் ருத்ர ஏகாதசி ஹோமம் அர்ச்சனை முதலியனவும், மாலையில் குலபதி பாலைய்யா கலாசாலையில் ஒரு பொதுக்கூட்டமும் நடைபெற்றன. முன்னாள் கிராமாபிவிருத்தி அதிகாரி ஜி. வேங்கடேசன் ஸ்வாமிகளின் பிறப்பு, வளர்ப்பு, இளமைப் பருவம், வித்தியாப்பியாசம் முதலியவைகளைப்பற்றிப் பல ருசிகரமான சம்பவங்களை மிகவும் உருக்கமாக எடுத்துக்கூறினார். இரவில் ஸ்வாமிகளது படத்துடன் ஊர்வலம் ஒன்று பிரதான வீதிகளின் வழியே நடைபெற்றது.

மற்றும், புதுச்சேரி, நீடாமங்கலம், சீர்காழி, நாகப்பட்டினம் முதலான இடங்களில் இந்த வைபவம் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்பட்டதுடன், பக்தர்கள் அவரவர்களது சக்திக்குத் தக்கவாறு தங்கள் தங்கள் இல்லங்களிலும் இந்த விழாவை ஆத்மார்த்தமாகவும் கொண்டாடினார்கள்.

* * * * *

**காஞ்சியில் வேதவித்பன்னர்களின் சபை**

நமது பாரதநாட்டில் வேதங்களை முறையுடன் கற்று அவைகளுக்குரிய பாஷ்யங்களையும் ஆராய்ச்சி செய்து பொருள் விளக்கக் கூடிய பண்டிதர்களின் சபை ஒன்றை ஸ்வாமிகள் சென்ற 1955-ஆவது வருடம் ஜனவரி மாதம் 28-ஆம் தேதி காஞ்சியில் கூட்டி வைத்தார்கள். அந்தச் சபையில் கீழே குறிப்பிட்டுள்ள பண்டிதர்கள் நாட்டின் சிறந்த வேதவித்பன்னர்களெனத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவர்களுக்கெல்லாம் ஸ்வாமிகள் மதிப்பு மிக்க சம்மானங்களை அளித்தார்கள்:

**ரிக்வேதம் :—**

1. போலகம் சுந்தர சாஸ்திரிகள்.
2. கும்பகோணம் கச்சபேசுவர சாஸ்திரிகள்.
3. கேரளம் லக்கிடி சம்ஸ்கிருத பாடசாலையைச் சார்ந்த சங்கரன் நம்பூத்திரிபாட்.

**யஜுர் வேதம்:—**

1. ஸ்ரீமடம் ஆஸ்தான வித்வான் டி. வி. லக்ஷ்மீநாராயண சாஸ்திரிகள்.
2. ஸ்ரீரங்கம் சௌரிராஜ ஐயங்கார்.
3. புதுக்கோட்டை பஞ்சாபகேச தீக்ஷிதர்.

4. அய்யா தீக்ஷிதர்.
5. திருவிசநல்லூர் சீதாராம சாஸ்திரிகள்.
6. கும்பகோணம் அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாசாரியர்.
7. காட்டேரி ராமகிருஷ்ண சாஸ்திரிகள்.
8. மண்டகொளத்தூர் அருணசல சாஸ்திரிகள்.
9. மாயவரம் அண்ணுசாமி தீக்ஷிதர்.
10. விஜயவாடா குப்பா லக்ஷ்மண அவதானி.

**ஸாமவேதம் :—**

1. மன்னர்குடி ராமநாத தீக்ஷிதர்.
2. திருவானைக்கா சுப்பிரமண்ய தீக்ஷிதர்.
3. சென்னை, மேலமாம்பலம் அருணசல சாஸ்திரிகள்.

**சுக்ல யஜுர்வேதம்:—**

உத்தரப்பிரதேசம் ஜோதிர்மடம் தர்மப் பிரசாரகர் மாயாதத்த பாண்டேய சாஸ்திரி.

இந்த மகாசபை நடந்த பின்னர் 1955-ஆம் வருடம் ஜூன் மாதம் 15-ஆம் தேதி ஸ்வாமிகளது அறுபத்தோருவது அப்த பூர்த்தியை முன்னிட்டுக் காஞ்சியில் பண்டித சபையொன்று கூட்டப்பெற்றது. அந்தச் சபைக்குப் பாரதநாட்டின் பல ராஜ்யங்களிலிருந்து சிறந்த பண்டிதர்கள் ஐம்பது பேர்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தனர். வேதம், வேதாந்தம், நியாயம், வியாகரணம், மீமாம்ஸை, கவிதை முதலான கலைகளில் பரீக்ஷைகள் நடைபெற்றன. அச்சபைக்கு விஜயம் செய்திருந்த எல்லாப் பண்டிதர்களுக்கும் ஸ்வாமிகள் தக்க வெகுமானங்களை அளித்தார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் அறுபது வருடங்களுக்கு மேல் ஸ்ரீமடத்தின் ஆஸ்தான வித்வத் சபையில் பண்டிதராக இருந்து பண்டிதராக இருந்து பணியாற்றிவரும் கும்பகோணம் **வாஜபேயம் ஸ்ரீநிவாஸ தாதாசாரியருக்கு** ஸ்வாமிகள் ஓர் கல்லிழைத்த தங்க ஆபரணத்தை வெகுமதியாக வழங்கினார்கள்.

* * * * *

## அறிஞர்களின் சந்திப்பு

நம் ஸ்வாமிகள் காஞ்சிக்கு விஜயம் செய்ததுமுதல் ஒவ்வொரு நாளும் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் சிஷ்யர்கள் நூற்றுக் கணக்காக அவர்களைத் தரிசிக்க வருவதும், அவர்கள் யாவருக்கும் ஸ்வாமிகள் தரிசனம் அளித்து ஒவ்வொருவரின் குறைகளையும்

நேரில் விசாரித்து அவரவர்களுக்குத் தக்க உபதேச மொழிகளைக் கூறி வருவதும் உலகமறிந்ததேயாகும். இவர்களைத் தவிர பல பெரியோர்களும் மேல்நாட்டவர்களும் அடிக்கடி ஸ்வாமிகளைக் கண்டு அவர்களுடன் உரையாடி வருவதும் குறிப்பிடத்தக்கதாம்.

1955-ஆவது வருடம் பிப்ரவரி மாதம் 15-ஆம் தேதி ஸ்வாமிகளை **வானமாமலை ஸ்ரீஜீயர் ஸ்வாமிகள்** காஞ்சியில் சந்தித்து அவர்களோடு ஒரு மணி நேரம் உரையாடிக்கொண்டிருந்தார்கள். காலத்திற்கேற்றவாறு நடைபெறவேண்டிய தர்மப்பிரசாரத்தைப் பற்றி இருமகான்களும் அப்போது கலந்தாலோசித்தார்களெனக் கூறப்படுகிறது.

சென்னை ராஜ்ய கவர்னர் **ஸ்ரீ பிரகாசாவும்** நம் ஸ்வாமிகளை 1955-ஆம் வருடம் செப்டம்பர் 25-ஆம் தேதி சந்தித்து அவர்களிடம் வெகு நேரம் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்.

1956-ஆவது வருடம் ஜூன் மாதம் 7-ஆம் தேதி **விநோபாபாவேக்கும்** நமது ஸ்வாமிகளுக்கும் நடைபெற்ற சந்திப்புச் சரித்திரப் பிரசித்தி பெற்ற ஓர் நிகழ்ச்சியாகும். இந்தச் சந்திப்பில் நடைபெற்ற சம்பாஷணை கல்கி பத்திரிகையின் 1—7—56 இதழில் வெளியாகியுள்ளது.

ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்த மேற்குநாட்டைச் சேர்ந்தவர்களில் இருவரைப் பற்றிக் கீழே குறிப்பிடப்பட்டுள்ளது.

1954-ஆவது வருடம் ஜூலை மாதம் **ஹவர்டு கான்** (Howard Conn) என்னும் அமெரிக்கப் பாதிரியார் ஸ்வாமிகளைச் சந்தித்த பொழுது அமெரிக்கர்களது ஆன்மிக வாழ்க்கைக்கு ஓர் உபதேசமருள வெண்டுமென ஸ்வாமிகளிடம் அவர் விண்ணப்பித்துக் கொள்ள அவர்கள் மனமுவந்து கீழேகண்ட செய்தியை விடுத்தார்கள்.

"The God is watching you in all that you do.
Whatever you do, be conscious of His presence."

சிக்காகோ சர்வ கலாசாலையைச் சார்ந்த **மில்டன் சிங்கர்** (Milton Singer) என்னும் பேராசிரியர் ஸ்வாமிகளை 1955-ஆவது வருடம் அக்டோபர் மாதத்தில் சந்தித்ததைப்பற்றி அவர் ஒரு நண்பருக்கு எழுதியுள்ள கடிதத்தில் கீழேகண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

"Before I went to India, I had heard and read much about the great "Soul Force" of its Holy Men and Saints; but I had assumed that this was something in the ancient past. And it was not until I had met

Sankaracharya that I realised, it was still a part of the living force of Hinduism to day."

* * * * *

**அத்வைத சபையின் வைர விழா**

அத்வைத சபையின் பொன்விழா சென்ற 1945-வது ஆண்டில் கும்பகோணத்தில் நடைபெற்றதைப்பற்றி முன்பகுதிகளில் கூறப்பட்டுள்ளது. சபையின் வைர விழாவைக் காஞ்சீபுரத்தில் நடத்த வேண்டுமென்று ஸ்வாமிகள் விருப்பம் கொண்டார்கள். அவர்களது விருப்பத்திற்கிணங்க அவர்கள் அடிக்கடி தங்கி வரும் **சிவாஸ்தானம்** என்னும் க்ஷேத்திரத்தில் சபை நடைபெறுவதற்குப் பெரியதொரு அலங்காரக் கொட்டகை அமைக்கப்பெற்றது. 18—3—1956 முதல் 25—3—1956 வரை இந்த வைரவிழாவானது அவ்விடம் நடைபெற்றது. ராஜ்யத்தின் பல பாகங்களிலிருந்தும் பல வித்வான்கள் சபையின் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார்கள். இந்த வைரவிழாவை யொட்டி வைரக்கற்கள் இழைத்த ருத்ராக்ஷ மாலை ஒன்றை ஸ்வாமிகளுக்குச் சிஷ்யர்கள் சமர்ப்பணம் செய்தார்கள். ஸ்வாமிகள் விழாவைத் துவக்கிவைத்துப் பேசுகையில் உபநிஷத்துக்களின் ஆத்ம ஒளியை உலகிற்குப் பரப்புவதே அத்வைத சபையின் கடமையாகுமென்றும், **ஆத்மவத் ஸர்வ பூதானி** என்னும் அத்வைத சித்தாந்தைப் பின்பற்றும் வகையில் தன்னைத் தானே ஒருவன் நேசிப்பதுபோல் பிற ஜனங்களையும் மனிதன் நேசிக்க வேண்டுமென்றும், நமது அன்றாட வாழ்க்கையில் துன்பங்களில் உழலும் மக்களுக்கு ஏதாவதொரு வகையில் உதவி செய்யும் பணியை ஒவ்வொருவரும் ஏற்கவேண்டுமென்றும் கூறினார்கள். மேலும் அத்வைத மதத்திலிருந்து வேறுபட்ட மதங்கள் பல இருக்கின்றனவென்றும் அந்தச் சித்தாந்தங்களைக் கடைப்பிடிக்கும் அறிவாளிகளுடன் அத்வைதிகள் கலந்து வேற்றுமைக்கான காரணங்களை அறிய முயலவேண்டுமென்றும், அப்பொழுதுதான் அத்வைத சித்தாந்தம் கூர்மையடையுமென்றும் கூறினார்கள். அந்த நோக்கத்தைச் செய்கையில் காட்டும் வகையில் அதுசமயம் ஸ்வாமிகளைச் சந்திக்கக் காஞ்சிக்கு வந்திருந்த மத்வ மடாதிபதிகளான **உடுப்பி ஸ்ரீ பண்டார்கரே ஸ்ரீ வித்யாமான்ய தீர்த்த ஸ்வாமிகளை** அதே சபாமண்டபத்தில் த்வைத சித்தாந்தத்தை விளக்க அனுமதியளித்து, அப்பெரியாரின் அரிய உரைகளைப் பண்டிதர்களும் மற்றோரும் கேட்கும்படி செய்தார்கள். மேலும் அந்த

மடாதிபதிகளுக்குப் பொன்னுடை போர்த்தும்படி செய்து அவர்களைச் சிறப்பித்தார்கள். ஸ்வாமிகளின் இப் பரந்த நோக்கத்தை யாவரும் புகழ்ந்தார்கள். இவ்விழாவை யொட்டிச் சபையின் காரியதரிசியான எஞ்சினியர் எஸ். வைத்யநாத ஐயருக்கு ஸ்வாமிகள் 'அத்வைத ஸேவாமணி' என்னும் பட்டத்தை அளித்தார்கள்.

இந்த விழாவில் கலந்துகொண்ட பண்டிதர்கள் சிலருக்கு வைரம் பதித்த தங்கத் தோடாக்களையும், பலருக்கு வைரம் பதித்த மோதிரங்களையும் ஸ்வாமிகள் பரிசாக வழங்கினார்கள். மேலும், வழக்கம்போல் கொடுக்கும் சம்பாவனையைப்போல் இரு மடங்கு சம்பாவனையை அவ்வருடம் பண்டிதர்களுக்குக் கொடுக்கவும் ஸ்வாமிகள் கட்டளையிட்டார்கள்.

இந்த விழாவை அலங்கரித்த நூற்றுக்கணக்கான பண்டிதர்களுள் விழாவில் தீவிர பங்கெடுத்துக்கொண்டு சொற்பொழிவாற்றிய மகாபண்டிதர்களின் பெயர்களைக் கீழே காணலாம்.

1. சாஸ்த்ர ரத்னாகரம் மகாமகோபாத்யாய என். எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள்.
2. சாஸ்த்ர ரத்னாகரம் போலகம் சுந்தர சாஸ்திரிகள்.
3. சாஸ்த்ர ரத்னாகரம் ஸ்ரீ மடம் ஆஸ்தான வித்வான் டி.வி. லக்ஷ்மீநாராயண சாஸ்திரிகள்.
4. சாஸ்த்ர ரத்னாகரம் போலகம் ராம சாஸ்திரிகள்.
5. பண்டிதராஜ பிராந்தியங்கரை சுப்பிரமண்ய சாஸ்திரிகள்.
6. பண்டிதராஜ வேப்பத்தூர் சுப்பிரமண்ய சாஸ்திரிகள்.
7. வேப்பத்தூர் வைத்யநாத சாஸ்திரிகள்.
8. திருவையாறு பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.
9. தஞ்சாவூர் முத்துகிருஷ்ண சாஸ்திரிகள்.
10. ஆங்கரை ரங்கஸ்வாமி சாஸ்திரிகள்.
11. மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் ராமமூர்த்தி சாஸ்திரிகள்.
12. இஞ்சிக்கொல்லை ஆத்ம வித்யா பூஷணம் வி. ஜகதீச்வர சாஸ்திரிகள்.
13. பழூர் பாடசாலை சுப்பிரமண்ய சாஸ்திரிகள்.
14. மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்.
15. புதுக்கோட்டை பஞ்சாபகேச தீக்ஷிதர்.
16. மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் பிரின்ஸிபால் கெ. பால சுப்ரமண்ய சாஸ்திரிகள்.

இந்த விழாவின் நடவடிக்கைகளையும், ஸ்வாமிகளின் சொற்பொழிவுகளையும், சபையைத் தொடங்கிவைத்த பிரமுகர்களின்

வரலாறுகளையும், சபையின் முன்னுள் பண்டிதர்கள், தற்கால பண்டிதர்கள் இவர்களது குறிப்புகளையும் விளக்கி வைரவிழா மலரொன்று காமகோடி கோசஸ்தானத்தாரால் வெளியிடப் பட்டுள்ளது.

## 1954, 1955, 1956-வது வருடங்களில் காஞ்சியில்

இந்த மூன்று வருடங்களிலும் ஸ்வாமிகள் காஞ்சியிலேயே தங்கி அவ்வருடங்களின் சாதுர்மாஸ சங்கல்பங்களை அவ்விடத் திலேயே முடித்துக்கொண்டார்கள். 1956-ஆவது வருட நவராத் திரி விழா அம்பி கிராமத்தில் கொண்டாடப்பட்டது. தெய்வ வழி பாடு சம்பந்தமாய் அவ்வப்போது ஸ்வாமிகள் பல அறிக்கைகளை விடுத்து வந்தார்கள். 1955-ஆவது வருட இறுதியிலிருந்து பக்கத்துக் கிராமங்களின் மக்களின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சிற்சில ஊர்களுக்கு ஸ்வாமிகள் சென்றுவந்தார்கள். ஸ்வாமி கள் காஞ்சியில் தங்கியிருக்கும் நினைவாகப் பெரிய காஞ்சீபுரம் கங்கை கொண்டான் மண்டபத்திற்கு எதிராக உள்ள ஸ்ரீ மடத்தில் நுட்பமான சிற்ப வேலைப்பாடுகளுடன் 16 கால் மண்டபம் ஒன்றை அமைக்க சிஷ்யர்கள் ஏற்பாடு செய்தார்கள்.

1956-ஆவது வருடம் பிப்ரவரி மாதம் 25-ஆம் தேதி கும்ப கோணத்தில் நடைபெற்ற மகாமக விழாவின்பொழுது ஸ்வாமி களது உடல் நிலை குன்றியிருந்ததால் அச்சமயம் ஸ்வாமிகள் கும்ப கோணத்திற்கு விஜயம் செய்யவில்லை. சென்ற நான்கு மகாமகங் களில் அங்கு விஜயம்செய்து மக்களுக்குத் தர்சனம் அளித்த ஸ்வாமிகளை அவ்வருடம் அங்கு காணாததால் பல பக்தர்கள் ஏமாற்றமடைய நேர்ந்தது. 'அன்று விடியுமுன்னர் மகாமகக் குளத்தில் தீர்த்தம் எடுத்து அந்தத் தீர்த்தத்தை மோட்டார் வண்டி யில் பகல் 12 மணிக்குள் காஞ்சீபுரத்திற்கு அடுத்த சிவாஸ்தானத் திற்குக் கொண்டுவரப்பட்டது. ஸ்வாமிகள் அப்புனித நீரால் தம் மாத்யான்னிக ஸ்நானத்தை அன்று முடித்துக்கொண்டார்கள். கும்பகோணம் மடத்தில் சிஷ்யகோடிகளின் ஒத்துழைப்புடன் ஏழு நாட்களுக்குப் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளிக்கப் பட்டது. ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களுக்கு மடத்தில் தங்க வசதியளிக்கப்பட்டது.

## சம்ஸ்கிருத கமிஷனுக்கு பேட்டியளித்தது

இந்திய யூனியன் சர்க்காரால் நியமனம் செய்யப்பட்ட ஸம்ஸ்கிருத கமிஷன் தலைவர் டாக்டர் ஸுநீதி குமார் சட்டர்ஜியும்

மற்ற அங்கத்தினர்களும் ஸ்வாமிகளை 1957-ஆவது வருடம் பிப்ரவரி மாதம் 7-ஆம் தேதி காஞ்சியில் தரிசித்து நம் நாட்டில் சம்ஸ்கிருதம் அபிவிருத்தியடைய வேண்டியதற்கான ஸ்வாமிகளின் ஆலோசனைகளைக் கேட்டறிந்தனர்.

சம்ஸ்கிருத கல்விச்சாலைகளின் நவீன பாடமுறைகளைச் சேர்த்துப் பாடங்களைக் கற்றுக் கொடுப்பதில் யாதொரு தவறுமில்லையென்றும் ஆனால் பழைய முறையில் பாடம் கற்பிக்கும் உயரிய பழக்கத்தை மாற்றக் கூடாதென்றும் அம்முறையில் சில வித்யாசாலைகளைத் தனிமையாக அமைத்துப் பிராசீன வித்வான்களை ஆதரிக்க வேண்டுமென்றும், இவ்வகையில் செய்யும் எந்த மாறுதலையும் மிகவும் நிதானத்துடன் செய்யவேண்டுமென்றும், ஸ்வாமிகள் கூறினார்கள். பாரத நாட்டில் ஆசிரியத் தொழில் புரியும் எல்லோருக்கும் சம்ஸ்கிருதத்தில் ஆரம்பப் பயிற்சியாவது தேவையாக இருக்க வேண்டுமென்றும் கூறினார்கள். மேலும் ஸ்வாமிகள் கூறுகையில் ஐ. ஏ. எஸ். பரீக்ஷைக்கு மனு செய்து கொள்ளுகிறவர்கள் சிறிது சம்ஸ்கிருதப் பயிற்சியுள்ளவர்களாக இருக்க வேண்டுமென்றும் கூறினார்கள்.

கமிஷன் அங்கத்தினர் ஒருவரும் சென்னை சர்வகலாசாலை சம்ஸ்கிருதப் பிரிவின் தலைவருமான **டாக்டர் வெ. ராகவன்** கமிஷன் செய்யப்போகும் வேலைகளைப்பற்றிய விவரங்களை ஸ்வாமிகளிடம் எடுத்துக்கூறினார். ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின் வெளியீடுகள் அங்கத்தினர்களுக்கு அளிக்கப்பட்டன. ஸ்வாமிகளின் தரிசனத்தினாலும் அவர்களது உயரிய ஆலோசனைகளாலும் தாங்கள் பெரும் பயனையடைந்ததாகக் கமிஷன் தலைவர் கூறினார்.

* * * * *

ஸ்வாமிகள் 1957-ஆவது வருடம் பிப்ரவரி மாதம் பின்பகுதியில் வடஆர்க்காடு ஜில்லா கலவை என்னும் ஊருக்கு விஜயம் செய்து அங்கு நிர்விகல்ப ஸமாதியில் அமைந்திருக்கும் 67-ஆவது பீடாதிபர்களான தம் குருநாதருடையதும் 66-ஆவது பீடாதிபர்களான பரமகுருநாதருடையதுமான இரண்டு அதிஷ்டானங்களையும் தரிசனம் செய்து கொண்டார்கள். இன்றைக்கு எண்பது ஆண்டுகளுக்கு முன்னர் நமது ஸ்வாமிகள் இக்கலவை என்னும் இடத்தில் தான் பீடத்தில் அமர்ந்தார்கள் என்பதை வாசகர்களின் நினைவுக்குக் கொண்டுவருகிறோம்.

ஸ்வாமிகள் தமது பரம குருவினுடைய வருஷ ஆராதனையைக் கலவைக்கு 3 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள நல்லூர் என்னும் கிராமத்தில் நடத்தினார்கள். குருவின் ஆராதனையை மார்ச் மாதம்

2-ஆம் தேதி கலவையில் நடத்தினார்கள். அன்று சென்னையி லுள்ள பக்தர்கள் நூற்றுக்கணக்காக ஸ்வாமிகளைத் தரிசித்து அவர்களுக்குப் பிக்ஷை நடத்திவைத்தார்கள்.

## 12. அன்றாட நடப்பு

ஸ்வாமிகள் ஒவ்வொரு நாளையும் சாதாரணமாகக் கழிக்கும் முறையைப் பற்றிச் சிலவற்றைக் கவனிப்போம். ஒவ்வொரு நாளும் விடியற் காலை ப்ரம்ம முகூர்த்தம் எனக் கூறப் படும் வேளையான சுமார் 4–30 மணிக்கு மடத்தில் **நகரா** என்னும் முரசொலி முழங்கும். அதை அடுத்து **டங்கா** என்னும் வாத்யமும் வாசிக்கப்பெறும். இவை நம் நாட்டுப் பழைய அரசாங்கங் களின் அரண்மனைகளில் வாசிக்கப் பெறுவது வழக்கம். கலைக் கோவில்களாக விளங்கி வரும் மடாலயங்களிலும் அந்தச் சின்னங்கள் முழங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பழைய காலத்து மன்னர்கள் அவற்றிலும் அவ்வழக்கத்தை அமைத்தனர் போலும். இவ்வொலிகளைக் கேட்டதும் மடத்தின் சிப்பந்திகள் யாவரும் விழித்துக்கொண்டு, பக்கங்களிலுள்ள குளங்களிலோ, நதிகளிலோ நீராடி அவரவர்களுக்குரிய அனுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டு, தத்தம் வேலைகளுக்குத் தயாராக வந்து விடுவார்கள். ஸ்வாமிகளும் அவர்களுக்கு முந்தியே விழித் தெழுந்து சிறிது நேரம் த்யானத்தில் அமர்ந்திருப்பார்கள். பின்னர் அவர்களும் நீராடித் தாம் உபாசிக்கும் தெய்வமான ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் சந்நிதியில் **கோ பூஜை** நடைபெறுவதைக் காண அங்கு வருவார்கள். அந்தப் பூஜையைச் செய்கிறவர் நல்ல வேதப் பயிற்சியும், ஆசாரசீலமும் உள்ளவராக இருப்பார். அந்தப் பூஜைக்கென மடத்தில் காராம் பசு எப்பொழுதும் வளர்க்கப்பட்டு வருகிறது. கோ பூஜையை அடுத்துக் **கஜ பூஜையும்** நடைபெறும். அப்பொழுது சந்நிதியில் திரை அகற்றப்படும். அன்றாடம் வெளியூர்களிலிருந்தும், உள்ளூரிலிருந்தும் தரிசனத்திற்கு வரும் பக்தர்கள் பலரும் நீராடிப் புனிதமான இந்தப் பூஜையைத் தரிசித்துக்கொள்வார்கள். இதையே விச்வரூபதர்சனம் என்றும் சொல்வார்கள்.

ஸ்வாமிகளின் காலை நிஷ்டை, அநுஷ்டானம் ஆகியவை முடிந்தவுடன் அன்றைய திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்னும் பஞ்சாங்க (ஐந்து அங்கங்கள்) சிரவணம் நடைபெறும். பின்பு காலை சுமார் 7-30 மணி முதல் வேதாந்த

சாஸ்திர பாடங்கள் நடைபெறும். ஸ்வாமிகளே குறிப்பிட்ட சில சிஷ்யர்களுக்கென ப்ரம்ம சூத்திர பாஷ்ய பாடத்தை உரைப் பார்கள். சாஸ்திர விற்பன்னர்களான பண்டிதர்கள் ஸ்வாமி களின் திருவாக்கிலிருந்து வரும் அறிவுரைகளைக் கேட்டுப் பெரும் பயனை அடைவார்கள். அப்பொழுது தத்துவ ஆராய்ச்சி களும், நூல்களின் ஆராய்ச்சிகளும் நடைபெறும். (ஸ்வாமிகள் விஜயம் செய்யும் இடங்களுக்கெல்லாம் உயர்ந்த கிரந்தங்கள் அடங்கிய நடமாடும் நூல் நிலையம் ஒன்றும் போய்க் கொண்டே இருக்கும்.)

காலை சுமார் 9 மணிக்கு ஸ்வாமிகள் பக்தர்களுக்குத் தரிசனம் அளிப்பதெற்கென, அவர்கள் வசிக்கும் தனிமையான இடத்தி லிருந்து வெளிவருவார்கள். நாள் தவறாது நூற்றுக்கணக்கான பக்தர்கள் தரிசனத்திற்குத் தினந்தோறும் மடத்துக்கு வந்தவண் ணம் இருப்பார்கள். காலை நேரத்தில் ஸ்வாமிகள் வடமொழி யிலேயே உரையாடுவார்கள். அவர்கள் மிகவும் எளிய நடையில் உரையாடுவது மக்கள் எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதாகவே இருக்கும். அவ்விதம் புரிந்துகொள்ள முடியாதவருக்குப் பக்கத்தி லிருப்பவர்கள் ஸ்வாமிகளின் உரைகளை மொழி பெயர்த்துக் கூறு வார்கள். பக்தர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் ஸ்வாமிகள் விவரமாக விசாரித்து, அவரவர்களின் சந்தேகங்களையோ, குறை களையோ கேட்டு அவைகளைப் போக்கும் வகையில் அவர்களுக்குத் தக்க உபதேச மொழிகளைக் கூறுவார்கள்.

இவ்வாறு வருபவர்களுள் ஞான வைராக்யத்தை நாடி வருப வர்கள் பலர்; நல்ல மக்கட்பேற்றைப் பெற்று அம்மக்கள் நல்ல புத்திமான்களாக விளங்கி எக் குறையுமில்லாமல் சந்ததிகள் வளர வேண்டுமென்று விரும்புபவர் பலர்; வியாதியின்றிச் சுக வாழ்வு வாழவேண்டுமென்று நினைப்பவர் பலர்; ஸ்வாமிகளது தரிசனத்தினாலேயே எல்லா நற்பயன்களையும் அடையலா மென்னும் நம்பிக்கையுடன் வருபவர் பலர்; இவ்விதமாக வரும் பலதரப்பட்ட பக்தர்களை அங்குக் காணலாம். மேலும் ஆலயத் திருப்பணி, பஜனை மடத் திருப்பணி முதலான பொதுக் காரியங் களில் ஈடுபடுபவர்களும் ஸ்வாமிகளது ஆசியைப் பெற்றுப்போக வருவதுண்டு. பல கலைகளைக் கற்ற வித்வான்களும் தங்கள் திறன் களை ஸ்வாமிகள் முன்னிலையில் வெளிப்படுத்தும் அவாவுடன் அங்கு வந்திருப்பார்கள். திருப்பணிகளுக்கும், தர்மகாரியங்களுக் கும் மடத்தின் செல்வ நிலையை அனுசரித்துப் பொருளுதவியும் செய்ய மடத்தின் அதிகாரிகளுக்கு ஸ்வாமிகள் கட்டளை

யிடுவார்கள். வித்வான்களும் தங்கள் திறமைக்குத் தக்கவாறு சம்மானங்களைப் பெற்றுப் போவார்கள்.

ஸ்வாமிகள் மத்தியான்ன ஸ்நானத்தையும், அனுஷ்டானத்தையும் முடித்துக் கொண்டு நித்ய பூஜைக்கென ஸ்வாமி சந்நிதிக்கு எழுந்தருளுவார்கள். அப்பொழுது பக்தர் ஒருவர் ஸ்வாமிகளுக்குத் தாம் செய்ய உத்தேசித்திருக்கும் பிக்ஷையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென விண்ணப்பித்துக் கொள்வார். அவ்வாறு வேண்டிக் கொள்பவர்கள் பந்துக்களுடனும், மித்திரர்களுடனும் அங்கு வந்து, பூர்ண கும்பம், வேத கோஷம், வாத்ய கோஷம் இவை சகிதம் பக்தியுடன் பிக்ஷா வந்தனம் செய்வது ஓர் ஒப்பற்றக் காட்சியாக விளங்கும். பகல் சுமார் 12-30 மணிக்குப் பூஜை தொடங்கி 3 மணிவரை நடைபெறும். பூஜையைக்காண நூற்றுக்கணக்கான பக்தர்கள் அங்குக் கூடியிருப்பார்கள். அப்பொழுது வேத கோஷங்கள், சங்கீத கோஷங்கள், வாத்ய கோஷங்கள் முழங்கும். பக்தர்கள் சிலர் குருநாதரின் பாதுகைகளுக்குப் புஷ்பங்களினாலும், தங்கம், வெள்ளி முதலான நாணயங்களினாலும் அர்ச்சனை செய்வார்கள். பூஜை முடிவு பெற்றவுடன் யாவருக்கும் விபூதி, குங்குமம், அக்ஷதைப் பிரசாதம் வழங்கப் பெறும். காலை முதல் எவ்வித ஆகாரமும் உட்கொள்ளாதவர்களுக்குப் புனிதமான அபிஷேக தீர்த்தத்தை ஸ்வாமிகள் தமது திருக்கரத்தினாலேயே வழங்குவார்கள். பின்னர் யாவருக்கும் உணவு அளிக்கப்பெறும். அப்பொழுது ஸ்வாமிகள் சுமார் 15 நிமிடங்கள் ஓய்வு எடுத்துக் கொள்வார்கள். இந்த ஓய்வு நேரத்தில் மனமிருந்தால் சிறிது சாத்விக உணவைப் பிக்ஷையாக ஏற்றுக்கொள்வார்கள். இந்த ஓய்வு நேரம் முடிந்தவுடன், மடத்தின் நிர்வாகிகள் அன்று வந்த தபால்களை எடுத்து வந்து, ஸ்வாமிகளின் முன்னிலையில் வாசிப்பார்கள். ஸ்வாமிகள் அப்பொழுதே அவைகளுக்கு அனுப்ப வேண்டிய விடைகளைப்பற்றிக் கூறிவிடுவார்கள். இந்த விடைகளை அந்த நிர்வாகி குறிப்பெடுத்துக்கொள்வார். நூற்றுக்கணக்காக மடத்துக்குத் தனி பக்தர்களிடமிருந்தும், சங்கங்களிலிருந்தும் கடிதங்கள் வந்தவாறே இருக்கும். தங்களுக்குள்ள பல வகையான சந்தேகங்களைத் தீர்த்துவைக்க வேண்டுமெனச் சிஷ்யர்கள் விண்ணப்பம் செய்துகொண்டிருப்பார்கள். இவை முடிந்த பின்னர் மடத்தின் நிர்வாக விஷயங்களைப் பற்றிச் சிறிது நேரம் ஸ்ரீமடம் மானேஜருடன் ஆலோசனைகள் நடைபெறும். அதன் பின்னர் அன்று பத்திரிகைகளில் வந்திருக்கும் முக்கியமான உலக விஷயங்

களைப் பற்றி ஒருவர் சிறிது நேரம் ஸ்வாமிகளிடம் விளக்கம் கூறுவார் பின்னர் சில நிமிடங்கள் ஓய்வு.

மாலை சுமார் 5 மணிக்குப் பக்தர்களுக்கு மறுபடியும் தரிசனம் அளிப்பதற்கென ஸ்வாமிகள் வெளியில் வருவார்கள். காலையை விட மாலையில் தரிசனத்திற்கு வருபவர்கள் தொகை அதிகமாயிருக்கும். பாரத நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பல்வேறு பாஷைகளைப் பேசுகின்ற பக்தர்கள் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்திருப்பார்கள். அந்நேரத்தில் தினந்தோறும் ஸ்வாமிகள் அந்தஅந்தத் தேச பாஷைகளில், அவரவர்களுடன் பேசி அவர்களுக்கெல்லாம் உபதேச மொழிகளைக் கூறி விடைகொடுத்தனுப்புவார்கள். பிறகு ஸ்வாமிகள் தமது மாலைநேர ஸ்நானத்திற்குச் சென்று மாலை ஜபம், த்யானம் முதலியவைகளை முடித்துக்கொள்வார்கள். ஸ்வாமிகள் ஸ்நானத்திற்குச் செல்லும் முன் ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் சந்நிதியில் கஜ பூஜை நடைபெறும். அப்பொழுது மடத்தின் பணியாளர்கள் யாவரும் அங்குக் கூடியிருக்க வேண்டுமென்பது ஒரு நியதி. அப்பொழுது வேத கோஷங்கள், தோத்திரப் பாடல்கள் இவை சிறிதுநேரம் நடைபெறும். மடத்தின் பொக்கிஷதார் அன்று மடத்திற்கு வந்த வருமானத்தையும், ஏற்பட்ட செலவையும் கணக்குப் புத்தகத்திலிருந்து ஸ்வாமி சந்நிதியில் வாசிப்பார். கஜ பூஜை முடிவு பெற்றவுடன் பக்தர்கள் அவரவர்களுக்குரிய சந்தியா வந்தனம், பிரார்த்தனை முதலிய வழிபாடுகளைச் செய்ய வெளி இடங்களுக்குச் சென்று வருவார்கள். இந்தச் சமயம் ஸ்வாமிகள் சுமார் ஒரு மணி நேரம் த்யானத்தில் அமர்ந்திருப்பார்கள்.

மறுபடியும் இரவு சுமார் 8 மணிக்கு ஸ்வாமி சந்நிதானத்தில் பக்தர்கள் கூடியிருப்பார்கள். ஸ்வாமிகளும் அப்பொழுது சந்நிதிக்கு விஜயம் செய்து இரவு பூஜையைத் தொடங்குவார்கள். இரவு பூஜை சாதாரண நாட்களில் சுமார் ஒரு மணி நேரம் நடைபெறும். வெள்ளிக்கிழமை, நவராத்திரி, பிரதோஷம், பௌர்ணமி இந்த விசேஷ நாட்களில் இந்தப் பூஜை சுமார் நான்கு மணி நேரம் நடைபெறும். பூஜை முடிந்த பின்னர் பக்தர்களுக்கு விபூதி, மந்திராக்ஷதை, குங்குமம் முதலான பிரசாதங்கள் வழங்கப்பெறும். பின்னர் மாலையிலிருந்து காத்திருந்தவர்களுக்கு ஸ்வாமிகள் அன்புடன் விடை கொடுத்து அனுப்புவார்கள். அப்பொழுது இரவு 11 மணியாகிவிடும்.

ஸ்வாமிகளைத் தனிமையில் காண முன்னேற்பாடுடன் சில பக்தர்கள் அந்த நேரத்தில் காத்திருப்பார்கள். அவர்களுக்கு ஸ்வாமிகள் தனித் தனியே தரிசனம் அளிப்பார்கள். மத சம்பந்த

மான பிரசாரங்களை வகுக்க அவ்வகையில் தொண்டாற்றும் சில பக்தர்களுடன் ஆலோசனைகள் நடத்துவதும் அந்தச் சமயத்தில் தான். பொது மக்களுக்கு மத சம்பந்தமான சில கட்டளைகளையிடு வதற்கு அப்பொழுது அறிக்கைகள் தயாரிக்கப்பெறும். இவ்வித அறிக்கைகளை ஸ்வாமிகளே கூறுவார்கள். சிஷ்யர்கள் அவை களைக் குறிப்பெடுத்துக் கொள்வார்கள். அவை பின்னர் துண்டுப் பிரசுரங்கள் மூலமும், பத்திரிகைகளின் வாயிலாகவும் வெளி வரும். இந்த ஆலோசனைகள் முடிவடையும் பொழுது இரவு சுமார் ஒரு மணிக்கு மேலாகிவிடும். அதன் பின்னர் ஸ்வாமிகள் தாம் அணிந்துள்ள ஒரே வஸ்திரத்தின் ஒரு பாகத்தை வெறும் தரையிலோ அல்லது ஒரு பலகையின் மீதோ விரித்துச் சுமார் ஓரிரண்டு மணி நேரம் கண்ணயர்வார்கள். மறுபடியும் காலை சுமார் 4 மணிக்கே ஸ்வாமிகள் வெகு உற்சாகத்துடன் காட்சி யளிப்பதைக் காண யாவருக்கும் வியப்பாகவே இருக்கும். தமக் கென உடலை வளர்க்காத தியாகிகளின் நிலை இவ்வாருகவே இருக்கு மென்பதில் ஐயமில்லை. ஸ்வாமிகள் புரியும் எந்தச் சிறிய செய லும் உலக நன்மைக்கே என்பதை ஸ்வாமிகளைத் தரிசித்தவர்கள் அறிந்திருப்பார்கள். உலகெலாம் துன்பமின்றிச் சுகமாக வாழ வேண்டுமென்பதே அவர்கள் ஒவ்வொரு நாளும் தாம் வழிபடும் தெய்வத்தின் முன்னிலையில் மூன்று முறை செய்துகொள்ளும் பிரார்த்தனையாகும்.



## ஸ்ரீ ஆசார்யர்களின் பீடாரோஹண பொன்விழா [1907—1957]

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பீடத்தில் அமர்ந்து 12-3-1957-ஆம் தேதியுடன் ஐம்பது ஆண்டுகள் பூர்த்தியடைந்துவிட்டன. இந்தப் பொன்விழாவைக்கொண்டாட ஸ்ரீமடத்தின் சிஷ்யர்களும் ஸ்வாமிகளிடம் மிகுந்த ஈடுபாடுள்ள பக்தர்களும் மிகப் பெரிய அளவில் ஏற்பாடுகளை அகில இந்திய ரீதியில் செய்யத் தொடங்கினார்கள். சென்னை, கல்கத்தா, டில்லி பம்பாய், காசி, நாகபுர், ஹைதராபாத் முதலான பெரிய நகரங்களில் அரசாங்கத்தில் உயர் பதவி வகிப்பவர்கள், பார்லிமெண்ட், சட்டசபை மெம்பர்கள், மந்திரிகள், நியாய வாதிகள், நியாயாதிபதிகள், டாக்டர்கள், தொழிலதிபர்கள், அரசியல் வாதிகள், கவிஞர்கள், கலைஞர்கள், ஆசிரியர்கள், பத்திரிகை ஆசிரியர்கள் முதலான எல்லாப் பிரிவினர்களும் அடங்கிய விழாக் கமிட்டிகள் ஆங்காங்கு நிறுவப்பட்டன. ஸ்ரீ ஆசார்யர்களுக்கு அஞ்சலி செலுத்தப் பொதுக்கூட்டங்கள், மற்றும் பட ஊர்வலங்கள் ஆகியவை ஒவ்வொரு நகரத்திலும் நடைபெற்றன. மேலும்பெரு அளவில் எல்லாவிடங்களிலும் அன்னதானம் நடைபெற்றது. ஸ்ரீஸ்வாமிகள் நீடூழிகாலம் வாழ்ந்து மக்களுக்கு அனுக்கிரஹம் புரிய தேவாலயங்களில் பிரார்த்தனைகள், விசேஷபூஜை, வேத பாராயணங்கள் நடைபெற்றன. நாட்டின் பல பாகங்களில் உள்ள நகரங்களிலும், சிறிய கிராமங்களிலும், இந்த விழா கொண்டாடப்பட்டது. சென்னையில் ஸி.பி. ராமஸ்வாமி ஐயர், ராஜாஜி போன்ற பெரியவர்கள் இந்த விழாக்களில் கலந்து உரையாற்றினார்கள். இந்தக் கட்டுரையாளரால் தொகுக்கப் பெற்ற "ஸ்ரீ ஜகத்குரு திவ்ய சரித்திரம்" என்னும் பெயருடன் அவர்களது வரலாற்று நூல் வெளியிடப்பட்டது. அது சமயம் ஸ்ரீ ஸ்வாமிகளைச் சென்னை நகருக்கு விஜயம் செய்ய வேண்டுமாய் சிஷ்யர்கள் வேண்டினர். ஆனால் அப்பொழுது ஸ்வாமிகள் தமது குரு, பரமகுரு இவர்களது ஆராதனைகளை யொட்டி, கலவையில் உள்ள அவர்களின் அதிஷ்டானங்களிலேயே ஸ்ரீ புதுப்பெரியவார்களுடன் தங்கி விட்டார்கள். பெரியவர்களை உத்தேசித்து நடைபெறும் அந்த விழாவில் தாங்களே கலந்துகொள்ள விரும்பவில்லை போலும். ஆயினும் விழாக்கு ஓர் ஆசிச் செய்தியை அனுப்பியிருந்தார்கள். அதில் பொதுவாக குருபக்தியைப்பற்றியும் ஆதிசங்கரரது பெருமைகளைப் பற்றியும் கூறப்பட்டிருந்தது. அது ஒலிப்பதிவு

செய்யப்பட்டு விழாக் கூட்டங்களில் ஒலி பரப்பப்பட்டது. இந்த விழாவுக்கு நன்கொடையாகச் சென்னை மாநகராக்ஷி (Corporation) ரூ 500/– நன்கொடையளித்தது போற்றத்தக்கது.

## குருநாதருக்கு நடைபெற்ற கனகாபிஷேகம்

சென்ற 12-3-1957-இல் நடைபெற்ற ஸ்ரீ பரமாசார்யளின் பீடாரோஹண பொன்விழாவை யொட்டி அவர்களுக்கு கனகாபிஷேகம் செய்ய வேண்டுமென்று பக்தர்கள் விரும்பினர்கள். ஆனல் அவர்களோ தமக்கு ஏன் கனகாபிஷேகம் செய்ய நினைக்கிறீர்கள். "அதைஆதி சங்கரருக்குச் செய்து மகிழுங்கள்" எனக் கட்டளையிட்டார்கள். குருநாதரின் கட்டளையை நிறைவேற்றும் வகையில் காமாக்ஷி அம்பாள் ஆலயத்திலுள்ள ஆதிசங்கரரது சிலா விக்ரஹத்திற்கு 4-5-1957 சங்கர ஜயந்தியன்று புனிதகங்கை நீரால் கடஸ்தாபனம் செய்து, மஹன்யாஸ ருத்ரம் ஜபித்து தங்கத்தினல் செய்யப்பட்ட புஷ்பங்களைக் கடத்தில் கலந்து அபிஷேகம் செய்யப்பட்டது. ஆயினும் சிஷ்யர்களின் அவா அத்துடன் நின்று விடவில்லை. மறுபடியும் ஆசார்யர்களை அணுகி விஞ்ஞாபனம் செய்து கொண்டார்கள். பக்தர்களின் தீவிரமான பக்தியை மனத்தில் கொண்டு அவர்களது விருப்பப்படி கனகாபிஷேகம் செய்து கொள்ள ஒருவாறு இணங்கினர்கள்.

6-9-1957-இல் இந்த அபிஷேகத்திற்கு நாள் குறிப்பிடப் பட்டது. தினசரி செய்தித்தாள்களின் வாயிலாக இந்த விழா சின்னக் காஞ்சீபுரத்தில் அந்தத் தேதியில் நடைபெறுவதை முன் கூட்டியே அறிவிக்கப் பட்டிருந்தது. பார்க்கக் கிடைக்காத இந்தப் புனித விழாவைக் காண முதல் நாளே மக்கள் காஞ்சியில் ஆயிரக் கணக்கில் கூடிவிட்டனர். கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, நர்மதை, காவேரி முதலான புண்யநதிகளின் புனித நீரைப் பன்னிரண்டு குடங்களில் பொற்காசுகளுடன் நிரப்பி ஏகாதச ருத்ர பாராயணம், ஹோமங்கள் செய்து அன்று பகல் ஒரு மணிக்கு ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் திருக்கரங்களால் குருநாதருக்கு அபிஷேகம் செய்விக்கப்பட்டது. காணக்கிடைக்காத இந்தக் காக்ஷியை முதல் தடவையாகக் கண்டவர்கள் பரவசமடைந்தனர். தாங்களே பாக்யசாலிகள் எனக் கூறிக்கொண்டு ஆனந்தக் கண்ணீரில் மூழ்கினர். இதற்கு முன் 1954-இல் காஞ்சிமா நகரிலேயே மற்ருெரு கனகாபிஷேகம் நடைபெற்றது பக்தர்களுக்கு நினைவிருக்கலாம்.

**விஜய யாத்திரை தொடக்கம்**

1956-ஆம் வருஷத்தின் சாதுர் மாஸ சங்கல்பமும் அதற்கு அடுத்த 1957-ஆம் வருஷ சங்கல்பமும் சின்ன காஞ்சீபுரத்திலேயே நடைபெற்றன. சென்ற ஐந்து வருடங்களாக ஸ்ரீ ஆசார்யர்கள் காஞ்சியைச் சுற்றிலும் மற்றும் வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள சில கிராமங்களிலும், திருத்தலங்களிலும் சஞ்சாரம் செய்து வந்தார்கள். பீடத்துக்கு அடுத்த அதிபர்களாக ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளை 1954-ஆவது வருஷம் நியமனம் செய்த பின்னர், மற்ற மாவட்டங்களில் உள்ள பக்தர்கள் இரு பெரியவர்களும் தங்களுடைய ஊர்களுக்கு விஜயம் செய்ய வேண்டுமாய் நேரில் ஸ்ரீ பெரியவர்களிடம் விக்ஞாபனம் செய்து கொண்டார்கள். சென்னை நகரவாசிகளோ தங்கள் நகருக்கு ஸ்ரீ மடம் விஜயமாகி இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகி விட்டதாயும் இரு பெரியவர்களும் தங்கள் நகரத்துக்கு விஜயம் செய்ய வேண்டுமென்றும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். சென்னைக்கு விஜயம் செய்த பின்னர் மற்ற இடங்களுக்குப் போகலாம் என்பது அவர்களின் பிரார்த்தனை. அதேசமயம் ஆந்திரப் பிரதேச அரசாங்கம் அந் நாட்டின் அறநிலைய அமைச்சர் மூலமாக அந்த நாட்டுக்கு ஸ்ரீ ஸ்வாமிகளின் வருகையைக் கோரி ஓர் அழைப்பையும் அனுப்பியிருந்தது. அந்த அரசின் உயர் அதிகாரி களும் மற்றும் பொதுமக்களின் பிரதிநிதிகளும் நேரில் காஞ்சிக்கு வந்து இந்த அழைப்பை ஊர்ஜிதம் செய்தார்கள். ஸ்ரீ ஆசார்யர் களோ சேர்ந்தாற்போல் முப்பத்தைந்து ஆண்டுகள் சஞ்சாரத்தி லேயே இருந்ததின் காரணமாக ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமி களைத் தம் பிரதிநிதியாக அவர்களின் ஊர்களுக்கு அழைத்துப் போகும்படி கட்டளையிட்டார்கள். ஸ்ரீ புதுப்பெரியவர்களோ அது சமயம் தம் குருவை விட்டுத் தனிமையில் விஜய யாத்திரை செய்யத் தாம் விரும்பவில்லையென குருநாதரிடம் பணிவுடன் விண்ணப் பித்துக் கொண்டார்கள். சென்னையைப் போன்ற ஜன நெருக்க முள்ள நகரங்களில் தங்க இஷ்டப்படாவிட்டாலும் அங்கு வசிக்கும் மக்களின் தீவிரமான பக்தியின் காரணமாக ஸ்ரீ புதுப்பெரியவர்களுடன் சீக்கிரமாக அந்நகருக்கு விஜயம் செய்ய ஸ்ரீ ஆசார்யர்கள் ஒருவாறு இசைந்தார்கள். சென்னை சட்ட சபை உறுப்பினர் மயிலாப்பூர் தர்ம ரக்ஷாமணி **கி. பாலசுப்ரமண்ய ஐயரைத்** தலைவராகக் கொண்டு ஓர் வரவேற்புக் குழு அமைக்கப் பட்டது.

**சென்னை விஜயம்**

சென்னை–மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் ஸ்ரீ மடம் தங்குவதற்கு வேண்டி விசேஷமான கொட்டகைகள் அமைக்கப் பட்டன. காஞ்சியிலிருந்து வரும் மார்க்கத்தில் இரு பெரிய வர்களும் 20-9-1957-ஆம் தேதி மாங்காடு க்ஷேத்திரத்தில் தபஸ் காமாக்ஷியையும், ஸ்ரீ சக்கிரத்தையும், ஸ்ரீ ஆதி சங்கரரது விக்ரஹத்தையும் தரிசித்துக்கொண்டார்கள். 22-ஆம் தேதி காரம்பாக்கத்தில் தங்கி 23-ஆம் தேதி மாலை 4 மணி சுமாருக்கு, சென்னை மௌபரீஸ் ரோடிலுள்ள **பி. ஜி. பால் கம்பெனி டி. பால சுப்ரமண்ய ஐயரால்** ஸ்ரீமடத்துக்கு ட்ரஸ்டாக எழுதிவைக்கப்பட்ட **"வாஜபேய கிருஹம்"** என்னும் கட்டிடத்திற்கு விஜயம் செய்தார் கள். கம்பெனியின் நிர்வாகி **கே. நீலகண்டய்யர்** இரு பெரியவர் களுக்கும் பூர்ணகும்பம் அளித்து வரவேற்றுக் கட்டிடத்துக்குள் அழைத்து வந்தார். பின்னர் ஹிந்து பத்திரிகையின் ஆசிரியர் **கே. ஸ்ரீநிவாஸனுடைய** வேண்டுகோளுக்கு இணங்கி அவர்கள் **பாரம் ஹவுஸ்** (Farm House) கட்டிடத்துக்கு விஜயமானார்கள். அங்கிருந்து இரவு 9-00 மணிக்கு ஓர் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. இரண்டு அலங்கார புஷ்பப் பல்லக்குகளில் இரு மகான்களும் தனித்தனியே அமர்ந்து லஸ் சர்ச் ரோடு, கபாலீச்வரர் நான்கு மாடவீதிகள் வழியாய் சம்ஸ்கிருத கலாசாலைக்கு இரவு 2-00 மணிக்கு ஊர்வலமாக வந்து சேர்ந்தார்கள். வழிநெடுகிலும் மற்றும் வீதிகளின் இருமருங்கிலும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடி ஜோதி ஸ்வரூபமாய் விளங்கிய இரு ஆசார்யர்களையும் தரிசித்தனர். கலாசாலையில் காரியதரிசி **கே. பாலசுப்ரமண்ய ஐயர்,** காலேஜ் அத்யாபகர்கள் பக்தர்களுடன் ஸ்ரீ ஆசார்யர்களைப் பூர்ண கும்ப மரியாதைகளுடன் வரவேற்றார். பிறகு சம்ஸ்கிருதத்தில் ஓர் வரவேற்புப் பத்திரம் வாசித்து அளித்தார்.

மறு நாள் 24-9-1957 திங்கட் கிழமை அவ்வருஷத்திய சாரத நவராத்ரி பூஜை ஆரம்பிக்கப்பட்டது. வழக்கம்போல் இந்தப் பூஜை ஒன்பது நாட்கள் நடைபெற்றன. மேலமாம்பலத்தில் சிஷ்யர்கள் முயற்சியினால் கட்டப்பட்டுள்ள சங்கரமடத்தில் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்களின் பாதுகா பிரதிஷ்டை 20-1-58 இல் நடைபெற் றது. இரு ஆசார்யர்களும் விஜயம் செய்து அந்தப் பிரதிஷ்டையை நடத்தி வைத்தார்கள். அந்த வருஷத்திய வஸந்த நவராத்திரி 22-3-1958 முதல் தியாகராய நகரிலும், 24-4-1958 தேதி முதல் ஸ்ரீ சங்கர ஜயந்தி தண்டையார் பேட்டையிலும் நடைபெற்றன. 1958 ஆவது வருஷ வியாஸ பூஜை மயிலாப்பூர் சம்ஸ்கிருத

காலேஜில் நடைபெற்றது. அந்த வருஷம் அதிக மாஸம் ஏற்பட்டதால் 6 பக்ஷங்கள் சாதுர்மாஸ சங்கல்பம் அனுஷ்டிக்கப் பெற்றது. 27-9-58-ஆம் தேதி விச்வரூப யாத்திரை. மயிலாப்பூர் எல்லையைத் தாண்டி, திருவல்லிக்கேணி வஸந்தோத்ஸவ பங்களா மண்டபத்திற்கு மாலை விஜயமானார்கள். 13-10-1958 முதல் சாரத நவராத்ரி மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜில் நடைபெற்றது. மயிலை சங்கராலயத்தில் தங்கியிருந்த சமயம் 6-11-58 இல் **கே. எம். முன்ஷி** இரு பெரியவர்களையும் தரிசித்துக் கொண்டு பல விஷயங்களைப் பற்றிப் பேசினார்.

14-3-59-ஆம் தேதி மாலை சுமார் 1000 **ஆர். எஸ். எஸ். தொண்டர்கள்** மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் மைதானத்தில் அணி வகுத்து இரு ஆசார்யர்களுக்கும் வந்தனம் செலுத்தினார்கள். சென்னையில் தங்கிய 534 நாட்களில் மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜில் மட்டும் 211 நாள் தங்கியிருந்தார்கள். மற்ற நாள்கள் சென்னையின் மற்றப் பாகங்களுக்கு விஜயம். 15-3-1959-ஆம் தேதி காலேஜ் மைதானத்தில் மாபெரும் வழியனுப்பு விழா நடைபெற்றது. சென்னையிலிருந்து இரு ஸ்வாமிகளும் புறப்படும் போது சென்னைவாசிகள் அன்று மாலை தங்களது அஞ்சலியைத் தெரிவித்துக்கொண்டனர். அதுவரை காணாதவாறு மக்கள் ஏராளமாக ஸம்ஸ்கிருத கலாசாலையின் முன் கூடியிருந்தனர். தமிழ், தெலுங்கு, கன்னடம், மகாராஷ்டிரம், மலையாளம், குஜராத்தி, ஹிந்தி, இங்கிலீஷ் ஆகிய பல்வேறு மொழிகளில் ஆசார்யர்களுக்கு உபசாரப் பத்திரங்கள் வாசித்து அளிக்கப்பட்டன. **ராஜாஜி** போன்ற பல பெரியோர்கள் இதில் கலந்து கொண்டனர்.

**சென்னை பக்தர்களின் அஞ்சலி : ஸ்ரீ ஆசார்யர்களின் அருளுரை**

1959 மார்ச் மாதம் 15 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இந்த விழாவுக்குப் பகல் 2 மணி முதற்கொண்டே ஆயிரக்கணக்கான மக்கள் மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் மைதானத்தில் கூடத் தொடங்கிவிட்டனர். விழா ஆரம்பிக்கும்போது மைதானம் அடங்காமல் ராயப்பேட்டை ஹைரோட்டிலும் காலேஜுக்கு வடபுறம் உள்ள வீதியிலும் பக்தர்களின் கூட்டம் நிறைந்திருந்தது. ஸ்ரீ ஆசார்யர்கள், ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் பின்தொடர புஷ்பங்களாலும் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட எட்டு அடி உயரமுள்ள மேடைக்கு எழுந்தருளிய போது 'ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர' கோஷங்கள் வானை எட்டின.

முதலில் சம்ஸ்கிருதத்தில் வரவேற்பு அளிக்கப்பட்டது. பின்னர் வெவ்வேறு சமூகங்களைச் சார்ந்தவர்கள் அவரவர்களது பாஷை களில் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு உபசாரப் பத்திரங்களை வாசித்து அளித்த பின்னர் கே. பாலசுப்ரமண்ய ஐயர், டி. வி. விச்வநாத ஐயர், பி. சங்கரநாராயண ஐயர், அனந்தராம தீக்ஷிதர், கி. வா. ஜகன்னாதன் முதலானோரும் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு அஞ்சலி செலுத்தி உரை யாற்றினார்கள். சென்னைவாசிகளுக்குத் தொடர்ந்து பதினெட்டு மாதங்களாகக் கிடைத்துவந்த ஸ்ரீ குருநாதரின் தரிசனமும், அவர் களின் அருள் வாக்குகளும் ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமி பூஜை யும் இனி எப்பொழுது கிடைக்குமோ என்று அவர்கள் யாவரும் உணர்ச்சி வசப்பட்டு உரையாற்றினார்கள். முடிவுரையாகப் பேசிய ராஜாஜி, " ஸ்ரீ ஆசார்யர்கள் பாரத தேசம் முழுமையிலும் உள்ள பக்தர்களுக்குத் தர்சனம் அளிக்க ஆங்காங்கு சஞ்சாரம் செய்து அவர்களையும் அனுக்கிரஹிக்க வேண்டியவர்களாக இருக் கிறார்கள். நாம் மட்டும் இந்த ஆனந்தத்தைப் பெற்றால் போதும் என்று எண்ணக் கூடாது. அவர்களது உபதேசங்களை மனத்தில் கொண்டு அதன்படி நடக்க முயல்வதே நாம் அவர்களுக்குச் செலுத்தும் அஞ்சலி" என்று கூறினார்.

ஸ்ரீ ஆசார்யர்கள் தமது அருளுரையில் கூறியதாவது:— "என்னைச் சென்னைக்கு வரும்படி பாலசுப்ரமண்ய அய்யரும் மற்றவர்களும் சில வருஷங்களாகவே பிரார்த்தித்து வந்தார்கள். ஆனால் ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் பூஜைக்கும் என் அனுஷ்டானங் களுக்கும், ஜன நெருக்கம் பெருகிவரும் இந்த நகரத்தில் வசதிகள் குறைவாக இருக்கும் என்னும் காரணத்தை மனஸில் கொண்டு அவர்களுக்கு எந்த முடிவையும் சொல்லாமல் இருந்து விட்டேன். பின்னர் ஆலோசனை செய்து பார்த்தேன். கிராமப் புறங்களில் உள்ள மக்கள் இப்பொழுது பெரும் அளவில் சென்னை நகருக்கு வந்து தொழில் நடத்தியோ உத்யோகம் பார்த்தோ வருகிறார்கள். அவர்களை அதிகமாகச் சென்னையில் சந்திக்கலாமே என்று நினைத் தேன். மேலும் அவர்களில் கற்றறிந்த வித்வான்களும், மேதாவி கள் பலரும் இருப்பார்கள். அவர்களுடன் உரையாடுவதினால் என் அறிவையும் தெளிவுபடுத்திக் கொள்ளலாம் என்று எனக்குத் தோன்றிற்று. இந்த வகையில் எனக்கு நல்ல பயனும் கிடைத்தது. ஆகையால் எனது சொந்த அசௌகரியங்களையும் பொருட்படுத் தாமல் நான் சென்னை வந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

சற்றுமுன் பேசிய முன்னாள் கவர்னர் ஜெனரல் (ராஜாஜி) மக்கள் என் உபதேசப்படி நடப்பதே என்னிடம் அவர்களுக்கு

உள்ள பக்தியை எடுத்துக் காட்டும் எனக் கூறினர். ஒருவரது உபதேசத்தைக் கேட்பதினுல் மட்டும் மற்றவர் தம் பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்வார் என்று எதிர்பார்க்க முடியாது. நான் தெரிந்து கொண்டதையெல்லாம் யாரிடமாவது சொல்ல வேண்டுமே யென்று உங்களிடம் சொன்னேன். சங்கீதம், சினிமா, நாட்டியம், நாடகம் முதலான பொழுது போக்குக்கான வசதிகள் இந்த நகரத்தில் இருக்கும்போது ஆயிரக்கணக்கான மக்கள் பல சிரமங்களையும் பொருட்படுத்தாமல் ஒவ்வொரு நாளும் வெகு நேரம் இரவில் தங்கி என் பேச்சைக் கேட்டு வருவதால் ஏதோ உங்களுக்கும் இதில் ஓர் ருசி (Interest) இருப்பதாக எனக்குத் தோன்றிற்று. நான் கூறியதை யெல்லாம் நீங்கள் நன்கு சிந்தித்துப் பார்த்து எவ்வளவு தூரம் நீங்கள் உங்களைத் திருத்திக்கொள்வது சாத்யமோ அந்த வகையில் நீங்கள் முயற்சி எடுத்துக் கொண்டாலே நான் சந்தோஷப்படுவேன். ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் உங்களுக்கு அனுக்கிரஹம் புரிவார்.''

தம்மைப் பற்றியும் தமது அபிப்ராயத்தைப் பற்றியும் இவ்வளவு எளிய முறையில் ஸ்ரீ ஆசார்யர்கள் கூறியதானது அங்கே கூடியிருந்த ஒவ்வொருவருடைய மனத்தையும் தொட்டுவிட்டது. அவர்களில் கடின சித்தமுள்ளவர்கள்கூட அப்பொழுது ஒரு சொட்டுக் கண்ணீராவது விட்டிருப்பார் என்ருல் மற்றவர்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ! மறுநாள் ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும் சம்ஸ்கிருத காலேஜிலிருந்து புறப்பட்ட பொழுது ஆயிரக்கணக்கான பக்தர்கள் அடுத்த முகாம் நுங்கம்பாக்கம் வரையில் சென்று வந்தார்கள்.

**வானகரத்தில் சாதுர்மாஸம்**

ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜ் முகாமிலிருந்து 16-3-1959-இல் புறப்பட்டு நகருக்குள் நுங்கம்பாக்கம், எழும்பூர், அம்பத்தூர், திருமங்கலம் முதலிய இடங்களில் சில தினங்கள் முகாம் செய்து, சென்னையிலிருந்து சுமார் 9 கிலோ மீட்டர் மேற்கே பூந்தமல்லி சாலையில் உள்ள வானகரம் என்னும் இடத்தில் கண்ட்ராக்டர் ஸ்ரீநிவாஸய்யர் செங்கல் சூளை தோட்டத்திலும், பி. வி. ராமன் தோட்டத்திலும் 8-4-1959 முதல் முகாம் செய்திருந்தார்கள். அதற்கு அடுத்த நாள் முதல் வஸந்த நவராத்திரி, பின்னர் சங்கர ஜயந்தி; அதைத் தொடர்ந்து 20-9-1959-இல் வியாஸ பூஜை, சாதுர்மாஸ சங்கல்பம்

எல்லாம் அவ்விடமே நடைபெற்றன. தினந்தோறும் நூற்றுக் கணக்கான பக்தர்கள் சென்னை நகரத்திலிருந்து இரண்டு பெரியவர்களையும் தரிசிக்க வந்து கொண்டிருந்தார்கள். பதினாறு மாதங்களுக்கு மேலாக நகரின் சூழ்நிலையில் தங்கிவந்த ஆசார்யர்களுக்கு இந்த ஏகாந்தமான இடம் அவர்களது தியானத்திற்கு ஏற்றதாக அமைந்திருந்தது. ஸ்ரீ புதுப்பெரியவர் களுக்கும் தனிமையில் ஓர் பர்ணசாலையும் அமைக்கப்பட்டிருந்தது. பண்டிதர்களின் வாயிலாக அவர்களது சாஸ்திரப் பயிற்சியை அபிவிருத்தி செய்து கொள்வதற்கும் உதவியளிக்கும் வகையிலும் அந்த இடம் அமைந்திருந்தது.

பாரததேசத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் இந்து மக்கள் பெருவாரியாக யாத்திரை செய்யும் ஒரே தலம் ராமேச்வரம் ஒன்றுதான். அந்தத் தலத்தில் ஸ்ரீ ஆதி சங்கரருக்கு ஓர் நினைவு மண்டபம் எழுப்பி அதில் ஆதி சங்கரரது சிலையைப் பெரிய அளவில் வெள்ளைச் சலவைக் கல்லால் அமைக்க வேண்டுமென ஸ்ரீ ஆசார்யர்கள் சென்னையில் தங்கிய பொழுது ஓர் திட்டத்தைத் தொடங்கினார்கள். இந்தத் திருப்பணிக்கு 7-9-1959-இல் ராமேச்வரம் அக்னிதீர்த்தக் கடற்கரையில் அஸ்திவார முகூர்த்தம் நடைபெற்றது. அதில் உள்ளூர் பிரமுகர்களும், தேவஸ்தான அதிகாரிகளும், ஸ்தானிகர்களும், ராமநாதபுரம் ராஜாவின் சார்பில் அவரது சகோதரர் காசிநாத துரையும், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரும் கலந்து கொண்டார்கள். அந்த வருஷத்திய சாரத நவராத்திரி பூஜை, தீபாவளி ஆகியவை வானகரத்திலேயே நடைபெற்றன. 3–2–1960 முடிய முகாம் வானகரம்.

## நஸரத் பேட்டையில் சம்ஸ்கிருதக் கல்விக் கழகத் துவக்க விழா

சென்னை சர்க்கார் உள்துறை அமைச்சர் மா. பக்தத்வத்ஸலம் அவர்களின் மருமகனார் ஸி. என். வரதராஜன் அவர்கள் அன்பளிப்பாக அளித்த பத்து ஏக்கர் நிலப்பரப்பில் அமைக்கப் பெற்ற சம்ஸ்கிருத வித்யா ஸமிதியின் ஆரம்ப விழா 7-2-1960–இல் இரு ஆசார்யர்களினால் நடைபெற்றது. இந்த விழாவில் புகழ்பெற்ற பண்டிதர்கள் பலருடன் டாக்டர் ஸி.பி. ராமஸ்வாமி ஐயர், முன்னாள் நீதிபதி எம். வேங்கடசுப்பராவ் தம்பதிகள், சுப்ரீம் கோர்ட் நீதிபதி பி. ஜகன்னாத தாஸ், சென்னை அரசின் உள்துறை அமைச்சர் எம். பக்தவத்ஸலம், பார்லிமெண்டு மெம்பர் ஸி.ஆர். பட்டாபிராமன் சட்டசபை உறுப்பினர் கே. பாலசுப்ரமண்ய ஐயர் முதலானோர் கலந்துகொண்டனர். ஸ்ரீ ஆசார்யர்கள் கழகத்தை ஆரம்பித்து

வைத்துச் சம்ஸ்கிருதத்தில் உரையாற்றிய போது தென்னகமே சம்ஸ்கிருத பாஷைக்குக் கோட்டையெனக் கூறினார்கள். சம்ஸ் கிருதத்தில் உள்ள அபூர்வ நூல்களை ஆராய்ச்சி செய்ய இந்த ஸமிதி உதவுமென்றும் கூறினார்கள். ஸ்ரீமடத்தின் நிதியிலிருந்து இந்த ஸமிதிக்கு ரூ. 10,000/– அளிக்கப்பட்டது.

### அடையபலம்-திருவானைக்காவல் இரண்டு கும்பாபிஷேகங்கள்

சென்ற 17ஆம் நூற்றாண்டில் அவதரித்ததாகக் கூறப்படும் மஹான் **அப்பய்ய தீக்ஷிதர்**, தாம் வசித்து வந்த அடையபலம் (வடஆர்க்காடு) என்னும் ஊரில் ஓர் சிவாலயத்தை நிர்மாணம் செய்தார். அந்தச் சிவாலயத்தை அவரது வம்சாவளியைச் சார்ந்த **துரைஸ்வாமி தீக்ஷிதர்** பரிபாலனம் செய்து வந்துள்ளார். அந்த ஸ்ரீ பார்வதியம்பாள் ஸமேத ஸ்ரீகாளகண்டேச்வரர் ஆலயம் திருப் பணி செய்யப்பட்டு, இரண்டு ஆசார்யர்களும் நேரில் விஜயம் செய்து அதன் கும்பாபிஷேகத்தை நடத்திக் கொடுக்க வேண்டு மாய் மேற்படி **துரைஸ்வாமி தீக்ஷிதரும்** அவருடைய குமாரர்களும் மற்றும் **அப்பய்ய தீக்ஷிதர்** வம்சத்தாரும் பல மாதங்களாகவே பிரார்த்தித்துக் கொண்டார்கள். பரமசிவ பக்தரும் ஸ்ரீ ஆதி சங்கரருக்குப் பின் பல வேதாந்த கிருதிகளையும், தோத்திரங்களை யும் செய்துள்ள அந்த மஹானது பெருமையை மனத்தில் கொண்டு இரண்டு பெரியவர்களும் அடையபலத்திற்கு விஜயம் செய்து 16-3-1960-இல் அந்த ஆலயக் கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள்.

அந்தக் கும்பாபிஷேகம் முடிந்ததும் திருவானைக்காவல் கும்பா பிஷேகத்துக்கு விஜயம் செய்ய ஏற்பாடாகியிருந்தது. சில மாதங் களுக்கு முன்னர் ஸ்ரீ அகிலாண்டேச்வரி ஆலயத்தில் அமைந்துள்ள நவராத்திரி கொலு மண்டபத்தைப் பழுது பார்த்துப் புதுப் பித்து அதற்காகச் சம்ப்ரோக்ஷண கும்பாபிஷேகம் செய்ய ஆலய நிர்வாகிகள் முடிவு செய்தார்கள். 1908-இல் அந்த ஆலயத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள் பீடத்திற்கு வந்தவுடன் ஸ்ரீ அம்பாளுக்கு தாடங்க பிரதிஷ்டை செய்த பிறகு நடந்த கும்பாபிஷேகம் இதுவே யாகும். 6-4-1960-ஆம் தேதி இந்தக் கும்பாபிஷேகத்தை பல்லாயிரம் மக்கள் தர்சிக்க இரு ஆசாரியர்களும் நடத்தி வைத்தார்கள்.

### திருச்சி ஜில்லாவில் யாத்திரை

திருவானைக்காவல் கும்பாபிஷேகம் முடிந்த பின்னர் இரு ஆசார்யர்களும் லால்குடிக்கும் அதையடுத்த கிராமங்களுக்கும்

விஜயம் செய்திருந்தார்கள். அந்த வருஷ சங்கர ஜயந்தி திருச்சி டவுன் நாஷனல் ஹைஸ்கூலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. 8-7-1960-இல் வியாஸ பூஜை பட்டவாத்தலைக்கு அடுத்த காமநாயக்கன்பாளையத்தில் நங்கவரம் பெரிய பண்ணை பங்களாவில் நடைபெற்றது. 7-9-1960 முடிய அவ்விடம் சாதுர்மாஸ விருதம் அனுஷ்டித்தார்கள். மத்யசர்க்காரால் .ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் தலைமையில் நியமனம் செய்விக்கப்பட்ட இந்து அறநிலைய பாதுகாப்புக் கமிஷன் உறுப்பினர்கள் அன்று ஸ்ரீ ஆசார்யர்களைச் சந்தித்துப் புதிதாகச் சட்டம் ஏற்படுத்துவதில் அவர்களது ஆலோசனையைக் கேட்டார்கள். பின்னர் கரூருக்கு 27-11-1960-இல் விஜயமாகி இரு பெரியவர்களும் 27-11-1960 முதல் நான்கு நாட்கள் கரூருக்கு அடுத்த நெரூரில் தங்கி ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திரர்கள் அதிஷ்டானத்தைத் தர்சனம் செய்து கொண்டார்கள்.

### ஸ்ரீ புதுப் பெரியவர்கள் கும்பகோணம் ஸ்ரீ மடத்திற்கு முதல் ப்ரவேசம்

திருச்சி ஜில்லா விஜய யாத்திரை நடத்திய பின்னர் இரு ஸ்வாமிகளும் தஞ்சை ஜில்லாவில் யாத்திரை செய்யத் தொடங்கினார்கள். 4-2-1961-இல் இரு பெரியவர்களும் திருவிடைமருதூரில் விஜயமாகியிருந்தனர். மறுநாள் அதிகாலையில் திருவிடைமருதூரிலிருந்து புறப்பட்டுக் காலை 6-00 மணிக்குக் கும்பகோணம் எல்லைக்கு வந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களுடன் முதன் முறையாக ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைத் தரிசிக்க ஆயிரக்கணக்கான மக்கள் எல்லைப்புறம் கூடி இரு பெரியவர்களையும் மிகுந்த குதூகலத்துடன் வரவேற்றார்கள். ஊர் முழுவதும் அலங்கார வளைவுகளும் தோரணங்களும் கட்டப்பட்டிருந்தன. 5-2-1961 ஞாயிற்றுக்கிழமை காலை சுமார் 8-30க்கு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தம் குருநாதருடன் ஸ்ரீமடத்தில் ப்ரவேசித்தார்கள். அன்று இரவு ஓர் மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. ஸ்ரீ பெரியவர்கள் புஷ்பச் சிவிகையிலும் ஸ்ரீ புதுப்பெரியவர்கள் யானைமீது அம்பாரியிலும் அமர்ந்து நகரின் பிரதான வீதிகளின் வழியே ஊர்வலம் வந்தார்கள். தருமபுரம் மடம் ஸ்ரீலஸ்ரீ சுப்ரமண்ய தேசிக பண்டார ஸந்நிதி அவர்களது அழைப்பை ஏற்று 12-2-1961-இல் இரு ஸ்வாமிகளும் மாயவரத்திலிருந்து தருமபுரம் மடத்திற்கு விஜயம் செய்து துர்கா தேவியைத் தரிசித்துக்கொண்டார்கள். ஆதீனகர்த்தர் பெரியவர்களுக்கு மகரகண்டி ருத்ராக்ஷ மாலை ஒன்றையும் பீதாம்பரத்தையும் ஸமர்ப்பணம் செய்தார்.

**எழில் மிகு இளையாத்தகுடியில்**

இரண்டு ஆசார்யர்களும் தஞ்சை ஜில்லா நீடாமங்கலம், மன்னார்குடி, பட்டுக்கோட்டை, கந்தர்வக்கோட்டை மார்க்கமாய் 11-3-1961 இரவு 8-00 மணிக்குப் புதுக்கோட்டைக்கு விஜயமானார் கள். பழைய அரண்மனையில் அவர்கள் தங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. 12, 13, 14 தேதிகளில் அவ்விடம் தங்கி, திரு மயம் மார்க்கம் 15-3-1961-ஆம் தேதி இளையாத்தகுடிக்கு விஜயம் செய்தார்கள். இளையாத்தகுடி ஸ்ரீ கைலாஸ நாதர் நித்யகல்யாணி ஆலயம் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினரின் ஒன்பது கோயில்களில் முதன்மையான கோவிலாகும். இவ் வூரில் மிகப் பெரிய தடாகம் ஒன்றும் மற்றும் ஏழு சிறிய தடாகங்களும் ஏழு விநாயகர் ஆலயங்களும், மிகவும் அழகாகத் திருப்பணி செய்யப் பட்டிருக்கும் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் ஆலயமும் அமைந் துள்ளன. ஸ்ரீ காமகோடி பீடத்தின் 65ஆவது ஆசார்யர்களான ஸ்ரீ மகாதேவந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் இராமநாதபுரம் ஜில்லாவில் யாத்திரையில் இருந்தபொழுது இந்தத் தலத்துக்கும் விஜயம் செய்தார்கள். அவர்கள் இந்த ஊரிலேயே சென்ற 1890 விரோதி வருஷம் பங்குனி மாதம் அமாவாசையன்று ஸித்தி அடைந்தார்கள். அவரது சமாதியின்மேல் இளையாத்தகுடி நகரத்தார் ஓர் ஆலயமும் எழுப்பி ஓர் சிவலிங்க பிரதிஷ்டையும் செய்துள்ளார்கள். சங்கீத த்ரிமூர்த்திகளில் ஒருவராகிய **முத்து ஸ்வாமி தீக்ஷிதரின்** குமாரர் **சுப்பராம தீக்ஷிதர்** சங்கராபரண ராகத் தில் இயற்றி இன்று பிரஸித்தியாக விளங்கும் '' சங்கராசார்யம் '' என்னும் கீர்த்தனை இந்த ஆசார்யர் மீது பாடப்பட்டதாகும். இந்த ஆசார்யர்களது 77 ஆவது வருஷத்திய ஆராதனை 15-3-61-இல் நடைபெற்றது. இரு பெரியவர்களும் நேரில் அதிஷ்டா னத்திற்கு விஜயம் செய்து வைதிக சம்பந்தமான ஆராதனங்களை நேரில் கவனித்து வெகு நேரம் குருநாதரது ஸந்நிதியில் தியானத்தில் அமர்ந்திருந்தார்கள். 17-3-1961–இல் வஸந்த நவராத்ரி பூஜை ஆரம்பமாயிற்று.

**மதுரை மாநகரில்**

ஸ்ரீ மடம் இளையாத்தகுடி விஜயமாகியிருப்பதை யொட்டி அங்கிருந்து எண்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மதுரை மாநகருக்கு விஜயம் செய்ய வேண்டுமாய் அவ்வூர் மகா ஜனங்கள் இரு ஆசார்யர்களையும் வேண்டிக் கொண்டனர். அவர்களது பிரார்த்தனையை நிறைவேற்ற மனம் கொண்டவர்

களாய் இரு பெரியவர்களும் 8-4-1961-இல் இளையாத்தகுடி யிலிருந்து புறப்பட்டு திருப்பத்தூர், மேலூர், திருவாதவூர், திரு மோகூர் மார்க்கமாக மதுரைக்கு 15-4-1961 இரவு 11-00மணிக்கு விஜயமானார்கள். மேலூர் ரோடு டோல் கேட்டிலிருந்து மிகப் பெரிய ஊர்வலமாக இரு பெரியவர்களும் இரவு 2-00 மணிக்கு சேதுபதி ஹைஸ்கூலை அடைந்தார்கள். மறுநாள் (16-4-1961) ஸ்ரீ சங்கரஜயந்தி உத்ஸவம் ஆரம்பிக்கப்பட்டு 20-4-61-ஆம் தேதி ஜயந்தி நாளுடன் முடிவு பெற்றது. 21-4-61-ஆம் தேதி காலை ஸ்ரீ பெரியவர்கள் ஸ்ரீ மீனாக்ஷி அம்மன் ஆலயம் சென்று ஸ்வாமி யையும் அம்பாளையும் தர்சனம் செய்து வந்தார்கள். அன்று மாலை ஸ்ரீ புதுப்பெரியவர்கள் அம்பிகையின் ஆலயத்துக்குச் சென்று ஸ்ரீ சுந்தரேசப் பெருமானையும் மீனாக்ஷியையும் தரிசித்து வந்தார்கள். அம்பாளுக்கு ரூ. 2000 பெறுமான கல் இழைத்த பதக்கம் ஒன்றும், ஸ்வாமிக்கு ரூ. 1000 பெருமதிப்புற்ற கல் இழைத்த மாலை ஒன்றும், சமர்ப்பணம் செய்விக்கப்பட்டன. 2-5-1961-இல் மதுரை வைதிக ஸமாஜத்தார் ஸ்ரீ ஆசார்ய ஸந்நிதி யில் மஹாருத்ரம் நடத்தினார்கள். 15-5-1961-ஆம் தேதி மதுரையை விட்டுப் புறபபடு முன்னர் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திருப்பரங்குன்றம் சென்று ஸ்ரீ முருகப் பெருமானைத் தரிசனம் செய்து வந்தார்கள்.

**செட்டி நாட்டின் சில பாகங்களுக்கு விஜயம்**

மதுரையிலிருந்து இரு பெரியவர்களும் புறப்பட்டு 22-5-61-இல் இளையாத்தகுடிக்குத் திரும்பி விஜயமானார்கள். நகரத்தார்களின் பிரார்த்தனைக்கு இணங்கி மறுபடியும் 23-5-61 இரவு புறப்பட்டுச் சிறுவயலில் அடுத்தநாள் பூஜையை முடித்துக் கொண்டு மறுநாள் காரைக்குடிக்கு விஜயம் செய்து அங்கு 8 நாள் தங்கினார்கள். 1-6-1961 இரவு இரு ஆசார்யர்களுக் கும் பெரிய நகர்வலம் நடை பெற்றது. அங்கிருந்து அடுத்த நாள் (26-6-61) தேவக்கோட்டைக்கு விஜயம் செய்தார்கள். தேவக்கோட்டையில் 26-6-1961 முடிய விஜயம் செய்திருந் தார்கள். கொச்சி மகாராஜாவின் ஆதரவின் பேரில் வேப்பத்தூர் பண்டிதராஜ வி. சுப்ரமண்ய சாஸ்திரிகள் மேற்பார்வையில் அச்சிடப்பட்ட "ப்ரம்மானந்தீய பாவ ப்ரகாசம்" என்னும் அத்வைத க்ரந்தம் 3-6-1961-இல் வெளியிடப்பட்டது. கொச்சி அரண்மனை ராஜகுமாரர் இருவரும் ஆஸ்தானவித்வான் கிராஸ் காடு நாராயண நம்பூதிரிபாட் முதலானோர் இந்தச் சபைக்கு வந்திருந்தார்கள். அன்று நடைபெற்ற பண்டித சபையில்

சுமார் 15 பண்டிதர்கள் கலந்து கொண்டார்கள். தேவக் கோட்டையிலிருந்து 27-6-61 இல் புறப்பட்டு, சொக்கநாதபுரம், சீனிமங்கலம், காளையார்கோவில், சிவகங்கை, நாட்டரசன் கோட்டை, பாகனேரி, பட்டமங்கலம், கண்டரமாணிக்கம், கண்டவராயன் பட்டி, வேகுப்பட்டி, பூலாங்குறிச்சி மார்க்கமாய் 17-7-61 இல் இளையாத்தகுடி வந்து பின்னர் மூன்று நாள்கள் (ஜுலை 20, 21, 22,) தேதிகளில் பள்ளத்தூரில் விஜயம் செய்தார்கள். வியாஸபூஜையை முன்னிட்டு 23-7-61 இல் இளையாத்த குடிக்குத் திரும்பினார்கள்.

## இளையாத்தகுடியில் 1961, 1962 வருடங்களின் சாதுர்மாஸம்

சென்ற 1960வது வருஷத்திய வியாஸபூஜை திருச்சி ஜில்லா பட்டவாத்தலைக்கு அடுத்துள்ள காமநாயக்கன் பாளையத்தில் நடந்ததென முன்பு கூறினோம். ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீபுதுப்பெரிய வர்களுடன் சிலகாலமாக இயற்கையழகும் செயற்கையழகும் வாய்ந்த இளையாத்தகுடியில் வசித்து வருவதையறிந்த பக்தர்கள் இரு ஆசார்யர்களையும் விச்ராந்தியுடன் அங்கு தரிசிக்கலாம் என எண்ணியவாறு அந்த ஊருக்கு ஒவ்வொருநாளும் நூற்றுக் கணக்கில் வரத்தொடங்கினர். மேல் நாடுகளிலிருந்தும் கலைஞர் களும், விஞ்ஞானிகளும் அங்கு வந்து இரு பெரியவர்களை யும் தரிசித்து அவர்களிடம் உரையாடித் தங்களுக்கு ஏற்படும் சந்தேகங்களைத் தெளிவுபடுத்திக்கொண்டு போயினர். நமது பாரதத்தின் பழைய பண்பாட்டையும், தெய்வபக்தியையும் கலையையும், தத்துவங்களையும் குருவின் வாயிலாக அறிந்து கொள்ள அந்தத் தலம் அப்பொழுது ஓர் கேந்திரமாக அமைந் திருந்தது. அங்கு வந்தவர்களெல்லாம் தங்கள் மனத்தில் வேறு சிந்தனையோ, கவலைகளோ இல்லாமல் ஸ்ரீ ஆசார்யர்களையும், ஸ்ரீ புதுப் பெரியவர்களையும் தரிசித்துச் சென்றனர். 1961ஆவது ஆண்டு வியாஸ பூஜை 27-7-1961-ஆம் தேதி நடை பெற்றது. 24-9-1961-ஆம் தேதி விசுவரூப யாத்திரைக்கு இரு பெரியவர் களும் ஊர் எல்லையைத் தாண்டி ஆவினிப்பட்டி என்னும் ஊருக்குச் சென்று அந்த ஊர் தடாகத்தின் அருகில் அமர்ந்து பகவத் கீதை விச்வரூப அத்யாயத்தைப் பாராயணம் செய்து வந்தார்கள். அடுத்து நவராத்திரி பூஜையும் அவ்விடமே நடை பெற்றது. ராமேச்வரத்தில் சங்கர மண்டபத்தின் நிர்மாண வேலைகள் மிகவும் துரிதமாக நடைபெற்று வந்தன. வெள்ளைச் சலவைக் கல்லினால் ஸ்ரீ ஆதிசங்கரரது விக்ரகம் சுமார் 8½ அடி

உயரத்திலும், மற்றும் ஹஸ்தாமலகர், பத்மபாதர், சுரேச்வரர், தோடகர் இவர்களின் விக்ரகங்கள் 5½ அடி உயரத்திலுமாக நிர்மாண வேலைகள் காஞ்சியில் கைதேர்ந்த ஸ்தபதிகள் மூலமாகச் செய்விக்கப்பட்டு வந்தன. இதற்கான கற்கள் மிகப் பெரிய அளவில் ராஜஸ்தான் ஜய்ப்புரிலிருந்து தருவிக்கப் பட்டிருந்தன.

**அஷ்ட கிரஹ சேர்க்கை: கோளறு பதிகப் பாராயணம்**

பிலவ வருஷம் தை மாதம் (1962 பிப்ரவரி) 21, 22, 23-ஆம் தேதிகளில் நவக்கிரஹங்களில் இராகு நீங்கலாக மற்ற எட்டுக் கிரஹங்களும் மகர ராசியில் ஒன்றுகக் கூடிற்று. இந்தச் சேர்க்கையினுல் உலகிற்கும் மக்களுக்கும் பல கொடுமைகள் நேரக்கூடும் எனச் சோதிட சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. இதை முன்பேயறிந்து ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் பாரத தேசத்தின் பல பாகங்களிலும், ஸ்ரீ பரமேச்வரருக்கு ப்ரீதியைக் கொடுக்கும் அதிருத்ர, மகாருத்ர ஜபஹோமங்களையும் மற்றும் நவக்கிரஹ ஹோமம், ம்ருத்யுஞ்சய ஹோமம், புருஷஸூக்த ஹோமம் இவைகளையும் நடத்தும்படி ஆங்காங்கு உள்ள தேவாலய அதிகாரிகளுக்கும், சபைகளுக்கும் தனி நபர்களுக்கும் கட்டளை அனுப்பியிருந்தார்கள். இந்த ஹோமங்கள் அநேக ஊர்களில் நடைபெற்றன. அத்துடன் திருஞானசம்பந்தர் உலக க்ஷேமத்திற்காக அருளிய "வேயுறு தோளிபங்கன்' எனத் தொடங்கும் கோளறு பதிகத்தை எல்லாச் சிவாலயங்களிலும் காலை மாலை நேரங்களில் பாராயணம் செய்ய வேண்டுமெனவும், அத்துடன் வீடுகள்தோறும் பெரியவர்களும் குழந்தைகளும் நீராடி, விபூதியணிந்து ஒருமுறையாவது இவைகளைப் படிக்கவேண்டுமென்றும் விரும்பினுர்கள். அதற்காக இந்தப் பதிகத்தை (11 பாட்டுகள்) பல்லாயிரக் கணக்கில் அச்சிட்டுக் கேட்போருக்கெல்லாம் இலவசமாக அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தார்கள். அதையடுத்து, பல தேவஸ்தானங்களும், ஆதீனங்களும், சபைகளும், தரும சிந்தனையுற்ற தனிநபர்களும் லக்ஷக்கணக்கில் இதை அச்சிட்டுத் தமிழ்நாடு முழுவதும் இந்தப் பதிகம் முழங்க வகை செய்தனர். சிறந்த ஓதுவார்களைக் கொண்டு இவைகளை இசைத்தட்டில் அமைத்துத் தேவாலயங்களில் காலை மாலை நேரங்களில் ஒலிபரப்பச் செய்தார்கள். முத்து ஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய நவக்கிரஹக் கீர்த்தனைகளையும் அச்சிட்டுச் சங்கீதப் பயிற்சியும், பாடும் பழக்கமும் உள்ளவர்களுக்கு இனமாக அனுப்பி வைத்தார்கள். அன்றும் வானொலியிலும் கோளறு பதிகமும்

நவக்கிரகக் கீர்த்தனங்களும் ஒலி பரப்பப்பட்டன. இந்த ஏற்பாடுகள் எல்லாம் சரிவர நடை பெறுவதை ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் அவ்வப்போது கவனித்து வந்தார்கள். முடிவு நாளுக்கு முதல் நாள் ஸ்ரீ பெரியவர்கள் பத்திரிகைகளுக்கு அனுப்பிய செய்தியில் மக்கள் எவ்வித பீதியும் அடைய வேண்டாம் என்று தெரிவித்திருந்தார்கள். அது சமயம் நாட்டில் விபரீதம் எதுவும் நிகழவில்லையென்பது குறிப்பிடத் தக்கது.

### ஸ்ரீ புதுப் பெரியவர்கள் ஸ்ரீ பரமேஷ்டி குருநாதரின் அதிஷ்டானத்தில் ஏகாந்த வாஸம்

இரண்டு ஆசார்யர்களைத் தரிசிக்க இளையாத்தகுடிக்கு வரும் மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டே இருந்தது. அதனால் ஸ்ரீ புதுப்பெரியவர்களது தியானத்திற்கும் சாஸ்திரப் பயிற்சிக்கும் இடையூறு காணப்பட்டது. ஸ்ரீ குருநாதர், அவர்களைச் சில காலம் அதிஷ்டானத்திலேயே தங்கியிருக்கும்படி பணித்தார்கள், அவர்களைத் தரிசிக்கச் சிலருக்கு மட்டும் சில நேரங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. ஸ்ரீமடம் ஆஸ்தான வித்வான் ஒருவர் எப்பொழுதும் அவர்களுடன் இருக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆந்திரப் பிரதேசம் ஏலூரைச் சார்ந்த **மண்டலீக வேங்கட சாஸ்திரிகள்** என்னும் மகாவித்வான் ஸ்ரீ புதுப்பெரியவர்களுக்கு அன்றுடம் தர்க்க, வேதாந்த சாஸ்திரங்களில் உயர்தரப் பாடங்களைப் போதித்தார். அத்துடன் ஸ்ரீமத் பாகவதம் முழுமையும் ஒருமுறை ஒரு வித்வான் வாயிலாகக் கேட்க வேண்டுமென்று ஸ்ரீ புதுப் பெரியவர்கள் விரும்பினார்கள். **ஸ்ரீ வேங்கட சாஸ்திரிகள்** ஆந்திரதேசத்தில் பாகவத ப்ரவசனத்தில் இணையற்றவர். மாலை நேரங்களில் அந்த வித்வான் பாகவத சுலோகங்களைச் சொல்லி அவைகளுக்கு விளக்கத்தையும் தெலுங்கு பாஷையிலேயே கூறி வந்தார். தெலுங்கு பாஷையில் பல நாட்கள் ஸ்ரீ பாகவதத்தை ரஸித்துக் கேட்டதின் பயனாகப் பின்னர் நடைபெற்ற ஆந்திரதேச யாத்திரையில் ஸ்வாமிகள் மக்களுடன் சரளமாக அந்த பாஷையில் பேசும் திறனைப் பெற்றுவிட்டார்கள்.

### திருவாங்கூர் ராஜ குடும்பத்தினர் தர்சனம் செய்து கொண்டது

திருவாங்கூர் மஹாராஜா சித்திரைத் திருநாளும், அவர்களின் சகோதரிகளும், தாயார் சேது பார்வதி அம்மையாரும் 1962 ஜுலை மாதம் 4-ஆம் தேதி இளையாத்தகுடிக்கு விஜயம் செய்து இரு ஆசார்யர்களையும் தரிசித்துக் கொண்டார்கள். அவர்களை

முதலில் சம்ஸ்தான மரியாதைப்படி ஸ்ரீ மடம் மானேஜர் ஸி. எஸ். விச்வநாத ஐயர் பூர்ண கும்ப மரியாதைகளுடன் வரவேற்றார். அவர்கள் ஏராளமாகப் பூஜா திரவியங்கள், ரொக்கம், பட்டு வஸ்திரங்கள் இவைகளை இரு ஆசார்யர்களுக்கும் சமர்ப்பணம் செய்தார்கள். மகாராஜாவுக்குப் பெரியவர்கள் கல் இழைத்த மகர கண்டி ருத்ராக்ஷ மாலை ஒன்றையும் இரட்டை சால்வைகளையும் அதுபோல் மகாராணிக்கு கற்கள் இழைத்த தங்க ஹாரம் ஒன்றையும் அனுக்கிரஹித்து அளித்தார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்களை அரச குடும்பத்தினர் தனிமையில் தரிசித்துச் சிறிது நேரம் அவர்களுடன் சம்பாஷணை செய்து அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டார்கள்.

**முதலாவது வியாஸ பாரத-ஆகம-சில்ப வித்வத் ஸதஸ்**

அந்த வருஷத்திய வியாஸ பூஜை 17-7-62 ஆம் தேதி நடைபெற்றது. அந்தச் சாதுர்மாஸ காலத்தில் இதுவரை பாரத நாட்டில் எங்கும் நடைபெறாத ஓர் ஹிந்து கலாசார மஹாநாட்டை நடத்த எண்ணிய ஸ்ரீபெரியவர்கள் நம் நாட்டிலும், வெளி நாட்டிலும் உள்ள நூற்றுக்கணக்கான கலைஞர்களையும், மேதைகளையும் இளையாத்த குடியென்னும் அழகிய சிற்றூரில் சேர்த்ததைக் கண்டு உலகமே ஆச்சரியத்தில் ஆழ்ந்தது. ஐயாயிரம் மக்களுக்கு மேல் வசதியாக உட்கார்ந்து பார்க்க கூடிய ஓர் அலங்காரக் கொட்டகை, அதில் ஓர் அற்புதமான மேடை, வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்துள்ளவர்களுக்குத் தங்குவதற்கு வசதிகள்-இப்படி அந்தச் சிற்றூர் ஒரு வாரத்தில் ஓர் நகரத்தைப் போன்ற காக்ஷியை அளிக்கத் தொடங்கியது. இதை அமைப்பதில் தமிழ் நாட்டின் அரசு உள்துறை அமைச்சர் **பக்தவத்ஸலமும்**, மத்திய சர்க்காரும் செய்த உதவிகள் குறிப்பிடத் தக்கனவாகும். நமது புராதன ஆலயங்கள் எந்த அடிப்படையில் நிறுவப்பட்டன? அவை இன்றைக்கு இருக்கும் நிலை என்ன? அவைகளை அழியாமல் காப்பாற்ற எவ்வித நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதும் மேலும் நாட்டியம், நாடகம் மூலம் நமது தேசத்தின் கலாசாரத்தை வளர்த்து வந்தவர்களின் எண்ணிக்கை குறைந்து வருவதைத் தடுக்க, அவர்களுக்கு உத்ஸாகத்தை அளிக்க எவ்வித ஏற்பாடுகள் செய்யலாம் என்பதும் இந்த ஸதஸில் முக்கிய அம்சங்களாக அமைந்திருந்தன.

உலகமெங்கிலும் நமது இந்திய (ஹிந்து) கலாசாரம் எவ்விதம் பரவியுள்ளது என்பதைக் கண்டறிய பலமுறை மேல் நாடு

களிலும், கீழ் நாடுகளிலும் சுற்றி, ஆராய்ச்சிகள் நடத்தி அந்த ஆராய்ச்சிகளின் முடிவைப் புத்தகங்கள் மூலம் பல லக்ஷரூபாய்கள் செலவிட்டு வெளியிட்ட பெருமை டில்லியைச் சார்ந்த டாக்டர் எம். ரகுவீரா என்பவரைச் சார்ந்ததாகும். அவர் இந்த ஸதஸில் கலந்து கொண்டு தாம் கண்டறிந்ததையெல்லாம் விளக்கி விரியுரையாற்றினார். மேலும் பஞ்சாப் சர்வ கலாசாலையைச் சார்ந்த டாக்டர் டி. என். சுக்லா சில்ப சாஸ்திரத்தைப் பற்றிப் பேசினார். அமெரிக்க நாட்டைச் சார்ந்த டேனியல் ஸ்மித், பிரஞ்சு நாட்டைச் சார்ந்த பிலியோஸா இவர்கள் வைஷ்ணவ சிவாகமங்களைப் பற்றிப் பேசினார்கள். டில்லியிலுள்ள தாய்லாந்து நாட்டின் தூதர் சுகிக் நிர்மன் ஹேமிந்தா, டாக்டர் டி. என். ராமசந்திரன், டாக்டர் வி. ராகவன், அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியர், டில்லியைச் சார்ந்த துர்கா பிரஸாத் உபாத்யாய, அமரேச்வர சாஸ்திரி, அஸ்ஸாம் மாகாணத்தின் ப்ரேமநாத் சர்மா, காஷ்மீரத்தைச் சார்ந்த அமரேந்திர ஸரஸ்வதி, சென்னை கே. பாலசுப்ரமண்ய ஐயர், காரைக்குடி சா. கணேசன், தலாய் லாமாவின் பிரதிநிதிகள், சுக பிரம்மம் ராமஸ்வாமி சாஸ்திரி போன்ற பல மேதாவிகள் இந்த ஸதஸில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் பூஜை அனுஷ்டான நேரங்களைத் தவிர, பாக்கி சமயங்களில் ஒவ்வொரு நாளும் ஸதஸுக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்களாகிய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் அநேகமாகச் சபை நடக்கும் நேரங்களிலெல்லாம் மேடையில் அமர்ந்து நிகழ்ச்சிகளைக் கவனித்துவந்தார்கள். ஒவ்வொருநாளும், சிவாசாரியர்கள் சிவாகமங்களைப் பற்றியும் அதுபோல் வைஷ்ணவ பாஞ்சராத்திர, வைகானஸ பட்டாசாரியர்கள் விஷ்ணு ஆகமங்களைப் பற்றியும் உரையாற்றினார்கள். நமது சிற்பக் கலையை இன்றைக்கும் பாதுகாத்து வரும் ஸ்தபதிகள் பலர் மகா நாட்டில் சொற்பொழிவாற்றினார்கள். புதைப்பொருள் இலாகாவைச் சார்ந்த டாக்டர் நாகஸாமியின் தலைமையில் பழைமையான விக்ரகங்களின் கண்காக்ஷியொன்று அமைக்கப்பட்டிருந்தது. பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி தமது கோஷ்டியுடன் பிருந்தகானம் நிகழ்த்தினார்.

இரவு கலாநிகழ்ச்சிகளில் குறிப்பிடத்தக்கவை மெலட்டூர் நாட்டிய மேளாவின் ப்ரஹ்லாத சரித்திரம், கேரள நாட்டு கதக்களி, ஓட்டம் துள்ளல், ஆந்திர நாட்டின் புர்ரகதா, தோலு பொம்மலாட்டம், கர்நாடகத்தின் யக்ஷகானம், மகாராஷ்டிரத்தின் பாலே நடனம், தமிழ் நாட்டின் வில்லுப்பாட்டு, பொம்மலாட்டம்,

இசையுடன் பாரத ப்ரஸங்கம், தாய்லாந்து நாட்டின் அனுமார் நடனம் ஆகியவை. மேலும் இவை முடிந்த பின்னர் ஒவ்வொரு நாளும் தென்னிந்திய ஆலயங்களைப் பற்றிய திரைப்படம் (36mm) பெரிய அளவில் காட்டப்பட்டது. ஸ்ரீ புதுப் பெரியவர்கள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் இந்த ஸதஸின் நிகழ்ச்சிகளை மிகவும் ஊக்கத்துடன் கவனித்து கலைஞர்களைத் தனிமையில் சந்தித்து அவரவர்களுடன் பேசி எல்லோருக்கும் ஊக்கமளித்தார்கள்.

**நலிவுற்ற ஸர்க்கஸ் வீரர்களுக்கு உதவி**

ஸ்ரீ ஆசார்யர்கள் இளையாத்தகுடியில் விஜயம் செய்திருந்த சமயம் ஒருநாள் சுமார் ஐம்பதுக்கு மேற்பட்ட நபர்கள் பெண்டிர், குழந்தைகளுடன் கூட்டமாக ஸ்ரீ மடத்தின் ஜாகைக்கு முன் வந்து கூடி விட்டார்கள். அவர்கள் எழுப்பிய கூக்குரல் ஸ்ரீ ஆசார்யர்களின் செவிகளுக்கு எட்டிவிட்டது. அவர்களும் உடனே மடத்தின் சிப்பந்தி யொருவரை அனுப்பி அவர்களைப்பற்றிய விவரங்களை அறிந்துவரச் சொன்னார்கள். அண்மையில் பண நெருக்கடி காரணமாக மூடப்பட்ட ஓர் ஸர்க்கஸ் கம்பெனியிலிருந்து அவர்கள் பிரிந்து வந்தவர்கள் என்றும், அவர்களுக்கு வேறு வேலை கிடைக்க வழியில்லாததால் செட்டி நாட்டில் சஞ்சரித்து அன்பர்களிடம் யாசித்து அவர்கள் தரும் பொருளைக்கொண்டு ஜீவித்து வருவதாயும் அவர்கள் தெரிவித்தார்கள். இதன் உண்மையை ஒருவாறு தெரிந்துகொண்ட பின்னர் ஸ்ரீ ஆசார்யர்கள் மடத்தின் உக்ராணத்திலிருந்து அவர்கள் எல்லோருக்கும் மூன்று நாட்களுக்கு காணும்படியாக அரிசி, கோதுமை மாவு, பருப்பு, நெய் முதலான உணவுப் பொருள்களை அளிக்கும்படி உத்திரவிட்டார்கள். அவர்கள் மூன்று நாட்கள் அவ்வூரில் தங்கி வயிறார உண்டு களித்தார்கள். அவர்கள் ஊரைவிட்டுப் புறப்படும் பொழுது மேலும் உணவுப் பொருள்களையும், ஆடைகளையும், பணத்தையும் கொடுக்கச் செய்தார்கள்.

ஸர்க்கஸில் பணிபுரிபவர்களிடம் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு எப்பொழுதுமே ஓர் அனுதாபம் உண்டு. அவர்கள் (ஏகாக்ர சித்தத்துடன்) மனத்தை ஒருமைப்படுத்தி, கரணம் தப்பினால் மரணம் என்னும் சொல்லுக் கிணங்க தேகப்பயிற்சி வித்தைகளை ஜீவனத்திற்காகச் செய்து காட்டுகின்றவர்கள். தங்கள் உயிர்களுக்கு நேரக்கூடிய ஆபத்துக்களைக் கூடப் பொருட்படுத்தாமல் தியாக மனப்பான்மையுடன் இந்தத் தொழிலில் ஈடுபட்டவர்கள்.



ஸ்ரீ பரமாசார்யர்களுக்கு ஆந்திரபிரதேச பக்தகோடிகளால்
சமர்பிக்கப்பட்ட தங்கத்தினால் கட்டப்பட்ட ருத்திராக்ஷ கிரீடத்தை
ஸ்ரீபுதுப்பெரியவர்கள் சமர்பிக்கிறார்கள்



ஆந்திரப்ரதேசம ஏலூரில் பக்தர்களால் ஸ்ரீ ஆசார்யர்
களுக்கு சமர்பிக்கப்பட்ட தங்க கிரீடத்தையும்
ஸ்ரீ ஜயேந்திரஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு புஷ்பகிரீடமும்
மாலையும் மண்டலிக ஸ்ரீ வேங்கட சாஸ்திரிகள்
சமர்பிக்கிறார்கள்



1951-இல் ஆசார்யர்களுக்கு நடைபெற்ற பட்டின ப்ரவேசம்: நன்கு அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் பக்தர்களுடன் பவனி வருகிறார்கள்



நன்ருக அலங்கரிக்கப்பட்ட யானைமீது
ஸ்ரீபுதுப்பெரியவர்கள் பவனி வ்ருகிருர்கள்

23-11-66-இல் குருக்ஷேத்திரம் ஜோதி ஸரஸ்ஸில் ஸ்ரீ ஆசார்யர்களால் நிர்மாணிக்கப்பட்ட கிருஷ்ண அர்ஜுன உபதேசம் சலவைக்கல்லில் பிரதிஷ்டை செய்யப்பட்டது




1966-இல் ஸ்ரீபரமாசார்யர்கள் விருப்பப்படி ஸ்ரீகுருக்ஷேத்திரத்தில் ஸ்ரீபகவத்பாதாள் சிஷ்யர்களுக்கு கீதாபாஷ்ய உபதேசம் செய்வதை சலவைகல்லில் பிரதிஷ்டை செய்யப்பட்டது



சென்னை பூந்தமல்லிக்கு அடுத்த நாஸரத்பேட்டையில் 1966-இல் ஸமஸ்கிருத எஜுகேஷனல் சங்கத்தை ஸ்ரீ பரமாசார்யர்கள் ஆரம்பித்து வைத்து அருளாசி வழங்குகிறார்கள். படத்தில் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் (முதல் மந்திரி) மற்றும் பல பிரமுகர்கள் இருக்கிறார்கள்



ஸ்ரீபரமாசார்ய்ர்கள் ஸ்ரீ புதுப்பெரியவர்களுடன் முக்கியமான விஷயத்தைப்பற்றி பேசிக் கொண்டிருக்கிருர்கள்



1964-இல் திருப்பதியில் ஸ்ரீ பரமாசர்ர்யர்கள் திருப்பதி தேவஸ்தானத்தாரால் ஆரம்பிக் கப்பட்ட ஹிந்து தர்மபிரதிஷ்டானம் என்ற ஸ்தாபனத்தைத் துவக்கிவைக்கிருர்கள்



ஆகம சில்ப சதஸ்ஸில் வைகானஸ பண்டிதர்களின் சதஸ்



1962-இல் இளையாத்தங்குடி ஆகம சில்ப சதஸ்ஸில் அமெரிக்க நாட்டை சேர்ந்த டேனியல் ஸ்மித்துடன் அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியார் பேசிக்கொண்டிருக்கிறார்

ஸ்ரீ ஆசார்யர்கள் எப்பொழுதாவது ஸர்க்கஸைக் கண்டிருக்கிறார்களா என்னும் சந்தேகம் இங்கே எழுகின்றதல்லவா? சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஆந்திர நாட்டைச் சார்ந்த **ப்ரொபஸர் ராமமூர்த்தி** என்பவர் ஒரு பெரிய ஸர்க்கஸ் கம்பெனியை நடத்திவந்தார். இந்திய நாடு முழுவதும் பெரிய நகரங்களில் அந்தக் கம்பெனி தனது காக்ஷிகளைக் காட்டிவந்தது. அவர் நடத்திக் காட்டிய பல பயிற்சிகளில் குறிப்பிடத்தக்க ஒன்றைக் கூற விரும்புகிறேன். தனது இடுப்பின் இருபக்கங்களிலும் ஒவ்வொரு மோட்டார் காரைக் (Ford Car) கயிற்றினால் இணைத்து அவைகளில் உள்ள ஓடும் இயந்திரங்களை இயங்கச் செய்துவிடுவார். அப்பொழுது அவர் இரண்டு கார்களையும் நகர விடாமல் அவர் நின்ற இடத்திலேயே சில நிமிடங்கள் நின்று காட்டுவார். காய்கறிகள் சேர்ந்த உணவை மட்டும் ஏற்று வந்த அவர் சாஸ்திரியமான யோகாப்யாஸத்தையும் பயின்றுவந்தார்.

அந்த ஸர்க்கஸ் கம்பெனி கும்பகோணத்தில் முகாம் செய்த சமயம் ஸ்ரீ ஆசார்யர்களையும் தரிசித்து யோக மார்க்கத்தில் தனக்கிருந்த சில ஐயங்களைப்பற்றித் தெளிவுபடுத்திக்கொண்டார். அவர் தமது கோஷ்டியின் நிகழ்ச்சிகளை ஸ்ரீ ஆசார்யர்கள் நேரில் வந்து காணவேண்டுமென்று கோரினார். இது போன்ற நிகழ்ச்சிகளைக் காண அவர்கள் வருவது வழக்கமில்லை யென்பதை **ராமமூர்த்தி** அறியவில்லை. அப்பொழுது பக்கத்தில் இருந்தவர்கள் இதைப்பற்றி விளக்கியதும், மடத்தின் பின்புறமுள்ள பெரிய தோட்டத்திலேயே தமது கோஷ்டியின் ஒரு பகுதியை அழைத்துச் சிற்சில முக்கியமான பயிற்சிகளைச் செய்துகாட்டினார். ஸ்ரீ ஆசார்யர்களுக்கு அப்பொழுது வயது சுமார் இருபது இருக்கும். அந்தப் பயிற்சிகளை யெல்லாம் ஸ்ரீ ஆசார்யர்கள் கண்டு மகிழ்ச்சியடைந்து **ப்ரபொஸர் ராமமூர்த்தியைப்** பாராட்டி அவருக்குப் பட்டாடையும் அளித்து அவரைப் பாராட்டினார்கள்.

**பாரத-சீன யுத்தம்: வெற்றிக்கான ரேடியோ செய்தி**

1962-இல் நவம்பர் மாதம் ஆசார்யர்கள் இளையாத்தகுடியில் விஜயம் செய்திருந்த சமயம் சைனா தேசம் நமது நாட்டின் மேல் தொடுத்த சண்டையில் நாம் வெற்றி பெற, மக்கள் சர்க்காருக்குத் தங்கம் அளித்து உதவவேண்டுமென்று அறிக்கை விட்டார்கள். அது சமயம் ஆசார்யர்கள் அகில இந்திய ரேடியோ மூலம் விடுத்த செய்தியாவது:

“ நம் நாட்டுக்கும் மக்களுக்கும் ஆபத்து நேரும் பொழுதெல்லாம் நம்மை ரக்ஷித்து வரும் பராசக்தி, பாரதத்தின் ஒவ்வொரு பிராந்தியத்திலும் வெவ்வேறு உருவமாக எழுந்தருளியிருக்கிருள். மஹாராஷ்டிரம்—துளஜா பவானி; காஷ்மீரம்—க்ஷீரபவானி; பாஞ்சாலம்—ஜ்வாலா முகி; கூர்ஜரம்—அம்பாஜி; உத்தர ப்ரதேசம்—விந்திய வாஸினி; வங்கம்-காளி; அஸ்ஸாம்—காமாக்யா; கர்நாடகம்—சாமுண்டீ; கேரளம்—பகவதீ; தமிழ்நாடு—காமாக்ஷி; இவ்வாறு அம்பிகை பல பெயர்களுடனும், உருவங்களுடனும் ஆங்காங்கு அமர்ந்து குழந்தைகளாகிய நம்மைக் காப்பாற்றி வருகிருள். அம்பாளின் பெயர் ஹைமவதி என்றும் உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஹேமம் என்பது தங்கத்திற்குப் பெயர். நாம் நமது ஜன்மபூமியை ரக்ஷிப்பதற்காக நமக்குக் கிடைக்கக் கூடிய தங்கத்தைத் தேசத்திற்காக அர்ப்பணம் செய்துவருகிருேம். ஒவ்வோர் ஊரிலும், கிராமத்திலும் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் திருவடிகளில் ஓர் எள் அளவாவது தங்கத்தினுல் அமைத்த புஷ்பத்தை அர்ப்பணம் செய்து அதன்பின் தேசத்துக்காக அர்ப்பணம் செய்வோமானுல் நமது நாட்டுக்கு வெகுசீக்கிரத்தில் விஜயலக்ஷ்மி எதிர் கொண்டு வருவாள்.

சத்ருக்களிடத்திலும் நமக்கு எப்பொழுதும் சிநேகத்தன்மை இருக்க வேண்டும். அதுவே காமாக்ஷியின் கடாக்ஷத்திற்கு முக்யமான ஓர் அடையாளம். சத்ருக்கள் தப்பு வழியில் சென்ருல் அவர்களை நாம் தண்டிக்க வேண்டியது அவசியம். ஓர் அரசன் அல்லது நீதிபதி தனது மித்திரனே, புத்திரனே தப்புவழியில் சென்ருல் அவர்களை அவன் எப்படித் தண்டிக்கின்ருனே, அது போலவே சத்ருக்களையும் தண்டிக்க வேண்டும். ஆனுல் அவர்களிடம் த்வேஷம் இருக்கக்கூடாது. த்வேஷத்துடன் எந்தக் காரியத்தையும் செய்யலாகாது. பகவத்கீதையில் கிருஷ்ணபகவான் சொல்லும்பொழுது அகங்கார மில்லாமலும் பற்றில்லாமலும் உலகம் முழுவதையும் நாம் நாசம் செய்தாலும் பாவம் நம்மை ஒட்டாது. அவ்விதமே யுத்தத்தை நாம் அவசியமாகச் செய்ய வேண்டி நேரும்பொழுதும் த்வேஷமும் பகைமையும் நமக்கு இருக்கலாகாது. எல்லோரிடத்திலும் நமக்கு அன்பே இருக்கவேண்டும்.

முக்கியமாக நான் சொல்ல விரும்புவது, நமக்கு வெற்றி கிடைக்கும் வரை நீதியில் நிபுணர்களாக இருப்பவர்கள், நாட்டை ஆளும் மந்திரிகளிடம் தங்களது உள்ளத்தில் தோன்றும் நீதி முறைகளை அவசியம் தெரிவிக்க வேண்டியதுதான். ஆனுல் பிரசங்க மேடைகளிலோ, எதிர்க்கக்ஷி முறையிலோ அந்த அபிப்

பிராயங்களைத் தெரிவிக்கவேண்டாம். எல்லோருடைய அபிப்ராயங்களையும் ஒரே கருத்தில் அமைத்து நாடு வெற்றி பெற நாம் காரியத்தில் ஈடுபடவேண்டும்.

கீதையின் முடிவில்-

"யத்ர யோகீச்வர : க்ருஷ்ண :
யத்ர பார்த்தோ தனுர்தர :
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர்
த்ருவா நீதிர் மதிர் மம."

என்று காண்கிறது. அதுபோல

ஹ்ருதயத்தில் ஈச்வர பக்தியும், கையில் சத்ருக்களை சிக்ஷிக்கும்படியான அஸ்திரமும் (வில்லும்) இருந்து நம் நாடு எப்பொழுதும் வெற்றி, ஐச்வர்யம், நல்ல நீதிமுறை இவைகளுடன் விளங்கப் பாடுபட வேண்டும். அம்பிகையின் கிருபையினால் வெகுவிரைவில் ஜயம் உண்டாகி உலகம் முழுவதும் க்ஷேமமாக வாழவேண்டும்.

"ஸமர விஜயகோடி ஸாதகானந்ததாடி
பரமசிவ வதூடி பாது மாம் காமகோடி"–மூக பஞ்ச சதி.

ஸமரம் என்றால் யுத்தம். யுத்தத்தின் வெற்றி முடிவுதான் கோடி. ஆகையால் விஜய கோடி என்று அம்பாளை வர்ணிக்கிறார் ஊமைக் கவி. மஹாலக்ஷ்மியின் மூர்த்திகளில் எட்டு மூர்த்திகள் (அஷ்ட லக்ஷ்மி) உண்டு. அவைகளில் விஜயலக்ஷ்மி ஒன்று. அந்த அம்பிகையின் கிருபை நமக்குப் பூரணமாக இருப்பதால் விஜய லக்ஷ்மி நமது ஜன்மபூமிக்கு வெகு சீக்கிரமாக வருவாள். அவளைக் கீழே கண்ட எட்டு விதமான மங்கள திரவியங்களுடன் கூடிய பூர்ண கும்பத்துடன் வரவேற்போமாக!

(1) அகங்காரம் இன்மை (2) ஒற்றுமையோடுசேர்ந்த முயற்சி (3) தியாக புத்தி (4) பகைவர்களிடத்திலும் த்வேஷமில்லாமல் இருத்தல் (5) எல்லா உலகமும் க்ஷேமமாக இருக்கவேண்டும் என்ற பிரார்த்தனை (6) பொய்மை விலக்கல் (7) ஒரே தலைமையில் எல்லாக் காரியங்களையும் செய்தல் (8) நன்னடத்தை. இவைதாம் மங்கள திரவியங்களாகப் பாவிக்கப்படுகின்றன.

**இளையாத்தகுடியில் பெருமாள் ஆலய சம்ப்ரோக்ஷணம்**

இளையாத்தகுடி நகரத்தார்களில் கழனிவாசல் பிரிவைச் சார்ந்த ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளுக்கு அஷ்டபந்தனம் செய்து சம்ப்ரோக்ஷணம் செய்ய நகரத்தார் தீர்மானித்திருந்தார்கள். அந்தக் கோவிலைச் சார்ந்தவர்கள் கேட்டுக்கொண்டதன்பேரில் ஸ்ரீ மடம் முகாம் இளையாத்தகுடியில் மேலும் சிறிது நாள்

நீடிக்கப்பட்டது. ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப்பெரியவர்களும் முதல் நாளே ஆலயத்திற்குச் சென்று ஆகம முறைப்படி நடைபெறும் பூர்வாங்க ஹோமம் ஆகியவைகளை நேரில் கவனித்து மறுநாள் 2-2-1963-ஆம் தேதி காலை ஆலயத்துக்குச் சென்று சம்ப்ரோக்ஷணத்தை நடத்திவைத்தார்கள். அன்று இரவு இரண்டு பெரியவர்களுக்கும் நகரத்தார் ஊர்வலம் ஒன்று ஏற்பாடு செய்திருந்தார்கள்.

ஸ்ரீ பெரியவர்கள் மட்டும் 7-2-1963-ஆம் தேதி காலை இளையாத்தகுடியிலிருந்து புறப்பட்டு அன்றும் மறுநாளும் பில்லமங்கலம் சத்திரத்தில் பூஜையுடன் தங்கினார்கள். 9 ஆம் தேதி கோனாப்பட்டில் தங்கி 10-ஆம் தேதி கோட்டையூருக்கு விஜயம் செய்தார்கள். 16-2-1963-ஆம் தேதி ஸ்ரீ பரமகுருஸ்வாமிகளின் ஆராதனை ஸ்ரீ. பெரியவர்கள் சந்நிதானத்தில் கோட்டையூரிலும், ஸ்ரீ புதுப் பெரியவர்கள் ஸந்நிதியில் இளையாத்தகுடியிலும் நடைபெற்றது. 17 ஆம் தேதி கோட்டையூர் நகரத்தார் மாபெரும் ஊர்வலம் ஒன்றை நடத்திவைத்தார்கள். 20-2-63-ஆம் தேதி அங்கிருந்து கொத்தமங்கலத்துக்கு விஜயம் செய்தார்கள். 22-2-1963-ஆம் தேதி மகாசிவராத்திரி பூஜை கொத்தமங்கலத்தில் நடைபெற்றது. 24-2-1963-ஆம் தேதி ஸ்ரீ குருஸ்வாமிகள் ஆராதனை கொத்தமங்கலத்திலேயே நடைபெற்றது. குரு ஆராதனை நிமித்தம் 21-2-63-ஆம் தேதி கொத்தமங்கலம் விஜயம் செய்த ஸ்ரீ புதுப் பெரியவர்கள் 24-2-63-ஆம் தேதி இரவு இளையாத்தகுடிக்குத் திரும்பி விஜயமானார்கள். 25-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் கடியாப்பட்டிக்கு விஜயம் செய்தார்கள். சென்ற 37 ஆண்டுகளாக ராமசந்திரபுரம் என்னும் மற்றொரு பெயர் கொண்ட அந்த ஊரில் (கடியாப்பட்டியில்) வசித்துவரும் இந்தப் புத்தகத்தின் தொகுப்பாசிரியர் **எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரியும்** மற்றும் நகரத்தார்களும் ஊர் எல்லையில் ஸ்ரீ ஆசார்யர்களைப் பூர்ணகும்பத்துடன் வரவேற்றார்கள். அன்று சென்னை அட்வகேட் **ஏ. நாகராஜ அய்யர்** குடும்பத்துடன் வந்திருந்து ஸ்ரீ ஆசார்யர்களுக்குப் பிக்ஷா வந்தனம் செய்தார். மறுநாளும் ஸ்ரீ பெரியவர்கள் அந்த ஊரில் தங்கினார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்கள் 16-3-1963 முடிய இளையாத்தகுடியில் தங்கியிருந்தார்கள்.

ஸ்ரீ ஆசார்யர்கள் பிப்ரவரி 27 திருமயத்திலும் 28-ஆம் தேதி நமனசமுத்திரத்திலும் தங்கி 1-3-63-அன்று காலையில் புதுக்கோட்டைக்கு விஜயமானார்கள். **டி. வி. எஸ்.** ஸ்தாபனத்திற்கு எதிரில் ஆயிரக்கணக்கான மக்கள் கூடி, பஜனை கோஷ்டியுடனும்

வேத கோஷத்துடனும் உத்ஸாமாக வரவேற்பு அளித்தார்கள். ஒன்பது நாளும் ஸ்ரீ ஆசார்யர்கள் பழைய அரண்மனை முன்பு அமைக்கப்பட்டிருந்த மிகப் பெரிய அலங்காரக் கொட்டகையில் பூஜை நடத்தினர்கள். வழக்கப்படி முதல்நாள் பொதுமக்கள் பிக்ஷா வந்தனமும் மறுநாள் புதுக்கோட்டை மஹாராஜா பிக்ஷாவந்தனமும் நடைபெற்றன. ஸ்ரீ ஆசார்யர்கள் சந்தைப் பேட்டையிலுள்ள சங்கர மடத்துக்கு விஜயம் செய்து வந்தார்கள். ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் அழைப்பின் பேரில் ஸ்ரீ புவனேச்வரி ஆலயத்துக்குச் சென்று அம்பாள் தர்சனம் செய்து வந்தார்கள். 9-3-1963-ஆம் தேதி உள்ளூர்வாசிகளும் **டி. வி. எஸ்.** ஸ்தாபனத்தாரும் சேர்ந்து மிகப் பெரிய ஊர்வலம் ஒன்று நடத்திவைத்தார்கள். 10-ஆம் தேதி வபன பூர்ணமிக்கு .0 கிலோ மீட்டர் தூரத்தில் சின்னையா சத்திரம் என்னும் ஊருக்கு விஜயம் செய்து காரைக்குடி **எஸ். ஆர். எம். எஸ். நாராயணன் செட்டியார்** எஸ்டேட் கோசாலையில் ஏழு நாட்கள் தங்கியிருந்தார்கள்.

**தஞ்சாவூர் டெக்ஸ்டைலுக்கு விஜயம்**

ஸ்ரீ ஆசார்யர்கள் சின்னையா சத்திரத்திலிருந்து 17-ஆம் தேதி காலை கிளம்பி, அன்று பெருங்களூரிலும், 18-ஆம் தேதி ஆதனக் கோட்டையிலும், 19-ஆம் தேதி கண்டரக்கோட்டையிலும், 20-ஆம் தேதி **சாமிநாதய்யர்** முந்திரித் தோப்பிலும், அன்று இரவு மாப்பிள்ளை நாயக்கன்பட்டி பள்ளிக்கூடத்திலும் தங்கி 21-ஆம் தேதி காலை தஞ்சாவூர் (Textiles) நூற்பு ஆலைக்கு விஜயம் செய் தார்கள். மாப்பிள்ளை நாயக்கன் பட்டியில் தஞ்சை கலெக்டர் **ஏ. வேத நாராயணன்** ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசித்துக்கொண்டார். நூற்பு ஆலையில் அதன் மானேஜிங் டைரெக்டர் கோட்டூர் திருவேங்கட முதலியாரும், டைரெக்டர் அர்ஜுனராஜாவும் ஸ்ரீ ஆசார்யர்களை வரவேற்றுப் பூஜைக்கு வேண்டிய இட வசதிகள் ஏற்படுத்திக் கொடுத்தார்கள். அன்றும் மறுநாளும் ஸ்ரீ மடத்துக்கு ஏற்பட்ட எல்லாச் செலவுகளையும் ஏற்றுக் கொண்டார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்களும் இளையாத்தகுடியி லிருந்து 17-3-1963-ஆம் தேதி புறப்பட்டுத் தொடர்ந்து ஸ்ரீ பெரியவர்கள் தங்கிய ஊர்களில் தங்கி 24-ஆம் தேதி தஞ்சாவூர் வந்து சேர்ந்தார்கள்.

**தஞ்சாவூரில் வஸந்த நவராத்ரி**

ஸ்ரீ ஆசார்யர்கள் தஞ்சாவூர் நூற்பு ஆலையிலிருந்து 22-3-63 இரவு கிளம்பி ஆனந்தா லாட்ஜ் **கோபாலசாமி ஐயர்** ஜாகைக்கு விஜயம் செய்தார்கள். அங்கு 25-ஆம் தேதி பங்குனி அமாவாஸை யன்று ஸ்ரீ பரமேஷ்டி குருஸ்வாமிகளின் ஆராதனை நடைபெற்றது. 26-ஆம் தேதி முதல் வஸந்த நவராத்ரி சம்பந்தமான ஹோமங்கள் பாராயணங்கள் நடைபெற்றன. 3-4-63-ஆம் தேதி கலச தீர்த்தம் ஸ்ரீ புதுப் பெரியவர்களுக்கு அபிஷேகம் செய்யப்பட்டது. 4-4-63-ஆம் தேதி இரு ஆசார்யர்களும் மேலவீதி சங்கரமடத் துக்கு விஜயம் செய்தார்கள். 5-ஆம் தேதி துவாதசியன்று சென்னை அபிராமபுரம் **வி. டி. ராஜன்** தமது குடும்பத்துடன் வந்து பிக்ஷாவந்தனம் செய்தார். அன்று அவர் ஓர் வித்வத்சபை நடத்தி வித்வான்களுக்குத் தக்கபடி ஸம்மானம் செய்தார்.

**பங்காரு காமாக்ஷியம்மன் கும்பாபிஷேகம்**

தஞ்சை நகரம் மேல வீதியில் உள்ள ஸ்ரீ பங்காரு காமாக்ஷியம்மன் விக்ரஹம், முன்பு காஞ்சீபுரம் ஸ்ரீ காமாக்ஷி யம்மன் ஆலயத்தில் இருந்தது. சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் முகம்மதியர் ஹிந்து ஆலயங்களையும் அவைகளில் உள்ள விக்ரஹங்களையும் அழிக்கத் தொடங்கியபோது அர்ச்சகர்கள் இந்த விக்ரஹத்தைக் காப்பாற்றும் நோக்கத்துடன் எப்படியோ மறைத்து உடையார்பாளையம் வரை கொண்டு வந்தார்கள். அந்த விக்ரஹம் உடையார்பாளையம் ஜமீந்தாரின் பாதுகாப்பில் சில வருடங்கள் இருந்தது. அதே சமயம் காஞ்சீபுரத்திலிருந்த ஸ்ரீகாமகோடிபீடத்தின் ஸ்ரீ மடமும் தஞ்சாவூரையடைந்து சிறிது காலம் அங்கேயே தங்கினதாயும் அப்போது இருந்த ஆசார்யர்களும் மகாராஷ்டிரமன்னர்களால் பூஜிக்கப்பட்டார்கள் என்றும் பின்னர் ஸ்ரீ மடம் கும்பகோணத்தை அடைந்ததாகவும் கூறப்படுகிறது. உடையார் பாளையத்திலுள்ள பங்காரு காமாக்ஷியம்மன் விக்ரஹத்திற்குத் தஞ்சாவூரில் ஓர் ஆலயம் அமைத்து அதில் அம்பிகையைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமாய் அப்பொழுது இருந்த ஆசார்யர்கள் மன்னரிடம் தெரிவித்தாகவும் மன்னரும் அதன்படி ஆலயம் அமைத்து உடையார்பாளையத் திலிருந்து அந்த விக்ரஹத்தைத் தஞ்சைக்குக் கொணர்ந்து பிரதிஷ்டை செய்ததாகவும் கர்ணபரம்பரையாக வந்த செய்தி மூலம் தெரியவருகிறது.

இந்த ஆலயத்துக்குச் சென்ற 1-6-1941இல் ஜீர்ணோத்தாரண கும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்பொழுது ஸ்ரீ ஆசார்யர்களே நேரில் விஜயம் செய்து கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள். அதற்குப் பின் இப்பொழுது நடைபெறும் கும்பாபிஷேகத்திற்கு ஸ்ரீ ஆசார்யர்களும், ஸ்ரீ புதுப் பெரியவர்களும் சேர்ந்து விஜயம் செய்து நடத்துவதைக் காண ஆயிரக்கணக்கான பக்தர்கள் கூடி யிருந்தனர். கும்பாபிஷேகம் 7-4-1963 அன்று காலை 10 மணிக்கு மேல் மிதுனலக்னத்தில் நடைபெற்றது. அன்று அம்பாளுக்கு மாணிக்க வீணையொன்றையும் தங்கமுலாம் பூசின வெள்ளிப் பிரம்பு இரண்டையும் ஸ்வாமிகள் சமர்ப்பணம் செய்தார்கள்.

9-4-1963-ஆம் தேதி மாலை கலெக்டர் வேத நாராயணன் அரண்மனை திறந்த வெளியில் ஏற்பாடு செய்த கூட்டத்தில் சுமார் 10,000 மக்கள் கூடி ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ புதுப் பெரிய வர்களுக்கும் அஞ்சலி செலுத்தினார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் அன்று ஒரு மணி நேரம் பேசி நல்லுரை வழங்கினார்கள்.

தஞ்சாவூரில் ஸ்ரீ மடம் முகாம் ஏற்பாடுகளை லலிதாமஹால் ஆத்ரேய சாமிநாதனும், அவர் சகோதரர் கமலா ஸ்டோர் சந்தான ராமனும் தங்கள் நண்பர்களின் உதவியுடன் கவனித்துக் கொண் டார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் வடக்கு வீதி ஸ்ரீ மடம் பாடசாலை கட்டிடத்துக்கும் விஜயம் செய்தார்கள். கும்பாபிஷேகத்தன்று அங்கு பூஜை நடைபெற்றது.

### ராமேச்வரத்தில் ஸ்ரீ ஆதிசங்கர பிரதிஷ்டை

ஸ்ரீ காமாக்ஷி அம்பிகையின் ஆலய கும்பாபிஷேகத்தைத் தஞ்சையில் நடத்தியதைத் தொடர்ந்து ராமேச்வரத்தில் சென்ற ஐந்து வருடங்களாக நடைபெறும் ஸ்ரீ ஆதிசங்கர விமானத் திருப்பணியைப் பூர்த்தி செய்து கும்பாபிஷேகத்தையும் நடத்த ஸ்ரீ ஆசார்யர்கள் திருவுளம்கொண்டார்கள் போலும். ராமேச்வரம் அக்னி தீர்த்தக் கடற்கரையில் சுமார் ஐந்து லக்ஷ ரூபாய் செலவில் இந்த விமானம் கட்டப்பட்டுள்ளது. ஸ்ரீ ஆதிசங்கரர், அவர்களின் நான்கு சிஷ்யர்களின் மிக பிரம்மாண்டமான விக்ரகங்கள் தயாரிக்க வடக்கே ஜயபுரிலிருந்து வெள்ளைச் சலவைக் கற்கள் தருவிக்கப்பட்டுக் காஞ்சீபுரத்தில் கைதேர்ந்த சிற்பிகளால் அவை உருவாக்கப்பட்டன. இதைக் கட்டி முடிக்க ஸ்ரீ மடத் தின் சிஷ்யர்களும், ஆசார்ய பக்தர்களும் ரொக்கமாகவும் இரும்பு, ஸிமெண்டு முதலான சாமான்கள் மூலமாகவும் தாராளமாக உதவி செய்தனர். இந்தப் புதிய அமைப்பு ராமேச்வரத்

தலத்திற்கே விசேஷ சோபையைத் தந்து வருகிறது. யாத்ரிகர்கள் யாவரும் தவருது இதைத் தரிசித்துச் செல்கின்றனர்.

தஞ்சை நகரை விட்டு இரு ஆசார்யர்களும் 10-4-1963 காலை புறப்பட்டுத் திபாம்பாள்புரம், ஒரத்த நாடு, பாப்பாநாடு, பட்டுக்கோட்டை, ஆண்டிக்காடு, சேது பாவா சத்திரம், அடைக்கத்தேவன், திருவத்தேவன், மீமிசல் ஆகிய இடங்களில் ஒவ்வொரு நாள் தங்கி உப்பூரை அடைந்து அங்கு பிரஸித்தி பெற்ற விநாயகரைத் தரிசித்துக்கொண்டார்கள். முன்னுளில் ராமேச்வரம் செல்கின்றவர்கள் யாத்திரையின் முதல் கட்டமாக இந்த விநாயகரை முதலில் தரிசித்து மேலும் யாத்திரையைத் தொடங்குவது வழக்கமாக இருந்து வந்தது. ஸ்ரீ ஆசார்யர்களின் ஆக்ஞைப்படி ஸ்ரீ புதுப்பெரியவர்கள் மட்டும் 21-4-1963-ஆம் தேதி தேவீபட்டணம் மற்றும் நவபாஷாணம் சென்று சமுத்திர ஸ்நானம் செய்து நவபாஷாணத்தில் நவகிரஹ பூஜை செய்து ஒன்பது வேத வித்பன்னர்களுக்குத் தலா ஒரு பவுனும் மற்றும் வஸ்திரம் முதலானவைகளையும் தானமாக அளித்தார்கள். உப்பூரிலிருந்து 22-4-1963-ஆம் தேதி இரவு தனித்தனி விசைப் படகுகளில் இரு ஆசார்யர்களும் புறப்பட்டு, கடல் மார்க்கம் 23-4-63 நண்பகலில் ராமேச்வரத்தை அடைந்தார்கள். அன்று காலை முதலே ராமேச்வரம் கடற்கரையில் சர்க்கார் அதிகாரிகளும், தேவஸ்தான தர்மகர்த்தாக்களும் மற்றும் ஸ்தானிகர்கள், சிப்பந்திகள், பொது மக்கள் முதலானவர்களும் நூற்றுக்கணக்காகக் கூடி இரு ஆசார்யர்களையும் வரவேற்கக் காத்திருந்தனர். 28-4-1963-ஆம் தேதி சங்கர ஜயந்தியன்று கும்பாபிஷேகத்திற்கு முகூர்த்தம் நிர்ணயம் செய்யப்பட்டிருந்தது. 26-4-63-ஆம் தேதி அன்று யாகசாலையில் கலச ஸ்தாபனம், ஹோமம் முதலான பூர்வாங்க பூஜைகள் ஆரம்பிக்கப்பட்டன. 23-4-1963-ஆம் தேதி ஸ்ரீ புதுப் பெரியவர்கள் விசைப்படகில் தனுஷ்கோடி சென்று அங்கு புனித ஸ்நானம் செய்து அந்தணர்களுக்கு விசேஷமாகத் தானம் செய்து வந்தார்கள்.

### ராமநாதஸ்வாமிக்குக் கங்காபிஷேகம்

சங்கர ஜயந்தியன்று காலையில் இரு பெரியவர்களும் ஸ்ரீ ராமநாத ஸ்வாமி ஆலயத்திற்கு விஜயம் செய்து ஸ்வாமிக்குத் தங்கள் திருக்கரங்களினுலேயே கங்கை நீர் அபிஷேகம் செய்தார்கள். ஸ்ரீ காமகோடி பீடாதிபர்களுக்கு இந்தத் தேவஸ்தானத்தில் அளித்துவரும் தனிச் சிறப்பு வாய்ந்த மரியாதைகளில் இதுவும்

ஒன்றுகும். அபிஷேகம் முடிந்து இரு ஆசார்யர்களும் ஸ்ரீ பர்வத வர்த்தனி அம்பாளைத் தர்சனம் செய்துகொண்டு அக்னிதீர்த்தக் கரையை அடைந்தார்கள்.

**ஸ்ரீ ஆதி சங்கரர் மண்டப-கும்பாபிஷேகம்**

மூன்று நாட்களாக நடைபெறும் யாகசாலைக்கு 28-4-63 அன்று காலை 8½ மணிக்கு விஜயம் செய்தார்கள். யாகசாலையில் வேத கோஷத்துடன் நடைபெற்று வந்த பூர்ண ஆஹுதியையும், தீபாராதனை, ஷோடசோபசாரங்கள் ஆகியவைகளைத் தரிசித்துக் கொண்டார்கள். அங்கு ஸ்தாபனம் செய்யப்பட்டிருந்த புண்ய தீர்த்தங்கள் நிரம்பிய குடங்கள் மேளவாத்யத்துடன் பிரதக்ஷிண மாக மண்டபத்துக்குக் கொண்டுவரப்பட்டன. ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தாற்காலிகமாகக் கட்டப்பட்ட ஏணியின் வழியாக மண்டபத்தின் உச்சியை அடைந்து அங்கே பொருத்தப் பட்டிருந்த ஐந்து பெரிய கலசங்களுக்கும் முதலில் அபிஷேகம் செய்தார்கள். இந்த அபிஷேகம் நடைபெறுவதை ஸ்ரீ ஆசார்யர் கள் அக்னி தீர்த்தக் கரையில் கடலின் நீர்ப்பரப்பில் நின்றவாறு தரிசித்தார்கள். அங்கே குழுமியிருந்த ஆயிரக்கணக்கான பக்தர் களும் அதுபோலவே அங்கே நின்றவாறே தர்சனம் செய்தார்கள். அதையடுத்து முதலில் ஆஞ்சநேயருக்கும் பின்னர் த்வாதச லிங் கங்களுக்கும் அபிஷேகம் நடைபெற்றது. அதையடுத்து மேதா தக்ஷிணாமூர்த்தி யந்திரத்துக்கும் சுமார் 2½ மீட்டர் உயரத்தில் வெள்ளைச் சலவைக் கல்லால் அமைக்கப் பெற்றுள்ள ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களுக்கும் நான்கு சிஷ்யர்களின் பிம்பங்களுக் கும் ஸ்ரீ ஆசாரியர்களே தங்கள் திருக்கரங்களினால் அபிஷேகம் செய்தார்கள். மாலையில் ஸரஸ்வதி விக்ரஹத்தை வாசகசாலையில் பிரதிஷ்டை செய்தார்கள். சுமார் 16½ மீட்டர் உயரத்தில் மிகவும் கம்பீரமாகக் கடற்கரையில் அமைந்துள்ளது இந்தச் சங்கர பக வத் பாதர் மண்டபம். அஷ்ட கோணத்தில் அமைந்துள்ள இந்த மண்டபத்தின் சுற்றுப்புறத்தில் புராணங்களில் சம்பந்தப்பட்ட பெரியோர்கள், பக்தர்கள், பதிவிரதைகள் ஆகியவர்களின் சிலை களையும் அமைத்துள்ளார்கள்.

கும்பாபிஷேகத்தன்று ஸ்ரீ புதுப் பெரியவர்கள் விசை படகில் தனுஷ்கோடிக்குச் சென்று சேது ஸ்நானம் செய்து கங்கா யாத்திரையை உத்தேசித்துக் கடலிலிருந்து மணலை எடுத்துக் கொண்டார்கள்.

10-5–1963-ஆம் தேதி ஸ்ரீ பெரியவர்களுக்கு 70 வயது பூர்த்தியாவதையொட்டி ஸ்ரீ மடம் சிப்பந்திகள் அவர்களுக்குப் பிக்ஷா வந்தனம் செய்தார்கள். தரிசனத்திற்கு வந்திருந்த பெண்மணிகள் சிலர் 70 ஸுமங்கலிகளுக்குப் புடைவையும், 17 பிரம்மசாரிகளுக்கு வஸ்திரமும் அளித்தார்கள். அன்று ஆசார்யர்கள் தனுஷ்கோடிக்குச் சென்று சேது ஸ்நானம் செய்து வந்தார்கள். இரண்டு பெரியவர்களும் ராமேச்வரத்திலிருந்து 25-5-1963-ஆம் தேதி புறப்பட்டு மண்டபத்துக்கு விஜயமானார்கள்.

**ராமேச்வரம் சங்கர மடத்தில் துவாதச லிங்கப் பிரதிஷ்டை**

(1) மண்டபத்தில் நுழைந்ததும், கிழக்கு நோக்கிய **ஆஞ்சநேயர்;**

(2) **துவாதச லிங்கங்கள்**-(1) ஹிமயத்தில் உள்ள கேதாரேச்வரர். (2) ஸௌராஷ்டிர சோமநாதர், (3) உஜ்ஜயினி மஹாகாளேச்வரர் (4) காசி விச்வநாதர் (5) பரலி வைத்யநாதர் (6) டாகினி பீமேச்வரர் (7) அவுந்து நாகேசர் (8) நர்மதை தீரத்தில் ஓங்காரேச்வரர் (9) நாஸிக் சமீபம் த்ரயம்பகேச்வரர் (10) எல்லோரா சமீபம் கஸ்ருணேசர் (11) ஸ்ரீ சைலத்தில் மல்லிகார்ஜுனர் (12) ராமேச்வரத்தில் ராமநாதர். இந்த லிங்கங்களின் விமானங்களுக்கு மேல் அந்தந்த க்ஷேத்திரங்களின் கோபுர அமைப்புகள் தத்ரூபமாகச் சித்திரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

(3) **தியானமண்டபம்**–அதில் பக்த மீராவின் சிலை.

(4) **ஆதி சங்கரர் பாதுகா மண்டபம்**- பாதுகைகளுக்கு எல்லாரும் பூஜை செய்யலாம்.

(5) **விமானத்தைச் சுற்றிலும்**—(1) ஜனகர் (2) யாக்ஞவல்க்யர் (3) சனத் குமாரர் (4) ரைக்வ முனிவர் (5) யம தர்மராஜா—நசிகேதஸ் (6) சூத மாமுனிவர் (7) நாரதர்-துருவர். (8) ஜடபரதர் (9) பிரஹ்லாதர் (10) சப்த ரிஷிகளுடன் வேட வால்மீகி (11) குச லவர்களுடன் வால்மீகி முனிவர் (12) ஸனத்ஸுஜாதர் (13) பீஷ்மர்-தருமபுத்திரர் (14) தரும வியாதர் (15) வாசஸ்பதி மிச்ரர் (16) வித்யாரண்யர் (17) அப்பைய தீக்ஷிதர் (18) மதுஸூதன ஸரஸ்வதி (19) கபீர்தாஸ் (20) ஜயதேவர் (21) போதேந்திரர் (22) ஸதாசிவ பிரம்மம் (23) பட்டினத்தார் (24) பத்ரகிரியார் (25) சசிவர்ண போதர் (26) சைதன்ய மஹா பிரபு (27) துளஸீதாசர் (28) தியாகராஜ ஸ்வாமிகள்.

(6) மண்டபத்திற்குப் பின்புறம் 4 மீட்டர் உயரத்தில் கருங்கல்லினால் ஷோடச விநாயகர் விமானம் (பிரதிஷ்டை 1-2-1967)
(7) ஷோடச சுப்ரமண்யர் விமானம் (பிரதிஷ்டை மார்ச் 1977)
(8) சரஸ்வதீ ஸந்நிதி-புத்தகாலயம்
(9) சரஸ்வதீ ஸந்நிதிக்கு அடுத்தாற்போல் பாரத நாட்டின் புண்ணியவதிகள் :—(1) விநாயகர் துதிக்கையில் ஔவையார் (2) கண்ணகி (3) திருவள்ளுவரின் மனைவி வாசுகி (4) வசிஷ்டரின் மனைவி அருந்ததி (5) அத்ரி மகரிஷியின் மனைவி அனஸூயை (6) அகஸ்தியர் மனைவி லோபாமுத்ரை (7) ராவணன் மனைவி மண்டோதரி (8) ஸ்ரீராமரின் பத்னி சீதை (9) மதங்க முனிவரின் சிஷ்யை வேடப்பெண் சபரி (10) ஹரிசந்திர மகாராஜாவின் மனைவி சந்திரமதி (11) நளமகாராஜனின் மனைவி தமயந்தி (12) த்ருதராஷ்ட்ரரின் மனைவி காந்தாரி (13) உத்தம பத்னியான ஓர் அந்தணப் பெண் (14) நளாயினி (15) ஸத்யவானின் மனைவி ஸாவித்ரி (16) ச்யவன ரிஷியின் மனைவி சுகன்யை (17) திலீபர் மனைவி ஸுதக்ஷிணை (18) கிருஷ்ண பரமாத்மாவின் மனைவி ருக்மிணி (19) ஆதி சங்கரரின் அன்னை ஆர்யாம்பாள் (20) கனகதாரா (21) குமாரில பட்டர் மனைவி ஸரஸவாணி.
(10) மணி மண்டபத்தில்-மனுநீதி கண்ட சோழன் சபையில் கன்றையிழந்த பசு மணி அடிப்பது.

இவையனைத்தும் ஆதிசங்கரர் மண்டபத்திலும் மண்டபத்தை சுற்றிலும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

**மதுரையில் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேச்வரர் ஆலய மகா கும்பாபிஷேகம்**

மதுரையில் பி. டி. ராஜன் தலைமையில் ஓர் திருப்பணிக் குழு அமைக்கப் பெற்று ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேச்வரர் ஆலயத்தின் ஜீர்ணோத்தாரண திருப்பணி அரசின் அற நிலைய இலாகாவின் உதவியாலும், பொதுமக்கள் அளித்த நிதியைக் கொண்டும் சுமார் ஐம்பது லக்ஷம் ரூபாய்களுக்கு மேலாகச் செலவு செய்து முடிவு பெற்றிருந்தது. இந்தத் திருப்பணியின் தொடக்கத்திலிருந்தே ஒவ்வொரு நிலையிலும் ராஜனும் குழுவின் மற்ற அங்கத்தினர்களும் ஸ்ரீ ஆசார்யர்களின் ஆலோசனைப்படியே செயல்பட்டு வந்தனர். அதையடுத்து இந்தக் கும்பாபிஷேகத்தை ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் நேரில் வந்து நடத்திவைக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொண்டார்கள்.

ஸ்ரீ மடம் மண்டபம் முகாமிலிருந்து 30-5-63-ஆம் தேதி ராமநாத புரத்துக்கு விஜயமாகி அங்கு மூன்று நாட்கள் தங்கி, தர்பசயனத் தில் ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டு பரமக்குடி, மானுமதுரை, திருப்புவனம் மார்க்கமாக 22-6-63-ஆம் தேதி இரவு மதுரையை அடைந்தார்கள். ஊர் எல்லையில் தேவஸ்தான நிர்வாகிகளும், திருப்பணிக் குழுத் தலைவர் பி. டி. ராஜனும் இரண்டு ஆசார்யர்களை யும் பூர்ண கும்பத்துடனும் ஆலயமரியாதைகளுடனும் வரவேற் றார்கள். அங்கிருந்து ஊர்வலமாக இரவு 10-30 மணிக்கு மதுரை யில் உள்ள ராமேச்வரம் தேவஸ்தான பாடசாலைக்கு விஜயமா னார்கள். 24-6-63-ஆம் தேதி இரண்டு பெரியவர்களும் ஆலயத்துக் குச் சென்று திருப்பணி வேலைகளைப் பார்வையிட்டுப் பின்னர் அம்பாளையும் ஸ்வாமியையும் தர்சனம்செய்துவந்தார்கள். 25,26, 27, மூன்று நாள்களிலும் 28-ஆம் தேதி காலையிலும் யாக சாலையில் நடைபெறும் வேத பாராயணம், தேவார பாராயணம் ஆகியவை களையும் ஹோம குண்டத்தில் நடைபெறும் பூர்ணாஹுதிகளை யும் கண்டுவந்தார்கள். 200 சிவாசாரியர்களையும், 100 வேத வித்வான்களையும். 100 ஓதுவார்களையும் ஒருங்கே கூட்டி நடை பெற்ற இந்தக் கும்பாபிஷேகத்தில் 84 கும்பங்களை ஸ்தாபனம் செய்திருந்தார்கள். 28-6-63 அன்று காலை ஒரே சமயத்தில் மிகவும் உயரிய பதினான்கு கோபுரங்களுக்கும் அபிஷேகம் நடைபெற்றதை லக்ஷக்கணக்கான மக்கள் கண்டு பக்தியினால் ஆனந்த பரவச மடைந்தனர்.

இந்த மாபெரும் கும்பாபிஷேகம் வெற்றியுடன் நடை பெற்ற தற்குக் காரணமாக இருந்த திருப்பணிக் குழுவின் அங்கத்தினர் களையும், அறங்காவலர்களையும், அறநிலைய இலாகா அதிகாரிகளை யும் ஸ்ரீஆசார்யர்கள் மிகவும் பாராட்டினார்கள். திருப்பணிக்குழு வின் தலைவர் பி.டி. ராஜனுக்கு நவரத்னமாலை ஒன்றையும் பீதாம் பரம் ஒன்றையும் அளித்து அவரை அனுக்கிரஹித்தார்கள்.

### நாராயணபுரத்தில் வியாஸ பூஜை

கும்பாபிஷேகம் நடை பெற்ற மறுநாளே இரு ஆசார்யர்களும் ஆறு கிலோமீட்டர் தூரத்தில் நத்தம் சாலையில் உள்ள நாராயண புரத்துக்கு விஜயமானார்கள். 1963, ஜூலை மாதம் 7 ஆம் தேதி டி.வி.எஸ். காரியதரிசி சிவ சுப்ரமண்ய ஐயரது கட்டிடத்தில் வியாஸ பூஜை நடைபெற்றது. மதுரையிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் ஏராளமாகவந்து பூஜையைத்தரிசித்துக்கொண்டார்கள்.

**இரண்டாவது வியாஸ பாரத-ஆகம-சில்ப ஸதஸ்**

ஸ்ரீ ஆசார்யர்களின் விருப்பப்படி இந்த ஸதஸ் சாதுர் மாஸ காலத்தில் 16-8-1963 முதல் 21-8-63 முடிய 6 நாட்கள் நாராயண புரத்தில் நடைபெற்றது. சென்ற வருஷம் போலவே கலைஞர்கள் ஏராளமாக இதில் கலந்து கொண்டார்கள். இந்த ஸதஸிலும் சென்ற ஆண்டைப் போலவே ஏராளமாகக் கலைஞர்களும், சிவாசாரியர்களும், வைஷ்ணவ பட்டாசாரியர்களும் சிற்பிகளும் கலந்து கொண்டனர். இதன் ஓர் சிறப்பு அம்சம் தமிழ் நாட்டில் உள்ள முக்கிய தேவஸ்தானங்களின் நிர்வாக அதிகாரிகள் (Executive Officers) இதில் கலந்து கொண்டனர். தேவாலயங்களை எவ்விதம் பராமரிக்க வேண்டுமென்பதைப்பற்றி இரண்டு நாட்கள் தனிமையில் அவர்களுக்குச் சிறப்புரை ஆற்றினார்கள். அவர்கள் யாவரும் இந்த சபையில் கலந்து கொள்ள கமிஷனர் **சாரங்கபாணி முதலியார்** ஏற்பாடு செய்திருந்தார். அவரும் இதில் கலந்து கொண்டார். ஆலயத் தேர்களைப் புதுப்பித்து அவைகளில் தெய்வங்கள் பவனிவர ஏற்பாடு செய்ய வேண்டுமென்பதைப் ஸ்ரீ பெரியவர்கள் வற்புறுத்தினார்கள்.

**மதுரை நகரசபையின் வரவேற்பு**

1963-ஆவது ஆண்டு சாதுர் மாஸ சங்கல்பம் 3-9-1963-ஆம் தேதியுடன் முடிவு பெற்றது. இரண்டு ஆசார்யர்களும் விச்வரூப யாத்திரையின் பொருட்டு கிழக்கே ஐந்து கிலோ மீட்டர் தூரமுள்ள மூணு காவடி என்னும் கிராமத்திற்கு விஜயமானார்கள். மதுரை தமுக்கம் கலையரங்கில் 4-9-1963 மாலை ஜகத்குரு ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளுக்கும் நகர சபை சிறந்ததொரு வரவேற்பை யளித்தது. நகர பிரமுகர்களும், பொது மக்களும் திரளாக அங்கே கூடியிருந்தனர். நகரசபை உபதலைவர் **என்.ஆர். ராமகிருஷ்ணன்** வரவேற்பிதழை வாசித்து ஸ்ரீ பெரியவர்களின் முன் சமர்ப்பணம் செய்தார். அதில் " இந்நகர சபை மத சார்பற்ற அரசாங்கத்தின் சட்டதிட்டங்களுக்கு ஏற்ப பல மதங்களைச் சார்ந்த அங்கத்தினர்களைக் கொண்டு நடைபெற்றாலும் தங்களுக்கு வரவேற்பு அளிப்பதன் மூலம், தாங்கள் மக்களுக்கு ஆற்றி வரும் தெய்விகத் தொண்டிற்கு நகரசபையின் பாராட்டுக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த நகரசபை மக்களின் நன்மையைக் கருதி " சேவையே ஆனந்தம் " என்ற இலட்சியத்தில் தொண்டாற்றி வருகிறது. இந்தப் புனிதப்பணியை மேன்மேலும் இந்த நகரசபை சிறப்புறச்

செய்துவர முயற்சிக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். தங்களது ஆசியையும் வேண்டுகிறோம். மதுரைக்கு அடுத்த நாராயணபுரத்தில் நிறை யவை கூட்டி வேதம், சாஸ்திரம், ஆகமம், சிற்பம், ஓவியம், நாடகம், நாட்டியம் முதலிய புராதன கலைகளுக்குப் புத்துயிர் கொடுத்து ஊக்குவித்த தங்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்'' எனக் குறிப்பிடப் பட்டிருந்தது.

இந்த வரவேற்புக்குப் பதில் அளிக்கையில் ஸ்ரீ ஸ்வாமிகள், "தற்காலம் சமூகம், நாடு, அரசியல் என்பதற்காகப் பலர் பலவித தியாகங்களைச் செய்கின்றனர். செய்தும் உள்ளனர். ஆனால் அரசியலும், அரசும் நிலையானதல்ல. சத்தியத்துக்கும், தெய்வ பக்திக்கும் செய்யும் தியாகமே நிலையானது. இதை நிலைநாட்டவே கண்ணகி, திருஞான சம்பந்தர் போன்ற பெரியோர்கள் நம் நாட்டில் தோன்றினர். அன்றெல்லாம் நகரசபையோ, வரவேற்போ இருந்ததில்லை. அவர்களுக்கு நீங்கள் அளிக்கும் வரவேற்பு என மதித்து இதை இன்று நான் பெற்றுக் கொள்கிறேன்,'' என்றார்கள். நகரசபை அங்கத்தினர் **பி.சி.எம்.பாலகிருஷ்ணன்** நன்றியுரை கூறினார்.

**திருச்சியில் நவராத்திரி விழா**

அந்த வருட நவராத்திரி பூஜையை நடத்த இரண்டு ஆசார்யர்களும் திருச்சிக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று நாஷனல் காலேஜ் காரியதரிசி நங்கவரம் அண்ணாத்துரை ஐயர் திருச்சி மக்கள் சார்பாக நாராயணபுரம் முகாமில் விக்ஞாபனம் செய்துகொண்டார். அதை ஏற்று இரண்டு பெரியவர்களும் மூனுமாவடியிலிருந்து 5-9-63-ஆம் தேதி அழகர் கோவிலுக்கு விஜயம் செய்தார்கள். அங்கு ஸ்ரீ **ஸௌந்தர ராஜ பெருமாளையும் தாயாரையும்** ஸேவித்துக்கொண்டு மலைமீது நூபுர கங்கையில் புனித ஸ்நானம் செய்தார்கள். பழமுதிர்ச்சோலையில் **ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுளையும்** தரிசித்துக் கொண்டார்கள். அவ்விடமிருந்து நத்தம், கொட்டாம்பட்டி, மணப்பாறை மார்க்கமாக 15-9-1963-ஆம் தேதி திருச்சியை அடைந்தார்கள். வழக்கம்போல் நவராத்திரி பூஜை விமரிசையாக நடைபெற்றது. அன்றாடம் ஆயிரக்கணக்கான மக்கள் பூஜையைத் தரிசித்துக்கொண்டனர். நவராத்திரி நடுவில் ஆந்திர தேசத்திலிருந்து சுமார் 121 வேத பண்டிதர்கள் திருச்சிக்கு வந்து இரு ஆசார்யர்களையும் தரிசித்து வேதபாராயணம் செய்தனர். அவர்களுக்கு 10 நாட்கள் ஆகார வசதிகளைப் பல் டாக்டர்

வி. சுப்ரமண்ய ஐயர் செய்து கொடுத்தார். அவர்கள் யாவருக்கும் பத்தாறு வேஷ்டி ஜோடியும் உடன் வந்த சுமங்கலிகளுக்குப் புடவையும் அவர் செலவிலேயே கொடுத்தார். அந்த வேத பண்டிதர்களுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் காஷ்மீர் சால்வையை வழங்கினார்கள்.

### திருச்சி நகரசபை வரவேற்பு

நாஷனல் ஹைஸ்கூல் வெளி மைதானத்தில் 30-9-63-ஆம் தேதி மாலை நகரசபையினரால் ஓர் வரவேற்புப் பத்திரம் இரு பெரியவர்களுக்கும் வாசித்து அளிக்கப் பெற்றது. அநேகமாக எல்லாக் கவுன்ஸிலர்களும், நகரசபை அதிகாரிகளும் அங்கு கூடி ஸ்ரீ ஆசார்யர்களுக்குத் தங்களது அஞ்சலியைச் செலுத்திக் கொண்டனர். வரவேற்பு இதழைத் தலைவர் ஏ. எஸ். ஜி. லூர்து ஸாமிப பிள்ளை வாசித்தளித்தார். வரவேற்புக்குப் பதில் அளிக்கையில் ஸ்ரீ ஆசார்யர்கள் சாக்கடைக் கழிவு நீரால் காவேரியின் தண்ணீர் அசுத்தப்படுவதைக் குறிப்பிட்டு அதைத் தடுக்க வகை செய்ய வேண்டுமென்று கூறினார்கள். மக்கள் எளிமையுடன் வாழ பழகிக் கொள்ள வேண்டுமென்றும், ராணுவத்தில் கூட, கூடிய வரை சிக்கனத்தைக் கடைப்பிடித்து நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்திக் கொள்ளலாம் என்றும் கூறினார்கள்.

### அகிலாண்டேச்வரி ஆலயத் திருப்பணி

1-10-1963-ஆம் தேதி அன்று இரு பெரியவர்களும் திருவானைக்காவல் ஸ்ரீ மடத்துக்கு விஜயம் செய்து அந்த ஆலயத்தில் நடைபெறவேண்டிய ஜீர்ணோத்தாரண திருப்பணியைத் தொடங்கி வைத்தார்கள். டி. எம். நாராயணஸ்வாமி பிள்ளையைத் தலைவராகக்கொண்டு அமைக்கப்பட்ட குழுவினரால் இந்தத் திருப்பணி செயல்பட்டது.

### ஸ்ரீரங்கத்தில் நகரசபை வரவேற்பு

12-10-63-ஆம் தேதி அதிகாலையில் இரு ஆசார்யர்களும் ஸ்ரீரங்கத்துக்கு விஜயமாகி ஸ்ரீரங்கநாத ஸ்வாமியைத் தரிசித்துக் கொண்டார்கள். நான்கு சித்திரை வீதிகளையும் சுற்றி வந்தார்கள். அன்று மாலை ஸ்ரீரங்கம் நகரசபையினரால் இரு பெரியவர்களுக்கும் வரவேற்புப் பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது. அதற்குப் பதில் கூறுகையில் நாட்டு மக்கள் நன்மையடைய கால்நடைகளை அபிவிருத்தி செய்யவேண்டுமென்றும் இக்காலத்தில் மேய்ச்சல்

தரைகள் குறைந்துவிட்டதென்றும் அதனால் ஒவ்வொருவருடைய தோட்டத்திலும் அகத்தியைப் பயிர் செய்து பசுமாடுகளுக்குத் தீவனமாகக் கொடுக்கலாம் என்றும் கூறினார்கள்.

விஜயநகர மன்னன் தென்னாட்டுக்கு விஜயம் செய்த நினைவாகத் தமிழ்நாட்டில் பல தேவாலயங்களில் கோபுரங்கள் அமைக்க வகை செய்தான். அந்தக் கோபுரங்களின் திருப்பணி ஒரே சமயத்தில் ஆரம்பிக்கப்பட்டுப் பாதியில் நின்றுவிட்டது. இன்று அவையெல்லாம் மொட்டை கோபுரம் என்று மக்களால் கூறப்பட்டு வருகின்றன. அவைகளில் ஸ்ரீரங்கத்தில் காணப்படும் மொட்டை கோபுரம் மிகவும் பெரியது. பலமான அஸ்திவாரத்துடன் கட்டப் பட்டிருக்கிறது. அந்தக் கோபுரத்தை மேலே எழுப்பி மன்னன் எடுத்த பணியை மக்கள் நிறைவேற்றலாம் என்று ஸ்வாமிகள் ஆலோசனை கூறினார்கள்.

திருச்சியில் பொன்மலை முதலான சுற்றுப்புறப் பகுதிகளுக்கு விஜயம் செய்துவிட்டு, 21-10-63-ஆம் தேதி சமயபுரத்தை அடைந்தார்கள். அங்கிருந்து சிருவாச்சூர், பெரம்பலூர், தொழுதூர், பெண்ணாடம், கொடுக்கூர் இவ்வூர்களில் முகாம் செய்து கொண்டு 4-11-1963ஆம் தேதி கும்பகோணத்தை அடைந்தார்கள். 8-11-1963-ஆம் தேதி முடிய ராமமந்திரத்தில் பூஜை நடைபெற்றது.

### திருவிடைமருதூர் சங்கர மடத்தில் பாதுகா பிரதிஷ்டை

இரண்டு ஆசார்யர்களும் 10-11-1963-ஆம் தேதி கும்பகோணத்திலிருந்து கிளம்பித் திருவிடைமருதூருக்கு வடக்கே காவிரியின் வடகரையில் உள்ள கல்யாணபுரம் என்னும் கிராமத்திற்கு விஜயமானார்கள்.

10-11-63-ஆம் தேதி முதல் 4-12-63-ஆம் தேதி முடிய முகாம் கல்யாணபுரம். அந்த ஊர் மிராசுதார் **நரஸிம்மய்யர்** குமாரர் **சீதாராமய்யரும்** அவருடைய சகோதரர் **கிருஷ்ணஸ்வாமி அய்யரின்** குமாரர்களாகிய **பட்டாபி, வைத்யநாதன்** சகோதரர்களும் ஸ்ரீமடம் அவ்விடம் தங்க விசேஷ ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். சோழ நாட்டில் காசிக்கு நிகரான க்ஷேத்திரங்கள் ஆறு உள்ளன. அவை முறையே 1. திருவையாறு 2. திருவெண்காடு 3. மாயூரம் 4. வேதாரண்யம் 5. சாயாவனம் 6. திருவிடைமருதூர் அல்லது மத்யார்ஜுனம். ஸ்ரீ ஆதி சங்கரர் அத்வைத சித்தாந்தத்தை ஸ்தாபனம் செய்ய க்ஷேத்ராடனம் செய்துவரும் சமயம் இந்த மத்யார்ஜுன க்ஷேத்திரத்துக்கும் விஜயம் செய்



ஸ்ரீ ஆசார்யர்கள் பத்ராசலம் ஸ்ரீராமர் கோயில் கும்பாபி ஷேகத்திற்கு விஜயமானபோது ஸ்ரீசுதர்சன சக்கரத்தை பார்வையிடுகிறார்கள்.



பத்ராசலம் ஸ்ரீராமர் கோயில்மண்டபத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள் ஜீயர் ஸ்வாமிகளுடன் தர்சனம் கொடுக்கிறார்கள்



ஸ்ரீ ஆசார்யாள், ஸ்ரீ புதுப்பெரியவாள் கோயில் பரிவட்டம் மரியாதை களுடன் காக்ஷி அளிக்கிறார்கள்.



1963-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் ராமேச்வரம் விஜயம் செய்த சமயம் அவர்களுக்கு பக்தகோடிகள் வெள்ளியில் துலாபாரம் நடத்தினார்கள். துலாபாரத்தட்டில் ஸ்ரீ ஆசார்யர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள்: மற்ற தட்டில் வெள்ளி



ராமேச்வரம் ஸ்ரீசங்கரமடத்தில் புதிதாக கட்டப்பட்ட
ஸ்ரீஷோடசகணபதி மண்டபத்திற்கு கும்பாபிஷேகம்



ஸ்ரீ ஆசார்யர்கள் நேரூர் விஜயம் செய்த சமயம் ஸ்ரீ சதாசிவப்ப்ரம்மேந்திராள் அதிஷ்டானம் தர்சனம் செய்து கொள்கிறுர்கள்



ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீசைலம் விஜயம் செய்தசமயம் ஸ்ரீபகவத்பாதாள் 2000 ஆண்டுகளுக்கு முன் தங்கியிருந்த சோலேகள் அடர்ந்த இடத்தை தர்சித்து அங்கு சிறிது நேரம் தியானத்தில் இருந்தார்கள்



விஷ்ணு காஞ்சியில் 1956-இல் ஸ்ரீ பரமாசார்யர்களுக்கு கனகாபிஷேகம் ஸ்ரீபுதுப்பெரியவர்கள் செய்கிறார்கள்



1957-இல் சென்னையில் ஸ்ரீபரமாசார்யர்களுக்கு கனகாபிஷேகம் ஸ்ரீபுதுப்பெரியவர்கள் செய்கிறார்கள்



1960-இல் நடந்த ஜம்புகேச்வரம்
ஸ்ரீ அகிலாண்டேச்வரி ஆலய கும்பாபிஷேகம்
ஸ்ரீ பரமாசார்யர்கள், நடத்திவைத்தார்கள் அது
சமயம் ஸ்ரீ அகிலாண்டேச்வரிக்கு தாடங்க
ப்ரதிஷ்டையும் செய்தார்கள்



ஸ்ரீ அகிலாண்டேச்வரி ஆலய கும்பாபிஷேகமானவுடன்
ஸ்ரீ பரமாசார்யர்கள் ஸ்ரீ புதுப்பெரியவர்களுடன்
தர்சனம் கொடுக்கிறார்கள்



1962-இல் இளையாத்தங்குடியில் நடந்த முதல் ஆகம சில்ப சதஸ்ஸில்
கூடியிருந்த மக்களின் ஒருபகுதி



1964-இல் காஞ்சியில் நடைபெற்ற 3-வது ஆகம சில்ப சதஸ்ஸை'
சென்னை கவர்னர் மைசூர் மஹாராஜா துவக்கிவைத்தார்.
ஸ்ரீ ஆசார்யர்கள் அருளாசி வழங்குகிறார்கள்.





ஸ்ரீ பரமாசார்யர்கள் தங்கத்தினுல் கட்டப்பட்ட ருத்திராக்ஷகிரீடம் மாலைகளுடனும்
நவரத்தினங்களினுல் செய்யப்பட்ட தங்க கிரீடத்துடனும்
தர்சனம் அளிக்கிருர்கள்

தார்கள். அப்பொழுது அவர் ஸ்ரீ மஹாலிங்க ஸ்வாமியைத் தர்சனம் செய்த சமயம் கர்ப்பக்ருஹத்திலிருந்து அசரீரி வாக்கு ஒன்று ''ஸத்யம் அத்வைதம்'' என்று மும்முறை ஒலித்ததாகவும் அதைத் தொடர்ந்து அபயஹஸ்தம் ஒன்று தோன்றியதாகவும் சங்கர விஜயத்தில் கூறப்பட்டுள்ளது. இந்தக் காட்சியை மக்களுக்கு உணர்த்தும் பொருட்டு புதிதாகத் திருப்பணி செய்யப்பட்ட பழைமையான சங்கர மடத்தின் மேல் தளத்தில் அபய ஹஸ்தத்துடன் கூடின மஹாலிங்க மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். அத்துடன் கீழ்ப்புற முற்றத்தில் ஓர் விமானம் எழுப்பி அதன் நடுவில் ஆதிசங்கர பாதுகையும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இவைகளின் கும்பாபிஷேகம் 5-12-1963-ஆம் தேதி காலையில் ஸ்ரீ ஆசார்யர்கள் முன்னிலையிலும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் முன்னிலையிலும் நடைபெற்றது. கொட்டும் மழையைப் பாராட்டாமல் ஆயிரக்கணக்கான மக்கள் இந்தக் கும்பாபிஷேகத்தைத் தரிசித்துக்கொண்டார்கள். பிரதிஷ்டை தினத்தன்று ஸ்ரீமஹாலிங்க ஸ்வாமிக்கு மஹாபிஷேகம் நடைபெற்றது. ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் ஆலயம் சென்று ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டார்கள். ஸ்வாமி, அம்பாள், மூகாம்பிகை, ஆண்டப் பிள்ளையார் ஸந்நிதிகளுக்கு ஸ்ரீ மடத்தின் சார்பில் வெள்ளியினாலான குத்து விளக்குகள் சமர்ப்பணம் செய்யப்பட்டன. ஆதிசங்கரரின் பாதுகைகளுக்கு 108 ஜரிகை சால்வைகளை அர்ச்சித்து அவைகளை 108 பண்டிதர்களுக்கு ஸம்மானமாக ஸ்ரீஸ்வாமிகள் அளித்தார்கள். மடத்தின் இந்தத் திருப்பணியில் முக்கிய பங்கு ஏற்றுக் கொண்டவர் திருவிடைமருதூர் ஆர். மஹாலிங்கய்யரும் மற்றப் பக்தர்களும் ஆவர்.

## கும்பகோணத்துக்கு விஜயம்

திருவிடைமருதூர் சங்கர மடம் கும்பாபிஷேகம் முடிந்த பின்னர் இரு ஆசார்யர்களும் 10–12–63-ஆம் தேதி கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் தங்கி அங்கே பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்கள்.

ஸ்ரீ ஆசார்யர்கள் 10-ஆம் தேதி உள்ளூர் டவுன் ஹைஸ்கூல் ராமானுஜம் ஹாலில் கோவிந்தகுடி ஸ்ரீ அப்பாக்குட்டி ஐயர் தர்ம ஸ்தாபனத்தின் ஆதரவில் நடைபெறவிருந்த வேத பாஷ்யக் கல்லூரியை ஆரம்பித்து வைத்தார்கள். வேதப்படிப்பின் அவசியத்தைப்பற்றி நீண்ட சொற்பொழிவு ஒன்றை ஆற்றினார்கள். 11-ஆம் தேதி ஸ்ரீ ஆதிகும்பேச்வரஸ்வாமி ஆலயம் சென்று ஸ்வாமி

தர்சனம் செய்துகொண்டார்கள். ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் 10-ஆம் தேதி இரவு பூஜைக்குப்பின் ஸ்ரீ மடத்தில் ஆயிரக்கணக்கான பக்தர்களின் முன் வேதத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியத்தைப்பற்றி உரையாற்றினார்கள். 11-ஆம் தேதி ஸ்ரீ பெரியவர்கள் சர்வோதய சங்கத்திற்கு விஜயம் செய்து நாட்டின் பற்றாக்குறை தீர்வதற்கு ஒவ்வொருவரும் எளிய வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றார்கள். தீட்டிய பச்சை அரிசியைக் காட்டிலும் புழுங்கல் அரிசியைச் சாப்பிடுவது நல்லது. அத்துடன் நவதான்யங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். கம்பு, கேழ்வரகு முதலானவை சரீரத்திற்கு மிகவும் புஷ்டியைத்தரும் ஆகாரமாகும். நமது ஆகார வழக்கத்தை மாற்றிக்கொண்டால் நாட்டில் பற்றாக்குறை வராது என்றும், ஆடைகளை மிகவும் குறைந்த அளவு உபயோகிக்க வேண்டும், பெண்கள் ஜரிகை போட்ட பட்டுப் புடவைகளை உடுத்திக் கொள்வதை மாற்றி நூல் புடவைகளை மட்டுமே உடுத்திக்கொள்ள வேண்டும், என்றும் கூறினார்கள்.

அதற்கு மறுநாள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் சர்வோதய சங்கத்திற்கு விஜயம் செய்து கடவுளை நாம் அறிந்துகொண்டால் நம்மைச் சுற்றியுள்ள மற்றப் பொருள்களையும் நாம் அறிந்துகொள்ளலாம். அதனால் நமக்குச் சர்வோதயம் ஏற்படும் என்றார்கள்.

ஸ்ரீ புதுப்பெரியவர்களைக் கவர்ன்மெண்டு கலாசாலையின் மாணவர்கள் 1000 பேர் தர்சனம் செய்து கொண்டு, மதத்திற்கும் சமூகத்திற்கும் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றி ஸ்வாமிகள் உபதேசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும் சில மத நூல்களையும் தோத்திரங்களையும் அவர்கள் படித்துவர வேண்டுமென்றும் தங்களால் முடிந்தவரை பிறருக்கு உதவி செய்வதை அன்றாட வாழ்க்கையிலேயே பழகிக்கொள்ளவேண்டும் என்றும் கூறினார்கள்.

கும்பகோணத்திற்குத் தெற்கே சுமார் 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது மருதாநல்லூர் என்னும் கிராமம். இந்த ஊரில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர் பாகவத-பஜனை சம்பிரதாயத்தையொட்டி ஒரு மடம் நிறுவப்பட்டிருக்கிறது. அதன் அதிபர்களுக்கு ஸத்குரு ஸ்வாமிகள் எனப் பெயர். அவர்கள் பரம்பரையில் வருகிறவர்கள் கிருஹஸ்தர்கள். ஆனால் அவர்கள் தங்கள் ஜீவனத்துக்கு என எவரையும் யாசிக்கமாட்டார்கள்.

தினமும் பகவந் நாம பஜனை செய்துகொண்டே தம் சிஷ்யர்களுடன் வீதியில் வலமாக வருவார்கள். அப்பொழுது பக்தர்கள் அவர்களை நாடிச் சென்று அவர்களை வணங்கிச் சிறிது தான்யத்தை (அரிசியை) அவர்கள் ஏந்தி வரும் பாத்திரத்தில் சேர்ப்பார்கள். நிதமும் பகவந் நாமாவைப் பூஜிப்பதைத் தவிர வேறு எந்தக் காரியத்திலும் அவர்கள் நாட்டம் கொள்ள மாட்டார்கள். அணையாவிளக்கு போல் அகண்ட நாம பஜனை இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக நடந்து வரும் அந்த மடத்தில் சில நாட்கள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுடன் ஸ்ரீ ஆசார்யர்கள் தங்கியிருந்தது ஓர் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

அங்கே தங்கிய சமயம் நீடாமங்கலத்தில் வசிக்கும் தண்ணீர் குன்னம் **டி. கே. பி. எஸ். சந்தான ராமஸ்வாமி உடையாரும்** அவருடைய பார்யை நித்யானந்த வல்லி ஆச்சியும் ரூ. 40,000க்கு இரண்டு ட்ரஸ்டுகள் ஏற்படுத்தி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார்கள். அதிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் வைகுண்ட ஏகாதசிக்கு மறு நாள் வரும் துவாதசியன்று நடைபெற வேண்டிய பிக்ஷாவந்தன செலவுக்கு ரூ 20,000 ; மாதம் இருமுறை வரும் ப்ரதோஷ பூஜை செலவுக்கு ரூ. 20,000; இந்த இரண்டு தொகைகளையும் உடையார், இந்தியன் பாங்கில் டெபாஸிட் செய்து அதன் வட்டி அம்சத்தைக்கொண்டு மேலே கண்ட தருமங்கள் நடைபெற ஏற்பாடு செய்தார். அடுத்து ஸ்ரீ ஆசார்யர்கள் சீர்காழியில் முகாம் செய்திருந்தபோது மேலும் மூன்று ட்ரஸ்டுகளையும் அதேபோல் நிறுவினார். அவை (1) ஸ்ரீ சந்திர மௌளீச்வரர்—திருபுரஸுந்தரி அம்பாள் நித்ய பூஜை அபிஷேகத்துக்கு காராம் பசுவின் பால் அளிப்பதற்கு ரூ. 25,000. (2) ஏழை கன்னிகைகளின் விவாகத்திற்குத் திருமாங்கல்யம் வழங்க ரூ 5000. (3) ஆசார்யர்களின் ஆசியுடன் நடை பெறும் ஜீவாத்ம கைங்கரியத்துக்கு (அனாதை பிரேத ஸம்ஸ்காரம்) ரூ. 2000. முன் குறிப்பிட்டது போலவே இந்தத் தொகை ரூ. 32000 யும் பாங்கில் அவர் ரொக்கமாக டெபாஸிட் செய்து விட்டார். இந்தப் பெரிய தருமங்களை ஏற்படுத்திய உடையார் தம்பதிகளை பக்தர்கள் சிறப்பாகப் பாராட்டினார்கள். மேலும் அம்பாளுக்கு அணிவிக்க தங்கத்தினால் செய்த மாணிக்கங்கள் பதித்த வீணை ஒன்றையும் அந்தத் தம்பதிகள் ஸ்ரீ மடத்துக்குச் சமர்ப்பணம் செய்துள்ளார்கள். அதன் அக்கால மதிப்பு ரூ. 50,000க்கு மேலாகும்.

**சிதம்பரம் ஆருத்ரா தரிசனத்துக்கு விஜயம்**

1963 டிஸம்பர் மாதம் 26-ஆம் தேதி மருதாநல்லூரிலிருந்து புறப்பட்டு திருப்பனந்தாள், வரதம்பட்டு, சீர்காழி மார்க்கமாய் கொள்ளிடக் கரையில் உள்ள வல்லம்படுகையை இரு பெரியவர்களும் அடைந்தார்கள். அங்கிருந்து 30-12-1963-ஆம் தேதி ஆருத்ரா தரிசனத்துக்கு ஸ்ரீ பெரியவர்கள் மட்டும் சிதம்பரம் சென்று வந்தார்கள்.

வல்லம்படுகையில் 1-1-64-ஆம் தேதி தங்கி, குன்னத்தில் 2, 3, 4, தேதிகளிலும், சித்தமல்லியில் 5, 6, 7 தேதிகளிலும், 8-ஆம் தேதி வள்ளுவக் குடியிலும், 9, 10, 11 தேதிகளில் நெப்பத்தூரிலும், 12-ஆம் தேதி திருவெண்காட்டிலும் தங்கிப் பூஜைகளை முடித்துக்கொண்டு 13-ஆம் தேதி காவிரிப்பட்டணத்தை அடைந்தார்கள். திருவெண்காட்டில் 57-வது பீடாதிபதிகளான ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தை இரு பெரியவர்களும் தர்சனம் செய்து கொண்டார்கள்.

14-1-1964 மகரஸங்கராந்தி புண்ய காலத்தன்று இரு ஆசார்யர்களும் காவேரிப்பட்டணத்தில் சமுத்ர ஸ்நானம் செய்து கொண்டார்கள். 15, 16, 17 முடிய முகாம் காவேரிப்பட்டணம். 16-ஆம் தேதி சாயாவனம் சிவாலயதர்சனம். 17-ஆம் தேதி திருக்கடையூர் அபிராமி அம்பாள் சமேத அம்ருதகடேச்வரர் ஆலய தர்சனம் செய்தார்கள். அது சமயம் நாதசுரவித்வான் திருவிடைமருதூர் வீருசாமிப்பிள்ளைக்கு "மத்யார்ஜுன மஹாநாதமணி" என்னும் பட்டத்தையும் திருவெண்காடு சுப்ரமண்ய பிள்ளைக்கு "ச்வேதாரண்ய புன்னாக நாதமணி" என்னும் பட்டத்தையும் வழங்கினார்கள். 18-ஆம் தேதி வாணகிரியில் பூஜை.

**அத்வைத க்ரந்த வெளியீடு**

1964 ஜனவரி 19, 20 தேதிகளில் சீர்காழியில் தங்கி இரு பெரியவர்களும் சிதம்பரத்துக்கு 21-ஆம் தேதி விஜயமானார்கள். 19-1-1964-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் இருவரின் ஸந்நிதியில் ஸ்ரீ அனந்தானந்தேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளால், தொகுக்கப் பெற்ற "அத்வைத க்ரந்த கோசம்" என்னும் நூல் சமர்ப்பணம் செய்விக்கப்பட்டது. அதில் அத்வைத தத்துவம் பற்றிய சுமார் 1500 புத்தகங்களின் விவரங்களும், பழங்கால தற்கால அத்வைத நூலாசிரியர்கள் சுமார் 67 பேர்களுடைய வாழ்க்கை வரலாறும் தரப்பட்டுள்ளன. ஸ்ரீ ஆசார்யர்கள் திருக்கரத்தினால் அன்று அப்புத்தகம் வெளியிடப்பட்டது. அதே

நாளில் இந்தப் புஸ்தகம் காசியிலும், புரி ஜகந்நாதத்திலும், சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியிலும் வெளியிடப்பட்டது.

**சிதம்பரத்தில் நடராஜர் தர்சனம்**

1964-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 20-ஆம் தேதி இரு பெரியவர்களும் சீர்காழியை விட்டுப் புறப்பட்டுக் கொள்ளிடம் நதியைக் கடந்து தென்னார்க்காடு ஜில்லாவில் பிரவேசித்தார்கள். அன்றைக்கு மறுநாள் 21-ஆம் தேதி ரத ஸப்தமி புண்யகாலத்தை முன்னிட்டு இரண்டு ஆசார்யர்களும் கொள்ளிடத்தில் புண்யகால ஸ்நானத்தை முடித்துக்கொண்டார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் சென்ற 1939-இல் ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தர்சனம் செய்து கொண்ட 25 ஆண்டுகளுக்குப் பின் சிதம்பரத்துக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்களும் ஆச்ரமம் பெற்ற பின்னர் முதல் தடவையாக ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தர்சனம் செய்து கொண்டார்கள். பொது தீக்ஷிதர்களும் ஊர் மக்களும் இரண்டு ஆசார்யர்களையும் வரவேற்கச் சிறந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். முதலில் 22-1-1964-ஆம் தேதி ஸ்ரீ புதுப் பெரியவர்கள் நடராஜர் ஆலயம் சென்று ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். ஸ்ரீ பெரியவர்கள் 24-ஆம் தேதி காலை ஆலயத்துக்குச்சென்று நடராஜர், கோவிந்தராஜர் இரு ஸந்நிதிகளிலும் தர்சனம் செய்து நான்கு ரத வீதிகளையும் சுற்றி ஊர்வலமாக வந்தார்கள். பொது மக்கள் அளித்த வரவேற்பில் பசுக்களைக் காப்பாற்ற வேண்டிய அவசியத்தைப் பற்றிக் கூறினார்கள். நடராஜர்-சபாநாயகர் ஆலயத்தின் திருப்பணியை மக்கள் எடுத்து நடத்த வேண்டுமென்றும் மதில் சுவர் திருப்பணியை முதலில் மேற்கொள்ள வேண்டுமென்றும் கூறினார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்கள் 24-ஆம் தேதி காதி வஸ்திராலயத்துக்கு விஜயமானார்கள்.

1964 ஜனவரி, 21-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதி முடிய நான்கு நாட்கள் சிதம்பரத்தில் முகாம் செய்த பின்னர் 25-ஆம் தேதி வளையமாதேவிக்கு இரு ஆசார்யர்களும் விஜயம் செய்து உள்ளூர் வேத நாராயணப் பெருமாள் ஆலயத்தில் ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். ஜனவரி 27-ஆம் தேதி காலையில் புறப்பட்டு நெய்வேலிக்கு விஜயமானார்கள். நிலக்கரி சுரங்க அதிகாரிகள் இரு பெரியவர்களும் தங்குவதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். நிர்வாகிகளின் பிரார்த்தனைக்கு இணங்கி 28-ஆம் தேதி புதுப் பெரியவர்களும், 29-ஆம் தேதி பெரியவர்களும் சுரங்கத்தைப் பார்வையிட்டு வந்தார்கள்.

1964 ஜனவரி 29-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களும் நெய்வேலியிலிருந்து புறப்பட்டு விருத்தாசலத்திற்கு விஜயமானுர்கள். ஸ்ரீ பெரியவர்கள் 30-ஆம் தேதியும் புதுப் பெரியவர்கள் 31-1-64-ஆம் தேதியும் விருத்தகிரீச்வரர் ஆலயத்தில் ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டார்கள். 5-2-1964-ஆம் தேதி பரம குரு ஸ்வாமிகளின் ஆராதனையை விருத்தாசலத்தில் நடத்தி அன்று இரவே புறப்பட்டு உளுந்தூர்ப்பேட்டை, செங்குறிச்சி மார்க்கமாய் 8–2–64 இரவில் பண்ருட்டியை அடைந்தார்கள்.

1964-இல் பிப்ரவரி 9-ஆம் தேதி முதல் 14-2-1964 முடிய பண்ருட்டியில் இரு ஆசார்யர்களும் தங்கினுர்கள். பண்ருட்டிக்கு வரும் வழியில் இரு ஆசார்யர்களும் **சுந்தரமூர்த்தி நாயனுர்** அவதரித்த திருநாவலூர் க்ஷேத்திரத்தில் சிவாலய தர்சனம் செய்து கொண்டார்கள். 12-2-1964-ஆம் தேதி ஸ்ரீ பெரியவர்கள் திருவதிகை க்ஷேத்திரத்தில் ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 13-2-64-ஆம் தேதி அமாவாசை. அத்துடன் ஸ்ரீபுதுப் பெரியவர்களின் ஜன்ம நக்ஷத்திரம் அவிட்டம். அன்று காலே ஸ்ரீ புதுப் பெரியவர்கள் பெண்ணையாற்றில் ஸ்நானம் செய்து சுமார் 10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள வடவாம்பலத்தில் உள்ள பூர்வாசார்யர்களின் அதிஷ்டானத்தைத் தரிசித்து வந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் அதற்கு மறுநாள் மேற்படி அதிஷ்டான தர்சனம் செய்து வந்தார்கள். 14-ஆம் தேதி பிரதமையன்று குருஸ்வாமிகளின் ஆராதனே நடைபெற்றது.

**காஞ்சீபுரம் விஜயம்**

சென்ற ஆறு ஆண்டுகளுக்கு முன்னர் காஞ்சீபுரத்திலிருந்து விஜய யாத்திரையாகப் புறப்பட்ட ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் காஞ்சீ நகரத்திற்குத் திரும்பி வந்ததைக் கொண்டாட மிகப் பெரிய வரவேற்பை அளிக்க காஞ்சி மக்கள் ஏற்பாடு செய்து வந்தனர். இதை ஏற்றுக் கொள்ள வேணுமாய் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளே, 20-2-64-இல் தென்னுங்கூர் முகாமுக்கு வந்து பிரார்த்தித்துக்கொண்டார்கள். பண்ருட்டியிலிருந்து 15-ஆம் தேதி புறப்பட்டு **குமாரமங்கலம், பாணும்பட்டு, பாலப்பட்டு, ஆலக்கிராமம், வெள்ளிமலேப் பேட்டை** ஆகிய ஊர்களில் முகாம் செய்து 20-ஆம் தேதி தென்னுங்கூரை அடைந்தார்கள். அங்கு மூன்று நாட்கள் தங்கி, 23, 24-ஆம் தேதிகளில் தண்டரையிலும், 25–ஆம் தேதி தூசிமாமண்டூரிலும் தங்கி 26–ஆம் தேதி இரவு காஞ்சீபுரத்தை யடைந்தார்கள்.

நகரை அடுத்துள்ள செவிலிமேட்டிலேயே ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர். ஸ்ரீ ஆசார்யர்கள் புஷ்ப அலங்காரம் செய்விக்கப்பட்ட சிவிகையிலும், ஸ்ரீ புதுப் பெரியவர்கள் யானை மீது அம்பாரியிலுமாக ஊர்வலமாக அழைத்துவரப் பட்டனர். நூற்றுக்கணக்கான காந்த விளக்குகள், கிராமிய நடனங்கள், பஜனை கோஷ்டிகள், வேத பாராயணம், நாகசுரம், பாண்டு, வாண வேடிக்கை இவைகளுடன் சுமார் ஒரு கிலோ மீட்டர் நீளம் அமைந்த ஊர்வலம் பெரிய காஞ்சீபுரம் மடத்திற்கு வந்தபோது இரவு 2-00 மணியாகி விட்டது.

**காஞ்சி ஸ்ரீ மடத்தில் புதிய பூஜா மண்டபம்—பாதுகை பிரதிஷ்டை**

பெரிய காஞ்சீபுரத்தில் மிகவும் பழைமையாக உள்ள ஸ்ரீ சங்கர மடமானது புதுப்பிக்க வேண்டிய நிலையில் இருந்ததால் இரு ஆசார்யர்களும் சென்னையில் தங்கியிருந்த சமயம் அந்தத் திருப்பணி வேலை ஆரம்பிக்கப்பட்டது. ஆதிகாலம் முதல் அமைந்துள்ள ஸ்ரீ சுரேச்வரர் ஸந்நிதி உள்ள இடத்தைத் தவிர மற்ற இடங்கள் நவீனமாக்கப்பட்டது. ஆசார்யர்களின் விருப்பப்படி சுமார் 5 மீட்டர் உயரத்தில் அமைக்கப்பட்ட பதினாறுகால் பூஜா மண்டபம் முழுவதும் கருங்கல்லினால் நிர்மாணம் செய்யப் பட்டுள்ளது. மண்டபத்தின் உட்புறத்தில் சுமார் 2 மீட்டர் உயரத்தில் கிழக்கு நோக்கி ஓர் விதானம் ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் பூஜைக்கெனக் கட்டப்பட்டுள்ளது. அதில் மேற்புறச் சுவரில் வெள்ளைச் சலவைக் கல்லினால் செய்யப்பட்ட நான்கு சிஷ்யர் களுடன் கூடின ஸ்ரீ ஆதிசங்கரரது பிம்பம் இணைக்கப்பட்டுள்ளது. இந்த மண்டபத்திற்குக் கீழ் சுற்றி எட்டுத் திக் கஜங்கள் (யானை) அழகாக அமைக்கப்பட்டுள்ளன. மேலும் ஸ்ரீ மடத்தின் தலைவாசலில் கங்கை கொண்டான் மண்டபத்துக்கு எதிராக 70 அடி உயரத்தில் மூன்று அடுக்கு விமானம் ஒன்றும் கட்டப் பட்டுள்ளது. இந்த விமானம் ஏழு கலசங்கள் கொண்டது. 1964-ஆவது வருடம் மே மாதம் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு 70 வயது பூர்த்தியடைவதை யொட்டி இந்த விமானம் 70 அடி உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த நூதன மண்டபத்தில் ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர் களின் பாதுகையை இரண்டு ஆசார்யர்களும் முன்னின்று 27-2-1964-இல் குருவாரத்தன்று பிரதிஷ்டை செய்தார்கள். இந்தப் பிரதிஷ்டையை ஆயிரக்கணக்கான பக்தர்கள் கூடித் தர் சனம் செய்து கொண்டார்கள். மறுநாள் இரவு வெள்ளிக்கிழமை

பூஜை முதன் முதலாக அந்த மண்டபத்தில் நடைபெற்றது. இந்த மண்டபத்தில் நடைபெறும் ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமி பூஜையைப் பக்தர்கள் எல்லோரும் எவ்வித இடையூறுமில்லாமல் தரிசிக்கத்தக்கவாறு இது அமைக்கப்பட்டுள்ளது, மண்டபம் அதைச் சுற்றியுள்ள கட்டிடங்கள், புத்தக சாலை இவைகளின் செலவு எல்லாம் சிஷ்யர்கள் சமர்ப்பணம் செய்த திரவியத்தைக் கொண்டே கட்டப்பட்டதாகும்.

**ஸ்ரீ ஆசார்யர்களின் 71-ஆவது வருட ஜயந்தி விழா**

நமது தரும சாஸ்திர முறைப்படி எழுபது ஆண்டு பூர்த்தியடைந்தவர்களுக்கு **"பீமரத சாந்தி"** என்னும் விழாக்கொண்டாடுவது வழக்கம். இதையொட்டி உலக க்ஷேமத்திற்காக நாடெங்கிலும் பரமசிவனுக்கு உகந்த "மஹாருத்ரம்" என்னும் வேள்வியை நடத்த ஸ்ரீ ஸ்வாமிகள் விரும்பினார்கள். இந்த யக்ஞமானது காஞ்சீபுரத்திலும், சென்னையிலும் மற்றும் சீர்காழி, மாயூரம், திருவாரூர், மன்னார்குடி, கும்பகோணம், தஞ்சை, நாகை, திருச்சி, காசி, ராமேச்வரம் முதலான புண்ணியத்தலங்களிலும் நடைபெற்றன. இந்த விழா ஞாபகார்த்தமாக பொற்காசுகள் கோர்க்கப்பட்ட கை ஆபரணம் 71 வேதபண்டிதர்களுக்கு அளிக்கப்பட்டன. இந்த ஏற்பாடுகளையெல்லாம் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் நேரில் கவனித்து நடத்திவைத்தார்கள்.

காஞ்சீபுரம் சங்கர பக்தஜன சபையார் **"காஞ்சியில் எழுபத்து ஒன்று"** என்னும் விசேஷ மலரை வெளியிட்டார்கள். அன்று சென்னையில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்துக்கு மதுரை **பி. டி. ராஜன்** தலைமை தாங்கினார். காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் புகழுரை வழங்கினார். மற்றும் பிஹார் கவர்னர் **அனந்தசயனம் அய்யங்கார், கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள், கே. பாலசுப்ரமண்ய அய்யர்** முதலான அறிஞர்கள் சொற்பொழிவாற்றினார்கள். மேலும் பல சமயங்களில் பலர் ஸ்ரீ ஆசார்யர்கள் பேரில் தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் முதலான பாஷைகளில் இயற்றிய பாடல்களையும் வரவேற்புப் பத்திரங்களையும் சேர்த்து **"பீமரத வாக்குச் சமாலா"** என்னும் தொகுப்பு மலர் ஒன்றும் சென்னை காமகோடி கோசஸ்தானத்தாரால் வெளியிடப்பட்டது. ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய உபந்நியாஸங்கள் ஆங்கிலத்தில் 2 பாகங்கள் பி. ஜி. பால் கம்பெனியரால் வெளியிடப்பட்டது. ஏழை மக்களுக்கு பெரிய அளவில் அன்னதானம் பல இடங்களில் வழங்கப்பட்டது.

**கன்யாகுமரியில் ஆதிசங்கர பிதிஷ்டை**

பாரத தேசத்தின் தெற்குக் கோடியில் இந்துமாக் கடலை யொட்டி அமைந்திருப்பது **கன்யாகுமரி** க்ஷேத்திரம். இங்கு அம்பிகை கன்னிகையாகத் தவக்கோலத்தில் பக்தர்களுக்குக் காக்ஷி யளித்து வருகிருள். இந்தத் தலத்திலும் ராமேச்வரத்தில் கட்டப்பட்டது போல ஸ்ரீ ஆதிசங்கரரது நினைவாக ஓர் மண்டபம் அமைக்க ஸ்ரீ ஆசார்யர்கள் விரும்பினுர்கள். அம்பிகையின் ஆலயத் தின் பின்புறம் கடலை நோக்கித் தெற்குப் பார்த்து இந்த மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. நடுவில் வெள்ளைச் சலவைக் கல்லினுல் அமைக்கப்பெற்ற ஆதிசங்கரரது விக்ரகமும் அத்துடன் நான்கு சிஷ்யர்கள் **சுரேச்வரர், தோடகர், பத்மபாதர், ஹஸ்தாமலகர்** ஆகிய வர்களின் பிம்பங்களும் அமைக்கப்பட்டுள்ளன. இதன் பிர திஷ்டையை ஸ்ரீ மடத்தின் பண்டிதர்கள் வைதிக முறைப்படி 31–5–1964-ஆம் தேதி நடத்தினுர்கள். சுமார் ரூ. 35,000 செலவில் கட்டப்பட்டுள்ள இந்த மண்டபத்தின் முழுச் செலவை யும் நாகர்கோவில் **சங்கர அன்னம் கிருஷ்ணய்யர்** குடும்பத்தினர் ஏற்றுக் கொண்டார்கள். சங்கர அன்னம் நிர்வாகி **கே. வி. சிவராம கிருஷ்ணய்யர்** மிகுந்த சிரத்தையுடன் இதைக் கட்டிமுடித்தார். இதன் முன்புறம் அண்மையில் சுமார் 10 மீட்டர் உயரத்தில் ரூ. 40,000/- செலவில் ஓர் வளைவு (Arch) அமைக்கப்பட்டுள்ளது. அந்த வளைவின் மேல் பாகத்தில் ஸநகாதிகளுடன் (நான்கு சிஷ்யர்கள்) கூடிய **ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியின்** விக்ரஹமும் அமைக்கப்பட்டுள்ளது.

**அம்பி கிராமத்தில்**

காஞ்சீபுரத்திற்கு மேற்கில் ஆறு கிலோமீட்டர் தொலைவில் **அம்பி** என்னும் கிராமம் உள்ளது. அதை அம்பிகாபுரம் என்று பழைய சாஸனங்களில் குறிப்பிட்டுள்ளார்கள். அந்தக் கிராமத் தைச் சென்ற 11-ஆவது நூற்ருண்டில் **விஜயகண்ட கோபால சோழன்** என்னும் மன்னன் ஸ்ரீ மடத்துக்குத் தானசாஸனம் செய்து கொடுத்திருக்கிருன். அந்தக் கிராமத்தில் ஸ்ரீ மடத்துக்கு இன்றைக் கும் சுமார் 25 ஏக்கர் நஞ்சை நிலம் சொந்தமாக இருந்து வருகிறது. அத்துடன் ஸ்ரீ காமகோடி பரம்பரையில் வந்த பூர்வாசாரியர் ஒருவருடைய அதிஷ்டானமும் (ஸமாதி) அங்கு விளங்கி வருகிறது. அந்த அதிஷ்டானத்திற்கு நித்யபூஜையும் ஸ்ரீ மடத்தின் பார்வை யில் வெகுகாலமாக நடைபெற்று வருகிறது. அந்தக் கிராமத்தில் சில மாதங்கள் ஸ்ரீ புதுப் பெரியவர்களுடன் தங்கி நகரத்தின் சூழ் நிலையிலிருந்து தனிமையில் வசிக்க ஸ்ரீ ஆசார்யர்கள் விருப்பம்

கொண்டார்கள். அத்துடன் அந்த இடம் ஸ்ரீ புதுப்பெரியவர்களின் சாஸ்திரப் பயிற்சியை மேலும் தொடருவதற்கு அனுகூலமாகவும் காணப்பட்டது. ஆந்திரப் பிரதேசத்தைச் சார்ந்த மண்டலிக வேங்கட சாஸ்திரிகளேயும் மற்றும் பல பண்டிதர்களேயும் அங்கே தங்கியிருக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அந்த வருஷத்திய வஸந்த நவராத்திரி அவ்விடம் நடைபெற்றது. 13-4-1964 தமிழ் வருஷப் பிறப்பு அன்று சென்னையிலிருந்து முசிரி சுப்ரமண்ய ஐயர் தலைமையில் சுமார் 100க்கு மேற்பட்ட சங்கீத வித்வான்கள் வந்து அதிகாலையில் ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் ஸந்நிதியில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பஞ்சரத்ன கீர்த்தனை மற்றும் தீக்ஷிதர், சாமா சாஸ் திரிகளின் கீர்த்தனைகளேயும் கானம் செய்தார்கள். பிரபலமாக உள்ள (வீணை, பிடில், மிருதங்கம்) பக்கவாத்யக்காரர்கள் பலரும் இதில் கலந்து கொண்டார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் இவர்கள் யாவருக் கும் அம்பிகையின் உருவம் தாங்கிய பொற்காசுகளே வழங்கினுர் கள். எல்லாவித்வான்களும் ஸ்ரீ புதுப்பெரியவர்களைத் தனிமையில் தரிசித்து அவர்களது ஆசியைப் பெற்றுர்கள். அதையடுத்து சங்கர ஜயந்தியும், ஆசார்யர்களின் 71 ஆம் ஜன்ம நக்ஷத்திர விழாவும் அந்த ஊரில் நடைபெற்றன. அந்தச் சிற்றூரில் ஸ்ரீ மடம் தங்கி யிருந்த சமயத்தில் ஒவ்வொரு நாளும் ஸ்ரீ மடத்திற்குத் தபால் மூலம் வரும் கடிதங்கள் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காக வும் பெருகிவிட்டன. இதைச் சமாளிப்பதற்காகத் தபால் இலாகா வினர் அங்கு ஓர் கிளைத் தபாலாபீஸை தற்காலிகமாக ஏற்படுத்தியிருந்தார்கள்.

### காஞ்சியில் 1964-ஆம் வருஷ வியாஸ பூஜை

சுமார் மூன்று மாதங்கள் அம்பியல் தங்கியிருந்த இரு பெரிய வர்களும் 22-7-64-ஆம் தேதி பெரிய காஞ்சீபுரம் ஸ்ரீ மடத் திற்கு விஜயமானுர்கள். 24-7-1964-ஆம் தேதி வெள்ளிக்கிழமை புதிய பூஜாமண்டபத்தில் (ஆஷாட சுத்த பூர்ணிமை) வியாஸ பூஜை வழக்கம் போல் நடைபெற்றது. ஸ்ரீ புதுப்பெரியவர்களும் அவ்வப்போது பூஜையில் கலந்துகொண்டனர். இந்த வியாஸ பூஜைக்குச் சென்னையிலிருந்தும் மற்றும் வெளியூர்களிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் வந்து தர்சனம் செய்துகொண்டார்கள். தொடர்ந்து ஒவ்வொரு நாளும் வித்வத் சபை நடைபெற்றுக் கொண்டிருந்தது. 23-9-1964-ஆம் தேதியுடன் அந்த சாதுர்மாஸ சங்கல்பம் பூர்த்தி யடைந்தது. அன்று மாலே இரு ஆசார்யர் களும் காஞ்சீபுரம் எல்லேயைக் கடந்து கீதையில் விச்வரூப அத்யா

யம் பாராயணம் செய்துகொண்டு பின்னர் பாண்டவ தூதப் பெருமாளைத் தரிசித்துவிட்டு ஸ்ரீ மடத்தையடைந்தார்கள்.

**ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலய தத்துவ மண்டபத் திருப்பணி**

சென்ற சுபானு வருஷம் தைமாதம் 25-ஆம் தேதி (7-2-1944) ஸ்ரீ ஆசார்யர்கள் நடத்திய மேற்படி ஆலய கும்பாபிஷேகத்திற்குப் பின்னர் மேற்படி ஆலயத்தின் தடாகம், கோபுரங்கள் இவைகளின் ஜீர்ணோத்தாரணங்கள் நடைபெற வேண்டியிருந்தது. இந்தத் திருப்பணியின் முதல் கட்டமாக 26-8-1964 புதன் கிழமையன்று ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ புதுப்பெரியவர்களைக்கொண்டே இதை நடத்தி வரும்படி ஆக்ஞையிட்டார்கள். குரு ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு சாஸ்திர முறைப்படி அவர்கள் சுப முகூர்த்தத்தில் திருப்பணியை தொடங்கி வைத்தார்கள். பல லக்ஷக்கணக்கில் செல வாகும் இந்த ஆலயத் திருப்பணிக்கு முதன் முதலாக வடநாட்டு பிரபல தொழிலதிபர் **பிர்லா** தத்துவமண்டபத்தின் திருப்பணிச் செலவுக்கு ரூபாய் 40,000/- நன்கொடை அளித்தார். ஸ்ரீ புதுப் பெரியவர்களும், ஸ்ரீ ஆசார்யர்களது விருப்பப்படி இந்தத் திருப் பணிகள் தொடர்ந்து நடைபெற விசேஷமாக அக்கறை எடுத்துக் கொண்டார்கள்.

**காஞ்சீபுரத்தில் மூன்றுவது வியாஸ-பாரத-ஆகம-சில்ப-ஸதஸ்**

இந்த ஸதஸின் முதல் மகாநாடு 1962-இல் இளையாத்தகுடியி லும் இரண்டாவது மகாநாடு 1963-இல் மதுரைக் கடுத்த நாராயணபுரத்திலும் நடைபெற்றன. இந்த ஆண்டு ஸதஸுக்கு பெரிய காஞ்சீபுரம் கங்காபாய் சத்திரத்தையடுத்த தோட்டத் தில் சுமார் 10,000 பேர்கள் உட்காரக் கூடிய மிகப் பெரிய அலங் காரக் கொட்டகை அமைக்கப்பெற்றது. 21-9-64-ஆம் தேதி மாலை **ஸ்ரீ வரதராஜர்** ஆலயத்திலிருந்து பஜனை கோஷ்டிகள், கலாநிகழ்ச்சி கள், பழமையான வாத்தியக் கோஷ்டிகளுடன் சுமார் ஒரு கிலோ மீட்டர் நீளமுள்ள ஊர்வலம் புறப்பட்டு இரவு 10 மணிக்குப் பெரிய காஞ்சிபுரத்தை அடைந்தது. இந்த ஸதஸுக்குத் தமிழ்நாடு கவர்னரும் முன்னாள் மைசூர் மஹாராஜாவுமான **ஸ்ரீ ஜய சாம ராஜ உடையார்** 22-9-64-ஆம் தேதி தலைமை தாங்கினர். ஸ்ரீ ஆசார் யர்களும் முன்னுரை வழங்கினர்கள். தமிழ் நாட்டின் முதல்வர் **எம். பக்தவத்ஸலம்**, தர்மபுரம் மடம் **ஸ்ரீ சோம சுந்தரத் தம்பிரான்** அவர்கள், காஞ்சி **ஞானப்ரகாச ஸ்வாமிகள்**, அறநிலைய கமிஷனர், **ஸ்ரீ கிருபானந்த வாரியர்** முதலானோர் சபைக்கு விஜயம் செய்திருந் தனர். சென்ற வருஷங்களில் இந்த ஸதஸில் கலந்து கொள்ளாத

பேரறிஞர்கள் பலர், கூட்டத்தின் நடவடிக்கைகளில் கலந்து கொண்டார்கள். ஒவ்வொரு நாளும் அறிஞர்கள் நடத்திய பேருரைகளில் ஸ்ரீ புதுப்பெரியவர்கள் கலந்து கொண்டது சபைக்குச் சிறப்பைத் தந்தது. இந்த வருஷ சபையின் விசேஷ அம்சமாக, நஸரத்பேட்டை ஸம்ஸ்கிருத வித்யா ஸமிதியில் 4-சிறுவர்களுக்குச் சிற்பத்தில் பயிற்சியும் நான்கு பேருக்கு நியாய சாஸ்திரத்தில் பயிற்சியும் ஆரம்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

**போப்பாண்டவரை அவமதிக்கக் கூடாது**

1964-ஆம் வருஷம் நவம்பர் மாத இறுதியில் ஐரோப்பாவில் உள்ள இத்தாலி நாட்டிலிருந்து பம்பாய்க்கு விஜயம் செய்யவிருக்கும் கதோலிக்க கிறிஸ்தவ மதத்தலைவராகிய போப்பாண்டவருக்கு எதிராகக் கறுப்புக் கொடி காட்ட ஹிந்து மகாசபையினர் செய்திருந்த முடிவைப்பற்றி ஸ்ரீ ஆசார்யர்கள் பிரஸ் ட்ரஸ்ட் செய்தி நிறுவனத்தின் நிருபரிடம் கீழ்க் கண்டவாறு கூறினார்கள்:—

"கத்தோலிக்க மதகுருவான போப் இந்தியாவுக்கு விஜயம் செய்யும்போது அவருக்கு அவமதிப்பைத் தரும் எந்தச் செயலையும் நாம் செய்யலாகாது. திட்டமிட்ட ரீதியில் மத மாற்றம் நிகழும் போது நாமும் திட்டமிட்ட வழியில் ஆன்மிகக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்து அதைச் சமாளிக்கவேண்டுமே தவிர, பிற மதத் தலைவர்களை நாம் எதிர்க்கலாகாது. நாஸ்திகத்திலிருந்து மனித வர்க்கத்தை மீட்டு அவர்களை ஆன்மிக மார்க்கத்திற்குக் கொண்டு வர எல்லா மதத் தலைவர்களின் கூட்டு ஒத்துழைப்பு இன்றைய நிலையில் மிகவும் அவசியமானதாகும்" என்றார்கள்.

**ராமேச்வரத்தில் அடித்த கடும் புயல்**

சென்ற 24-12-1964 வியாழக்கிழமை ராமேச்வரத்தில் அடித்த கடும் புயல் காரணமாகத் தனுஷ்கோடியே கடலில் மூழ்கி விட்டதாயும், பிரயாணிகள் ரெயில் ஒன்று மணலில் புதைந்து விட்டதாயும், பாம்பன் பாலத்திற்குச் சேதம் என்றும், ஏராளமான உயிர்ச்சேதமென்றும் மறுநாள் கிடைத்த செய்திப் பத்திரிகை வாயிலாகத் தெரிந்தது. இந்தச் செய்தியை அறிந்ததும் ஸ்ரீ ஆசார்யர்கள் மனம் கசிந்தவராகி ஸ்ரீ புதுப் பெரியவர்களை அழைத்து அந்தத் தீவில் உடை, உணவு இல்லாமல் தவிக்கும் மக்களுக்கு உடனடியாக நிவாரணம் அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று பணித்தார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்களும் சற்றும் தாமதமில்லாமல் முடிவு எடுத்துக் **கண்ணன்** என்னும் சீடரை ஸ்ரீ மடம் ஜவான் துணையுடன் ராமேச்வரத்திற்குப்

பொருள்களுடனும் பணத்துடனும் 26-12-64-இல் அனுப்பிவைத்தார்கள். அது சமயம் ராமேச்வரம் ஸ்ரீ மடத்தில் 250 மூட்டை அரிசி கையிருப்பில் இருந்தது. மேலே குறிப்பிட்ட இருவரும் மிகுந்த சிரமத்துடன் தோணிமூலம் 27-12-64-ஆம் தேதி ராமேச்வரத்தை அடைந்தார்கள். அன்றுமுதலே ஸ்ரீமடத்தில் அன்னம் அளித்து ஆகாரமின்றித் தவிப்பவர்களுடைய பசியை ஆற்றி வைக்கப்பட்டது. அக்னி தீர்த்தக் கரையில் சென்ற வருஷம் பிரதிஷ்டை செய்த 15 மீட்டர் உயர, ஆதிசங்கர விமான மண்டபத்திற்கு எவ்விதப் பழுதும் ஏற்படாமலிருந்தது குறிப்பிடத் தக்கது. கடற்கரையில் வாழ்ந்த மக்கள் பலர் தண்ணீரில் முழுகிப் போகாமல் அவர்களை ஸ்ரீ ராமநாத ஸ்வாமி ஆலயத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்ததில் ஸ்ரீ மடம் உள்ளூர் மானேஜர் விச்வநாதனும் மற்றவர்களும் பெரும் பங்கு கொண்டார்கள்.

**சந்தவேளூரில் குரு ஆராதனை**

காஞ்சியில் சாதுர்மாஸ சங்கல்பம் முடிவு பெற்றவுடன் அவ் வருஷத்திய சாரத நவராத்திரி விழாவையும் அவ்விடமே நடத்திக் கொண்டு இரு ஆசார்யர்களும் காஞ்சியிலிருந்து கிழக்கே சுமார் 15 கிலோ மீட்டர் தூரமுள்ள சந்தவேளூருக்கு விஜயமானார்கள். அவ்விடம் 23-2-65–ஆம் தேதி பரமகுரு ஆராதனையும் 4-3-65 -ஆம் தேதி குரு ஆராதனையும் நடைபெற்றன. 2-3-1965-ஆம் தேதி நடைபெற்ற சிவராத்ரி நான்கு கால பூஜையின் போது கர்நாடக இசை மேதை **ஸ்ரீமதி எம். எஸ் சுப்புலக்ஷ்மி** பக்க வாத்யங்கள் இல்லாமலேயே கீர்த்தனங்களை பாடினார். அன்று சென்னையிலிருந்தும் மற்றும் வெளியூர்களிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் வந்து பூஜையைத் தரிசித்தார்கள்.

**பத்ராசலம் ஸ்ரீ ராமர் ஆலயத் திருப்பணி**

ஆந்திர பிரதேசத்தில் கோதாவரி நதிக் கரையில் அமைந்துள்ள ஸ்ரீ பத்ராசல ராமர் ஆலயம் மிகவும் பழமையானது. **ராமதாஸர்** என்னும் மகானால் கட்டப்பட்டது. அதை (சில நூற்றாண்டுக்குப் பின்னர்) ஜீர்ணோத்தாரணம் செய்ய வேண்டிச் சர்க்கார் ஓர் கமிட்டியை ஏற்படுத்தினார்கள். அந்த ஆலயத்தின் கர்ப்பக்ருஹம் மிகவும் பழுது அடைந்து விட்டதால் அதை இடித்துப் புதிதாக அமைப்பதுபற்றி மக்களிடையே பல அபிப்ராய பேதங்களும் சர்ச்சைகளும் எழுந்தன. இதனுடைய **விஷயம்** சட்ட சபை வரையிலும் விவாதிக்கப்பட்டது. அப்பொழுது ஆந்திரப் பிரதேசத்தின் முதல் அமைச்சராக இருந்த **கே. பிரம்மானந்த ரெட்டி** நம் ஸ்ரீ ஆசார்யர்களிடம் இது சம்பந்தமான எல்லா

அபிப்ராயங்களையும் தெரிவித்து அவர்களது தீர்ப்புப்படி நடத்துவது என்று சர்க்கார் அளவில் முடிவு செய்தார். அதன் விளைவாக முதல் தடவையாக 29-7-1964-ஆம் தேதி காஞ்சீபுரத்தில் கீழே கண்டவர்கள் ஸ்ரீ ஆசார்யர்களைச் சந்தித்து அவரவர்களின் அபிப்ராயங்களை எடுத்துரைத்தார்கள் :— (1) ஆந்திர ப்ரதேச அறநிலைய கமிஷனர் ஏ. நாராயண ரெட்டி. (2) திருப்பணிக் கமிட்டி மெம்பர் வித்வான் வரதாசாரியர் (3) திருப்பதி தேவஸ்தானம் நிர்வாக அதிகாரி பி. நரஸிங்க ராவ். (4) ஆகம வித்வான் ஸ்ரீரங்கம் ராகவபட்டர் (5) திருப்பணி வேலை நடத்தும் சிற்பி கணபதி ஸ்தபதி.

அப்பொழுது கர்ப்பக்ருஹம் அமைந்துள்ள அளவு சாஸ்திர முறைப்படி இல்லையென்பது சிலரது அபிப்ராயம். பழைய அளவை வைத்தே கர்ப்பகிரஹத்தை அமைக்க வேண்டும் என்று ஸ்ரீ ஸ்வாமிகள் அபிப்ராயம் தெரிவித்தார்கள். ஆனால் அந்தப் பழைய அளவு எது என்பதை நிர்ணயம் செய்வதில் சந்தேகங்கள் எழுந்தன. இந்தச் சர்ச்சையைத் தீர்ப்பதில் மறுபடியும் சிரமங்கள் ஏற்பட்டன. இதை விளக்கம் செய்து கொள்ள வேண்டி இரண்டாவது தடவையாகக் கீழே கண்ட நபர்கள் அடங்கிய ஓர் கோஷ்டி 23-2-1965-ஆம் தேதி சந்தவேலூர் முகாமில் ஸ்ரீ ஆசார்யர்களைச் சந்தித்து இந்தச் சர்ச்சைக்குத் தீர்ப்பு அளிக்கும்படி வேண்டிக்கொண்டார்கள்.

(1) திருப்பணிக் கமிட்டித் தலைவரும் கம்மம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவருமான லக்கினேனி நரஸய்யா.
(2) கிருஷ்ணா ஜில்லா பரிஷத் தலைவர் பின்னமனேனி கோடீச்வர ராவ்.
(3) ஆந்திர பிரதேசம் சட்ட சபை டெபுடி சேர்மன் மாவிடிபூடி ஆனந்தம்,
(4) தர்க்க வித்யாலங்கார அனுமுல ராமநாத சாஸ்திரி
(5) "ஆந்திர ப்ரபா" ஆசிரியர், என். வி. சேஷய்யா.
(6) சிற்பி கணபதி ஸ்தபதி,

இவர்கள் கூறிய சந்தேகங்களையெல்லாம் நன்கு பரிசீலனை செய்து கர்ப்பகிருஹம் உள் அளவை 7 அடி $9\frac{1}{2}$ அங்குலம் (கிட்டத்தட்ட $2\frac{1}{3}$ மீட்டர்) சதுரத்தில் கட்டும்படி தீர்மானம் கூறினார்கள்.

### சென்னையில் அகில பாரத வேத சம்மேளனம்

சென்னையில் தியாகராய நகர், சிவ-விஷ்ணு ஆலயத்தில் நடைபெற்ற அபூர்வமான இந்தச் சம்மேளனத்தில் கலந்து கொள்வதற்

கென தமிழ்நாடு, கேரளம், கர்நாடகம், ஆந்திரம், மஹாராஷ்டிரம், குஜராத், உத்தரப்ரதேசம், பிஹார், மேற்கு வங்கம், ஒரிஸா இம்மாகாணங்களிலிருந்து 500 பேருக்கு மேலான வேத விற்பன்னர்கள் அழைக்கப்பட்டிருந்தனர். ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ என்னும் நான்கு வேதங்களில் முற்காலத்தில் பல கிளைகள் (சாகைகள்) இருந்திருப்பதாயும் ஆனால் அவைகளில் 10 சாகைகளே தற்காலம் புழக்கத்தில் இருந்து வருவதாயும் கூறப்படுகிறது. அவைகளில்:

(1) ரிக் வேதம் :— (1) சாகல சாகை (2) பாஷ்கல சாகை
(2) யஜுர் வேதம்—(1) மைத்ராயினி சாகை (2) காண்வ சாகை (3) மாத்யந்தின சாகை
(3) ஸாம வேதம் :—(1) ரணாயனிய சாகை (2) ஜைமினி சாகை (3) கௌதம சாகை
(4) அதர்வ வேதம் :—(1) பிப்பிலாத சாகை (2) சௌனக சாகை

இந்தச் சாகைகளின் விற்பன்னர்களைத் தவிர ஆங்காங்குள்ள பாடசாலைகளின் வேத வித்யார்த்திகளும் இதில் கலந்து கொண்டனர். சுமார் ஆயிரம் வேத விற்பன்னர்கள் வாயிலாக ஒலிக்கப் பெறும் இந்த வேத கோஷத்தைக் கேட்ட மக்கள் யாவரும் மயிர்க்கூச்சலடைந்தனர். அவர்களின் உள்ளங்களெல்லாம் அந்த வேத சப்தத்தில் (த்வனி) ஐக்யமாகி விட்டன. சொற்பொழிவோ, கண்காக்ஷியோ ஏதுமில்லாத இந்த வேத பாராயணத்தைக் கேட்கும்பொருட்டே சென்னை நகரின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்காக வந்து கொண்டிருந்தனர். ஒவ்வொரு சாகைக்கும் உரித்தான ஹோமங்களும் நடைபெற்றன. முடிவு நாளன்று தமிழ் நாடு கவர்னர் ஸ்ரீ (மைசூர் மாஜி மன்னர்) சாமராஜ உடையார், ராஜா ஸர் முத்தையா செட்டியார் மற்றும் பல பிரமுகர்கள் விஜயம் செய்து வேள்வி நடைபெற்ற அந்தக் கொட்டகையை வலம் வந்து வேதபண்டிதர்களின் ஆசியைப் பெற்றனர். சுமார் ஒரு லக்ஷ ரூபாய் இந்தச் சம்மேளனத்திற்குச் செலவழிக்கப்பட்டது. சென்னை பிரமுகர்கள் **பி. சூர்ய நாராயண, வைத்ய சுப்ரமண்ய ஐயர், பி. வி. ராமன், ரவால் கிருஷ்ணய்யர்** முதலானோர் பிரதிநிதிகள் தங்குவதற்கும் அவர்களின் ஆகாரத்துக்கும் வசதிகள் செய்து கொடுத்தனர். இந்தச் சம்மேளனத்தை ஸ்ரீ ஆசார்யர்களின் விருப்பப்படி கூட்ட எல்லா முயற்சிகளையும் வேத ரக்ஷண நிதியின் நிர்வாக ட்ரஸ்டி **எஸ். அண்ணாதுரை அய்யங்கார்** எடுத்துக்கொண்டார். இந்த வேத சம்மேளத்தில் கலந்து

கொண்ட எல்லா வேத விற்பன்னர்களும் ஸ்ரீ ஆசார்யர்களை அவர்கள் முகாம் செய்திருந்த சந்தை வேலூரில் தரிசித்துவர ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்ரீ ஆசார்யர்கள் பல வடநாட்டு பண்டிதர்கள் இதில் கலந்து கொண்டதைக் கேட்டுச் சந்தோஷ மடைந்தார்கள்.

**சிவ-விஷ்ணு ஆலயத்தில் அடிக்கல் நாட்டு விழா**

தியாகராயநகர் சிவ-விஷ்ணு ஆலயத்தில் நடைபெற்ற வேத சாகா சம்மேளனத்தின் நினைவாக வேதமண்டபம் ஒன்றை உருவாக்க ஆலயத்தின் நிர்வாகிகள் தீர்மானித்தார்கள். ஆலயத் தின் மேற்குப்புறம் உள்ள காலியிடத்தில் ரூ. 5000 செலவில் இந்த மண்டபத்தை எழுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது. காஞ்சீயிலிருந்து சென்னைக்கு இரு ஆசார்யர்களும் விஜயமாவதாக இருந்தது. அப்போது அடிக்கல் நாட்டு விழாவை நடத்தித்தர வேண்டு மென்று நிர்வாகிகள் கேட்டுக் கொண்டனர். ஸ்ரீ ஆசார்யர் களின் ஆக்ஞைபடி இந்தச் சுபகாரியத்தை ஸ்ரீ புதுப் பெரியவர்களே 13-3-1965 அன்று காலை சுமார் 5-30 மணிக்கு தம் திருக்கரங்களால் அடிக்கல் நாட்டினார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் ஆலயத்துக்கு விஜயம் செய்தபோது ஆலய நிர்வாகிகளின் சார் பாக, கானன் டங்கர்லி எஞ்சினீரிங் கம்பெனியின் மானேஜிங் டைரெக்டர் பி. எஸ். சுப்ரமண்ய ஐயர் ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து வேத கோஷத்துடன் அவர்களை வரவேற்றார். ஸ்ரீ வத்ஸ ஸோம தேவ சர்மா வரவேற்புரை வாசித்தளித்தார். யூனியன் அமைச்சர் **ஸி. ஆர். பட்டாபிராமன்** இந்த விழாவில் கலந்து கொண்டார். அடிக்கல் நாட்டி ஸ்ரீ புதுப் பெரியவர்கள் செய்த உபதேசமாவது :—

"மங்களம் நிறைந்த இந்தச் சிவ-விஷ்ணு ஆலயத்தில் உலக க்ஷேமத்தின் பொருட்டு அநேக காரியங்கள் நடைபெற்று வருகின் றன. சமீபத்தில் இங்கு வேத சாகா சம்மேளனம் நடை பெற்றது. இங்கு அமைக்கப்படவிருக்கும் மண்டபத்திற்கு **"வேதாரண்ய மஹா மண்டபம்"** எனப் பெயரிட்டுள்ளார்கள். வேதாரண்யம் என்னும் பெயரில் சிவ க்ஷேத்திரம் ஒன்று இருப்பது உங்களுக்குத் தெரியும். அரண்யம் என்றால் காடு. காட்டில் சிம்மங்கள் வசிப்பது போல வேத சிம்மங்களான வேத பண்டி- தர்கள் பலர் இங்கு வேதத்தை எப்பொழுதும் கோஷிக்கப் போவ தால் இதற்கு இந்தப் பெயரை வைத்திருப்பது மிகவும் பொருந்தும். வேதமென்பது மிகப் பெரிய மரம் போன்றது. அதன் கிளைகளே புராணங்கள். இந்த மஹா மண்டபத்தில் வேத கோஷம் நிரந்தர

மாக ஒலிக்க **ஸர்வேச்வரனை** நாம் பிரார்த்தனை செய்வோம்,'' என்றார்கள்.

**சென்னை நகர் விஜயம்**

இரண்டு ஆசார்யர்களும் 8-3-1965 இரவு சந்தவேளூரிலிருந்து புறப்பட்டு 14-3-65-ஆம் தேதி பழைய மாம்பலம் ஸ்ரீ சங்கர மடத்திற்கு விஜயமானார்கள். சென்ற 1957—1959-க்குப் பின் சேர்ந்தாற் போல் மூன்று மாதங்களுக்கு மேலாகச் சென்னையின் பல பாகங்களில் தங்கி இரு பெரியவர்களும் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்கள். 22-3-1965-ஆம் தேதி அடையாற்றில் **அனந்த பத்மநாபஸ்வாமி** ஆலய தர்சனம் செய்து கொண்டார்கள். அன்று சென்னை கவர்னர் **மைசூர் மஹாராஜா ஜய சாமராஜ உடையார்** ஸ்ரீ ஸ்வாமிகளை தர்சனம் செய்து கொண்டு ஒரு மணி நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். 23-3-65-ல் தேனாம்பேட்டை ஸ்ரீ பால சுப்ரமண்ய ஸ்வாமி ஆலய தர்சனம் செய்து வந்தார்கள். 30-3-1965-இல் **அமெரிக்கன் கான்ஸல் ஜனரல் ஏ. பி. ஃப்ராங்க்ளின்** என்பவருக்குப் பேட்டியளித்தார்கள். 19-3-1965-இல் மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் ஆர். எஸ். எஸ். ராஷ்ட்ரீய ஸ்வயம் ஸேவா சங்கத்தின் தொண்டர்களுக்கு அருளுரை வழங்கினார்கள். பிறருக்கு சேவை புரிகிறவர்கள் சத்யத்துடனும் சாந்தத்துடனும் தைர்யத்துடனும், கட்டுப்பாட்டுடனும், சில நியமங்களுடனும் இருந்தால்தான் பரோபகாரம் செய்யத் தகுதியுள்ளவர்களாவார்கள். ஹனுமாரை உதாரணமாக எடுத்துக்கொண்டு பக்தியுடன் சேவை புரியவேண்டும்'' என ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள்.

**சங்கீத வித்வான்களின் அஞ்சலி**

திருவல்லிக்கேணி வஸந்த பங்களாவில் முகாம் செய்திருக்கும் ஸ்ரீ ஆசார்யர்களை 12-4-1965 சித்திரை வருஷப் பிறப்பன்று சென்னை நகரில் வசிக்கும் சங்கீத வித்வான்கள் சுமார் 200 பேர் மகாராஜபுரம் **விச்வநாத அய்யர், முசிரி சுப்பிரமண்ய அய்யர்** இவர்களின் தலைமையில் ஸ்ரீ ஆசார்யர்களைத் தர்சனம் செய்துகொண்டு ரூ. 1008 காணிக்கையாகச் செலுத்தினார்கள். அந்தக் கோஷ்டியில் வந்திருந்த ப்ரபல வீணை, புல்லாங்குழல், பிடில், மிருதங்கம் முதலான வித்வான்கள் சேர்ந்து ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பஞ்சரத்னக் கீர்த்தனங்களை ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் ஸந்நிதியில் கானம் செய்தார்கள். மேலும் அவர்கள் தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகளின் கிருதிகளையும் கானம் செய்தார்கள். அன்று இரவு நடைபெற்ற ப்ரதோஷகால பூஜை

யில் எம். எஸ். சுப்புலக்ஷ்மி பக்க வாத்யங்களுடன் பாடினார். 17-4-1965-ஆம் தேதி இரவு ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ புதுப் பெரியவர்களுக்கும் மிகப் பெரிய ஊர்வலம் திருவல்லிக்கேணியிலிருந்து மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜுக்கு நடைபெற்றது.

**ரவிசங்கர் நடத்திய ஸிதார் வாசிப்பு**

ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் ஸிதார் வாசிப்பதில் மிகுந்த புகழுடன் விளங்கும் ரவிசங்கர் என்னும் கலைஞர் ஸ்ரீ ஆசார்யர்கள் முன்னிலையில் அந்த வாத்யத்தை வாசிக்க வேண்டுமென்று விரும்புவதாய்த் தெரிவித்துக்கொண்டார். அவருடன் அல்லா ரகா என்னும் தபேலா வித்வானும் வந்திருந்தார். ஸ்ரீ ஆசார்யர்கள் திருவல்லிக்கேணி வஸந்த மண்டபத்தில் இவர் கச்சேரியைத் தனிமையில் இரண்டு மணி நேரம் அமர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வித்வத்தைப் பாராட்டி அவர்களுக்கு மிகவும் விலையுயர்ந்த ஜரிகை சாதராக்களை ஆசார்யர்கள் வழங்கினார்கள். ஸ்ரீ ஸ்வாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டு வந்தவுடன் நண்பர்களிடம் ரவிசங்கர், தாம் ஸ்வாமிகளைத் தரிசித்தபோது தமக்கு என்றுமில்லாத ஓர் ஆனந்த அனுபவம் ஏற்பட்டதென்றும், ஸ்வாமிகள் மிகுந்த கவனத்துடன் தங்களது வாசிப்பைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள் என்றும் தமது வாழ்க்கையில் இதுவரை கிடைக்காத பாக்யம் இது என்றும் கூறினார். பின்னர் அவர்கள் ஸ்ரீ புதுப் பெரியவர்களையும் தரிசித்துக் கொண்டார்கள்.

**ஸ்ரீ புதுப் பெரியவர்களின் தலைமையில் வித்வத்ஸதஸ்**

17-4-65 திருவல்லிக்கேணி வஸந்த பங்களாவில் ஸ்ரீ ஆசார்யர்களது ஆக்ஞைப்படி ஓர் பெரிய வித்வத்ஸதஸ் கூட்டப்பட்டது. இந்த ஸதஸில் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தலைமை தாங்கினார்கள். நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத ஸம்பிரதாயங்களைச் சேர்ந்த வித்வான்கள் பலர் இந்த ஸதஸில் கலந்துகொண்டு அவரவர்கள் சித்தாந்தங்களின் படி 3 மணி நேரம் வாக்யார்த்தம் நடத்தினார்கள். ஸம திருஷ்டியுடன் இந்த ஸதஸை நடத்தியதற்கு வித்வான்கள் தங்கள் நன்றியை ஸ்ரீ ஆசார்யர்களுக்குத் தெரிவித்துக் கொண்டார்கள். வித்வான்கள் எல்லோருக்கும் தகுந்தபடி சம்மானம் அளித்து அவர்களை ஸ்ரீ ஸ்வாமிகள் அனுக்ரஹித்தார்கள்.

**கனகாபிஷேகம்**

மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் ஸ்ரீ ராமநவமியன்று ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் சிஷ்யர்கள் கனகாபிஷேகம் செய்ய ஏற்பாடு செய்திருந்தார்கள். பதினுன்கு காரட்டில் செய்யப்பட்ட ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் பதுமையுடன் கூடிய பொற்காசுகள் ஜபிக்கப்பட்ட கங்கை நீர் கலசங்களில் சேர்க்கப்பட்டன. முதலில் அவைகளை ஸ்ரீ ராமரின் விக்ரஹத்துக்கு அபிஷேகம் செய்யும்படி ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞை செய்தார்கள். பின்னர் சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தமது திருக்கரங்களினுல் ஸ்ரீ குருநாதருக்கு அந்த தீர்த்தத்தை யும் தங்க காசுகளையும் அபிஷேகம் செய்வித்தார்கள். இந்த அபிஷேகக் காசுகளைச் சிஷ்யர்களும், பக்தர்களும் விலைக்கு எடுத்துக்கொண்டு அதன் மூலம் கிடைத்த ரூ. 15,000/- யும் ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலயத் திருப்பணிக்குச்சேர்த்து விட்டார்கள்.

**நவரத்ன அபிஷேகம்**

மயிலாப்பூர் கச்சேரி ரோடிலுள்ளவரும், பொதுநல சேவை யில் ஈடுபட்டவரும், முன்னுள் மாநகராக்ஷித் தலைவருமான வக்கில் T. S. **ராமஸ்வாமி அய்யரைச்** சென்னை வாசிகள் நன்கு அறிவர். அந்த முதியவர் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு நவரத்தினங்களைக் கொண்டு அபிஷேகம் செய்ய வேண்டுமென்று விரும்பினுர். ஸ்ரீ ஆசார்யர்களோ அது தமக்கு விருப்பமில்லாதிருந்தும் அந்தப் பெரியவரது அவாவை நிறைவேற்ற மனமிரங்கி ஒப்புக் கொண் டார்கள். இந்த நவரத்னங்களை அவர் தமது குடும்பங்களைச் சார்ந்தவர்களிடமிருந்தும், நெருங்கிய சில நண்பர்களிடமிருந்தும் பெற்ருர். மயிலை ஸ்ரீ சங்கராலயத்தில் 22-4-1965-ஆம் தேதி அன்று பூஜை முடிந்ததும், வைரம், நீலம், பச்சை, சிகப்பு, முத்து, பவளம், கோமேதகம், வைடூர்யம், ஸ்படிகம் ஆகிய ரத்ன கற்கள் அடங்கிய கலச தீர்த்தத்தை ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தமது திருக்கரங்களினுல் குருநாதருக்கு அபிஷேகம் செய்தார்கள். இது வரை நடைபெருத இந்தச் சிறப்பான அபிஷேகத்தைக் காண காலையிலிருந்தே மக்கள் காத்திருந்துத் தரிசித்தனர்.

**மதுரையில் பாதுகா மண்டபப் பிரதிஷ்டை**

மதுரைமாநகரில் பேச்சியம்மன் படித்துறைக்கு அடுத் தாற் போல் வேங்கடசாமி நாயுடு அக்ரஹாரத்தில் ஸ்ரீ ஆசார்யர் கள் ஆக்ஞைபடி அமைக்கப்பட்டுள்ள பாதுகா மண்டப பிர திஷ்டை 5-5-1965 சங்கர ஜயந்தியன்று வைதிக முறைப்படி நடை

பெற்றது. வெள்ளை சலவைக்கல்லினால் செய்யப்பட்ட பாதுகைகள் மண்டபத்தின் நடுவில் அமைக்கப்பெற்று வேத பாராயணத்துடன் விசேஷமான அபிஷேகம் நடை பெற்றது. மண்டபத்தின் கீழ்ப் புறம் ஆறு அறைகள் கட்டப்பட்டிருக்கின்றன. பிராம்மண சமூகத்தார் நடத்தும் சிராத்தம் முதலான கர்மாக்களை நடுத்தர வகுப்பினரும் ஏழைகளும் செய்ய மதுரை போன்ற பெரிய நகரங்களில் இடம் கிடைப்பது சிரமமாக இருப்பதால், அத்தகையோருக்கு இங்கு இடம் இனமாக அளிக்கப்படுகிறது. பாத்திரங்களும் அவர்கள் உபயோகத்துக்குக் கட்டணம் இல்லாமல் கொடுக்கப் படுகின்றன. இந்த மண்டபத்தைக் கட்ட 12 மீட்டர் அகலம் 60 மீட்டர் நீள அளவில் வைகையாற்றின் கரையில் மதுரை வக்கில் **எம். விச்வநாதன்** தானமாக இடம் அளித்திருக்கிறார். மேலும் கட்டிடம் கட்டவும் உதவி புரிந்திருக்கிறார்.

**தண்டயார் பேட்டையில் ஸ்ரீ ஆசார்ய ஜயந்தி**

இரு பெரியவர்களும் கச்சாலேச்வரர் அக்ரஹாரத்திலிருந்து 3-6-1965 ஆம் தேதி தண்டயார்பேட்டை "ஸ்ரீ ராமா" கட்டிடத் துக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் ஜயந்தி வரை அங்கே தங்கவேண்டுமாய் அந்தப் பேட்டைவாசிகள் வேண்டிக் கொண்டார்கள். ஜயந்தியன்று ஸ்ரீமடத்தில் விசேஷமான ஹோமங் கள் நடைபெற்றன. அன்று மாலை வித்வத் சபை கூடிற்று. காசியி லிருந்து பிரபல மீமாம்ஸா பண்டிதர் **பி.என். பட்டாபிராம சாஸ்திரி கள்** வந்திருந்தார். அகில பாரத சம்ஸ்கிருத சாஹித்ய சம்மேளனத் தின் காரியதரிசி **டாக்டர் மதன் மிச்ராவும்** இந்தச் சபையில் கலந்து கொண்டார். மசூலிப்பட்டணத்தைச் சார்ந்த காயத்ரீ பீடத்தின் அதிபராகிய **ஸ்ரீ வித்யா சங்கர பாரதி** ஸ்வாமிகள் ஸ்ரீ ஆசார்யர் களைப் பற்றி சம்ஸ்கிருதத்தில் ஓர் நூல் இயற்றி அதை ஸ்ரீ ஆசார்யர் களிடம் சமர்ப்பணம் செய்தார். ஹிந்துமத தத்துவங்களை ஒருவாறு தெரிந்து கொள்ளும் ஆவலுடன் நம் ஆசார்யர்களைத் தரிசிக்க வந்த வெளிநாட்டவர்களின் பேட்டி சம்பந்தமான சில உரைகளையும் அபிப்ராயங்களையும் தொகுத்து "The Jagadguru" என்னும் தலைப் பில் ஆங்கிலத்தில் ஓர் புத்தகத்தை சென்னை சர்வகலாசாலையின் சம்ஸ்கிருதப் பிரிவின் தலைவர் **டாக்டர் வெ. ராகவன்** அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் முன்னிலையில் வெளியிட்டார். இந்த நூலுக்கு டாக்டர் ராகவன் ஓர் முகவுரையும் எழுதியுள்ளார். அந்த முக வுரையில் அமெரிக்கா, ஐரோப்பா, ஜப்பான் முதலான நாடுகளி லிருந்து நம் நாட்டுக்கு வந்து ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசித்த சில

மேதைகளைப்பற்றிய விவரங்களை ஓர் புத்தக உருவத்தில் தொகுத்தளிக்க வேண்டுமென்று ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் விரும்பினார்கள். அவர்களது விருப்பமே இந்தப் புத்தகத்தை வெளியிட காரணமாக அமைந்ததென்றும் குறிபிட்டுள்ளார். காஞ்சிபுரத்திலும் அன்று "**காஞ்சீயில் 72**" என்னும் விசேஷமலர் ஸ்ரீ சங்கர பக்தஜன சபையினரால் வெளியிடப் பட்டது!. சென்னையிலும் மற்றும் வெளியூர்களிலும் ஜயந்தி விழா மிகவும் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது.

**காட்டுப்பள்ளியில் வியாஸ பூஜை**

தண்டயார்பேட்டை முகாமுக்குப் பின்னர் இரண்டு ஆசார்யர்களும் 14-6-1965-இல் கிண்டி ஐ.ஐ.டி. காலனியில் சிவாலய பிரதிஷ்டை செய்து விட்டு, தம்பு செட்டித் தெருவிலுள்ள சொந்த மடத்தில் ஒரு நாள் தங்கி, 19-6-65 முதல் 23-6-65 முடிய ஐந்து நாட்கள் திருவொற்றியூர் சங்கராசார்யர் காலனியில் முகாம் செய்தார்கள். இந்தக் காலனியின் வீடுகள் அனைத்தும் ஸ்ரீ மடத்திற்குச் சொந்தமானவை.

காட்டுப்பள்ளி யென்னும் சிறு கிராமம் எண்ணூருக்கு வடக்கே சுமார் பத்து கிலோமீட்டர் தொலைவில் பக்கிங்காம் கால் வாய்க்கு கிழக்குப் பக்கம் கடலுக்கு அருகாமையில் அமைந்துள்ளது. மணற்பாங்கான இடமாதலால் கிராமத்தைச்சுற்றி சவுக்குத்தோப்பு, வாய்க்கால் ஓரங்களில் மட்டும் மா, தென்னை போன்ற பழம் தரும் மரங்கள் நெருக்கமாகக் காணப்படுகின்றன. கேரள நாட்டு இயற்கையழகை இங்கே காணலாம். கால்வாயை யடுத்து சிறிய பங்களா; அதையடுத்து பசுமாடுகள் கட்டும் ஓர் கொட்டில், சிறிய குளம், ஓர் ஆலயம், இவையெல்லாம் சென்னை மயிலாப்பூர் **கே. என். ஷண்முகசுந்தர முதலியாருக்குச்** சொந்தமானவை. இந்த இடத்தையடைவதற்கு கால்வாயில் செல்லும் படகின் உதவியைத் தவிர வேறு எந்தவித மார்க்கமும் கிடையாது. எண்ணூர் தோணித்துறையில் படகேறினால் அந்த ஊரை அடைய சுமார் நான்கு மணி நேரமாவது பிடிக்கும். இந்த இடத்தில் மின்சார வசதி எதுவும் இல்லை. இரவில் ஒரே இருட்டு மயம். இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீ ஆசார்யர்கள் இந்த ஏகாந்தமான இடத்தைப் பார்த்திருப்பதால் இதைப்பற்றி இப்பொழுது சண்முக சுந்தர முதலியாரிடம் விசாரித்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் விசாரித்ததை ஓர் பாக்யமாகக் கருதி சில நாட்களாவது ஸ்ரீ புதுப் பெரியவர்களுடன் ஸ்ரீ ஆசார்யர்கள்

அங்கே தங்கி ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி பூஜையை நடத்த வேண்டுமென்றும், அதற்கென இயன்றவரை எல்லா வசதிகளை யும் செய்து கொடுப்பதாயும் அவர் தெரிவித்துக் கொண்டார். மனித சஞ்சாரம் அதிகமாக இல்லாத இடம். பலவிதமான பறவைகளின் இனிமையான ஒலி சதாகாலமும் கேட்கும்.

திருவொற்றியூரிலிருந்து ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் 23-6-65 இரவு 3-00 மணிக்குப் புறப்பட்டு 24-6-65 காலை 9-30 க்கு காட்டுப்பள்ளிக்கு விஜயமானார்கள். பூஜைக்கும், இரு ஆசார்யர்கள் தங்கவும் மாட்டுத் தொழுவத் தில் இடம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பக்தர்கள் தங்க கொட்டகைகளும் அமைக்கப்பட்டிருந்தன.

13-7-1965 செவ்வாய்க் கிழமை வியாஸ பூஜையும் சாதுர்மாஸ சங்கல்பமும் அவ்விடம் நடைபெற்றன. சென்னையிலிருந்தும், வெளி ஜில்லாக்களிலிருந்தும், மற்றும் ஆந்திரப்ரதேசத்தி லிருந்தும் ஏராளமான பக்தர்கள் தர்சனத்திற்கு வந்திருந்தனர். வியாஸ பூஜைக்கு நாகசுரம் வாசிக்க வரும் திருச்சேரை கிருஷ்ண மூர்த்தி கோஷ்டியைத் தவிர அந்த வருடம் திருவிடைமருதூர் **வீராசாமிப்பிள்ளையும்** தம் சகாக்களுடன் மிகவும் சிரமப்பட்டு முதல் நாள் இரவே காட்டுப்பள்ளிக்கு வந்து சேர்ந்தார். பழையகால ரிஷி ஆச்ரமம் போல் சாந்தமாக விளங்கும் அந்த இடத்தை அவர்கள் மிகவும் அனுபவித்து ரசித்தார்கள். இரண்டு ஆசார்யர்களையும் வணங்கி பேரானந்தத்தில் மூழ்கினார்கள். பல இடங்களிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் அங்கு ஒவ்வொரு நாளும் தரிசனத்துக்கு மிகுந்த சிரமத்துடன் வரும் மற்ற யாவருக் கும் அந்த இடத்தை விட்டுத் திரும்புவதற்கே மனம் வரவில்லை. வீராசாமிப் பிள்ளையும் மேலும் மூன்று நாள்கள் அங்கேயே தங்கி ஸ்ரீ ஆசார்யர்களது ஆசியைப்பெற்று ஊர் திரும்பினார்.

முதலியாரின் வேண்டுகோளுக்கிணங்க அந்த வருஷ நவராத்ரி யும் காட்டுப் பள்ளியிலேயே நடைபெற்றது. நித்திய பூஜை, மடத் துச் சிப்பந்திகள் தரிசனத்திற்கு வருகின்றவர்கள் ஆகாரத்திற்கும் யானை, பசுமாடுகள் முதலானவைகளுக்கான உணவு பொருள்கள் எல்லாம் சென்னையிலிருந்தே வரவேண்டியிருந்தன. இரவு பக லாக இதற்காக இரண்டு படகுகள் வேலைசெய்து கொண்டிருந்தன.

### பாகிஸ்தான் சண்டையில் நமது வெற்றிக்கு பிரார்த்தனை

பாரத நாட்டின் எல்லையை வீரத்துடன் காத்துவரும் ஜவான்கள் தினமும் பாராயணம் செய்ய, "ஹனுமான் சாலீஸ்"

என்னும் வீர ஆஞ்சனேய ஸ்வாமி தோத்திரத்தை லக்ஷக்கணக்கில் அச்சடித்து அவைகளை ராணுவ இலாகா மூலம் படைத் தளபதிக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் அனுப்பிவைத்தார்கள். இவை தாமதமின்றி ஜவான்களுக்கு வினியோகம் செய்யப்பட்டன. மேலும் பகைவருக்குத் தோல்வியையளிக்கும் "உக்ர ரதம்". "அப்ரதி ரதம்", "மன்யுஸூக்தம்" முதலான ஹோமங்களைப் பலவிடங்களில் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள்.

1965 அக்டோபர் 2-ஆம் தேதியை ஓர் பிராத்தனை நாளாகப் பாரத தேசத்தில் உள்ள எல்லா மதத்தினரும் நடத்த வேண்டுமென்று ஓர் வேண்டுகோளை ஆசார்யர்கள் பத்திரிகைகள் மூலமாக அனுப்பிவைத்தார்கள். அதன்படி ஹிந்து ஆலயங்கள், முகம்மதிய மசூதிகள், கிறிஸ்தவ தேவாலயங்களில் விசேஷ பிரார்த்தனை நடத்தப்பட்டது. இவைகளுக்கான எல்லா ஏற்பாடுகளும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் நேர்பார்வையில் நடை பெற்றன.

**பாகிஸ்தான் போரின் முடிவு: பிரதமருக்கு ஆசார்யர் பாராட்டு**

மக்கள் எதிர்பாராத வண்ணம் இரு நாடுகளும் வெகு சீக்கிரமாகப் போர் நிறுத்தம் செய்தன. நமக்கு வெற்றி கிட்டியது. இதற்காக நாம் இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டுமென்று ஆசார்யர்கள் கூறினார்கள். இந்தப் போர் நிறுத்தம் நிரந்தரமான சமாதானத்திற்கு முன்னோடியாகத் திகழ வேண்டுமென்றும் கூறினார்கள். "பாகிஸ்தானியர் இந்தியப் பிரதேசத்தை ஆக்ரமிப்பு செய்தும் அந்நாட்டவர் மீது நாம் பகைமை பாராட்டவில்லை," என்று பிரதமர் லால் பகாதுர் சாஸ்திரி சொல்லியிருப்பதை வெகுவாகப் பாராட்டினார்கள்.

**ஒரு பொழுது உபவாஸம்**

யுத்த காலத்தில் நாட்டின் பொருளாதார சேமிப்பைக் கருதி திங்கட்கிழமைகளில் மக்கள் ஒரு வேளை உபவாஸம் இருக்க வேண்டுமென்று பிரதம மந்திரி லால் பகாதுர் சாஸ்திரி வெளியிட்ட வேண்டுகோளை ஆதரித்து ஸ்ரீ ஆசார்யர்கள் 1-11-1965-ஆம் தேதி ஓர் அறிக்கை வெளியிட்டார்கள்; அந்த அறிக்கையில் அவர்கள் கூறியதாவது:—

"திங்கள் தோறும் ஒரு பொழுது உணவைக் கைவிட்டு உபவாஸமிருக்குமாறு நம் பிரதம மந்திரி தேசமக்களைக் கேட்டுக் கொண்டுள்ளார். பொதுவாகத் திங்கட்கிழமை முக்யமாக சிராவண, கார்த்திகை மாதங்களில் வரும் திங்கட்

கிழமைகள் விருத தினங்களாக விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தினங்களில் நாம் பகலில் உபவாஸமிருந்து, இரவில் ஈச்வரனுக்கு அர்க்யம் அளித்து விட்டு உணவை உட்கொள்ள வேண்டும்.''

**தீபாவளியன்று ஆஸ்பத்திரி நோயாளிகளுக்கும் கங்காஸ்னானம்**

22-10-65-இல் நடந்த தீபாவளிப் பண்டிகையன்று நகரின் பல ஆஸ்பத்திரிகளில் உள்ள நோயாளிகளுக்குக் காட்டுப்பள்ளியிலிருந்து கங்கை நீர், நல்லெண்ணெய் தித்திப்பு, பக்ஷணம், விபூதி, குங்குமம் ப்ரஸாதம் இவை பக்தர்கள் மூலம் வினியோகிக்கப்பட்டன. அதுமுதல் ஒவ்வோர் ஆண்டும் இந்தத் தொண்டு தீபாவளியன்று நிரந்தரமாகச் செய்யப்பட்டு வருகிறது.

**காட்டுப்பள்ளி : இரு ஆசார்யர்களின் அநுபவம்**

காட்டுப்பள்ளியை விட்டுப் புறப்படு முன்னர் ஸ்ரீ ஆசார்யர்களையும் புதுப் பெரியவர்களையும் தினமணி நிருபர் பேட்டி கண்டு நகரங்களையும் கிராமங்களையும் விட்டு அதிகமாக ஜன சஞ்சாரமில்லாமல் ஓர் தீவு போல் இருக்கும் இந்த இடத்தில் நான்கு மாதங்களுக்குமேல் தங்கியதின் அனுபவத்தைப்பற்றி கேட்டார். அதற்கு ஸ்ரீ ஆசார்யர்கள் பதிலளிக்கையில்--

''நகர்ப்புற நாகரிகங்களின் ஆடம்பரங்களிலிருந்து விலகி இயற்கையின் கம்பீரமான சூழ்நிலையில் அமைந்துள்ள இந்த இடத்தில் நான்கு மாதங்கள் தங்கினோம். சென்னையிலோ மற்ற நகரங்களிலோ தங்கும்பொழுதெல்லாம் எங்கே திரும்பினாலும் ஜனக்கூட்டம் சூழ்ந்துகொண்டு விடும். இங்கே அவ்விதமான சங்கடங்கள் இல்லை. நினைத்த போது நிம்மதியாக வெளியே வந்து கிராமத்தில் உலாவ முடிகிறது. இந்த இடத்துக்கு வருவது அவ்வளவு சுலபமாக இல்லாவிட்டாலும் மக்கள் படகுகள் மூலமாக இங்கும் வந்து கொண்டுதான் இருக்கிறார்கள். சினிமா, ரேடியோ, மோட்டார் கார் முதலானவைகளின் சத்தம் ஒன்றுமே இல்லாத இந்தக் காட்டுப்பள்ளியில் நான்கு மாதம் வசிக்கும் வாய்ப்பு இங்குள்ள முதலியார் குடும்பத்தின் ஆதரவினால் கிடைத்தது.'' என்று தெரிவித்தார்கள்.

**சிகிச்சை பெற்ற ஜவான்களுக்குத் தங்கக் கலசத்தில் தேன்**

பாகிஸ்தான் சண்டையில் பாதிக்கப் பெற்று பரங்கிமலை இராணுவ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்த ஜவான்களின்

ஆரோக்யத்திற்காக ஸ்ரீ அம்பிகையின் பிரஸாதமாக 265 கிராம் எடையுள்ள ஓர் தங்கப்பாத்திரத்தில் தேன் அனுப்பப்பட்டது. அந்தத் தேனை அதிகாரிகள் ஜவான்களுக்கு வினியோகம் செய்தார்கள். அந்தப் பாத்திரமும் வெற்றியின் நினைவாக இறுதியில் இந்திய ராணுவச் செயலகத்தில் வைப்பதற்கு அனுப்பப்பட்டது. யுத்த நிதிக்காக ஸ்ரீ மடத்திலிருந்து ரூ. 2000 ஆரம்பத்தில் அனுப்பப்பட்டிருந்தது.

**ஆந்திரப் பிரதேசத்தில் யாத்திரை**

காட்டுப்பள்ளியில் நான்கு மாதங்களுக்கு மேல் தங்கிய இரு ஆசார்யர்களும் 1965-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 31-ஆம் தேதி அவ்விடமிருந்து புறப்பட்டு வடக்கே பழவேற்காடு, சுண்ணும்புக்குளம், எளாவூர், ஆரம்பாக்கம் மார்க்கமாக ஆந்திரப்ரதேசம் நெல்லூர் ஜில்லாவைச் சேர்ந்த தடா என்னும் ஊருக்கு 5-11-65-ஆம் தேதி விஜயம் செய்தார்கள். அன்று ஏகாதசி. மறுநாள் பிருந்தவான துவாதசி வந்ததால் நெல்லிமரத்தின் அடியில் ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி பூஜை நடைபெற்றது. அடுத்த முகாம் 7-ஆம் தேதி மன்னார்போலூர். அந்த ஊர் விஷ்ணு ஆலயதர்சனம் செய்துகொண்டு 8-11-65-ஆம் தேதி சூலூர் பேட்டைக்கு விஜயம் செய்தார்கள். அன்று கிருத்திகா பூர்ணிமையாதலால் அன்னபிஷேகம் நடைபெற்றது. 23-11-65-ஆம் தேதி சூர்யகிரஹணத்துக்கு மன்னார்போளூரில் காளிந்தீ நதியில் ஸ்னானம் செய்தார்கள்.

மன்னார்போளூரிலிருந்து இரண்டு ஆசார்யர்களும் 27-11-65-ஆம் தேதி காளஹஸ்திக்கு விஜயம் செய்தார்கள். இந்த க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுடன் ஆசார்யர்கள் முதல் முறையாக விஜயம் செய்தார்கள். 24-11-65-ஆம் தேதி பகலில் ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பிகை ஸமேத ஸ்ரீ காளஹஸ்தீச்வர ஸ்வாமி ஆலயத்தில் இரு ஆசார்யர்களும் தர்சனம் செய்து கொண்டார்கள். ஆலயத்தில் இரு ஆசார்யர்களையும் பூர்ண கும்பம் மற்றும் தேவஸ்தான மரியாதைகளுடன் வரவேற்றார்கள். எல்லா ஸந்நிதிகளிலும் தர்சனம் செய்து கொண்டு அவர்கள் முகாம் செய்துள்ள தேவகோட்டை **அருணாசலம் செட்டியார்** பசுமடம் கட்டிடத்திற்கு விஜயமானார்கள். 25-11-1965-ஆம் தேதி திருப்பதி தேவஸ்தானம் நிர்வாகி (Executive Officer) **கே. உமாபதி, ஐ.ஏ.எஸ்.** காளஹஸ்திக்கு வந்து ஸ்ரீ ஆசார்யர்கள் திருப்பதியிலும் திருமலையிலும் தங்குவதற்கும் வேங்கடேசப் பெருமாள் தர்சனத்

திற்கும் செய்துள்ள ஏற்பாடுகளைப் பற்றித் தெரிவித்துக் கொண்டார்.

**திருப்பதி-திருமலை விஜயம்**

27-ஆம் தேதி காளஹஸ்தியிலிருந்து புறப்பட்டு இரு ஆசார்யர்களும் இரவு கீழத் திருப்பதியை அடைந்தார்கள். ஸ்ரீ புதுப் பெரியவர்கள் பீடத்துக்கு வந்தபின் முதல் தடவையாக இப்பொழுது திருமலைக்கு விஜயம் செய்கிறார்கள். 28-11-65 காலை இரு ஆசார்யர்களும் திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ பெருமானை ஆலயத்தில் தர்சனம் செய்து கொண்டார்கள். நிர்வாக அதிகாரி **கே. உமாபதி,** தேவஸ்தான ஆபீஸர் **ராமசாமி ரெட்டி,** மற்றும் அர்ச்சகர் முதலானோர் தேவஸ்தான மரியாதைகளுடன் ஸ்வாமி களை வரவேற்றார்கள். தேவஸ்தானத்தில் நடைபெறும் சிற்ப கலைப் பயிற்சி நிலையத்தையும் ஸ்வாமிகள் பார்வையிட்டார்கள்.

அன்று இரவு திருப்பதியிலிருந்து புறப்பட்டு ஏழு மலைகளைக் கால் நடையாகவே கடந்து மறுநாள் 29-ஆம் தேதி அதிகாலையில் 4-மணி சுமாருக்கு திருமலையை அடைந்தார்கள். ஊர் எல்லையில் தேவஸ்தான ட்ரஸ்டு போர்ட் சேர்மன் **ஜகந்நாத ராஜு,** மெம்பர் **ஐ. வி. சோமயாஜுலு,** நிர்வாக அதிகாரி **கே. உமாபதி,** பேஷ்கார் **குப்பைய்ய செட்டி** மற்றும் தேவஸ்தான அர்ச்சகர்கள் ஸ்தானிகர்கள் முதலானோர் மேளவாத்யங்களுடன் தேவஸ்தான பிரஸாத மரியாதைகளுடன் ஸ்ரீ ஆசார்யர்களை வரவேற்றார்கள். இரண்டு பெரியவர்களும் ஊர்வலமாக ஆலயத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். சோடசோபசாரம், கர்ப்பூர ஆரத்தி முடிந்து இரு பெரியவர்களும் பெருமாளின் ப்ரஸாதங்களைப் பெற்றுக் கொண்டார்கள். ஸ்ரீ பெரியவர்களுக்கு ஸ்ரீ பெருமாளுக்கு சாத்தப் பட்ட 36 முழம் நீளமுள்ள சரிகை பட்டு வஸ்திரம் அளிக் கப்பட்டது. ஸ்ரீ புதுப் பெரியவர்களுக்கும் ஸ்வாமி பீதாம்பரம் அளிக்கப்பட்டது. ஸ்ரீ பெரியவர்கள் கர்ப்ப கிருஹத்திற்குள் சென்று பெருமாளுக்கு விசிறி சேவை சாதித்தார்கள். அவர்கள் மெய் மறந்து அந்தச் சேவை சாதித்தது கண் கொள்ளாக் காக்ஷி யாக இருந்தது. பின்பு தேவஸ்தான ஜாகைக்கு ஊர்வலத்துடன் வந்து சேர்ந்தார்கள்.

**வேங்கடேச்வர ஆர்ஜித சம்ஸ்கிருத சதஸுக்கு விஜயம்**

அன்று 30-ஆம் தேதி அதிகாலையில் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சுப்ரபாத சேவை தோமால சேவை சஹஸ்ரநாம அர்ச்சனை ஆகியவற்றையும் தரிசித்து வந்தார்கள்.

வேதத்தையும் வேதக் கலைகளையும் ஊக்குவிக்க தேவஸ்தானத்தில் சுமார் ஒரு வருஷத்திற்கு முன் ஏற்படுத்தப்பட்ட இந்தச் சபைக்கு விஜயம் செய்து அருள்மொழி வழங்க வேண்டுமென்று தேவஸ்தான அதிகாரிகள் ஸ்ரீ ஸ்வாமிகளைக் கேட்டுக் கொண்டார்கள். அன்று மாலை 5-மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் இந்த ஸதஸ் ஆரம்பிக்கப்பட்டது. வேதபாட சாலையின் அத்யக்ஷகர் ஆர். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் சம்ஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் வரவேற்பு உரை நிகழ்த்தினர். வரவேற்புக்கு தெலுங்கில் பதில் கூறுகையில் ஸ்ரீ ஸ்வாமிகள் அருளியதாவது.

"இந்த ஆர்ஜித சம்ஸ்கிருத ஸதஸானது முன்னுள் ட்ரஸ்டு போர்ட் தலைவர் கல்லூரி சந்திரமௌளி அவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. இது மேலும் மேலும் அபிவிருத்தியடைய ஸ்ரீநிவாஸரைப் பிராத்திக்கிறேன். இங்கு தேவஸ்தானத் தாரால் நடத்தப்பட்டுவரும் வேத பாடசாலையில் தற்காலம் 100 வித்யார்த்திகள் இருப்பதைப் பார்த்து சந்தோஷமடைகிறேன். சில இடங்களில் 2, 3 வித்தியார்த்திகளே காணப்படுகிருர்கள். ஆயிரக்கணக்கில் இங்கு வித்யார்த்திகள் சேர்ந்து உயர்ந்த வித்யாஸ்தானமாக இது விளங்கவேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்," எனக் கூறினுர்கள். தேவஸ்தான எக்ஸிகுடிவ் ஆபீஸர் உமாபதி தேவஸ்தான சார்பில் ரூ. 1116 ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அளித்து வந்தனுபசாரம் கூறினுர். ஸதஸில் கலந்து கொண்ட வித்வான்களுக்குச் சம்மானங்கள் செய்யப் பட்டன. ஸ்ரீ உமாபதிக்கு பெரியவர்கள் காஷ்மீர் சால்வை அளித்து மந்திராக்ஷதை வழங்கி ஆசீர்வதித்தார்கள்.

## ஸ்ரீ புதுப் பெரியவர்கள் உபதேசம்

திருமலையில் தமது ஜன்ம நக்ஷத்திரத்தன்று (அவிட்டம்) ஸ்ரீ வேங்கடேச்வரரை தர்சனம் செய்துவிட்டு பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் பக்தர்கள் சட்டை போட்டுக் கொண்டு தர்சனத்திற்கு ஆலயத்திற்குள் வருவது சரியல்ல என்றும் இந்தப் பழக்கத்தை மிகவும் அருள் பொருந்திய இந்த ஸ்தலத்தில் நிறுத்தச் செய்தால் மற்றத் தேவாலயங்களிலும் சுலபமாக இதைக் கடைப்பிடிக்க முடியுமென்று கூறினுர்கள்.

ஸ்வாமிகள் 1-12-65 காலை ஆகாச கங்கை, பாபநாசம் நீர்வீழ்ச்சிகளுக்குச் சென்று தீர்த்த ஸ்நானம் செய்து வந்தார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் இருவரும் விஜயம் செய்திருந்த மூன்று நாள் களிலும் விடாது மழை பொழிந்து கொண்டிருந்தது.

மூன்று நாள் திருப்பதிவாஸம் செய்துகொண்டு 1-12-65-ஆம் தேதி இரவு திருமலையிலிருந்து இரண்டு ஆசார்யர்களும் திருச்சா னூருக்குப் புறப்பட்டார்கள். தேவஸ்தான மரியாதையாக ஸ்ரீமடம் சிப்பந்திகள் சிலருக்கு வேஷ்டியும் ப்ரசாதமும் அனுப்பி வைத்தார்கள். தேவஸ்தான அர்ச்சகர்களுக்கும் மற்றக் கைங் கரியம் செய்பவர்களுக்கும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சம்மானம் வழங்கினார்கள். திருமலையை விட்டுப் புறப்படுமுன் ஸ்ரீ பெரிய வர்கள், காசி,ராமேச்வரம் போன்ற க்ஷேத்திரங்களுக்கு ஒருமுறை சென்று வந்தாலே மனது நிறைவு பெற்று விடுகிறதென்றும் ஆனால் இங்கு பக்தர்களுக்கு காக்ஷியளித்து வரும் ஸ்ரீ திருவேங்கடமுடை யானை தரிசிப் பவர்களுக்குத் திருப்தியென்பதே கிடையாது என்றும் கூறினார்கள். மேலும் இந்தக் கடவுள் குன்றின் மேல் இட்ட விளக்கு போல எங்கும் பிரகாசித்துக் கொண்டு பக்தர்கள் அனைவரையும் ரக்ஷித்துக் கொண்டு வருகிறார் என்றும் கூறி னார்கள்.

**சென்னை விஜயம்**

திருமலையிலிருந்து 1-12-1965 அன்று இரவு கிளம்பி திருச் சானூர் அலமேலு மங்காபுரத்தில் தங்கி தாயாரையும் சேவித்து விட்டு 5-ஆம் தேதி ரேணிகுண்டா, 6-ஆம் தேதி நகரி புத்தூர், 7-ஆம் தேதி நாகலாபுரம், 8-ஆம் தேதி சூலமேனி. 9-ஆம் தேதி சோழவரம் ஆகிய இடங்களில் தங்கி 10-ஆம் தேதி சென்னை நுங்கம்பாக்கத்தை அடைந்தார்கள். அன்று இரவு அங்கிருந்து இரு ஆசார்யர்களுக்கும் மிகப் பெரிய ஊர்வலம் ஏற் பாடு செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீ பெரியவர்கள் புஷ்பப் பல்லக் கிலும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் யானை மீது அம்பாரியிலுமாக புது மாம்பலம் வேங்கட்ராமய்யர் தெரு சர்வ மங்களா கல்யாண மண்டபத்தை அடைந்தார்கள்.

**கூடலி சிருங்கேரி ஸ்வாமிகளுடன் ஆசார்யர்கள்**

மைசூர் பிராந்தியம் துங்கபத்ரா தீரத்தில் உள்ள கூடலி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ராமேச்வர யாத்திரையை முடித்துக் கொண்டு சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்கள். அவர்கள் ஸ்ரீ காமகோடி பீடத்தின் உண்மைகளையும் ஸ்ரீ காஞ்சி ஆசார்யர்கள் வேதத்தையும் மதத்தையும் காக்க செய்து வரும் மகத்தான காரியங்களைப் பற்றியும் அங்கங்கே உபன்யாஸங்கள் செய்து

கொண்டு திருவல்லிக்கேணியில் நடைபெற்று வந்த வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையின் சம்மேளனத்தில் கலந்து கொண் டார்கள். அதுசமயம் (12-1-1966-ஆம் தேதி) அவர்களை ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சந்தித்து உரையாடினார்கள். கூடலி ஸ்வாமிகள் காஞ்சிக்கு பின்னர் விஜயம் செய்தார்கள்.

**தேனாம்பேட்டை பாலசுப்ரமண்யர் ஆலய கும்பாபிஷேகம்**

சிறந்த ஆசார்ய பக்தர்களாகிய சென்னை ஸ்டாண்டர்ட் மோட்டார் கம்பெனி உரிமையாளர் **கோபாலகிருஷ்ணய்யர்** அவர்களின் தர்மபத்னி மதுரம்மாள் இவர்களின் முயற்சியால் நடை பெற்று வந்த இந்த ஆலயத்தின் திருப்பணி மிகுந்த சீரிய முறை யில் அமைந்துள்ளது. அதன் கும்பாபிஷேகத்தையும் இரு ஆசார்யர்களின் முன்னிலையிலே நடைபெறச் செய்ய வேண்டுமென் பது அந்த தம்பதிகளின் அவா. அவர்கள் பிரார்த்தனையைப் பூர்த்தி செய்ய வேண்டி ஸ்ரீ ஆசார்யர்கள் திருப்பதியிலிருந்து சென்னைக்கு இதுசமயம் விஜயமானார்கள். 12-12-1965-இல் கும்பா பிஷேகத்தன்று காலை இரு பெரியவர்களும் சர்வ மங்களகலியாண மண்டப முகாமிருந்து தேனாம்பேட்டைக்கு விஜயம் செய்து கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள். கும்பாபிஷேகம் நடை பெற்ற பின்னரும் இரு ஆசார்யர்களும் மறு முறை ஆலயம் சென்று ஒவ்வொரு ஸந்நிதியையும் தரிசித்து திருப்பணிகளையும் பார்வையிட்டார்கள். புதிதாக நிர்மாணிக்கப் பட்ட கோபுரத்தின் அமைப்பையும் மிகவும் பாரட்டினார்கள்.

**ராமேச்வரம் சங்கர மடம் : நேபாள மன்னர் விஜயம்**

நேபாள மன்னர் மகேந்திரரும், ராணி ரத்னா தேவியும், இள வரசர் விக்ரம ஸகாதேவுடன் விசேஷ ரெயிலில் 1965 டிசம்பர் மாதம், 13-ஆம் தேதி ராமேச்வரத்துக்கு விஜயம் செய்தார்கள், அவருடன் பாரத நாட்டின் நேபாள தூதர் ஸ்ரீமந் நாராயணனும் அந்நாட்டின் உயர் அதிகாரிகளும் வந்திருந்தனர். ரயில் நிலையத் தில் அவர்களுக்கு விசேஷ வரவேற்பு அளிக்கப்பட்டது. ராமநாத புரம் கலெக்டர் நரஸிம்மன் தேவஸ்தான ட்ரஸ்டிகள், பஞ்சா யத்துத் தலைவர் ஆகியோர் வரவேற்பளித்தனர்.

முதலில் அவர்கள் கடற்கரை அக்னிதீர்த்தத்திற்கு சென்று மஹா சங்கல்பம், செய்து கொண்டனர். மன்னர் தம்பதியர் சமுத்திர தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்து கொண்டார்கள். இளவரசர் மட்டும் கடலில் நீராடினார். அதையடுத்து சமுத்திர

ராஜனுக்கு பூஜை செய்தார்கள். பூஜை முடிந்தவுடன் எதிரில் உள்ள காஞ்சி காமகோடி பீடத்தைச் சார்ந்த சங்கர மடத்திற்கு விஜயம் செய்தார்கள். சங்கர மடத்தில் ஸ்ரீ மடம் முகாம் மானேஜர் **எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரிகளும்**, திருப்பாவை கமிட்டி காரியதரிசி **எஸ். ராமமூர்த்தி ஐயரும்**, உள்ளூர் மடம் மானேஜர் **விச்வநாதனும்** மன்னருக்குப் பூர்ண கும்பம் கொடுத்து அவர்களை வரவேற்றார்கள். முதலில் ஆஞ்சனேயரையும், துவாதசலிங்கங்களையும் அவர்கள் தர்சனம் செய்து கொண்டார்கள். அதையடுத்து ஆதிசங்கரரின் பாதுகைகளுக்குப் புஷ்பாஞ்சலி செய்தார்கள், அதற்குப்பின் 15 மீட்டர் உயரமுள்ள விமான மண்டபத்தில் அமைந்த வெண் சலவைக் கல்லினால் 2 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ள மிகப் பெரிய விக்ரஹத்தையும் 4 சிஷ்யர்களின் விக்ரஹங்களையும் கீழே இருந்தே தர்சனம் செய்து கொண்டார்கள். கடைசியில் ஸ்ரீ ஸரஸ்வதீ ஸந்நிதியை தர்சனம் செய்து கொண்ட பிறகு ராஜ தம்பதிகளுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் ப்ரஸாதமும் அஹிம்ஸாபட்டும் வழங்கப்பட்டது.

ராஜ தம்பதிகள் அங்கிருந்து ஸ்ரீ ராமநாதஸ்வாமி ஆலயத்துக்குச் சென்றார்கள். ஆலயத்தின் ட்ரஸ்டிகளும், நிர்வாக அதிகாரியும், ஆலய பண்டாக்களும் தேவஸ்தான மரியாதைகளுடன் வரவேற்றார்கள். ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கு மன்னர் தாமாகவே கங்காபிஷேகம் செய்தார். பின்னர் அவர்கள் மற்ற எல்லா ஸந்நிதிகளுக்கும் அழைத்துச் செல்லப்பட்டார்கள். பர்வத வர்த்தனி அம்பாளைத் தரிசித்துக் கொண்டு பின்னர் மன்னர் மதுரைக்குச் சென்றார். ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கு நேரில் அபிஷேகம் செய்யும் தனி உரிமை ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஆசார்யர்களுக்கும், சிருங்கேரி சாரதா பீடம் ஆசார்யர்களுக்கும், நேபாள மன்னருக்கும்தான் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**சென்னையில் நான்காவது ஆகம-சில்ப-ஆறங்க மகாநாடு**

சென்னை, மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீச்வரர் கற்பகாம்பாள் கல்யாண மண்டபத்தில் தமிழ்நாடு முதலமைச்சர் **எம். பக்தவத்ஸலம்** இந்த மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசும் பொழுது "முக்காலத்தில் மக்கள் ஆலயங்களை மையமாக வைத்துக் கொண்டு தங்கள் வாழ்வை நடத்தி வந்தார்கள். அந்த ஆலயங்களுக்கு ஆகமங்களும் சிற்பமும் உயிர் நாடிகளாக விளங்கி வருகின்றன" என்றார்.

ஸ்ரீ ஆசார்யர்கள் பேசுகையில் "புராதனக் கலைகளை வளர்த்து வந்தவர்களுக்கு அக்காலத்தில் மான்யங்கள் அரசர்களால் விடப்

பட்டிருந்தன. அந்த மான்யங்களையெல்லாம் புதுச் சட்டங்கள் மூலம் ரத்து செய்து விட்டதால் கலைகளும் மறைந்து விட்டன. நாடகம், கூத்து, புராணம் சொல்லுதல் மூலம் மக்கள் நல்வழிபட்டனர். உதாரணமாக மலையாளத்தில் சாக்கியர் கூத்து என்று ஓர் அம்சம் உண்டு. அதில் ஒருவரே பேசுபவர். அவர் ஹாஸ்யமாகப் பேசி மக்கள் குறைகளை எடுத்துக் கூறுவார். சமூகத்தில் பெரிய மனிதர்களின் குறைகளை அவர் சுட்டிக் காட்டிப் பேசினாலும் அதை ஓர் குற்றமாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள். அவர்கள் திருந்துவதற்கு முயற்சி செய்வார்கள். ஆகையால் நமது கலைகளெல்லாம் மக்களை நல்வழிப்படுத்த ஏற்பட்டதாகும். இந்த மான்யங்கள் அளிக்கும் ஏற்பாட்டை சர்க்கார் மறுபடியும் நடைமுறைக்குக் கொண்டுவருவது நல்லது'' என்றார்கள். மேலும் "பஞ்சாங்கங்கள் அச்சுக்கு வருமுன் அதாவது அச்சு இயந்திரங்களே இல்லாத சமயத்தில் கூட ஒவ்வோர் ஊரிலும் பஞ்சாங்கக்காரர் என்று ஒருவர் இருப்பார். அவர் கணிதம், வானசாஸ்திரம் இவைகளை நன்கு கற்றவராக இருப்பார். சந்திரன், சூரியன், நக்ஷத்திரம் இவைகளைப் பற்றியும், அன்றாடம் திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் போன்ற ஐந்து அம்சங்களைப் பற்றியும் மக்களுக்கு எடுத்துக் கூறுவார். இதை நன்கு அறிந்தவர்கள் தற்காலம் மிகவும் குறைந்து விட்டார்கள். இந்தக் கலையைக் கற்றவர்களுக்கு ஊக்கமளிப்பதற்காக அவர்களுக்கும் இந்த ஸதஸில் பங்கு ஏற்று நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது'' எனக் கூறினார்கள்.

ஒவ்வொரு நாளும் வித்வத் ஸதஸில் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் விஜயம் செய்து விஷய சர்ச்சைகளில் கலந்து கொண்டு கலைஞர்களுக்கு உத்ஸாகத்தை அளித்து வந்தார்கள்.

**நெல்லூர்விஜயம்**

1965-இல் டிஸம்பர் மாதம் 17-ஆம் தேதி சென்னையில் ஆகமசில்ப ஸதஸ் நடைபெற்றவுடன் ஆந்திரப் பிரதேசம் நெல்லூர் மக்களது கோரிக்கையை நிறைவேற்றுவதற்காகவே 18-ஆம் தேதி திருவொற்றியூர் சென்று அங்கு ஸ்ரீ திருபுரஸுந்தரீ ஸமேத தியாகராஜர் ஆலயத்தில் ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டார்கள். அத்துடன் இரண்டு ஆசார்யர்களும் அந்த ஊரில் அமைந்துள்ள பூர்வாசாரியர்களின் மூன்று அதிஷ்டானங்களையும் தரிசித்துக் கொண்டார்கள். திருவொற்றியூரில் முகாம் செய்திருந்த சமயம் விஜயவாடா ஆந்திரப்ரபா ஆசிரியர் நீலம் ராஜு வேங்கட

சேஷய்யா தமது சஷ்டியப்தபூர்த்தியை 20-12-1965-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் ஸந்நிதியில் நடத்திக்கொண்டார்.

அங்கிருந்து புறப்பட்டுக் காரனோடையில் எஸ். வி. சுப்பையா வின் தோட்டத்தில் அவரது பிரார்த்தனையின் பேரில் 21-12-65 முதல் 25-12-65 முடிய தங்கியிருந்தார்கள். தொடர்ந்து குசவன தோப்பு, எளாவூர், ஆரம்பாக்கம், மல்லப்பேட்டை, தும்பூர், மனுபோல், இவ்வூர்களில் தங்கி 4-1-1966-ஆம் தேதி நெல்லூர் தர்க்காமிட்டாவில் உள்ள ரேபால ஸுஜாதம்மாவின் பங்களா வில் பூஜை நடத்தினார்கள். அன்று வைகுண்ட ஏகாதசிக்கு அடுத்த துவாதசியாதலால் நீடாமங்கலம் சந்தான ராமசாமி உடையார் ட்ரஸ்டு பிக்ஷாவந்தனம் நடைபெற்றது. 5-ஆம் தேதி ஸுஜாதம்மாள் ஸ்வாமி பூஜை நடத்திவைத்தார். 6-ஆம் தேதி பப்புவீதி நித்யானந்த சம்ஸ்கிருத பாடசாலைக்கு விஜயமானார் கள். 7-ஆம் தேதி அல்லாடி (டாக்டர்) அனந்த நாராணயய்யர் வீட்டில் பூஜை. பின்னர் 8, 9-ஆம் தேதிகளிலும் நெல்லூரி லேயே தங்கியிருந்தார்கள். பல ஸ்தாபனங்களுக்கும், கன்னிகா பரமேச்வரி ஆலயத்துக்கும், வேணுகோபால ஸ்வாமி ஆலயத் துக்கும் சென்று ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 4-ஆம் தேதி சம்ஸ்கிருத ஸாஹித்ய சபையின் சார்பாக அதன் தலைவர் கே. எஸ். ராமானுஜா சார்யர் சம்ஸ்கிருதத்தில் ஓர் வர வேற்புப் பத்திரம் வாசித்து அளித்தார். அன்று இரவு இரு பெரியவர்களுக்கும் ஓர் மகத்தான ஊர்வலம் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. இதன் ஏற்பாடுகளை ஆடிடர் அல்லாடி வாஸு தேவனும் அவருடைய நண்பர்களும் இங்கு ராகவ சாஸ்திரியும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

### ராஷ்ட்ரீய தொண்டர்களுக்கு அருளுரை

8-1-1966-ஆம் தேதி நெல்லூர் ராஷ்ட்ரீய ஸ்வயம் சேவக சங்கத்தின் ஆதரவில் கூடிய மிகப் பெரிய கூட்டத்தில் ஸ்ரீ ஆசார் யர்கள் ஹிந்துக்களின் எண்ணிகை மற்ற மதத்தினர்களை ஒப்பிடும் போது குறைந்து வருவதாயும் அதற்கு காரணம் மதமாற்றமே என்றும், பிற மத ஸ்தாபனங்கள், கல்வி, உணவு, வைத்யம் முத லான வசதிகளைக் காட்டி ஹிந்துக்களை மதமாற்றம் செய்து வருவதாகவும், இந்த நிலை நீடிக்குமானால் இந்து மதத்துக்கும் தேச ஒற்றுமைக்கும் அபாயம் நேரிடலாம் என்றும் இதைத் தடுக்க கிராமங்களிலும் நகரங்களிலும் தர்மரக்ஷண சங்கங்கள் நிறுவ வேண்டும் என்றும் பேசினார்கள்.

**வித்வான்களுக்குச் சம்மானம்**

இரு ஆசார்யர்களும் நெல்லூருக்குத் தெற்கே உள்ள வேங்கடாசல சத்திரத்துக்கு 10-1-1966இல் விஜயம் செய்தார்கள். பஞ்சாயத்துச் சமிதி பிரஸிடென்டு தசரதராம ரெட்டியார் ஸ்ரீ மடம் அங்கே தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருந்தார். அன்று நெல்லூரில் உள்ள வித்வான்கள் (1) சம்ஸ்கிருத காலேஜ் பிரின்ஸிபால் ப. சுப்பராம சாஸ்திரி (2) வியாகர்ணம் வேங்கட கிருஷ்ண சாஸ்திரி (3) வியாகர்ணம் கி. நரஸிம்மாசாரி (4) ஏ. விச்வநாத ச்ரௌதிகள் (5) ஸ்வயம்பாகுல வேங்கடசேஷ சாஸ்திரி (6) மண்டகளத்தூர் கிருஷ்ணமூர்த்தி கனபாடிகள் இவர்களுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் காஷ்மீர் சால்வை அளித்து அநுக்ரஹித்தார்கள்.

**பிரதமர் லால்பகாதுர் சாஸ்திரியின் மரணம்: ஸ்ரீ ஆசார்யரின் அனுதாபச் செய்தி**

1966 ஜனவரி மாதம் 11-ஆம் தேதி காலை ரஷ்ய நாட்டில் டாஷ்கண்ட் என்னும் இடத்தில் பாகிஸ்தானுடன் சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்து இட்ட சில மணிக்குள் எதிர்பாராமல் உயிர் துறந்த பாரத நாட்டின் பிரதமர் லால் பகாதுர் சாஸ்திரியின் மரணத்தைப் பற்றிக் கேட்டவுடன் ஸ்ரீ ஆசார்யர்கள் தமது கூடூர் முகாமிலிருந்து கீழ்க்கண்ட செய்தியை பத்திரிகைகளுக்கு அனுப்பிவைத்தார்கள் :

"ஜனன மரணச் சுழலிலிருந்து அவர் விடுபட்டு ஆனந்த மோக்ஷம் அடைந்து விட்டார். மிகவும் நெருக்கடியான காலத்தில் நாட்டுக்குச் சேவை செய்ததன் மூலம் கடவுளுக்குச் சேவை செய்தவர் அவர். ஞாயிற்றுக்கிழமை தனது பணியின் பயன் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற நெருக்கடி நிலை ஏற்பட்டபின், திங்கட்கிழமை தமது முயற்சியின் வெற்றியில் அருணோதயம் கண்ட ஆனந்தத்தில் அவரது இதயம் நின்றது. **பரிபூர்ண ஆனந்த பரவசராக மரணம் அடைவது, அவரது ஆத்மா எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபட்டு முக்தியடைவதின் அறிகுறி,** என்ற கீதா வாக்யத்தின்படி அவருக்கு அநாயாஸ மரணம் சம்பவித்ததில் இந்தியா பெருமை கொள்ளத்தான் வேண்டும். நாட்டின் முன்னேற்றமும் நல்வாழ்வும் அவரது ஆத்மாவுக்கு அமைதியைத் தருவனவாகும்."

**சென்னைக்குத் திரும்பியது**

கூடூர் சர்வபள்ளி ராமராவ் வீட்டிலிருந்து 11-1-1966-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களும் கிளம்பி 12-ஆம் தேதி நாயுடுப் பேட்டையில் பூஜை முடித்துக் கொண்டு 13-ஆம் தேதி முதல் 20-ஆம் தேதி முடிய 8 நாட்கள் நெல்லூர் ஜில்லா மன்னார் போளூரில் தங்கியிருந்தார்கள். ஜனவரி 21, 22 தேதிகள் எளாவூர் சக்தி பைப் ஆபீஸ் கட்டிடத்தில் முகாம்; சக்தி பைப் கம்பெனியின் மானேஜிங் டைரெக்டர் பொள்ளாச்சி என். மஹாலிங்கம் ஸ்ரீமடம் அவ்விடம் தங்க விசேஷ ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அவ்விட மிருந்து கும்மிடிப்பூண்டி, கவரப்பேட்டை, ஆண்டார்குப்பம் மார்க்கமாக 27-ஆம் தேதி காரனோடை எஸ். வி. சுப்பைய்யாவின் தோட்டத்திற்கு மறுமுறை விஜயம் செய்து, அங்கு மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். அங்கிருந்து 30-1-1966-இல் பெரம் பூருக்கு விஜயம் செய்தார்கள். 31-1-66-ஆம் தேதியும் பெரம்பூரில் முகாம். பெரம்பூரிலிருந்து புறப்பட்டு 1-2-1966-ஆம் தேதி ஆதம் பாக்கத்திலும், 2, 3 தேதிகளில் தாம்பரத்திலும், 4-ஆம் தேதி க்ரோம்பேட்டையிலும் 5-ஆம் தேதி நங்கநல்லூரிலும் தங்கி மக்களுக்குத் தர்சனம் தந்து அவர்களது வேண்டுகோளைப் பூர்த்தி செய்தார்கள்.

**சென்னையில் மடாதிபதிகளின் மகாநாடு**

ஸ்ரீ ஆசார்யர்களது விருப்பப்படி தமிழ் நாட்டிலுள்ள மடாதிபதிகளின் மகாநாடு ஒன்றைச் சென்னையில் கூட்டுவதற்கு ஹிந்து அற நிலையப் பாதுகாப்பு இலாகாவின் மூலமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் கலந்து கொள்வதற்காக அண்மை யில் நெல்லூருக்கு விஜயம் செய்திருந்த ஸ்ரீ பெரியவர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் சென்னைக்குத் திரும்பி வந்தார்கள். ஒரு சிலரைத் தவிர மடாதிபதிகள் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்வதும், பொது நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்வதும் அரிய முயற்சியாகும். இந்த நிலையை மாற்றி ஒருவருக் கொருவர் அடிக்கடி சந்தித்து தங்கள் கருத்துக்களை வெளி யிட்டு அவை மக்களுக்குப் பயன் தரக் கூடிய வகையில் முயற்சிகள் எடுக்க வேண்டுமென்பது ஸ்ரீ ஆசார்யர்களது விருப்பம்.

இக்கருத்தை மனத்தில் கொண்டு இதுவரை தமிழ் நாட்டில் நிகழாத இந்த மகாநாட்டைக் கூட்ட ஸ்ரீ ஆசார்யர்கள் வகை செய் தார்கள். மகாநாடு 1966, பிப்ரவரி 6, 7 இரண்டு நாட்களிலும்

நுங்கம்பாக்கத்தில் உள்ள அற நிலையத் துறையின் அலுவலகக் கட்டிடத்தில் நடைபெற்றது. உயரிய மதத் தலைவர்களை வரவேற்கச் சிறந்த ஏற்பாடுகள் அங்கே செய்யப்பட்டிருந்தன. கட்டிடமும் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. சைவ சித் தாந்தத்தைத் தழுவிய திருவாவடுதுரை, தருமபுரம், திருப்பனந் தாள் ஆகிய மடங்களின் அதிபர்களும், மதுரை ஆதீன கர்த்தரும், குன்றக்குடி அடிகளாரும், மைலம் மடத்தின் அதிபரும், காஞ்சீபுரம் ஞானப்ரகாச மடாதிபதியும் 6-ஆம் தேதி காலை விஜயம் செய்தார்கள். அவர்களை அற நிலைய பாது காப்பு இலாகா கமிஷனர் சாரங்கபாணி முதலியாரும் மற்ற அதிகாரிகளும் தக்க முறையில் வரவேற்றார்கள். நுங்கம்பாக்கம் ஜம்புலிங்க நாயக்கர் தெருவில் தத்தாஜி என்னும் சீடர் கிருஹத் தில் தங்கியிருந்த ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களுடன் மகாநாடு நடைபெறும் இடத்துக்கு விஜயம் செய்தார்கள். காலையில் மூன்று மணி நேரம் ஆலோசனைகள் நடைபெற்றன. பத்திரிகை நிருபர்களோ, மற்றவர்களோ இந்தக் கூட்டத் திற்கு அனுமதிக்கப்படவில்லை. மறுபடியும் பிற்பகலில் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. அதேபோல் மறுநாள் காலையிலும் மதத்தலைவர்கள் எல்லோரும் கூடி, தங்கள் கருத்துக் களைச் செயல்படுத்த "ஹிந்து சமயப் பேரவை"* என்ற ஸ்தாபனம் ஒன்றைத் தொடங்குவது என்று தீர்மானம் செய்யப்பட்டது. இந்த அவையின் முதல் தலைவராக ஸ்ரீ ஆசார் யர்களே இருந்து வரவேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது. பேரவையின் காரியங்கள் அற நிலையத் துறையின் மேற்பார்வை யில் அதன் அதிகாரி ஒருவரின் மூலமாக நடைபெறவேண்டு மென்றும் தீர்மானிக்கப்பட்டது. இரண்டாவது நாள் கூட்டம் முடிவில் சென்னை ஆக்டிங் கவர்னர் சந்திரா ரெட்டியும் முதலமைச்சர் எம். பக்தவத்ஸலமும் பேரவையின் அவசியத்தைப் பற்றி உரை நிகழ்த்தினார்கள்.

**பேரவையில் முடிவெடுத்த சில திட்டங்கள்**

1. பொது மக்களிடம் சமய வாழ்க்கையைத் தோற்றுவிப்பது
2. ஹிந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் யாவரும், முறையாகத் தோத்திரப் பாடல்களைப் பாராயணம் செய்யவும் தியானம் செய்யவும் வலியுறுத்துதல்

---

**குறிப்பு :** இந்த ஸ்தாபனத்தின் பெயர் பின்னர் "தமிழ் நாடு தெய் விகப் பேரவை' என்று மாற்றப் பட்டது.

3. மக்கள் யாவரும் அவரவர்களது சமயச் சின்னங்களை அணிந்து கொள்ள வேணுமாய்க் கேட்டுக்கொள்வது
4. பாராயணத்திற்கான தோத்திரத் திரட்டுகளை வெளியிடுவது
5. ஆரம்பப் பாடசாலை மாணவ, மாணவியருக்கு ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், நல்வழி, நன்னெறி முதலான புத்தகங்களை ஏராளமாக அச்சடித்து இனமாக வழங்குவது
6. உயர்நிலைப் பள்ளிகளுக்குத் திருக்குறள், திருமுறை போன்ற நூல்களை வெளியிட்டுத் தருவது
7. எல்லாக் கிராமங்களிலும் குறைந்த பக்ஷம் ஒரு கோவிலாவது இருக்கும்படி பார்த்துக் கொள்வது
8. தகுதி பெற்றவர்களை கிராமந்தோறும் சமயப் பிரசாரம் செய்ய நியமிப்பது
9. நின்றுபோன கோவில் திருவிழாக்களையும், மற்றும் தேர்த் திருவிழாவையும் புதுப்பித்தல்; தேர்த் திருவிழாவில் தேர் இழுக்க மக்கள் யாவரும் ஒத்துழைக்க பிரசாரம் செய்வது.
10. சிறைச்சாலை, மருத்துவசாலைகளுக்குச் சென்று திருவருட் பிரஸாதம் வழங்கி முறையே கைதிகளுக்கும், நோயாளிகளுக்கும் ஆறுதல் கூறி, சமய சம்பந்தமான நல்லுரை வழங்குதல்
11. தொடக்கப் பள்ளிகள், அனுதைக் குழந்தை விடுதிகளைத் தோற்றுவித்தல்
12. திருமுறை, திவ்யப் பிரபந்தம், ஆகமம் முதலியவற்றை முறையாகப் பயிலுவிக்க ஏற்பாடு செய்வது
13. ஹிந்து சமய வளர்ச்சிக்கு அடிப்படையாக உள்ள சம்ஸ்கிருத அறிவை எல்லோரும் பெற ஏற்பாடு செய்தல்
14. ஹிந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் அனுதைகளாக இறந்து போனால் அவர்களின் பிரேதங்களை அடக்கம் செய்ய ஏற்பாடு செய்வது
15. நகரங்களில் வாழும் மக்களின் நன்மைக்காகப் பெரிய அளவில் மருத்துவமனைகளைத் தோற்றுவித்தல்
16. மற்றும் ஹிந்து சமய வளர்ச்சிக்குரிய பணிகளை அவ்வப் போது ஆலோசித்துத் திட்டமிடுதல்

**மடாதிபதிகளுக்குச் சென்னை மக்களின் மகத்தான வரவேற்பு**

மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூல் விளையாட்டு மைதானம் 7-2-66-ஆம் தேதி இரவு ஓர் கண்கொள்ளாக் காக்ஷியாக அமைந்திருந்தது. கணக்கற்ற மின் விளக்குகளாலும் வர்ணத்

தோரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பெரிய மைதானத்தில் மாலை முதற்கொண்டே மக்கள் கூடி அமைதியாக அமர்ந்திருந்தனர். சுமார் 50,000 மக்களுக்கும் அதிகமாக அங்கே கூடியிருந்தார்கள். மைதானத்தின் தென்புறம் உயரமான ஓர் அலங்கார மேடையும் அமைக்கப் பெற்றிருந்தது. சைவசமய மடாலயங்களான திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், மதுரை, குன்றக்குடி, மைலம் ஆகியவற்றின் அதிபர்கள் முதலில் மேடைக்கு வந்து அவரவர்களுக்கென புதிதாக அமைக்கப் பெற்ற ஆசனப் பலகைகளில் பழைய சம்பிரதாயப்படி அமர்ந்தார்கள். அந்தச் சமயத் தலைவர்கள் ஒரே மேடையில் ஒருங்கே அமைந்திருந்தது கண் கொள்ளாக் காக்ஷியாக இருந்தது. ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் மேடைக்கு வந்து அவர்களின் ஆசனங்களில் அமர்ந்தார்கள். பின்னர் ஒவ்வொரு மடாதிபதிகளும் தனித்தனியே மக்களுக்கு அறிவுரை வழங்கினார்கள். முடிவுரை வழங்கிய ஸ்ரீ ஆசார்யர்கள் அறநிலைய ஆணையரின் அழைப்புக்கு இணங்கி இந்தப் பெரியோர்கள் இரண்டு நாட்கள் மக்களின் நன்மையைக் கருதி, சென்னையில் தங்கி மக்களுக்கு அறிவுரை வழங்கியதில் தாம் மிகுந்த சந்தோஷமடைந்ததாகக் கூறினார்கள். ஹிந்து சமயப் பேரவையின் வாயிலாக ஹிந்து சமூகம் நல்ல பயனை அடையும் என தாம் எதிர்பார்ப்பதாகக் கூறினார்கள். இரவு 10-00 மணிக்கு கூட்டம் தெய்வ வணக்கத்துடன் முடிவடைந்தது.

**பரமகுரு ஸ்வாமிகளின் ஆராதனை**

நுங்கம்பாக்கத்திலிருந்து 10–ஆம் தேதி மயிலாப்பூர் கபாலீச்வரர் கல்யாண மண்டபத்திற்கு இரு ஆசார்யர்களும் விஜயம் செய்தார்கள். 12-2-66-ஆம் தேதி சனிக்கிழமை கலவையில் அதிஷ்டானம் கொண்டுள்ள 66-ஆவது ஆசார்யராகிய ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் வருஷ ஆராதனை நடைபெற்றது. 16 பிராம்மணர்களுக்கு ஒவ்வொருவருக்கும் வெள்ளித் தட்டு, வெள்ளி பஞ்சபாத்திரம்-உத்தரிணி, பித்தளை செம்பு, வஸ்திரங்கள், பவுன் தக்ஷிணை ஆகியவை அளிக்கப்பட்டது. அன்று பிக்ஷாவந்தனத்தை வேங்கடேச அக்ரஹாரம் மஹாஜனங்கள் செய்து வைத்தார்கள். ஸ்ரீ ஆசார்ய சேவையில் (அவர்களிடம்) நெருங்கிக் கைங்கரியம் புரிந்து வரும் **பாலு என்ற ஆர். பாலசுப்ரமண்யன்** என்னும் இளைஞர், பக்தர்களின் உதவியைக் கொண்டு இந்தப் பிக்ஷாவந்தனத்துக்கு ஏற்பாடு செய்தார்.

அத்துடன் அந்த இளைஞர் இந்தப் பரமகுரு ஸ்வாமிகளின் ஆராதனையை நண்பர்களின் ஒத்துழைப்புடனும் பக்தர்களின் ஆதரவுடனும் தொடர்ந்து பக்தி சிரத்தையுடன் ஒவ்வோர் ஆண்டும் நடத்தி வருகிறார். அடுத்த நாள் மௌபரீஸ் ரோடு வாஜபேய கிருஹத்திற்கு ஸ்ரீ ஆசார்யர்கள் விஜயம் செய்து அங்கு பூஜை நடத்தினார்கள்.

**மடத்துக்கு யானை அளித்த அன்பர்**

மயிலாப்பூர் ஜம்புலிங்க முதலியார் ரோடில் உள்ள பாலக்காடு ஆலத்தூர் பாங்கர் **எம். என். ராமஸ்வாமி அய்யரது** ராம மந்திரத்துக்கு 14-ஆம் தேதி இரு ஆசார்யர்களும் விஜயம் செய்தார்கள். ராமஸ்வாமி அய்யரது குமாரர்களாகிய **எம். ஆர். நரஸிம்மனும்,** அவரது சகோதரர் **எம். ஆர். கிருஷ்ணனும்** அன்று ஆசார்யர்களுக்குப் பிக்ஷாவந்தனம், பாதபூஜை முதலான கைங்கரியங்கள் செய்ததுடன் மூன்று வயது நிரம்பிய ஆண் யானைக் குட்டி ஒன்றையும் ஸ்ரீ மடத்துக்கு சமர்ப்பணம் செய்தார்கள். மேலும் பாதபூஜை செய்வதற்காகச் சுத்தமான வெள்ளியில் ஒரு தோலா (ஒரு ரூபாய்) எடையில் ஒருபுறம் பில்வதளமும், மற்றொருபுறம் தாமரைப் புஷ்பமும் பொரித்த 1010 காசுகள் தயாரித்து, பாதுகா பாத பூஜை அர்ச்சனைக்காக ஸ்ரீ மடத்துக்குச் சமர்ப்பணம் செய்தார்கள். அந்த வெள்ளிக் காசுகளைக் கொண்டு இப்பொழுது ஸ்ரீ ஆதிசங்கர ஆசார்ய பாதுகைகளுக்குப் பாத பூஜை ஸ்ரீ மடத்தில் நடைபெற்றுவருகிறது.

**மதுரை பல்கலைகழகத் துணைவேந்தருக்கு அருளாசி**

புதிதாக அமைக்கப்பட்டுள்ள மதுரை பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக நியமனம் செய்யப்பட்டிருந்த பேராசிரியர் **தெ. பா. மீனாக்ஷி சுந்தரனார்** ஸ்ரீ ஆசார்யர்களை சென்னை அபிராமபுரத்தில் சந்தித்து அந்தப் பொறுப்பை ஏற்கும் முன்னர் ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆசிகளைப் பெற்றார். ஸ்ரீ ஆசார்யர்களும் அவருடன் அரைமணி நேரம் உரையாடி அவரது மேற்பார்வையில் உயர்தரக் கல்வி, மாணவர்களின் வாழ்க்கைக்கு உதவும் வகையில் திகழும் என்று தாம் நம்புவதாகக் கூறினார்கள். சில ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீ ஸ்வாமிகளின் விருப்பத்திற்கிணங்க மீனாக்ஷி சுந்தரனார் ஜாவா, கம்போடியா முதலான கீழை நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து அந்நாடுகளில் பாரத நாட்டின் கலாசாரம், மதம் இவை எவ்விதம் பரவியுள்ளன என்பதைப் பற்றி விரிவான ஆராய்ச்சி செய்து வந்தார். இந்த ஆராய்ச்சிகளைப்

பற்றியெல்லாம் ஸ்வாமிகள் அவரிடம் கேட்டறிந்து அவரது பரந்த கல்வியறிவையும் மேதையையும் மிகவும் பாராட்டியுள்ளார்கள். ஸ்ரீ ஆசார்யர்களிடம் விடைபெற்றுக் கொண்டு ஸ்ரீ புதுப் பெரியவர்களின் ஆசியையும் பெற்றுர் அவர்.

**சிவவிஷ்ணு ஆலயத்தில் வேதாரண்ய மஹாமண்டபம் திறப்பு விழா**

13-3-1965-இல் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் திருக்கரங்களால் அஸ்திவாரக்கல் நாட்டிய இந்த மண்டபம் பூர்த்தியடைந்ததும் ஸ்ரீ ஆசார்யர்களே இதைத் திறந்து வைக்க வேண்டுமென்று ஆலய நிர்வாகிகள் விரும்பினுர்கள். அது சமயம் இரு ஆசார்யர்களும் சென்னையில் தங்கியிருந்ததால் அவர்களும் நிர்வாகிகளின் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டு 10-3-1966-இல் வேதாரண்ய மண்டபத்தைத் திறந்து வைத்தார்கள். 3-3-1966-இல் குரோம்பேட்டையில் நடைபெற்ற ஸ்ரீ விநாயகர் ஆலய கும்பாபிஷேகத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் நேரில் விஜயம் செய்து நடத்தி வைத்தார்கள். 8-3-56-ஆம் தேதி மந்தவெளி கல்யாண நகரத்தில் ஸ்ரீ ஆசார்யர்களுக்குப் பக்த கோடிகளால் கனகாபிஷேகம் நடைபெற்றது. அன்று கலைமகள் ஆசிரியர் **கி. வா. ஜகந்நாதன்** சிறந்த பாக்களால் அமைத்த வாழ்த்துரையை வாசித்தளித்தார். கச்சேரி ரோட்டில் உள்ள டி. எஸ். ராமஸ்வாமி ஐயருக்கு அவரது சமூக சேவையையும் குரு பக்தியையும் பாராட்டி 7-3-66-இல் ஓர் நவரத்ன மாலையையும் பீதாம்பரத்தையும் ஸ்ரீ ஆசார்யர்கள் வழங்கி அவரை ஆசீர்வதித்தார்கள்.

**பிடி அரிசித் திட்டம்**

ஏழைகளின் பசிக் கொடுமையை ஓரளவாவது நீக்குவதற்கு இந்தப் புதியதொரு திட்டத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் முதன் முறையாக 10-3-1966-ஆம் தேதி சிவ விஷ்ணு ஆலயத்தில் வெளியிட்டார்கள். இந்தத் திட்டப்படி ஒவ்வோர் இல்லத்திலும் இல்லத்தரசிகள் அன்றுடம் உலை வைக்கும் முன்னர் ஒரு பானையில் ஒரு பிடி அரிசியையும் அத்துடன் இரண்டு பைசா நாணயத்தையும், போட்டு வைக்க வேண்டும். மாதம் ஒரு முறையோ அல்லது இரண்டு முறைகளோ இதை வசூலிக்க வரும் தொண்டர்களிடம், சேர்ந்த அரிசியையும் நாணயத்தையும் சேர்ப்பிக்க வேண்டும். இந்தத் தொண்டர்கள் இந்த அரிசியைச் சமீபத்தில் உள்ள ஓர் ஆலய நிர்வாகிகளிடம் தந்து அதை அன்னமாக்கிக் கடவுளுக்கு நிவேதனம் செய்து அதிக பக்ஷம் 10 பைஸாவுக்கு ஒரு

பட்டை சாதம் வீதம் ஏழைகளுக்கு விற்பனை செய்ய வேண்டு மென்று ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள். இவ்விதம் தயாரிக்கும் சாதம், புளி, தயிர் இவை கலந்ததாகவோ அல்லது மிளகு ஜீரகம் நெய் கலந்ததாகவோ இருக்கவேண்டும். இனமாக அளிப்பதில் பல சிக்கல்கள் நேருமாகையால் 10 பைசாவுக்கு ஒரு ஏழையின் ஒரு வேளைப் பசி தீரும்படி செய்வது நல்லது என்பது ஸ்ரீ ஆசார்யர் களது திருவுள்ளம். இதில் வசூலாகும் பணமும் அரிசியுடன் சேரும் தொகையும், விறகு, எண்ணெய், புளி முதலான சாமான் கள் வாங்குவதற்கு உபயோகமாக இருக்கும். முதன் முதலாகச் சென்னையில் பல பேட்டைகளில் இந்தத் திட்டம் ஆரம்பிக்கப் பட்டு இன்றும் நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. பின்னர் வெளியூர்களிலும் இந்தத் திட்டம் நடைபெற்று வருகிறது. இதை நடத்துகின்ற தொண்டர்களுக்கு ஸ்ரீ புதுப் பெரியவர்கள் ஊக்க மளித்து அவர்களுக்கு ஆசி கூறி வருகிறார்கள்.

**விவாகத்தில் வரதக்ஷிணை**

தாய் தந்தையரும் மற்றப் பெரியோர்களும் தீர்மானிக்கும் பெண்களையே இளைஞர் மணப்பது நல்லது என்று ஸ்ரீ ஆசார் யர்கள் அடிக்கடி உரைத்து வந்தார்கள். வரதக்ஷிணை கேட்கும் பழக்கத்தினால் பல பெண்களுக்கு விவாகம் நடைபெறுவது கஷ்ட மாக இருப்பதால் இதையுணர்ந்து பெற்றோரும் கல்யாணம் செய்து கொள்ளும் இளைஞர்களும் வரதக்ஷிணை வாங்குவதில்லையென சங்கல்பம் செய்து கொள்ள வேண்டுமென்றும் கூறினார்கள். மேலும் "ஸ்ரீ ஆசார்யர்கள் அனுக்கிரஹத்துடன் விவாகம் நிச்சயிக் கப்பட்டிருக்கிறது" என்று பத்திரிகைகளில் போட்டுக்கொண்டு இக்கொடிய பழக்கத்தை மேற்கொள்கிறவர்களை ஸ்ரீ ஆசார்யர்கள் வன்மையாகக் கண்டனம் செய்தார்கள். அப்படிப்பட்டவர்கள் தமது பெயரைப் பத்திரிகையில் சேர்த்துக் கொள்ள வேண்டாம் என்றார்கள். ஸ்ரீ மடத்தின் பெயரைச் சேர்க்க விரும்புகிறவர்கள் "வரதக்ஷிணை எதுவும் வாங்கப்படாத விவாகம்" என்று பத்திரி கையின் முடிவில் ஓர் குறிப்பு சேர்க்க வேண்டும் என்றும் தெரிவித்தார்கள். இதை அனுசரித்து ஸ்ரீ புதுப் பெரியவர்களும் அவ்வப்போது நிகழ்த்திவரும் உபதேசங்களில் வரதக்ஷிணை பழக் கத்தை அடியோடு நீக்கவேண்டுமென்று வற்புறுத்து வரு கிறார்கள்.

**சம்ஸ்கிருத ஓரியண்டல் பள்ளிகள் திறக்க ஏற்பாடு**

1966 மார்ச் மாதம் 15-ஆம் தேதி முதல் 19-ஆம் தேதி முடிய இரு பெரியவர்களும் மேல் மாம்பலம் அசுவமேத மஹா

மண்டபத்தில் விஜயம் செய்து ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி பூஜையை அந்த அழகான மண்டபத்தில் நடத்தினார்கள். அப்பகுதி மக்கள் ஆயிரக்கணக்கில் பூஜையைத் தர்சித்தும் ஸ்ரீ ஆசார்யர்களது உபதேசங்களைக் கேட்டும் பயனடைந்தார்கள்.

நமது தமிழ்நாடு அரசு சம்ஸ்கிருத மொழிப் பயிற்சியை பள்ளிக் கூடங்களில் ரத்து செய்துவிட்டதின் காரணமாய் அம் மொழியைக் கற்க விரும்பும் மாணவர்களுக்கு வசதி அளிக்க கல்வித் துறையில் அனுபவம் வாய்ந்த சில நிபுணர்களை ஸ்ரீ ஆசார்யர்கள் கலந்து ஆலோசித்தார்கள். அதன் விளைவாக நாட்டின் சில இடங்களில் ஓரியண்டல் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டன. அப்பள்ளிகளில் சம்ஸ்கிருதம் கட்டாய பாடமாக வைக்கப்பட்டுள்ளது. இந்தப் பள்ளிகளில் இதர பாடங்கள் அனைத்தும் எஸ். எஸ். எல். சி. வரையில் போதிப்பவையேயாகும். இந்தப் பள்ளித் தேர்வில் வெற்றி பெற்றவர்கள் கல்லூரிகளில் சேர அனுமதிக்கப் படுவார்கள். இந்தப் பள்ளிகளுக்கு அரசு ஒப்புதல் அளித்தது பாராட்டத்தக்கதாகும். இம்மாதிரியான பள்ளிகள் திருச்சி ஜில்லாவில் முத்தரசநல்லூர், லால்குடி, தஞ்சை, புதுக்கோட்டை, காஞ்சீபுரம், சேலம் ஜில்லாவில் மேட்டூர், விழுப்புரம், கும்பகோணம் ஆகிய ஊர்களில் நடைபெற்றுவருகின்றன. இப் பள்ளிகளின் முன்னேற்றத்தில் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் மிகுந்த அக்கறை எடுத்து வருகிறார்கள்.

### புதுச்சேரி விஜயம்

1966-ஆம் வருஷத்திய வஸந்த நவராத்ரி உத்ஸவம் மாம்பலம் ஸர்வ மங்களா கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது. 22-3-66 முதல் 2-4-66 முடிய அவ்விடம் தங்கி, பிறகு தாம்பரம், செங்கல்பட்டு, மதுராந்தகம், சூணம்பட்டு இவ்விடங்களில் முகாம் செய்துகொண்டு மைலம் ஆதீனம் பொம்மையபாளையத்தில் 14–4–66-ஆம் தேதி பராபவ வருஷப்பிறப்பைக் கொண்டாடினார்கள். அன்று சென்னையிலிருந்து 70 சங்கீதவித்வான்கள் பக்கவாத்தியங்களுடன் வந்து சுப்ரபாத சமயம் (அதிகாலை) ஸ்ரீ ஆசார்யர்கள் சந்நிதியில் கச்சேரி நடத்தினார்கள். அங்கிருந்து இரு பெரியவர்களும் மறுநாள் காலை புதுச்சேரிக்கு விஜயம் செய்தார்கள். நகர எல்லையில் புதுச்சேரி யூனியன் அரசின் நிதி மந்திரி காங்கேயன், அபிவிருத்தி மந்திரி ஷண்முகம், கவர்னரின் பிரதிநிதி டி. ராமு, டெபுடி மேயர்

சேதுராம செட்டி, மற்றும் போலீஸ் உயர் அதிகாரி பரமகுரு இவர்களுடன் பொதுமக்கள் கூடி இரு பெரியவர்களுக்கும் மிகவும் சிறந்த முறையில் வரவேற்பு அளித்தார்கள். பரசுராம செட்டியார் அக்ரஹாரத்தில் தங்கினார்கள். 17-4-66-ஆம் தேதி புதுச்சேரி கவர்னர் சீலமும், தமிழ் நாடு கவர்னர் சந்திரா ரெட்டியும் இரு ஆசார்யர்களையும் தரிசித்துக் கொண்டனர். 18-4-66-ஆம் தேதி முதல் மந்திரி வேங்கடசுப்பா ரெட்டியார் குடும்பத்துடன் வந்து இரு பெரியவர்களையும் தர்சனம் செய்து கொண்டார். பிரஞ்சு அரசாங்கத்தினரால் நடைபெற்று வரும் இந்திய கலை ஆராய்ச்சி நிலையத்துக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் விஜயம் செய்தார்கள். புதுவையில் இரு ஆசார்யர்களுக்கும் மிகப் பெரிய ஊர்வலம் ஒன்றைப் பக்த கோடிகள் நடத்தினார்கள்.

### பசுவதைத் தடுப்பு இயக்கம்

"பசுமாடுகளைத் தாயைப் போலப் (கோமாதாவாக) போற்றி வருவது நமதுநாடு. அவைகளை ஆகாரத்திற்காகக் கொல்வது நாட்டுக்கே களங்கம் ஏற்படுத்துவதாக இருக்கிறது" என்று ஸ்ரீ ஆசார்யர்கள் கூறி அதனைத் தடுக்க உபவாஸம் இருந்து வரும் சாதுக்களுக்கு மக்கள் ஆதரவு அளிக்க வேண்டுமென்றும், அவர்களது உயிர்களைக் காப்பதின் பொருட்டு உடனடியாகப் பசுவதையைத் தடைசெய்யும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும் ஓர் அறிக்கை விடுத்தார்கள்.

### விழுப்புரம் சங்கர மடத்தில் சங்கர ஜயந்தி மஹோத்ஸவம்

ஸ்ரீ ஆசார்யர்கள் 1895 மே மாதம் 20-ஆம் தேதி விழுப்புரத்தில் ஜனனமானார்கள். அந்த ஊரில் கிழக்கு ஹனுமார் கோவில் தெருவில் உள்ள அவர்கள் அவதரித்த வீட்டை விலைக்கு வாங்கி அந்த இடத்தில் ஒரு சங்கர மடம் எழுப்பி அதில் வேதங்களைக் கற்க பாடசாலை ஒன்றை நிறுவ வேண்டுமென்று பல ஆண்டுகளுக்கு முன்னராகவே ஸ்ரீ மடத்தின் சிஷ்யர்களின் மனத்தில் ஓர் அவா இருந்து வந்தது. அந்த அவாவைப் பூர்த்தி செய்யும் வகையில் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் சிஷ்யர்களுக்கு ஊக்கமளித்து வந்தார்கள். ஸ்ரீ மடத்தில் நெருங்கிய தொடர்பு கொண்ட கீழ்மேகண்ட பக்தர்கள் அடங்கிய கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. (1) ஓய்வு பெற்ற ரெயில்வே சீப் எஞ்சினீயர் எம். கணபதி (2) ஜி. ஆர்

நடராஜ ஐயர் (3) எம். நீலகண்டன் (4) கே. நீலகண்டன் (5) எஞ்சினீயர் கே. எஸ். கிருஷ்ணன் (6) வக்கீல் எஸ். சிதம்பர ஐயர், பிரபல எஞ்சினீரிங் கண்ட்ராக்டர் எம். நீலகண்டன் மேற் பார்வையில் சுமார் ஒன்றரை லக்ஷ ரூபாய் செலவில் இக் கட்டிடம் கட்டி முடிக்கப் பெற்றது. அங்கே தற்காலம் ரிக், யஜுஸ், ஸாம என்னும் மூன்று வேதங்களிலும் மாணவர்களுக்குப் பயிற்சியளிக் கப்படுகிறது. ஸ்ரீ ஆசார்யர்களின் பூர்வாச்ரம குடும்ப நண்பரும், முன்னாள் முனிஸிபல் சேர்மனும், சட்ட சபை அங்கத்தினருமான 90 வயதைத் தாண்டிய வழக்கறிஞர் எஸ். சிதம்பர ஐயர் இந்தப் பாடசாலையை மேற்பார்வை பார்த்து வருகிறார். சுமார் 50 சிறுவர் இங்கு குருகுலவாஸம் செய்து வருகிறார்கள். அத்யாபகர்கள் குடும்பத்தோடு தங்க வீட்டு வசதியும் செய்து கொடுக்கப் பட்டுள்ளது.

இந்த மடத்தில் இரு ஆசார்யர்களும் தங்கி, சங்கர ஜயந்தி விழாவை நடத்த வேண்டுமென்று பொது மக்கள் கேட்டுக் கொண் டார்கள். இரு ஆசார்யர்களும் புதுச் சேரியிலிருந்து 20-4-66-ஆம் தேதி புறப்பட்டு வளவனூரில் ஒரு நாள் தங்கி அன்று இரவு விழுப் புரத்துக்கு விஜயமானார்கள். வக்கீல் சிதம்பர ஐயர் தலைமையில் ஆசார்யர்களுக்குச் சிறந்த வரவேற்பு அளிக்கப்பட்டது. ஆசார் யர்கள் ஜனித்த அதே வீட்டில் அவர்களைத் தரிசிக்கும் பாக்கியம் அங்கே கூடியிருந்த பக்தர்களுக்குக் கிடைத்தது. மறுநாள் ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களின் ஜன்மோத்ஸவம் ஆரம்பிக்கப்பட்டு 25-ஆம் தேதி வைசாக சுக்ல பஞ்சமியன்று முடிவு பெற்றது. ஒவ்வொரு நாளும் வேத பாராயணம், ஹோமங்கள், ஊர்வலம், அபிஷேகம் ஆகியவை நடைபெற்றன. பண்டிதர்களின் வித்வத் ஸபையும் நடைபெற்றது. வித்வத் சபைக்கு புதுவை லெப்டினன்ட் கவர்னர் சீலம் தலைமை வகித்து பண்டிதர்களுக்குக் காஷ்மீர் சால்வைகளை வழங்கினார். அண்ணாமலை சர்வகலாசாலையின் முன்னாள் சம்ஸ்கிருத பேராசிரியரான வேப்பத்தூர் சுப்பிரமண்ய சாஸ்திரிகள் தொகுத்த **சரப்த தரங்கிணி** என்னும் சம்ஸ்கிருத நூல் ஜயந்தியன்று வெளியிடப்பட்டது. சாஸ்திரிகளுக்கு அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் ''சாஸ்திர ரத்னாகர'' என்னும் சிறப்புப் பட்டத்தை யும், ஜரிகை சால்வையையும் அளித்து அனுக்ரஹித்தார்கள். 26-ஆம் தேதி இரு ஆசார்யர்களும் கரியமாணிக்கம் என்னும் ஊரில் கல்யாண மண்டபம் ஒன்றைத் திறந்து வைத்து விட்டு, 27-ஆம் தேதி புதுச்சேரியில் நடைபெற்ற மணக்குள விநாயகர் ஆலய கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டார்கள்.

**கடலூர் விஜயம்**

புதுச்சேரியிலிருந்து இரு ஆசார்யர்களும் புறப்பட்டு மறு நாள் கடலூருக்கு விஜயம் செய்தார்கள். கடலூரில் முனிஸிபல் ஹைஸ்கூலில் முகாம் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. ஸ்ரீ ஆசார்யர்களின் பூர்வாச்ரம தந்தையார் இந்த ஹைஸ்கூலில் சில ஆண்டுகள் உபாத்யாயராக இருந்திருக்கிறார். 30-4-1966-இல் இரு ஆசார்யர்களும் திருப்பாதிரிப்புலியூர் சென்று பாடலீச்வரர் ஆலயத்தில் ஸ்வாமி தர்சனம் செய்து வந்தார்கள். அன்று மாலை கடலூர் நகரசபை அங்கத்தினர்கள் இரண்டு ஆசார்யர்களுக்கும் வரவேற்பு அளித்தார்கள். சேர்மன் தங்கராஜு முதலியார் வரவேற்பிதழை வாசித்தளித்தார். மழையையும் புயலையும் பொருட்படுத்தாது ஏராளமான மக்கள் இந்த வரவேற்பில் கலந்து கொண்டார்கள். அப்பர் போன்ற மகான்களை உலகுக்கு அளித்த பெருமை இந்த நாட்டைச் சார்ந்தது என ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள்.

**திருவண்ணாமலை விஜயம்**

இரு ஆசார்யர்களும் கடலூரிலிருந்து, நெல்லிகுப்பம் வடவாம்பலம், பிரம்மதேசம், திண்டிவனம், ஆலக்ராமம், செஞ்சி, பெண்ணாத்தூர், இந்த இடங்களில் விஜயம் செய்து கொண்டு, ஆங்காங்கு பக்த கோடிகளை அனுக்ரஹித்து மே, 21-ஆம் தேதி மாலை திருவண்ணாமலைக்கு விஜயமானார்கள். நகர மக்களும் தேவஸ்தான, சர்க்கார் அதிகாரிகளும் சிறந்தவகையில் வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். ஊர்வலமாக வந்து இரு ஆசார்யர்களும் ஈசான்ய மடத்தில் தங்கினார்கள். 23-ஆம் தேதி அதிகாலையில் இரு ஆசார்யர்களும் கிரிப்ரதக்ஷிணம் செய்துவந்தார்கள். மறுநாள் 24-ஆம் தேதி ஸ்ரீ அபீதகுசாம்பாள் ஸமேத ஸ்ரீ அருணாசலேச்வரர் ஆலயத்திற்குச் சென்று ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். அம்பாளுக்குச் சிவப்புக் கற்கள் பதித்த பெரிய பதக்கத்துடன் சேர்ந்த மாலை ஒன்றை ஆசார்யர்கள் சமர்ப்பணம் செய்தார்கள். திருவண்ணாமலை நகர சபையினரால் இரு பெரியவர்களுக்கும் வரவேற்புப் பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது. நகரசபைக்கு அங்கத்தினராக நிற்க விரும்புகிறவர்கள் சேவை மனப்பான்மையுடன் மக்களின் குறைகளை அவ்வப்போது கவனித்து, தொண்டு புரியவேண்டுமென ஆசார்யர்கள் கூறினார்கள்.

**வேலூர் விஜயம்**

இரு பெரியவர்களும் திருவண்ணுமலையிலிருந்து மே 24-ஆம் தேதி இரவுபுறப்பட்டு கலசபாக்கம், போளூர், மார்க்கமாக 29-ஆம் தேதி காலே வேலூரை அடைந்தார்கள். 1-6-1966-ஆம் தேதி ஸ்ரீ புதுப் பெரியவர்கள் மட்டும் விரிஞ்சிபுரம் சென்று அவ்வூரில் உள்ள பழமையான, பிரசித்தி பெற்ற சிவாலயத்தில் ஸ்ரீ மார்க்க பந்து ஸ்வாமி, மரகதவல்லி அம்பாளைத் தர்சனம் செய்து வந்தார்கள்.* வேலூரில் தங்கியிருந்த நாட்களில் இரு ஆசார்யர்களும் வெவ்வேறு ஸ்தாபனங்களுக்கு விஜயம் செய்து ஆங்காங்கு அருள்மொழி வழங்கினர்கள். 2-6-1966-ஆம் தேதி வேலூர் நகர சபை சார்பில் இரு ஆசார்யர்களுக்கும் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த நகரசபைத் தலேவர் பார்த்தசாரதி அதை வாசித்தளித்தார். அதில் அந்த நகரசபை மக்களுக்குச் செய்து வரும் பல சேவைகளைக் குறிப்பிட்டிருந்ததுடன் கோட்டைக்குள் உள்ள ஜலகண்டேச்வரர் ஆலயத்தில் காலியாக உள்ள கர்ப்பகிருஹத்தில் லிங்க பிரதிஷ்டை செய்து மக்கள் வழிபாட்டுக்கு வகை செய்ய ஸ்ரீ ஸ்வாமிகள் உதவி புரிய வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப் பட்டிருந்தது. இதற்கு ஸ்ரீ ஆசார்யர்கள் பதில் அளிக்கையில் நகர சபை மக்களின் வாழ்க்கைக்கு அன்ருட தேவையான, சுகாதாரம், வெளிச்சம், தண்ணீர், வைத்யம், கல்வி முதலானவைகளில் கவனம் செலுத்தி அவை நன்கு நடைபெறச் செய்யவேண்டு மென்றும், ஆலய சம்பந்தமான விஷயங்களே அந்த அந்தச் சமூகத்தவரிடம் விட்டு விடுவது நல்லது எனவும் கூறினர்கள். மக்கள் தெய்வ நம்பிக்கையுடன் வாழவேண்டுமென்றும் கடவுள் இல்லே யெனக் கூறுபவர்களிடம் கூட பகைமை பாராட்ட வேண்டாம் என்றும் ஸ்வாமிகள் கூறினர்கள்.

**சென்னே விஜயம்: மடாதிபதிகளின் 2-ஆவது மகாநாடு**

1966, பிப்ரவரி மாதம் 6, 7 தேதிகளில் சென்னேயில் நடைபெற்ற தமிழ் நாட்டின் மடாதிபதிகளின் மகாநாட்டையடுத்து

---

**குறிப்பு:** ஸ்ரீ மார்க்கபந்து ஸ்வாமியை தர்சனம் செய்து கொண்டு அர்ச்சனே செய்து ப்ரஸாதம் பெற்றுக் கொண்டால் நாம் மேற்கொள்ளும் யாத்திரை ஒருவித இடைஞ்சலும் இல்லாமல் நடைபெறும் என்ற நம்பிக்கை நம் மக்களிடையே உள்ளது. ஆகையால் நம் ஆசார்யர்களும் யாத்திரை கிளம்புமுன் ஸ்ரீ மார்க்கபந்து ஸ்வாமிக்கு அர்ச்சனே செய்து ப்ரஸாதம் பெற்றுக் கொள்வது வழக்கமாக உள்ளது,

அந்த மகாநாட்டில் முடிவெடுத்த விஷயங்களைச் செயல்படுத்தும் நோக்கத்துடன் அறநிலைய இலாகா கமிஷனர் சென்னையில் மற்றொரு மகாநாட்டைக் கூட்டி வைத்தார். இரண்டு ஆசார்யர்களையும் அந்த மகாநாட்டுக்கு விஜயம் செய்ய வேண்டுமாய் அவர் கேட்டுக் கொண்டார்.

இரு பெரியவர்களும் 1966, ஜூன் மாதம் 3-ஆம் தேதி இரவு வேலூரிலிருந்து புறப்பட்டு வாலாஜா பேட்டை, எசையனூர் காஞ்சீபுரம், வாலாஜாபாத், செங்கற்பட்டு ஆகிய ஊர்களில் தங்கி 11-ஆம் தேதி சென்னை சம்ஸ்கிருத கலாசாலையை அடைந்தார்கள். 12-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீச்வரர் கல்யாண மண்டபத்திற்கு விஜயம் செய்து மறு நாள் நடைபெறவிருக்கும் மகாநாட்டின் விஷயங்களைப் பற்றிக் கமிஷனருடன் பூர்வாங்க ஆலோசனைகளைச் செய்தார்கள். 13-ஆம் தேதி காலையில் கல்யாண மண்டபத்திற்கு ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் விஜயம் செய்து, மடாதிபதிகளுடனும் அவர்களுடைய பிரதிநிதிகளுடனும் சுமார் மூன்று மணி நேரம் ஆலோசனைகள் நடத்தினார்கள். மறுபடி மாலையிலும் மகாநாடு கூடி இரவில் முடிவுற்றது. பத்திரிகை பிரதிநிதிகள் கூட்டத்திற்கு அனுமதிக்கப்படவில்லை. அன்று பூஜை அலமேலு மங்காபுரம் அட்வகேட் ராமமூர்த்தி ஐயர் வீட்டில் நடைபெற்றது.

### நஸரத்பேட்டையில் சாஸ்திர நூல் வெளியீடு

சென்னைக்கு மேற்கே பூந்தமல்லிக்கு அடுத்துள்ள நஸரத் பேட்டையில் சம்ஸ்கிருத அபிவிருத்தி சங்கத்தினரால் சுமார் ஒரு லக்ஷ ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள கட்டிடத்தை 15-6-1966-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் திறந்து வைத்தார்கள். இந்த சங்கத்துக்கு அட்வோகேட் டி. வி. விச்வநாத ஐயர் காரியதரிசியாக இருந்து நல்ல முறையில் பணியாற்றி வருகிறார். இந்தச் சங்கத்தினரால் காலஞ்சென்ற மகாவித்வான் ராமசுப்பா சாஸ்திரிகளால் தொகுக்கப்பட்ட வியாகர்ண சாஸ்திரத்துக்கு விளக்கம் கூறும் " க்ருதந்த ரூப மாலா " என்னும் ஆராய்ச்சி நூலின் முதல் பாகத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் அன்று வெளியிட்டார்கள். இது வரைக்கும் இந்த நூலில் 5 பாகங்கள் பிரசுரமாயுள்ளன. 16-ஆம் தேதி திருவள்ளூரில் முகாம் செய்து, பிறகு அரக்கோணத்திற்கு விஜயமானார்கள்.

**புக்கை சங்கர மடம்**

சென்ற ஆங்கிரஸ வருடம் (1932) சாதுர்மாஸத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் திருத்தணிகை சமீபம் புக்கை என்னும் க்ஷேத்திரத்தில் நடத்தி அங்கே சங்கர மடம் ஒன்றையும் நிறுவினார்கள். அதை மறுமுறை ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகத்தை இரு பெரியவர்களும் நேரில் விஜயம் செய்து ஜூன் 20-ஆம் தேதி நடத்தினார்கள். குசஸ்தலி என்னும் ஜீவநதியின் கரையில் அமைந்துள்ள இத்தலத்தில், காசி விச்வநாதர் ஆலயமும் ப்ரயாகை பிந்து மாதவர் ஆலயமும் அமைந்துள்ளன. நதியின் கரையில் ஐந்து அருவிகள் வாயிலாகக் கங்கை ஜலம் எப்பொழுதும் வந்து கொண்டிருக்கிறது. கும்பாபிஷேகத்திற்கு வரு முன்னர் இரு ஆசார்யர்களும் 19-ஆம் தேதி திருத்தணிகை ஆலயத்தில் ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமியைத் தரிசித்துக் கொண்டார்கள்.

**திருமலையில் ஸஹஸ்ர கலசாபிஷேகம்**

புக்கையிலிருந்து புறப்பட்ட இரு ஆசார்யர்களும் புத்தூர் ரேணிகுண்டா மார்க்கமாக 1966 ஜூன் 23-ஆம் தேதி திருமலையை அடைந்தார்கள். ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்கு ஸஹஸ்ரகலச அபிஷேகம் செய்து கண்குளிரச் சேவிக்க ஸ்ரீ ஆசார்யர்கள் விரும்பினார்கள் போலும். ஸ்ரீ மடத்தின் செலவிலேயே இதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இரு பெரியவர்களும் அபிஷேகம் முடியும் வரை ஸந்நிதியில் தங்கி ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டார்கள். மறுநாள் வெள்ளிக்கிழமை திருமஞ்சன தரிசனத்துக்கும் இருவரும் சென்று வந்தார்கள். 25-ஆம் தேதி ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சுப்ரபாத தர்சனத்துக்கும் ஸ்ரீ பெரியவர்கள் உச்சி கால தர்சனத்துக்கும் போய்வந்தார்கள். அங்கிருந்து திருச்சானூரில் அலர்மேலு மங்கைத் தாயார் தர்சனம் செய்து கொண்டு 28-6-1966-ஆம் தேதி காளஹஸ்தியை அடைந்தார்கள்.

**காளஹஸ்தியில் வியாஸபூஜை-சாதுர்மாஸம்**

பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஒன்றாகிய இந்த வாயுலிங்க க்ஷேத்திரத்தில் மூன்று மாதங்களுக்கு மேலாகத் தங்கி தங்கள் சாதுர்மாஸ விரதத்தை நடத்த இரு ஆசார்யர்களும் தீர்மானித்தார்கள். தேவக்கோட்டை செட்டியார் பசு மடத்தில் ஸ்ரீ மடம் தங்கியது. முனிஸிபல் சேர்மன் மாதவராவ் தலைமையில் பெரிய தொரு வரவேற்புக் கமிட்டி இதற்கான ஏற்பாடுகளைச் செய்து தந்தது. 28-6-66-ஆம் தேதி காலை முனிஸிபல் பார்க் சமீபத்தில்

ஆயிரக்கணக்கான மக்கள் குருநாதர்களின் தரிசனத்திற்காகக் காத்திருந்தனர். மக்கள் தரப்பில் முனிஸிபல் சேர்மன் மாதவராவும் தேவஸ்தான சார்பில் எக்ஸிகூடிவ் ஆபீஸர் நாகிரெட்டியும், ஸ்தானீகம்-அர்ச்சகர் அட்வோகேட் பரசுராம குருக்களும் பூர்ண கும்ப தேவஸ்தான மரியாதைகளுடன் ஆசார்யர்களை வரவேற்று முகாமுக்கு அழைத்துச் சென்றார்கள்.

2-7-1966-ஆம் தேதி சனிக்கிழமை காலை இரு பெரியவர்களும் வபனத்திற்குப் பிறகு ஸ்வர்ணமுகி நதியில் ஸ்னானம் செய்து பசு மடம் கட்டிடத்துக்கு ஊர்வலமாக விஜயம் செய்தார்கள். வியாஸ பூஜை 11 மணிக்கு ஆரம்பமாயிற்று. ஆந்திரப்ரதேசத்தின் பல பாகங்களிலிருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் சென்னை நகரத்திலிருந்தும் ஏராளமான பக்தர்கள் தரிசனத்திற்கு வந்திருந்தனர். நாட்டிலுள்ள பிரபல தேவஸ்தானங்களிலிருந்து ப்ரஸாதமும் ராஜகிருஹங்களிலிருந்து காணிக்கைகளும் ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டன. பண்டிதர்களின் பிரம்ம சூத்ர பாஷ்ய வாக்யார்த்தம் நடைபெற்றது. மறுநாள் புனர்பூஜை நடத்தி ஸ்ரீ ஆசார்யர்கள் பக்தர்களுக்கு வியாஸாக்ஷதை ப்ரஸாதம் அளித்தார்கள். 11-7-1966-ஆம் தேதி இரு ஆசார்யர்களும் ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பாள் சமேத ஸ்ரீ காளஹஸ்தீச்வரர் ஆலயத்திற்குச் சென்று, எல்லா ஸந்நிதிகளையும் தர்சனம் செய்து வந்தார்கள்.

**குன்றின் மீது பஞ்சமுக லிங்கம்**

ஸ்ரீ ஆசார்யர்கள் 1932, 1939 ஆண்டுகளில் காளஹஸ்திக்கு விஜயம் செய்த சமயம் ஆலயத்திற்கு அடுத்தாற்போல் உள்ள குன்றின்மீது பஞ்சமுக லிங்கம் ஒன்றைத் தரிசித்திருக்கிறார்கள். அது எங்கு இருக்கிறதென்று இப்போது ஊர் ஜனங்களையும் தேவஸ்தான அதிகாரிகளையும் கேட்டார்கள். அப்படி ஒரு லிங்கம் இருப்பதாக விவரம் ஒருவருக்கும் தெரியவில்லை. ஆனால் சில வயோதிகர்கள் மட்டும் 'பிரம்மகுடி', என்று குன்றின் மேல் ஓர் சிவ லிங்கம் இருப்பதாகக் கேள்விப்பட்டிருப்பதாயும் ஆனால் அந்த இடத்திற்குச் செல்ல முடியாதபடி பெரிய மரங்களும் முட்புதர்களும் அடர்ந்துள்ளன என்றும் தெரிவித்தார்கள். இதைக் கேட்ட ஆசார்யர்கள் அந்த இடத்துக்குப் போக வழி அமைக்கச் சொன்னார்கள். அந்தப் புதர்களை அப்புறப்படுத்தவே சுமார் 10 நாட்கள் பிடித்தன. நாள் தோறும் ஸ்ரீ ஆசார்யர்களே அவ்வப்போது அந்த இடத்திற்குச் சென்று ஆட்கள் வேலை செய்வதைக் கவனித்து வந்தார்கள். சுமார் 45 மீட்டர் நீளம், 23 மீட்டர்



1960-இல் அடையபலத்தில் அப்பய்ய தீக்ஷிதேந்த்ராளால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ காளகண்டேச்வரர் ஆலய கும்பாபிஷேகம் ஸ்ரீ ஆசார்யர்கள்



மதுரையல் 1963-இல் ஸ்ரீமீனுக்ஷி சுந்தரேச்வரர் ஆலய கும்பாபி ஷேகத்தில் ஸ்ரீபரமசார்யர்களும், ஸ்ரீபுதுப்பெரியவர்களும் விமானத்தில் நின்றுகொண்டு தர்சனம் கொடுக்கிருர்கள்



ராமேச்வரம் ஸ்ரீசங்கரமண்டபத்திற்குமுன் அமைந்துள்ள
துவாதசலிங்க மண்டபம்

சிவகாஞ்சி ஸ்ரீமடத்தின் பூஜாமண்டபத்தில சிஷ்யர்களுடன் கூடிய ஸ்ரீ ஆதிசங்கர பிரதிஷ்டையும், பாதுகாபிரதிஷ்டையும் ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ புதுப்பெரியவர்களுடன் நடத்திவைக்கிறார்கள்.



கன்னியாகுமரியில் சமுத்திரகரையோரம் அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீ ஆதிசங்கரர் ஞாபகார்த்த மண்டபம்.



நகரி சமீபம் புக்கையில் ஸ்ரீ காசிவிச்வநாதர் விசாலாக்ஷி கோயில்; இங்கு ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீசங்கரமண்டபம் நிர்மாணம்செய் துள்ளார்கள்; இதன் சமீபம் குசஸ்தலி ஆறு ஓடுகிறது; பஞ்சமுக தீர்த்தம் விசேஷம்.



இளையாத்தங்குடியில் 1962-இல் முதல் முதலாக ஆரம்பிக்கப்பட்ட
ஆகம வைகானஸ சில்ப சதஸ்ஸை ஆரம்பித்துவைக்க
சிஷ்யர்களுடன் ஆசார்யர்கள் பவனிவரும் காக்ஷி.



1962-இல் இளையாத்தங்குடியில் நடைபெற்ற முதல் ஆகம
பாரத சில்ப சதஸ்ஸில் ஆகம சாஸ்திரத்தைப்பற்றி
புதுச்சேரி ஸ்ரீ என். ஆர். பட் பேசிக் கொண்டிருப்பதை
ஸ்ரீ ஆசாரியர்கள் கவனத்துடன் கேட்கிறார்கள்



திருவிடைமருதூரில் ஸ்ரீ மஹாலிங்கஸ்வாமி கோவில் வடக்கு
கோபுரவாசல் சமீபம் ஸ்ரீ சங்கரமடத்தில் பிரதிஷ்டை செய்திருக்கும்
ஸ்ரீ பகவத் பாதர்களும் ஸ்ரீ மஹாலிங்க மூர்த்தியும்



திருவிடமருதூரில் ஸ்ரீ சங்கரமடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டபாதுகைக்கு 108 ஜரிகை சால்வைகள் அர்ச்சனை செய்து சமர்பிக்கப்பட்டது. பிறகு இந்த சால்வைகளை வேதவிற்பன்னர்களுக்கும், மஹாபண்டிதர்களுக்கும் ஸ்ரீ பரமாசார்யர்கள் அளித்து அனுக்ரஹித்தார்கள்:
........ சால்வைகளை அணிந்த மஹாவித்வான்களுடன் ஸ்ரீ ஆசார்யர்கள்.

அகலம் உள்ள முற்றம் போல் ஓர் திறந்த வெளி. அதன் இரு புறங்களிலும் அகலமில்லாத கல் மண்டபம். அதன் மேற்புறக் குன்றை ஒட்டி ஓர் பாழ் மண்டபமும் அங்கே காணப்பட்டது. கர்ப்ப கிருஹத்தையடைய அந்த மண்டபத்தின் மீது ஏறிச் செல்ல வேண்டும். ஸ்ரீ ஆசார்யர்களும் அதன் மீது சிரமத்துடன் ஏறி, பிரம்மகுடி கர்ப்பகிருஹத்தில் அமைந்துள்ள சிவலிங்கத்தைக் கண்டு தரிசித்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் ஊகித்தபடி அதுவே பஞ்சமுகேச்வரர் லிங்கமாக அமைந்திருந்தது. ஸ்ரீ ருத்ர மஹாமந்திரத்தில் பரமசிவனுக்கு ஐந்து முகங்கள் என்று கூறப்பட்டுள்ளது. (1) தத் புருஷம் (2) அகோரம் (3) ஸத்யோ ஜாதம் (4) வாமதேவம் (5) ஈசானம். கிழக்குப் பார்த்து உள்ளது தத் புருஷம், தெற்கே அகோரம், மேற்கே ஸத்யோ ஜாதம், வடக்குமுகமாய் உள்ளது வாமதேவம். இவை முறையே ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்களுக்குரியது. ஐந்தாவது முகம் ஈசானம்; ஆகாயத்தை நோக்கி ஜோதிர் மயமாய் உருவமில்லாமல் காணப்படுகிறது. சிவபிரானின் முதல் நான்கு முகங்களும் லிங்கத்தின் நான்கு புறமும் நான்கு திசைகளை நோக்கி மிகவும் அழகாக அமைந்துள்ளது. இது போன்ற சிவலிங்கம் மற்றொன்று திருவானைக்காவல் வடக்கு வீதி ஸ்ரீ காமகோடி சங்கர மடத்தின் பின்புறம்—ராஜ ராஜேச்வரர் ஆலயத்தில் உள்ளது. ஸ்ரீ ஆசார்யர்கள் 1943-ஆவது வருஷம் இதே போல் தான் அந்த பஞ்சமுக லிங்கத்தையும் கண்டு பிடித்தார்கள். அன்று முதல் அந்த லிங்கத்திற்கு பூஜைகள் நடைபெற ஏற்பாடு செய்துள்ளார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் காளஹஸ்தி குன்றின் மீது இந்தப் பஞ்ச முகேச்வர லிங்கத்தைத் தரிசித்த நாள் முதல் அந்தச் சிவலிங்கத்திற்கு நித்ய பூஜைகள் நடைபெற்று வருகின்றன. நேபாளத்தில் உள்ள பிரஸித்தி பெற்ற பசுபதி நாதரும் இதே போன்ற பஞ்சமுக லிங்கங்களில் ஒன்றாகும். வாதாபியில் ஐஹோளே என்னுமிடத்தில் இதைப் போன்ற பஞ்சமுக லிங்கம் ஒன்று இருப்பதாகக் கூறப்படுகிறது.

**நடராஜர் ரங்கஸ்தலம்**

இந்தக் குன்றின் சரிவின் வழியில் ஓர் பாழ் அடைந்த மண்டபம் காணப்பட்டது. அந்த மண்டபத்தில் பல ஆண்டுகளாக நிரம்பியுள்ள புதர்களை யெல்லாம் நீக்கிப் பார்த்த போது மண்டபத்துக்குப் பின்புறம் அடைப்புச்சுவர்போல் அமைந்துள்ள

பாறைப் பகுதியில் பெரிய உருவில் நர்த்தன விநாயகர், நடராஜர், பார்வதி பரமேச்வரர், பிக்ஷாடனர் போன்ற தெய்வ உருவங்கள் வெகு அழகாகச் செதுக்கப்பட்டிருப்பதை ஆசார்யர்கள் கண்டார்கள். இந்த அபூர்வ சிற்பங்கள் எந்த வருஷத்தில் யாரால் அமைக்கப்பட்டது என்ற விவரம் தெரியவில்லை. அதை விட ஆச்சரியமான மற்றும் அழகான சில சிற்பங்களை சுமார் 60 மீட்டர் உயரமுள்ள குன்றின் சரிவுகளில் ஸ்ரீ ஆசார்யர்கள் கண்டார்கள். குன்றின் சாய்வான சரிவில் நிற்கவோ, உட்காரவோ முடியாத இடத்தில் சில அழகான சிற்பங்கள் பொறிக்கப்பட்டுள்ளதை தன்னுடன் கூட வந்தவர்களுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் காண்பித்தார்கள். ஏணியோ, சாரமோ பொருந்துவதற்குக் கூட வசதியிலாத குன்றின் சாய்வான இடம் அது.

இவற்றையெல்லாம் காணும்போது பழைய காலத்தில் இது ஓர் நாட்டிய அரங்கமாக இருந்திருக்கவேண்டும் என்று ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள். மேலும் மண்டபத்தின் மையத்தில் முன்புறம் விஸ்தரிக்கப்பட்டுள்ள மேடையும் (அரங்கம்), மண்டபத்தின் மீது ஏறுவதற்கு இருபக்கமும் படிகள் அமைக்கப்பட்டிருப்பதும் இந்த அபிப்ராயத்தை ஊர்ஜிதப் படுத்துகிறதென்று ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள். "நடராஜ ரங்கஸ்தலம்" என்று இதற்குப் பெயர் சூட்டலாம் என்றார்கள். சாதுர்மாஸ சமயத்தில் நடத்த வேண்டிய 5-வது ஆகம சில்ப ஸதஸை அதே இடத்தில் நடத்துவது மிகவும் பொருத்தமாக இருக்குமென்றும் அபிப்ராயப் பட்டார்கள். காளஹஸ்தி நகர மக்கள் ஸ்ரீ ஆசார்யர்களின் விருப்பத்திற்கு இணங்க அந்த இடத்தை வெகு சீக்கிரம் சீர்திருத்தம் செய்து அங்கே சுமார் 5000 மக்கள், (வெயிலும், மழையும் தாக்காதவாறு) உட்காருவதற்கு வசதியாக ஓர் அலங்காரக் கொட்டகை அமைத்துக் கொடுத்தார்கள். அனுபவம் வாய்ந்த சைத்ரிகரின் உதவியுடன் மண்டபத்தில் உள்ள சிற்பங்களுக்கும், மலையில் உள்ள சிற்பங்களுக்கும் பொருத்தமான பல வண்ணங்கள் தீட்டப் பெற்றன. வண்ணங்கள் தீட்டிய பிறகு எல்லா சிற்பங்களும் உயிர்பெற்றவை போல விளங்கின. பாதை முழுவதும் வண்ண வண்ண மின் விளக்குகளும், அலங்கார வளைவுகளும் அமைக்கப்பட்டன. அந்தச் சிறிய ஊரில்

குறிப்பு: நடராஜ ரங்கஸ்தலத்தைக் காணவரும் யாத்ரீகர்களிடம் நுழைவுக்கட்டணம் வசூல் செய்யப்படுகிறது. அதன் மூலம் தேவஸ்தானத்துக்கு கணிசமான ஆதாயம் கிடைத்து வருகிறது.

நமது பாரத நாட்டிலிருந்தும் மற்றும் வெளி நாடுகளிலிருந்தும் வரக்கூடிய கலைஞர்களின் கோஷ்டிகளுக்கும், தனி நபர்களுக்கும் தங்குவதற்கு வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன. ஸ்ரீ புதுப் பெரியவர்கள் அவ்வப்போது அதற்கான ஆலோசனைகளை வழங்கினார்கள். ஆந்திர ப்ரதேச அறநிலைய மந்தரி பி. வி. நரஸிம்ம ராவ் தலைமையில் செயற்குழு ஒன்றும் அமைக்கப்பட்டது. கல்வி மந்திரி பலராம ரெட்டியும் இதில் ஓர் அங்கத்தினர். பலவகையிலும் ஆந்திர அரசு இந்த மகா நாட்டுக்கு உதவி புரிந்தது.

**5-ஆவது வியாஸ-பாரத-ஆகம-சிற்ப கலைவிழா**

5-ஆவது வியாச பாரத ஆகம சிற்ப கலைவிழாவை 2-9-1966-ஆம் தேதி காலை வேத கோஷத்துடன் ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் நடராஜ ரங்க ஸ்தலத்தில் ஆரம்பித்து வைத்தார்கள். ஆந்திரப்ரதேச அறநிலைய மந்திரி பி. வி. நரஸிம்ம ராவ் முதலில் ஸம்ஸ்கிருதத்திலும் பின்னர் தெலுங்கிலும் யாவரையும் வரவேற்றார். வழக்கம் போல் சிவாசாரியார்கள், பாஞ்ச ராத்ர, வைகானஸ அர்ச்சகர்கள், சிற்பிகள், பஞ்சாங்கம் வெளியிடும் கணித மேதைகள் ஆகியோர் ஒவ்வொரு நாளும் விழாவில் பங்கு கொண்டார்கள். யக்ஷகானம், புர்ரகதா, பொம்மலாட்டம், குச்சிபூடி, கிராமிய நடனங்கள் முதலான அம்சங்களுடன், சௌராஷ்ட்ர நாட்டின் ராஸலீலை, கல்கத்தா கோஷ்டியாரின் "கதகதி" நடனம் ஆகியவை விசேஷ அம்சங்களாக அமைந்திருந்தன. இந்த நடனத்தில் முக்கியமாக ஜய தேவரின் அஷ்டபதி பாடல்களை பாடினார்கள். மற்றும் மோஹன்லால் ஐமோ என்பவர் பாடிய காஷ்மீர் நாட்டுக் கிராமியப் பாடல்களை மக்கள் மிகவும் ரஸித்தனர்.

டெல்லியிலிருந்து வந்திருந்த டாக்டர் லோகேஷ் சந்தர், ரஷ்யாவின் வட கோடியிலுள்ள பனி மண்டலமான சைபீரியா முதல் தென் கிழக்கே இந்தோனேஷியா வரை பரவியுள்ள இந்தியக் கலைகளையும் பண்பாட்டையும் பற்றி விரிவாகப் புகைபடச் சான்றுகளுடன் விளக்கிக் காட்டினார். நம் நாட்டில் இல்லாத சம்ஸ்கிருத நூல்கள் சில அந்நாடுகளில் இருப்பதாகவும் அவர் கூறினார்.

கம்போடியா நாட்டு பௌத்த பிக்ஷு பூஜ்யர் மஹாதேவ தர்மவர என்பவர் இம் மகாநாட்டில் கலந்து கொள்ள கம்போடியாவிலிருந்து காளஹஸ்திக்கு வந்திருந்தார். அவர் ஆற்றிய உரையின் சுருக்கம் :

"புராண இதிகாசங்களில் கூறப்பட்டுள்ள காம்போஜ நாடே இன்றைய கபோடியா என்பதை அறிய நீங்கள் வியப் படையக் கூடும். அங்கு ஆதிக்கம் செலுத்திய மேல்நாட்டவர்கள் காம்போஜம் என்னும் பெயரை கம்போடியா என மாற்றிவிட் டார்கள். மஹாபாரத யுத்தத்தில் காம்போஜம் கலந்து கொண் டுள்ளது. அசோகன் கல்வெட்டுகளில் காம்போஜம் குறிப்பிடப் பட்டுள்ளது. அந்த நாட்டில் உள்ள பிரஸித்தி பெற்ற அங்கோ வாட் ஆலய நிர்மானம் கி. பி. முதல் நூற்றுண்டில் ஆரம்பிக்கப் பட்டு 7-ஆம் நூற்றுண்டில் முடிவு பெற்றது. இந்தப் பிரம் மாண்டமான ஆலயத்தைக் கட்டுவதற்கு 2-ஆவது ஜயவர்மன் தொடங்கினுன். 7-ஆவது ஜயவர்மன் இதைக் கட்டி முடித்தான். அதில் சிவனுக்காகத் தனிக் கோயிலும் அமைந்துள்ளது. இன்றும் கம்போடிய மக்கள் அனுஷ்டிக்கும் பழக்க வழக் கங்கள் முற்றிலும் இந்தியத் தன்மை வாய்ந்தவை. உண்மையில் அவை இந்தியாவிலிருந்து கம்போடிய மக்கள் பெற்ற செல்வங் களாகும். புராதன பிராம்மணர்களின் சந்ததியார் இன்றும் கம்போடிய மன்னர்களின் ஆஸ்தானத்தில் சேவை புரிந்து வரு கின்றனர். மன்னர் பவனி வரும் பொழுது சங்கநாதம் செய்வது முதலான பணிகள் அவர்களைச் சார்ந்தவையாகும். இந்தியாவி லிருந்து காம்போஜம் பெற்றுள்ள மற்ெருரு செல்வம் ஜோதிஷ சாஸ்திரம். இந்திய-கலாசார ஆன்மிக பொக்கிஷங்களை முதன் முதல் பெற்ற நாடு கம்போடியாதான். இங்கிருந்துதான் அவை தாய்லாந்து, வியட்நாம், லாவோஸ், பர்மா முதலான நாடுகளுக் குப் பரவியது." மேலும் அவர் சொன்னது :

"என் உடல் நலம் குன்றியிருந்த போதிலும் இந்த மஹா நாட்டின் முக்கியத்தைக் கருதி இவ்வளவு தூரம் வந்து இதில் கலந்துகொள்ள தீர்மானித்தேன்."

"மனிதன் விஞ்ஞானத்திலும் தொழில் நுட்பத்திலும் எவ்வளவுதான் முன்னேறி, வான வீதியில் புகுந்து சந்திரனையும் சூரியனையும் சுற்றி வந்து செவ்வாய் கிரஹத்தில் இறங்கினுலும் இன்று மனித ஜாதியை வாட்டும் பிணியும் துன்பமும் தீர்ந்த பாடில்லை. இதற்கெல்லாம் காரணம் உள்நாட்டு சண்டையும், பூசல்களும், போட்டிகளும், உலக மகா யுத்தங்களுமேயாகும். ஆகையால் மனித ஜாதி உய்ய வேண்டுமானுல் வான வெளியில் பறந்து பயனில்லை. இதைப்பற்றித் தன் மனசுக்குள்ளேயே ஒவ் வொரு மனிதனும் ஆராய வேண்டும். இந்த முடிவுக்குத்தான் நான் வந்துள்ளேன்."

"இந்தக் கஷ்டங்களுக்கெல்லாம் நிவாரணம் என்ன? நாம் அணுகுண்டுகளையும் ஸ்புட்னிக்குகளையும் தயாரித்துக்கொண்டே போக முடியாது. நம் ஆன்மிக கலாசார செல்வங்களுக்கு நாம் புத்துயிர் அளிக்க வேண்டும். ஆன்மிகத் துறையில் இந்தியா மற்ற நாடுகளுக்கெல்லாம் வழிகாட்டியுள்ளது. விஞ்ஞானிகள் இனி 'மனிதனின் மனம்' என்னும் ஹிருதயாகாசத்தில் சஞ்சரிக்க கவனத்தைச் செலுத்த வேண்டும், மனிதனுடைய மனத்தை மாற்ற அவர்கள் முயல வேண்டும். மனித ஜாதியை இன்று பிடித்துள்ள துன்பங்களுக்கு அதுதான் பரிகாரமேயன்றி ஸ்புட்னிக்குகளோ யுத்தகங்களோ அல்ல. இந்தப் பண்பை வளர்க்க இத்தகைய மகாநாடும், கலைவிழாக்களும் மிகவும் பயன் படுகின்றன என்ற அளவில் இதன் அவசியத்தை முக்கியமாக நான் கருதுகிறேன்."

கிறிஸ்தவ மதம் தோன்றியதற்கு முன்பே கலாசார ரீதி யிலும் ஆன்மிகத்துறையிலும் கம்போடியா இந்தியாவின் நேச நாடாக இருந்துள்ளது. அந்த நாட்டுக்கு முதலில் ஹிந்து மதமும், பின்னர் பௌத்த மதமும் வந்துள்ளன. பௌத்த மதத்தில் முதலில் அந்நாட்டுக்கு மஹாயானப் பிரிவே வந்தது, இப்பொழுது பழக்கத்தில் உள்ள ஹீனயானப் பிரிவு பின்னர் வந்ததாகும்.

இந்த மகாநாட்டின் விசேஷ அம்சமாகத் தர்க்கம், வேதாந்தம், வியாகர்ணம், மீமாம்ஸை இவைகளில் ஓர் குறிப் பிட்ட அளவு தகுதி பெற்றுள்ள சாஸ்திர வித்பன்னர்களுக்குச் சம்மானம் ரூ. 500-ம், பிரயாணச் செலவும் இரண்டு காஷ்மீர் சால்வைகளும் அளிக்கப்பட்டன. வட இந்தியா-தென்னிந்தியா விலிருந்து வந்த சுமார் 30 வித்வான்கள் இதில் கலந்து கொண் டார்கள். அவர்களுக்கு ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சம்மானங்களை அளித்தார்கள். மஹாநாட்டின் நிகழ்ச்சிகளிலும் சாஸ்திர சர்ச்சைகளிலும் அநேகமாக ஸ்ரீ புதுப் பெரியவர்களே அதிகம் கலந்து கொண்டு அவைகளைத் திறம்பட நடத்தி வைத்தார்கள். புதுச்சேரி முதல் அமைச்சர் வேங்கட சுப்பா ரெட்டியார், புதுச் சேரி கவர்னர் ஸ்ரீ சீலம் தமிழ் நாடு தொழில் மந்திரி ஆர். வேங்கட ராமன், ஆந்திர முதல்வர் பிரம்மானந்த ரெட்டி, சென்னை சர்வ கலாசாலையைச் சார்ந்த டாக்டர் ராகவன், ஆந்திர அறநிலைய கமிஷனர் ஜி. நாராயண செட்டி மற்றும் பல முக்யஸ்தர்கள் இந்த விழாவில் கலந்து கொண்டார்கள்.

**சம்ஸ்கிருதம் பரவ ஸ்ரீ ஆசார்யர்களின் யோசனை**

ஆந்திர அரசாங்கம், பண்டைய மொழிகளின் வளர்ச்சிக்காக ஆலோசனை கூற ஓர் கமிஷனை நியமனம் செய்தது. அதன் தலைவராக முன்னாள் கேரள கவர்னர் பி. ராமகிருஷ்ணராவ் நியமனம் செய்யப்பட்டிருந்தார். கமிஷன் தலைவரும் மற்ற அங்கத்தினர்களும் ஸ்ரீ ஆசார்யர்களை 30-8-1966-இல் காளஹஸ்தியில் தரிசித்து ஸம்ஸ்கிருத மொழி அபிவிருத்திக்கான ஆலோசனைகளைக் கேட்டார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் கூறியதாவது :

"ஒவ்வொரு பஞ்சாயத்து ஸமிதியிலும் ஆஸ்தான வித்வானாக ஒரு ஸம்ஸ்கிருத பண்டிதரை நியமனம் செய்ய வேண்டும். அவர் ஒவ்வொரு கிராமத்திலும் சிறிது காலம் தங்கி ஆங்காங்குள்ள பள்ளிச் சிறுவர்களுக்கும், மற்றோருக்கும் அந்த மொழியைப் போதிக்க வேண்டும். ஐந்தாறு ஆண்டுகளில் இவர்களிடம் பாடம் கேட்டவர்கள் தனியாக ஸம்ஸ்கிருத வகுப்பை நடத்த வேண்டும். இதற்கு அரசாங்கம் ஊக்கமளிக்க வேண்டும். மாணவர்கள் விரும்பினால், இதில் தேர்வு பரீக்ஷைகளையும் நடத்தலாம். ஸம்ஸ்கிருதம் படிக்க ஆர்வமுள்ள மாணவர்களை உத்தேசித்து ஒவ்வொரு கல்லூரியிலும் பள்ளியிலும் கட்டாயமாக ஸம்ஸ்கிருத ஆசிரியர்களை நியமிக்கவேண்டும். தனியார் நடத்தி வரும் ஸம்ஸ்கிருத பரீக்ஷைகள் அங்கீகரிக்கப்பட வேண்டும்" என்றார்கள்.

**சாதுர் மாஸ பூர்த்தி : விச்வ ரூப யாத்திரை**

இந்த வருஷம் ஆஷாட அதிக மாஸம் வந்ததால் சாதுர்மாஸ விரதம் மூன்று மாதங்கள் அனுஷ்டிக்கப்பட்டது. 29-9-66-ஆம் தேதி விச்வரூப யாத்திரை. இரு பெரியவர்களும் உத்தர வாஹினியான ஸ்வர்ணமுகி நதியில் வபனஸ்னானம் செய்து கொண்டார்கள். ஏராளமான பக்தர்கள் சென்னையிலிருந்து அன்று தர்சனத்திற்கு வந்தார்கள். உள்ளூர் மஹாஜனங்கள் அன்று இரவு மிகப் பெரிய அளவில் இரு ஆசார்யர்களுக்கும் பட்டண ப்ரவேசம் நடத்திவைத்தார்கள்.

**திருமலையில் ஆர்ஷ சம்ஸ்கிருத ஸதஸ் ஆண்டு விழா**

திருமலை-திருப்பதி தேவஸ்தானம் 1965-ஆம் வருஷம் ஆரம்பித்த ஸ்ரீ வேங்கடேச்வரா ஆர்ஷ சம்ஸ்கிருத சதஸின் ஆண்டு விழாவை ஆரம்பித்து வைக்க ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் திருப்பதிக்கு விஜயம் செய்ய வேண்டுமென

திருப்பதி தேவஸ்தான போர்டார் கேட்டுக் கொண்டார்கள். அதன்படி இரு ஆசார்யர்களும் காளஹஸ்தியிலிருந்து புறப்பட்டு 1-10-66-ஆம் தேதி திருமலைக்கு விஜயம் செய்தார்கள். 2-10-66-ஆம் தேதி ஸ்ரீ வேங்கடேச்வரரைத் தரிசித்துக் கொண்டார்கள்.

2-10-1966-ஆம் தேதி சுமார் 350 வேத வித்பன்னர்கள் ஸ்ரீ வேங்கடேச்வரர் ஸந்நிதியில் காலையில் வேத பாராயணத்தை ஆரம்பித்தனர். அந்தப் பாராயண கோஷ்டியினர் முன் செல்ல இரு ஆசார்யர்களும் ஊர்வலமாக வஸந்த மண்டபத்தையடைந்தார்கள். இது கண்கொள்ளாக் காக்ஷியாக அமைந்திருந்தது. திருப்பதி பெரிய ஜீயர் ஸ்ரீமத் ரங்கராமானுஜ ஜீயர் ஸ்வாமிகளும் அவ்விடம் வந்தார்கள். தேவஸ்தான போர்ட் தலைவர் **காதி ஜகன்னாத ராஜு** சம்ஸ்கிருதத்திலும், தெலுங்கிலும் வரவேற்புரை நிகழ்த்தினார். தேவஸ்தான நிர்வாக அதிகாரி **கே. உமாபதி** ஆண்டறிக்கை வாசித்தார். வேத பாராயணக்காரர்களுக்கும், உபன்யாஸகர்களுக்கும், ஹரிகதா காலக்ஷேபம் புரிகின்றவர்களுக்கும் ஸம்மானம் அளிக்க வருஷம் ஒன்றுக்கு ரூ. 1,50,000- தேவஸ்தானத்திலிருந்து ஒதுக்கப் பட்டிருப்பதாயும் அவர் கூறினார்.

ஸ்ரீ ஆசார்யர்கள் இந்த ஸதஸ்ஸைத் துவக்கி வைத்துப் பேசுகையில் நமது மதத்திற்கு வேதங்களும் அவைகளின் அங்கங்களுமே ஆதாரம் என்றும் அவைகளை ரக்ஷிப்பதற்கு இந்த ஸதஸ் செய்துள்ள பணி மிகவும் போற்றத்தக்கதாகும் என்றும் கூறினார்கள். "திருப்பதி க்ஷேத்திரம் கலியுக வைகுண்டமாகத் திகழ்கிறது. நாள் தோறும் மக்கள் இந்த வைகுண்டத்திற்கு வந்து கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் பகவானது கருணையை அனுபவிக்கும் நித்ய சூரிகளாக விளங்குகிறார்கள் என்றும் ஸ்வாமிகள் கூறினார்கள்.

ஸ்ரீ பெரிய ஜீயர் ஸ்வாமி தமது தலைமையுரையில் ஸ்ரீ ஆசார்யர்களைப் பற்றிக் கூறியதாவது:

"தர்மம் சீர்குலையும் காலத்திலெல்லாம் பகவான் மானிட உருவில், பூலோகத்தில் அவதரிப்பார். ஆனால் அவ்விதம் பெருமாளே நேரில் வந்து அவதரிக்க வேண்டியது அவசியமில்லை. மனிதஉடல் போர்த்த எந்த ஆத்மாவையும் பகவான் பூலோகத்துக்கு அனுப்பலாம். அத்தகைய கோலம் பூண்டு வந்திருப்பவர்கள்தான் காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரியர். அவர் நம்மிடையே வந்திருப்பது விசேஷமான சம்பவம்."

பின்னர் போர்ட் தலைவர் **காதி ஜகன்னு தராஜு** வேத பாராயணம் செய்த சுமார் 300 பேர்களுக்கும் ரொக்க சம்பாவனை செய்தார். போர்ட் மெம்பர் **ஜே. வி, சோமயாஜுலு** நன்றியுரை கூறினர்.

மறுநாள் 3-10-1966 முதல் 8-10-66 முடிய இந்த ஸதஸின் முக்கிய அம்சமாகத் தொடர்ந்து சுமார் 600 வேத வித்பன்னர்கள் ஒவ்வொரு நாளும் இரு வேளைகளிலும் வஸந்த மண்டபத்தில் வேத பாராயணம் செய்து வந்தார்கள். இந்த வேத பாராயணத்தை அனேகமாக ஒவ்வொரு நாளும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் விஜயம் செய்து ஆரம்பித்து வைத்தார்கள். முடிவு நாளன்று ஸ்ரீ ஆசார்யர்கள் விருப்பப்படி பாராயணத்தில் கலந்து கொண்ட யாவருக்கும் தக்கவாறு சம்பாவனை தேவஸ்தானத்தின் மூலம் செய்யப்பட்டது.

**திருச்சானூரில் நவராத்திரி**

திருமலை ஸதஸ் முடிந்த பின்னர் 9-10-66-இல் இரு ஆசார்யர்களும் திருச்சானூர் விஜயம் செய்தார்கள். அந்த வருஷத்தின் சாரதா நவராத்திரி பூஜை 'பத்ம ஸரஸின் மேல்கரையில் உள்ள வைச்ய சத்திரத்தில் 14-10-1966 முதல் நடந்தது. வழக்கம் போல் விசேஷ பூஜைகளும் ஹோமங்களும் நடைபெற்றன. 22-ஆம் தேதி சரஸ்வதீ பூஜையன்று விசேஷமாகக் கன்யா பூஜை ஸுவாஸினி பூஜைகள் நடைபெற்றன. உள்ளூர் ஸ்ரீ வைஷ்ணவ வித்வான்கள் மூலமாக புருஷஸூக்த ஹோமம் நடைபெற்றது இங்கே ராஷ்ட்ரீய ஸ்வயம் சேவா சங்கத் தலைவர் மாவ்லங்கர் இரு பெரியவர்களையும் தரிசித்துக் கொண்டார்.

**கீழ் திருப்பதியில் வரவேற்பும்—ஊர்வலமும்**

இரு ஆசார்யர்களும் 23-10-1966-ஆம் தேதி விஜயதசமியன்று மாலை திருச்சானூரிலிருந்து புறப்பட்டுத் திருப்பதிக்கு விஜயமானர்கள். திருப்பதி புறப்படு முன்னர் இரு ஆசார்யர்களும் **ஸ்ரீபத்மாவதி** தாயாரைத் தர்சனம் செய்து கொண்டார்கள். வழக்கம் போல் ஆசார்யர்களுக்கு தேவஸ்தான மரியாதைகள் செய்யப்பட்டன. அன்று இரவு திருப்பதியில் இரு பெரியவர்களுக்கும் மிகப் பெரிய அளவில் ஊர்வலம் நடந்தது. பீமா ஹோட்டல் அதிபர் **வேங்கடாசலமய்யர்** தலைமையில் பொதுமக்கள் இதற்கு ஏற்பாடு செய்தார்கள். ஸ்ரீ பெரியவர்கள் புஷ்ப பல்லக்கிலும், ஸ்ரீ புதுப் பெரியவர்கள் யானை மீது அம்பாரியிலும் அமர்ந்து வந்தார்கள்.

மாபெரும் ஊர்வலம் முடிவுபெற இரவு இரண்டு மணியாகி விட்டது. பக்தர்களின் பிரார்த்தனைப்படி திருப்பதியில் மூன்று நாட்கள் (24, 25, 26-ஆம் தேதிகள்) தங்கி, 27-10-66 அன்று மல்லவரம் என்னும் ஊருக்கு விஜயம் செய்தார்கள். அன்று சென்னை அடையாறு க்ரீன்வேஸ் ரோடிலுள்ள ஆடிடர் **சாவலி சுப்ரமண்ய சாஸ்திரி (சி. எஸ். சாஸ்திரி)** பெரியவர்களுக்குப் பிக்ஷா வந்தனம் செய்வித்தார்.

**வேங்கட கிரிக்கு விஜயம்**

வேங்கடகிரி சம்ஸ்தான அரச குடும்பத்தினர் பரம்பரையாக ஸ்ரீ மடத்தின் சிஷ்யர்கள். சென்ற 1939-ஆவது வருஷத்துக்குப் பின் இப்போது ஸ்ரீ ஆசார்யர்கள் அந்த ஊருக்கு ஸ்ரீ புதுப் பெரியவர் களுடன் விஜயம் செய்தார்கள். குமார ராஜா மூலமாக இரண்டு மாதங்களாகவே பல முறை மகாராஜா இதற்கான அழைப்பு விடுத்திருந்தார். மகாராஜாவின் வயோதிகத்தையும் உடல் நிலையையும் கருதி, திருப்பதிக்குப் பிறகு அவ்வூருக்கு விஜயம் செய்வதென தீர்மானம் செய்யப்பட்டது. இரு ஆசார்யர்களும் 28-11-66-ஆம் தேதி அங்கு விஜயம் செய்த போது மகத்தான வரவேற்பு அளிக்கப்பட்டது. பழைய அரண்மனையில் பூஜைக் கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ராஜ குடும்பத்தினர் யாவரும் ஒவ்வொரு நாளும் மூன்று கால பூஜைக்கும் தவறாமல் விஜயம் செய்தார்கள். அன்றாட பூஜைக்கும் சந்தர்ப்பணைக்கும் வேண்டிய எல்லா சாமான்களையும், ஸந்நிதியில் வரிசைப்படுத்தி வைத்த காக்ஷி காணக்கிடைக்காததாகும். ஸ்ரீ மடம் வேங்கட கிரிக்கு விஜயமான நாள் முதல் அநேகமாக அங்கு விடாது மழை பெய்தது. ஸ்ரீ மடம் தங்கியிருந்த இடம் மிகப் பழைமையான கட்டிடம். ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞைப்படி வேறு ஜாகைக்கு முதலில் ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் பூஜையும் பின்னர் சாமான் களும் மாற்றப்பட்டன. மாற்றப்பட்ட கட்டிடத்துக்குச் சாமான் கள் எல்லாம் போய்ச் சேர்ந்த சில மணிநேரத்திற்குள் அந்தப் பழைய கட்டிடத்தின் பெரும் பகுதி இடிந்து விழுந்து விட்டது. இந்த ஆச்சரியமான செய்தியைக் கேட்ட அரண்மனை வாசிகளும் ஊர் மக்களும் திரண்டு வந்து இரு ஆசார்யர்களையும் வணங்கிச் சென்றார்கள்.

**குருக்ஷேத்திரத்தில் கீதோபதேச ரதம்—ஆதிசங்கரா ஆலயம்**

மஹாபாரத யுத்தம் நடைபெற்ற பொழுது குருக்ஷேத்திரத் தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு செய்த உபதேசங்களை

நினைவு படுத்தும் வகையில், ஜ்யோதி ஸரஸ் என்னும் புண்ணிய தீர்த்தக் கரையையொட்டிய புனித ஆல மரத்தடியில் முழுவதும் வெண்சலவைக் கல்லினால் நான்கு குதிரைகள் பூட்டிய ரதத்தை அமைக்க ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞை செய்திருந்தார்கள். அதை யடுத்தாற் போல் நான்கு சிஷ்யர்களுடன் கூடிய ஸ்ரீ ஆதிசங்கரரின் ஸந்நிதியும் சலவைக் கற்களால் அமைக்கப்பட்டது. இவை இரண்டின் பிரதிஷ்டையும் கும்பாபிஷேகமும் வைதிக முறைப்படி மூன்று நாட்கள் ஜப, ஹோம, பாராயணங்களுடன் நடை பெற்றன.

இவைகளை லௌகிக ரீதியில் ஹரியானாவின் முதன் மந்திரி பகவான் தயாள் சர்மா 27-11-1966-ஆம் தேதி ஆயிரக்கணக்கான பக்தர்களின் முன்னிலையில் திறந்து வைத்தார். குரு க்ஷேத்திரத் திற்கு யாத்திரை செல்பவர்கள் இவற்றைத் தரிசித்துப் பயன் பெற்று வருகிறார்கள். இந்த ரதத்தையும், ஆதிசங்கர விக்ரகங் களையும் தயாரித்ததில் சென்னை பாரத் மோட்டார்ஸ் உரிமை யாளர் என். ராமசந்திர ஐயரது பங்கும் ஒத்துழைப்பும் பாராட்டத்தக்கதாகும். ஒரு லக்ஷம் ரூபாய்க்கு மேலாக இதற்குச் செலவாகியுள்ளது.

மேலும் குருக்ஷேத்திர நகர மத்தியில் உள்ள உயர்நிலைப் பள்ளியை அடுத்து ஓர் ஸ்தலம் வாங்கி அதில் ஓர் ஹாலும் லைப்ரரியும் கட்டப்பட்டிருக்கின்றன. அதில் உலக மொழிகளில் இது வரை வெளிவந்துள்ள கீதையின் மொழிபெயர்ப்புகளை யெல்லாம் வைக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

### பீரங்கிப் படைக்குப் பரிசு

1965-ஆம் வருஷம் செப்டம்பரில் இந்தியா மீது பாகிஸ்தான் தொடுத்த போர் ஒரு மாதம் கூட நீடிக்காமல் அவர்களாகவே போர் நிறுத்தம் செய்ய வைத்து நமக்கு வெற்றியைத் தேடித் தந்தவர்கள் இந்திய வீரர்கள். யுத்த காலத்தில் நோயுற்று ஆஸ்பத்திரியில் சிகித்ஸை பெற்று வந்த சிப்பாய்களுக்கு ஸ்ரீ அம்பி கையின் ப்ரஸாதமாக சுமார் 265 கிராம் எடையுள்ள தங்கக் கிண்ணத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள் தேன் அனுப்பி வைத்தார்கள் என்பதை முன்னர் குறிப்பிட்டிருந்தோம். அந்தக் கிண்ணம் போரில் உயிர் துறந்த பீரங்கிப் படையினரின் நினைவாக ராணுவத்தில் வைத்துக் கொள்ள தீர்மானம் செய்யப்பட்டது. அது சம்பந்தமாக 27-11-66-இல் ஹைதராபாத்தில் நடைபெற்ற ஓர் நிகழ்ச்சியில், அந்தக் கிண்ணத்தை, மதராஸ்-மைசூர்-கேரளா

பகுதியின் மேஜர் ஜெனரல் எஸ். கே. எஸ். ஸதே பீரங்கிப் படைக்கு வழங்கினார். அதைச் சம்பிரதாயப்படி ராணுவப்படை தளபதி ஜெனரல் பி. பி. குமாரமங்கலம் பீரங்கிப் படை சார்பில் ஏற்றுக் கொண்டார்.

**காளஹஸ்தியில் அகில இந்திய மடாதிபதிகள் மகாநாடு**

ஸ்ரீ ஆசார்யர்கள் வேங்கடகிரி முகாமை முடித்துக் கொண்டு 22-11-66-ஆம் தேதி கிளம்பி சைதாபுரம், காபேடு இவ்வூர்களுக்குச் சென்று 27-11-1966-ஆம் தேதி மறுபடியும் காளஹஸ்திக்கு விஜயமானார்கள். அன்று வபனபூர்ணிமை. இரு ஆசார்யர்களும் ஸ்வர்ண முகி நதியில் பூர்ணிமா ஸ்நானம் செய்தார்கள்.

சென்னையில் முன்னர் இரு முறை நடைபெற்ற மகாநாட்டில் தமிழ் நாட்டில் உள்ள மடாதிபதிகள் மட்டுமே கலந்து கொண்டார்கள். ஆனால் இந்த க்ஷேத்திரத்தில் நடைபெற்ற மகாநாடு அகில இந்திய தர்மபீட சமுதாய சங்கத்தின் சார்பில் கூட்டப் பட்டதாகும். இதில் நேரில் வந்து மகாநாட்டில் கலந்து கொண்டவர்கள் பின்வருமாறு:—

(1) உடுப்பி பேஜாவர் மடத்து ஸ்வாமிகள் (2) உடுப்பி பண்டரகெரே மடத்து ஸ்வாமிகள் (3) புனே சங்கேச்வர பீடம் சங்காராசாரிய ஸ்வாமிகள் (4) கேரளா திருச்சூர் தெற்கே மடத்து நம்பூதிரி ஸ்வாமிகள் (5) மதுரை திருஞான சம்பந்தர் மடத்து ஆதீனகர்த்தர் (6) காஞ்சீபுரம் ஞானப்ரகாச ஸ்வாமி மடத்தின் அதிபர். வானமாமலை ஜீயர் ஸ்வாமி தமது பிரதிநிதியை அனுப்பியிருந்தார். இவர்களைத் தவிர வடநாட்டில் உள்ள, வல்லப, ராமானந்தீய ராமானுஜ சம்பிரதாயங்களைச் சார்ந்தவர்கள் மகாநாட்டின் முடிவுகளைத் தாங்கள் பூர்ணமாக ஆதரிப்பதாக கடிதங்கள் மூலம் தெரிவித்திருந்தார்கள். இதில் மற்றொரு விசேஷம் என்னவென்றால் புனே சங்கேச்வர பீடம் சங்கராசார்ய ஸ்வாமிகளும், திருச்சூர் தெற்கே மடத்து ஸ்வாமிகளும் இது வரை அவரவர்களது இருப்பிடங்களிலிருந்து வெளியிடங்களுக்கு வந்ததில்லை.

வெவ்வேறு சித்தாந்தங்களைச் சார்ந்த மதத்தலைவர்கள் இந்த மகாநாட்டில் கலந்துகொண்டு ஸநாதன தர்மத்தை ரக்ஷிக்க பல ஆலோசனைகளைக் கூறினார்கள். சர்க்கார் மதச் சார்பற்றது என தெரிவித்த பின்னர் நமது நாடு தர்மத்தின் அடிப்படையை இழந்து வருகிறதென்றும், குறிப்பாக பள்ளி மாணவர்களுக்கு மத

போதனை இல்லாததால் அவர்கள் திசை தவறிப் போகிறார்கள் என்றும் இந்த நிலையில் ஆசார்ய பீடங்களை வகிப்பவர்கள் தீவிர மாகத் தர்ம பிரசாரம் செய்ய வேண்டுமென்றும் மகா நாட்டில் வற்புறுத்தப்பட்டது. மகாநாடு இரண்டு நாட்கள் நடை பெற்றது.

### கிரீஸ் நாட்டு ராணிக்குத் தர்சனம்

கிரீஸ் நாட்டிலிருந்து சென்னைக்கு வந்திருந்த அந்நாட்டு ராணி ஃப்ரெடெரிகா (Frederica) வும் அவருடைய குடும்பத்தினர் சிலரும் ஸ்ரீ ஆசார்யர்களைக் காளஹஸ்தி முகாமில் 3-12-66-ஆம் தேதி முதன்முறையாகத் தரிசித்துக் கொண்டார்கள். சில வருஷங் களாகவே ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசிக்க ஆவல் கொண்டிருந்ததாக வும் அதற்கு இப்பொழுதுதான் வாய்ப்புக் கிடைத்ததென்றும் ராணி ஆசார்யர்களிடம் தெரிவித்துக்கொண்டாள். சென்னை சர்வ கலாசாலையின் தத்துவப் பேராசிரியர் டாக்டர் டி. எம். பி. மகாதேவன் அந்த ராணியுடன் வந்து அவரை ஆசார்யர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். சுமார் ஒரு மணி நேரம் ஸ்ரீ ஆசார் யர்கள் அவர்களுடன் உரையாடி ஆசி வழங்கினார்கள். பின்னர் அவர்கள் ஸ்ரீ புதுப் பெரியவர்களையும் வணங்கி அவரது ஆசியை யும் பெற்றுச் சென்றார்கள்.

### புரொதத்தூர் கும்பாபிஷேகம்

காளஹஸ்தியிலிருந்து இரு பெரியவர்களும் 5-12-66-ஆம் தேதி இரவு புறப்பட்டு, புனப்பாக்கம், செல்லகூறு, கூடூர், வேங்க டாசலம், நெல்லூர், ஸங்கம், கட்டம்பட்டு, மன்னிபாடு, ரெட்டி பாளையம், பத்வேல், நந்தியால் பேட்டை, அல்லாடி பல்லி மார்க்க மாக 20-12-1966-ஆம் தேதி புரொதத்தூருக்கு விஜயமானார்கள்.

இவ்வூர் ஸ்ரீ ராஜராஜேச்வரி அம்பாள் சமேத ஸ்ரீ அகஸ்தீச் வர ஸ்வாமி தேவாலயத்தின் திருப்பணி முடிந்து வருஷங்கள் சில கழிந்தும் அந்த ஆலயக் கும்பாபிஷேகத்தை நடத்தி வைக்க ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் வரவேண்டும் என மக்கள் காத்திருந்தனர். ஆலய நிர்வாக அதிகாரி வி. எச். ப்ரஸாத ராவும் உள்ளூர் ஆலய தர்மாதிகாரி ஏ. ராமகிருஷ்ண ரெட்டியும், காளஹஸ்தியில் மடாதிபதிகள் மகாநாடு நடைபெற்ற வுடன், புரொதத்தூருக்கு இரு ஆசார்யர்களும் விஜயம் செய்ய வேண்டுமாய் பிரார்த்தித்துக் கொண்டார்கள். அவர்கள் பிரார்த் தனைக்கிணங்க இரு ஆசார்யர்களும் புரொதத்தூர் விஜயமானார்

கள். அப்போது அவ்வூர் ஜனங்கள் மிகவும் குதூகலமான வர வேற்பு அளித்தார்கள். 22-12-1966-ஆம் தேதி வியாழக்கிழமை இரு ஆசார்யர்களின் முன்னிலேயில் கும்பாபிஷேகம் காலே 8-30 மணிக்கு நடந்தது. அன்றும் மறுநாளும் ஸ்ரீ ஆசார்யர்கள் ஆயிரக்கணக்கில் கூடியிருந்த மக்களுக்கு உபதேசங்கள் அருளி ஞர்கள். பிரஸித்தி பெற்ற ஆந்திர கவி பிட்டபர்த்தி நாராயணு சார்யலு தமது கவிதைகளே வாசித்து அளித்து ஸ்ரீ ஆசார்யர்களின் அருளேப் பெற்ருர்.

## புரொதத்தூரில் கோ சம்ரக்ஷணசாலே

அவ்வூர் ஆரிய வைச்யர்களின் பிரார்த்தனேக்கு இணங்கி இரு ஆசார்யர்களும் ஸ்ரீ கன்னிகா பரமேச்வரி ஆலயத்தில் தங்கி சுமார் ஒரு மாதம் அவ்விடத்திலேயே ஸ்ரீ சந்திரமௌளீச்வர பூஜையை நடத்திஞர்கள். ஸ்ரீ ஆசார்யர்களின் விருப்பத்தை அறிந்த அந்த ஊர் வாசிகள் கோசாலே ஒன்றை நிறுவி அதை ஸ்ரீ ஆசார் யர்கள் அவர்களால் ஆரம்பித்து வைக்க பிரார்த்தனே செய்து கொண்டார்கள். அதன்படி 1967-ஆவது ஆண்டு ஜனவரி முதல் நாள் இரு ஸ்வாமிகளும் நேரில் இருந்து இதை ஆரம்பித்து வைத் தார்கள். ஸ்ரீ மடத்திலிருந்தும் நல்ல கரவைப் பசுக்கள் முதன் முதலாக அந்தக் கோசாலேக்கு அளிக்கப்பட்டன. அவ்வூர் வாசிகள் குறிப்பாக ஆரிய வைச்ய சமூகத்தார், ஸ்ரீ மடத்தின் கைங்கரியத்தில் நிரந்தரமாக ஈடுபட தங்களது தீர்மானத்தை விண்ணப்பித்துக் கொண்டார்கள். ஸ்ரீ மடத்தின் சார்பாக தெலுங்கில் ''காமகோடி'' என்னும் மாத இதழ் அவ்வூரிலிருந்து வெளியிட ஸ்ரீ ஆசார்யர்கள் அனுக்ரஹித்தார்கள். 14-1-1967-ஆம் தேதி அன்று மகர சங்கராந்தி பூஜையும் கோபூஜையும் புரொதத்தூரில் நடைபெற்றன.

## புஷ்பகிரி மடத்துக்கு விஜயம்

ஒரு மாதத்திற்கு மேல் புரரொதத்தூரில் தங்கிய பிறகு 23-ஆம் தேதி அவ்விடமிருந்து புறப்பட்டு 24-ஆம் தேதி மைதுகூரில் தங்கி புஷ்பகிரி மடத்து ஸ்ரீ சங்கராசார்யர் ஸ்ரீ அபிந வோத்தண்ட நரஸிம்ம பாரதி ஸ்வாமிகளின் அழைப்பை ஏற்று அத்தலத்துக்கு 25-ஆம் தேதி இரு ஆசார்யர்களும் விஜயம் செய்தார்கள். அந்த ஸ்வாமிகள் பீடத்துக்கு இளம் பருவத்தில் வந்தது முதற்கொண்டே அவர்களின் வித்யாப்யாஸத்திலும், அந்த மடத்தின் பழைய பெருமைகளேக் காக்கவும் பல வழிகளில்

ஸ்ரீ ஆசார்யர்கள் அக்கறை எடுத்து வந்துள்ளார்கள். அதன் காரணமாக அந்த ஸ்வாமிகளும் அடிக்கடி ஸ்ரீ ஆசார்யர்களின் தர்சனத்துக்கு வந்து போவது வழக்கமாக இருந்து வருகிறது. புஷ்பகிரி மடம் ஆந்திர தேசத்தில் பழைமையான பிரஸித்தமான மடம். ஏராளமான சிஷ்யர்கள் இந்த மடத்துக்கு உண்டு. ஒரு காலத்தில் ஸ்ரீ சைலம் தேவாலயம் கூட இந்த மடத்தின் நிர்வாகத்தில் இருந்து வந்தது. வடபெண்ணை நதிக்கரையில் அழகான இடத்தில் இந்த மடம் அமைந்துள்ளது. 26-1-67-ஆம் தேதி வபன பூர்ணிமை. அன்று உத்தரபினாகினி நதியில் ஸ்னானம் செய்தார்கள். அன்று பௌர்ணமி பூஜையும் அந்த மடத்தில் நடை பெற்றது.

அந்த மடத்தின் வயது முதிர்ந்த பெரிய ஸ்வாமிகளுக்கும், பீடாதிபதியாக இருந்து வரும் அபிநவோத்தண்ட நரஸிம்ம பாரதி ஸ்வாமிகளுக்கும் ஸ்ரீ மடத்தின் சார்பாகக் காஷ்மீர் ஜரிகை சால்வைகள் அளித்து மரியாதை செய்யப்பட்டன. அந்த மடத்தின் ஆஸ்தான வித்வானுக்கு சால்வையும் மற்றோருக்குப் புது வஸ்திரங்களும் வழங்கப்பட்டன. ஸ்ரீ ஆசார்யர்களின் முகாமுடன் வந்திருந்த திருவிடைமருதூர் கே. பட்டாபிராமய்யர் அந்த மடத்தின் இரு ஸ்வாமிகளுக்கும் பிக்ஷா வந்தனம் செய்தார். 28-1-67 இரவு புஷ்பகிரியிலிருந்து கிளம்பி மறுநாள் அதிகாலையில் இரு ஆசார்யர்களும் கடப்பைக்கு விஜயம் செய்தார்கள்.

**கடப்பையில் அமோக வரவேற்பு**

முதல் தடவையாக இந்த ஜில்லாவின் தலைநகருக்கு விஜயமாகும் ஸ்ரீ ஆசார்யர்கள் இருவருக்கும் நகரமக்கள் மிகப் பெரிய அளவில் வரவேற்பு அளித்தார்கள். ஐந்து நாட்களும் அந்த நகரம் கோலாகலத்துடன் விளங்கியது. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்தும் ஜனங்கள் ஏராளமாக வந்து பூஜையைத் தரிசித்துக் கொண்டார்கள். வித்வான்களும் கவிகளும் அவரவர்களின் திறமைகளை வெளிபடுத்தி ஸ்ரீ ஆசார்யர்களிடம் சம்மானம் பெற்றனர். கடைசி நாளன்று இரு ஆசார்யர்களுக்கும் பெரிய அளவில் பட்டணப்ரவேச ஊர்வலம் நடத்தி வைத்தார்கள். இந்த ஏற்பாடுகளையெல்லாம் அட்வோகேட் **ஆர். ரங்கநாதனும்** அவருடைய நண்பர்களும் முன்னின்று நடத்தினர்.

**ராமேச்வரத்தில் ஷோடச விநாயகர் ப்ரதிஷ்டை**

சென்ற 1962-ஆவது வருஷம் இளையாத்தகுடியில் நடைபெற்ற ஆகம சிற்ப மகாநாட்டுக்கு வந்திருந்த கற்சிற்பிகள்

சிலரிடம் ஸ்ரீ ஆசார்யர்கள் ஒரே கல்லில் சுமார் ஐந்து மீட்டர் உயரத்தில் மகாகணபதியின் 16 மூர்த்தங்களையும் அமைத்து அதை ராமேச்வரம் அக்னிதீர்த்தக் கரையில் ஆதிசங்கரர் விமானத்திற்குப் பின்புறம் பிரதிஷ்டை செய்யவேண்டுமெனக் கூறினார்கள். அவ்வளவு பெரிய அளவில் ஒரே கல்லில் மூர்த்திகளைத் தயாரித்து அதை ராமேச்வரம் எடுத்துப் போவதில் சிரமம் இருக்குமென்றும் சில பாகங்களாகச் செய்து இதைச் சேர்த்து முடிக்கலாம் என்றும் சிற்பிகள் கூறினார்கள். செட்டி நாட்டைச் சேர்ந்த பெரிய மில் அதிபர் கண்டரமாணிக்கம் **லெ. அழகு சுந்தரம் செட்டியாரின்** ஆலோசனைப்படி இந்தத் திருப்பணி கண்டனூர் **காளியப்ப ஆசாரி** என்னும் ஸ்தபதியிடம் ஒப்படைக்கப் பட்டது. ஷோடச விநாயகர் தியான ச்லோகங்களில் கூறப்பட்ட லக்ஷணங்களுடன் கணபதியின் உருவங்களை அமைக்கத் திட்டமிட்டார்கள். இதைச் செய்து முடிக்க ரூ. 40,000/-க்கு மேல் செலவாகுமென்று எதிர்பார்க்கப் பட்டது. மேற்படி செட்டியார் அவர்களே முதலில் ரூ. 5000-நன்கொடை தந்து வேலைகளை ஆரம்பித்து வைத்தார். 1966-ஆவது வருட இறுதியில் வேலை முடிந்து ரெயில் மூலம் சிலையை ராமேச்வரத்துக்கு அனுப்பப்பட்டது. இதன் பிரதிஷ்டையும் கும்பாபிஷேகமும் 1-2-1967 புதன் கிழமை வைதிக முறைப்படி ஜப, ஹோமங்களுடன் ஸ்ரீ மடத்தின் பண்டிதர்களைக் கொண்டு நடைபெற்றது. இந்த சோடச விநாயகர் விமானத்தை அமைக்க சுமார் ரூ. 50,000க்கு மேல் செலவு ஆயிற்று. இதில் பெரும்பாகத்தை ஸ்ரீ மடத்தின் நெருங்கிய பக்தர்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஒரே பிரதக்ஷிணத்தில் 16 விநாயக மூர்த்தங்களையும் தரிசிக்கும் வாய்ப்பு பெற்றத் தலம் இது ஒன்றுதான் எனலாம்.

**கல்கத்தாவில் "வேதபவனம்"**

வங்காளத்திலும், பிஹார் மாகாணத்திலும் உள்ள பிராம்மணர்கள் யாவரும் அநேகமாக ஸாம வேதத்தைச் சார்ந்தவர்கள். அந்த வேதத்தைப் பயில்விக்கவும் பயிலவும் சரியானபடி ஏற்பாடுகள் இல்லாத காரணத்தினால் அதையறிந்தவர்களின் தொகை இந்த இரண்டு மகாணங்களிலும் மிகவும் குறைந்து வருகிறது. இந்தக் குறையை ஒருவாறு நிவர்த்திக்கும் பொருட்டு வங்கத் தலைநகரான கல்கத்தாவில் வேத பாடசாலை ஒன்றை நிறுவ ஸ்ரீ ஆசார்யர்கள் விரும்பினார்கள். அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் கல்கத்தாவில் வசித்து வரும் சிஷ்யர்கள் சிலர் இந்த முயற்சியில் ஈடுபட்டனர். தென் கல்கத்தாவில் 'லேக் அவென்யூ'

பிரிவில் ரூ. 50,000க்கு ஓர் இடம் வாங்கி அதில் ஒரு லக்ஷ ரூபாய்க்கு மேல் செலவு செய்து ஓர் கட்டிடத்தையும் எழுப்பி விட்டார்கள். இந்தக்கட்டிடத்துக்கு ஸ்ரீ மடத்தின் பெயரையே வைக்க வேண்டுமென்று சிஷ்யர்கள் விரும்பினார்கள். ஆனால் ஆசார்யர்களோ இதற்கு "வேதபவனம்" என்னும் பெயரையே இடவேண்டுமென்று கட்டளையிட்டார்கள். இந்த வேதபவனத்தின் திறப்பு விழா கல்கத்தாவில் 12-2-67-ஆம் தேதி மிகவும் சிறப்பாக நடந்தேறியது. இந்த நிகழ்ச்சி பற்றிக் கல்கத்தா பிரபல ஆங்கிலப் பத்திரிகை ஓர் விசேஷ அநுபந்தம் (Special Supplement) வெளியிட்டது. அன்று காலை முதல் அங்கே கணபதி ஹோமம், ஆவஹந்தி ஹோமம் ஏகாதச ருரத் ஹோமம் போன்ற வைதிக காரியங்கள் நடைபெற்றன. வங்க நாட்டைச் சார்ந்த ஏழுசிறுவர்கள் இங்கு ஸாம வேதம் கற்க முன்னரே ஆரம்பித்துவிட்டார்கள். ஸாமவேதத்தை முறையுடன் குருமுகமாக அத்யயனம் செய்தவரும், வேத பாஷ்யத்தில் தேர்ச்சி பெற்றவருமான சங்கர நாராயண ச்ரௌதிகள் இந்தப் பாடசாலைக்கு அத்யாபகராக நியமனம் செய்யப்பட்டார். அவர் ஹிந்தியிலும் தேர்ச்சி பெற்றவர். சிறுவர்களுக்கு ஆகார வசதியும் தங்கும் வசதியும் பவனத்திலேயே செய்யப் பட்டிருக்கின்றன.

வேதபவனக் கட்டிடம் 12-2-67-ஆம் தேதியன்று அதிகாலை சம்பிரதாயப்படி திறந்து வைக்கப்பட்டது. வேதகான பிரார்த்தனைக்குப் பின்னர் ஹூவர் ட்ரேடிங் கம்பெனி எஸ். வி. நரஸிம்மன் யாவரையும் வரவேற்றார். அம்ருத பஜார் பத்திரிகையின் ஆசிரியர் துஷார்காந்தி கோஷ் இதை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் மேற்கு வங்கத்தில் ஸாமவேதத்தை அபிவிருத்தி செய்ய இதுவரை எவரும் முயற்சிக்கவில்லையென்றும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்து ஆசார்யர்கள் இப்பொழுது எடுத்துக்கொண்ட முயற்சியை வங்காளிகள் பாராட்ட வேண்டும் என்றும், அதே சமயம் அவர்களுக்கு நன்றியையும் வந்தனங்களையும் தாம் தெரிவிப்பதாகவும் கூறினார். கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய கிரிதர்லால் மேத்தா பேசுகையில் வெகு தூரத்தில் உள்ள மேற்கு வங்க மக்கள் மீது கருணையுடன் இந்தப் பாடசாலையை ஸ்ரீ ஆசார்யர்கள் தொடங்கியுள்ளதைப் பாராட்டினார். கல்கத்தா ஹைகோர்ட்டின் முன்னாள் நீதிபதி முகர்ஜி வேதத்தின் சிறப்பைப் பற்றிக் கூறி மேற்கு வங்கத்தில் வேதம் பயிலும் மாணவர்கள் மிகமிகக் குறைந்து விட்டதால் மேலும் மாணவர்களை ஊக்குவிக்க இந்தக் குருகுலத்தைக் காஞ்சி ஆசார்



ஸ்ரீ ஆசார்யர்கள் எதையோ உற்று
பார்க்கிறார்கள்



ஸ்ரீ ஆசார்யர்கள் சென்னைக்கு அடுத்த காட்டுப்பள்ளி
கிராமத்தில் ஏகாந்த தரிசனம்



ஸ்ரீ ஆசார்யர்கள் வெள்ளி சிம்மாசனத்தில் தரிசனம் கொடுக்கிறார்கள்
(1961-இல் கும்பகோணம் ஸ்ரீ மடத்திற்கு ஸ்ரீ புதுப்பெரியவாளுடன்
முதல்தடவை விஜயம் செய்த சமயம்)

யர்கள் கல்கத்தாவில் நிறுவியுள்ளார்கள் என்றும் இதை நம் மக்கள் நல்ல முறையில் உபயோகித்துக் கொண்டு ஸ்ரீ ஆசார்யர் களின் விருப்பத்தை நிறைவேற்றிவைக்க வேண்டுமென்றும் கூறினர். பிரபல மீமாம்ஸா பண்டிதர் சாஸ்திர ரத்னகர பி. என். பட்டாபி ராம சாஸ்திரிகள் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த மேற்கண்ட மூன்று பிரமுகர்களுக்கும் ஸ்ரீ மடத்தின் சார்பாக காஷ்மீர் ஜரிகை சால்வைகளைப் போர்த்தி கௌர வித்தார். ஸ்ரீ மடத்தின் விசேஷ பிரதிநிதியாக வந்திருந்த எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரிகள் அம்மூவருக்கும் ஸ்ரீ ஆசார்யர்கள், கடப்பை ஜில்லா சாகலபள்ளி முகாமிலிருந்து அனுப்பிய மந்திராக்ஷதை விபூதி குங்கும ப்ரஸாதங்களை வழங் கினர். இந்த வேத பவனத்தை உருவாக்க முயற்சிகள் எடுத்துக் கொண்டவர்களில் வி. ஏ. பி. அய்யர், எஸ். வி. நரஸிம்மன், கம்பெனி சட்ட இலாகாவைச் சார்ந்த எஸ். வேங்கடராமன், வரு மான வரி இலாகா என். ஸ்ரீநிவாசன், தற்போது சென்னை உயர்நீதி மன்றத்தின் நீதிபதி வி. சேதுராமன், முத்ராதிகாரி ராமசந்திர ஐயர் ஆகியோர் முக்கியமானவர்கள். வேதரக்ஷண நிதியின் நிர்வாக ட்ரஸ்டி குழித்தலை வக்கீல் எஸ். அண்ணாத்துரை அய்யங்கார் இந்த விழாவில் கலந்து கொண்டார்.

**அகோபில விஜயம்**

ஆந்திர ப்ரதேசம் கடப்பையிலிருந்து சுமார் 80 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது இந்த நரஸிம்ம க்ஷேத்திரம். இரு ஆசார்யர்களும் கடப்பையிலிருந்து 2-2-1967 இரவு புறப் பட்டு, ரமணபள்ளி, சென்னூர், மைதிகூர், துவலூர், சாகல பள்ளி மார்க்கமாக 11-2-67-ஆம் தேதி அகோபில க்ஷேத்திரம் வந்தடைந்தார்கள். அன்றே கீழ் அஹோபிலத்தில் உள்ள ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்மர் தேவாலயத்தில் ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். ப்ரஹ்லாத வரத நரஸிம்மர் என்று இந்த ஸந் நிதிக்கு மற்றொரு பெயர் உண்டு. மேல் அகோபிலம் இங்கிருந்து சுமார் 10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. சுமார் 800 மீட்டர் உயரத்தில் உள்ளது. நிர்மானுஷ்யமான வனத்தின் நடுவில் கற்கள் நிறைந்த பாதையைக் கடந்து செல்வது சற்றுக் கடினம் தான். மலை ஏறி உக்ர நரஸிம்மர் ஸந்நிதியை அடைந்த பிறகு அந்தச் சிரமத்தைப் போக்கவல்ல இயற்கை காக்ஷிகளை நாம் அனுப விக்கலாம். மலைக் குன்றுகளில் உற்பத்தியாகி, சலசலப்பு ஒலி யுடன் ஓடும் பவநாசினி என்னும் சிற்றாறில் ஒரு தடவை நீராடி

விட்டால் நம் களைப்பெல்லாம் தீர்ந்து விடும். அகோபில க்ஷேத்திரத்தில் நவ (ஒன்பது) நரஸிம்ம மூர்த்திகள் உள்ளதாகப் புராணங்கள் கூறுகின்றன. அவை: (1) லக்ஷ்மீ நரஸிம்மர் (2) சத்ரவாட நரஸிம்மர் (3) காரண்ட நரஸிம்மர் (4) யோகானந்த நரஸிம்மர் (5) குஹ நரஸிம்மர் (6) க்ரோத நரஸிம்மர் (7) மாலோல நரஸிம்மர் (8) ஜ்வாலா நரஸிம்மர் (9) பாவன நரஸிம்மர். ஹிரண்யகசிபுவை வதம் செய்து ப்ரஹ்லாதனுக்கு அனுக்கிரகம் செய்தது தான் லக்ஷ்மீ நரஸிம்ம திருக்கோலம். இந்த க்ஷேத்திரம் அஹோபில மடத்தின் பரிபாலனத்தின் கீழ் உள்ளது. தற்காலம் பீடத்தை வகித்துவரும் அழகிய சிங்கர் தேவாலயத்தை நன்ருகத் திருப்பணி செய்து சில வருஷங்களுக்கு முன்னர்தான் சம்ப்ரோக்ஷணமும் செய்துள்ளார்கள்.

### அஹோபில க்ஷேத்திரத்தில் பீடாரோஹண வைர விழா

ஸ்ரீ ஆசார்யர்கள் பீடத்தில் அமர்ந்து 13-2-67 ஆம் தேதியுடன் 60 ஆண்டுகள் பூர்த்தி ஆகின்றன. 50 ஆண்டுகள் முடிவு பெற்ற பொன்விழாவை 1957-ஆம் ஆண்டில் சென்னையிலும் மற்றும் நாடு முழுவதும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் சிஷ்யர்கள் கொண்டாடினர்கள். பொன்விழாவின்போது ஆசார்யர்கள் குருநாதர்களின் அதிஷ்டானங்களைத் தரிசித்துக் கொண்டு கலவையிலேயே தங்கி விட்டார்கள். வைரவிழா அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் அகோபில க்ஷேத்திரத்தில் தங்குவார்கள் என்று ஒரு வாரத்துக்கு முன்புதான் தெரிந்தது. சென்னையில் உள்ள சிஷ்யர்கள் கங்கையிலிருந்து அபிஷேகத்திற்குக் குடங்களில் தீர்த்தம் எடுத்துவர ஏற்பாடு செய்துவிட்டார்கள். சென்னையிலிருந்தும் மற்ற ஜில்லாக்களிலிருந்தும் வேத பண்டிதர்கள் பலர் முதல் நாளே மேல அகோபிலம் வந்து சேர்ந்தார்கள். கர்நூல், நந்தியால் முதலான இடங்களிலிருந்து ஆந்திர பக்தர்களும் அங்கே கூடி விட்டார்கள். இடவசதியோ, மார்க்கவசதியோ இல்லாத அந்த அரண்யப் பிரதேசத்தில் ஸ்ரீ ஆசார்யர்களின் தீர்க்க ஆயுளைக் கருதி அன்று காலை கணபதி ஹோமம், ம்ருத்யஞ்சய ஹோமம், நவக் கிரஹ ஹோமம், புருஷஸூக்த ஹோமம், ஸ்ரீஸூக்த ஹோமம், மன்யுஸூக்த ஹோமம், 'முஞ்சாமுக்த்வர்' என்னும் ஸூக்த ஹோமம் ஆகியவை நடைபெற்றன. பின்னர் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு கங்காதீர்த்த அபிஷேகம் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் செய்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் உக்ர நரஸிம்ம மூர்த்திக்கு அஹிம்ஸா பட்டு

சாத்தி ஸ்வாமியைக் கண்குளிரத் தரிசித்துக் கொண்டார்கள். காஞ்சீபுரம், திருவானைக்காவல், கும்பகோணம் முதலான க்ஷேத்திரங்களிலிருந்து வந்த தேவஸ்தான ப்ரஸாதங்கள் ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. அன்று மாலை மலையை விட்டு இறங்கி ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்மரை மறு முறை தரிசித்துக் கொண்டு, மறுநாள் 14-2-67-ஆம் தேதி ஆரளகட்டாவுக்கு இரு ஆசார்யர்களும் விஜயம் செய்தார்கள்.

**நாடெங்கிலும் வைர விழா**

ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் விருப்பப்படி அந்த 1967-ஆவது ஆண்டு முழுவதையும் ஸ்ரீ ஆசார்யர்களின் பீடா ரோஹண வைர விழா ஆண்டாகக் கொண்டாட தீர்மானிக்கப் பட்டது. கல்கத்தா, டெல்லி, பம்பாய் முதலான பெரிய நகரங் களிலும் சிறிய நகரங்களிலும் கிராமங்களிலும் வைர விழா கொண்டாடப்பட்டது. எல்லா இடங்களிலும் ஏழைகளுக்கு அன்னதானம் நடைபெற்றன. ஸ்ரீ ஆசார்யர்களின் பிடி அரிசித் திட்டத்தை ஆங்காங்கு நிறைவேற்றி வைத்தார்கள். 28-2-1967-ஆம் தேதி மயிலாப்பூர் ரானடே ஹாலில் நடைபெற்ற கூட்டத் தில் சென்னையிலுள்ள அமெரிக்க நாட்டு பிரதிநிதி ஏ.பி. பிராங் களின் (A.B. Franklin) ஸ்ரீ பெரியவர்களிடம் தமக்குக் கிடைத்த சந்திப்புகளில் தாம் அடைந்த அனுபவங்களைப் பற்றி விரிவாகக் கூறி, தம் அஞ்சலிகளை ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் செலுத்தினர். 1967 ஆகஸ்டு 31 முதல் நான்கு நாட்கள் சென்னை மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபை ஹாலில் பக்தர்கள் பெரிய விழாக் கொண்டாடி னார்கள். இந்த விழாவுக்குக் கல்கத்தா உயர்நீதிமன்ற நீதிபதி ராம ப்ரஸாத் முகர்ஜி தலைமை வகித்தார். அன்று டாக்டர் டி. எம்.பி. மஹாதேவன் எழுதிய 'காஞ்சி முனிவர்' என்ற நூல் வெளி யிடப்பட்டது. ஸ்ரீ ஆசார்யர்களின் புகைப்படங்களின் கண்காக்ஷி ஒன்றும் அமைக்கப்பட்டிருந்தது. சிறிய வயதிலிருந்து அந்நாள் வரை பல சந்தர்ப்பங்களில் எடுக்கப்பட்ட நூற்றுக் கணக்கான படங்கள் காக்ஷியில் வைக்கப்பட்டிருந்தன. இந்த விழாவில் காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி, எம். பக்தவத்ஸலம், சச்சிதானந்தம் பிள்ளை, கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள், எம். அனந்தசயனம் ஐயங்கார், ம.பொ. சிவஞானம், சௌந்தரம் கைலாஸம், மதுரை ஆதீனகர்த்தர் மற்றும் பல பெரியோர்கள் கலந்துகொண்டு உரையாற்றி ஸ்ரீ ஸ்வாமிகளின் தபோவலிமையைப் பற்றியும் அவர்கள் மக்களுக்கு ஆற்றி வரும்

பல நலன்களைப்பற்றியும் ஸ்ரீ ஆசார்யர்களின் தர்சனத்திஞல் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் மனம்நெகிழ தெரிவித்துக் கொண்டார்கள்.

**மகாநந்தி க்ஷேத்திரத்தில் சதசண்டி ஹோமம்**

இரு பெரியவர்களும் ஆர்ளகட்டாவில் பிப்ரவரி 14, 15 தேதிகளில் அந்த ஊர் கன்னிகா பரமேச்வரி ஆலயத்தில் முகாம் செய்து 16-ஆம் தேதி ரத சப்தமியன்று மஹாநந்திக்கு விஜயம் செய்தார்கள். மஹாநந்தியில் உள்ள சிவலிங்கம் ரிஷிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஆவடையார் இல்லாமல் பூமிமட்டத்திலிருந்து சுமார் 20 சென்டிமீட்டர் உயரத்தில் லிங்கம் அமைந்துள்ளது. லிங்கத்தின் முன்புறம் ஓர் பெரிய நந்தி. இதை மகாநந்தி யெனக் கூறுகிறார்கள். அதனுல்தான் அந்த க்ஷேத்திரத்திற்கே மகாநந்தி என்ற பெயர் உண்டாயிற்று. இந்த ஆலயம் மலையின் அடிவாரத்தில் சூரிய ஒளி காணமுடியாத வனப்ரதேசத்தில் இயற்கையான சூழ்நிலையில் அமைந்துள்ளது. கர்ப்பக்கிருஹ விமானம் சற்று வடநாட்டுக் கோவில்போல அமைந்துள்ளது. மேற்குப் பார்த்த கோபுரம். கிருஷ்ணதேவராயரின் சாஸனங்களில் இது மஹாநந்தி தீர்த்தம் என்றே குறிக்கப்பட்டுள்ளது. மஹாமண்டபத்தின் முன் 18 மீட்டர் சதுரத்தில் ஓர் சிறு குளம். அதன் எல்லாப் பக்கங்களும் (கீழ்தளம் உள்பட) கருங்கல்லினுல் கட்டப்பட்டுள்ளன. ஒரு புறமிருந்து ஒரு நந்தியின் வாய் வழியாகச் சுத்தமான தண்ணீர் எப்பொழுதும் நிற்காமல் வந்து கொண்டிருக்கிறது. குளத்தில் எப்பொழுதும் இடுப்பளவே ஆழம் இருக்கும்படி தண்ணீரைக் குழாய் வழியாக வெளியே விடப்பட்டு ஒரு சிறுகால்வாயாக வெளியே போய் விடுகிறது. இந்த க்ஷேத்திரத்திற்கு வருகிறவர்கள் எக்காலத்திலும் பளிங்கு போல் காணப்படும் இந்தப் புனித தீர்த்தத்தில் நீராடுகிறார்கள். இந்த நந்தி வாய் வழியாக தண்ணீர் எங்கிருந்து வருகிறது என்பதை இது வரையில் கண்டுபிடிக்க முடியவில்லை. ஸ்வாமி ஸந்நிதியின் பக்கத்தில் அம்பாள் ஸந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. அம்பாளுக்கு முன் ஒரு ஸ்ரீ சக்கிரம் அமைந்துள்ளது. அது ஸ்ரீ ஆதிசங்கரரால் அமைக்கப்பட்டது எனக் கூறுகின்றனர். இந்த க்ஷேத்திரத்திற்கு 15 கிலோ மீட்டர் சுற்றளவுக்குள் ஒன்பது நந்தி க்ஷேத்திரங்கள் உள்ளன. அவை: (1) பத்ம நந்தி (2) நாக நந்தி (3) விநாயக நந்தி (4) கருட நந்தி (5) பிரம்ம நந்தி (6) சூர்ய நந்தி (7) விஷ்ணு நந்தி (8) சோம நந்தி (9) சிவ நந்தி.

ஒன்பது நந்திகளையும் ஒருவர் ஒரே நாளில் சூரியன் மறையும் முன் தரிசித்தல் மிகவும் புண்யம். சமீப காலத்தில் இந்த ஆலயத்திற் குள் ராமர் ஸந்நிதியும் வெகு அழகாக அமைக்கப்பட்டுள்ளது. இந்த வனப்ரதேசத்தில் காணும் அதி உயரமான வில்வ (பில்வம்) மரங்களின் இலை ஒன்பது தளமாகக் காணப்படுகிறது.

அன்று ரதஸப்தமி புண்ணியகாலமாதலால் இரண்டு பெரிய வர்களும் தேவாலயத்திற்குள் உள்ள தடாகத்தில் ஸ்நானம் செய்து ஸ்வாமி ஸந்நிதிகளில் தர்சனம் செய்து கொண்டார்கள். மறுநாளும் அங்கே தங்கி, 18, 19 தேதிகளில் நந்தியாலுக்கு விஜயம் செய்து, பிப்ரவரி 20-ஆம் தேதி மறுபடியும் மஹா நந்திக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களின் பீடாரோஹன வைர மஹோத்ஸவத்தைக் கருதியும், உலக க்ஷேமத்தை முன்னிட் டும் இந்த மகா க்ஷேத்திரத்தில் அம்பிகையைக் குறித்து ஆந்திர தேச பக்தர்கள் சதசண்டீ ஹோமத்தை நடத்தினார்கள். 22 ரிக் விக்குகளைக் கொண்ட அந்த ஹோமம் 20-2-67-இல் ஆரம்பிக்கப் பட்டது. வேதபாராயணத்தில் ஐம்பதுக்கு மேல் வேதவித் பன்னர்கள் கலந்து கொண்டார்கள். இந்த ஹோமம் 5 நாட்கள் நடைபெற்று 24-2-1967-ஆம் தேதி பூர்த்தியடைந்தது. ஹோமத் தின் பொருட்டு ஜபிக்கப்பட்ட கலச தீர்த்தம் ஆலயத்தில் உள்ள அம்பிகைக்கு அபிஷேகம் செய்யப்பட்டது. எல்லா ஸந்நிதி களிலும் விசேஷ அலங்காரமும் அர்ச்சனைகளும் நடைபெற்றன. நூற்றுக்கணக்கில் மக்கள் ஹோமத்தின் கடைசி நாளன்று பூர்ணாஹுதியையும் ஸ்ரீ ஆசார்யர்களையும் தரிசித்துக் கொண் டார்கள்.

**கர்நூல் விஜயம்**

மகாநந்தியில் சதசண்டீ ஹோமம் முடிந்த பின்னர் இரு ஆசார்யர்களும் 26-ஆம் தேதி மறுபடியும் நந்தியாலை அடைந்து அங்கே ஒருநாள் தங்கி, 27-ஆம் தேதி பாண்யத்திலும், 28-ஆம் தேதி கால்வாய் புக்கையிலும், மார்ச் 1-ஆம் தேதி ஓர்வக்கல் என்னுமிடத்திலும் தங்கி 2-3-1967-ஆம் தேதி கர்நூலை அடைந் தார்கள். முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் 1934-ஆவது வருடம் ஜனவரி மாதத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள் கங்கா யாத்திரை செல்லும் மார்க்கத்தில் இந்நகரத்திற்கு விஜயம் செய்தார்கள். இப்பொழுது ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளுடன் விஜயம் செய்வதால், மக்கள் மிகுந்த பக்தியுடனும் ஆவலுடனும் அவர்களை வரவேற்க சிறந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். இரு ஆசார் யர்களும் ஸ்ரீ மடத்திற்குச் சொந்தமான துங்கபத்ரா நதிக்கரையில்

கட்டப்பட்டுள்ள ஸ்ரீ சங்கர மடத்திற்கு விஜயம் செய்தார்கள். இது 15 ஆண்டுகளுக்கு முன்னர் கண்ட்ராக்டர் பி. கே. முத்து ஸ்வாமி அய்யர் என்பவரின் முயற்சியால் கட்டப்பட்டது. 3-3-1967-ஆம் தேதி ஸ்ரீ பரமகுரு ஸ்வாமிகளின் ஆராதனை நடைபெற்றது. இரு ஆசார்யர்களும் 3-3-67-ஆம் தேதி இரவு கர்நூலிலிருந்து புறப்பட்டு 4-ஆம் தேதி பிராம்மண கொடுக்கூர், 5-ஆம் தேதி ஜூபாடு, 6-ஆம் தேதி ஆத்மகூர், 7-ஆம் தேதி நாகலூட்டி இவ்விடங்களில் தங்கி 8-3-67-இல் ஸ்ரீசைலத்தை அடைந்தார்கள்.

**ஸ்ரீசைலத்தில் ஆசார்யர்கள்**

பாரத நாட்டின் பன்னிரெண்டு துவாதச லிங்க க்ஷேத்திரங்களுள் ஆந்திரத்திலுள்ள ஸ்ரீசைலமும் ஒன்று. இதற்கு மல்லிகார்ஜுனம் என்று மற்றொரு பெயரும் உண்டு. இதன் தல விருக்ஷம் அர்ஜுனம் என்னும் மருத மரம். இந்த மருத மரத்தைத் தலவிருக்ஷமாகக் கொண்ட இரு பெரிய தலங்கள் தமிழ் நாட்டில் உள்ளன. அவை மத்யார்ஜுனம் (தஞ்சை மாவட்டம்), புடார்ஜுனம் (திருநெல்வேலி மாவட்டம்), ஸ்ரீசைல க்ஷேத்திரத்தில் ஸ்வாமியின் பெயர் மல்லிகார்ஜுனர், அம்பாள் ப்ரமராம்பிகை. 'ப்ரமரம்' என்பது வண்டுக்குப் பெயர். வண்டு உருவம் தாங்கி அம்பிகை ஈசனை அடைவதாகத் தலபுராணம் கூறுகிறது. ஸ்காந்த புராணத்திலும், மகாபாரதத்திலும் இந்த ஸ்ரீசைலத்தின் பெருமை கூறப்பட்டுள்ளது. 450 மீட்டர் உயரம் உள்ள மலை மீது இந்த க்ஷேத்திரம் கானகத்தின் நடுவில் அமைந்துள்ளது. சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீசைலத்துக்கு மக்கள் போய் வருவது மிகவும் கடினம். இத்தலத்தைப் பற்றி அப்பர், சுந்தரர், சம்பந்தர் இம் மூவரும் பாடியுள்ளார்கள். திருப்பருப்பதம் என்று இதன் பெயர் தேவாரத்தில் காணப்படுகிறது. கர்நாடக நாட்டில் உள்ள வீரசைவர்களுக்கு இது ஓர் முக்யமான யாத்திரைத் தலமாகும். ஸ்வாமிக்கு வீர சைவர்கள் பூஜாரிகளாக இருந்து வருகிறார்கள்; யுகாதி அன்று ஆயிரக்கணக்கான வீர சைவர்கள் நடந்தே மலைமேல் வந்து மல்லிகார்ஜுனரைத் தரிசித்துப் போகிறார்கள். அம்பிகைக்கு உரித்தான 18 சக்தி பீடங்களில் ஒன்றாக இது சொல்லப்படுகிறது. ஸ்ரீ ஆதிசங்கரர் இத்தலத்திற்கு விஜயம் செய்துள்ளார்கள். அவர் இயற்றிய சிவானந்த லஹரியில் ஓர் சுலோகத்தில் இந்த ஈசனைப்பற்றிப் பாடுகிறார், 'அவர் அந்தி வேளையில் தாண்டவமாடி (மல்லிகை) புஷ்பம் போல் மலர்கிறார் என்றும், வேதங்களுக்கெல்லாம் சிகரமாக விளங்கும் உபனிடதங்

களில் தங்கியிருக்கிறார் என்றும், வண்டின் உருவமெடுத்த அந்த அம்பிகையினால் அழகுபடுத்தப்பட்டவர் என்றும், பாம்பை ஆபரணமாகப் பூண்டவர் என்றும், சத்துவ குணத்துடன் விளங்குகிறவர் என்றும், எல்லா மதத்தினர்களாலும் பூஜிக்கத்தக்கவர் ஏன்றும் கூறிவிட்டு, சிவா என்னும் பெயருடன் விளங்கும் அந்த அம்பிகையினால் அணையப்பெற்ற அந்த மல்லிகார் ஜுனரை வணங்குகின்றேன் என்கிறார். ஸ்ரீசைலக்ஷேத்திரத்தில் அம்பிகையின் ஆலயம் சற்று உயரத்தில் தனி கோபுரத்துடன் அமைந்திருக்கிறது. ஆலயத்திலிருந்து கிருஷ்ணா நதிக்குச் செல்ல சுமார் 900 படிகள் கீழே இறங்கிச் செல்லவேண்டும். பாதாள கங்கை என்று சொல்லப்படும் அந்த இடத்தில் யாவரும் வசதி யாக இறங்கி ஸ்னானம் செய்யலாம். தமிழ் நாட்டிலிருந்து ஸ்ரீசைலம் செல்கின்றவர்கள் ஓங்கோல் வரை ரெயிலில் சென்று அங்கிருந்து 200 கிலோ மீட்டர் தூரம் மார்க்காபுர், தோர்னால் மார்க்கமாக ஆலயத்தின் கோபுர வாயில்வரை பஸ்ஸில் செல்லலாம். இத்தலத்தைப் பற்றிய தேவாரப் பதிகங்களைச் சலவைக் கல்லில் அமைத்து அவைகளைச் சுவரில் பதிப்பித்துள் ளார்கள். இது திருப்பனந்தாள் காசி மடத்து உபயமாகும். அம்பிகையின் ஆலயத்தில் ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய சுலோகங் களும் எழுதப்பட்டுள்ளன. ஸ்ரீசைலத்தின் அடிவாரத்தின் கீழ் மிகப் பெரிய அணையொன்று கிருஷ்ணா நதியின் குறுக்கே அமைக்கப் பெற்றுள்ளது. இந்த அணையின் மூலம் தேக்கப்படும் தண்ணீரை மின்சக்தி உற்பத்தி செய்யவும் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலப் பாசனம் செய்யவும் உபயோகிக்கிறார்கள். இதற்கு 'ஸ்ரீசைலம் ப்ராஜக்ட்' என்று பெயர்.

ஸ்ரீசைலத்திற்கு சுமார் 3 கிலோ மீட்டர் தூரத்தில் ஒரு குன்றின் மேல் ஓர் சிகரம் உள்ளது. அதைத் தரிசித்தவர்களுக்கு மறு ஜன்மம் இல்லையென்று தலபுராணம் கூறுகிறது. மேலும் ஸ்ரீசைலத்தை யொட்டிய அடர்ந்த வனப்ரதேசத்தில் பாலதாரா பஞ்சதாரா என்னும் நீர் ஓடைகள் இருக்கின்றன. அந்த இடத்தில் தான் ஸ்ரீ ஆதிசங்கரர் தவம் செய்தார்களாம். அதையடுத்து ஹாடகேச்வரர் ஆலயம் அமைந்துள்ளது. ஆலயத்தின் ப்ராகார மதில் சுவர்களின் வெளிப்புறம் முழுவதும் சிறந்த கற்சிற்பங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீசைலத் தலத்தை தரிசித்து விட்டுப் போகிறவர்கள் எல்லோரும் எல்லையில் அமைந்துள்ள சாக்ஷி கணபதியிடம் விடைபெற்றுச் செல்ல வேண்டும். அவர் ஓர் எழுத்தாணியையும் ஏட்டையும் கையில் வைத்துக் கொண்டிருக்

கிறுர். உங்கள் பெயரை சாச்வதமாக பதிவு செய்து கொண்டு சாக்ஷி கூறவும் அவர் தயாராக இருக்கிறுர்.

**ஸ்ரீசைலத்தில் சிவராத்திரி : ஆதிசங்கரர் பிரதிஷ்டை**

கர் நூலிலிருந்து ஆத்மகூர் மார்க்கமாக நாகலூட்டிக்கு மார்ச் மாதம் 7-ஆம் தேதி வந்து சேர்ந்தார்கள். அவ்விடமிருந்து பெத்த செருவு மார்க்கமாய் ஸ்ரீசைலம் 35 கிலோ மீட்டரில் உள்ளது. அந்த மலைப்பாதை கரடு முரடானது. நாகலூட்டியில் இரு ஆசார்யர்களும் இரவு 10 மணிக்குக் கிளம்பி ஸ்ரீசைலத்துக்குக் கால்நடையாக சுக்லபர்வதம் என்னும் கடுமையான ஏற்றத்தைக் கடந்து மறுநாள் பகல் 11 மணிக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ சைல தேவஸ்தான அதிகாரிகளும் சர்க்கார் அதிகாரிகளும், அன்று இரு பெரியவர்களையும் வரவேற்றுர்கள். அன்று பகல் பூஜையை யும் மாலை ப்ரதோஷ பூஜையையும் முடித்துக் கொண்டு இரு பெரியவர்களும் ஸ்ரீ ப்ரமராம்பிகை மல்லிகார்ஜுனர் ஆலயத் துக்குச் சென்று தர்சித்து வந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் இதற்கு முன் 29-1-1934-இல் வடஇந்தியா யாத்திரையாக சென்ற சமயம் ஸ்ரீசைல க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள்.

9-3-1967-ஆம் தேதி சிவராத்திரி புண்யகாலம். அன்று மாலை ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ மல்லிகார்ஜுனர் தரிசனத்திற்கு கோயி லுக்குச் சென்றுர்கள். அப்பொழுது சிவராத்திரி மகிமை பற்றி யும் ஸ்ரீசைல க்ஷேத்திர பெருமை பற்றியும் தெலுங்கில் சுமார் $1\frac{1}{2}$ மணி உபன்யாஸம் செய்தார்கள். அவர்களின் உபன் யாஸத்தை ஹைதராபாத் ஆகாசவாணி நிலையத்தினர் ஒலிப்பதிவு செய்தார்கள். சிவராத்திரியை முன்னிட்டு ஸ்வாமி தர்சனத்திற்கு வந்திருந்த சுமார் 50,000 யாத்ரீகர்களுக்கு மேலாகவே அன்று ஸ்ரீ ஆசார்யர்களையும் பூஜையையும் தர்சிக்கக் கூடியிருந்தனர். இரண்டாவதுகால பூஜைக்குப் பின் இரு ஆசார்யர்களும் தேவாயல தர்சனத்திற்குச் சென்றுர்கள். ஏகாதசருத்ர மஹன் யாஸ பூர்வகமாக ஜபிக்கபட்ட தீர்த்தம் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்யப்பட்டது. ஸ்ரீ மல்லிகார்ஜுனர், ஸ்ரீ ப்ரம ராம்பாள், ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்ரமண்யர் ஆகிய ஸந்நிதிகளுக்குத் தனித்தனியே வெள்ளிக் குத்துவிளக்குகள் ஸ்ரீ மடத்திலிருந்து சமர்ப்பணம் செய்விக்கப்பட்டது. 10-3-1967 ஸ்ரீ அம்பாள் ஆலயத்துக்குத் தர்சனத்திற்குச் சென்ற சமயம் அம்பாளுக்குக் கல் இழைத்த திருமாங்கல்யப் பொட்டு ஒன்றை ஆசார்யர்கள்

சமர்ப்பணம் செய்தார்கள். அன்று ஸ்ரீ மடத்தில் நடைபெற்ற குரு ஆராதனைக்கு ஆந்திர தேசத்து வேத பண்டிதர்கள் 64 பேர்கள் வரிக்கப்பட்டார்கள். கோனஸீமா எனப்படும் கிழக்குக் கோதாவரி ஜில்லாவிலிருந்து பல ஆசார சீலர்கள் இதில் கலந்து கொண்டார்கள்.

### ஸ்ரீ ஆதிசங்கர மண்டபம்

ஸ்ரீசைல க்ஷேத்திரத்திற்கும் ஸ்ரீ ஆதிசங்கரருக்கும் சரித்திர பூர்வமாக உள்ள தொடர்பை நினைவு படுத்துவதற்காக அங்கு ஓர் ஆதிசங்கர விக்ரக பிரதிஷ்டை செய்ய 1961–ஆம் ஆண்டு முதலே, ராமேச்வரம் ஸ்ரீ சங்கர விமான மண்டபம் வேலை நடைபெறும் சமயத்திலேயே ஸ்ரீ ஆசார்யர்கள் ஆலோசித் தார்கள். அது சமயம் நெல்லூரில் உள்ள பிரபல ரெட்டியார் வம்சத்தைச் சார்ந்த ரேபால ஸுஜாதம்மா என்னும் பக்தை இளையாத்தகுடிக்கு ஸ்ரீ பெரியவர்களின் தர்சனத்துக்கு வந்திருந் தார். தங்கள் உத்தேசத்தை அந்த அம்மாளிடம் ஸ்ரீ ஆசார் யர்கள் தெரிவித்ததும் அதன் செலவு முழுவதையும் தாமே ஏற்றுக் கொள்வதாக அவர் தெரிவித்தார். ஆந்திரா அரசாங்கம் ஸ்ரீசைல ஆலயத்தின் கிழக்குக் கோபுர சந்நிதி வீதியில் வட வண்டை 58 மீட்டர் நீளம் 22 மீட்டர் அகலமுள்ள ஓர் இடத்தை இதற்கென வழங்கியது. அதில் தெற்கு நோக்கி ஓர் விமான மண்டபம் அமைக்கப்பட்டது. ஸ்ரீ ஆதிசங்கரர், நான்கு சிஷ்யர் களுடன் உள்ள விக்ரஹங்கள் வெள்ளை சலவைக் கல்லினால் காஞ்சீபுரத்தில் தயாரிக்கப்பட்டு ஸ்ரீசைலத்துக்கு எடுத்து வரப் பட்டன. அத்துடன் சலவைக்கல்லினால் தயாரித்த ஆசார்ய பாதுகையும் வந்து சேர்ந்தது. மண்டபத்தின் முகப்பில் பிரதி ஷ்டை செய்ய ஓர் நர்த்தன வினாயகர் விக்ரஹமும் உள்ளூரிலேயே தயாரிக்கப்பட்டது. மண்டபத்தை அடுத்து யாத்ரீகர்களும், சந்நியாசிகளும், தங்குவதற்கு அறைகளும் அமைக்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் கட்டிமுடிக்க ரூ. 60,000 க்கு மேல் செலவாயிற்று.

### ஆதிசங்கரர் மண்டப கும்பாபிஷேகம்

இந்தக் கும்பாபிஷேகத்தை முன்னிட்டுப் பூர்வாங்கமாக யாக சாலை, கடஸ்தாபனம் வேதபாராயணம் முதலானவை 20-3-1967-ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்டன.

22-3-1967-ஆம் தேதி புதன் கிழமை கும்பாபிஷேகத்திற்காக ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப்பெரியவர்களும் மற்றும் சில

ஸந்நியாஸிகளும் பின் தொடர, உபனிஷத் பாராயணத்துடன் மேளவாத்யத்துடனும் மண்டபத்தை அடைந்தார்கள். சரியாக 10 மணிக்கு ஆயிரக்கணக்கான பக்தர்கள் தர்சிக்க ஆதிசங்கர மண்டப விமானத்திற்கு கும்பாபிஷேகம் நடை பெற்றது. ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர என்னும் கோஷம் நாற்புறமும் ஒலித்தன. விமான கலச கும்பாபிஷேகம் நடைபெற்றவுடன் மண்டபத்தில் ஆதி சங்கரர் மற்றும் நான்கு சிஷ்யர்களான சுரேச்வரர், பத்ம பாதர், ஹஸ்தாமலகர், தோடகர் ஆகியவர்களின் பிம்பங்களுக்கு அபிஷேகம் நடைபெற்றது. அதன் பின்னர் ஆசார்ய பாதுகை களுக்கும் நர்த்தன கணபதிக்கும் அபிஷேகம் நடந்தது. பின்னர் ஸ்ரீ ஆசார்யர்கள் நெல்லூர் ரேபால ஸுஜாதம்மாளுக்கும் அவரது குடும்பத்தாருக்கும் இந்த பெருங் கைங்கர்யத்தை செய்து கொடுத் ததற்காக ப்ரத்யேகமாக ப்ரஸாதம் வழங்கி அவர்களை அனுக் கிரஹித்தார்கள். இந்த மண்டபத்தைச் சார்ந்த கட்டிடத்தில் ஸந்நியாஸிகள் மற்றும் சுரோத்திரியர்கள் தங்கவும், வேத பாட சாலை நடைபெறவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆந்திர முதல்வர் கே. பிரம்மானந்த ரெட்டி இரு ஆசார்யர்களையும் குடும்பத்துடன் வந்து தர்சனம் செய்து கொண்டார்.

### ஹாட கேச்வரத்தில் ஆசார்யர்கள்

ஸ்ரீ ஆசார்யர்கள் 25-3-67 விடியற்காலை ஸ்ரீ மடத்திலிருந்து ஒருவருக்கும் தெரியாமல் கிளம்பி விட்டார்கள். காலையில் விழித் தெழுந்ததும் ஸ்ரீ மடம் முகாம் சிப்பந்திகளும் தர்சனத்திற்கு வந்த வர்களும் ஸ்ரீ பெரியவர்களைக் காணமல் கவலையடைந்து ஸ்ரீ புதுப் பெரியவர்களிடம் தெரிவித்தார்கள். பின்னர் ஸ்ரீ ஆசார்யர்கள் ஹாடகேச்வரம் என்னும் இடத்தில் ப்ராதஸ்நானம் செய்து தியா னத்தில் இருப்பதாக அங்கிருந்து வந்தவர்கள் மூலம் தெரியவந்தது. மேலும் ஸ்ரீ ஆசார்யர்கள், ஸ்ரீசைலம் தேவஸ்தான நிர்வாக அதிகாரி என். நரஸிம்மராவை அழைத்து அந்தக் காட்டில் வளரும் புல்லைக்கொண்டு அங்கே ஓர் பர்ணசாலை அமைக்கச் சொன் ஞர்கள். இதைக் கண்ட பக்தர்கள் ஸ்ரீ ஆசார்யர்கள் அவ்விடத் திலேயே தங்கிவிடுவார்களோ என்று கவலை கொண்டார்கள். ஆனால் ஏலூர் வித்வான் மண்டலீக வேங்கட சாஸ்திரிகள் குருநாதரைச் சந்தித்து அவர்களுடன் இரண்டு மணி நேரம் சம்பாஷித்தபின் ஸ்ரீ ஆசார்யர்கள் ஆந்திர தேச யாத்திரையைத் தொடர்ந்து நடத்துவார்கள் எனத் தெரிந்தது. அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் ஆதிசங்கரர் தவம் செய்த பாலதாரா--பஞ்ச

தாராவுக்குச் சென்று ஓடையில் நீராடிச் சில மணி நேரம் நிஷ்டையில் இருந்து வந்தார்கள்.

ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் ஸ்ரீசைல சிகர தர்சனம் செய்து வந்தார்கள். 29-3-67-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களும் ஸ்ரீ மல்லிகார்ஜுனர், ஸ்ரீ ப்ரமராம்பாள் சந்நிதிகளைத் தரிசித்து வந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் அம்பிகையின் ஸந்நிதியில் உள்ள ஸ்ரீ சக்ரத்திற்கு குங்குமத்தினால் சஹஸ்ரநாம அர்ச்சனை செய்து வைத்தார்கள். அன்று இரவு 10 மணிக்குப் புறப்பட்டு சிந்தலா என்னும் ஊருக்கு மலைப்பாதையின் வழியாக இறங்கி வந்தார்கள். அடுத்த முகாம் டோர்னலா. அங்கு மலைப்பாதை முடிவடைகிறது. சுமார் 55 கிலோ மீட்டர் நீளமுள்ள இந்தப் பாதை பஸ் முதலான வாகனங்கள் வசதியுடன் செல்ல 1957-ஆவது ஆண்டில் அமைக்கப்பட்டது.

### திருபுராந்தகத்தில் அபிஷேகம்

திருபுராந்தக க்ஷேத்திரம் மிகவும் பழமையானது. ஸ்ரீசைல க்ஷேத்திரத்திற்கு இதுவே முகத்வாரம். முதலில் இந்த க்ஷேத்திரத்தைத் தரிசித்துக்கொண்டுதான் யாத்ரிகர்கள் ஸ்ரீசைலம் செல்வது வழக்கம். சுமார் $1\frac{1}{2}$ மீட்டர் உயரமுள்ள பீடத்துடன் (ஆவடையார்) கூடிய திருபுராந்தகேச்வர லிங்கத்திற்கு ஸ்ரீ ஆசார்யர்கள் எல்லாத் திரவியங்களுடன் விசேஷ அபிஷேகத்தைத் தம் திருக்கரத்தினாலேயே செய்தார்கள். இம்மாதிரியான மஹா அபிஷேகம் அந்த க்ஷேத்திரத்தில் இது வரையிலும் நடைபெற்றதில்லையென்று அவ்வட்டார மக்கள் கூறினார்கள். அத்துடன் அன்று ஸ்ரீ ஆதி சங்கரரே நேரில் வந்து அபிஷேகம் செய்ததைக் கண்டதாகவும் கூறினார்கள். அங்கிருந்து குண்டூர் வாஸிகளின் பிரார்த்தனைக்கிணங்க இரு ஆசார்யர்களும் அந்த நகரத்திற்குப் புறப்பட்டார்கள்.

### குண்டூர் விஜயம்

இரு பெரியவர்களும் திருபுராந்தகத்திலிருந்து 1967 ஏப்ரல் 2-ஆம் தேதி இரவு புறப்பட்டு, கொத்தபேலம், வினுகொண்ட, சந்தமாலூர், நரஸராவுபேட், நூதுருபாடு ஆகிய இடங்களில் முகாம் செய்தார்கள். 9-4-1967-ஆம் தேதி பால்குண பகுள அமாவாஸை அன்று ஸ்ரீ பரமேஷ்டி குருஸ்வாமிகளின் ஆராதனை நூதுருபாடு சத்திரத்தின் கட்டிடத்தில் நடந்தது. அடுத்த நாள் பிலவங்க வருஷத்தின் சாந்திரமான யுகாதி பண்டிகை. தெலுங்கு

வருஷப் பிறப்பன்று ஆசார்யர்களின் விஜயம் தங்கள் ஊருக்குக் கிடைத்ததில் குண்டூர் வாசிகள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து சிறந்த முறையில் வரவேற்பு அளித்தார்கள். குண்டூருக்கு வந்து சேர்ந்த இரண்டு ஆசார்யர்களையும் நகரின் முக்ய வீதிகளின் வழியாக ஊர் வலமாக குண்டூர்-பார்வதீபுரத்தில் உள்ள சிருங்கேரி சங்கர மடத்திற்கு அழைத்து வந்தார்கள். அன்று முதல் வஸந்த நவராத்ரி ஆரம்பம். அதற்காகத் தனியாக யாகசாலையும், 2000 பேருக்கு மேல் பூஜையைத் தரிசிக்கவும் அலங்காரக் கொட்டகை அமைத்திருந்தார்கள். இரு ஆசார்யர்களும் அன்று பக்கத்தில் உள்ள ஸ்ரீ ராமநாம க்ஷேத்திரத்தை தரிசித்து வந்தார்கள். வஸந்த நவராத்ரியை முன்னிட்டு ஸ்ரீ வித்யா ஹோமம், ராம மந்திர ஹோமம் மற்றும் பாராயணங்களும் ஆரம்பிக்கப்பட்டன. தினந்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் பூஜையைத் தரிசித்து தீர்த்தப்ரஸாதம் பெற்றுப் போனார்கள். சங்கர மடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிவாலயத்தையும் ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்தையும் இரு ஆசார்யர்களும் தரிசித்துக் கொண்டார்கள். சிவாலயத்திற்கு இரண்டு வெள்ளிக் குத்துவிளக்குகளை ஸ்ரீ ஆசார்யர்கள் சமர்ப்பணம் செய்தார்கள்.

ஸ்ரீ மடம் முகாமுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும், பாத பூஜை, பிக்ஷாவந்தன ஏற்பாடுகளையும் வரவேற்புக் கமிட்டியைச் சார்ந்த வினபாமுல சீதாராமய்யாவும், நம்பூரு காசி விச்வநாதம், போலி செட்டி ஏ. ஆர். ஆஞ்சனேயலு, வெல்ல வியாபாரி பி. சூர்ய நாராயணா ஆகியோர் முக்யமாகக் கவனித்துக் கொண்டார்கள். 19-4-67-ஆம் தேதி வஸந்த நவராத்ரி பூஜை முடிவு பெற்றது.

### அமராவதியில் கிரஹண புண்யகாலம்

இரு ஆசார்யர்களும் குண்டூர் சமீபமுள்ள சில க்ஷேத்திரங்களைத் தர்சனம் செய்து கொண்டு 22-4-67-ஆம் தேதி இரவு புறப்பட்டார்கள். 23-ஆம் தேதி முகாம் தாடிகொண்டா. விஜயவாடா பிரமுகர்கள் இரு பெரியவர்களையும் தாடிகொண்டாவில் தர்சனம் செய்து கொண்டு விஜயவாடா விஜயத்துக்கான ஏற்பாடுகளைப் பற்றி விக்ஞாபனம் செய்து கொண்டார்கள்.

மறுநாள் சந்திர கிரஹண புண்யகாலம். குண்டூரிலிருந்து 30 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள அமராவதி என்னும் புண்ய க்ஷேத்திரத்திற்கு விஜயமானார்கள். தீர்த்தம், ஸ்தலம் இருவகையிலும் உயர்வு பெற்றது அமராவதி. அங்கே கிருஷ்ணா நதி தக்ஷிண வாஹினியாக ஓடுகின்றது. த்வாபர யுகத்தின் இறுதியில்

சௌனகாதி முனிவர்கள் நாரத மகரிஷியிடம் மோக்ஷ மார்க்கத்தைச் சொல்லும்படி கேட்டார்களாம். அப்பொழுது நாரதர் அவர்களைப் பார்த்து "இந்தப் பூலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே கிருஷ்ணா நதியை உற்பத்தி செய்தார். நீங்கள் எல்லோரும் அந்த நதியில் நீராடி வந்தால் உங்களுக்கு மோக்ஷம் கிட்டும்", என்று கூறினார். இவ்வாறு அமராவதி தலபுராணம் கூறுகின்றது. மேலும் தேவர்கள் எல்லோரும் ஸ்ரீ பரமேச்வரனை பூலோக மக்களை உய்விக்க அமராவதியில் லிங்க உருவமாக ஆவிர்பவிக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்ய; பரமசிவனும் அவ்வாறே இந்த க்ஷேத்திரத்தில் காக்ஷி தருகிறார்.

இந்த இரு பெருமைகளையும் பெற்றுள்ளது அமரேச்வரர் ஆலயம். இதன் நான்கு கோபுரங்களும் தமிழ் நாட்டு கோபுரங்கள் போல் அமைந்துள்ளன. சுமார் 5 மீட்டர் உயரமுள்ள பிரதான சிவலிங்கம் வெள்ளைச் சலவைக் கல்லால் ஆனது. பழங் காலத்தில் அமராவதியில் பெரிய வித்யா பீடம் ஒன்று நடை பெற்று வந்ததாகவும், அதில் சைனா, ஜப்பான், சையாம், திபெத், இலங்கை முதலான நாடுகளிலிருந்து மாணவர்கள் வந்து கல்வி பயின்று வந்ததாகவும் அதற்கான ஆதாரங்கள் இருப்பதாகவும் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். ஒரு காலத்தில் இந்தத் தலம் பௌத்த மதத்தின் முக்கியத் தலமாக இருந்த தாகவும் கூறப்படுகிறது.

24-4-67-ஆம் தேதி பூர்ண சந்திர கிரஹணம்: (மாலை 4-00 முதல் 7-00 வரை) இரு ஆசார்யர்களும் மஹா ஸங்கல்பம் செய்து கொண்டு புனித கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்தார்கள். மறு நாளும் அங்கு தங்கி ஸ்ரீ அமரேச்வரரை தர்சனம் செய்து கொண்டு, ஏப்ரல் 26-ஆம் தேதி பெரிமி என்னும் ஊரில் தங்கி மங்கள கிரிக்குப் புறப்பட்டார்கள்.

**மங்களகிரியில் பானக நரஸிம்ம ஸ்வாமி தர்சனம்**

இரு ஆசார்யர்களும் 26-ஆம் தேதி இரவு (கொத்த) பெரிமியிலிருந்து புறப்பட்டு 27-4-67-ஆம் தேதி அதிகாலையில் மங்களகிரிக்கு விஜயமானார்கள். அங்கு யானை உருவம் போலக் காணும் மலை மீது நரஸிம்ம ஸ்வாமி ஆலயம் அமைந்துள்ளது. சுமார் 1000 படிகள் ஏறித் தேவலாயத்தை அடைய வேண்டும். இந்த ஆலயத்தின் விசேஷம் யாதெனில் ஸ்வாமிக்கு நிவேதன மாக பக்தர்கள் பானகத்தை நேராக ஸ்வாமியின் வாயில் ஊற்றுகிறார்கள். ஊற்றிய பானகத்தில் பாதி அளவு

வெளியே வந்து விடுகிறது. அதைப் பக்தர்கள் பிரஸாத மாக ஏற்றுக் கொள்கிறார்கள். ஒவ்வொரு நாளும் பக்தர்களால் ஏராளமாக பானகம் இவ்வாறு ஊற்றப்பெற்றாலும் ஒரு எறும்பு கூட அங்கு வருவது இல்லையாம். இரு ஆசார்யர்களும் 27-ஆம் தேதி அதிகாலையில் புஷ்கரணியில் ஸ்நானம் செய்து விட்டு மலை ஏறி, பானக நரஸிம்மரைத் தர்சனம் செய்து வந்தார்கள். ஆந்திர நாட்டின் புராதன க்ஷேத்திரங்களில் இதுவும் ஒன்றாகும். தேசத்தின் எட்டு நரஸிம்ம க்ஷேத்திரங்களில் இதுவும் ஒன்றாகும். மலை அடிவாரத்தில் விஜயநகர மன்னன் கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்ட நரஸிம்மர் தேவாலயத்தையும் இரு ஆசார்யர்களும் தர்சனம் செய்துகொண்டு அன்று இரவு விஜயவாடாவுக்குப் புறப்பட்டார்கள்.

### விஜயவாடாவில் ஆசார்யர்கள்

இரு ஆசார்யர்களும் மங்களகிரியிலிருந்து 28-4-67-ஆம் தேதி அதிகாலையில் விஜயவாடாவுக்கு விஜயம் செய்தார்கள். கிருஷ்ணா பாலத்தருகில் ஏராளமான மக்கள் கூடி வேத பாராயணம் முழங்க பூர்ண கும்பத்துடன் மிகப் பெரிய வரவேற்பை அளித்தனர். இரு ஆசார்யர்களும் அன்று கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்து கொண்டார்கள். அங்கிருந்து சுமார் மூன்று கிலோ மீட்டர் தூரமுள்ள லப்பிபேட்டை ஸ்ரீ வேங்கடேச்வர ஸ்வாமி ஆலயத்துக்கு ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார்கள். கிருஷ்ணா கால்வாயை சமீபமுள்ள அந்த ஆலயத்தில் ஸ்ரீ சந்திர மௌளீச்வர பூஜைக்கென மிகப் பெரிய அலங்காரக் கொட்டகை அமைக்கப்பட்டிருந்தது.

ஸ்ரீ ஆசார்யர்கள் பீடத்தில் அமர்ந்து அறுபது ஆண்டுகள் பூர்த்தியடைந்ததை யொட்டி குறைந்த பக்ஷம் இரண்டு லக்ஷம் ரூபாய் வசூலித்து அந்தத் தொகையை ஸ்ரீ ஆசார்யர்கள் விரும்பும் தர்ம கார்யத்திற்குப் பயன்படுத்த வேண்டுமென்று வரவேற்புக் கமிட்டியார் திட்டமிட்டார்கள். ஆனால் ஆசார்யர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆசார்யர்கள் அதுவரை வசூலாகியிருந்த அறுபதினாயிரம் ரூபாயுடன் வசூலை நிறுத்திக்கொள்ளும்படி கூறி விட்டார்கள். அந்தத் தொகையை என்ன செய்வது என்பதைப் பற்றியும் ஸ்ரீ ஆசார்யர்கள் அவர்களிடம் அப்பொழுது கூறவில்லை. இந்த நிலையில் தங்கத்தில் நவரத்ன கிரீடம் ஒன்று ஸ்ரீ ஆசார்யர்களுக்காகத் தயாரித்து வைத்திருப்பதாயும் அதை ஏற்றுக்

கொள்ள வேண்டுமென்றும் வரவேற்புக் கமிட்டியார் பிரார்த்தித்துக் கொண்டார்கள்.

### ஆசார்யர்களுக்கு மணி மகுடம் (கிரீடம்) சமர்ப்பணம்

நவரத்தினக் கற்கள் பதிக்கப் பெற்ற ரூ. 50,000க்கு மேல் பெறுமான உள்ள தங்கக் கிரீடத்தை 30-4-67 ஞாயிற்றுக் கிழமையன்று காலை ஸ்ரீ வேங்கடேச்வரர் ஆலயத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் தர்சிக்க மிகவும் கோலாகலமாக ஸ்ரீ ஆசார்யர்களுக்கு பக்தர்கள் சார்பில் வரவேற்பு கமிட்டியார் சமர்ப்பித்தார்கள். கமிட்டி தலைவர் ஆந்திரப்ரதேச (வைத்தியத் துறை) அமைச்சர் பி.வி. நரஸிங்கராவ், சட்டசபை அங்கத்தினர் டாக்டர் டி.வி. எஸ். சலபதி ராவ், பெஜவாடா மோட்டார் ஒர்க்ஸ் மாகண்டி சூர்ய நாராயணா, ஆடிடர் முஷ்டி சுப்ரமண்ய சாஸ்திரி, ஆந்திரப்ரபா ஆசிரியர் என்.வி. சேஷய்யா, வர்த்தகசபைத் தலைவர் எஸ். ஆஞ்சனேய பந்துலு, அட்வோகேட் பி. விச்வநாதராவ் மற்றும் கமிட்டி அங்கத்தினர்களும் சாஸ்திர ரத்னாகர மண்டலீக வேங்கட சாஸ்திரிகளை தலைவராக கொண்டு இதை நடத்தி வைத்தனர். ப்ரதோஷ காலங்களில் பூஜையின் போது ஸ்ரீ ஆசார்யர்கள் அணியும் ருத்ராக்ஷ கிரீடத்தின் மேல் இந்தக் கிரீடத்தைப் பொருத்தும்படி ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞை செய்தார்கள். உட்புறம் ருத்ராக்ஷ கிரீடமும், வெளிப்புறம் கல் இழைத்த தங்கக் கிரீடமும் அமைய பக்தர்களின் ஜயகோஷம் முழங்க ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் குருநாதருக்கு கிரீடத்தைச் சூட்டிய பொழுது ஆயிரக்கணக்கான மக்கள் ஆனந்தக் கண்ணீருடன் தரிசித்தார்கள்.

அன்று காலை இரு ஆசார்யர்களும் கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்து மலை மீது அமைந்துள்ள கனகதுர்கா அம்மனையும் நதியின் கரையில் உள்ள விஜயேச்வரர் லிங்கத்தையும் தரிசித்துக் கொண்டார்கள். அன்று இரவு நகரின் முக்கிய வீதிகளின் வழியாக ஆசார்யர்களின் மிகப் பெரிய ஊர்வலம் நடைபெற்றது. ஸ்ரீ ஆசார்யர்கள் புஷ்பப் பல்லக்கிலும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் யானை மீது அம்பாரியிலும் பவனி வந்தார்கள். 7-5-1967-இல் இரு ஆசார்யர்களும் பழைய டவுனில் உள்ள ஸ்ரீ கன்னிகா பரமேச்வரி அன்ன சத்திரத்தில் தங்கிப் பூஜை செய்தார்கள்.

### விஜயவாடாவில் ஸ்ரீ சங்கரஜயந்தி மஹோத்ஸவம்

இந்த வருஷம் சங்கர ஜயந்தி உத்ஸவம் வழக்கம்போல் 5 நாட்கள் விஜயவாடா லப்பிபேட்டை ஸ்ரீ வேங்கடேச்வரர்

ஆலயத்தில் நடைபெற்றது. ஒவ்வொரு நாளும் சூத்ர பாஷ்ய பாராயணம், பிரகரண கிரந்த பாராயணம் ஆகியவை நடைபெற்றன. மாலையில் கிருஷ்ண கால்வாயில் வஸந்த உத்ஸவமும் நடைபெற்றது. வைசாக சுத்த பஞ்சமி (14-5-67) ஞாயிற்றுக் கிழமை பகல் ஆசார்ய பிம்பத்திற்கு விசேஷ பூஜை நடந்தது. ஜனன கட்டமும் வாசிக்கப்பட்டது. அன்று ஆந்திர ப்ரதேச வைத்ய இலாகா மந்திரி பி.வி. நரஸிம்மராவ், ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ புதுப்பெரியவர்களுக்கும் சம்ஸ்கிருதத்தில் ஓர் வாழ்த்துபத்திரம் வாசித்தளித்தார். மண்டலீக வேங்கட சாஸ்திரிகள் தம் கரங்களினால் ஆசார்யர்களுக்கு மணிமகுடம் சூட்டிப் பொன்னாடையும் போர்த்தினார்.

நாட்டின் பல பாகங்களிலிருந்தும் சாஸ்திர பண்டிதர்கள் வந்து வித்வத் சபையில் கலந்து கொண்டார்கள். அவர்கள் யாவருக்கும் தக்கவாறு சம்பாவனைகள் செய்யப்பட்டது. இவ் வருஷ சிறப்பு சம்பாவனை ரூ. 500-ஐ புனா திலக் மகாராஷ்டிர வித்யா பீடத்தைச் சார்ந்த தத்தாத்ரேய சாஸ்திரி கவீச்வரர் என்னும் வித்வான் பெற்றார். அவருக்குக் காஷ்மீர் ஜரிகை சால்வையும் வழங்கப்பட்டது.

குருகுல முறைப்படி மேட்டூரில் முல்லவாசல் பிரம்மஸ்ரீ ராஜகோபால சாஸ்திரிகளிடம் யஜுர் வேதத்தை க்ரமாந்தம் அத்யயனம் செய்து பரீக்ஷையில் முதல் வகுப்பில் தேறிய வித்யார்த்திகள் 12 பேர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ.2000 வீதம் வேத ரக்ஷண நிதியிலிருந்து சம்மானம் செய்யப்பட்டது. இந்தச் சம்மானத்தை ஆந்திரப்ரதேச அறநிலைய மந்திரி ஆர். ராமலிங்கராஜு வித்யார்த்திகளுக்கு அளித்தார். ஸ்ரீ ஆசார்யர்களது பீடாரோஹண வைர விழாவையொட்டி விஜய வாடாவில் வசூல் செய்யப்பட்ட ரூ. 60,000-ஐயும் குருக்ஷேத்திரத்தில் பிரதிஷ்டை செய்யப்பட இருக்கும் கீதோபதேச ரதம், ஆதி சங்கர ஆலயம் இவைகளின் திருப்பணிக்காகப் பாரத் மோட்டார்ஸ் என். ராமசந்திர அய்யருக்கு அனுப்பி விடும்படி ஸ்ரீ ஆசார்யர்கள் உத்தரவிட்டார்கள். அதன்படி அந்தந்தத் தொகை அனுப்பப்பட்டது.

### ரிஷீகேசம்—லக்ஷ்மண ஜுலாவில் ஆதிசங்கர பிரதிஷ்டை

இமயத்தின் அடிவாரத்தில் உள்ள ரிஷீகேச க்ஷேத்திரத்தில் கங்கைக் கரையில் லக்ஷ்மண ஜுலா என்னும் தொங்கும் பாலத்திற்கு சமீபம் கங்கையில் ஸ்நானம் செய்யும் யாத்ரீகர்கள் யாவரும்

நன்ருகத் தரிசிக்கும்படி சற்று உயரத்தில் ஓர் சிறு ஆலயம் அமைத்து அதில் ஸ்ரீ ஆதிசங்கரரின் விக்ரகத்தை நான்கு சிஷ்யர்களுடன் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்பது ஸ்ரீ ஆசார்யர்களின் சங்கல்பம். அந்தப் பணியை ஓர் ஆண்டுக்கு முன்னர் ஸ்ரீ மடத்தின் சிஷ்யர் பாரத் மோட்டார்ஸ் என். ராமசந்திர அய்யரிடம் ஒப்புவிக்கப்பட்டது. ரிஷிகேசத்திலுள்ள ஸ்ரீ பஹலா ஹரிபாபா மஹந்து தாமோதர் தாஸ்ஜீ அவர்களின் உதவியுடனும் ஒத்துழைப்புடனும் இடம் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஸ்ரீ ஆசார்யர்களின் அனுமதிபெற்று அந்த இடத்தை மடத்திற்காக வாங்கி அதில் சிறிய மண்டபமும் விமானமும் அமைக்கப்பட்டன. வெள்ளைச் சலவைக் கல்லில் ஆதிசங்கரர் மற்றும் சிஷ்யர்களின் விக்ரஹங்கள் ஜயபுரில் தயாரிக்கப்பட்டுக் கொண்டு வரப்பட்டன.

இந்த ஆதி சங்கரரின் பிரதிஷ்டையை ஸ்ரீ ஆசார்யர்களின் அருளால் ராமசந்திர அய்யர் 14-5-67-ஆம் தேதி சங்கர ஜயந்தியன்று நடத்தி வைத்தார்கள். ஸ்ரீ மடத்திலிருந்து அனுப்பப்பட்ட வேத பண்டிதர்கள் 12-5-67-இல் கலச ஸ்தாபனம், ஹோமம் முதலான பூர்வாங்கங்களை ஆரம்பித்து வைத்து கும்பாபிஷேகத்தை நடத்தினர்கள். உள்ளூர் மக்களும் யாத்ரிகர்களும் ஏராளமாகக் கூடி இந்தப் பிரதிஷ்டையையும் கும்பாபிஷேகத்தையும் தரிசித்தார்கள். அன்று முதல் ஸ்ரீ ஆதிசங்கரருக்கு நித்ய பூஜை நடைபெற்று வருகிறது.

## ஏலூருக்கு யாத்திரை

விஜயவாடாவிலிருந்து 19-5-67-ஆம் தேதி இரவு கிளம்பி இரு பெரியவர்களும் கன்னவரம், வீரவல்லி மார்க்கமாக 22-ஆம் தேதி ஏலூருக்கு விஜயம் செய்தார்கள். ஏலூரு அசோக் நகரில் உள்ள தியஸாபிகல் ஹைஸ்கூலில் ஸ்ரீமடம் தங்கியது.

நகர எல்லையில் மண்டலீக வேங்கட சாஸ்திரிகள் தலைமையில் ஊர், மகாஜனங்கள் இரு ஆசார்யர்களுக்கும் பூர்ண கும்பம் அளித்து வரவேற்றார்கள். 22-ஆம் தேதி புதன்கிழமை நரஸிம்ம ஜயந்தி. அன்று இரு ஆசார்யர்களும் கோதாவரி கால்வாயில் ஸ்னனம் செய்தார்கள். நரஸிம்ம மூர்த்திக்கு விசேஷ பூஜை நடைபெற்றது. 24-5-67-ஆம் தேதி ஸ்ரீ பெரியவர்களின் ஜன்ம நக்ஷத்திரம். ருத்ர ஏகாதசி நடத்தி பெரியவர்களுக்குத் தீர்த்த அபிஷேகம் செய்தார்கள். அன்று வித்வத் ஸதஸ் ஒன்று நடைபெற்றது. பண்டிதர்களுக்குத் தலா ரூ 116/- சம்பாவனை செய்யப்பட்டது. சாஸ்திர ரத்னகர பண்டிதராஜ போலகம் ராம

சாஸ்திரிகள் ஸ்ரீ ஆசார்யர்கள் பேரில் 'த்வம் ஜீவ சரதச் சதம்' என்னும் தலைப்பில் சில சுலோகங்களைக் கவனம் செய்து சபையில் வாசித்தார். 29-5-67-ஆம் தேதி மாலை ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சங்கர மடத்திற்கும் வேத பவனத்திற்கும் விஜயம் செய்தார்கள். 30-5-1967-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் ராம மந்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். 5-6-67-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களும் ஏலூரை விட்டுப் புறப்பட்டு 6-ஆம் தேதி குண்டகொனலு என்னும் ஊருக்கு விஜயம் செய்தார்கள். ஈச்வர ராஜு என்னும் பிரமுகர் ஸ்ரீ மடம் விஜயத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

ஏலூரிலிருந்து கோதாவரியைக் கடக்க சாலை வழி இல்லாததால் விசைப்படகு (லாஞ்சு) மூலமாக அமலாபுரத்திற்கு இரு ஆசார்யர்களும் ப்ரயாணம் செய்தார்கள். அதற்காகப் பொதுப் பணித்துறையினர் விசைப்படகு ஒன்று ஏற்பாடு செய்திருந்தார்கள். குண்டகொனலு ஊரிலிருந்து அந்தப் படகு சுமார் 25 சிப்பந்திகளுடன் 6-6-67-ஆம் தேதி மாலை ஐந்து மணிக்குப் புறப்பட்டது. முன் எச்சரிக்கையுடன் ஏலூரு எஞ்சினியர் வரதாசாரியரும் அந்தப் படகில் வந்தார். அமலாபுரத்துக்கு அங்கிருந்து சுமார் 120 கிலோ மீட்டர் செல்ல வேண்டும். படகின் வேகம் மணிக்கு சுமார் 12 கிலோ மீட்டர். நீர் மட்டம் குறைந்து இருந்ததால் படகு வேகமாகச் செல்ல முடியவில்லை. இரு ஆசார்யர்களும் அமலாபுரத்திற்கு மறுநாள் (7-6-67) பிற்பகலில் வந்து சேர்ந்தார்கள். அந்த ஊர்க் கல்லூரியில் முகாம் செய்தார்கள்.

அமலாபுரம் தாலுக்கா முழுவதும் கோதாவரியின் டெல்டா ப்ரதேசம். கால்வாய் மூலம் நிரந்தரமாகத் தண்ணீர் விவசாயத்திற்குக் கிடைக்கிறது. நெல்லும், தென்னையும், வாழையும் மற்றப் பழ வகைகளும் ஏராளமாக அங்கு சாகுபடியாகின்றன. கோனசீமை என்றும் அந்தப் பிராந்தியத்திற்கு மற்ெருரு பெயர் உண்டு. அங்குள்ள பிராம்மணர்கள் அநேகமாக வேதம் பயின்றவர்கள். அவர்களில் பெரும்பாலோர் தஞ்சை ஜில்லாவிலிருந்து கோதாவரி தீரத்துக்குக் குடிபோனவர்கள். அதன் காரணமாக அவர்கள் 'கோனஸீம த்ராவிடி' அதாவது அந்த நாட்டுத் தமிழர்கள் என்று அழைக்கப்படுகிருர்கள். 17-6-67-ஆம் தேதி முடிய அமலாபுரத்தில் முகாம்.

இரு ஆசார்யர்களும் 17-6-67-ஆம் தேதி இரவு அமலாபுரத்திலிருந்து புறப்பட்டு முக்கமாலா, வக்கலங்கா, நரேந்திரபுரம், முக்தேச்வரம், திராக்ஷாராமம், பீமேச்வரம் இவ்விடங்களில் முகாம் செய்து காக்கினடாவுக்கு 25-ஆம் தேதி விஜயமானுர்கள்.

**காக்கிநாடா விஜயம்**

காக்கிநாடா கிழக்குக் கோதாவரி ஜில்லாவின் வியாபார ஸ்தலம்; கப்பல் துறைமுகம் கொண்டது. பொது ஜனங்களின் பிரார்த்தனையின் பேரில் திராக்ஷாராமத்திலிருந்து 25-ஆம் தேதி காலை விஜயம் செய்த இரு பெரியவர்களுக்கும் ஆயிரக்கணக்கான மக்கள் அந்த ஊர் எல்லையில் கூடி, கோலாகலமான வரவேற்பை அளித்தார்கள். ஃப்ரேஸர் பேட்டையிலுள்ள துவ்வூரி கிருஷ்ண மூர்த்தியின் பெரிய பங்களாவில் ஸ்ரீமடம் தங்கியது. ஓய்வு பெற்ற வருமானவரி கமிஷனர் துர்கா ராமச்சந்திர ராவ், ஜடா வல்லப புருஷோத்தமன், ஸ்ரீபாத நரஸிம்மம் ஆகிய பிரமுகர்கள் பூர்ண கும்பம் அளித்து ஸ்ரீ ஆசார்யர்களை வரவேற்றார்கள். தெலுங்கிலும் சம்ஸ்கிருதத்திலும் வரவேற்பு இதழ்கள் வாசித்து அளிக்கப்பட்டன. 1-7-67-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களுக்கும் மிகப் பெரிய பட்டிணப்ரவேசம் நடத்தினார்கள். 4-7-67-ஆம் தேதி மாலை ரோடரி சங்கத்தார் இரு ஆசார்யர்களுக்கும் ஓர் வரவேற்பு அளித்தார்கள். அன்று புனாவைச் சார்ந்த வைதிக சம்சோதன மண்டலி வெளியிட்ட தர்ம சாஸ்திர நூல்களை மண்டலியின் தலைவர் ஸெண்டேகே என்பவர் ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் சமர்ப்பணம் செய்தார். மண்டலியின் அபிவிருத்திக்காக ஸ்ரீ ஆசார்யர்கள் ரூ. 1001/- நன்கொடை அளித்து அனுக்ரஹித்தார்கள்.

**கோனஸீமா பகுதியில் யாத்திரை**

காகினாடாவிலிருந்து புறப்பட்டு 1967, ஜுலையில் பித்தாபுரம் சாமல்கோட்டை, திராக்ஷாராமம், ராமசந்திரபுரம், செல்லூர், கண்டி, தஞ்சபூடி, ராஜமகேந்திரபுரம் டவுன், தவளேச்வரம் ஆகிய இடங்களில் முகாம் செய்தார்கள். ராஜமஹேந்திர புரத்தில் தவளேச்வரம் ரோடில் உள்ள ராவிநூதுல ஆர். ராம ராவ் இல்லத்திற்கு ஜுலை 20-ஆம் தேதி விஜயம் செய்தார்கள். கோதாவரி நதிக்கரையில் அமைந்துள்ள இந்த இடத்தில் ஸ்ரீமடம் தங்குவதற்கு எல்லா வசதிகளையும் ராமராவ் செய்து கொடுத்தார்.

**ராஜமஹேந்திரபுரத்தில் வியாஸ பூஜையும், சாதுர்மாஸமும்**

இந்த வருஷ வியாஸ பூஜை கோதாவரி தீரத்தில் அதிலும் புஷ்கர வருஷத்தில் நடை பெறுவது ஓர் விசேஷ அம்சமாகும். இரண்டு ஆசார்யர்களும் மற்றும் பத்து ஸந்யாஸிகளும் 21-7-67 காலை கோதாவரியில் வபன ஸ்னானம் செய்துகொண்டு பக்தகோடி

களுடன் ஜாகைக்கு வந்தபோது கண்கொள்ளாக் காக்ஷியாக அமைந்திருந்தது. ஆந்திரத்தின் பல பாகங்களிலிருந்தும், சென்னையிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் வியாஸ பூஜையையும் ஆசார்யர்களையும் தரிசிக்க வந்திருந்தனர். வழக்கம்போல் பூஜை, பண்டிதர்களின் வாக்யார்த்தம், சாதுர்மாஸ சங்கல்பம் ஆகியவை நடந்தன. பத்து சந்யாஸிகளில் எட்டு பேர்களை அன்றே ஸ்ரீசைலத்தில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள சங்கர மடத்தில் சாதுர்மாஸ சங்கல்பம் எடுத்துக் கொள்ள ஸ்ரீ ஆசார்யர்கள் அனுப்பி வைத்தார்கள்.

**ஆறுவது வியாஸ பாரத ஆகம சில்ப ஸதஸ்**

இந்த ஸதஸ் சென்ற வருஷம் காளஹஸ்தியில் நடைபெற்றது. இந்த ஆண்டு ஸதஸில் ஆந்திர சர்க்கார் மிகவும் அக்கறை கொண்டு தேவஸ்தான உபரி நிதியிலிருந்து ரூ. 20,000 ஸதஸ் செலவுகளுக்கு அனுமதித்தார்கள். முதல் நாள் 2-9-67-ஆம் தேதி காலை ராஜமகேந்திரபுரம் ஸ்ரீ விச்வேச்வரர் ஆலயத்திலிருந்து ஊர்வலம் கிளம்பியது. இரண்டு யானைகளின் மீது ஆகம ஏடுகள் பவனிவர பஜனை கோஷ்டிகளுடன் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் தொடர்ந்து வந்தார்கள். ஸதஸின் வரவேற்புக் கமிட்டித் தலைவர் ராமபத்ர ராஜுவும், காரியதரிசி டாக்டர் ஏ. பி. நாகேச்வரராவும் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பூர்ணகும்பத்துடன் வரவேற்றார்கள். வழி நெடுகிலும் எல்லா வீடுகளிலும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்குப் பூர்ண கும்பம் அளித்து வரவேற்றார்கள். பெண்கள் ஆரத்தி எடுத்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் ஸதஸை ஆரம்பித்து வைத்து தெலுங்கில் அருளியதாவது: '' ஆலய வழிபாடு நம் வாழ்க்கையில் நிரந்தர அம்சமாக விளங்குகிறது. ஆலயங்களில் சேவை புரிய ஆகமங்களில் பயிற்சி பெற்றவர் தேவைப் படுகிறார்கள். கோபுர தரிசனங்களினாலும் திருவிழாக்களில் கலந்து கொள்வதினாலும் நம் மனம் கடவுளிடம் இழுத்துச் செல்லக் காரணமாகிறது. சிற்பங்கள், கோவில்கள், சிலைகள் இவையெல்லாம் சாஸ்திர அடிப்படையில் அமைந்துள்ளன. அன்றாட வழிபாடும் ஆகம சாஸ்திர முறைப்படி நடந்து வருகிறது. மத அடிப்படையிலான கதைகள் கலாசாரக் காக்ஷிகள் மனத்துக்குக் களிப்பூட்டுவதுடன் மனத்தை, புனிதப்படுத்தவும் செய்கிறது. ஆகவே இம்மாதிரி நிகழ்ச்சிகளுக்கு மக்கள் ஆதரவு தரவேண்டியது. மிகவும் அவசியம், '' எனக் கூறினார்கள்.

ஆந்திர நாட்டுச் சிற்பிகளும், ஆகம பண்டிதர்களும் முன் ஆண்டைவிட அதிக அளவில் ஸதஸ்ஸில் கலந்து கொண்டனர்.

பஞ்சாங்கம் கணிக்கும் சோதிடர்களுள் கல்கத்தாவிலிருந்து வந்த என்.ஸி. லஹரியும், பம்பாயிலிருந்து வந்திருந்த அம்ருதலால் ஷாவும், ராஜமகேந்திரபுரம் சின்ன கிருஷ்ணமூர்த்தியும் முக்கியமானவர்கள். இவர்கள் ஜோதிஷ சாஸ்திரங்களில் நல்ல நிபுணர்கள். கலா நிகழ்ச்சிகளில் மஹாராஷ்டிர தேசத்தின் பவாடா, வங்க நாட்டின் கதகதா, ஒரிஸாவின் தாஸ்கதா, ஆந்திரதேச கூசிபூடி ஆகியவை விசேஷ அம்சங்கள். அஸ்ஸாம் நாட்டுச் சாக்த பண்டிதர்களும், தேவி பூஜகர்களும் வந்திருந்தனர். இந்த மகா நாடு நடைபெற அப்பகுதி மக்கள் நல்ல ஒத்துழைப்பையும் ஆதரவையும் தந்தனர். அநேகமாக எல்லாச் சர்ச்சைகளிலும் வித்வத் ஸதஸ்களிலும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் கலந்து கொண்டு மிகத் திறமையுடன் நடத்தி வைத்தார்கள். 9-9-67-ஆம் தேதி வரை ஸதஸ் ஐந்து நாட்கள் சிறப்பாக நடந்தது. எல்லா நாட்களிலும் ஆயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர்.

### விச்வ ஹிந்து பரிஷத்

விச்வ ஹிந்து பரிஷத்தின் ஆந்திர தேச முதலாவது மகா நாடு ராஜமஹேந்திரபுரத்தில் 17-9-1967-இல் நடைபெற்றது. பரிஷத்தின் பொதுக்காரியதரிசி எஸ். எஸ். ஆப்தே பிரார்த்தனை கீதம் வழங்கினர். மகாநாட்டின் ஆரம்ப உரையில் ஸ்ரீ ஆசார்யர்கள் ஸிலோன், பர்மா, மலேயா, சிங்கப்பூர், தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் வசிக்கும் ஹிந்துக்களுக்குப் பல பிரச்னைகளும், கஷ்டங்களும் இருந்து வருகின்றன. அவைகளைத் தீர்க்க விச்வ ஹிந்து பரிஷத் முயற்சி எடுக்க வேண்டும் என்றும், ஒவ்வொரு கிராமத்திலும் பரிஷத்தின் கிளைகள் அமைக்கப்பட வேண்டும் என்றும் கூறினர்கள்.

ராஜமஹேந்திரபுரத்தில் அகில இந்திய சம்ஸ்கிருத சம்மேளனம் நடை பெற்றது. இந்த சம்மேளனத்தில் இரண்டாவது நாள் ஸ்ரீ ஆசார்யர்கள் கலந்து கொண்டார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் சம்ஸ்கிருத ப்ரசார சமிதியின் கிளைகளை அமைத்து குழந்தைகளுக்குச் சம்ஸ்கிருதம் கற்றுத்தர வேண்டுமென்றும், சிறிது பயிற்சி பெற்றவுடன் அவர்களுக்கு அந்தப் பாஷையில் பேசிப் பழகவும் சிறு வயதிலிருந்தே கடிதங்களைச் சம்ஸ்கிருதத்தில் எழுதவும் கற்றுத்தர வேண்டுமென்றும் கூறினர்கள். இந்தச் சம்மேளனத்தில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதீ ஸ்வாமிகள் தலைமை தாங்கிப் பேசுகையில், “சம்ஸ்கிருதம் என்

பதற்கு பூர்ணத்வம் அடைந்தது என்பது பொருள். அந்தப் பாஷையின் மூலம் மனத்தைப் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும்,'' என்று கூறினார்கள்.

இரு ஆசார்யர்களும் ராஷ்ட்ரீய ஸ்வயம் சேவா சங்கத்திற்கும் விஜயம் செய்தார்கள். 18-9-67 விச்வ ரூப யாத்திரை யன்று இரு ஆசார்யர்களும் எல்லையிலுள்ள பொம்மூர் கிராமத்துக்குச் சென்று, பகவத் கீதை விச்வரூப அத்யாய பாராயணம் செய்து வந்தார்கள். 20-ஆம் தேதி காலை கௌதமீ வித்யா பீடத்திற்கு விஜயமானார்கள். அங்கு கோதாவரியில் இரு பெரியவர்களும் ஸ்னானம் செய்து அனுஷ்டானத்தை முடித்துக் கொண்டு கோடிலிங்க தர்சனம் செய்து கொண்டார்கள். செப்டம்பர் 20, 21 தேதிகளில் கௌதமீ பீடத்தில் பூஜை நடந்தது. 21-ஆம் தேதி அன்று மாலை $3\frac{1}{2}$ மணிக்கு கோதாவரியில் விசைப் படகு ஒன்றில் ஸ்ரீ பெரியவர்கள் மட்டும் சில சிப்பந்தி களுடன் பத்ராசலத்துக்குப் புறப்பட்டார்கள். மறுநாள் அதி காலையில் ஸ்ரீ புதுப்பெரியவர்கள் விசைப்படகு மூலம் பூஜையுடன் கோதாவரியைக் கடந்து எதிர்க் கரையில் உள்ள கொவ்வூருக்கு விஜயம் செய்தார்கள்.

### பத்ராசலத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள்

ராஜமகேந்திரபுரத்திலிருந்து 21-ஆம் தேதி புறப்பட்ட ஸ்ரீ ஆசார்யர்கள் மறுநாள் மத்தியான்னம் சுமார் 1-00 மணிக்குப் பத்ராசலம் போய்ச் சேர்ந்தார்கள். நடுவில் கன்னவரம் என்னும் ஊரில் சபரி நதி கோதாவரியில் சங்கமம் ஆகும் இடத்தில் புனித ஸ்னானம் செய்தார்கள். கரையோரமாக உள்ள ஊர்களின் மக்கள் ஆங்காங்கு கூடி ஸ்ரீ ஆசார்யர்கள் பயணமாகும் படகைக் கரை யோரம் செலுத்தும்படி கோரி, தரிசனம் செய்து கொண் டார்கள். எதிர்பாராமல் அவர்களுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் தர்சனம் கிடைத்ததில் அவர்கள் மிக்க சந்தோஷமடைந்தார்கள். ராஜ மஹேந்திரபுரத்திலிருந்து பத்ராசலத்தை அடைய கோதாவரி நதியில் சுமார் 170 கிலோ மீட்டர் பிரயாணம் செய்ய வேண்டும்.

பத்ராசலத்தில் தேவஸ்தான அதிகாரி ராமராவும், ஊர் மக்களும், யாத்திரிகர்களும் கோதாவரிக்கரையில் ஆயிரக்கணக் காகக் கூடி ஸ்வாமிகளை உத்ஸாகத்துடன் வரவேற்றார்கள். நதிக் கரையில் பூர்ண கும்பம் அளித்தார்கள். நாகி ரெட்டி சதனத் தில் ஸ்வாமிகள் தங்கினார்கள். அன்று மாலை ஸ்ரீ ஆசார்யர்கள் கோதாவரியில் ஸ்னானம் செய்து ஸ்ரீ ராமர் ஆலயத்துக்கு விஜயம் செய்தார்கள். ராமசந்திர மூர்த்திக்குத் தம் திருக்கரங்களால்

அர்ச்சனை செய்தார்கள். ஸ்ரீ அனந்தானந்தேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் ஸ்ரீ ராமர் ஸந்நிதியில் ராமதாஸர் இயற்றிய கீர்த்தனை கள் சிலவற்றை மன முருகப் பாடினார்கள். பின்னர் ஸ்ரீ ஆசார்யர்கள் திருப்பணி வேலைகளையும் கோபுர சிற்பங்களையும் பார்வையிட்டார்கள். அன்று இரவு ஆயிரக்கணக்கான பக்தர்களுக்குத் தர்சனம் அளித்தார்கள். தேவஸ்தான அதிகாரிகளின் வேண்டுகோளுக்கிணங்க 23-ஆம் தேதியும் பத்ரா சலத்தில் ஸ்ரீ ஆசார்யர்கள் தங்கினார்கள். அவர்கள் கோதாவரியில் நீராடிய இடத்துக்கு 'ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்னான கட்டம்' என பெயரிடப்பட்டுள்ளது. 23-ஆம் தேதி மாலை பத்ராசலத்திலிருந்து புறப்பட்டு விசைபடகு மூலம் மறுநாள் 24-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர் கள் கொவ்வூர் வந்து சேர்ந்தார்கள்.

**குடிவாடாவில் நவராத்ரி**

1967-வது வருஷத்திய சாரத நவராத்ரி பூஜை 4-10-1967-ஆம் தேதி முதல் ஒன்பது நாட்கள் கிருஷ்ணா ஜில்லா குடிவாடாவில் நடைபெற்றது. வழக்கம் போல் ஸ்ரீ வித்யா ஹோமம், ரிக்வேத ஹோமம், கன்னிகா பூஜை, ஸுவாஸினி பூஜை முதலியவை நடை பெற்றன. 11-ஆம் தேதி ஸரஸ்வதி பூஜையன்று விசேஷ பூஜைகள் நடைபெற்றன. டாக்டர் காஸா கிருஷ்ண மூர்த்தி முன்னின்று ஸ்ரீ மடத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார்.

ஸ்ரீ அனந்தானந்தேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளால் மிகுந்த பரிச்ரமத்துடன் தொகுக்கப்பட்ட 'பஜன ரத்னாகரம்' என்னும் பஜனை புஸ்தகத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் 17-ஆம் தேதி கொல்லூர் முகாமில் வெளியிட்டார்கள். சுமார் 800 பக்கங்களுக்கு மேல் அநேக பஜனை பாடல்களைக் கொண்ட அரிய பொக்கிஷம் இது. ஸ்ரீ ஆசார்யர்கள் புத்தகத்திலுள்ள சில பஜனை சுலோகங்களைக் சொல்லி ஓர் அரிய உபன்யாஸத்தை நடத்தினார்கள்.

இந்த பஜனை புத்தகத்தில் குரு கீர்த்தனங்கள், ஸ்ரீ ஜயதேவ ரின் கீத கோவிந்தம், ஸ்ரீ நாராயண தீர்த்தரின் கிருஷ்ண லீலா தரங்கிணி, பத்ராசல ராமதாஸர், புரந்தர தாஸர், ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திரர், ஸ்ரீ தியாக பிரம்மம், இவர்களின் பக்தி பாடல்கள் திவ்ய ப்ரபந்தம், திருவாசகம், மற்றும் பல தமிழ்ப் பாடல்கள் சேர்ந்து சுமார் 800 பாடல்கள், அடங்கியுள்ளன. சுகபிரம்மம் ராம ஸ்வாமி சாஸ்திரிகள், பகவன் நாம ப்ரபாவத்தைப் பற்றியும் ஸ்ரீ அனந்தானந்தேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் இந்த பஜனைபுத்தகத் தின் மூலம் செய்துள்ள பேருபகாரத்தைப் பற்றியும்

பேசினார். புத்தகத்தின் பிரதி ஒன்றை ஸ்ரீ அனந்தானந்த ஸ்வாமிகள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளிடம் சமர்ப்பணம் செய்தார். ஸ்ரீமதி லலிதாம்பாள் அம்மாள் (ஸ்ரீ அனந்தானந்த ஸ்வாமிகளின் பூர்வாச்ர பெண்) ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் ஸந்நிதியில் அன்று மனமுருக பஜனை செய்தார்.

**மசூலிப்பட்டணத்திற்கு விஜயம்**

இரு ஆசார்யர்களும் முதன் முறையாகக் கொடுகுபேட்டை ஸ்ரீ சங்கரமடத்தில் 14-10-67 முதல் பதினொரு நாட்கள் முகாம் செய்தார்கள். இந்தச் சங்கர மடம் காயத்ரீ பீடத்து ஸ்வாமிகளால் நிறுவப்பட்டது. இதில் ஓர் யஜுர்வேத பாடசாலை நடந்து வருகிறது. காயத்ரீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரம குமாரர் புராணம் ராமகிருஷ்ண சாஸ்திரிகளின் பிரார்த்தனையின் பேரில், இந்தச் சங்கர மடத்தில் தங்கி பூஜைகள் நடத்தினார்கள். பின்னர் 1968 ஜனவரி 13 முதல் 21முடிய ஆரிய வைச்ய கல்யாண மண்டபத்தில் தங்கினார்கள். ஆரிய வைச்ய சங்கத்தார் விசேஷ சிரத்தையுடன் ஸ்ரீமடத்திற்கு வேண்டிய எல்லாக் கைங்கரியங்களையும் செய்து கொடுத்தார்கள். "காமகோடி வாணி" என்னும் ஆங்கில மாதாந்தரப் பத்திரிகை அப்பொழுது ஆரம்பிக்கப்பட்டது. ஆர்.டி. எல். நரசிம்ம மூர்த்தி இதன் முதல் பிரசுரகர்த்தாவாக இருந்து இரண்டு வருஷங்களுக்கு மேல் நடத்தி வந்தார்.

**பிங்கள வருஷ (1968) மகாமகம்**

ஜோதிட சாஸ்திரப்படி குரு சிம்மராசிக்கு வருவது ஓர் முக்கியமான புண்யகாலம். இது கும்ப மாதத்தில் (தமிழ் மாசம் மாசி) பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழ்கிறது. இந்தத் தினத்தை மஹாமகம் என்று கொண்டாடுகிறார்கள். அன்று கங்கையே கும்பகோணத்தில் உள்ள மகாமகக் குளத்தை வந்து அடைவதாகப் புராணங்கள் கூறுகின்றன. தமிழ்நாட்டில் காஞ்சிபுரத்திற்கு அடுத்தபடியாக அநேக சிவ விஷ்ணு ஆலயங்களைக் கொண்டது கும்பகோணம். நாடெங்கிலுமிருந்து லக்ஷக்கணக்கான மக்கள் மகாமகத்தன்று அங்கே வந்து மகாமகக் குளத்தில் புனித தீர்த்தத்தில் நீராடுவார்கள். லக்ஷக்கணக்கில் மக்கள் அந்தக் குளத்தில் நீராடுவதற்கு வசதியாக சில மாதங்களுக்கு முன்னரே முனிசிபாலிடியார் குளத்திலுள்ள தண்ணீரை இயந்திர சாதனத்துடன் இறைத்துச் சுத்தப்படுத்தி இடுப்பு அளவு மட்டுமே தண்ணீர் நிற்கும்படி ஏற்பாடு செய்வார்கள். மகாமகத்தை முன்னிட்டுக் கும்பகோணம் ஸ்ரீமடத்தில்

அதிருத்ர மகாயக்ஞும் நடத்தவேண்டுமென்று ஸ்ரீ ஆசார்யர்கள் ஆந்திரதேச முகாமிலிருந்து ஆக்ஞை செய்திருந்தார்கள். தவிர யாத்திரிகர் எல்லோருக்கும் அன்னதானம் நிறைய செய்ய வேண்டுமென்றும் விரும்பினார்கள். இதற்காக டாக்டர் எம்.கே. சுப்ரமண்ய அய்யர் தலைமையில் ஸ்ரீமடத்துக்கு மிகவும் வேண்டிய வர்களைக் கொண்ட ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. அதிருத் திரத்திற்கும் அன்னதானத்திற்கும் ஒரு லக்ஷ ரூபாய்க்கு மேல் செலவாகும் என்று மதிப்பிட்டார்கள். இந்தப் பெருந் தொகை தஞ்சை ஜில்லா பக்தர்கள் மூலம் சிரமமில்லாமல் சுலபமாக வசூலாகிவிட்டது. மிராசுதார்களும் மற்ற ஆஸ்திகப் பெருமக்களும் ஏராளமாக அன்னதானத்திற்கு அரிசியும் பணமும் அனுப்பிவைத் தார்கள். காமகோடி கோபாலய்யர், கோனேரிராஜபுரம் ஆர். ஸ்ரீநிவாச ஐயர், நெப்பத்தூர் பாலு அய்யர், அலவந்திபுரம் கிட்டு ஐயர், புளியஞ்சேரி கிருஷ்ணமூர்த்தி ஐயர், யூகோ பாங்க் டி. எஸ். குருமூர்த்தி ஐயர் மற்றும் பலர் இந்தக் கைங்கர்யத்தில் தீவிர பங்கு கொண்டார்கள். 121 ரித்விக்குகளுடன் 3-2-68-ஆம் தேதி அன்று ஸ்ரீ மடத்தில் அதிருத்ர மகாயக்ஞும் ஆரம்பமா யிற்று. ஒவ்வொரு நாளும் ஸ்ரீ ருத்ரமஹா மந்திரத்தை 11 தடவை ஜபித்து இவ்விதம் 11 நாளில் அதிருத்ர மஹாயக்ஞும் பூர்த்தி யடைந்தது. இந்த ஜப எண்ணிக்கையில் 10-இல் ஒரு பங்கு மந்திரங்களைக் கொண்டு ஹோமமும் நடைபெற்றது. மகாமக தினமாகிய 14-2-1968 காலை 11 மணிக்கு இவ்விதம் ஜபித்த 121 கலச தீர்த்தங்களை அந்தந்த ரித்விக்குகள் மகாமகக் குளத்துக்கு வேதபாராயணத்துடன் எடுத்துச் சென்று குளத்தில் சேர்ப்பித்தனர். அங்கு அவபிருத ஸ்னானம் நடந்தது. ஒரு வாரத்திற்கு முன்பிருந்தே ஸ்ரீ மடம், ஸ்ரீ சாரங்க பாணி ஆலயம், ஸ்ரீ ராமஸ்வாமி ஆலயம் ஆகிய இடங்களில் மடத்தின் சார்பில் மிகப் பெரிய அளவில் அன்னதானம் தொடர்ந்து நடைபெற்றது. தவிர உணவுப் பொட்டணங்களும் விநியோகிக்கப்பட்டன. மகாமகத்தன்று மகாமகக் குளத்தில் நீராடிய பக்தர்களின் எண்ணிக்கை சுமார் 10 லக்ஷம் என்று கணக்கிட்டார்கள். முன் மகாமகத்தைக் காட்டிலும் இந்த மகா மகத்தில் அரசாங்கம் மக்களது வசதியைக் கருதி சாலைப் போக்கு வரத்து, தங்குமிடங்கள், சுகாதாரம், ஜனங்களைத் துரிதமாகத் திருப்பியனுப்ப பஸ் வசதி, பால் சப்ளை, போலீஸ் பராமரிப்பு இவைகளைச் சீரிய முறையில் ஏற்பாடு செய்திருந்தது மிகவும் போற்றத்தக்கது.

### ஆசார்யர்களுக்கு மகாமக தீர்த்தம்

மகாமகத்தன்று இரு ஆசார்யர்களும் ஆந்திர ப்ரதேசம் மேற்கு கோதாவரி ஜில்லா ஏலூரில் முகாம் செய்திருந்தார்கள். அடுத்த மாதம் பத்ராசல க்ஷேத்திரத்தில் நடைபெறவிருக்கும் கும்பாபிஷேகத்திற்காக இரு ஆசார்யர்களும் அங்கு விஜயம் செய்ய வேண்டியிருந்ததால் இந்த வருஷ மகாமகத்துக்கும் அவர்கள் நேரில் கும்பகோணம் விஜயம் செய்ய முடியவில்லை. ஆனாலும் அன்றய தினமே அவர்கள் மகாமக தீர்த்த ஸ்நானம் செய்வதற்கு சிஷ்யர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். இரண்டு குடங்களில் மகாமக தீர்த்தத்தையும், மற்றும் இரண்டு குடங்களில் காவேரி புனித தீர்த்தத்தையும் அதிகாலையில் எடுத்து அவைகளைக் காரில் திருச்சிக்கும், அங்கிருந்து ஹிந்து பத்திரிகையின் விமானம் மூலமாக விஜயவாடாவுக்கு அடுத்த கன்னவரம் விமான நிலையத்துக்கும், அங்கிருந்து சுமார் 60 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள ஏலூருக்கும் கார் மூலம் எடுத்துச்சென்று பகல் சுமார் 12 மணிக்குள் ஆசார்யர்களிடம் சமர்ப்பிக்கப்பட்டன. கோதாவரி-கிருஷ்ணா இவைகளின் கிளைக் கால்வாய்கள் ஒன்று சேரும் இடத்தில் சரியாக பகல் 12-30 மணிக்கு இந்தத் தீர்த்தங்களால் இரு ஆசார்யர்களுக்கும் அபிஷேகம் நடந்தது. மகாமக தீர்த்தம் அன்று ஏலூருக்கு வருவதை முன்பே அறிந்திருந்த ஏலூரு மக்கள், ஆயிரக்கணக்கில் ஸ்ரீ ஆசார்யர்களுடன் கால்வாய்களின் சங்கமத்தில் புனித ஸ்நானம் செய்தார்கள். இந்த ஏற்பாட்டிற்கு முக்கிய காரணமாக இருந்தவர் சென்னை அடையாறு க்ரீன்வேஸ் ரோடிலுள்ள ஆடிட்டர் சாவலி சுப்ரமண்ய சாஸ்திரி (ஸி. எஸ். சாஸ்திரி) யும், மற்ற சென்னை பக்தர்களும் ஆவர்.

### காஞ்சியில் ஸஹஸ்ர சண்டீ ஹோமம்

மகாமகத்தை முன்னிட்டுக் கும்பகோணத்தில் நடைபெற்ற அதிருத்ர ஹோமம் ஸ்ரீ பரமசிவனைக்குறித்து செய்யப்பட்டதாகும். அதே போல் ஸ்ரீ ஜகன் மாதாவான அம்பிகையின் கருணையைப் பெறுவதற்குச் சண்டீஹோமம் செய்வது விசேஷம். தேவி மாஹாத்மியம் என்னும் ஸப்தசதீ மஹாமந்திரத்தை 10 தடவை பாராயணம் செய்து, ஒருதடவை ஹோமம் செய்வது லகு சண்டீ ஹோமம். அதேபோல் அந்த மந்திரத்தை 100 தடவை ஜபித்து 10 தடவை ஹோமம் செய்வது, சதசண்டீ எனப்படும். 1000 தடவை பாராயணம் செய்வது நூறு தடவை ஹோமம்

செய்வது ஸஹஸ்ரசண்டீ ஆகும். இதன்படி 100 ரித்விக்குகள் சேர்ந்து 10 நாட்கள் மிக்க ஆசார நியமத்துடன் ஜபிக்கவேண்டும். அவர்கள் யாவரும் மந்திரோபதேசம் பெற்றவர்களாகவும் இருக்க வேண்டும்.

இந்த மகத்தான ஹோமத்தைக் காஞ்சி க்ஷேத்திரத்தில் நடத்தும்படி அப்பொழுது ஆந்திரதேசத்தில் யாத்திரை செய்து கொண்டிருந்த ஸ்ரீ ஆசார்யர்கள் கும்பகோணத்தில் அதிருத்ர ஹோமத்தை நிர்வாகம் செய்த அதே கமிட்டியாரிடம் உத்திரவு இட்டார்கள். அதிருத்ரத்திற்கும் அன்னதானத்திற்கும் வசூலான திரவியத்தில் செலவானது போக மீதி இருந்த திரவியத்தைக்கொண்டு ஹோமத்தை சகடபுரம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீ ஆசார்யர்களின் சங்கல்பத்துக் கிணங்க, நடத்தி வைக்க மிக்க மகிழ்ச்சியுடன் இசைந்தார். இந்த ஹோமம் நடத்துவதில் நல்ல அனுபவம் வாய்ந்த கர்நாடக ராஜ்யத்தைச் சார்ந்த சாலக்கிராமம் ஸ்ரீ பத்மநாப ஸோமயாஜி என்பவர் பிரதான ஆசார்யாராக இருந்தார். அவருடன் சில கர்னாடக தேச பண்டிதர்களும் வந்திருந்தார்கள். காஞ்சி ஸ்ரீமடத்தில் சுமார் 2½மீட்டர் ஆழத்தில் ஒரு பெருங்குண்டம் அமைத்து அதில் அன்றாடம் ஹோமம் நடந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு மூட்டை நல்ல அரிசியைக் கொண்டு நல்ல பக்குவத்துடன் தயாரிக்கப்பட்ட சர்க்கரைப் பொங்கல் ஹோமத்தில் சேர்க்கப்பட்டது. நாள் ஒன்றுக்கு ஒரு டன் எடைக்குமேல் விறகு குண்ட அக்னிக்காக உபயோகிக்கப்பட்டது, ஒவ்வொருநாளும் ஒன்பது கன்னிகைகளுக்கும், ஒன்பது ஸுவாஸினிகளுக்கும் வஸ்திரங்களும் மற்ற மங்கள திரவியங்களும் அளிக்கப்பட்டு அவர்களுக்குப் பூஜை நடந்தது. முடிவு நாளன்று வஸோர்தாரா ஹோமமும் பூர்ணாஹுதியும் நடைபெற்றன. ஸ்ரீமடம் ஆஸ்தான பண்டிதர்கள் அப்பாக்குட்டி சாஸ்திரிகளும், மேலமங்கலம் ராமஸ்வாமி சர்மாவும் இதில் முக்கிய பங்கேற்று நடத்திவைத்தார்கள். எல்லா நாட்களிலும் வேதபாராயணமும், விசேஷமாக அன்னதானமும் நடைபெற்றன. இந்த மஹாயாகத்தில் கலந்து கொண்ட யாவருக்கும் நிறைய சம்பாவனை செய்யப்பட்டது. ஹோமம் நடந்த எல்லா நாட்களிலும் ஆயிரக் கணக்கான மக்கள் தர்சித்தனர். ஹோமம் பூர்த்தியானதும், ஹோம ப்ரஸாதத்தை ஸ்ரீ ஆசார்யர்கள் முகாம் செய்திருந்த இடத்திற்கு எடுத்துச்சென்று அவர்களுக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. ஸ்ரீ ஆசார்யர்கள் சண்டி ஹோமம் நல்ல முறையில் நடந்ததை விவரமாகக் கேட்டுச் சந்தோஷித்தார்கள்.

நடைபெற்றன. முதல் மந்திரி கே. பிரம்மானந்த ரெட்டி மனைவியாருடன் இந்தப் பிரதிஷ்டைக்கு வந்து தர்சனம் செய்து கொண்டார்.

சங்கர மடத்துக்கு சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் ஸ்ரீநிவாஸ நகரில் பக்தர்களின் பெரு முயற்சியினால் ஸ்ரீ வேங்கடேச்வர ஆலயம் கட்டப்பட்டுள்ளது. விக்ரஹமும் மிகவும் அழகாக அமைந்துள்ளது. இதற்கும் ஸ்ரீ ஆசார்யர்களே முன்பு 8-5-1968-இல் சங்கு ஸ்தாபனம் செய்தார்கள். இந்த ஆலயத்தின் பிரதிஷ்டையும் 6-9-1968-ஆம் தேதி வெள்ளிக் கிழமை காலை 6-00 மணிக்கு இரு ஆசார்யர்களின் முன்னிலையில் நடைபெற்றது.

**சிகந்தராபாத்தில் சாதுர்மாஸ பூர்த்தி**

6-9-1968-அன்று சாதுர்மாஸ சங்கல்பம் பூர்த்தி. அன்று விச்வரூப யாத்திரையாக இரு ஆசார்யர்களும் மாலை 4 மணிக்கு, பாக்ய நகர் எல்லையைக் கடந்து யூனிவர்ஸிடி மார்க்கம் 2 கிலோ மீட்டர் நல்ல மழையில் பாதசாரியாகச் சென்று பகவத் கீதையில் விச்வரூப அத்யாயம் பாராயணம் செய்த பிறகு இரவில் பத்மராவ் நகர் முகாமுக்குத் திரும்பினார்கள். பக்தர்கள் நூற்றுக்கணக்காக உடன் சென்று வந்தார்கள். மறுநாள் இரவு அங்கிருந்து புறப்பட்டார்கள். மலக்பேட், மால்காபூர், சித்தியால், சூர்யாபேட், ஜக்கய்ய பேட் முக்த்யாலா ஆகிய ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள். முக்த்யாலாவில் தங்கிய அன்று இரு ஆசார்யர்களும் வேதாத்ரிக்குச் சென்று பிரஸித்தி பெற்ற நரஸிம்ம ஸ்வாமியைத் தரிசித்து வந்தார்கள். நாராயண தீர்த்தர் இந்த நரஸிம்மர் மீது ஒரு தரங்கம் பாடியிருக்கிறார். அந்தத் தரங்கத்தைக் கல்லில் செதுக்கி அந்த ஆலயத்தில் வைக்கும்படி, கூட வந்திருந்த முக்த்யாலா ராஜாவிடம் ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள். அங்கிருந்து 21ஆம் தேதி தனகுண்டா வந்தடைந்தார்கள். அன்று இரவு ஸ்ரீ ஆசார்யர்கள் மட்டும் காமகோடி நகர் மல்லாதி குடும்ப ராவ் ஜாகையில் தங்கினார்கள். மறுநாள் 22-ஆம் தேதி மஹாளய அமாவாஸை. கேதுக்ரஸ்த சூர்ய கிரஹணம்; இரு பெரியவர்களும் கிருஷ்ணா நதியில் கிரஹண ஸ்னானம் செய்தார்கள். வழக்கம் போல் தானங்கள் கொடுக்கப்பட்டன.

**விஜயவாடாவில் ஆசார்யர்கள்**

ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கும் கிருஷ்ணா (ப்ரகாசம் அணை) பாலத்துக்கு அருகில் 22-9-68-

இது. இங்கு பெரிய நிலக்கரிச் சுரங்கம் ஒன்று இருக்கிறது. சுரங்க அதிகாரிகளும் பேரியம் கெமிகல்ஸ் மானேஜிங் டைரெக்டர் 'பால சுப்ரமண்யமும் ஆசார்யர்களுக்குப் பூர்ண கும்பம் அளித்து வர வேற்றார்கள். ஸ்வாமிகள் அவ்வூர் ஆலயத்தில் முகாம் செய்தார் கள். அங்கு 19-ஆம் தேதி முதல் மூன்று நாட்களுக்கு ஸ்ரீ சூக்த ஹோமம் நடைபெற்றது. 23-ஆம் தேதி மடாதிபதிகளின் கூட்டம் நடைபெற்றது. இதற்கு முன் நடைபெற்ற கூட்டத்தில் செய்த தீர்மானங்களை அமலுக்குக் கொண்டு வரும் சம்பந்தமாய் அதில் ஆலோசனைகள் நடந்தன. ஓரிரு மடாதிபதிகளைத் தவிர வந்தவர் களில் பெரும்பாலோர் மடங்களின் பிரதிநிதிகள். ஸ்வாமிகள் 24, 25-ஆம் தேதிகளில் ஸ்ரீ புரத்தில் தங்கினார்கள். 24-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ சோமேச்வர ஸ்வாமி ஆலயத்தை தர்சனம் செய்து கொண்டு அங்கிருந்து 16 கிலோ மீட்டர் தூரமுள்ள காகர்லா என்னும் ஊருக்குச் சென்று வந்தார்கள். திருவையாறு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பூர்விகர்கள் அந்த ஊரைச் சார்ந்தவர்கள். 25-ஆம் தேதி ஸ்ரீ புரம் ஸுஜாத நகரில் பூஜை.

1968 மார்ச், 24-ஆம் தேதி கொத்தகூடத்தில் திருப்பதி தேவஸ்தானம் ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் ஹிந்து தர்ம ப்ரதிஷ்டானம் என்ற பெயரில் அகில இந்திய ஸ்தாபனம் ஒன்று தொடங்குவதைப் பற்றி ஆலோசிக்கப்பட்டது. இந்தக் கூட்டத் தில் மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான சம்பந்த ஸ்வாமிகள், ப்ரபாகர உமா மகேச்வர பண்டிதர், டாக்டர் டி. வி. எஸ். சலபதி ராவ், எம். எல். ஏ., திருப்பதி தேவஸ்தானம் நிர்வாக அதிகாரி கே. உமாபதி, ஜடாவல்லப புருஷோத்தமம், ஸ்ரீ நாராயண ஜீயர் ஸ்வாமிகள் முதலானோர் கலந்து கொண்டனர்.

**கம்மம் நகரில் வஸந்த நவராத்ரி**

1968 மார்ச் 25-ஆம் தேதி இரவு இரு ஆசார்யர்களும் ஸ்ரீபுரம் ஸுஜாத நகரிலிருந்து கிளம்பி காரலபட்டு, வைரா ஆகிய இடங் களில் தங்கி 27-ஆம் தேதி இரவு கம்மத்திற்கு விஜயமானார்கள். கம்மம் ஆந்திராவில் ஓர் ஜில்லா தலைநகர். தெலுங்கானா ப்ரதேசம்; பழைய நைஜாம் ராஜ்யத்தைச் சார்ந்தது. 28-ஆம் தேதி ஸ்ரீ பரமேஷ்டி குருஸ்வாமிகள் ஆராதனை நடைபெற்றது. அடுத்த நாள் கீலக வருஷம் சாந்திரமான யுகாதி வருஷப் பிறப்பு. அன்று முதல் வஸந்த நவராத்ரி பூஜை 9 நாட்கள் அங்கு நடைபெற்றது. சர்க்கார் அதிகாரிகள் ஸ்ரீ மடத்துக்குத் தேவையான எல்லா வசதி களையும் செய்து தந்தார்கள். ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்

கான பக்தர்கள் வெயிலையும் பாராட்டாமல் வந்து பூஜையைத் தரிசித்துத் தீர்த்த ப்ரஸாதம் பெற்றுச் சென்றார்கள். யுகாதி அன்று பஞ்சாங்க படனம் நடைபெற்றது. ஏப்ரல் 7-ஆம் தேதி ஸ்ரீ ராம நவமியுடன் வஸந்த நவராத்திரி பூஜை, ஹோமங்கள் முடிவடைந்தது. 8-ஆம் தேதி இரவு புறப்பட்டு, தல்லபாடி என்னும் ஊருக்கு மறுநாள் விஜயம் செய்தார்கள். அங்கிருந்து நெலகொண்டபல்லி, சூர்யா பேட்டா, மால்காபுர் மார்க்கமாக 24-ஆம் தேதி இரவு 11 மணிக்கு ஹைதராபாத் வந்தடைந்தார்கள்.

**ஹைதராபாத் விஜயம்**

24-4-68-ஆம் தேதி இரவு தார்னகா-உப்பல் ரோடிலுள்ள (Penguin Textiles) பெங்குவின் நூல் ஆலைக்கு விஜயம் செய்த இரு ஆசார்யர்களையும் ஆலையின் மானேஜிங் டைரெக்டர் ஏ. ஆர். என். ராமசாமி செட்டியார் பூர்ண கும்பங்களுடனும் மேள வாத்யத்துடனும் வரவேற்றார். ஆலைக்குச் சொந்தமான ஜாகையில் 25-ஆம் தேதி ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமி பூஜை நடைபெற்றது. மறுநாள் 26-ஆம் தேதி காலை இரு ஆசார்யர்களும் மலக்பேட்டைக்கு விஜயம் செய்தார்கள்.

மலக்பேட்டை எல்லையில் ஆந்திர அரசின் பிரதான காரியதரிசி எம். டி. ராஜு, அறநிலைய கமிஷனர் கே. வாஸு தேவராவ், விஜிலன்ஸ் கமிஷனர் கே. என். அனந்தராமன், போலீஸ் டி. ஐ. ஜி., வி. ஸ்ரீநிவாஸன் மற்றும் ஏராளமான மக்கள் பூர்ண கும்பம் அளித்து இரு ஆசார்யர்களையும் வரவேற்றார்கள். அன்று ஸ்ரீ சந்திர மௌளீச்வர பூஜை ஆயிரக்கணக்கான மக்கள் தர்சிக்க ஆந்திரா காலனியில் நடைபெற்றது. மலக்பேட்டையில் ஸ்ரீ ஆசார்யர்கள் நடத்தும் பூஜையை வசதியாகத் தரிசிக்க சர்க்கார் ஊழியர்கள் இரண்டு மணி நேரம் தாமதமாக அலுவலகங்களுக்குச் செல்ல அரசு அனுமதி அளித்திருந்தது மிகவும் பாராட்டத்தக்கது.

**சிகந்தராபாத்தில் சங்கர ஜயந்தி**

1934-இல் சிகந்தராபாத் நகருக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் காசி யாத்திரை செல்லும் மார்க்கத்தில் விஜயம் செய்தார்கள். இப்போது ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளுடன் தரிசிக்கும் பாக்யம் மக்களுக்குக் கிடைத்தது. மலக்பேட்டையிலிருந்து இரு ஆசார்யர்களும் 27-4-68 காலை புறப்பட்டு கால் நடையாகவே சுமார் 12 கிலோ மீட்டர் வந்தார்கள். அவ்வளவு

தூரமும் மிகப் பெரிய ஊர்வலமாக விளங்கியது. சுமார் ஆயிரம் பேர்கள் ஆசார்யர்களுடன் பஜனை செய்து கொண்டே வந்தார்கள். மலக்பேட்டையிலிருந்து புறப்பட்டு இஸாமியா பஜார், சுல்தான் பஜார், காசிகூடா, நாராயணகூடா, சிக்கட்பள்ளி, மூஷிராபாத் வழியாக பகல் 10 மணிக்கு சிகந்தராபாத் பத்மராவ் நகரில் உள்ள கௌதா குடும்பத்தாரின் ஸ்வராஜ்யா அச்சுக் கூடக் கட்டிடத்துக்கு விஜயம் செய்தார்கள். சாலைகளின் இரு பக்கங்களிலும் மக்கள் ஏராளமாக நின்று தர்சனம் செய்து கொண்டார்கள். வழி நெடுகிலும் தோரணங்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஆங்காங்கு மக்கள் இரு ஆசார்யர்களுக்கும் பூர்ண கும்பம் கொடுத்து வரவேற்ருர்கள். பெண்கள் ஆரத்தி எடுத்தார்கள். ஸ்வராஜ்யா அச்சுக் கூடக் கட்டிடத்தின் முகப்பில் கே. எல். மனேகர், கௌதா பாடசாலை அத்யக்ஷர் வித்வான் டோங்க்ரே சாஸ்திரி முதலானேர் வேத கோஷத்துடன் இரு ஆசார்யர்களையும் பூர்ண கும்பம் அளித்து வரவேற்ருர்கள்.

28-4-68 முதல் ஐந்து நாட்களுக்கு ஸ்ரீ ஆதி சங்கரரின் ஜயந்தி விழா கர்ப்போத்ஸவமாகக் கொண்டாடப்பட்டது. ஒவ்வொரு நாளும் வேத பாராயணம், பாஷ்ய பாராயணம், உபன்யாஸங்கள், மாலையில் வஸந்தோத்ஸவம், ஊர்வலம் ஆகியவை நடைபெற்றன. இரண்டு நகரங்களிலிருந்தும் ஏராளமான மக்கள் பூஜையைத் தரிசிக்க வந்தார்கள். வேதபரீக்ஷையில் தேறிய மாணவர்களுக்கு விசேஷ சம்பாவனை செய்யப்பட்டது.

**சிகந்தராபாத்தில் நாள்தோறும் நடைபெற்ற நற்பணிகள்**

இரு ஆசார்யர்களும் சிகந்தராபாத் விஜயம் செய்ததிலிருந்து அவர்களுக்கு ஓய்வு என்பதே இல்லை. ஒவ்வொரு நாளும் புதிய ஆலயத்தின் கும்பாபிஷேகத்துக்கும் புது ஆலயம் கட்ட சங்கு, ஸ்தாபன விழாவுக்கும் ஒவ்வொரு பேட்டைக்கும் விஜயம் செய்து வந்தார்கள். கோவில் கட்ட அஸ்திவாரக்கல் நாட்டி முகூர்த்தம் செய்வதை ஆந்திர நாட்டில் "சங்கு ஸ்தாபனம்" எனக் கூறுகின்றனர். 6-5-68 அன்று நகரின் பல ஸ்தாபனங்களின் சார்பில் இரு ஆசார்யர்களுக்கும் பல வரவேற்புப் பத்திரங்கள் வாசித்து அளிக்கப்பட்டன. கூட்டத்துக்கு ஆந்திர அறநிலைய அமைச்சர் ஆர். ராமலிங்க ராஜு தலைமை தாங்கினர்.

ஸ்ரீநிவாஸ நகர் ஸ்ரீ வேங்கடேச்வரர் ஆலயத்துக்கு சங்கு ஸ்தாபனம், சரஸ்வதி நகரில் ராமாலயத்தின் சங்கு ஸ்தாபனம், ரயில்வே ஸ்டேஷன் விநாயகர் ஆலயத்துக்கு விஜயம், விஜயநகர் ஸ்ரீ வெங்கடேச ஆலய ப்ரதிஷ்டை, சீதாராம குண்டம் ஸ்ரீ ராமாலய

ப்ரதிஷ்டை, சிகந்தராபாத் சங்கர மடத்துக்கு சங்கு ஸ்தாபனம் ஆகியவற்றை முக்கிய நற்பணிகளாகக் குறிப்பிடலாம்.

12-5-68 அன்று பீகம்பெட் எல்.எஸ்.பி. நடராஜன் இல்லத்துக்கு விஜயம் செய்தார்கள். நித்ய பூஜையும் அங்கு நடைபற்றது. 12-ஆம் தேதி அன்று வபனபூர்ணமி ஸ்னனம் அவர் வீட்டில் உள்ள சிறிய தடாகத்தில் நடைபெற்றது.

1968 ஜூன் 6-ஆம் தேதி சரஸ்வதி நகரம் ராமாலய ப்ரதிஷ்டைக்கு இரு ஆசார்யர்களும் சென்று வந்தார்கள். அன்று நல்ல கொண்டாவில் உள்ள சிருங்கேரி சங்கர மடத்துக்கு விஜயம் செய்து ஸ்ரீ பகவத்பாத மூர்த்தத்தையும் ஸ்ரீ சாரதாம்பாளையும் தர்சனம் செய்து கொண்டார்கள். 10-ஆம் தேதி அசோக நகரில் ஸ்ரீ சங்கர மடத்தில் பகவத் பாதுகா பிரதிஷ்டை நடந்தது. 15-ஆம் தேதி இரவு பீகம்பெட் எல்.எஸ்.பி. நடராஜய்யர் பங்களாவுக்குள் ஸ்ரீ மடத்திற்காகக் கட்டப்பட்டுள்ள ஆச்ரமத்தைப் பார்த்து வந்தார்கள். அன்று காலை ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சிக்கட்பள்ளியில் கீதாச்ரமத்துக்கு சங்கு ஸ்தாபனம் செய்தார்கள். அன்று இரவு ஆனந்த நகர் விஜயம். 19-ஆம் தேதி பீபீ நகரில் தங்கி பூஜை முடித்துக் கொண்டு 20-ஆம் தேதி யாதகிரிகுடாவில் தங்கி அங்கு ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். பின்னர் ஜன்காம், கன்னவரம் ஆகிய ஊர்களில் தங்கி, 25-ஆம் தேதி இரவு 8 மணிக்கு ஹனுமன்கொண்டாவுக்கு விஜயம் செய்தார்கள்.

**வரங்கல் விஜயம்**

ஹனுமன்கொண்டாவும் வரங்கல் நகரமும் அடுத்தடுத்துள்ளன. வரங்கல் அந்த ஜில்லா தலைநகரம். 1968, ஜூன் மாதம் 26, 27 தேதிகளில் ஹனுமன்கொண்டா வாசிகளின் பிரார்த்தனைக்கு இணங்கி இரு ஆசார்யர்களும் அவ்வூரில் ஸ்ரீ சந்திரமௌளீச்வர பூஜையை நடத்தினார்கள். ஜூன் 28-ஆம் தேதி காலையில் இரு பெரியவர்களும் வரங்கல் நகருக்கு விஜயமானார்கள். அங்கு ஆடிட்டர் கொல்லமூடி சேதுமாதவ ராவ் (ஜி. எஸ். மாதவராவ்), ஆடிட்டர் நரஸிம்மமூர்த்தி, அட்வொகேட் நரஸிம்மராவ், காரமஞ்சி கொண்டல்ராவ் முதலானவர்கள் ஸ்ரீ ஆசார்யர்களை மிகவும் சிறப்பான வகையில் வரவேற்றார்கள். டி.ஐ. ஜி. நாராயண ஸ்வாமியின் தலைமையில் போலீஸ் இலாகாவும் தகுந்த பந்தோபஸ்துகளையும் மற்ற உதவிகளையும் செய்து கொடுத்தது.

28-ஆம் தேதி மாலை ஸ்ரீ ஆசார்யர்கள் ஹனுமன்கொண்டாவில் உள்ள ஸ்ரீ ருத்ரேச்வரர் ஆலயத்துக்கு விஜயம் செய்தார்கள்.

அந்த ஆலயத்தில் ஆயிரக்கால் மண்டபமும் ஸ்ரீ சக்ரா காரமாக பத்ரகாளி அம்மன் ஸந்நிதியும் அமைந்துள்ளன. எல்லா ஸந்நிதி களையும் ஸ்ரீ ஆசார்யர்கள் தர்சனம் செய்துகொண்டு அவற்றின் புராதனப் பெருமைகளைப்பற்றி அவர்களே தன்னுடன் வந்துள் ளோருக்கு கூறினார்கள். 29ஆம் தேதி காலை ஸ்ரீ புதுப் பெரியவர் களும் இந்த ஆயலங்களுக்கு விஜயம் செய்தார்கள். 30-ஆம் தேதி அங்கிருந்து10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள பனிக்கல் என்னும் இடத்தில் ஆஞ்சனேயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ராமேச்வர லிங்கத்தைத் தரிசித்து வந்தார்கள். ஆந்திர ப்ரதேசத்தில் உள்ள இவ்வளவு பழமையான கோவில்களும், சிற்பங்களும், சாஸனங் களும் வேறு எங்கும் காண முடியாது. தொல்பொருள் ஆராய்ச்சி யாளரும் உஸ்மானியா பல்கலைக் கழகத்தின் சரித்திர பேரா சிரியருமான டாக்டர் சுப்ரமண்யம் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு சாஸனங்களைப் பற்றி விளக்கம் கூறினார். இரு ஆசார்யர்களுக் கும் ஜுலை 1-ஆம் தேதி இரவில் பட்டண ப்ரவேச ஊர்வலம் மிகப் பெரிய அளவில் நடைபெற்றது. மக்கள் திரளாகக் கூடி ஸ்ரீ குருநாதர்களை தரிசித்துக் கொண்டார்கள்.

### ஹைதராபாத்துக்கு திரும்பியது

1968 ஜுலை 1–ஆம் தேதி இரவு வரங்கல்லிலிருந்து புறப் பட்டு 2-ஆம் தேதி மடிகொண்டாவில் தங்கி, 3-ஆம் தேதி ரகுநாத பள்ளியை அடைந்தார்கள். மடிகொண்டா என்னும் ஊர் ராமதாஸரின் தாய்மாமர்களாகிய அக்கண்ணு மாதண்ணு வின் ஊர் என்றும் ராமதாஸர் அங்குதான் பிறந்தார் என்றும் கூறப்படுகிறது. அங்கிருந்து ஆலேறு, புவனகிரி (Bhongir) சுவர்ணபாக்கம் மார்க்கமாக உப்பல் நூல் ஆலைக்கு விஜயமானார் கள். ஜுலை 7, 8-ஆம் தேதிகளில் ஹைதராபாத் விஜயநகர் காலனியில் தங்கி இரண்டு ஆசார்யர்களும் ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் ஆலயத்தின் த்வஜஸ்தம்பப் பிரதிஷ்டையைச் செய்தார்கள்.

### சிகந்தராபாத்தில் வியாஸ பூஜை—சாதுர்மாஸம்

இரு ஆசார்யர்களும் விஜயநகர் காலனியிலிருந்து 9-ஆம் தேதி காலை சிகந்தராபாத்–பத்மராவ் நகர் ஸ்வராஜ்யா அச்சகக் கட்டிடத்திற்கு விஜயம் செய்தார்கள். கௌதா குடும் பத்தினர் வேத கோஷத்துடன் பூர்ண கும்பம் அளித்து இரு ஆசார்யர்களையும் வரவேற்றார்கள். மறுநாள் அவ்விடம் நடை

பெறப் போகும் வியாஸ பூஜையைத் தரிசிக்க சென்னையிலிருந்தும் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் முதல் நாளே அங்கு கூடி விட்டார்கள். 10-ஆம் தேதி காலை 11 மணிக்கு பூஜை ஆரம்பமாயிற்று. பல தேவஸ்தானங்களி லிருந்தும் வழக்கபடி வந்திருந்த ப்ரஸாதங்கள் இரு பெரியவர்களுக் கும் அளிக்கப்பட்டன. மாலை 4 மணிக்கு பூஜை முடிவு பெற்றது. வழக்கம் போல் இரு ஆசார்யர்களும் சங்கல்பம் செய்து கொண்டார்கள். ஸ்ரீ மடத்துடன் இருந்த நான்கு சந்யாஸிகளும் சங்கல்பம் செய்து கொண்டார்கள். பின்னர் வித்வான்கள் வாக் யார்த்தம் நடத்தினர்கள். மறுநாள் புனப்பூஜை முடிந்ததும் எல்லோருக்கும் வியாஸாக்ஷதை ப்ரஸாதம் ஸ்ரீ ஆசார்யர்கள் வழங்கினர்கள்.

28-ஆம் தேதி ஆந்திர பிரதேச முதல்வர் காசு பிரும்மானந்த ரெட்டி ஸ்ரீ ஆசார்யர்களை தரிசித்துக்கொண்டு ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார். ஸ்ரீ புதுப் பெரியவர்கள் 29-ஆம் தேதி ஓர் ஆரம்பப் பாடசாலையின் புதிய கட்டி டத்தைத் திறந்து வைத்தார்கள். அந்தப் பள்ளியில் தொடக்கத் திலிருந்தே தெலுங்குடன், ஸம்ஸ்கிருதமும் ஆங்கிலமும் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 18-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் ஸம்ஸ்கிருத பாடசாலைக்கு விஜயம் செய்தார்கள்.

**ஆகம சில்பக் கலை விழா**

வியாஸ பாரத ஆகம சில்ப ஸதஸ் (7-ஆவது விழா) சிகந்தராபாத் கௌதா ஸ்வராஜ்யா கட்டிடத்தில் 20-8-68- அன்று தொடங்கி 14 நாட்கள் நடைபெற்றது. முன் வருடங் களில் நடைபெற்ற ஸதஸ்களைக் காட்டிலும் இது தனித் தன்மை வாய்ந்தது. அரசின் ஆணைப்படி ஆந்திரநாட்டு அறநிலைய இலா காவினரும், தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவினரும் இணைந்து அத்புதமான கண்காக்ஷிகளை அமைத்திருந்தார்கள். கௌதா குடும்பத்தார் சுமார் 5000 பேர் உட்கார்ந்து பார்க்கக்கூடிய ஓர் அரங்கத்தை நிரந்தரமானதாக அமைத்துவிட்டார்கள். மேடை யின் பின் புறம் சுமார் 3 மீட்டர் உயரமுள்ள நடராஜப் பெரு மானின் சிலையும், நுழைவாயிலில் சுமார் 15 மீட்டர் உயரத்தில் அழகான ராஜகோபுரமும் அமைக்கப்பட்டிருந்தன. ஒரு மாத மாகவே நூற்றுக் கணக்கான பணியாளர்கள், சிற்பிகள், சித்திரக் காரர்கள் இந்த வேலைகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். தெய்விகக் கண்காக்ஷி ஒன்றை அமைத்து அதில் பிரதானமாக

திருப்பதி ஸ்ரீ வேங்கடாசலபதியின் உருவத்தைத் தத்ரூபமாக (அதே உயரத்தில்) அமைத்திருந்தார்கள். ஆந்திர ப்ரதேசத்தில் உள்ள ஸ்ரீசைலம், அகோபிலம், சிம்மாசலம், அன்னவரம், காளஹஸ்தி போன்ற மற்றத் தேவாலயங்களில் உள்ள மூர்த்திகளின் உருவங்களை யெல்லாம் தத்ரூபமாக வடித்திருந்தார்கள். லக்ஷக் கணக்கில் மக்கள் வரிசையாக நின்று இந்தச் சிலைகளை அமைதியுடன் தரிசித்தார்கள். கோவில் வாகனங்கள் சிலவும் கண்காக்ஷியில் இடம் பெற்றிருந்தன. புதைப்பொருள் ஆராய்ச்சிப் பிரிவினர் நடத்திய கண்காக்ஷியில், சில புராதன தெய்விகக் கற்சிலைகளும், உலோகத்தினுலான சிலைகளும் இடம் பெற்றிருந்தன. ஏழாவது, எட்டாவது நூற்ருண்டுக் காலத்து அரசர்கள் அளித்த செப்புப் பட்டயங்களும், ஓலையில் மிகத்தெளிவாக எழுதிய மிகப் பழைமையான கையெழுத்துப் பிரதிகளும் அங்கு வைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் மனுஸ்மிருதி, ஆந்திர பாகவதம், மகாபாரதத்தின் துரோணபர்வம் இவை முக்கியமானவை. மேலும் அண்மையில் மேதக் ஜில்லா அல்லாதுர்கம் கிராமத்தில் கண்டு எடுக்கப்பட்ட மேற்கு சாளுக்கிய அரசர்காலத்து வண்ணச்சித்திரங்களும் இதில் இடம் பெற்றிருந்தன. அஜந்தா சித்திரங்களுக்குப் பின்னர் கண்டுபிடித்தவை இவை.

20-8-1968 அன்று காலை 8 மணிக்கு ஸதஸ் திருவாரூர் மகாலிங்க குருக்களின் சங்கவாத்ய முழக்கத்துடன் ஆரம்பம் ஆயிற்று. அதற்கு முன்னர் ஸ்ரீ லக்ஷ்மீநாராயணர் ஆலயத்திலிருந்து, ஆகம சிற்ப சம்பந்தமான ஓலைச்சுவடிகள் யானைமீது வைத்து ஊர்வலமாக ஸதஸ் நடைபெறும் இடத்துக்குக் கொண்டு வரப்பட்டன. முதலில் ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் மேடைக்கு வந்தனர். பின்னர் ஸதஸின் தலைவர் ஆந்திரப்ரதேச கவர்னர் கந்துபாய் தேசாய், முதல் மந்திரி பிரம்மானந்த ரெட்டியுடன் வந்தார். அதையடுத்து அறநிலைய இலாகா மந்திரி ராமலிங்கராஜுவும், கமிஷனர் கே. வாசுதேவராவும் வந்தனர். அவர்கள் யாவரும் இரு ஆசார்யர்களையும் வணங்கிவிட்டு அமர்ந்தனர். வேதபாராயணத்துடன் கடவுள் வணக்கம் நடைபெற்றது. ஸதஸ் கமிட்டியின் தலைவர் ஜி. எஸ். மேல்கோட், எம். பி. முதலில் சம்ஸ்கிருதத்திலும் பின்பு ஆங்கிலத்திலும் யாவரையும் வரவேற்ருர். கவர்னர் பேசுகையில் மதம், கலாசாரம் ஒழுக்கம் இவை எல்லாம் இன்றும் கிராமங்களில் இருந்து வருகின்றன என்றும் நகரங்களில் அவை மறைந்து வருகின்றன என்றும் இந்த ஸதஸில் நடைபெறப் போகும் கலாநிகழ்ச்சிகளெல்லாம் நமது

பழைய பெருமைகளையெல்லாம் எடுத்துக்காட்டும் என்றும் கூறினார்.

ஸ்ரீ ஆசார்யர்கள் உரை நிகழ்த்துகையில் 'இன்று நம் பாரத நாடு மற்றெல்லா நாட்டினராலும் போற்றப்படுவதற்குக் காரணம் பாரதத்தின் பழைமையான உயரிய கொள்கைகளை நாம் இன்றும் கடைப்பிடித்து வருவதால்தான். இந்தக் கொள்கைகளையெல்லாம் ராமாயணம், மகாபாரதம், பாகவதம் ஆகியவை நமக்குப் போதித்து வருகின்றன. ஆந்திர தேச புர்ரகதா, தோலு பொம்மலாட்டம் போன்ற கலா நிகழ்ச்சிகள் சாமான்ய மக்களின் மனத்தில் இந்தத் தத்துவங்களை நன்கு பதிய வைக்கின்றன' என்றார்கள். ஆகையால் இம்மாதிரியான கலாநிகழ்ச்சிகளுக்கு மாநில சர்க்காரும் மத்திய சர்க்காரும் ஊக்கம் அளிக்க வேண்டும் என்றும் கூறினார்கள்.

வழக்கம் போல் ஆகம பண்டிதர்கள், சிற்பிகள், கணித ஜோதிஷ பண்டிதர்கள் சபையில் பங்கு கொண்டார்கள். சிலோனிலிருந்தும் கம்போடியாவிலிருந்தும் சிற்பிகள் சிலர் வந்து இந்த ஸதஸில் கலந்து கொண்டார்கள். அநேகமாக ஒவ்வொரு நாளும் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் இந்தச் சபைக்கு விஜயம் செய்து சர்ச்சைக்குரிய விஷயங்களைத் தீர்மானிப்பதில் முக்கிய பங்கு ஏற்றார்கள்.

முன் வருடங்களைக் காட்டிலும் இரவு நேரங்களில் கலா நிகழ்ச்சிகள் அதிகமாகவே நடைபெற்றன. முக்கியமாக நடைபெற்ற நிகழ்ச்சிகள் :—

உத்திரப்ரதேசம் சிவாஜி ராம்லீலா மந்திர் கோஷ்டியாரின் ராமலீலா நாடகம், ஹரிச்சந்திர நாடகம், ஆந்திரதேச புர்ர கதா, கண்டசாலா வேங்கடேச்வர ராவ் சங்கீதக் கச்சேரி, வில்லிபுத்தூரார் தமிழ் பாரத ப்ரவசனம், புச்சா வேங்கடேச சாஸ்திரியின் "கிருஷ்ணலீலா தரங்கிணி" கானம், சுபஸ்ரீயின் வில்லுப்பாட்டு (தமிழில்,) திருச்சி ஜே. எஸ். ரேடியோ கம்பெனியாரின் புகைப்படக் காட்சிகள் (ஸ்தல வரலாறுகள்), மத்தியப்ரதேசம் கிருஷ்ண பால ராமாயண சமாஜத்தாரின் ராம லீலா நாடகம், பொம்மலாட்டம், கேரள நாட்டு ஓட்டம் துள்ளல், கதக்களி—'கர்ணார்ஜுன யுத்தம்', ராமானந்த யோகி என்பவரின் யோக சக்தி, குருக்ஷேத்திரம் வாஸுதேவாசாரியரின் ஹிந்தி உபன்யாஸம், ஆந்திர ப்ரதேசம் கூச்சிப்பூடி நாட்டிய நடனம்-தசாவதாரம், நேபாளம் கணேச் பகாதுர் என்பவரின் ராமாயண ப்ரவசனம், புராதன கல்வெட்டுகளைப் பற்றி புகைப்

படக் காட்சி, மதுரை பெரியசாமி குழுவினரின் கரக ஆட்டம், குஜராத் சௌராஷ்ட்ரா கதக், மங்களூர் பாலகிருஷ்ணராவ் கோஷ்டியினரால் யக்ஷகானம் (கன்னடம்), உஸ்மானியா யூனிவர் ஸிடி டாக்டர் சுப்ரமண்யம் அவர்களால் புராதனக் கல்வெட்டு களைப் பற்றி விளக்கம், சாத்தூர் பிச்சக்குட்டி குழுவினரால் வில்லுப்பாட்டு.

ஸ்ரீ ஆசார்யர்கள் இந்த ஸதஸ் மிகவும் வெற்றிகரமாக நடந்ததற்கு அல்லும் பகலும் மாதக் கணக்காக உழைத்த எல் லோருக்கும் தம் அருளாசிகளை வழங்கினார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் அனுக்கிரகமும், அவ்வப்போது எழுந்த பிரச்சினைகளைத் தீர்க்க ஸ்ரீ புதுப் பெரியவர்கள் அளித்து வந்த ஆலோசனைகளுமே இதன் வெற்றிக்குக் காரணம் என ஸதஸ் கமிட்டியின் காரியதரிசி கே. எல். மனோகர் கூறினார்.

முடிவுரையில் ஸ்ரீ ஆசார்யர்கள் மஹா பாரதத்தையும் பகவத் கீதையையும் யாவரும் கற்க வேண்டும் என்று கூறினார் கள். அவைகளில் கணிதம், ஜோதிஷம் மற்றும் விண்வெளிக் கலையைப் பற்றியும் கூறப்பட்டிருப்பதாயும் இப்பொழுது நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் தீமைகளிலிருந்து விடுபட இவைகளைக் கற்பதின் மூலம் வழி வகுத்துக்கொள்ளலாம் என்றும் கூறினார் கள். அர்ச்சகர்களது பயிற்சிக்காகத் தமிழ் நாட்டில் இருப்பது போல் ஆந்திர தேசத்திலும் பாடசாலைகள் அமைக்க ஆசார்யர் களின் யோசனையை அரசு பூர்வாங்கமாக ஒப்புக் கொண்டது.

18-8-68-அன்று ரெயில்வே யூனியன் மந்திரி புனச்சாவும் 25-8-68-அன்று உத்தரப்ரதேச கவர்னர் கோபால ரெட்டியும் ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசித்துக் கொண்டார்கள்.

### சிகந்தராபாத்தில் ஸ்ரீ சங்கர மடம்

ஸ்ரீ ஆசார்யர்கள் 22-ஆம் தேதி தங்கள் திருக்கரத்தினா லேயே இதற்குச் சங்கு ஸ்தாபனம் (அடிக்கல் நாட்டுதல்) செய் தார்கள். சிகந்தராபாத் ஸ்ரீநிவாஸ நகரில் ஸ்கந்தகிரிக்குச் சமீபம் ஸ்ரீ சங்கர மடம் அமைந்துள்ளது. கண்ட்ராக்டர் வேங்கடேச்வரலு, கமிட்டி தலைவர் பி. கே. முத்துஸ்வாமி அய்யர் முதலானவர் இந்தப் பணியில் முக்கிய பங்கு கொண் டார்கள்.

ஸ்ரீ சங்கர மடத்தின் பிரதிஷ்டையும் கும்பாபிஷேகமும் 5-9-1968 அன்று காலை 7-30க்கு சுப முகூர்த்தத்தில் ஸ்ரீ ஆசார் யர்கள், ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் முன்னிலையில்

நடைபெற்றன. முதல் மந்திரி கே. பிரம்மானந்த ரெட்டி மனைவியாருடன் இந்தப் பிரதிஷ்டைக்கு வந்து தர்சனம் செய்து கொண்டார்.

சங்கர மடத்துக்கு சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் ஸ்ரீநிவாஸ நகரில் பக்தர்களின் பெரு முயற்சியினால் ஸ்ரீ வேங்கடேச்வர ஆலயம் கட்டப்பட்டுள்ளது. விக்ரஹமும் மிகவும் அழகாக அமைந்துள்ளது. இதற்கும் ஸ்ரீ ஆசார்யர்களே முன்பு 8-5-1968-இல் சங்கு ஸ்தாபனம் செய்தார்கள். இந்த ஆலயத்தின் பிரதிஷ்டையும் 6-9-1968-ஆம் தேதி வெள்ளிக் கிழமை காலை 6-00 மணிக்கு இரு ஆசார்யர்களின் முன்னிலையில் நடைபெற்றது.

**சிகந்தராபாத்தில் சாதுர்மாஸ பூர்த்தி**

6-9-1968-அன்று சாதுர்மாஸ சங்கல்பம் பூர்த்தி. அன்று விச்வரூப யாத்திரையாக இரு ஆசார்யர்களும் மாலை 4 மணிக்கு, பாக்ய நகர் எல்லையைக் கடந்து யூனிவர்ஸிடி மார்க்கம் 2 கிலோ மீட்டர் நல்ல மழையில் பாதாசாரியாகச் சென்று பகவத் கீதையில் விச்வரூப அத்யாயம் பாராயணம் செய்த பிறகு இரவில் பத்மராவ் நகர் முகாமுக்குத் திரும்பினார்கள். பக்தர்கள் நூற்றுக்கணக்காக உடன் சென்று வந்தார்கள். மறுநாள் இரவு அங்கிருந்து புறப்பட்டார்கள். மலக்பேட், மால்காபூர், சித்தியால், சூர்யாபேட், ஜக்கய்ய பேட் முக்த்யாலா ஆகிய ஊர்களுக்கு விஜயம் செய்தார்கள். முக்த்யாலாவில் தங்கிய அன்று இரு ஆசார்யர்களும் வேதாத்ரிக்குச் சென்று பிரஸித்தி பெற்ற நரஸிம்ம ஸ்வாமியைத் தரிசித்து வந்தார்கள். நாராயண தீர்த்தர் இந்த நரஸிம்மர் மீது ஒரு தரங்கம் பாடியிருக்கிறார். அந்தத் தரங்கத்தைக் கல்லில் செதுக்கி அந்த ஆலயத்தில் வைக்கும்படி, கூட வந்திருந்த முக்த்யாலா ராஜாவிடம் ஸ்ரீ ஆசார்யர்கள் கூறினார்கள். அங்கிருந்து 21ஆம் தேதி தனகுண்டா வந்தடைந்தார்கள். அன்று இரவு ஸ்ரீ ஆசார்யர்கள் மட்டும் காமகோடி நகர் மல்லாதி குடும்ப ராவ் ஜாகையில் தங்கினார்கள். மறுநாள் 22-ஆம் தேதி மஹாளய அமாவாஸை. கேதுக்ரஸ்த சூர்ய கிரஹணம்; இரு பெரியவர்களும் கிருஷ்ணா நதியில் கிரஹண ஸ்னானம் செய்தார்கள். வழக்கம் போல் தானங்கள் கொடுக்கப்பட்டன.

**விஜயவாடாவில் ஆசார்யர்கள்**

ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கும் கிருஷ்ணா (ப்ரகாசம் அணை) பாலத்துக்கு அருகில் 22-9-68-

அன்று காலை ஓர் அமோக வரவேற்பு அளிக்கப் பட்டது. வரவேற்புக் கமிட்டியின் தலைவர் டாக்டர் டி. வி. எஸ். சலபதி ராவ் இரு ஆசார்யர்களுக்கும் பூர்ணகும்ப மரியாதைகளை அளித்தார். அங்கிருந்து ஸ்ரீ வேங்கடேச்வர ஸ்வாமி ஆலயத்துக்கு விஜயம் செய்தார்கள். அங்கு குப்பா லக்ஷ்மண அவதானி இரு ஆசார்யர்களுக்கும் சம்ஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் வரவேற்பு இதழ்களைப் படித்துக் கொடுத்தார். கே. வி. ராமமூர்த்தி தமிழில் ஓர் வரவேற்பு இதழை வாசித்தளித்தார். அவ்வருடத்திய நவராத்திரி பூஜை 23-ஆம் தேதி முதல் அந்த நகரத்தில் நடந்தது. அன்று காலை இரு ஆசார்யர்களும் புதிதாகக் கட்டப் பட்டுள்ள துர்கா கட்டத்தில் கிருஷ்ணாநதி ஸ்னானம் செய்தார்கள்.

**குருக்ஷேத்திரத்தில் கீதா ரங்கம்**

குருக்ஷேத்திரத்தில் 22-9-1968-அன்று சூர்ய கிரஹண புண்ய காலத்தில் லக்ஷக்கணக்கான மக்கள் ஸ்னானத்திற்காக கூடும் நந்நாளில் ஸ்ரீ ஆசார்யர்களின் விருப்பப்படி முன்னாள் மத்திய அரசு மந்திரி குல்சாரிலால் நந்தா கீதாரங்கம் கட்டிடத்தையும் புத்தகசாலையையும் திறந்து வைத்தார். அப்பொழுது அவர் கூறியதாவது :—

"கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் இம்மூன்றையும் கீதை உபதேசிக்கின்றது. கீதையின் உபதேசத்தை, மக்கள் அவசியம் பின்பற்ற வேண்டும். ஸ்ரீ காஞ்சி ஆசார்யர்கள் ஹிந்து சமுதாயத்திற்கே ஓர் ஒளிவிளக்காகத் திகழ்கிறார்கள். எது சரி, எது தவறு என்பதைப் பற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்குக் குருக்ஷேத்திரத்தில் உபதேசம் செய்தார். குருக்ஷேத்திரம் மீண்டும் அதற்குரிய முக்கிய ஸ்தானத்தை பெறும் பொருட்டு, ஸ்ரீ ஆசார்யர்கள் ஜோதி ஸரஸில் பிரஸித்தி பெற்ற ஆலமரத்தடியில் அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவான் உபதேசிப்பதையும், ஸ்ரீ ஆதிசங்கரர் தம் சிஷ்யர்களுக்குப் பிரம்ம சூத்ரபாஷ்யம் உபதேசிப்பதையும் சித்தரிக்கும் சலவைக்கல் விக்ரஹங்களை முன்பே பிரதிஷ்டை செய்துள்ளார்கள். இன்று தொடங்கும் கீதாரங்கத்தில் உலகின் எல்லா மொழிகளிலும் கீதையைப்பற்றி இதுவரை வெளிவந்த புஸ்தகங்கள் கொண்ட நூலகம் திறக்கப்படுகிறது. உலகெங்கிலுமுள்ள சர்வகலாசாலைகளுக்குக் கீதையைப்பற்றிய பிரசுரங்களை கீதாரங்கம் மூலம் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது" என்றார்.

கீதையின் உபதேசங்களை உலகெங்கும் பரப்பும் ஓர் கேந்திர மாக இது விளங்கும் என்று ஸ்ரீ ஆசார்யர்கள் தமது ஆசிச் செய்தியில் தெரிவித்தார்கள். இரு ஆசார்யர்களும் அன்று விஜய வாடாவில் முகாம் செய்திருந்தார்கள்.

1-10-68 விஜயதசமி அன்று ஆசார்யர்கள் ஸ்ரீ விஜயேச் வரர் ஆலயத்துக்கும் ஸ்ரீ கனக துர்கா அம்மன் ஆலயத் துக்கும் சென்று சிவனையும் அம்பிகையையும் தர்சனம் செய்து வந்தார்கள். அங்கிருந்து கௌதா சூர்யநாராயண கிருஹத் திற்குச் சென்று அங்கு நடைபெறும் வேத சாஸ்திர வித்வத் ஸத ஸுக்கும் விஜயம் செய்தார்கள். நவராத்ரி சமயம் நடைபெறும் சந்தர்ப்பணையை கிருஷ்ண லங்காவில் உள்ள சீதபல்லி வேங்கட பூர்ணய்யா நடத்தி வைத்தார்.

6-10-1968-அன்று ராகு க்ரஸ்த ஸோமோபராக புண்ணிய காலம். இரு ஆசார்யர்களும் மூன்று கிலோ மீட்டர் தூரமுள்ள கிருஷ்ணவுக்குச் சென்று கிரஹண புண்யகால ஸ்னானம் செய்து வந்தார்கள். வழக்கப்படி அன்று வேத வித்பன்னர் களுக்குத் தானங்கள் செய்விக்கப்பட்டன.

### அகில பாரத ஸர்வசாகா வேத சம்மேளனம்

நான்கு வேதங்களையும் வெவ்வேறு சாகைகள் (கிளைகள்) மூலம் குருகுல முறைப்படி அத்யயனம் செய்த வேத வித் பன்னர்களின் 4ஆவது சம்மேளனம் 11-10-1968-அன்று விஜயவாடாவில் ஆரம்பமாயிற்று. முதலாவது சம்மேள னம் 1962-இல் டெல்லியிலும் இரண்டாவது 1965-இல் சென்னையிலும், மூன்ருவது 1966-இல் திருப்பதியிலும் நடை பெற்றன. குஜராத், மத்யப்ரதேசம், உத்தரப்ரதேசம், ஓரிஸா, ஆந்திரப்ரதேசம், மஹாராஷ்டிரம், மைசூர், கேரளா, தமிழ்நாடு இவ்விடங்களிலிருந்து சுமார் 400 பிரதிநிதிகள் இந்தச் சம்மேள னத்துக்கு வந்திருந்தார்கள். மற்ற ராஜ்யங்களில் குருகுலவாஸம் செய்து முறையாக வேதம் கற்றவர்கள் அநேகமாக இல்லை யென்றே கூறலாம். சோதன் பெயிண்ட்ஸ் ஹரிசகோதரர்களின் பவனத்திலிருந்து பிரதிநிதிகள் யாவரும் வேத கோஷத்துடன் ஸ்ரீ வேங்கடேச்வரர் ஆலயத்துக்குக் காலை 7-00 மணிக்கு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ ஆசார்யர்களும் புதுப் பெரியவர்களும் அங்கு விஜயம் செய்திருந்தார்கள். முதலில் வேத வ்யாஸ பூஜை நடந்தது. பின்னர் அந்தந்த சாகையின்படி புருஷ ஸூக்த ஹோமம் நடத்தினார்கள். பின்னர் வேத பாராயணம் ஆரம்ப

காஞ்சி தேனம்பாக்கம் சிவஸ்தானத்தில் பண்டிதர்களுடன் ஸ்ரீ ஆசார்யாகள்



சிவஸ்தானத்தில் அத்வைத சபையின் வைரவிழா நடந்த சமயம்

மாயிற்று. சாகைகளின் வேதமந்திரங்கள் ஒரே விதமாக இருந்தாலும் அவைகளை உச்சரிக்கும் ரீதியில் தேசத்துக்கு தேசம் வித்தியாஸம் இருந்து வருகிறது. ஆந்திரம், தமிழ்நாடு, கர்னாடகம், மஹாராஷ்டிரம் இந்த ப்ரதேசங்களில் வேதகானம் அநேகமாய் ஒரே மாதிரியாகவே இருந்து வருவதைக் காண்கிறோம். ஐந்து நாட்கள் நடை பெற்ற இந்தச் சம்மேளனத்தை விஜயவாடா மக்கள் ஒவ்வொரு நாளும் வந்து பக்தியுடன் தரிசித்து வேத கோஷத்தைச் செவி மடுத்து மன பரிசுத்தியடைந்தார்கள். இதன் செலவில் ஒரு பகுதியை ஆந்திர அரசும், மற்றொரு பகுதியை மக்களும், மீதியை ஸ்ரீ மடமும் ஏற்றுக் கொண்டது. இதை நிர்வகிப்பதில் வேதரக்ஷண நிதியின் நிர்வாக ட்ரஸ்டி எஸ். அண்ணாத்துரை அய்யங்காரும் விஜயவாடா அட்வொகேட் பி. விச்வநாதராவும் விசேஷ பங்கேற்றார்கள். சுமார் ஒரு லக்ஷ ரூபாய் இதற்கு செலவாகி இருக்கிறது. ஸ்ரீ ஆசார்யர்கள் ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்து மந்திராக்ஷதை வழங்கினார்கள். யாவருக்கும் தக்கவாறு சம்பாவனை அளிக்கப் பட்டது. பொன்னும் பொருளும் பெற்றுப் போனபண்டிதர்கள் ஏராளம்.

### கிருஷ்ணாவில் புஷ்கரம்

12-10-1968 முதல் 20-10-1968 முடிய இரண்டு ஆசார்யர்களும் ஒவ்வொரு நாளும் அதிகாலையில் கிருஷ்ணாநதிக்குச் சென்று புண்ய கால ஸ்னானம் செய்து வந்தார்கள். நாட்டின் பல பாகங்களி லிருந்தும் புஷ்கர ஸ்னானத்துக்கென்று வந்தவர்கள் நூற்றுக் கணக்காக ஆசார்யர்களுடன் சென்று ஸ்னானம் செய்து வந்தார் கள். காஞ்சீபுரம் பச்சையப்பன் கல்லூரி ஓய்வு பெற்ற பேராசிரியர் லக்ஷ்மீ நரஸிம்ம சாஸ்திரி ஸ்ரீ ஆசார்யர்கள் அனுக்ரகம் பெற்று தமது சஷ்டியப்தபூர்த்தி விழாவை 12-10-68 அன்று ஜபஹோமங்களுடன் ஸ்ரீ ஆசார்யர்கள் சந்நிதி யில் நடத்திக்கொண்டார். இரண்டு ஆசார்யர்களும் அன்று விச்வ ஹிந்து பரிஷத் கூட்டத்துக்கு விஜயம் செய்தார்கள்.

### மைசூர் ராஜமாதாவுக்குத் தரிசனம்

கிருஷ்ணா புஷ்கர ஸ்னானத்துக்கு வந்த மைசூர் மகாராஜா ஸ்ரீ ஜய சாமராஜ உடையார் வயது முதிர்ந்த தம் தாயுடன் ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசித்துக்கொண்டார். தள்ளாத வயதினரான ராஜமாதாவை ஓர் நாற்காலியில் அமரச் செய்து தர்சனத்துக்கு

அழைத்து வந்தார்கள். முதலில் புதுப் பெரியவர்களின் தரிசனம் கிடைத்தது. பெரியவர்கள் ஜபத்தில் அமர்ந்திருந்ததால் நேரமானாலும் பாதகமில்லையென மகாராஜா கூறிச் சற்றுக் காத்திருந்து பெரியவர்களையும் தாயுடன் தர்சனம் செய்து கொண்டார். இது மகாராஜாவின் மாத்ரு பக்தியையும் ஆசார்ய பக்தியையும் ஒரே சமயத்தில் வெளிக்காட்டியது.

**தாய்லாந்தின் ராஜகுரு**

கிழக்கு ஆசிய நாடுகளில் ஒன்று தாய்லாந்து. அங்கே இன்று பௌத்த மத அரசு நடைபெறுகிறது. ஆயினும் மக்கள் ஹிந்து கலாசாரத்தை வாழ்க்கையில் பெரும்பாலும் கடைப்பிடித்து வருகிறார்கள். அந்த மக்கள், நம் புராதன மதக் கோட்பாடுகளையும் பண்பாடுகளையும் தெரிந்து கொள்வதற்காகவும் இரு நாடுகளின் ஒருமைப்பாட்டை வளர்ப்பதற்காகவும் அந்த நாட்டின் மன்னரின் குருவான ப்ரா ராஜகுரு வாமதேவ முனி என்பவரை பாங்காக் நகரத்திலிருந்து இந்தியாவுக்கு அனுப்பியிருந்தார்கள். விசேஷ அழைப்பு ஒன்றையும் ஸ்ரீ ஆசார்யர்கள் அவருக்கு அனுப்பியிருந்தார்கள். அதை ஏற்றுக்கொண்டு அவர் விஜயவாடாவில் வேத சம்மேளனம் நடைபெறும் மூன்றாவது நாளாகிய 13-10-1968 அன்று தம் காரியதரிசியுடனும், மற்றொரு உதவியாளருடனும் கல்கத்தா வழியாக விஜயவாடா வந்து ஸ்ரீ ஆசார்யர்களையும் ஸ்ரீ புதுப் பெரியவர்களையும் தரிசித்துக் கொண்டார். சேர்ந்தார் போல் 400 பேர்கள் வேத பாராயணம் செய்வதைக் கண்டு அவர் அகமகிழ்ந்தார். அவர் அங்கு தங்கிய இரண்டு நாள்களும் முதற் கடமையாக இரு ஆசார்யர்களையும் வணங்கி அவர்களோடு உரையாடி வந்தார். அந்த நாட்டின் மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் பிரச்சினைகளைப் பற்றி ஸ்ரீ ஆசார்யர்கள் அவரிடம் நேரில் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள்.

மதம், கலாசாரம் சம்பந்தமாய் உரையாடிய பொழுது அவர், அந்த நாட்டில் இன்றும் திருப்பாவை-திருவெம்பாவை விழா அரசாங்க சார்பில் நடந்து வருவதாகவும், ஆலயங்களில் புத்தர் விக்ரகத்துடன் பிரம்மா, விஷ்ணு, சிவன், கணேசர் உருவங்களும் பிரதிஷ்டை செய்யப் பட்டிருப்பதாயும், அவைகளுக்குப் பூஜை நடத்த சுமார் மூன்று மணி நேரம் ஆவதாகவும் கூறினார். மேலும் அவர்களது நாட்டை சுவர்ணபூமி (அதாவது பொன்நாடு) என்றும், இந்தியாவை ஜம்புத்வீபம் என்று அவர்கள் அழைப்பதாகவும் கூறினார். இரு நாடுகளுக்கும் தார்மிக உறவு நீடித்

திருப்பதாகவும், ஸநாதன தர்மத்தை அவர்கள் கடைப்பிடித்து வருவதாகவும் கூறினர். தொடர்ந்து அவர் பேசுகையில், பௌத்தமதம் அவர்களது அரசாங்க மதம் என்றாலும் புத்தர் ஹிந்து குடும்பத்தில் பிறந்தவர் என்றும் தாய்லாந்து மக்கள் தீபாவளி, சங்கராந்தி போன்ற பண்டிகைகளையும் கொண்டாடி வருவதாயும், நாக பூஜை செய்து வருவதாகவும் கூறினர். "தாய்" மொழியில் 80 சதவிகிதம் சொற்கள் ஸம்ஸ்கிருத மூலத்திலிருந்து பிறந்தவை என்பதையும் அவர் சுட்டிக் காட்டினர். இவ்வகையில் பாரத நாடும், தாய் நாடும் ஒரே கலாசாரத்தின் அடிப்படையில் திகழ்வதாக விவரித்தார். 'தாய்' பாஷையில் அவர் நிகழ்த்திய உரையை அவரது காரியதரிசி பண்டிட் வித்யாதர் சுக்லா என்பவர் ஹிந்தியில் மொழி பெயர்த்தார்.

ஸ்ரீ ஆசார்யர்களிடம் அவர் விடைபெற்றுச் செல்லும் முன்னர் அவருக்கு மிகவும் விலையுயர்ந்த காஷ்மீர் ஜரிகை சால்வையும் மற்றும் சில நினைவுப் பொருள்களும் சம்மானமாக அளிக்கப்பட்டன. தாய்லாந்து மக்கள் மீது ஸ்ரீ ஆசார்யர்களுக்கு இருந்து வரும் அன்பை வெகுவாகப் பாராட்டி அவர்களை வணங்கி ப்ரஸாதம் பெற்றுக் கொண்டார். முதன் முறையாக பாரத பூமிக்கு விஜயம் செய்த அவரையும் அவரது கோஷ்டியினரையும் தாய்நாட்டுக்கு புறப்படும்முன் ராமேச்வரத்துக்கும் காசிக்கும் ஸ்ரீமடம் சிப்பந்திகளுடன் ஆசார்யர்கள் அனுப்பிவைத்தார்கள்.

**ஸ்ரீ வேங்கடேசர் ஆலயத்தில் ஸ்ரீ சந்திரமௌளீச்வர பிரதிஷ்டை**

இரு ஆசார்யர்களும் 16-10-1968-அன்று முதல் விஜயவாடா ஸ்ரீ வேங்கடேசர் ஆலயத்தில் முகாம் செய்திருந்தார்கள். 20-ஆம் தேதி தீபாவளிப் பண்டிகை அன்று கிருஷ்ணா புஷ்கர புண்ணிய காலமும் முடிவு பெற்றது. 23-10-68-அன்று (கார்த்திக சுத்த த்விதியையன்று) ஸ்ரீ பரமேஷ்டி குரு ஆராதனை நடைபெற்றது. 26-ஆம் தேதி ஸ்கந்த சஷ்டி புண்ய காலம். அன்று கொத்தபேட்ட தேவராஜு கோவிந்த ராமய்யா வீட்டில் பூஜை. மறுநாள் 27-ஆம் தேதி சூர்யராவ் பேட்ட ஆயுர்வேத டாக்டர் நோரி வேங்கடேசு சாஸ்திரி வீட்டில் பூஜை நடந்தது. 28-ஆம் தேதி லப்பிப்பேட்டை சோதன் பெயிண்ட்ஸ் ஹரி சகோதரர்கள் வீட்டுக்கு விஜயமானார்கள் ஸ்ரீ வேங்கடேசர் ஆலயத்துக்கு அடுத்தாற் போல் ஒரு சிவாலய ப்ரதிஷ்டை செய்ய வேண்டுமென்று எஸ். ஆஞ்சனேய பந்துலு மற்றுமுள்ள அந்தப்பேட்டை வாஸிகளின் விருப்பம். அதன்படி 28-10-68

அன்று கீலக வருடம் கார்த்திக சுத்த சப்தமி திங்கட்கிழமை காலை 9-30 மணிக்கு ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் ஆலயத்தின் பிரதிஷ்டையும், மஹாகும்பாபிஷேகமும் இரு ஆசார்யர்களின் முன்னிலையில் நடைபெற்றது. இந்த ஆலய நிர்மாணத்திற்கான செலவு அனைத்தையும் பெஜவாடா மோட்டார்ஸ் மாகண்டி சூர்ய நாராயண ஏற்றுக்கொண்டார்.

## ஹரி சகோதரர்கள் இல்லத்துக்கு விஜயம்

தெனாலி தாலுக்கா ஈபூரைச் சார்ந்த ஹரி வேங்கட சுப்பையா, கிருஷ்ணமூர்த்தி, சாம்பசிவ சாஸ்திரி, சந்திரசேகர சர்மா, நரஸிம்ம சர்மா ஆகிய ஐவரும் பழைய முறையில் சம்ஸ்கிருதம் கற்று ஒவ்வொருவரும் ஒரு சாஸ்திரத்தில் வித்வானாக விளங்குகிறார்கள். அவர்கள் தங்கள் குழந்தைகளுக்கும் ஐந்து வயது முதற்கொண்டே சம்ஸ்கிருதப் பயிற்சியளித்து அந்த பாஷையில் சரளமாகப்பேசவும் பழக்கியுள்ளார்கள். அவர்களின் விஜயவாடா இல்லத்தில் ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் 1968, நவம்பர் மாத ஆரம்பத்தில் சுமார் 10 நாள்கள் தங்கியிருந்தார்கள். அப்பொழுது அந்தச் சகோதரர்கள் வேதபாஷ்யத்தையும், தர்ம சாஸ்திரங்களையும், புராணங்களையும் ஆராய்ச்சி செய்து தொகுத்ததான "பாரதீ நிருக்தி" என்னும் தெலுங்கு நூலின் கைப்பிரதியை ஸ்ரீ ஆசார்யர்களிடம் படித்துக் காண்பித்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் மிகவும் நுட்பத்துடன் அவைகளைக் கேட்டு தம் ஆலோசனைகளையும் வழங்கினார்கள். பின்னர் அந்தப் பெரிய புஸ்தகத்தை நல்ல விதமாக அச்சிட்டு அவர்கள் ஸ்ரீ ஆசார்யர்களிடமும் ஸ்ரீ புதுப் பெரியவர்களிடமும் காஞ்சியில் சமர்ப்பணம் செய்தார்கள்.

## மசூலிப்பட்டணம் விஜயம்

இரு ஆசார்யர்களும் 1968 நவம்பர் 9-ஆம் தேதி விஜயவாடாவிலிருந்து புறப்பட்டு, குருஸாடா, சின்னதும்பிடி மார்க்கமாக 12-ஆம் தேதி மசூலிப்பட்டணத்துக்கு விஜயமானார்கள். அங்கு ஆரிய வைச்ய கல்யாண மண்டபத்தில் 19-12-1968 முடிய தங்கியிருந்தார்கள். ஒவ்வொரு நாளும் ஆரிய வைச்ய குடும்பத்தார் ஸ்ரீ ஸ்வாமி பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். பின்னர் 17-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதி வரை மசூலிப்பட்டணம் காயத்ரீ வித்ய பீடம் ஸாங்க வேத வித்யாலயத்தில் தங்கினார்கள்.

1968 டிஸம்பர் 24-ஆம் தேதி இரவு மசூலிப்பட்டணத்தி லிருந்து புறப்பட்டு குர்ஸா, குடிவாடா, பெரியமேட் ஆகிய ஊர்களில் தங்கி 30-ஆம் தேதி ஏலூருக்கு விஜயமானுர்கள். 18-1-69 முடிய ஏலூரில் முகாம் செய்தார்கள். மேற்கு கோதாவரியைச் சார்ந்த பிப்பரா என்னும் ஊரில் உள்ள பக்தர் காமராஜ் என்பவர் ரூ 40,000 செலவில் தயாரித்த ருத்ராக்ஷ தங்க கிரீடத்தை 10-1-1969-அன்று ஸ்ரீ ஆசார்யர்களுக்கு மண்டலீக வேங்கட சாஸ்திரிகள் ஏலூரில் சமர்ப்பணம் செய்தார்.

**அலாகாபாத்தில் அடிக்கல் நாட்டு விழா**

அலாகாபாத் த்ரிவேணி சங்கமத்துக்கு அருகில் கங்கைக் கரையில் ஸ்ரீ ஆதி சங்கரர் நினைவுச் சின்னமாக ஒரு விமானம் அமைக்க வேண்டுமென்று ஸ்ரீ ஆசார்யர்கள் சில வருஷங்களாகவே எண்ணி வந்தார்கள். முதன் முதல் இந்த உத்தேசத்தைச் சென்னை டி. ஐ. சைக்கிள் நிறுவனத்தின் அதிபர் ஏ. எம். எம். முருகப்ப செட்டியாரிடம் 1962-இல் தெரிவித்தார்கள். பின்னர் இதைக் கட்டுவதற்கு பி. கோபால ரெட்டி, உத்திரப்ரதேச கவர்னராக இருந்த சமயம் உ. பி. அரசாங்கம் 22 மீட்டர் சதுர அளவில் த்ரிவேணிக் சங்கமத்துக்கு சமீபம் ஓர் இடத்தை அளித்தது. ஸ்ரீ சங்கர விமானம் அடிக்கல் நாட்டு விழா அலாகாபாத்தில் 29-12-68 அன்று நடைபெற்றது. டில்லி லெப்டினன்ட் கவர்னர் டாக்டர் ஆதித்யநாத் ஜா இந்த விழாவுக்குத் தலைமை வகித்தார், உத்திரப்ரதேச கவர்னர் பி.கோபால ரெட்டி அடிக்கல் நாட்டினுர். விழாவுக்கு வந்திருந்த பெருங் கூட்டத்தினரை காலஞ் சென்ற முருகப்ப செட்டியாரின் சகோதரர் அருணுசலம் செட்டியார் வரவேற்ருர். அப்போது அவர் தம் தமையனுரின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் தங்கள் குடும்பத்தினர் மகிழ்ச்சி கொள்வதாகத் தெரிவித்தார்.

டாக்டர் ஏ. என். ஜா தம் தலைமை உரையை ஸம்ஸ்கிருதத்தில் நிகழ்த்தினுர். உ. பி. கவர்னர் கோபாலரெட்டி அடிக்கல் நாட்டுகையில் பேசியதாவது: 'ராமேச்வரம், ஸ்ரீசைலம், குருக்ஷேத்திரம், ரிஷீகேசம் முதலான பெரிய க்ஷேத்திரங்களில் ஸ்ரீ ஆதி சங்கரருக்கு நினைவு மண்டபங்களை ஸ்ரீ ஆசார்யர்கள் நிறுவியிருப்பதைப் பாராட்டுகிறேன். ஸ்ரீ காமகோடி ஆசார்யர்கள் ஆதி சங்கரரின் மறு அவதாரம்.''

டாக்டர் மண்டன மிச்ரா வந்தனுேபசாரம் கூறுகையில், த்ரிவேணி சங்கமத்தில் ஸரஸ்வதீ நதியானது கண்ணுக்குப் புலப்

படாமல் ஓடுவது போலக் கண்ணுக்குப் புலப்படாமலேயே அனுக்கிரஹம் செய்யும் சக்தி வாய்ந்த ஸ்ரீ ஆசார்யர்களின் திருவருளால் இவ்விழா புனிதமடைந்தது என்று உணர்ச்சி வசத்துடன் உரைத்தார். அன்று ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் ஆந்திரப்ரதேசம் மேற்குக்கோதாவரி ஜில்லா ஏலூருக்குச் சமீபத்தில் விஜயம் செய்திருந்தார்கள். இந்த விழாவிற்கு ஸ்ரீ ஸி. எஸ். ராமசந்திரன், ஐ.ஸி.எஸ்., டாக்டர் ஸி. ஆர். ஸ்வாமிநாதன் இவர்கள் ஏற்பாடு செய்தார்கள்.

**பத்ராசலம் ஆலயத்துக்கு யானை-குதிரை சமர்ப்பணம்**

ஏலூர் முகாம் முடிவடைந்ததும் *18-1-69*-அன்று பத்ராசலம் ஸ்ரீ சீதாராமர் தேவாலயத்துக்கு ஒவ்வொருநாளும் விச்வரூப தர்சன பூஜைக்கென்று ஸ்ரீ மடத்திலிருந்து ஓர் ஆண் யானையையும் ஒரு குதிரையையும் ஸ்ரீ ஆசார்யர்கள் அனுப்பி வைத்தார்கள். இம்மாதிரி கஜ பூஜையும் அச்வ பூஜையும் முற்காலத்தில் அங்கு நடைபெற்று வந்ததாகவும் அது பின்னர் நின்றுவிட்டதாகவும் ஸ்ரீ ஆசார்யர்கள் பத்ராசலம் விஜயம் செய்திருந்தபோது கோயில் அதிகாரிகளிடமும் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகளிடமும் தெரிவித்திருந்தார்கள்.

**விசாகப்பட்டணத்துக்கு விஜயம்**

*1969*, பிப்ரவரி 2-ஆம் தேதி விசாகப்பட்டணத்தில் நடைபெறவிருக்கும் ஸ்ரீ சங்கரமட பிரதிஷ்டைக்காக இரு ஆசார்யர்களும் ஏலூரிலிருந்து 19-1-69-ஆம் தேதி புறப்பட்டார்கள். சுமார் 300 கிலோ மீட்டர் ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் விசைப்படகில் கோதாவரி கால்வாய் மூலமாகவே சென்றார்கள். சாமான்களும் மற்றப் பரிவாரங்களும் சாலை மார்க்கம் வந்தன. வழியில் தவளேச்வரம் (கிழக்கு கோதாவரி), பித்தாபுரம், அன்னவரம் ஆகிய ஊர்களில் தங்கி, பூஜை நடத்தினார்கள், அன்னவரத்தில் பிரஸித்தி பெற்ற சத்ய நாராயணர் ஆலய தர்சனம் செய்து கொண்டார்கள். அந்த ஆலயத்தில், ஓர் தூணினால் விழும் நிழலைக் கொண்டு மணியைக் கண்டுபிடிக்கும் அபூர்வ யந்திரம் ஒன்று உள்ளது. எல்லமஞ்சிலி, காஸீம் பேட்ட, லேபர்த்தி ஆகிய ஊர்களில் தங்கி, 27-1-1969-அன்று விசாகப்பட்டணம் அடைந்தார்கள். 28-1-1969-அன்று ஸ்ரீ பெரியவர்கள் மட்டும் சிம்மாசலம் சென்று அங்கு ஸ்ரீ நரஸிம்ம ஸ்வாமி தர்சனம் செய்துவந்தார்கள்.

## விசாகப்பட்டணத்தில் ஸ்ரீ சங்கரர் பிரதிஷ்டை

விசாகப்பட்டணம் துவாரகா நகரில் சங்கர மடம் நிர்மாணம் செய்து அதில் ஸ்ரீ ஆதி சங்கரர் விக்ரகத்தையும் விநாயகர் முதலான தெய்வங்களின் விக்ரஹங்களையும் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதைச் செய்து முடிக்க ஏ. வி. என். காலேஜ் பிரின்ஸிபால் திவாகர்ல ராமமூர்த்தியும் அட்வொகேட் மல்லாதி சூர்ய நாராயணவும் பெரும் பங்கு கொண்டனர். மகா வித்வான் சாஸ்திர ரத்னாகர மண்டலீக வேங்கட சாஸ்திரிகள், அரசியல் தலைவர் தென்னேடி விச்வநாதம், மற்றும் விசாகப் பட்டணம் கலெக்டர் பி. எல். சிவராமன் இவர்களின் உதவியும் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீ சங்கரமடம் நிர்வாகக் கமிட்டியினரின் பிரார்த்தனைக்கு இணங்க இரு ஆசார்யர்களும் அங்கு விஜயம் செய்து வைதிக முறைப்படி பிரதிஷ்டையை நடத்தி வைத்தார்கள். ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதரின் பாதுகைகளும் பிரதிஷ்டை செய்யப்பட்டன. 1-2-69-ஆம் தேதி ஆகாமாவை பௌர்ணமி. அன்று இரு பெரியவர்களும் சமுத்திர ஸ்னானம் செய்தார்கள். 4-ஆம் தேதி காந்தி கிராமத்தில் பூஜையை முடித்துக் கொண்டு துறைமுகத்தில் கப்பல் கட்டும் தொழிற்சாலையைப் பார்வையிட்டு வந்தார்கள்.

விசாகப்பட்டணத்திலிருந்து பிப்ரவரி 5-ஆம் தேதி புறப்பட்டு அனகாபள்ளி, தூனி, அன்னவரம், பித்தாபுரம், சாமல்கோட்டை, காகினாடா, நிடதவோல் மார்க்கமாக 15-ஆம் தேதி ஏலூருக்கு மறுபடியும் விஜயமானார்கள். அன்று மஹா சிவராத்திரி. 17-ஆம் தேதி குரு ஆராதனை. 18-ஆம் தேதி தெலப்ரோலில் தங்கி மறுநாள் விஜயவாடாவுக்கு விஜயம் செய்தார்கள். காமகோடி நகர் மல்லாதி குடும்பராவ் வீட்டில் பூஜை நடந்தது. மறுநாள் சத்யநாராயணபுரம் விஜயம். 23-2-69-அன்று குண்டூருக்கு விஜயமானார்கள்.

குண்டூரில் உள்ள சிருங்கேரி சங்கர மடத்தின் நிர்வாகிகளின் பிரார்த்தனைக்கிணங்க அந்த மடத்தின் சிவாலயத்தில் நவக்கிரஹப் பிரதிஷ்டையை 24-2-1669-அன்று இரு ஆசார்யர்களும் நடத்தி வைத்தார்கள்.

26-ஆம் தேதி அன்று தெனாலிக்கு விஜயம் செய்து பழைய சிவாலயத்தில் நவக்கிரஹ ப்ரதிஷ்டையை இரு ஆசார்யர்களும் நடத்தி வைத்தார்கள். தெனாலியிலிருந்து கொல்லூர், சிறுமூர் மார்க்கமாக விஜயவாடா வந்து சேர்ந்தார்கள்.

7-3-1969 முதல் 10-3-69 முடிய முகாம் விஜயவாடா. அங்கு மாகண்டி சூர்யநாராயணு வீட்டில் பூஜை நடைபெற்றது. பின்னர் குண்டூர், கனபவரம், முப்பவரம், சோவரபாடு இவ்விடங்களில் தங்கி பூஜைகளை நடத்திக் கொண்டு 18-ஆம் தேதி ஓங்கோல் அடைந்தார்கள்.

## ஓங்கோலில் வஸந்த நவராத்திரி

19-3-1969-அன்று ஓங்கோலில் வஸந்த நவராத்ரி ஆரம்பமாகி ஸ்ரீ ராமநவமியுடன் முடிவு பெற்றது. 29-3-69-அன்று இரவு இரு ஆசார்யர்களும் உள்ளூர் சிவாலயத்துக்கு சென்று ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 5, 6, ஏப்ரல் தேதிகளில் 16 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கொத்தபட்டணம் விஜயம் செய்து வந்தார்கள். அங்கே கடற்கரையில் உள்ள செம்படவர்கள் நூற்றுக்கணக்காக வந்து ஸ்ரீ புதுப் பெரியவர்களைத் தரிசித்துக் கொண்டார்கள். ஆந்திர ப்ரதேச எண்டோமென்ட் கமிஷனரும் திருப்பதி எக்ஸிகூடிவ் ஆபிஸரும் ஸ்ரீ பெரியவர்களைத் தர்சனம் செய்துகொண்டார்கள். 9-4-69 அன்று ஸ்ரீ புதுப் பெரியவர்கள் ஸ்ரீசங்கர மடத்துக்கு விஜயம் செய்து அங்கே யஜுர்வேத ஸ்மார்த்த பிரயோக பாடசாலையை ஆரம்பித்து வைத்தார்கள். ஓங்கோலில் இன்ஷ்யூரன்ஸ் ஆபீஸர் எம். கே. என். மூர்த்தி, அட்வொகேட் கொல்லபூடி சிவராம சாஸ்திரி, அவருடைய சகோதரர் ஸ்ரீனிவாஸ மூர்த்தி, அட்வொகேட் நீலம் ராஜு, சுப்பாராவ் மற்றும் ஊர் ப்ரமுகர்கள் ஆசார்யர்கள் விஜயத்துக்கு தக்க ஏற்பாடுகளை செய்தார்கள்.

## த்ரயம்பகத்தில் ஸ்ரீ சங்கரமடம் அடிக்கல்நாட்டு விழா

பாரத நாட்டின் பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்க ஸ்தலங்களில் த்ரயம்பகம் ஒன்றாகும். இது மகாராஷ்டிரத்தில் நாஸிக் சமீபம் சுமார் 50 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கோதாவரி புண்ணிய நதி இதையடுத்துள்ள மலையிலிருந்து உற்பத்தியாகிறது. இந்த மகாக்ஷேத்திரத்திலும், ஓர் சங்கர மடம் அமைத்து அதில் ஸ்ரீ ஆதி சங்கர விக்ரஹ ப்ரதிஷ்டை செய்ய வேண்டுமென்பது ஸ்ரீ ஆசார்யர்களின் சங்கல்பம். ஆனால் அதற்குத் தகுதியான இடம் கிடைப்பது சிரமமாக இருந்தது. கடைசியாக த்ரயம்பகேச்வரர் ஆலய சமீபம் ஓர் இடத்தை மகாராஷ்டிர சர்க்கார் ஸ்ரீ மடத்திற்காக அளித்தார்கள். ஸ்ரீ சங்கர மண்டபத்துக்கு பூமி பூஜை 19-3-1969-அன்று செய்யப்பட்டது. பம்பாய் நாகசுந்தரம் வேத

கோஷம் முழங்க அஸ்திவாரக்கல் நாட்டினார். இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ காமகோடி பீடத்தின் பூர்வாசார்யர்கள் ஒருவர் ஸித்தி பெற்றிருப்பதாக ஸ்ரீ மடம் குரு பரம்பரை கூறுகிறது.

இந்த விழாவில் பாரதீய வித்யா பவன் ஸம்ஸ்கிருதப் பிரிவின் தலைவர் பிராந்தியங்கரை சுப்ரமண்ய சாஸ்திரிகளும், நாஸிக் ஜில்லா கலெக்டர் ராஜாத்யக்ஷாவும், பம்பாம் உள்நாட்டு இலாகா அதிகாரி ஜஸ்வந்த் சிங்கும், நாஸிக் ஹைஸ்கூல் பிரின்ஸிபால் பி. என். தேசாயும், பம்பாய் டெபுடி அகௌன்டென்ட் ஜெனரல் பாலசுப்ரமண்ய அய்யரும் மற்றும் ஊர்ப் பிரமுகர்கள் பலரும் பங்கு கொண்டு சிறப்பித்தனர்.*

**காவலியில் வருஷப்பிறப்பு**

*1969*, ஏப்ரல் 9-ஆம் தேதி மாலை ஓங்கோலிலிருந்து கிளம்பி 10-ஆம் தேதி சிங்கராயகொண்டா என்னும் ஊருக்கு விஜயம் செய்தார்கள். அங்கு மலைமீது உள்ள யோக நரஸிம்ம ஸ்வாமியைத் தர்சனம் செய்து கொண்டார்கள். அங்கிருந்து காவலிக்கு விஜயம் செய்தார்கள். 13-ஆம் தேதி சௌம்ய வருஷப் பிறப்பு, காலையில் ஹோமங்கள் நடைபெற்றன. அதிகாலையில் நெல்லூரிலிருந்தும் சென்னையிலிருந்தும் சங்கீத வித்வான்கள் வந்து ஸ்ரீ ஆசார்யர்கள் ஸந்நிதியில் பஞ்சரத்ன கீர்த்தனைகளைப் பாடினார்கள். அன்று அந்த ஊர் முனிஸிபாலிடியார் ஸ்ரீ ஆசார்யர்களுக்கும் ஸ்ரீ புதுப் பெரியவர்களுக்கும் வரவேற்புப் பத்திரம் தெலுங்கில் வாசித்தளித்தார்கள். 15-ஆம் தேதி முடிய காவலியில் தங்கியிருந்தார்கள்.

**ஜொன்னவாடாவில் சங்கர ஜயந்தி, ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை**

காவலியிலிருந்து 15-4-69-அன்று புறப்பட்டு கம்மபாளையம் மார்க்கமாக 17-ஆம் தேதி ஜொன்னவாடாவை அடைந்தார்கள். அந்த ஊரில் மிகவும் பிரஸித்தி பெற்ற காமாக்ஷி ஆலயம் இருக்கிறது. ஸ்ரீ சங்கர ஜயந்தி கர்ப்போத்ஸவம் 17-ஆம் தேதி ஆரம்பமாயிற்று. காலையில் பாஷ்ய பாராயணம், ப்ரகரண

---

*[**குறிப்பு:** இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சங்கர மண்டபம் எழுப்பி, அதில் ஆதிசங்கரர் சிஷ்யர்களுடன் கூடிய மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பட்டு, வைதிக முறையில் நித்ய பூஜை நடந்து வருகிறது. தவிர யாத்திரிகர்கள் தங்குவதற்கு அறைகள் கட்டப்பட்டுள்ளன. இவையெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யர், (ஓய்வு பெற்ற சூபரின்டென்ட் எஞ்சினீயர்) நல்ல முறையில் செய்து முடித்தார்].

கிரந்த பாராயணம், மாலையில் வஸந்தோத்ஸவம் முதலியன நடைபெற்றன. 21-ஆம் தேதி சங்கர ஜயந்தி அன்று ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் சந்நிதியில் ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ சக்கிர ப்ரதிஷ்டை செய்தார்கள். ஸ்ரீ சக்கிரத்துக்கும் காமாக்ஷி அம்பாளுக்கும் மஹாபிஷேகம் நடைபெற்றது. ஸ்ரீ ஆசார்ய விக்ரஹத்துக்குக் காலை, மாலை விசேஷ பூஜையும் இரவில் ஊர்வலமும் நடைபெற்றன. சங்கரர் அவதார கட்டம் வாசிக்கப்பட்டது.

**விஜயவாடாவில் ஸ்ரீ சங்கரர் பிரதிஷ்டை**

விஜயவாடா, கிருஷ்ண லங்கா பகுதியில் கிருஷ்ணா கால்வாய்க்குத் தென் புறமாக ஆயுர்வேத டாக்டர் நோரி ராம சாஸ்திரிகளின் குடும்பத்தினர் ஸ்ரீ மடத்திற்குத் தானமாக அளித்த 18 மீட்டர் நீளம் 12 மீட்டர் அகலம் விஸ்தீரணம் உள்ள ஸ்தலத்தில் ஓர் சங்கர மடம் அமைத்து அதில் ஸ்ரீ ஆதிசங்கரர் நான்கு சிஷ்யர்களுடன் பிரதிஷ்டை செய்ய ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞையிட்டிருந்தார்கள். விக்கிரகங்கள் வெள்ளை சலவைக்கல்லினால் ஜய்புரில் தயார் ஆகி வந்து சேர்ந்தன. ஸ்ரீ ஆதி சங்கரர் விக்ரஹத்தின் உயரம் 60 சென்டி மீட்டர். மற்றச் சிஷ்ய விக்ரகங்களின் உயரம் 45 சென்டி மீட்டர். இந்த விக்ரகங்ளுக்கு அஷ்ட பந்தனம் சாத்தி 21-4-1969 சங்கர ஜயந்தியன்று பிரதிஷ்டையும் கும்பாபிஷேகமும் வைதிக முறைப்படி நடந்தன. ஸ்ரீ மடம் ஜொன்னவாடா முகாமிலிருந்து ஸ்ரீ ஆசார்யர்களால் அனுப்பப்பட்ட வேத பண்டிதர்கள் இதை நடத்தி வைத்தார்கள். ஆந்திர தேசத்தில் நூற்றுக்கணக்கான யாகங்களை நடத்தி வைக்கும் 'யாஜுலு' என்னும் வேத வித்பன்னரின் விருப்பப்படி பஞ்சாயதன சிவலிங்க பிரதிஷ்டையும் அன்று அதே இடத்தில் நடந்தது. நூற்றுக் கணக்கான பக்தர்கள் வந்து இந்தப் பிரதிஷ்டையைத் தரிசித்துக் கொண்டார்கள். இந்த மடத்தில் ஸந்யாஸிகள் தங்க வசதி செய்யப்பட்டுள்ளது. யஜுர் வேத பாடசாலை ஒன்று நடைபெறவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டது.

**நெல்லூர் விஜயம்**

இரு ஆசார்யர்களும் ஜொன்னவாடாவிலிருந்து 1969, ஏப்ரல் 22-ஆம் தேதி நெல்லூருக்கு விஜயம் செய்தார்கள். அன்று மாலை இரு ஆசார்யர்களும் ஸ்ரீ வேணுகோபால ஸ்வாமி ஆலயம் சென்று ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 23-ஆம்

தேதி தர்க்காமெட் பகுதியில் கட்டவிருக்கும் ஸ்ரீ ராஜராஜேச்வரி ஆலயத்துக்கு சங்கு ஸ்தாபனம் (அடிக்கல் நாட்டுதல்) செய்தார்கள். அங்கிருந்து மனுபோலு, ஓஜிலி, பஸவகுருவப்பதோட்ட இவ்விடங்களில் தங்கி 28-ஆம் தேதி காளஹஸ்திக்கு வந்து அந்த க்ஷேத்திர பசு மடத்தில் தங்கிப் பூஜை செய்தார்கள்.

**திருமலையில் ஆசார்யர்கள்**

காளஹஸ்தியிலிருந்து இரு ஆசார்யர்களும் 29-4-69-அன்று காலை திருப்பதிக்கு விஜயம் செய்தார்கள். முன்னுள் பிஹார் கவர்னர் எம். அனந்தசயனம் அய்யங்காரும் மற்றும் ஊர் பிரமுகர்களும் ஆசார்யர்களைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்றார்கள். அன்று பூஜை கன்னிகா பரமேச்வரி சத்திரத்தில் நடைபெற்றது. அன்று இரவு திருமலைக்குப் படிகள் வழியே நடந்து சென்றார்கள். 30-ஆம் தேதி காலை இரு ஆசார்யர்களையும் தேவஸ்தான போர்ட் சேர்மன் பி. என். அப்பா ராவ், நிர்வாக அதிகாரி சந்திரமௌளி ரெட்டி, ஐ.ஏ.எஸ்., பேஷ்கார் முனிஸாமி நாயுடு ஆகியோர் மேளவாத்யத்துடன் பூர்ணகும்பம் அளித்து வரவேற்றார்கள்.

1-5-1969-அன்று இரு ஆசார்யர்களையும் திருமலை டோலி மண்டபம் அரச மரத்தடியில் கோவில் இஸ்திகபால் மரியாதையுடனும், கோவில் பாராயணக்காரர்களின் வேத கோஷத்துடனும் ஆஸ்தான வித்வான் திருவிடைமருதூர் பி. எஸ். வீருசாமிப் பிள்ளையின் இனிய நாகசுர இசையுடனும், கோவில் அதிகாரிகள், அறநிலையப் பாதுகாப்புக் கமிஷனர் ஸ்ரீ வாஸுதேவராவ் ஆகியோர் எதிர்கொண்டு கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். கோயில் உண்டியலில் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் பணம் சமர்ப்பித்து ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைச் சேவித்துக்கொண்டார்கள். அர்ச்சகர் ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்கார் கோவில் மரியாதையாக ஸ்ரீ ஆசார்யர்களைக் குலசேகரபடிதாண்டி வந்து மூலஸ்தானத்துக்கு அழைத்துச் சென்றார். பகவானின் ஐதிகத்தை விளக்கிக்கூறி கர்ப்பூர ஆரதி செய்து தீர்த்தம் தங்கசடாரி சாதித்தார்.

பகவானுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் சாமரம் வீசினார்கள். பகவானின் விலையுயர்ந்த பட்டு பீதாம்பர சேஷவஸ்திரத்தை ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்குப் போர்த்திக் கௌரவித்துப் பிரஸாதம் தந்தனர். புதுப் பெரியவர்களுக்கும் பகவானின் பட்டு வஸ்திரத்தைப் போர்த்திக் கௌரவித்து பிரஸாதம் தந்தனர். இரு ஆசார்

யர்களும் அரை மணிநேரம் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைத் தரிசித்தனர். பிரஸாதத்தைப் பெற்ற ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ பாதரேணு எங்கே என்று கேட்டார்கள். பிறகு தங்கவாசலில் மரியாதையாக பகவத் ப்ரஸாதம் 'சந்தனம்' ஸ்ரீ பாதரேணு, அபயஹஸ்தம், மாணிக்கம், லட்டு, வடை இவற்றை அர்ச்சகர்கள் தந்தனர். ஸ்ரீ பாத ரேணுவை ஸ்ரீ ஆசார்யர்கள் நெற்றியில் இட்டுக் கொண்டு, சிரஸில் வைத்துக் கொண்டு பிறகு புதுப் பெரியவர்களுக்கும் கோவில் அதிகாரிகளுக்கும் அளித்து ஆசீர்வதித்தார்கள்.

கோவிலிலிருந்து திரும்பும்போது ஸ்ரீ ஆசார்யர்கள் க்யூ வரிசையில் வரும் யாத்ரிகர்களை ஆசீர்வதித்தார்கள். கோயில் மரியாதையாக ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளுக்குப் ஸ்ரீ பெருமாளின் குடையை நன்கொடையாகத் தந்தனர். ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் முகாம் வந்து சேர்ந்ததும் தேவஸ்தான அதிகாரிகளுக்கு ஸ்ரீ சந்திர மௌளீச்வர பிரஸாதம் தந்து ஆசீர்வதித்தார்கள். இரு ஆசார்யர்களும் 2-5-1969 அன்று வெள்ளிக் கிழமை மூலவர் ஸ்ரீ வேங்கடேசப்பெருமாளுக்கு ஒரு மணி நேரம் அபிஷேகம் நடப்பதைக் கண்குளிர கண்டுக் களித்தார்கள்.

2-ஆம் தேதி அன்று இரு ஆசார்யர்கள் முன்னிலையில் ஆந்திர தேசத்தைச் சார்ந்த ஆறு வேத வித்பன்னர்களுக்கு சர்டிபிகேட்டு, காஷ்மீர் சால்வை, அவர்களின் மனைவிமார்களுக்குப் புடைவை, ஒவ்வொருவருக்கும் ரொக்க பரிசு ரூ. 1116 ஆகியவற்றை அறநிலைய அமைச்சர் ஆர். ராமலிங்க ராஜு வழங்கினார். இதற்காக ஆந்திர சர்க்கார் ரூ. 10,000 மத்திய சர்க்கார் ரூ. 8400 மான்யமாக வழங்கியுள்ளது. இந்த ஏற்பாட்டின்படி வருஷந்தோறும் 6 வேதவித்வான்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குச் சம்மானம் செய்யப்படும். இந்த வருஷம் சம்மானம் பெற்றவர்கள்: (1) ஸ்ரீ குப்பா லக்ஷ்மண அவதானி (2) ஸ்ரீ அங்கூரு வேங்கடாசார்யலு, (3) ஸ்ரீ விச்வநாத ஜகந்நாத கனபாடி, (4) ஸ்ரீ நரஸிம்ம கனபாடி, (5) திருப்பதி வேதபாடசாலை ஸ்ரீ ராமநாத கனபாடி, (6) தங்கிரால கங்காதர சாஸ்திரி: இவர்களது சாதனையைப்பற்றி கல்வித்துறை உதவி டைரக்டர் ஸ்ரீ லக்ஷ்மண சாஸ்திரி எடுத்துக் கூறினார். ஸ்ரீ ஆசார்யர்கள் விருப்பப்படி மற்ற ராஜ்யங்களிலும் இவ்விதம் வேத விற்பன்னர்களை கௌரவிக்க வேண்டும் என்று அவர்களுக்கும் ஆந்திர அரசு கடிதங்கள் எழுதியிருப்பதாயும், மகாராஷ்டிரத்தில் இது அமலுக்கு வந்திருப்பதாயும் அவர் மேலும் கூறினார்.

**ஹிந்து தர்ம பிரதிஷ்டானம்**

திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின் ஆதரவுடன் 2-5-69 அன்று மாலை ஸ்ரீ ஆசார்யர்கள் இந்து தர்ம பிரதிஷ்டானம் என்னும் ஓர் ஸ்தாபனத்தை ஆரம்பித்து வைத்தார்கள். விழா திருமலை வேதபாடசாலை மைதானத்தில் நடந்தது. தேவஸ்தான அதிகாரிகளும், அறநிலைய இலாகா மந்திரி, கமிஷனர் முதலியோரும், மற்றும் பொது மக்களும் வந்திருந்தனர். பிரதிஷ்டானத்தைத் துவக்கி வைத்து ஸ்ரீ ஆசார்யர்கள் பேசுகையில், "ஹிந்து தர்ம பிரதிஷ்டானம் என்பது ஒரு பந்து போல இன்று விடப்பட்டிருக்கிறது. பந்துக்கு ஆதியும் அந்தமும் இல்லை. தள்ளிவிட்டால் அது போய்க் கொண்டே இருக்கும். அது போல இந்த ஹிந்து தர்ம பிரதிஷ்டானம் பிரபஞ்சமெல்லாம் போய்ப் பரவி நமது பாரத தர்மத்தை எல்லோருக்கும் விளக்கி பொது மக்களுக்கு நன்மை செய்யக் கூடும். இதற்காகத் தான் உயர்ந்த ஒரு மலையில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் இருந்து கொண்டு இந்து தர்மத்தை எல்லா திக்குகளுக்கும் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார். இந்தப் பெருமாள் மீது ஜனங்களுக்கு எவ்வளவு பக்தியோ, அவ்விதமே கடவுளுக்கும் பாமர ஜனங்களிடம் அதிகமான பரிவு இருந்து கொண்டிருக்கிறது. இந்தப் பரஸ்பர அன்பினால்தான் மக்கள் சந்தோஷத்தை அடைகிறார்கள். இந்தக் காரியத்திற்கு அரசாங்க முறையில் பிரசார ஏற்பாடு தொடங்குவது ஆந்திர ப்ரதேசம் தான் முதலாவதாகும். இவ்விதமே இதர மாநிலங்களும் இதைக்கடைப் பிடிப்பார்கள் என்ற நம்பிக்கையும் தெரிவிக்கப்பட்டிருக் கிறது. பகவான் இதற்கு உதவி செய்வார்," எனக் கூறினார்கள்.

அறநிலைய பாதுகாப்பு மந்திரி ஆர். ராமலிங்கராஜு பேசுகையில் இந்து தர்ம ப்ரசாரத்திற்காக ஆந்திர நாட்டில் முதலில் மூன்று ஜில்லாக்களில் ஆர்கனைசர்களை ஏற்படுத்திக் கிராமங்கள் தோறும் இந்து தர்ம பிரசாரம் செய்ய ஏற்பாடுகள் செய்திருப்பதாகக் கூறினார்.

**பெங்களூரில் சங்கரமட நிர்மாணம்**

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் 1967-ஆம் வருஷம் பெங்களூர் பக்தர் ஒருவர் ஸ்ரீ ஆசார்யர்களிடம் அந்த ஊரில் ஸ்ரீ காமகோடி சங்கரமடம் அமைக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அப்பொழுது ஸ்ரீ ஆசார்யர்கள் பதில் சொல்லவில்லை. அவர் மேலும் பல தடவை வற்புறுத்திக் கேட்டார். "பெரியவர்கள்

அனுக்கிரகம் செய்தால் அதற்கு நானே முயற்சிக்கிறேன்'' என்றார் அவர். "அப்படியே முயற்சிசெய்'' என்று கூறி அநுக்கிரஹித்தார்கள். அவர் ஒரு சாமான்ய மனிதர். பணம் படைத்தவரும் அல்ல. பெங்களூரில் பணிபுரிந்து ஓய்வுபெற்ற ஆபீசர். பெயர் ஏ. கந்தசாமி ஐயர். திருச்சி ஜில்லாவைச் சேர்ந்தவர். 'நபர் ஒன்றுக்கு ரூபாய் 200- வீதம் வசூல் செய்து ஒரு லக்ஷ ரூபாய் சேர்த்துவிடலாம். ஸ்ரீ ஆசார்ய பக்தர்கள் பெங்களூரில் 500 பேர் இருக்கமாட்டார்களா' என்ற நம்பிக்கை அவருக்கு. தேனீ, மண முள்ள பல புஷ்பங்களை நாடுவதுபோல அவர் நல்ல மனமுள்ள பலரை அணுகினார். அவர் எதிர்பார்த்த அளவில் பாதி தொகை வசூலாகி விட்டதும் ஸ்ரீமடம் கட்ட இடம் வாங்க தீர்மானித்து விட்டார். மல்லேச்வரம் ஐந்தாவது மெயின்ரோட்டில் சுமார் 40× 15 மீட்டர் நீள-அகலம் கொண்ட ஒரு வீடு விற்பனைக்கு வந்தது. வீட்டின் சொந்தக்காரரும் ஸ்ரீ மடத்துக்கு அதை விற்பதில் மிகுந்த சந்தோஷமடைந்தார். மற்ற சிஷ்யர்களையும் கலந்து ஆலோசித்து சுமார் ரூ. 50,000 க்கு அதை வாங்கிவிட்டார். பின்னர் மேலும் ஒரு லக்ஷ ரூபாய் செலவில் மடத்தைக் கட்டி ஒரு வேத பாடசாலையும் அங்கு இப்போது நடந்து வருகிறது. "ஸ்ரீ காம கோடிபீட சேவாசமிதி'' என்னும் ஸ்தாபனத்தினர் இதைச் செவ்வனே நிர்வகித்து வருகிறார்கள். இந்தச் சமிதியைச் சேர்ந்த சுமார் 100 பேர் ஸ்ரீ ஆசார்யர்களையும் ஸ்ரீ புதுப் பெரியவர்களை யும் திருமலையில் 4-5-1969-ஆம் தேதி தரிசித்து பெங்களூருக்கு விஜயம் செய்து புதிதாகக் கட்டியுள்ள சங்கர மடத்தில் தங்கி ஸ்ரீ சந்திர மௌளீச்வர பூஜையை நடத்தி, பக்தர்களை அநுக்ரஹிக்கப் பிரார்த்தனை செய்து கொண்டார்கள். பின்னர் 1971 அக்டோபர் மாதம் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் பெங்களூருக்கு விஜயம் செய்திருந்த சமயம் இந்த மடத்தில் தங்கி ஸ்ரீ சந்திர மௌளீச்வர பூஜையையும் நவராத்திரி மஹோத்ஸவத்தையும் நடத்தி பக்தர்களை அனுக்கிரஹித்தார்கள்.

4-5-1969 அன்று சாந்திரமானப்படி வைசாக மாதம் அனுஷ நக்ஷத்திரம் ஸ்ரீ ஆசார்யர்களின் 76-வது ஜன்மதினம். ஆந்திர தேசம் மற்றும் எல்லா முக்கியமான இடங்களிலும் பக்தர்கள் ஆசார்யர்களின் ஜயந்தியைக் கொண்டாடினார்கள்.

**ஏழுமலையானுக்குப் பிரம்மோத்ஸவம்**

ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ மடத்தின் சார்பில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்கு பிரம்மோத்ஸவம் மூன்று நாட்கள் நடத்தி வைத்தார்கள். 9-5-1969 மாலை உத்ஸவ பெருமாளுக்கு

விசேஷ வஜ்ர கவச நகைகளால் அலங்காரம் செய்திருந்தார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் ஸ்ரீ தேவி பூதேவி ஸஹிதம் ஸ்ரீ பெருமாளைப் பிரதக்ஷிணம் செய்து தரிசித்துக் கொண்டார்கள். 14 வாகனங்களில் உத்ஸவருக்குப் பிரம்மோத்ஸவம் நடந்த போது இரு ஆசார்யர்களும் ஸ்வாமியுடன் வீதி பிரதக்ஷிணம் செய்து கொண்டே வந்தார்கள். 11-5-69-ஆம் தேதி உத்ஸவப் பூர்த்தியன்று பெருமாளுக்கு ஐம்பது தேங்காய்கள் உடைத்து நிவேதனம் நடந்தது. கர்ப்பூர ஆரதி முடிந்த பின்னர் பகவானின் வஸ்திரத்தை கோயில் ஸ்ரீ பரம ஹம்ஸ பெரிய ஜீயர் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு சார்த்தினார்கள். ஸ்ரீ ஆசார்யர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் தோமால சேவை, சகஸ்ரநாம அர்ச்சனை, ஏகாந்த சேவை இவைகளை ஒரு மணி நேரத்துக்கு மேல் ஸ்ரீ வேங்கடேசர் சந்நிதியில் தங்கி தரிசித்துக் கொண்டார்கள்.

9-5-69-ஆம் தேதி முதல் தரிசனத்துக்கு வந்தபோது ஸ்ரீ ஆசார்யர்கள் கோவில் அதிகாரிகளிடம் 'தாம் மட்டும்தான் ஸந்நிதிக்குள் வரலாமா' என்று கேட்டார்கள். அவர்களுடன் 12 பேர்கள் வரலாம் என்று அதிகாரிகள் கூறினார்கள். அப்பொழுது ஆசார்யர்கள் வெளியில் இருந்து கொண்டு பன்னிரண்டு பேர்களை மட்டும் பெயர் சொல்லி அழைத்து அவர்களை உள்ளே அனுப்பிவிட்டு கடைசியாக அவர்கள் சென்றார்கள். முடிவு நாளன்று ஸ்ரீ பெருமாள் சேவை செய்து விட்டு ஸ்ரீ ஆசார்யர்கள் திரும்பி மாடவீதி வழியாக வந்த போது, க்யூவரிசையில் நின்றிருந்த பக்தர்கள் ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசுத்துக் காணிக்கை செலுத்தினார்கள். அப்பொழுது ஆசார்யர்கள் அந்தத் தொகைகளை ஸ்வாமி உண்டியலில் சேர்த்து விடும்படி கட்டளையிட்டார்கள். திருமலையில் முகாம் தங்கியிருந்த இடத்தில் சமர்ப்பணம் செய்யும் தொகைதான் மடத்துக்குச் சேரலாம்; மற்றவை பெருமாளையே சேரும் என்று கூறினார்கள். பிரம்மோத்ஸவதிற்காக ரூ 1500 ஸ்ரீ மடத்திலிருந்து தேவஸ்தானத்துக்குச் செலுத்தப்பட்டது.

ஸ்ரீ வேங்கடாசலபதி ஸ்வாமிக்கு பிரம்மோத்ஸவம் நடத்தி விட்டு ஸ்ரீ ஆசாாயர்களும் ஸ்ரீ புதுப் பெரியவர்களும் 12-ஆம் தேதி திருச்சானூருக்கு விஜயம் செய்தார்கள். 13-ஆம் தேதி மாலை இரு ஆசார்யர்களும் ஸ்ரீ பத்மாவதி தாயார் ஸந்நிதி தர்சனம் செய்து கொண்டார்கள். கோயில் அதிகாரிகள் மேளவாத்யத்துடனும் வேத கோஷத்துடனும் ஸ்ரீ ஆசார்யர்கள் இருவரையும் வரவேற்றார்கள். தர்சனம் ஆன பின்னர் வழக்கம் போல ஏற்பட்ட கோயில் மரியாதைகள் அவர்

களுக்கு அளிக்கப்பட்டது. ஐந்து நாட்கள் மத்வசபா சத்திரத்தில் முகாம் செய்திருந்தார்கள். 17-ஆம் தேதி அங்கிருந்து கிளம்பி, வடமலைபட்டு, புத்தூர் மார்க்கம் 19-ஆம் தேதி நகரி-புக்கை சென்று அங்கு சங்கர மடத்தில் உள்ள ஸ்ரீ ஆசார்ய மூர்த் தங்களை தரிசித்துக் கொண்டார்கள்.

### காஞ்சிக்கு விஜயம்

புக்கையிலிருந்து 20-ஆம் தேதி திருத்தணியில் ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டார்கள். 21, 22 தேதிகளில் அரக்கோணத்தில் முகாம். அரக்கோணத்தில் 22-ஆம் தேதி மிகப் பெரிய ஊர்வலம் நடைபெற்றது. அந்த வரவேற்பை ராஜகோபால அய்யரும் மற்றும் பொது மக்களும் ஏற்பாடு செய்திருந்தார்கள். 23-ஆம் தேதி இரவு காஞ்சீ புரத்தில் இரு ஆசார்யர்களுக்கும் காஞ்சி மக்கள் மகத்தான ஒரு வரவேற்பை அளித்தார்கள். இதுவரை கண்டிராதபடி ஆயிரக் கணக்கான பக்தர்கள் அந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டார் கள். 30-ஆம் தேதி ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ வரதராஜ ஸ்வாமியின் கருட சேவையைத் தரிசிக்க சின்ன காஞ்சீபுரம் சென்றார்கள். அங்கு கோபுரத்திற்குச் சமீபம் ஒரு மேடை மீது நின்று பெருமாளுக்குச் செய்த கர்ப்பூர ஆரதியைத் தரிசித்துக் கொண்டார்கள். 31-ஆம் தேதி வைகாசி அனுஷம் அன்று அவர்களது 76-ஆவது ஜன்ம நக்ஷத்திரம் காஞ்சியிலும் சென்னையிலும் மற்றும் பல ஊர்களிலும் இந்த ஜயந்தி விழா மிகவும் சிறப்பாக கொண்டாடப்பட்டது. குருநாதருடன் அவர் களது நிழல் போல பன்னிரண்டு ஆண்டுகள் விஜய யாத்திரை செய்த பெருமை ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு கிடைத் தது. ஸ்ரீ ஆசார்யர்களும் 1-6-1969 முதல் காஞ்சீபுரம் சர்வ தீர்த்தக் குளத்தின் மேல் கரையில் ஒரு குடீரம் அமைத்துக் கொண்டு அங்கேயே தங்கலானார்கள். சில நாட்கள் சேர்ந்தார் போல் மௌனத்தையும் அனுஷ்டிக்க ஆரம்பித்தார்கள்.

### ராமேச்வரத்தில் மணி மண்டபம்

சோழ நாட்டில் மனுநீதி கண்ட சோழனது ஆட்சியை நினைவு படுத்தும் வண்ணம் ராமேச்வரம் ஸ்ரீ ஆதி சங்கர விமான மண்டபத்திற்கு முன் ஓர் மணி மண்டபத்தை அமைக்க ஸ்ரீ ஆசார்யர்கள் விரும்பினார்கள். இளவரசனின் இரதம் ஏறி இறந்துபோன கன்றின் தாய்ப் பசு, தன் சோகத்தை மன்னருக்கு

அறிவிக்கும் பொருட்டு ஆராய்ச்சி மணியை தானுகவே ஆட்டிய நிகழ்ச்சியை சித்திரிக்கும் வகையில் ஒரே கல்லைக் கொண்டு பசுவின் உருவத்தை அமைத்து கயிற்றின் மூலம் மணி அடிப்ப தாக அந்த நினைவுச் சின்னம் அமைக்கப் பட்டுள்ளது. இந்த நிகழ்ச்சி திருவாரூரில் நடை பெற்றதாகப் புராணம் கூறுவதால் திருவாரூர் வாசியான ஓர் அன்பரிடம் இந்தப் பணியை செய்து முடிக்கும்படி ஸ்ரீ ஆசார்யர்கள் பணித்தார்கள். அவரும் அவ்வூரி லேயே நிதி திரட்டி இதைப் பூர்த்திசெய்து வைத்தார். அந்த மண்டபத்தின் திறப்புவிழா 31-5-1969-ஆம் தேதி இராமனுத புரம் ராஜா ஸ்ரீ ராமநாத சேதுபதி அவர்களால் நடத்திவைக்கப் பட்டது. இதையொட்டி அன்று காலை வைதிக பூஜை, வேத பாராயணம், தேவார பாராயணம் ஆகியவை நடைபெற்றன. விழாவில் ஏராளமான பக்தர்கள் கலந்துகொண்டார்கள். ராமேச்வரம் செல்லும் யாத்ரீகர்கள் அழகிய இந்த மணி மண்டபத்தையும் தாய் பசு மணி அடிப்பதையும் கண்டு அதன் வரலாற்றைக் கேட்டுத் தெரிந்துக் கொள்கிறார்கள்.

### அஹிம்ஸாபட்டு

பட்டு நூலைத் தயாரிக்க கோடிக்கணக்கான பூச்சிகளை உற்பத்தி செய்து அவற்றைக் கொல்வதைப் பற்றி ஸ்ரீ ஆசார்யர் கள் கேள்விபட்டு பல ஆண்டுகளாக இதைப் பற்றிச் சிந்தித்து மனவேதனை அடைந்து வந்தார்கள். புராதனகால ரிஷிகள் அகல மான மரப்பட்டைகளை உரித்தெடுத்து அதையே ஆடையாக அணிந்தார்கள். ராமர் வனவாஸம் செல்லும்போது, சீதையும் ராமரும் மரஉரிதரித்துச் சென்றதாக ராமாயணம் கூறுகிறது. தற்காலம் கூட காட்டுவாசிகள் மரப்பட்டையை ஆடையாக அணிகின்றார்கள்.

சில வருடங்களுக்கு முன் ஹிமாலய ப்ரதேசத்திலிருந்து ஓர் பக்தர் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு இரண்டு மரவுரிகளைச் சமர்ப்பணம் செய்தார். அது சுமார் 4 முழ நீளமும் 2 முழ அகலமும் இருந்தது. அதை ஆசார்யர்கள் அடிக்கடி தரித்து வந்ததை சிஷ்யர்கள் கண்டிருக்கிறார்கள். பூச்சிகளைக் கொல்லாமல் பட்டு நூல் தயாரிக்க வழி ஏதாவது இருக்கிறதா என்று அதைத் தயாரிக்கும் நிபுணர்களிடம் ஸ்ரீ ஆசார்யர்கள் கேட்டுவந்தார்கள். 1955க்கு முன் வரை இதைப் பற்றி விளக்கமாக எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அந்த வருஷம் மார்ச் மாதத்தில் அஸ்ஸாம் மாகாணம் கிராமக் கைத்தொழில் விற்பனை அதிகாரி (Chief Marketing Officer) துர்காநாத் பர்டோலி என்பவர், அந்நாட்டு

உதவி ஜவுளி கமிஷனர் என். எம் சுந்தரம் என்பவருடன் ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசிக்க காஞ்சீபுரம் வந்தார்.

அஹிம்ஸா பட்டு நூல் தயாரிக்கும் முறை பற்றி அவர்கள் ஸ்ரீ ஆசார்யர்களிடம் விளக்கமாக தெரிவித்தார்கள் :

"அஸ்ஸாம் மாகாணத்தில் பட்டு நூல் உற்பத்தி செய்ய இரண்டு வகைகளைக் கடைப்பிடிக்கிறார்கள். முதல் வகையில் (Seri Culture) பூச்சிகளைக் கொன்றே நூல் எடுக்கிறார்கள். இரண்டாவதில் நூல் எடுத்த பின்பு பூச்சிகள் உயிருடன் (Eri Culture) வெளிக்கிளம்பி விடுகின்றன. ஆமணக்கு இலையில் தான் இந்த பூச்சி அநேகமாக உற்பத்தியாகின்றன. இந்தப் பட்டை ஆலயங்களில் உள்ள விக்ரகங்களுக்கு அணிவிக்கலாம். இதன் விலை சற்று அதிகமாக உள்ளது. பொது மக்கள் ஆதரவு கிடைத்தால் இந்தத் தொழிலை லாபகரமாகவும் நடத்தலாம்," என அவர்கள் கூறினார்கள். பின்னர் அவர்கள் சென்னை காங்கிரஸ் கண் காட்சிக்கு எடுத்து வந்த பட்டுத் துணியில் அஹிம்ஸா பட்டின் மாதிரிகளை ஆசார்யர்களிடம் காண்பித்தார்கள். அது முதல் ஸ்ரீ மடம் பூஜையில் உள்ள ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் ஸ்ரீ திருபுரஸுந்தரி விக்ரஹங்களுக்கு அஹிம்ஸா பட்டை அணிவிக்கத் தொடங்கினார்கள். அடுத்தபடியாக தமக்கு பட்டு வஸ்திரம் உபயோகப் படுத்த வேண்டிய சந்தர்பங்களில் அஹிம்ஸாபட்டையே உபயோகித்து வந்தார்கள். மூன்றாவதாக ஸ்ரீ மடத்திலிருந்து வித்வான்களுக்கும் மற்றோருக்கும் சம்மான மாகவும், ஆசீர்வாதமாகவும் 'பகவத் பாத சேவா' என்று அச்சடித்த அஹிம்ஸா பட்டு சால்வைகளையே அளிக்க ஏற்பாடு செய்தார்கள். இந்தப் பட்டு சாதாரண பட்டைப்போல் பளபளப்பாக வும் மிருதுவாகவும் இல்லை. ஆனாலும் சாதாரணப் பட்டைவிட விலை அதிகம்.

**காபியும்—பட்டுப்புடவையும்**

பெண்கள் அதிகச் செலவு செய்து பட்டுப் புடவைகளை வாங்கு வது நல்லதல்ல என்றும் பருத்தி நூல் புடவைகளையே கட்டிக் கொள்ளும்படிக்கும் ஸ்ரீ ஆசார்யர்கள் அடிக்கடி உபதேசம் செய்து வருவது யாவரும் அறிந்ததே. மிகுந்த வசதி படைத்தவர்கள் கூடச் சிலர் அவர்களது ஆக்ஞைபடி பட்டுப்புடவை கட்டிக் கொள்வதில்லை. நடுத்தர குடும்பத்ினரும் மற்றும் ஏழை நிலை யில் உள்ளவர்களும் ஸ்ரீ ஆசார்யர்களின் இந்த ஆக்ஞையை நிறை வேற்றினால் குடும்பத்தில் பொருளாதார நெருக்கடியின்றி ஒருவாறு சமாளிக்கலாம். இதுபோல் காபி குடிக்கும் பழக்கத்தை

யும் மாற்றிக்கொண்டால் சிக்கனமாகக் குடும்பத்தை நடத்தலாம் என்றும் ஆசார்யர்கள் கூறியுள்ளார்கள்.

**மனதைக் கவர்ந்த முனிவர்**

நம் பாரத நாட்டில் அவ்வப்போது மஹான்கள் பலர் தோன்றி மக்களது நல் வாழ்க்கைக்கு உகந்த தத்துவங்களையும், பக்தி மார்க்கத்தையும் ஞான மார்க்கத்தையும் உபதேசித்துள்ளார்கள். அவர்களில் சென்ற 19வது நூற்றுண்டில் தோன்றியவர்களான ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், இராமலிங்க அடிகள், ரமணமகரிஷிகள், அரவிந்தர் இவர்களை முக்கியமாகக் குறிப்பிடலாம். அவர்கள் தாங்கள் வகுத்த தனித்தனி மார்க்கத்தில் மக்களுக்கு உபதேசம் செய்து அவர்களை உய்விக்கச் செய்தார்கள். நம் ஆசார்யர்கள் 19-ஆம் நூற்றுண்டில் (1894) உதித்தவர்களாயினும் இருபதாவது நூற்றுண்டில் அதாவது 1907-ஆம் ஆண்டு தமது 13-ஆவது பிராயத்தில் துறவறம் பூண்டார்கள். இவர்களது துறவறமோ தனித்தன்மை வாய்ந்தது. தரும சாஸ்திரங்களில் ஸந்யாஸிகளுக்கு விதித்துள்ள பல நியமங்களை அதாவது கட்டுப்பாடுகளை அவர்கள் கடைப்பிடிக்க வேண்டும். உதாரணமாக (1) அவர்கள் பல காலம் ஒரே இடத்தில் தங்கக்கூடாது. (2) தமக்கான உணவைத் தாமே தயாரித்துக் கொள்ளக் கூடாது. (3) உடலைக் காப்பதற்கு மட்டும் எவ்வளவு ஆகாரம் தேவையோ அதை ருசி பார்க்காமல் மருந்துபோல் உட்கொள்ள வேண்டும். (4) வாகனங்களில் ஏருமல் கால்நடையாகவே சஞ்சாரம் செய்ய வேண்டும். (5) ஒரே வஸ்திரத்தை மட்டும் உடுத்துக் கொள்ளவேண்டும். (6) சரீரத்திற்கு சுகத்தைத் தரும் எவ்வித படுக்கையிலும் படுக்கக் கூடாது. (7) பணத்தைக் கையினுல் தொடக் கூடாது. (8) குறிப்பிட்ட மாதங்களில் பால், தயிர், காய்கறி கிழங்கு வகைகள், பருப்பு முதலானவைகளை உண்ணக் கூடாது.* (9) மூன்று இல்லங்களில் யாசித்து அவர்கள் அளிக்கும் அன்னத்தைப் புசிக்கவேண்டும். (10) குரு உபதேசித்த மந்திரத்தை தினந்தோறும் ஜபிக்க வேண்டும். (11) மூன்று காலம் ஸ்னானம் செய்து அவர்களுக்குரிய அனுஷ்டானங்களைச் செய்ய வேண்டும். (12) தண்டத்தையும் மரப்பாண்டமான கமண்டலுவையும் எப்பொழுதும் கையில் ஏந்தியவர்களாக இருக்கவேண்டும். (13) ஏகாதசி முதலான உபவாஸ நாட்களில் எவ்வித ஆகாரத்தையும் உட்கொள்ளக்

---

* இதை சாகா விருதம் எனக் கூறுவர். இது நான்கு மாதங்கள் நீடிக்கும்.

கூடாது. அன்று தண்ணீர் கூட அருந்தலாகாது. இவைகளைப் போல் மேலும் பல நியமங்களைக் கடைப்பிடிக்கவேண்டியவர்களே வைதிக மார்க்கத்தில் உள்ள சந்யாஸிகள் ஆவர். இவற்றுடன் பீடாதிபதிகளான ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ மடத்தின் ஆஸ்தான தெய்வமான ஸ்ரீ திருபுரஸுந்தரி சமேத ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி பூஜையை நாள் தோறும் மூன்று காலம் நடத்த வேண்டும். தர்சனத்துக்கு வரும் பக்தர்களை அநுக்ரஹிக்க வேண்டும். சந்யாஸிகளுடனும் வித்வான்களுடனும் ஒவ்வொரு நாளும் வேதாந்த விசாரம் அத்வைத தத்துவ விசாரம் சர்ச்சை செய்ய வேண்டும். இவ்வளவு காரியங்களுக்கிடையில் அவர்கள் அலங்கரித்துவரும் பீடத்தின் ஸ்தாபனமாகிய ஸ்ரீ மடத்தின் நிர்வாகத்தைப் பற்றியும் கவனத்தைச் செலுத்த வேண்டும். அறிவாளிகளும், வித்வான்களும், விஞ்ஞானிகளும் இவர்களைக் காணவரும் போது மணிக் கணக்கில் அவர்களுடன் உரையாடு வார்கள். அவர்கள் யாவரும் இவர்களது அறிவுத்திறனைக் கண்டு வியப்படைவார்கள். இரவில் இந்து மத தத்துவங்களைப் பற்றி மணிக்கணக்கில் உரை யாற்றுவார்கள். அவ்வுரைகளெல்லாம் புத்தகவடிவில் வெளிவந்துள்ளன. அவர்கள் எல்லா சாஸ்திரங் களையும் நன்கு கற்றவர்கள். நவீன விஞ்ஞானங்களின் நுட்பங் களைப் பற்றி தெரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவர்கள். தமிழில் தேவாரம், திருக்குறள், திவ்வியப்ரபந்தம் முதலான நூல் களை பரிசீலனை செய்துள்ளார்கள். அவர்களது ஞாபகசக்தி ஈடில் லாதது சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் அறிமுகமான ஒருவரைக் காணும் போது கூட அவரது ஊரையும் பெயரை யும் குறிப்பிட்டுச் சொல்லி அவருடன் உரையாடுவார்கள். சில சமயங்களில் மௌனமாக இருப்பார்கள். இந்த மௌனம் மாதக் கணக்கில் நீடிப்பதும் உண்டு. இதில் காஷ்ட மௌனம் என்னும் ஓர் நிலை இருக்கும். அப்போது அவர்களிடமிருந்து எவ்விதக் குறிப்பையும் அறிந்துகொள்ளமுடியாது. காஷ்டம் என்றால் கட்டை. எல்லா உணர்வுகளையும் கட்டுப்படுத்தி கட்டைபோல் திகழ்வார்கள்.

சாதாரண மனிதர்களின் அறிவுக் திறனுக்கு எட்டாத சில செயல்களை புரிகின்ற சித்த புருஷர்கள் நம் நாட்டில் அடிக்கடி தோன்றி வருகின்றனர். அவர்களும் முடிவாக கடவுள் பக்தி யையே மக்களிடம் பரப்பி வருகின்றனர். தரும சாஸ்திர விதிப் படி சந்யாஸ ஆசிரமத்தைக் காத்துவருகின்றவர்கள் நம் ஆசார் யர்கள். பூஜை, நிஷ்டை, தவம், தியாகம் இவற்றால் தம்மைத்

தூய்மைப்படுத்திக் கொண்டவர்கள். இவ்வித தவச்ரேஷ்டர்களின் தரிசனமே நமக்கு எல்லாவித நன்மைகளையும் அளிக்கும். அவர்கள் காஞ்சீபுரத்திற்கு அடுத்த தேனம்பாக்கம் ஆசிரமத்திலோ, ஆர்க்காடு சமீபம் கலவையில் தம் குருநாதர்களின் அதிஷ்டானங்களின் அருகிலோ தங்கியிருக்கும் போதும் அல்லது வெயில், மழை என்று பாராட்டாமல் சாலைகளில் நடந்து செல்லும் போதும், பல மைல்கள் தொலைவிலிருந்தும் மக்கள் அவர்களைத் தரிசிக்க வருகிறார்கள். அவர்களைத் தரிசித்தவர்கள் தாங்கள் அடைந்த நன்மைகளையும் அனுபவங்களையும் பத்திரிகைகளில் எழுதிவருவதையும் காண்கின்றோம். பாரத தலைவர் ராஷ்டிரபதி முதல் பல கட்சிகளைச் சார்ந்த அரசியல்வாதிகள், தொழில் அதிபர்கள், பிற மத தத்துவ ஞானிகள், விஞ்ஞானிகள், பேராசிரியர்கள், பண்டிதர்கள், கலைஞர்கள், கவிகள், நீதிபதிகள், அரசு அதிகாரிகள், மருத்துவ நிபுணர்கள், நிலச்சுவான்தார்கள், விவசாயிகள், தொழிலாளர்கள் போன்ற பல பிரிவினர்களும் பெரியவர்களைத் தரிசித்து மனச்சாந்தி அடைகிறார்கள்.

ஸ்ரீ ஆசார்யர்கள் நம் இந்து மதத்திற்காக பல வகைகளில் செய்துவந்த பிரசாரங்களை ஆதரித்து ஒத்துழைப்பைத் தந்தவர்களில் சைவ சமயத்தைச் சார்ந்த திருவாவடுதுரை, திருப்பனந்தாள், தருமபுரம், குன்றக்குடி, மதுரை முதலான ஆதீனங்களின் தலைவர்களைக் குறிப்பிடலாம். மேலும் வைணவ சமயத்தலைவர்களாக விளங்கும் வானமாமலை ஜீயர், ஸ்ரீரங்கம் ஆண்டவன் ஸ்வாமி, காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி, மத்வ சித்தாந்திகளாகிய உடுப்பி பெஜாவர், பண்டரேகரே முதலான மடங்களின் அதிபர்களும் ஸ்ரீ ஆசார்யர்களின் தரும ப்ரசாரத்திற்கு ஆதரவு அளித்து வந்துள்ளனர். சித்தாந்தங்களுக்கும் தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட வகையில் மக்களுள் கடவுள் பக்தியைப் பரப்பியவர்கள் ஸ்ரீ ஆசார்யர்கள் அவர்கள். வேற்றுமையில் ஒற்றுமையைக் கண்டவர்கள்.

சித்தாந்த பேதமில்லாமல் இராமகதையையும், கிருஷ்ண லீலைகளையும், கந்தன் பெருமையையும் ஹாஸ்யச் சுவை ததும்ப நவீன திருஷ்டாந்தங்களுடன் மக்கள் மனத்தில் பதியும் வண்ணம் மிகத்திறமையுடன் சொற்பொழிவாற்றி வரும் ஸ்ரீ கிருபானந்த வாரியாருக்கு ஸ்ரீ ஆசார்யர்களிடம் மிகுந்த மரியாதையும் பக்தியும் உண்டு. அவர் ஒரு முறை ஸ்ரீ ஆசார்யர்களை தரிசிக்க வந்த சமயம் ஸ்வாமிகளை சாஷ்டாங்கமாக வணங்க முயற்சித்த பொழுது "நீங்கள் அவ்விதம் நமஸ்கரிக்க வேண்டாம்" எனக்

கூறினார்களாம். ஸ்வாமிகள் இவ்விதம் ஏன் கூறுகிறார்கள் என்ற ஐயத்துடன் ஒரு நிமிஷம் நின்ற வாரியாரைப் பார்த்து ஸ்வாமிகள் "நீங்கள் மார்பில் பூஜைக்குரிய சிவலிங்கம் அணிந் திருக்கிறீர்கள். அது வெறுந்தரையில் படக்கூடாது" என்றார் களாம். சிவபூஜையில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்குள்ள ஈடுபாட்டை உணர்ந்த வாரியார் அவர்கள் கண்ணீர் வடித்தராம். மகாத்மா காந்தி, வினோபா பாவே, ஸ்ரீ சின்மயானந்தர், ஸ்ரீ மகேஷ் யோகி கோல்வல்கர், போன்றோரும் இவர்களைத் தரிசித்து இவர்களது அருளைப் பெற்றுள்ளார்கள்.

"பேசும் பொழுது ஸ்வாமிகளைத் தரிசிப்பதைவிட மௌன நிலையில் தரிசிப்பதையே நான் பெரும்பாலும் விரும்புவேன். அப்பொழுது அவர்கள் ஜ்யோதி ஸ்வரூபமாக காக்ஷி யளிப் பார்கள். என் மனத்தில் நான் கோரி வந்த விஷயங் களுக்கு அப்பொழுதே எனக்குப் பதிலும் கிடைத்துவிடுகிறது," என்கிறார் ஒரு பக்தர். அவர்களைத் தரிசிக்க வரும் பலருக்கு இம்மாதிரியான அனுபவங்கள் ஏற்பட்டு வருவதை நாம் கேட்டுவருகிறோம். ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு வார்த்தைக் கூட பேச வில்லையே என குறைபட்டுக் கொள்வாருமுண்டு. அவர்கள் பேசும்பொழுது பக்தர்களிடம் அவர்களுடைய குறைகளைப் பற்றித் துருவித் துருவிக் கேட்பார்கள். ஹாஸ்ய உணர்ச்சியுடன் அவர்கள் பேசும் போதெல்லாம் ஜ்வலிக்கும் மந்தஹாஸத்தை அவர்களது முகத்தில் காணலாம். தமது வாழ்நாளில் ஒருமுறை யாவது அவர்களைத் தர்சனம் செய்து விடவேண்டும் என்று எண்ணி அதை ஓர் தெய்வப் பிரார்த்தனை போல நிறைவேற்று கின்றவர்கள் அநேகம் பேர்.

ஸ்ரீ ஆசார்யர்கள் என்ன ஆகாரம் எடுத்துக்கொள்கிறார்கள் என்பது பலருடைய கேள்வி. சுமார் பதினைந்து ஆண்டுகளாகவே ஒன்று அல்லது இரண்டுபிடி நெற்பொரியைப் பாலிலோ அல்லது மோரிலோ ஊறவைத்து அத்துடன் சிறிது பச்சை காய்கறி, பழம் இவைகளைச் சேர்த்து உப்போ சர்க்கரையோ இல்லாமல் பகலில் ஒரு வேளை மட்டும் ஏற்றுக்கொள்வார்கள். உபவாஸ தினங்களில் அந்த ஆகாரமும் இருக்காது. சில நாட்கள் அவர்களாகவே பிக்ஷை வேண்டாம் என்றும் கூறி விடுவார்கள். அதற்கான காரணம் எதையும் யாரும் தெரிந்து கொள்ள முடியாது.

தமக்குரிய ஆசார அனுஷ்டானங்களை மிகுந்த சிரத்தை யுடன் கடைப்பிடித்து, தவத்தினாலும், உபவாஸத்தினாலும் மௌனத்தினாலும் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொண்டு ஜீவன்

முக்தர்களாய் விளங்கி வருகின்றார்கள். ஸ்ரீ ஆசார்யர்களைப் "பெரியவர்கள்" என்றும், "காஞ்சிமுனிவர்" என்றும், "நடமாடும் தெய்வம்" என்றும், மக்கள் அன்புடன் கூறி வழிபட்டு வருவதை நாம் கண்டு வருகிறோம்.

சென்ற 14-4-1978-ஆம் தேதி காளயுக்தி சித்திரை வருடப் பிறப்பன்று காஞ்சி தேனம்பாக்கம் ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு கடுமையான வெயிலில் நாள் ஒன்றுக்குச் சுமார் 20 அல்லது 25 கிலோ மீட்டர் வீதம் சுமார் 600 கிலோ மீட்டர் நடந்து தம் சாதுர்மாத சங்கல்பத்தைப் பெல்லாரிக்குச் சமீபம் ஹக்ரி என்ற சிற்றூரில் அதே பெயருள்ள நதிக்கரையில் 20-7-1978 முதல் 16-9-78 வரை இரண்டு மாதங்கள் நடத்தினார்கள். சென்ற 25-6-1978-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை இரவு தர்மாவரம் தாலுக்கா சங்கமேச்வரம் என்னும் இடத்தில் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் காலடி யாத்திரையை முடித்துக் கொண்டு தம் குருநாதரை சாதுர் மாதத்திற்கு முன்னர் தரிசித்துக்கொண்டார்கள். ஹக்ரியிலிருந்து ஸ்ரீ ஆசார்யர்கள் மேலும் தமது பாதயாத்திரையை தொடர்ந்துள்ளார்கள். பெல்லாரிக்கும் ஹாஸ்பெட்டுக்கும் நடுவில் உள்ள தோரணகல்லு என்னும் இடத்தில் பாரத பிரதமர் மொரார்ஜி தேசாய் ஸ்ரீ ஆசார்யர்களை 26-9-78-ஆம் தேதி தரிசித்து தனிமையில் இருபது நிமிடங்கள் உரையாடினார். பெல்லாரிக்குச் சுமார் 30 மைல் தூரமுள்ள சாந்தூர் என்னும் இடத்தில் 12-10-1978 இல் ராஷ்டிரபதி நீலம் ஸஞ்சீவி ரெட்டி தமது குடும்பத்துடன் ஹெலிகாப்டரில் வந்து ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசித்து அவர்களது ஆசியைப் பெற்றுப் போனார்.

———

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் பூர்வாசிரம வரலாறு

### பாட்டனுர் : பெரியகுடி பஞ்சாபகேச ஐயர்

சோழ வள நாட்டில் தஞ்சை ஜில்லாவில் மன்னுர்குடி தாலுக்காவில் பெரியகுடி என்னும் சிற்றூரில் 19 வது நூற்ருண்டில் வேங்கடராமய்யர் என்னும் அந்தணர் வசித்து வந்தார். அவர் ரிக் வேதி. ஔசத்ய கோத்திரத்தில் வடமர் பிரிவை சார்ந்தவராவர். அவரது மூதாதையர் அதே தாலுக்காவில் வெண்ணுற்றங்கரையிலுள்ள தண்ணீர் குன்னம் சாத்தனூரில் வசித்து வந்ததாகக் கூறப்படுகிறது. ஆசார அனுஷ்டானங்களில் மிகுந்த நெறியுடன் விளங்கிய வேங்கடராமய்யருக்கும் அவரது மனைவி சீதாலெக்ஷ்மி அம்மாளுக்கும் பிறந்தவர் பஞ்சாபகேச ஐயர். பெரியகுடியில் ஓர் நடுத்தர மிராசுதாரராக வாழ்ந்து வந்த அவா தந்தையைப் போல ஆசார சீலராகவும் வேத வித்பன்னர்களை ஆதரிப்பவராகவும் உறவினர்களுக்கும் மற்ருேருக்கும் உதவி புரிகிறவராயும் தமது குடும்பத்தை நடத்தி வந்தார். ஊரார் யாவரும் அவரிடம் மிகுந்த மரியாதையையும் மதிப்பையும் காட்டி வந்தனர்.

### தந்தை மகாதேவ ஐயர்

பஞ்சாபகேச ஐயருக்கும் அவரது மனைவியார் யோகாம்பாளுக்கும் சென்ற பிலவ வருஷம் சித்திரை மாதம் 29-ஆம் தேதி (11-5-1901) ஜனித்த குமாரன் மகாதேவன் ஆவர். மகாதேவனுக்கு தந்தையார் தமது தந்தையின் பெயராகிய வேங்கடராமன் என்றே நாமகரணம் செய்வித்தார். ஆனுல் தந்தையின் பெயரைச் சொல்லி தனயனை அழைப்பது உசிதமில்லை யென்பதிஞல் மகாதேவன் என்றே அழைக்கலாஞர். தனது அந்த ஒரே குமாரனுக்கு தக்கவயதில் உபநயனம் செய்வித்து நல்ல கல்விப் பயிற்சியும் அளிக்க வேண்டுமென்று பஞ்சாபகேச ஐயர் விரும்பிஞர். ஆனுல் பெரியகுடி என்னும் சிற்றூரில் அதற்கு ஏற்ற வசதிகள் இல்லாமல் இருந்ததால் பெரியகுடியில் இருந்த தமது நில புலன்களை விற்றுவிட்டு பக்கத்தில் உள்ள சிறிது பெரிய ஊராகிய ஆதிச்சபுரத்தில் குடியேறிஞர். ஆதிச்சபுரத்தில் மகாதேவய்யரது ஆரம்பக் கல்வியும் பின்னர் மன்னுர்குடியில் உயர்தரக் கல்வியும் நடைபெற்றது. மகாதேவய்யரது



1954-இல் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பிரதமசிஷ்யராக
தேர்ந்தெடுத்த உடன் தர்சனம் கொடுக்கிறார்கள்.



காஞ்சி சர்வதீர்த்தமும், மேலண்டகரையில் அமைந்துள்ள முக்தி மண்டபமும்:
இந்தமண்டபத்தில் ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளை 1954-இல் ஸ்ரீபரமாசார்யர்கள்
பிரதம சிஷ்யராக ஏற்றுக்கொண்டு ஆச்ரமம் அளித்தார்கள்



ஸ்ரீ ஆசார்யர்கள் காலை ஜபம் முடிந்தவுடன்
பக்தர்களுக்கு அளிக்கும் அபூர்வ தர்சனம்



ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி கோயில்



1952-இல் ஸ்ரீ ஆசார்யர்கள் தருமபுரத்திற்கு விஜயம் செய்தசமயம் தர்மபுரம் ஸ்ரீ பண்டாரசந்நதிகளுடன்



1965-இல் சென்னைக்கு விஜயம் செய்த சமயம் அமெரிக்க தூதர் டாக்டர் எ. பி. பிரான்கிளினுக்கு ஸ்ரீஆசார்யர்கள் அளித்த பேட்டி.

இருபதாவது வயதில் மன்னார்குடி தாலுக்கா நெம்மேலி ஆத்ம நாதய்யரின் குமாரி பார்வதி அம்மாளை (1920-இல்) அவருக்கு மணம் செய்து வைக்கப்பட்டது. அந்த அம்மாளும் சுமார் பத்து ஆண்டுகளுக்கு மேல் தன் கணவருடன் குடும்பத்தை நடத்தி விட்டு எதிர்பாராத வகையில் காலமாகி விட்டார். காலமான பார்வதி அம்மாள் விட்டுப்போன இரண்டு ஆண் குழந்தை களையும் இரு பெண்களையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அந்தப் பால்ய வயதில் மகாதேவய்யருக்கு ஏற்பட்டு விட்டது. அதற்கு மேலும் ஓர் சோதனை மகாதேவய்யருக்கு நேர்ந்தது. துரதிஷ்ட வசமாக அக்குழந்தைகளில் மூவர் ஒருவர்பின் ஒருவ ராகக் காலமாகிவிட்டனர். இதன் நடுவில் மகாதேவய்யரின் மனதுக்குச் சற்று நிம்மதி ஏற்பட ஓர் நற்செய்தி கிடைத்தது. இது அவரது குடும்ப வாழ்க்கையில் ஓர் திருப்பத்தை ஏற்படுத்தியது. 1925-ஆவது ஆண்டில் அக்காலத் தென் இந்திய ரெயில்வேயில் லோகோ டிபார்ட்மென்டில் ஓர் உதவியாளர் (clerk) வேலையில் அவர் நியமிக்கப்பட்டார். அந்த இளம் பருவத்தில் சின்னஞ்சிறு குழந்தைகள் தவறியதாலும் மிஞ்சியுள்ள தாயில்லாத ஒரு பெண் குழந்தையை வளர்க்க வேண்டிய கடமை தம்மை அடைந்து விட்டதாலும் மகாதேவய்யர் மிக்க கவலையுடன் இருந் தார். இந்தச் சமயத்தில் பக்கத்துக் கிராமமாகிய இருள்நீக்கி என்னும் ஊரில் வசித்து வந்த மிராசுதார் ராமாமிருத ஐயர் தம் பெண் சரஸ்வதியை மகாதேவய்யருக்கு இரண்டாவது தாரமாக மணம் செய்விக்க விரும்பி உறவினர்கள் மூலம் தமது அபிப்ராயத்தை அவருக்குத் தெரிவிக்கச் செய்தார்.

**இருள்நீக்கியில் தாய்வழிப் பாட்டனார் ராமாமிருத ஐயர்**

இருள்நீக்கி என்னும் சிறப்புப் பெயருடன் விளங்கும் இந்தச் சிற்றூர் மன்னார்குடியிலிருந்து திருத்துறைப்பூண்டி சாலையில் கோட்டூர் என்னும் இடத்திலிருந்து சுமார் மூன்று கிலோமீட்டர் தூரத்திலுள்ளது. கோட்டூர் வரை தற்காலம் பஸ் வசதி உண்டு.

பொதுவாக ஊர்களுக்குப் பெயர் சூட்டியவர்கள் அர்த்தம் அற்றதும் சம்பந்தமில்லாததுமான பெயர்களைச் சூட்டிவிடுகிறார் கள் அல்லவா! இருள்நீக்கியென்னும் இப்பெயரை இட்டவர்கள் மிகுந்த தீர்க்க தரிசிகளாக இருந்திருக்கவேண்டுமெனத் தோன்று கிறது. மானிடர்களின் மன இருளைப் போக்க ஸ்ரீ ஆதி சங்கரரின் மரபில் ஓர் துறவி அவ்வூரில் தோன்றப் போகிறார் என்னும் காரணத்தினால் இப்பெயரை இட்டார்களோ என்றுகூட நினைக்க

இடமிருக்கிறது. இனி அந்த ஊரின் அழகைக் காணலாம். ஊருக்கு வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் அரிச்சந்திர நதி என்னும் சிற்ருறு ஓடுகிறது. அதைச் சுற்றிலும் பசுமையான நெல் வயல்கள்; மற்றும் தென்னைமரத் தோப்புகளையும் காண் கிருேம். அக்ரஹாரத்திற்குக் கிழக்கில் ஸ்ரீ கைலாச நாதர் ஆலயம் அமைந்துள்ளது. அம்பிகையின் பெயர் சிவகாமசுந்தரி. ஆலயத்தை அடுத்து ஓர் அழகிய தடாகம். மேற்கில் ஓர் விஷ்ணு ஆலயத்தைத் தரிசிக்கலாம். ஸ்வாமியின் பெயர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயண பெருமாள். தெற்கிலும் வடக்கிலும் கிராம தேவதை களின் ஆலயங்கள். ஸ்ரீ ராமரது வனவாஸத்தின் நடுவில் அவரது திருவடி இந்த ஊரில் அமைந்ததாகக் கர்ண பரம்பரையாகக் கூறப்பட்டு வருகிறது. சென்ற நூற்ருண்டிலும் அதற்கு முன் னரும் வேத விதிப்படி வேள்விகள் பல நடத்திய அக்னி ஹோத் திரிகள் அவ்வூரில் வாழ்ந்து வந்தனர். அவர்களது மரபில் தோன்றியவர் பிரம்மஸ்ரீ வீராசாமி கனபாடிகள் என்னும் வேத விற்பன்னர். அவர் திருவானைக்காவலில் ஸ்ரீ ஜகத்குரு வித்யாஸ்தானத்தில் யஜுர்வேதத்திற்கு ப்ரதான அத்யா பகராக விளங்கி வந்தார். இவரிடம் வேதம் கற்ற பலர் தற் காலம் புகழ்பெற்ற வேத விற்பன்னர்களாகத் திகழ்கின்றனர்.

இருள்நீக்கி ராமாமிருத ஐயர், வீராசாமி கனபாடிகளின் பெண்ணை மணம் புரிந்துகொண்ட அவருடைய மருமகனுர்.

### மகாதேவய்யரது இரண்டாவது விவாகம்

நல்ல ஒழுக்கமும், சாந்த குணமும், கர்மானுஷ்டானங்களில் பற்றும், உத்யோகமும் உள்ள மகாதேவய்யருக்குத் தம் பெண் ஸரஸ்வதியை விவாகம் செய்துவைக்க வேண்டுமென்னும் உத்தே சத்தைப் பந்துக்கள் மூலமாகவும், மாமனுர் வீராசாமி கனபாடிகள் மூலமாகவும் ராமாமிருத ஐயர் மகாதேவய்யருக்குத் தெரிவிக்கச் செய்தார். அப் பெரியோர்களின் ஆசியுடன் அந்த விவாகம் இருள் நீக்கியில் ஸ்ரீமுக வருஷம் ஆனி மாதம் (1934-இல்) நடை பெற்றது.

### சுப்ரமண்யன் ஜனனம்

தமக்குப் புத்திர பாக்கியம் கிட்டவேண்டும் என்ற அவா வுடன் மகாதேவய்யர் தம்பதிகள் தங்கள் குல தெய்வத்தை ஆராதித்தும் அன்னதானங்கள் பல செய்தும் வந்தனர். அவர் களது பிரார்த்தனைக்குப் பலன் சீக்கிரமே கிடைத்துவிட்டது.

சென்ற யுவ வருஷம் ஆடி மாதம் 3-ஆம் தேதி (18-7-1935) குருவாரம் அவிட்ட நக்ஷத்திரத்தில் ஓர் ஆண் மகவை ஸரஸ்வதி அம்மாள் பெற்ருர். சிசு பிறந்த சமயம் சுப சூசகங்கள் பல காணப்பட்டன. ஊரில் முக்யமாகத் தரும சிந்தனையுடன் விளங்கிய ராமாமிருத ஐயர் பெண்ணுக்கு ஆண் குழந்தை பிறந்ததைப் பாராட்ட ஊர் மக்கள் திரண்டு வந்தனர். குழந்தையைக் கண்டு அக மகிழ்ந்தனர். குழந்தைக்கு நாம கரணம், ஜாதகர்ம, அன்ன ப்ரசானம் முதலான கர்மாக்கள் விதிப்படி நடைபெற்றன. பெற்ருேர்களுக்குத் திருப்பதி வேங்கடாசலபதி குல தெய்வமாக இருந்தாலும் குடும்பத்தில் எல்லோருடைய அபிப்ராயப்படி அக் குழந்தைக்கு சுப்ரமண்யன் என்றே பெயர் இட்டார்கள். பாலாஜியும்-குமரனும் ஒருவனே என்னும் தத்துவத்தை அவர்கள் உணர்ந்தார்கள் போலும்! பாலகன் சுப்ரமண்யனுக்கு ஐந்தாவது வயதில் சௌளம்-அக்ஷராப்யாசம் என்னும் கர்மாக்களைச் செய்து முடித்தார்கள். அக்ஷராப்யாசம் வீட்டிலேயே குருமுகமாக நடைபெற்றது. அதன் பின்னர் மகாதேவய்யர் மைந்தனை விழுப்புரம் பீமநாயக்கன் தோப்பில் உள்ள ஆரம்பப் பள்ளியில் முதலாவது வகுப்பில் சேர்த்து, பள்ளிப் படிப்பைக் கற்கச் செய்தார்.

**உபநயனம்**

மூன்று ஆண்டுகள் (மட்டும்) பள்ளிக்கூடப் படிப்பு முடிவு பெற்றவுடன் எட்டு வயதினஞன தம் குமாரனுக்குத் தந்தை உபநயனம் செய்யத் தீர்மானித்தார். சுபானு வருஷம் சித்திரை மாதம் ஞாயிற்றுக் கிழமை (9-5-1943) ஆதிச்சபுரத்தில் உபநயனம்-பிரம்மோபதேசம் விதிப்படி நடைபெற்றன. அதே முகூர்த்தத்தில் மகாதேவய்யரின் முதல் மனைவியின் பெண் லக்ஷ்மியின் விவாஹமும் நடைபெற்றது. வேத வித்பன்னர்கள் பலர் அந்த உபநயனத்திற்காக வெளியூர்களிலிருந்து வரவழைக்கப்பட்டனர். அவர்கள் யாவருக்கும் மகாதேவய்யர் தகுதிக்குத் தக்கவாறு சம்பாவனைகள் வழங்கினுர்.

**சகோதரர்கள்**

சுப்ரமண்யனுக்குப் பின்னர் மகாதேவய்யருக்குத் தொடர்ந்து இரு புதல்வர்கள் ஜனித்தார்கள். அவர்களில் மூத்தவனுகிய விச்வநாதன் தற்காலம் ஸ்ரீ மடத்தின் நிர்வாகத்தில் பங்கு ஏற்றுச் சேவை புரிந்துவருகிருர். மற்றவர் ராமகிருஷ்ணன், சென்னை

யில் ஸ்டேட் பாங்கில் பணிபுரிந்து வருகிறார். இவர்கள் தந்தை யுடன் சென்னைக்கு அடுத்த திருவான்மியூரில் வசித்து வருகின் றார்கள்.

### மகாதேவய்யரின் ஆசார்ய பக்தி

மகாதேவய்யர் விழுப்புரத்துக்கு உத்யோகமாக வந்த இரண் டொரு ஆண்டுகளில் ஸ்ரீ காமகோடிபீடம் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் தரிசனமும் தொடர்பும் அவருக்கு அடிக்கடி கிடைத்து வந்தன. ஒன்றுக்குமேல் புதல் வர்களைப் பெற்றிருக்கும் ஒவ்வொரு பிராம்மண குடும்பமும் ஒரு பையனையாவது வேதம் பயில பாடசாலைகளுக்கு அனுப்பிவைக்க வேண்டுமென்று ஸ்வாமிகள் அவ்வப்போது கூறிவந்த உபதே சத்தை மகாதேவய்யர் தம் மனத்தில் பதியவைத்துக்கொண்டு தம் மூத்த குமாரனை வேதம் பயில அனுப்புவது எனத் தீர் மானம் செய்துகொண்டார். இந்தத் தீர்மானம் அவரிடம் உள்ள தீவிரமான ஆசார்ய பக்தியையும், தியாகச்செயலையும், அவை களுக்கும் மேலாக வேதத்தில் அவருக்குள்ள நம்பிக்கையையும் நன்கு வெளிக்காட்டுகிறது. மகாதேவய்யர் தமக்கென ஓர் கொள் கையை ஏற்படுத்திக்கொண்டு விட்டாரானால் அதிலிருந்து அவரை மாற்றுவது சுலபமன்று. அவர் கொள்கையெல்லாம் நல்ல காரி யங்களில் ஈடுபடுவதும் ஸ்ரீ ஆசாரியர்களின் ஆக்ஞைகளைத் தம்மா லானவரை நிறைவேற்றுவதுமேதான். உதாரணமாகச் சம்ஸ் கிருத பாஷையைக் குழந்தைகளுக்குச் சிறுவயதிலேயே கற்பிக்க ''அமர பாரதி'' என்ற ஓர் ஸ்தாபனத்தைத் துவக்கி அதை மகா தேவய்யரே நிர்வகிக்க வேண்டுமென்பது ஸ்ரீ ஸ்வாமிகளின் கட்டளை. அதன்படி ''அமர பாரதீ பரிக்ஷா ஸமிதி'' என்னும் ஸ்தாபனத்தின் மூலம் சம்ஸ்கிருத போதனுமுறை புஸ்தகங்களை வெளியிட்டு வருஷந்தோறும் நாடெங்கிலும் அமர பாரதி ஸமிதி யால் நடத்தப்படும் பரீக்ஷைகளில் ஆயிரக்கணக்கான சிறுவர், பெரி யோர் கலந்துகொள்ள ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தாபனமும் தற்சமயம் ஒரு கமிட்டியாரால் நடத்தப்பட்டு வருகிறது. வருடந்தோறும் பரீக்ஷையில் தேறியவர்களுக்கு, தங்கம் வெள்ளி மெடல்கள், சான்றுபத்திரங்கள் வழங்கப்பட்டு வரு கின்றன. மேலும் மத சம்மந்தமான நூல்கள் சிலவற்றையும் மகா தேவய்யர் வெளியிட்டு வருகிறார். நாட்டின் நலனுக்காக வேத சம்பந்தமான பல ஹோமங்களையும் அவ்வப்போது நடத்தி வருகிறார்.

**வேத அத்யயனம்**

ரிக்வேதம் கற்பிக்கும் பாடசாலைகள் நமது தமிழ் நாட்டில் அதிகமாக இல்லாததால் சுப்ரமணியனை யாரிடம் அனுப்புவது என்ற ஓர் பிரச்னை மகாதேவய்யருக்கு எழுந்தது. முடிவாகத் திருவிடைமருதூரில் ஸ்ரீ மடம் நிர்வாகத்தின் கீழ் பிரம்மஸ்ரீ குஞ்சு சாஸ்திரிகள் என்னும் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளைக் கொண்டு நடைபெற்றுவரும் பாடசாலையில் அவனைச் சேர்ப்பதென முடிவு செய்தார். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் ஸ்ரீ ஆசார்யர்களின் பூர்வாச்ரம இளைய சகோதரர் ஆவார். தம்முடைய இந்தத் தீர்மானத்தை ஸ்ரீ ஆசார்யர்களிடம் தெரிவிக்க விரும்பி மகாதேவய்யர் பாலகன் சுப்ரமண்யனையும் அழைத்துக்கொண்டு காஞ்சீபுரம் சென்றார். இது 1944 பிப்ரவரி மாதம் ஆரம்பத்தில் நடைபெற்றது. அப்பொழுது ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலயக் கும்பாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. கும்பாபிஷேகத்திற்கு முன்பே (4-2-1944) சுபானு வருஷம் தை மாதம் 22-ஆம் தேதி வெள்ளிக்கிழமை ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தின் முன்னிலையில் அவர்கள் ஆக்ஞைப்படி விக்னேச்வர பூஜை செய்து ஸ்ரீ குருநாதர் அனுக்ரஹத்துடன் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் சுப்ரமண்யனுக்கு வேத அத்யயனம் ஆரம்பித்து வைத்தார். அது சமயம் ஸ்ரீ மடத்தின் பரம்பரை ரிக்வேத உபாத்யாயர் மாயவரம் பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகளும் கூட இருந்தார். இவர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திகளின் குரு ஆவார். பிறகு 7-2-1944 திங்கட்கிழமை நடைபெற்ற ஸ்ரீ காமாக்ஷி ஆலயக் கும்பாபிஷேகத்தைத் தர்சனம் செய்துகொண்டு மகாதேவய்யர் சுப்ரமண்யனுடன் விழுப்புரம் திரும்பினர்.

**குருகுல வாஸம்**

ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்பாள் ஆலயக் கும்பாபிஷேகத்திற்குப் பின்னர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் திருவிடைமருதூர் திரும்பிய பொழுது விழுப்புரத்தில் இறங்கி, சுப்ரமண்யனையும் தம்முடன் திருவிடைமருதூருக்கு அழைத்து வந்தார். குருகுல வாஸ காலத்தில் சிஷ்யன் நியமங்கள் பலவற்றை அனுஷ்டிக்க வேண்டும். ஆசாரத்தில் நியமம், தூக்கத்தில் நியமம், வேத பாடம் சொல்லிக் கொள்வதில் நியமம் முக்கியமானவை. ஸந்தியா வந்தனம், அக்னி காரியம் முதலான நித்ய கர்மாக்களைச் சரியான காலத்தில் கடைப்பிடிக்கச் செய்வதில் வித்யார்த்திகளிடம் குரு சற்றுக் கண்டிப்பாகவே இருப்பார். குருவிடம் பக்தியுடன் நடந்து

கொள்ளும் எந்த மாணவனும் சுலபமாக முன்னுக்கு வருவதில் சந்தேகமில்லை. சுப்ரமண்யனும் குருவின் ஆக்ஞைகளை அவ்வப் போது நிறைவேற்றி நல்ல மாணவனாகத் திகழ்ந்தான். மாயவரம் பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகளும் அடிக்கடி சுப்ரமண்யனுக்குத் தர்ம சாஸ்திரங்களில் உள்ள நுணுக்கங்களைப் போதித்து வந்தார். மேலும் அக்காலத்தில் சம்ஸ்கிருத ஆரம்பப் பயிற்சியும் நடை பெற்றுவந்தது. ரிக்வேத ஸம்ஹிதை பூர்த்தியடைவதற்குச் சுமார் ஆறு ஆண்டுகள் சென்றன. சில சமயங்களில் மகாதேவய்யர் திருவிடைமருதூர் வந்து மகனைச் சந்தித்துப் போவார். மற்றச் சமயங்களில் சுப்ரமண்யனும் பெற்றோரைக் காணச் சென்று வரு வதும் உண்டு. ஆயினும் சின்னஞ்சிறு வயதினனான அன்புப் புதல் வனைப் பிரிந்திருப்பது பெற்றோர்கள் உள்ளத்தில் ஓர் குறைபா டாகவே இருந்திருக்க வேண்டும்!

### வேத அத்யயனம் பூர்த்தி

வித்யார்த்தி சுப்ரமண்யனின் வேத அத்யயணம் 1948-ஆம் வருஷ ஆரம்பத்தில் முக்கிய பாகமாகிய ஸம்ஹிதையுடன் பூர்த்தி அடைந்து விட்டது. அதற்குமேல் பதம், கிரமம், கனம் என்னும் வரிசைகளை அத்யயனம் செய்யவேண்டும். இத்தருணத்தில் மகாதேவ ஐயருக்கு விழுப்புரத்திலிருந்து திருச்சிக்கு மாற்ற லாகியது. தம் இரு புதல்வர்களுடன் அவர் விழுப்புரத்தி லிருந்து திருச்சிக்கு ஜாகை மாற்றிக் கொண்டார். திருவானைக் காவலில் உள்ள ஸ்ரீ மடம் பாடசாலையில் சுப்ரமண்யனைச் சேர்த்து வெவ்வேறு வேத சாகைகளின் உபநிஷத்துகளை, அந்தந்த வேதம் கற்ற வேத வித்பன்னர்களிடம் பயில ஏற்பாடு செய்யலாம் என மகாதேவய்யர் எண்ணினார். ஸ்ரீ ஆசார்யர்களும் அவ்விதமே செய்யும்படி ஆக்ஞாபித்தார்கள்.

### ஸ்ரீ ஆசார்யர்களின் திருவுள்ளம் : எதிர்பாராத நிகழ்ச்சி

ஸ்ரீ காமகோடி பீடத்திற்கு அதிபதியாக ஒருவரைத் தமது காலத்திலேயே நியமனம் செய்து அதற்குரிய பயிற்சிகளை எல்லாம் தாமே அளிக்க வேண்டும் என்பதை ஸ்ரீ ஆசார்யர்கள் பல வருஷங் களாகவே தங்கள் மனத்தில் நினைத்து வந்தார்கள். எதிர் காலத் தில் இதற்குத் தகுதி வாய்ந்த ஒருவர் கிடைக்க வேண்டுமே என்ற கவலை அவர்களது மனத்தில் குடிகொண்டிருந்தது. அதற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் சிஷ்யர் இளைஞராகவும் பிரம்மசாரியாக வும் ரிக்வேதத்தைச் சார்ந்தவராகவும் இருக்கவேண்டும் என்பது

நியதி. அந்த வேதத்தை ஒருவாறு அத்யயனம் செய்தவராகவும் இருக்க வேண்டுமென்பதும் ஸ்ரீ ஸ்வாமிகளின் அவா. மேலும் அந்த இளைஞர் ஆசார அனுஷ்டானங்களுடன் கூடின ஓர் நல்ல குடும்பத்தில் பிறந்தவராக இருக்க வேண்டும் என்றும் அவர்கள் விரும்பினார்கள். இவ்விதம் எல்லாத் தகுதிகளும் ஒருங்கே அமைந்த ஒருவர் கிடைப்பது அரிதாக இருந்த காரணத்தினால் ஸ்ரீ ஸ்வாமிகளது விருப்பம் நிறைவேறுவதில் தாமதம் ஏற்பட்டு வந்தது. இந்தச் சமயத்தில் சுப்ரமண்யனைப் பற்றிய நினைவு ஸ்ரீ ஸ்வாமிகள் மனத்தில் உதித்தது. இளைஞர் சுப்ரமண்யனும் அப்பொழுது ரிக்வேத ஸம்ஹிதை அத்யயனத்தைப் பூர்த்தி செய்து விட்டார். தமது விருப்பத்தை முதலில் ஸ்ரீ மடம் மானேஜர் சி. எஸ். விச்வநாத ஐயர் மூலமாகவும், மடம் உபாத்யாயர் மாயவரம் பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் மூலமாகவும் மகாதேவய்யரிடம் தெரியப்படுத்தும்படி ஸ்ரீ ஸ்வாமிகள் கட்டளை பிறப்பித்திருந்தார்கள். அவர்கள் இருவரும் இரண்டொருமுறை மகாதேவய்யரைத் தனித்தனியே சந்தித்து ஸ்வாமிகளது விருப்பத்தைத் தெரிவித்தார்கள். இவ்விஷயம் ஒருவாறு ரகசியமாகவே நடைபெற்றது. ஸ்ரீ பரமாசார்யர்கள் அபிப்பிராயத்தைக் கேட்டதும் மகாதேவய்யர் தீவிரமாக ஆலோசிக்கலானார்.

**பெற்றோரின் தயக்கம்**

மிகுந்த மரியாதைக்குரிய ஸ்ரீ மடம் மானேஜர், ஆஸ்தான பண்டிதர் இவர்கள் மூலம் ஸ்ரீ ஆசார்யர்களின் ஆக்ஞையை அறிந்த மகாதேவய்யர் தமது முடிவை உடன் தெரிவிக்க முடியாதவராகக் குடும்பத்தில் உள்ள மற்றவர்களையும் சுப்ரமண்யனையும் கலந்து ஆலோசனை செய்து முடிவு சொல்வதாகத் தெரிவித்தார். பின்னர் தம் பத்னி ஸரஸ்வதி அம்மாளையும், மற்றப் பந்துக்களையும், நெருங்கிய நண்பர்களையும் கலந்து பேசிய பின் இது உலக க்ஷேமத்திற்காக நடைபெற வேண்டிய மகத்தான காரியமாக இருப்பதால் ஸ்ரீ ஆசார்யர்களது ஆக்ஞைப்படி நடப்பதே குடும்பத்துக்கு க்ஷேமம் அளிக்கும் என்ற முடிவுக்கு வந்தார்.

**ஈச்வரன் கட்டளை**

ஆயினும் சுப்ரமண்யத்தின் சம்மதத்தைத் தெரிந்துகொள்ள சில நாட்கள் தாமதமாயிற்று. அப்பொழுது பதிமூன்று வயதே நிறைவுபெற்றப் பாலகனாக அவர் இருந்தார். இம்மகத்

தான பீடத்தின் ஆதிபத்யத்தையும் துறவறத்தையும் மேற்கொள்வதில் ஏற்படக்கூடிய பொறுப்புக்களைப் பற்றி அவரது பிஞ்சு உள்ளம் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியது. அதே சமயம் பெற்ருேரின் முடிவையும் சூசகமாக அவர் தெரிந்துகொண்டார். இது சர்வேச்வரன் கட்டளையாகவும் குருநாதரின் ஆக்ஞையாகவும் வந்துள்ளதால் இந்தத் துறவரத்தை ஏற்றுக் கொள்ள ஒருவாறு அவர் சம்மதம் தெரிவித்தார். இந்த முடிவை ஸ்ரீ ஆசார்யர்களிடம் 1948-ஆவது வருஷம் விழுப்புரத்தில் அவர்கள் விஜயம் செய்திருந்த சமயம் மகாதேவய்யர் விக்ஞாபனம் செய்து கொண்டார். ஆனுல் சுப்ரமண்யனுக்கு ஆச்ரமம் அளிக்கும் சமயத்தைப் பற்றித் தீர்மானம் ஏதும் அப்பொழுது எடுக்கப்படவில்லை. அன்ருருக்குப் பதினெட்டு வயது நிறைவு பெற்றுப் பத்தொன்பதாவது வயதில் ஆச்ரமம் அளிக்கலாமென ஸ்ரீ ஆசார்யர்கள் தீர்மானித்தார்களோவென நினைக்க இடமிருக்கிறது. மகாதேவய்யரின் விருப்பப்படி சுப்ரமண்யன் திருவிடைமருதூரிலிருந்து ஜம்புகேச்வரம் வித்யாஸ்தானத்துக்கு மேற்கொண்டு வித்யாப்யாசத்துக்கு அனுப்பப்பட்டார்.

### திருவானைக்காவல் வித்யாஸ்தானத்தில் பயிற்சி

திருவானைக்காவல் ஸ்ரீ மடத்தில் "ஸ்ரீ ஜகத்குரு வித்யாஸ்தானம்" என்னும் பெயருடன் 1923-ஆவது வருஷம் ஓர் பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. வேதம், வேதாந்தம் இரண்டையும் கற்பிக்க அங்கு வகை செய்யப்பட்டது. 1923-ஆவது வருஷம் ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீ அகிலாண்டேச்வரீ அம்பாளுக்கு நடத்திய தாடங்க (ஜீர்ணோத்தாரண) ப்ரதிஷ்டை மஹோத்ஸவத்தையடுத்து இந்த வித்யாஸ்தானம் நிறுவப்பட்டது. இதில் பழமார்நேரி ராமஸ்வாமி சாஸ்திரிகள், திருவையாறு விச்வநாத சாஸ்திரிகள், போலகம் ராம சாஸ்திரிகள் போன்ற மகாவித்வான்கள் அத்யக்ஷகர்களாக இருந்திருக்கிருர்கள். தற்காலம் ப்ரக்யாதி பெற்ற பண்டிதர்களான வேப்பத்தூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள், பழுவூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள் முதலானவர்கள் இந்த வித்யாஸ்தானத்தின் மாணவர்கள். சுப்ரமண்யன் திருவானைக்காவல் ஸ்ரீமடம் வித்யாஸ்தானத்தில் சேர்ந்த சமயம் வித்யாஸ்தானத்தின் அதிபராக திருவையாறு விச்வநாத சாஸ்திரிகளின் குமாரர் ஸ்ரீ டி. வி. பாலகிருஷ்ண சாஸ்திரிகள் இருந்தார். அவரிடம் சுப்ரமண்யன் காவியம், நாடகம் இவைகளைக் கற்ருர். ரிக்வேதத்தைத் தொடர்ந்து சிவராமகிருஷ்ண

சாஸ்திரிகளிடம் கற்ருர். உபநிஷதம் முதலானவைகளைத் தம் தாயாரின் பாட்டனுர் ஸ்ரீ வீராசாமி கனபாடிகளிடம் கற்றுக் கொண்டார். தற்காலம் அவசியமாகக் கருதபட்ட ஆங்கிலக் கல்வியையும் அப்பொழுது அவர்கள் கற்று வந்தார்கள். இவ்வாறு சுப்ரமண்யன் திருவானைக்காவலில் வித்யாப்யாஸம் செய்துவந்த பொழுது ஸ்ரீ காமகோடி பீடத்துக்குப் பிற்கால அதிபராக ஸ்ரீ ஆசார்யர்கள் அவரைத் தேர்ந்தெடுக்கப்போகும் மஹத்தான செய்தி ஸ்ரீ மடத்தின் சிஷ்யர்களுக்கு ஒருவாறு தெரிய வந்தது. மகாதேவய்யரும் அப்பொழுது திருச்சியில் இருந்தபடி யால் அடிக்கடி தம் குமாரரைச் சந்திக்க திருவானைக்காவலுக் குச் சென்று வந்தார். சுப்ரமண்யனும் தாம் பீடாதிபதியாகப் போவதைப் பாராட்டிக் கொள்ளாமல் சக மாணவர்களுடன் எவ்வித வித்தியாசத்தையும் காட்டிக் கொள்ளாமல் அவர்களுடன் சகஜமாகவே பழகி, வந்தார். எப்பொழுதாவது ஒரு மாணவர் அவர் பீடாதிபதியாகப்போவதைப் பற்றிச் சொன்னுல் அதை அவர் பொருட் படுத்தாமல் மௌனமாக இருந்து விடுவார். அவர் மாணவராக இருந்த காலத்தில் மிகவும் சங்கோசத்துடன் பிறரிடம் பழகுவார். மிதமாகவே பேசுவார். உபாத்யாயர்க ளிடம் மிகுந்த மரியாதையுடன் நடந்துகொள்வார்.

**க்ஷேத்ராடனம்**

சுப்ரமண்யனுக்கு வயது பதினேழு ஆயிற்று. தம் தனையன் ஸன்யாஸ ஆசிரமம் பெறுவதற்குமுன் அவனுடன் சேர்ந்து ஒருமுறை பாரத தேசத்திலுள்ள புண்ணிய க்ஷேத்திரங் களைத் தரிசித்தும் புண்ணிய நதிகளில் ஸ்னுனம் செய்தும் வர வேண்டும் என்பதாக மகாதேவய்யர் தம்பதிகள் விரும்பினுர்கள். அதற்காக அவர் இரண்டு மாதங்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு ஸ்ரீ ஆசார்யர்களின் அனுக்ரஹத்துடன் முதலில் தமிழ் நாட்டி லுள்ள பழனி, மதுரை, ராமேஸ்வரம். திருநெல்வேலி, திருக் குற்ருலம், கன்யாகுமரி இவ்விடங்களுக்குச் சென்று அங்குள்ள தேவாலயங்களைத் தரிசித்துக் கொண்டார்கள். பின்னர் மகாராஷ் டிர தேசத்தில் நாசிக், பஞ்சவடி, பண்டரீபுரம், புனு, பம்பாய் முதலான இடங்களையும், அதன் பின்னர் ஆக்ரா, மதுரா, டெல்லி, ஹரித்வார், ரிஷிகேசம் முதலான இடங்களையும் தரிசித்து வந்தார் கள். கோதாவரி, நர்மதை, கங்கை, யமுனை முதலான புண்ணிய நதிகளில் ஸ்நானம் செய்து வந்தார்கள். இந்தப் புனித யாத்திரை யின் பயனுகச் சுப்ரமண்யன் பாரத தேசத்தின் பல பாகங்களைப்

பற்றியும், அதன் புனிதத் தன்மை பற்றியும் ஒருவாறு தெரிந்து கொண்டார் எனக் கூறலாம். பாரத நாட்டில் வெவ்வேறு பிராந்தியங்களிலுள்ள மக்கள் வெவ்வேறு பாஷைகளைப் பேசி வருவதையும், நடை உடை பாவனையில் அவர்கள் வெவ்வேருகக் காணப் படுவதையும் நேரில் கண்டார். ஆனால் பொது கலா சாரத்திலும் தெய்வ வழிபாட்டிலும் எல்லோரும் ஒன்ருகத் திகழ்வதைப் பார்த்தார். நாட்டின் பொக்கிஷங்களாகக் கருதப் படும், வேதம், வேதாந்தங்கள், ராமாயணம், பாரதம், பாகவதம் மற்றும் இதிஹாஸ புராணங்களையெல்லாம் ஹிமாசலம் முதல் கன்யாகுமரி வரையுள்ள மக்கள் ஒரேவிதமாகப் போற்றி வரு வதைக் கண்டு மகிழ்ந்தார்.

### ஸ்ரீ ஆசார்யர்களின் ஆக்ஞை

மகாதேவய்யர் தம் குமாரருடன் க்ஷேத்திராடனத்தை முடித்துக்கொண்டு திரும்பி வந்ததும் திருவானைக்காவலில் சுப்ரமண்யனது வித்தியாப்யாஸம் தொடர்ந்து நடைபெற்றது. மேலும் இரண்டு ஆண்டுகள் வித்தியாப்யாஸம் முடிந்தவுடன் சுப்ரமண்யனுக்குப் பிராயம் பதினெட்டு முடிந்து பத்தொன்பது நடைபெற்றுக் கொண்டிருந்தது. 1954-ஆவது ஆண்டு மார்ச் மாதம் நடுவில் காஞ்சீபுரம் மடத்திலிருந்து மகாதேவய்யருக்கு அவரது குடும்பத்துடன் சுப்ரமண்யனையும் அழைத்துக்கொண்டு காஞ்சீபுரம் வரும்படியாக ஸ்ரீ மடம் மானேஜர் விச்வநாதய்யர் கையெழுத்துடன் ஓர் கடிதம் வந்தது. அதில் அந்த மாதம் 22-ஆம் தேதி சுப்ரமண்யனுக்கு ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞைபடி ஸன்யாஸ ஆச்ரமம் அவர்களால் கொடுக்க நன்னாள் நிச்சயிக்கப்பட் டிருப்பதாயும் கண்டிருந்தது. திருச்சியிலிருந்த மகாதேவய்யர் நல்ல முகூர்த்தத்தில் யாத்ரா தானங்கள் செய்துவிட்டுக் குடும்பத் துடன் காஞ்சிக்கு வந்தார். உலக க்ஷேமத்திற்காகவும் சிஷ்யர் களின் எதிர்கால நன்மைக்காகவும் சில ஆண்டுகளாக எதிர்பார்த் திருந்த இந்த மகத்தான நிகழ்ச்சி நடைபெறப் போவதைப் பற்றிய செய்தி சிஷ்யர்களுக்கும் ஸ்ரீ மடத்தில் தொடர்பு கொண் டிருந்த மற்றவர்களுக்கும் தெரியவந்தது. பாரத நாட்டிலுள்ள எல்லா தினசரி, வாரப் பத்திரிகைகளில் இச் செய்தி முன்ன தாகவே வெளியாகி இருந்தது. இந்த வைபவத்தைக் காண ஆயிரக் கணக்கான பக்த கோடிகள் காஞ்சீபுரம் வந்து சேர்ந்தனர்,

**குலதெய்வத்துக்குப் பிரார்த்தனை**

பதினெட்டு வயதைத் தாண்டிய சுப்ரமண்யன் ஸன்யாஸ ஆச்ரமம் பெற்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்து ப்ரதம சிஷ்ய ராக ஆவதற்கு முன் தம் தந்தை தாயாருடன் தங்கள் குல தெய்வமாகிய ஸ்ரீ வேங்கடாசலபதியைத் திருப்பதிக்குச் சென்று தரிசித்து வந்தார்.

**குருவிடம் உபதேசம் பெறுதல்**

இவருக்கு ஆச்ரமம் அளிக்கும் சம்பந்தமான பூர்வாங்க வைதிக காரியங்கள் 1954-ஆவது ஆண்டு மார்ச் 19 ஆம் தேதி காஞ்சியில் தொடங்கிற்று. காஞ்சி சர்வதீர்த்தம் மேலண்டை கரையில் உள்ள முக்தி மண்டபத்தில் அம்மாதம் 22-ஆம் தேதி குருநாதரால் அவருக்கு ஸன்யாஸ ஆச்ரமம் அளிக்கப்பட்டது. இந்த வைபவத்தைப் பற்றிய முழு விவரங்களை இந்தச் சரித்திரத் தின் 412, 413, 414, 415-ஆம் பக்கங்களில் காணலாம்.



## ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் பாரத தேச விஜய யாத்திரை

சுமார் பதினாறு ஆண்டுகள் குருநாதருடன் தங்கியிருந்த காரணத்தினால் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளையும் ஸ்ரீ பெரியவர்களையும் ஒருங்கே தரிசிக்கும் பாக்யம் சிஷ்யர்களுக்குக் கிடைத்துவந்தது. 1970-ஆவது ஆண்டின் நடுவில் ஸ்ரீ பெரிய வர்களின் அனுமதியின் பேரில் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தனிமையில் யாத்திரையை மேற் கொண்டார்கள். ஒன்பது ஆண்டுகளாக அவர்கள் மேற் கொண்டுள்ள இந்தப் பாதயாத்திரை கன்யாகுமரி முதல் ஹிமா சலம் வரை (நேபாளம் உள்பட) பரவியுள்ளது. இதில் (1) தமிழ்நாடு (2) ஆந்திர ப்ரதேசம் (3) கர்நாடகம் (4) கேரளம் (5) மகாராஷ்டிரம் (6) மத்திய ப்ரதேசம் (7) ராஜஸ்தான் (8) ஹரியானா (9) உத்திரப்ரதேசம் (10) பீஹார் (11) நேபாளம் (12) மேற்குவங்காளம் (13) ஒரிஸா ஆகியவை அடங்கும். ஸ்ரீ மடத்தின் பெரிய பரிவாரங்களுடன் (யானை, பசு, குதிரை, ஒட்டகம் உள்பட) இந்த யாத்திரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஆங்காங்கு திவ்ய க்ஷேத்திரங்களைத் தரிசித்தும் புண்ய நதிகளில் நீராடியும் வந்துள்ளார்கள். அவர்கள் தங்குமிடமெல்லாம் பல்லாயிர மக்கள், அவர்களின் ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி திரிபுரஸுந்தரி அம்பாளின் நித்ய பூஜை யைத் தரிசித்தும், தீர்த்தப்ரஸாதத்திற்காகக் காத்திருந்தும் அவர் களின் உபதேச மொழிகளைக் கேட்டும் அகமகிழ்ந்து வருகின் றனர். அவர்கள் விஜயம் செய்த சில முக்கிய இடங்களில் புதிதாக வேதபாடசாலைகளையும், சாஸ்திர பாடசாலை களையும் நிறுவியுள்ளார்கள். மேலும் பல நூதன ஆலயங் களைப் பிரதிஷ்டை செய்தும், பழைய ஆலயங்களுக்கு ஜீர்ணோத்தாரண (திருப்பணி) கும்பாபிஷேகங்களை நடத் தியும் வந்துள்ளார்கள். தமிழ் நாட்டில் 500க்கு மேற்பட்ட இந்து சமய மன்றங்களை நிறுவியுள்ளார்கள். ஆங்காங்கு வேத-சாஸ்திர பண்டிதர்களின் சபைகளைக் கூட்டி, பண்டிதர்களின் திறமைக்குத் தக்கவாறு அவர்களுக்குச் சம்மானங்கள் சால்வைகள் அளித்துக் கௌரவித்தும் வருகிறார்கள். அவர்களின் விஜய யாத் திரையைப் பற்றிய விவரங்களைச் சுருக்கமாகக் காண்போம்.

**முதலாவது யாத்திரை**

இந்த யாத்திரையில் 21-6-70 அன்று சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு 590 கிராம் எடையுள்ள நவரத்னங்களால்

செய்யப்பட்ட குஞ்சிதபாதத்தைச் சமர்ப்பணம் செய்தார்கள். இந்தக் குஞ்சிதபாதத்தில் 534 வைரக்கற்களும், 390 பச்சைக் கற்களும், 27 மரகதக்கற்களும் அடங்கியுள்ளன. இதன் மதிப்பு சுமார் 3 லக்ஷ ரூபாய்.

5-7-70 அன்று ஸ்ரீ அகிலாண்டேச்வரி சமேத ஸ்ரீ ஜம்புநாத ஸ்வாமி ஆலய கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள்.

**இரண்டாவது யாத்திரை**

காஞ்சீபுரத்திலிருந்து சேலம், கோயம்புத்தூர், பாலக்காடு மார்க்கமாக 21-4-1971-இல் காலடிக்கு விஜயம் செய்து ஸ்ரீ ஆதி சங்கரர் ஆலய தர்சனம் செய்து கொண்டார்கள். பின்னர் ஸ்ரீ குருவாயூர் ஆலயத் திருப்பணிக்கு 2-5-71 அன்று அடிக்கல் நாட்டி, திருப்பணியைத் தொடங்கி வைத்தார்கள். திருச்சூரில் ஸ்ரீ சங்கர ஜயந்தி மஹோத்ஸவம் நடத்தினர்கள்.

**மூன்ருவது யாத்திரை**

7-9-71 ஆம் தேதி காஞ்சியிலிருந்து புறப்பட்டுச் சித்தூர், பங்களூர், மைசூர் மார்க்கமாக 14-11-71 அன்று குடகு நாட்டிலுள்ள தலைக்காவேரியை (காவேரியின் உற்பத்தி ஸ்தானம்) அடைந்து அங்கு காவிரி புண்யநதியில் துலா ஸ்னனம் செய்தார்கள். அவ்விடமிருந்து தர்மஸ்தலா, மங்களூர், உடுப்பி, கோழிக்கோடு, திருச்சூர், குருவாயூர் மார்க்கமாகத் திருவனந்தபுரத்தை யடைந்தார்கள். திருவனந்தபுரத்தில் ஸ்ரீ சங்கர மடத்துக்கு அடிக்கல் நாட்டினர்கள். 21-4-72 - இல் கன்யாகுமரியில் அம்பிகை தர்சனம் செய்துகொண்டார்கள். பின்னர் திருநெல்வேலி, மதுரை மார்க்கம் இளையாத்தகுடி வந்து ஸ்ரீ பரமெஷ்டி குருஸ்வாமிகளின் அதிஷ்டானத்தை 16-6-72-இல் தர்சனம் செய்து கொண்டார்கள். புதுக்கோட்டை, தஞ்சாவூர், கும்பகோணம் மார்க்கமாகச் சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு 11-7-72 அன்று வைரத்தினல் தயாரிக்கப்பட்ட அபயஹஸ்தம் ஒன்றைச் சமர்ப்பணம் செய்தார்கள். 26-7-72 அன்று ஸ்ரீ பெரியவர்களுடன் வியாஸ பூஜையைக் காஞ்சீபுரம் சிவாஸ்தானத்தில் நடத்தினர்கள்.

**நான்காவது யாத்திரை**

இந்த யாத்திரை ஸ்ரீ ஸ்வாமிகள் மேற்கொண்ட யாத்திரைகளில் மிகவும் முக்யமானதாகும். ஸ்ரீபெரியவர்களின் ஆசி

யுடன் வஸந்த பஞ்சமியன்று (8-2-73) யாத்திரையைத் தொடங்கினார்கள். இது பதரீ, காசீ, நேபாள யாத்திரை யாகும். யாத்திரையைத் தொடங்குமுன் ஸ்ரீ ஸ்வாமிகள் 17-ஆம் தேதி திருமலையில் ஸ்ரீ வேங்கடேசரைத் தரிசித்துக் கொண்டு, சிகந்தராபாத், ஹைதராபாத் நாகபுர், நரஸிங்கபுர், ஜான்ஸி, குவாலியர், ஆக்ரா, மதுரா, டோல்பூர், மார்க்கமாய் மே மாதம் 30-ஆம் தேதி டில்லி மாநகரை அடைந்தார்கள். 7-6-1973-இல் டில்லியில் உத்தர ஸ்வாமி மலை ஆலயத்தின் ஸ்ரீ ஸ்வாமிநாதஸ்வாமி பிரதிஷ்டையையும் மஹாகும்பாபிஷேகத்தையும் பல்லாயிர மக்கள் தரிசிக்க நடத்தி வைத்தார்கள். ஜூன் மாதம் 27-ஆம் தேதி குருக்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். 9-7-1973 அன்று ஹரித்வார் க்ஷேத்திரத்திற்கு விஜயம். 15-7-73-அன்று ரிஷீகேசத்தில் வியாஸ பூஜை சாதுர்மாஸ சங்கல்பம்; 12-9-73-அன்று பூர்த்தி. 24-9-73-அன்று பதரீநாத் க்ஷேத்திர தர்சனம். அதையடுத்து பாண்டுகேச்வரத்தில் நவராத்ரி பூஜையை முடித்துக்கொண்டு 17-10-73-அன்று ரிஷீகேசத்தை அடைந்தார்கள். நவம்பர் மாதம் 22-ஆம் தேதி லக்னோவுக்கும், டிஸம்பர் 12-ஆம் தேதி கான்புருக்கும் விஜயம் செய்தார்கள். 30, 31-ஆம் தேதிகளில் அயோத்தியில் தங்கினார்கள். 1974 ஜனவரி மாதம் 8-ஆம் தேதி முதல் 17-ஆம் தேதி வரை அலகாபாத்தில் த்ரிவேணி ஸங்கமஸ்னானம்; சங்கராந்தி பண்டிகையை இந்த க்ஷேத்திரத்தில் கொண்டாடினார்கள். ஜனவரி 22 முதல் மார்ச் 10-ஆம் தேதி முடிய காசி (வாரணாசி); ஜனவரி 28-ஆம் தேதி ஹனுமான்கட்டில் ஸ்ரீ காமகோடீச்வரர் ஆலயப் பிரதிஷ்டை கும்பாபிஷேகம். காசியிலுள்ள சுமார் 200 சாஸ்திர பண்டிதர்களையும், அந்தந்த சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றவர்களைத் தனித்தனியே அழைத்துச் சபை கூட்டி அவர்கள் யாவருக்கும் தக்கவாறு சம்மானம் செய்தார்கள். சுமார் ஒரு மாதம் நடைபெற்ற இந்தச் சபையில் காசி மகாராஜாவும், மகா மஹோபாத்யாய ராஜேச்வர சாஸ்திரிகளும் கலந்துகொண்டார்கள். மார்ச் மாதம் 24 முதல் 31-ஆம் தேதி முடிய பாட்னா சமீபம் அனந்தபுரில் வஸந்த நவராத்ரி நடைபெற்றது. ஏப்ரல் மாதம் 1 ஆம் தேதி முதல் 13-ஆம் தேதி முடிய முகாம் பாட்னா. 18-ஆம் தேதி கயாவுக்கு விஜயம்.

ஸ்ரீ ஆசார்யர்கள் நேபாள மன்னரது அழைப்பை ஏற்றுக் கொண்டு 25-4-74 அன்று ரக்ஸாலிலிருந்து புறப்பட்டு, அம்லேக் கஞ்ச், காலிஸ்தான், பாலுங், [illegible], தான்காட் மார்க்க

மாக மே மாதம் 4-ஆம் தேதி நேபாள தலைநகரான காட்மாண்டுவை அடைந்தார்கள். நேபாள அரசாங்கம் ஸ்ரீ மடம் பரிவாரங்களை எவ்வித சிரமமும் இன்றி அழைத்துச்செல்ல சர்க்கார் வாகனங்களை ஏற்பாடு செய்திருந்தார்கள். மேலும் ராணுவ போலீஸ் பந்தோபஸ்தும் அளித்திருந்தார்கள். 4-5-74 அன்று ஸ்ரீ ஆசார்யர்கள் ஸ்ரீபசுபதிநாதரைத் தர்சனம் செய்துகொண்டார்கள். நேபாள மன்னரும் மஹாராணியும் ஸ்ரீ ஸ்வாமிகள் தங்கியிருந்த இடத்திற்கு வந்து அவர்கள் நடத்தும் ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் பூஜையைத் தரிசித்துக்கொண்டு பாதபூஜை செய்தார்கள். பின்னர் ஸ்ரீ ஸ்வாமிகளை அரண்மனைக்கு விஜயம் செய்யும்படி பிரார்த்தித்தார்கள். அரண்மனையில் மன்னர் ஸ்ரீ ஸ்வாமிகளுடன் ஒருமணி நேரம் தனிமையில் உரையாடினார்கள். வேதபயிற்சிக்கு ஊக்கமளிப்பதற்காக நேபாள சர்க்காரால் ராமேச்வரத்தில் ஒரு வேத பாடசாலையும் ஸ்ரீகாமகோடிபீடத்தின் சார்பாக காட்மாண்டுவில் ஓர் வேதபாடசாலையும் நிறுவுவதென்று தீர்மானிக்கப்பட்டு நடந்து வருகிறது. 10-ஆம் தேதி வரை காட்மாண்டுவில் தங்கி, பிறகு அங்கிருந்து கிளம்பி 24-ஆம் தேதி முசபர்புரை அடைந்தார்கள்.

1974, ஜூன் 12-ஆம் தேதி வைத்யநாத க்ஷேத்திரத்தில் ஜ்யோதிர்லிங்க தர்சனம் செய்துகொண்டார்கள். ஜூலை 2, ஜாம்ஷெட்புர் விஜயம். 4-ஆம் தேதி ஸ்ரீ வியாஸபூஜை. 1-10-74 முடிய சாதுர்மாஸ விரதம் ஜாம்ஷெட்புரில் நடைபெற்றது. ஜாம்ஷெட்பூரில் அதிருத்ர மஹாயக்ஞயமும் சண்டி ஹோமமும் தென்னாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட வேத வித்துக்களைக் கொண்டு நடைப்பெற்றது. 16-10-1974 முதல் 24-10-74 முடிய கல்கத்தாவில் நவராத்ரி மஹோத்ஸவம்; 4-11-74 அன்று கல்கத்தா நகரிலிருந்து புறப்பட்டு மேற்கு வங்காளம், ஒரிஸா ராஜ்யங்களில் பல இடங்களில் தங்கி 28-11-74 முதல் 7-12-74 முடிய புரியில் முகாம் செய்து கொண்டு ஸ்ரீ ஜகன்னாதரைத் தர்சனம் செய்துகொண்டார்கள். அவ்விடம் பாரத நாட்டிலுள்ள எல்லா மதங்களையும் சார்ந்த ஸர்வமத மகாநாடு ஒன்றை முதன் முறையாக நடத்தினார்கள். இந்த மகாநாட்டில் புரி ஸ்ரீ சங்கராசார்யர்களும், மற்ற ஸந்நியாசிகளும் கலந்துகொண்டார்கள். அந்த க்ஷேத்திரத்தில் கட்டியிருக்கும் ஸ்ரீ காமகோடி ஸ்ரீ சங்கர மடத்தைப் பார்வையிட்டார்கள். இதில் ஸ்ரீ ஆதிசங்கரர் சிஷ்யர்களுடன் கூடிய மூர்த்திகளைத் தவிர ஸ்ரீ ஜயதேவர் பத்மாவதி இவர்களின் சின்னங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன.

1975 ஜனவரி 2-ஆம் தேதி முதல் 7-ஆம் தேதி முடிய முகாம் விசாகபட்டணம். பின்னர் ராஜமகேந்திரபுரம், ஏலூரு மார்க்க

மாக விஜயவாடாவுக்கு பிப்ரவரி 16-ஆம் தேதி விஜயமானார்கள். அவ்விடம் அர்ச்சகர்கள் மகாநாடு நடைபெற்றது. பின்னர் குண்டூர், ஓங்கோல், நெல்லூர் மார்க்கம் 31-3-1975-ஆம் தேதி காளஹஸ்தியை அடைந்து தேவாலய தர்சனம் செய்து கொண்டார்கள். ஏப்ரல் 2, 3, 4 தேதிகளில் திருமலையில் வேங்கடேசர் தர்சனம். 11-4-1975 அன்று ஸ்ரீ புதுப் பெரியவர்கள் கங்கா யாத்திரையை முடித்துக் கொண்டு கலவை பிருந்தாவனத்தில் குருநாதரைத் தரிசித்துக்கொண்டார்கள். ஸ்ரீ பெரியவர்களின் சதாபிஷேகத்தையொட்டி காஞ்சீபுரத்தில் 5-5-1975 முதல் 16-5-1975 முடிய அதிருத்ர மஹா யக்ஞமும் ஸ்ரீ சஹஸ்ரசண்டீ ஹோமமும் நடைபெற்றன. அப்பொழுது ஸ்ரீ பெரியவர்கள் கலவையிலேயே தங்கியிருந்தார்கள். கடதீர்த்தம் கலவைக்கு எடுத்துச்சென்று ஸ்ரீ பெரியவர்களுக்கு அபிஷேகம் நடத்தப்பெற்றது. 23-7-75 யன்று வியாஸபூஜையை இருபெரியவர்களும் கலவை பிருந்தாவனத்திலேயே நடத்தினார்கள். 20-9-1975 அன்று விச்வரூப யாத்திரையாகக் கிளம்பிக் காஞ்சிக்குச் சென்றார்கள். 1975 டிஸம்பர் மாதம் தொடக்கத்திலிருந்து 1976 மார்ச் மாதம் 6 ஆம் தேதி முடிய ஸ்ரீ ஸ்வாமிகள் சென்னை நகரிலும், சுற்றுப் புற ஊர்களிலும் தங்கி ஆங்காங்கு பக்தர்களுக்குத் தர்சனம் அளித்து வந்தார்கள். 1-6-76 முதல் 6-6-76 முடிய சென்னை-புரசவாக்கம் தர்ம பிரகாஷ் கல்யாணமண்டபத்தில் மிகப்பெரிய அளவில் உலக ஹிந்துக்கள் மஹாநாடு ஒன்றை நடத்தினார்கள்.

1976 ஏப்ரல் மாதம் 5 ஆம் தேதி காஞ்சியில் ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலய மஹா கும்பாபிஷேகத்தை ஸ்ரீஸ்வாமிகள் நடத்தி வைத்தார்கள். அது சமயம் கலவையில் தங்கியிருந்த ஸ்ரீ பெரியவர்கள் மறுநாள் காஞ்சீபுரத்துக்கு வந்து அம்பாளைத் தர்சனம்செய்து கொண்டார்கள். 28-6-76 முதல் 30-6-76 முடிய திருவண்ணாமலை ஆலயத்தில் லக்ஷ தீபம் ஏற்றுவதற்கு ஏற்பாடு செய்து நேரிலேயே தீபதர்சனம் செய்துகொண்டார்கள். 11-7-76 அன்று சாதுர்மாஸசங்கல்பத்தை ஸ்ரீ பெரியவர்களுடன் காஞ்சீபுரத்தில் ஸ்ரீ காமாக்ஷி கோயிலில் ஸ்ரீ ஆதி சங்கரர் சந்நிதியில் நடத்தினார்கள்.

**ஐந்தாவது விஜய யாத்திரை — ஸேதுவில் ஸ்ரீ ராமநாதருக்கு சஹஸ்கரகலச கங்காபிஷேகம்—காலடியில் ஸ்ரீ ஆதிசங்கர கீர்த்திஸ்தம்பம் பிரதிஷ்டை**

ஸ்ரீ ஸ்வாமிகள் ஐந்தாவது யாத்திரையாகக் காஞ்சியிலிருந்து 26-10-76 ஆம் தேதி புறப்பட்டு செங்கல்பட்டு, தென்னேற்காடு

ஜில்லா வழியாக நவம்பர் 28, 29, 30 தேதிகளில் சிதம்பரத்தில் தங்கி நடராஜ தர்சனம் செய்து கொண்டார்கள். டிஸம்பர் 12 முதல் 15 முடிய கும்பகோணம் விஜயம். 1977 ஜனவரி 14, 15, 16 தேதிகளில் திருவாரூரில் சங்கீத மும்மூர்த்திகளின் விழா ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸந்நிதியில் நடைபெற்றது. இதில் கர்நாடக சங்கீத வித்வான்கள் அநேகபேர் கலந்து கொண்டார்கள்.

10-2-77 அன்று ராமேச்வரம் ஸ்ரீ சங்கரமடத்தில் ஸ்ரீ சோடச ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமி விமான பிரதிஷ்டையும் அபிஷேகமும் செய்தார்கள். 16-2-1977 சிவராத்திரியன்று ஸ்ரீ ஸ்வாமிகள் தம் திருக்கரங்களால் 1008 தாமிரகலசங்களைக் கொண்டு ராமநாதருக்குக் கங்காபிஷேகம் செய்தார்கள். ராமேச்வரத்தில் 16 நாட்கள் ஸ்ரீ ஸ்வாமிகள் தங்கியிருந்த பொழுது நூற்றுக் கணக்கான வேதபண்டிதர்களுக்குப் பரீக்ஷை நடத்தி அவர்கள் யாவருக்கும் ரூ. 200 சம்பாவனை செய்தார்கள். மேலும் தமிழ் நாட்டில் யாகம் செய்த அக்னிஹோத்திரிகளை வர வழித்து அவர்களுக்கெல்லாம் விசேஷ சம்மானங்கள் அளித் தார்கள். சஹஸ்ர போஜனமும் நடைபெற்றது. ராமேச் வரத்திலிருந்து ஸ்ரீ ஆசார்யர்கள் தூத்துக்குடிக்கு விஜயம் செய்து அங்கு ஏழைகளுக்கான இலவச வைத்தியசாலை, இந்து சமய மன்றம் இவைகளைத் துவக்கிவைத்தார்கள். பிறகு திருச்செந்தூர், திருநெல்வேலி, பாளயங்கோட்டை வழியாக மார்ச் மாதம் 1-ஆம் தேதி அரியநாயகிபுரம் சேர்ந்தார்கள். அங்கு 3 தினங்கள் தங்கியசமயம் 121 வித்தியார்த்திகளைக் கொண்டு மஹாருத்ரஜப யக்ஞம் நடந்தது. இந்த யக்ஞத்தை அவ்வூர் ஆர். சுப்பராமன் குடும்பத்தார் நடத்தி வைத்தார்கள். பிறகு கடயம், செங்கோட்டை வழியாக சிவராத்திரிக்கு திருக்குற்றாலம் விஜயம் செய்தார்கள். சிவராத்திரியன்று (9-3-79) மஹா ருத்ர ஜபம் திருநெல்வேலி ஜில்லா ரித்விக்குகளால் நடைபெற்றது. பிறகு தென்காசி, சுந்தரபாண்டியபுரம், சிந்தாமணி, கோவில்பட்டி, ராஜபாளயம் வழியாக 29-3-79 ஆம் தேதி மதுரைமா நகர் சேர்ந்தார்கள்.

30-3-1977 முதல் 5-4-77 முடிய மதுரை காந்தி ம்யூஸியத்தில் ஸ்ரீ ஸ்வாமிகளின் முன்னிலையில் உலக ஸர்வ மத மஹாநாடு (Conference on World Religions, Philosophy and Culture) நடைபெற்றது. ஆப்பிரிக்கா உள்பட பல நாடுகளிருந்து ஹிந்து, கிறிஸ்தவ, முஸ்லிம், புத்த மதம் போன்ற எல்லா மதத்தினரும் இதில் கலந்து கொண்டார்கள். இந்த மஹாநாட்டை நேபாள மன்னர் துவக்கி வைத்தார். இதற்காகவே காட்மாண்டு

விலிருந்து தம் ராணியுடன் மன்னர் மதுரைக்கு விஜயம் செய்தார்.

25-5-77 அன்று ஸ்ரீ ஸ்வாமிகள் கோயம்புத்தூருக்கு விஜயம் செய்து ஆர். எஸ். புரம் மேற்கு வேங்கடசாமி ரோட்டில் ஸ்ரீ சங்கர வித்யா மந்திரத்தில் நிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலய பிரதிஷ்டை கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள்.

1-7-1977 அன்று வியாஸ பூஜை சேலத்தில் நடைபெற்றது. 30-9-77 முடிய சாதுர்மாஸ விரதத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் சேலத்தில் நடத்தினார்கள். அது சமயம் தேவாலய சிற்பங்களின் கண்காக்ஷியொன்றை நடத்தினார்கள்.

1978 ஜனவரி மாதம் 5 ஆம் தேதி முதல் 9 ஆம் தேதி வரை கரூர் சமீபம் நேரூரில் தங்கி ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்கள் அதிஷ்டானத்தை தர்சனம் செய்து கொண்டார்கள். நேரூரில் பாடசாலை ஒன்றும் துவக்கிவைத்தார்கள். பின்னர் 18 முதல் 22-ஆம் தேதிவரை சிறுமலைக்கு விஜயம் செய்து ஸ்ரீமடத்துக்குச் சொந்தமான காமகோடி எஸ்டேட்டைப் பார்வையிட்டார்கள்.

15-2-78 அன்று தூத்துக்குடி விஜயம். ஸ்பிக் தொழிற்சாலையில் விநாயகர் ஆலய பிரதிஷ்டையையும் கும்பாபிஷேகத்தையும் நடத்தி வைத்தார்கள்.

17-2-1978 அன்று திருச்செந்தூரில் ஸ்ரீ சண்முக நாதர் தர்சனம் செய்து கொண்டார்கள்.

12-5-1978 அன்று காலடியில் சங்கரஜயந்தி மஹோத்ஸவ பூர்த்தி; ஸ்ரீ ஆதி சங்கர ஸ்மாரக கீர்த்தி ஸ்தம்பம் பிரதிஷ்டை; அதையடுத்து நிர்மாணிக்கப் பெற்ற சிவாலயத்துக்குக் கும்பாபிஷேகம். இந்தக் கீர்த்தி ஸ்தம்பத்தை முன்னதாகவே பாரத ராஷ்டிரபதி நீலம் சஞ்சீவரெட்டி லௌகிக முறையில் திறந்து வைத்தார். காலடி க்ஷேத்திரத்தில் நடக்க இருக்கும் ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவத்தை முன்னிட்டும், 40 மீட்டர் உயரமுள்ள ஸ்ரீ சங்கரர் கீர்த்தி ஸ்தம்பம் திறப்பு விழாவில் கலந்து கொள்வதற்கும் காசியிலிருந்து 108 தண்டி ஸந்யாஸிகள் ஆசார்யர்களால் வரவழைக்கப்பட்டார்கள். ஸ்ரீ சங்கர ஜயந்தியன்று மிகப் பெரிய ஊர்வலம் அங்கமாலி என்ற இடத்திலிருந்து 32 யானைகளின் மேல் நன்றாக அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ ஆதிசங்கரர் படங்களுடன் ஆயிரக்கணக்கான மக்கள் 'சங்கர ஹரஹர சங்கர' கோஷத்துடன் புறப்பட்டு இரவு

8 மணிக்கு கீர்த்தி ஸ்தம்பத்தையடைந்தது. இது கண்கொள்ளா காக்ஷியாக அமைந்திருந்தது. இந்த ஊர்வலத்தில் ஸ்ரீ ஆசார்யர், சந்நியாசிகளுடனும், வேதவிற்பன்னர்களுடனும் கலந்துகொண்டார்கள். இவ்விதமான பிரம்மாண்டமான ஊர்வலம் இது வரைக்கும் நடந்ததில்லை.

9-6-1978 ஆம் தேதி கோயம்பத்தூர் ஸ்ரீ காமாக்ஷி ஆலயத்தில் அஷ்டலக்ஷ்மி பிரதிஷ்டை கும்பாபிஷேகம் நடத்தினார்கள்.

20-7-1978 அன்று ஸ்ரீ ஸ்வாமிகள் காஞ்சியில் வியாஸ பூஜையை நடத்தினார்கள். இது ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் 25-ஆவது சாதுர்மாஸ விரதமாகும். இந்த வெள்ளி விழாவைச் சிஷ்யர்கள் நாடெங்கிலும் கொண்டாடினார்கள்.

# 13. அனுபந்தம்

॥ श्रीः ॥

## (1) ஸ்ரீ பரமாசார்யர்களின் ஜாதகம்

जननी जन्मसौख्यानां वर्द्धनी कुलसंपदां ।

पदवी पूर्वपुण्यानां लिख्यते जन्मपत्रिका ॥

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகம் *1817*, ஜய வருஷம் வைகாசி மாதம் 8-ஆம் தேதி 1894-ஆம் வருஷம் மே மாதம் 20-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை உதயாதி நாழிகை 19, ப்ரதமை திதி நாழிகை 44 வி. 35., அனுஷ நக்ஷத்திரம் நா. 30 வி. 51, சிவ நாமயோகம் நா. 43 வி. 26 கூடிய சுபதினத்தில் சுதேச கடிகாரப்படி (Local Time) கணித்துக் கண்ட பகல் மணி 1, நி. 16-க்கு கும்ப கோணம் சுப்ரமண்ய சாஸ்திரிகளுக்குப் புண்ய குமாரர் சுப ஜனனம். ஜன்ம லக்னம், ஸிம்மம். நவாம்சலக்னம் வ்ருச்சிகம், ஜன்ம நக்ஷத்திரம் அனுஷம் செல்லு நா. 49 வி. 4-க்கு ஆதியில் நக்ஷத்திர தசாபிரகாரம் சனிதசையிலிருப்பு வருஷம் 3, மாதம் 5, நாள் 18.

| | | | |
|---|---|---|---|
| சுக் ரா | | சூ பு குரு | |
| குஜ | ராசி | | |
| | | | ல |
| | சந் | | மா சனி கே |

| | | | |
|---|---|---|---|
| சூ | | கே மா | குரு |
| குஜ பு | நவாம்சம் | | |
| சுக் | | | |
| | ல சந் ரா | | சனி |

1. சூரியன் - க்ருத். 4
2. சந்திரன் - அனுஷ. 4
3. குஜன் - சதயம் 3
4. புதன் - க்ருத். 3
5. குரு - ரோக. 3
6. சுக்கிரன் - ரேவதி 2
7. சனி - சித்திரை 2
8. ராகு - உத்திரட்டாதி 4
9. கேது - ஹஸ்தம் 2
10. லக்னம் - பூரம் 4 (ரா. 4 25°. 40'.)
11. மாந்தி - ஹஸ்தம் 2
12. அயனாம்சம் - ரா. 0 பா. 22; 22

श्रीः

## (2) ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபர்களின் ஸ்ரீமுக—பிருதுகள்



### முகர்

स्वस्ति श्रीमदखिलभूमण्डलालङ्कार त्रयस्त्रिंशत्कोटिदेवतासेवित श्रीकामाक्षीदेवी-सनाथ श्रीमदेकाम्रनाथ श्रीमहादेवीसनाथ श्रीहस्तिगिरिनाथ साक्षात्कारपरमाधिष्ठान सत्यव्रतनामांकित काञ्चीदिव्यक्षेत्रे; शारदामठसुस्थितानाम् अतुलितसुधारस माधुर्य कमलासनकामिनी धम्मिल्लसम्फुल्ल मल्लिकामालिका निष्यन्द मकरन्दझरी सौवस्तिक वाङ्निगुम्भ विजृम्भणानन्द तुन्दिलित मनीषि मण्डलानाम्; अनवरताद्वैत विद्या-विनोदरसिकानाम्; निरन्तरालंकृतीकृत शान्ति दान्तिभूम्नाम्; सकलभुवनचक्रप्र-तिष्ठापक श्रीचक्रप्रतिष्ठाविख्यात यशोऽलंकृतानाम्; निखिलपाषण्डषण्डकण्टकोद्धाटनेन विशदीकृतवेदवेदान्तमार्गषण्मतप्रतिष्ठापकाचार्याणाम्, श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीजगद्गुरु श्रीमच्छंकरभगवत्पादाचार्याणाम् अधिष्ठाने सिंहासनाभिषिक्त श्रीमन्महा-देवेन्द्रसरस्वतीसंयमीन्द्राणाम् अन्तेवासिवर्य श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादानां, तदन्तेवासिवर्य श्रीमज्जयेन्द्र सरस्वती संयमीन्द्राणां च चरणनलिनयोः सप्रश्रयं साञ्जलिबन्धं नमस्कुर्मः ॥

குறிப்பு:—இதை ஒவ்வொரு சிஷ்யரும், முக்கியமாய் ஒவ்வொரு புரோகிதரும் மனப்பாடம் செய்துகொண்டு விவாஹம் முதலான சுப முகூர்த்தங்களில் மடத்திற்கு ஸ்ரீ ஆசார்ய ஸம்பாவனை செய்யும் பொழுது யாவரும் சேர்ந்து நின்று கொண்டு பக்தி சிரத்தையோடு சொல்லவேண்டும்.

## (2) ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபர்களின் ஸ்ரீமுக–பிருதுகள்



### முகர்

ஸ்வஸ்தி ஸ்ரீமதகில பூமண்டலாலங்கார த்ரயஸ்திரிம்சத் கோடி தேவதா ஸேவித ஸ்ரீ காமாக்ஷீ தேவீ ஸநாத ஸ்ரீமத் ஏகாம்ரநாத ஸ்ரீ மஹாதேவீஸநாத ஸ்ரீஹஸ்திகிரிநாத ஸாக்ஷாத்கார, பரமாதிஷ்டான ஸத்யவ்ரத நாமாங்கித காஞ்சீ திவ்ய க்ஷேத்ரே, சாரதாமட ஸுஸ்திதாநாம். அதுலித ஸுதாரஸ மாதுர்ய கமலாஸந காமிநீ தம்மில்ல ஸம்புல்ல மல்லிகா மாலிகா நிஷ்யந்த மகரந்தஜரீ ஸௌவஸ்திக வாங்நிகும்ப விஜ்ரும்பணாநந்த துந்திலித மநீஷிமண்டலாநாம், அநவரதாத்வைத வித்யா விநோத ரஸிகாநாம், நிரந்தராலங்க்ருதீக்ருத சாந்தி தாந்தி பூம்நாம் ஸகலபுவனசக்ர ப்ரதிஷ்டாபக ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டாவிக்யாத யசோலங்க்ருதாநாம், நிகிலபாஷண்ட ஷண்ட கண்டகோத்காடநேந விசதீக்ருத வேத வேதாந்த மார்க்க ஷண்மதப்ரதிஷ்டாபகாசார்யாணாம் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ-காசார்ய வர்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யாணாம் அதிஷ்டாநே ஸிம்ஹாஸநாபிஷிக்த, ஸ்ரீமந்மஹாதேவேந்த்ர ஸரஸ்வதீ ஸம்யமீந்த்ராணாம் அந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ரஸரஸ்வதீ ஸ்ரீபாதாநாம், ததந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் ஜயேந்திரஸரஸ்வதீ ஸம்யமீந்த்ராணாம் ச சரணநளினயோ: ஸப்ரச்ரயம் ஸாஞ்ஜலிபந்தம் நமஸ்குர்ம:

குறிப்பு :—இதை ஒவ்வொரு சிஷ்யரும், முக்கியமாய் ஒவ்வொரு புரோகிதரும் மனப்பாடம் செய்துகொண்டு விவாஹம் முதலான சுப முகூர்த்தங்களில் மடத்திற்கு ஸ்ரீ ஆசார்ய ஸம்பாவனை செய்யும் பொழுது யாவரும் சேர்ந்து நின்று கொண்டு பக்தி சிரத்தையோடு சொல்லவேண்டும்.

## (3) தர்மப் பிரசாரங்கள்

ஸ்வாமிகள் பரிபூர்ண அனுக்கிரகத்தைப் பெற்று நம் நாட்டில் பல பண்டிதர்கள் தர்மப் பிரசாரம் செய்து வந்ததும் செய்து வருவதும் உலகமறியும். அவர்களில் பலர் நல்ல வாக்கு வன்மை படைத்தவர்களாகவும், சாஸ்திரங்களில் நல்ல தேர்ச்சி பெற்றவர்களாகவும் புராணங்களில் தோய்ந்து பல்லாயிரக்கணக்கான சுலோகங்களை மனப்பாடம் செய்தவர்களும் ஆவர். அவர்கள் யாவரும் இப்புத்தகத்தில் இடம் பெறத் தகுதி வாய்ந்தவர்கள். எல்லோரைப் பற்றியும் குறிப்பிடுவதென்றால் இப்பகுதியே பெரியதோர் நூலாக அமையவேண்டி வருமாதலால், மடத்தில் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள அவர்களில் சிலரைப்பற்றி இங்குக் குறிப்பிடுகிறோம்.

### 1. மாயவரம் சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள்

பாகவத ஸப்தாஹம், நவாஹம் என்னும் நினைவுகள் நம் மக்களுக்குள் வரும்பொழுது இப்பெரியாரை நினைவுபடுத்தாமல் இருக்க முடியாது. அவர் நூற்றுக் கணக்கான முறை பாகவதப் பிரவசனம் செய்திருக்கிறார். பாகவதம் முழுவதுமே அவருக்கு மனப்பாடம். அவர் சுலோகங்களைச் சொல்லிப் பொருள் கூறும் தனிச் சிறப்பு வர்ணிக்க முடியாததாகும். அவரது வாக்கினின்று வரும் சொற்கள் ஆற்றின் புது வெள்ளத்தைப்போல் வெகு விரைவுடன் வந்து கொண்டிருக்குமாதலால் கேட்பவர்கள் தங்களது கவனத்தை வேறு வகையில் செலுத்த முடியாதவாறு அவரது உபதேசத்திலேயே மக்கள் நிலைத்திருப்பர். இப்பெரியார் சுமார் நாற்பது ஆண்டுகள் நாடெங்கும் பாகவதப் பிரவசனம் செய்தவர். ஒரு சமயம் அவருக்குச் சிறிது உடல்நிலை குன்றிய சமயம் மனோ நிலையும் மாறிச் சில மாதங்கள் வாக்கினின்றும் சொற்கள் வராதநிலையை அவர் அடைந்து விட்டார். அப்பொழுது மிகக் கவலையுற்ற அவர் உறவினர்களும் நண்பர்களும் நம் ஸ்வாமிகளிடம் அவரை அழைத்து வந்தார்கள். ஸ்வாமிகளை அவர் வணங்கி எதையும் கூற இயலாதவாறு கண்ணீர் சொரிந்த வண்ணம் நிற்க, ஸ்வாமிகளும் அவரை நோக்கி, "நீங்கள் இன்றே பழைய நிலையை அடைவீர்கள். கவலை வேண்டாம்" எனக் கூறி மடத்தின் அதிஷ்டான தெய்வமான ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் சந்நிதியில் குறிப்பிட்ட பாகவத சுலோகங்கள் சிலவற்றைக் கூறும்படி கட்டளையிட்டார்கள். சாஸ்திரிகள் அப்பொழுது எவ்விதத் தங்குதடையுமின்றிச் சுலோகங்களைக் கூற யாவரும்

அதைக்கேட்டு மகிழ்ச்சியுற்றவர்களானார்கள். சாஸ்திரிகளும் சில நாட்களுக்குள் பழைய நிலையை அடைந்து பிரவசனங்களைத் தொடர்ந்து நடத்தினார்கள்.

* * * * *

**2. சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்**

இருபத்தொரு தலைமுறையாக யாகங்கள் பல புரிந்து அணையாத அக்னியை வளர்த்து வரும் ஓர் உயரிய குடும்பத்தில் உதித்தவர் **சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்.** இவருடைய தந்தை சுப்பிரமணிய தீக்ஷிதர் தம் புதல்வர் அனந்தராமனை வெகு சிறு பிராயத்திலேயே ஸ்வாமிகளிடம் அடிக்கடி அழைத்து வருவதுண்டு. சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்வாமிகள் சேங்காலிபுரத்திற்கு விஜயம் செய்த பொழுது சிறுவன் அனந்தராமனை அன்புடன் அழைத்து **ப்ரஸந்ந ராகவம்** என்னும் ராம கதை அடங்கிய ஓர் வடமொழிக் காவியத்தை அவரிடம் கொடுத்து, "நீ இதைப் படித்துவா" யெனக் கட்டளையிட்டார்களாம். அன்று கிடைத்த ஸ்வாமிகளின் அந்த அனுக்கிரகமே ராமாயணத்தை உலகம் புகழும்படி பிரவசனம் செய்யும் சக்தி தமக்குக் கிடைத்ததென தீக்ஷிதர் கூறியுள்ளார். தீக்ஷிதர் தமக்கென ஓர் தனிப் பாணியில் சுலோகங்களைச் சொல்லி வரும்பொழுது வடமொழிப் பயிற்சி அதிகமில்லாதவர்கள் கூட அவைகளின் பொருள்களைப் புரிந்து கொள்ளுவார்கள். இன்று உலகம் உள்ள போக்கை அறிந்து சிறந்த மேற்கோள்களுடனும் ஹாஸ்யச் சுவையுடனும் அவர் புரிந்த புராணப் பிரவசனத்தை ஜாதி மத வேற்றுமையின்றி மேதாவிகளும், பாமரர்களும், குழந்தைகளும், பல்லாயிரக் கணக்கில் நாடெங்கும் ரசித்து வந்தார்கள். உபன்யாசங்களின் நடுவில் நம் ஸ்வாமிகளின் உபதேசங்களைப் பற்றியும், அவர்களின் தவ மகிமைகளைப் பற்றியும் அவ்வப்போது அவர் எடுத்துக் கூறுவார்கள். இவற்றைக் கேட்டு அதுவரை ஸ்வாமிகளைத் தரிசிக்காதவர்களும் அவர்களைத் தரிசித்து அனுக்ரஹம் பெற்றவர்கள் அநேகம் பேர். ஸ்வாமிகள் தோற்றுவித்த வேத தர்மசாஸ்திர பரிபாலன சபையில் தீக்ஷிதர் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டு ஆங்காங்கு நடைபெறும் அச்சபையின் கூட்டங்களில் உபன்யாசங்கள் புரிந்திருக்கிறார்.

* * * * *

**3. ஸ்ரீவத்ஸ ஸோம தேவ சர்மா**

சென்னையில் ஓர் உயர்தரப் பள்ளியில் சம்ஸ்கிருத ஆசிரியராக அமர்ந்திருந்த இவர் 1925–ஆவது ஆண்டு வரை தேச சேவையில் ஈடுபட்டு, சத்தியமூர்த்தி போன்ற தலைவர்களுடன் அக் காலத்தில் பணியாற்றி வந்தார். பின்னர் நம் ஸ்வாமிகளின் தரிசனத்தின் பயனாக நம் மதத்திலுள்ள புராதனக் கலைப் பொக்கிஷங்கள் உலகிற்குப் பயன்படும் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு, வடமொழியிலுள்ள பதினெட்டுப் புராணங்களையும் தமிழாக்கி வெளியிட்டார். தவிர, "வைதிகதர்ம வர்த்தனி" என்னும் ஓர் மாதாந்தர பத்திரிகையையும் இவர் நடத்தி அதன் மூலம் நம் புராதன கலைகளை மக்கள் அறியும்படி செய்து வந்தார். மேலும் பதினெண் புராணங்களைப் பற்றியும் அவ்வப் போது உபன்யாஸங்கள் செய்து வந்தார். குருபக்தியில் சிறந்து விளங்கிய இவரது தர்மத் தொண்டு போற்றுதற்குரியதாகும்.

* * * * *

**4. அக்னி ஹோத்திரம் ராமானுஜ தாத்தாசாரியர்**

இப்பெரியார் கும்பகோணத்தில் பரம்பரை வித்வந் குடும்பத்தில் உதித்தவர். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் மிகவும் தேர்ச்சி பெற்றவர். வேதக் கலையை நன்கறிந்தவர். மதபேதமின்றி நம் ஸ்வாமிகளிடம் பக்தி செலுத்தி அவர்கள் அவ்வப்போது இடும் பணிகளை ஆற்றி வருகிறார். ஆங்கிலத்தையும் அவர் நன்கு கற்றறிந்தவராதலால் தம் உபன்யாஸங்களில் நவீன யுக்தி வாதங்களுடன் நமது தர்மத்தின் தத்துவங்களை மக்களுக்கு உபதேசித்து வருகிறார். நல்ல வாக்வன்மை படைத்த இவருடைய உபன்யாசங்களைக் கேட்டு நல்லொழுக்கங்களில் ஈடுபட்டு மக்கள் பெரும் பயனை அடைந்து வருகிறார்கள்.

* * * * *

**5. தஞ்சை ஆர். முத்துகிருஷ்ண சாஸ்திரிகள்**

இவர் அவ்வப்போது ஆற்றிவரும் புராணப் பிரவசனங்கள் மூலமும், தாம் நடத்தி வந்த 'ஹிதபாஷிணி' என்னும் பத்திரிகையின் மூலமும் ஸ்வாமிகளின் ஆக்ஞைகளை நிறைவேற்றும் பணியில் ஈடுபட்டிருக்கும் ஓர் சிறந்த பண்டிதராவர். சில ஆண்டுகளுக்கு முன்னர் இவர் தமது பத்திரிகையில் ஸ்வாமிகளின் சரித்திரத்தைத் தொடர்ச்சியாக வெளியிட்டார். இப்போது திரு

வாணைக்கா பாடசாலையில் அத்யக்ஷராக இருக்கிறார். வேத தர்ம சாஸ்திர சபையின் நிகழ்ச்சிகளிலும், மற்றும் வித்வத் சபைகளிலும் முக்கிய பங்கு எடுத்துக் கொள்கிறார்.

* * * * *

**6. மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்**

குடவாசலுக்கடுத்த மஞ்சக்குடியில் நல்ல வேத வித்பன்னர்களின் மரபிலுதித்த இவர் பதினாறு ஆண்டுகள் முறையுடன் வேதாத்யயனம் செய்து வடமொழிப் பயிற்சியுடன் தமிழும் சங்கீதமும் கற்றவர். இவரது வாக்வன்மையைக் கண்டு இவரை உபன்யாசங்கள் செய்வதில் ஈடுபடும்படி ஸ்வாமிகளே கட்டளையிட்டார்கள். நல்ல இசையுடனும் கம்பீரத்துடனும் இவர் செய்து வரும் புராண பிரவசனங்களை மக்கள் மிகவும் ரசித்து வருகின்றனர். வேத தர்ம சாஸ்திர சபையின் நிகழ்ச்சிகளிலும், ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞையிடும் நற்காரியங்களிலும் மிக சிரத்தையுடன் பங்கு எடுத்துக் கொண்டு வருகிறார்.

* * * * *

**7. திண்டிவனம் சுந்தரேச சர்மா (ஸ்ரீ சச்சிதானந்த ஸ்வாமிகள்)**

இவர் நம் ஸ்வாமிகளின் பால பருவத்தில் அவர்கள் பள்ளியில் பயிலும்பொழுதே அவர்களுடன் சேர்ந்து பழகும் வாய்ப்பைப் பெற்றவர். பூர்வாசிரமத்தில் இவர் ஓர் பள்ளி ஆசிரியர். அத்வைத வேதாந்த நூல்களைத் தமிழில் பயின்று அவைகளின் தத்துவங்களை நன்கு ஆராய்ந்தறிந்தவர். பெரும் கூட்டங்களில் இனிமையாகப் பேசக்கூடிய வன்மை பெற்றவர். 1939-ஆவது வருடம் முதல் தமது பூர்வாசிரமத்தில் சுமார் பத்து ஆண்டுகள் ஸ்வாமிகளின் கட்டளைப்படி தமிழ்நாடு முழுவதும் தர்மப் பிரசாரம் செய்யும் பணியில் ஈடுபட்டு வந்தார். திருவிடைமருதூரில் நடைபெற்ற முதல் திருப்பாவை திருவெம்பாவை திருமறை ஆறங்க மகாநாட்டிற்கு இவர் தலைமை தாங்கினார்.

* * * * *

**8. ஆஞ்சனேயர் (ஸ்ரீ ஆனந்தானந்தேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்)**

இவர் சர்வகலாசாலைப் பட்டதாரி. ஆங்கிலம், தமிழ், ஸம்ஸ்கிருதம் இம்மூன்று பாஷைகளிலும் நல்ல தேர்ச்சி பெற்ற இவர் சென்னை உயர்நீதி மன்றத்தில் உத்யோகம் வகித்து வந்தார். 35 ஆண்டுகளுக்கு முன்னர் சர்க்கார் அலுவலிலிருந்து ஓய்வு பெற்ற

வுடன் இவர் மடத்தின் பணியில் ஈடுபடத் தீர்மானித்து அன்று முதல் தர்ம பிரசாரத் துறையில் ஸ்வாமிகளது ஸந்நிதானத்திலிருந்து கொண்டே ஒப்பற்ற பணியாற்றி வருகிறுர். 35 ஆண்டுகளுக்கு முன்னர் ஸந்நியாஸ ஆசிரமம் பெற வேண்டுமென்ற தமது விருப்பத்தை இவர் ஸ்வாமிகளிடம் விண்ணப்பித்துக்கொள்ள 29-12-1954-ஆம் தேதி காஞ்சி உபநிஷத்பிரம்மேந்திர மடத்தின் அதிபர்களான ஸ்வாமிகளைக் கொண்டு இவருக்கு உபதேசமருளும்படி ஸ்வாமிகள் கட்டளையிட்டார்கள். துறவறம் பூண்ட பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸந்நிதானத்தின் பணிகளில் ஈடுபட்டு வருகிறுர். தற்சமயம் காசியில் ஸ்ரீ மடத்தில் தங்கி, பல நற்காரியங்கள் செய்து வருகிறுர்.

இவர் தமிழ், சம்ஸ்கிருதம், தெலுங்கு, ஹிந்தி, கன்னட பாஷைகளில் உள்ள பஜனை பாடல்களையெல்லாம் தொகுத்து "பஜன ரத்னுகரம்" என்ற ஓர் உயர்ந்த புத்தகத்தை வெளியிட்டுள்ளார். இது கிட்டத்தட்ட 1000 பக்கங்கள் கொண்டது.

* * * * *

### 9. கலசபாக்கம் நாட் நாராயணராவ்

வட ஆற்காடு ஜில்லாவைச் சார்ந்த இவர் 50 ஆண்டுகளுக்கு மேலாகவே மடத்தில் தொடர்பு கொண்டு ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி தர்மப் பிரசாரம் செய்து வந்தார். ஒத்துழையாமைக் காலத்தில் தாம் வகித்து வந்த சர்க்கார் உத்தியோகத்தை ராஜினுமா செய்து தேச சேவை புரிந்து வந்த இவருக்கு ஸ்வாமிகளின் தர்சனத்தின் பயனுக மதத்துறையில் மக்களுக்குச் சேவை புரிய வேண்டுமென ஆர்வம் உண்டாயிற்று. தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் இம்மூன்று பாஷைகளிலும் இவர் கம்பீரமாகப் பேசுவார். ஸ்வாமிகளின் குறிப்பை உணர்ந்து நடந்து கொள்வதில் இவர் மிகவும் திறமை வாய்ந்தவர். கடைசிக் காலங்களில் ஸ்ரீ ஆசாயர்ர்கள் உத்தரவின் பேரில் தர்ம பிரசாரம் செய்து வந்தார்.

* * * * *

மேலும் சைவ சமயப் புலவர்கள் பலரும் ஸ்வாமிகள் கட்டளையிடும் தர்மத்தொண்டில் ஈடுபட்டு, சமயம் கிட்டும் பொழுதெல்லாம் ஆங்காங்கு சொற்பொழிவுகளை ஆற்றி வருகின்றனர். அவர்களில் காஞ்சி வி. பி. அழகேச முதலியார், திருவையாறு கல்லூரிப் பேராசிரியர் இராம. கோவிந்தசாமிப் பிள்ளை, திருப்பூந்துருத்தி

தங்கவேலு முதலியார், மதுரை திருநாடு ஆசிரியர் சிவஞண்டித் தேவர், வேங்கடாசலம் பிள்ளை இவர்களை முதன்மையாகக் குறிப்பிடலாம்.

* * * * *

இவர்களைத் தவிர மிராசுதார்களும் சர்க்கார் உத்தியோகங்களிலிருந்து ஓய்வு பெற்றவர்களும் மற்றும் பல அன்பர்களும் அவ்வப்பொழுது ஸ்வாமிகள் இடும் பணிகளில் ஈடுபட்டுத் தொண்டாற்றி வருகின்றனர்.

## (4) கவிஞர்களையும் கலைஞர்களையும் பாராட்டினது

எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடமாகவுள்ள நம் ஸ்வாமிகள் பல்வேறு கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களைச் சிறப்பித்து மேன் மேலும் அவர்களுக்கு அவரவர் துறையில் ஊக்கம் அளிப்பதன் பொருட்டுச் சம்மானங்கள் அளித்தும் பட்டங்கள் வழங்கியும் இருக்கிறார்கள். இவ்விதம் கலைத்திறன் படைத்த நூற்றுக்கணக்கானவர்கள் ஸ்வாமிகளிடமிருந்து பாராட்டுதல்களையும், பட்டங்களையும் பெற்றுள்ளார்கள். அவர்கள் எல்லோரைப்பற்றியும் எழுதுவது என்றால் இக்கட்டுரை மிகப் பெரியதாக விரிந்துவிடும். முன்பே ஆங்காங்குக் குறிக்கப்பெற்ற வரலாறுகளைத்தவிர மிகவும் முக்கியமான சிலரைப்பற்றி மட்டும் இங்குக் குறிப்பிடப் படுகிறது.

* * * * *

புதைபொருள் ஆராய்ச்சியிலும், புராதன சாஸனங்களின் ஆராய்ச்சியிலும் ஈடுபட்டிருந்தவரும், புதுக்கோட்டை அந்நாள் சம்ஸ்தானத்தில் கல்வி இலாகா தலைவராயிருந்தவருமான **கே. ஆர். வேங்கடராம ஐயருக்கு** ஸ்வாமிகள் **புராவிருத்த ஜ்யோதி** என்னும் பட்டத்தை அளித்துள்ளார்கள். ஐயர் அவர்கள் டாட்டன்ஹாம் என்னும் ஆங்கிலேயர் புதுக்கோட்டையின் நிர்வாகியாயிருந்தபொழுது, புதுக்கோட்டை சம்ஸ்தானத்தின் சரித்திரத்தையும் சம்ஸ்தான மானுவலையும் (State Manual) தொகுத்துள்ளார். புதுக்கோட்டை சம்ஸ்தானத்திலுள்ள குகைக் கோவில்கள் பலவற்றில் பழமையான கல்வெட்டுக்கள் பல உள்ளனவென்பதும் ஸ்வாமிகள் இவைகளைப் பலவருடங்களுக்கு முன்னரே ஆராய்ச்சி செய்துள்ளார்கள் என்பதும் ஏற்கெனவே தெரிவித்திருக்கிறது.

* * * * * *

தெய்விகமான நடனக் கலையானது குறிப்பிட்ட சில சமூகத்தினரால் மாத்திரம் சில கட்டுப்பாடுகளுடன் காப்பாற்றப்பட வேண்டுமென்பது ஸ்வாமிகளின் அபிப்பிராயம். அதற்கு மாறான வழிகளில் அந்தக் கலை இன்று விரிவடைந்து வருவதினால் சமூகத்திற்குப் பல தீங்குகள் நேரும் என்பதை ஸ்வாமிகள் உணர்ந்து, சிஷ்யர்களிடம் இதைப்பற்றி எச்சரித்துள்ளார்கள். ஆயினும் சம்பிரதாயமான முறையில் இந்தக் கலையில் நிகரற்ற தேர்ச்சி பெற்று விளங்கிய **பரதம் நாராயணஸ்வாமி ஐயருக்கு** ஸ்வாமிகள் **தாண்டவ பண்டிதர்** என்னும் பட்டத்தை அளித்து அக்கலையையும் பாராட்டியுள்ளார்கள்.

* * * * * *

ஆங்கிலத்தில் அழகாகக் கட்டுரைகள் வரைவதில் பெரிய நிபுணராக விளங்கிய காலஞ்சென்ற **கே. எஸ். வேங்கடரமணிக்கு** 1952-ஆவது ஆண்டில் ஸ்வாமிகள் வெள்ளிக் கேடயம் ஒன்றைப் (Shield) பரிசாக அளித்தார்கள். வேங்கடரமணியின் புகழ் மேல்நாடு முழுவதும் பரவியுள்ளது. அவர் கட்டுரைகளெல்லாம் பல ஐரோப்பிய பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'பாரதமணி' என்னும் தமிழ்ச் சஞ்சிகை ஒன்றையும் இவர் நடத்தி வந்தார். கிராமங்களில்தான் மக்கள் சுகத்தையும், சந்தோஷத்தையும் அடையலாமென்பது அவருடைய கொள்கை. அவ்வழியிலேயே அவர் தீவிரமான பிரசாரம் செய்து வந்தார். அவரது பிரசாரத்திற்கு ஸ்வாமிகள் அவ்வப்பொழுது ஊக்கம் அளித்து வந்தார்கள்.

* * * * * *

தெய்வத்தமிழை போற்றும் வகையில் ஸ்வாமிகள் புதுக்கோட்டை அரசர் கல்லூரியில் பேராசிரியராகவிருந்த **ந. கனகராஜ ஐயருக்குக் 'கவிராஜ பண்டிதர்'** என்னும் பட்டத்தை அளித்தார்கள்.

* * * * * *

மேலும் கலைமகள் ஆசிரியர் வித்வான் **கி. வா. ஜகந்நாத ஐயரது** வாக்கு வன்மையையும், தமிழ் இலக்கியங்களில் அவருக்குள்ள ஆழ்ந்த அறிவையும், ஆஸ்திகப் பிரசாரத்திற்கு அவர் செய்து வரும் சேவையையும் பாராட்டி 12—2—1951-இல் தஞ்சை ஜில்லா **திருப்புகலூரில்** அவருக்கு **வாகீச கலாநிதி** என்னும் பட்டத்தை ஸ்வாமிகள் அளித்து அனுக்ரஹித்தார்கள்.

* * * * * *

கும்பகோணம் "ஆர்யதர்மம்" பத்திராதிபர் அக்னி ஹோத்திரம் கோபாலதேசிகாசாரியருக்கு, ஸ்வாமிகள் 17-6-1948-இல் **'தர்மப்ரவர்த்தகர்'** என்னும் பட்டத்தை அளித்தார்கள்.

* * * * * *

சங்கீத மும்மணிகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீக்ஷிதரது வாழ்க்கை வரலாற்றைச் சம்ஸ்கிருதத்தில் ஒரு மகா காவியமாக, சென்னைச் சர்வகலாசாலையின் சம்ஸ்கிருதப் பேராசிரியராயிருந்த **டாக்டர் வெ. ராகவன்** இயற்றினர். டாக்டர் ராகவனது மேதையைப் பாராட்டி அவருக்குக் **கவிகோகிலம்** என்னும் பட்டத்தை ஸ்வாமிகள் அளித்தார்கள். அவ்வழகிய சொல்லை ஓர் தங்கப் பதக்கத்தில் ஒருபுறம் பொறித்து, மற்றொரு பக்கத்தில் ஒரு மரக்கிளையில் ஒரு கோகில பக்ஷி (குயில்) அமர்ந்திருப்பதைப் போல் அழகாகச் சித்திரிக்கச் செய்து, அப்பதக்கத்தை ஸ்வாமிகள் அவருக்கு அளித்தார்கள். இந்தப் பட்டமும், பதக்கமும் வால்மீகி தினக் கொண்டாட்டம் சென்னைச் சம்ஸ்கிருத சேவா சமிதியாரால் 31-3-1955-இல் நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் சென்னைக் கவர்னர் **ஸ்ரீ பிரகாசா** அவர்கள் டாக்டர் ராகவனுக்கு வழங்கினர்.

* * * * * *

மதுரை மீனாக்ஷி சுந்தரேசுவரர் ஆலய பரம்பரை ஸ்தானீகரும் தருமப் பிரசாரத்தில் ஈடுபட்டிருப்பவருமான **சிவஸ்ரீ ம. க. சுந்தரேச பட்டருக்கு** ஸ்வாமிகள் "**சிவதர்ம பாஸ்கர**" என்னும் பட்டத்தை அளித்துள்ளார்கள்.

## (5) மடத்தின் புத்தகாலயமும், வெளியீடுகளும்

மடத்தின் புத்தகாலயத்தில் சம்ஸ்கிருதம், தெலுங்கு, தமிழ், ஆங்கிலம் ஆகிய பாஷைகளில் சுமார் 5000 அச்சுப்பிரதிகளும் 2000-க்கும் மேற்பட்ட ஏட்டுச் சுவடிகளும் இருக்கின்றன. ஏட்டுச் சுவடிகளில் சில இதுவரை வெளிவராத கிரந்தங்களாகவும் உள்ளன. இவைகளை ஆராய்ச்சி செய்ய சில பண்டிதர்களை ஸ்வாமிகள் நியமித்தார்கள். மடத்தின் முதல் வெளியீடாக தமிழில் **முந்நூற்றிரட்டு** என்னும் ஒரு புத்தகம் 1941-ஆவது ஆண்டில் ஸ்வாமிகளின் கட்டளைப்படி வெளியிடப்பட்டது. இப்புத்தகத்தில் திருக்குறளிலிருந்து 56 செய்யுள்களும், கம்பராமாயணத்திலிருந்து 98 பாட்டுக்களும், பெரிய

புராணத்திலிருந்து 88 பாட்டுக்களும் பதவுரை, பொழிப்புரைகளுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்தை வெளியிட்டதன் நோக்கம் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கு இப்பாடல்களும் அவற்றின் பொருள்களும் மனப்பாடமாக அமையவேண்டுமென்பதேயாகும். அந்த நோக்கத்துடன் இப்புத்தகம் தமிழ்நாடு எங்கும் பல ஊர்களிலுள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்களுக்கு அனுப்பப்பட்டது. ஒவ்வொரு ஊர் ஆசிரியரும் தாம் அவைகளை மனப்பாடம் செய்துகொண்டு பிள்ளைகளுக்கும் மனப்பாடம் செய்து வைத்துப் பின்னர் அடுத்த ஊரிலுள்ள ஓர் பாடசாலைக்கு இந்தப் புத்தகத்தை அனுப்பிவிட வேண்டுமென்ற ஓர் நூதன ஏற்பாட்டை ஸ்வாமிகள் செய்திருந்தார்கள்.

1942-ஆவது ஆண்டில் சென்னையில் **ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்** என்னும் ஒரு பிரசுராலயம் தோற்றுவிக்கப்பட்டது. இந்த நிலையத்திலிருந்து சிறந்த முறையில் பல அரிய நூல்கள் வெளிவர பொறுப்பேற்றுக் கொண்டவர் திருவிடைமருதூர் வாஜபேய வம்சத்தவரும் குருபக்த சிகாமணியுமான காலஞ்சென்ற D. **பாலசுப்ரமண்ய ஐயர்** ஆவர். இவர் சென்னை பி. ஜீ. பால் அண்டு கம்பெனியின் உரிமையாளர். ஐயர் அவர்களுக்குப் பின்னர் அவரது மைத்துனர் K. **நீலகண்ட ஐயர்** இந்த நிலையத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு ஒப்பற்ற பக்தியுடன் ஸ்வாமிகளுக்குப் பணியாற்றி வருகிறார். சம்ஸ்கிருதத்தில் பக்திப் பாடல்கள் நிரம்பிய பல நூல்கள் தமிழ் உரையுடன் இந்தக் கோசஸ்தானத்திலிருந்து வெளிவந்துள்ளன. மேலும் திருக்குறளையும் இந்த நிலையத்தார் உரையுடன் வெளியிட்டிருக்கிறார்கள். இந்நிலையத்திலிருந்து வெளிவந்துள்ள சிறந்த நூல்களெல்லாம் அடக்க விலைக்கே விற்கப்படுவதால் ஆஸ்திக அன்பர்களுக்கு இந்நிலையம் இத்துறையில் பேருபகாரத்தைச் செய்து வருகின்றது. இதுவரை 100 ஸ்தோத்திரப் புத்தகங்களுக்குமேல் இந்நிலையத்திலிருந்து வெளிவந்துள்ளன. ஸ்ரீ ஆசார்யர்கள் உத்தரவின் பேரில் ‘பிரம்மஸூத்ர பாஷ்யம்’ வெளியிட்டுள்ளார்கள். மேலும் தோடகாஷ்டகம், கிருஷ்ணாஷ்டகம், ராம புஜங்கம், சிவாஷ்டகம் போன்ற சிறு ஸ்தோத்திர புத்தகங்கள் ஆயிரக்கணக்கில் அச்சடித்து, ஸ்ரீ ஆசார்யர்கள் உத்தரவுபடி இலவசமாக விநியோகித்து வருகிறார்கள்.

## (6) ஸ்ரீ மடம் வேத சாஸ்திர பாடசாலைகள்

காஞ்சீ, மத்யார்ஜுனம் (திருவிடைமருதூர்), கும்பகோணம், ஜம்புகேச்வரம் (திருவானைக்கா), விழுப்புரம், தஞ்சை முதலான இடங்களில் ஸ்ரீமடத்தின் வேத சாஸ்திர பாடசாலைகள் நடந்து வருகின்றன. மேலும் மடத்தின் நிர்வாகத்திலும், மடத்தின் பொருளுதவியைக் கொண்டும் நாட்டின் பலவிடங்களில் பாடசாலைகள் நடைபெற்று வருகின்றன.

## (7) ஸ்வாமிகளைப்பற்றி வடமொழியில் காவியம் இயற்றியவர்கள்

காசியில் சிருங்கேரி மடம் ஏஜெண்டாக இருந்த **நஞ்சங்கூடு ஸ்ரீ கண்ட சாஸ்திரி** என்பவர் ஸ்வாமிகளைப் பற்றி 1000 சுலோகங்களுக்கு மேல் இயற்றியுள்ளார். அந்த நூல் இன்னும் அச்சாகவில்லை. கிழக்குக் கோதாவரி ஜில்லா அம்பாஜிபேட்டை முங்கண்ட அக்ரஹாரத்தைச் சார்ந்த **புல்லிய உமா மஹேச்வர சாஸ்திரி** என்னும் வித்வான் 170 சுலோகங்களில் ஸ்வாமிகளின் சரிதையை வெளியிட்டிருக்கிறார். புதுக்கோட்டை சம்ஸ்தானத்தில் தானாதிகாரியாகயிருந்த சாஸ்திர ரத்னாகரம் **காளி ரங்காசாரிய ஸ்வாமி** ஸ்வாமிகளின் பேரில் சுமார் 100 சுலோகங்கள் கொண்ட பாமாலை ஒன்றை வெளியிட்டுள்ளார். சென்னை அரசாங்கத்தின் ஆஸ்தான கவியாகவிருந்த மகாமகோபாத்யாய **கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், ஸ்ரீ குருராஜ ஸ்தவம்** என்னும் பெயருடன் ஒரு நூலை இயற்றி வெளியிட்டுள்ளார். ஸ்வாமிகளிடம் நெருங்கிய தொடர்புகொண்ட பக்தர்களில் ஒருவரான புதுக்கோட்டை **மல்லாதி தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரி** என்பவரும் ஸ்வாமிகளின் பேரில் ஸ்தோத்திரங்கள் இயற்றி அவைகளை வெளியிட்டிருக்கிறார். காலஞ்சென்ற மகாமகோபாத்யாய யக்ஞஸ்வாமி சாஸ்திரிகளின் புதல்வர் **Y. மகாலிங்க சாஸ்திரிகள், எம். ஏ., பி. எல்.** அவர்களும் ஸ்வாமிகளின் பெருமைகளைப் பற்றிச் சுலோகங்கள் பல இயற்றி அவைகளை வெளியிட்டுள்ளார். **பண்டிதராஜ போலகம் ஸ்ரீராம சாஸ்திரிகள்** ஸ்ரீ ஆசார்யர்களின் பேரில் "த்வம் ஜீவ சரதச் சதம்" என்னும் தலைப்பில் பல சுலோகங்களை இயற்றியுள்ளார். இன்னும் பல பண்டிதர்கள் அவ்வப்போது ஸ்ரீ ஸ்வாமிகளின் பேரில் துதிகளையும், நாமாவளிகளையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

## (8) TATANKA PRATHISHTA TO GODDESS AKHILANDESWARI

The " Hindu Message " published at Srirangam under the editorship of Mr. T. K. Balasubramania Iyer, B. A., wrote in its editorial on May 10, 1923, as follows :—

" Never before in the annals of Trichinopoly have we witnessed the grandeur and enthusiasm that were displayed at the reception of His Holiness Sri Jagadguru Sri Sankaracharya of Kanchi Kamakoti Peetha who arrived at Trichinopoly on the 23-rd ult. The mile long procession headed by richly caparisoned elephants and surging crowds with His Holiness seated high on the Ivory palanquin in the centre surrounded by large concourse of Brahmins chanting the Vedas, and followed by numerous Bhajana Parties and Tevaram Parties, the rich and tasteful decorations all along the route which extended to nearly eight miles, the buoyant enthusiasm of the huge crowd that pressed on all sides just to have a glimpse of His Holiness' beaming countenance and that followed the procession right through to the end, the festive appearance of the whole town and the eagerness of everyone in that vast concourse of people to do some sort of service to His Holiness were sights for Gods to see and they beggar all description. It showed in a clear and unmistakable way the stronghold of religion and religious ideals still on the people of the country. No Viceroy or even the Emperor himself could have evoked such spontaneous and heartfelt enthusiasm. It took nearly five hours for the procession to reach its destination. His Holiness had a smile or a word of cheer for every one of the assembled people and when he retired into the Mutt, His Holiness observed that the weariness of the journey was counteracted by unprecedented enthusiasm of the people. The very next day commenced the preliminaries of the Tatanka Pratishta for the Goddess Akhilandeswari at Jambukeswaram. As many of our readers may not quite understand what it means by Tatanka Pratishta we will describe it a little in detail.

When Adi Sankaracharya incarnated in this holy land, he went round the whole of Bharatavarsha several times and in the course of his Vijaya Yathra established several Yantras in different big temples. Of such temples, Jambukeswaram is an important one. It appears the Goddess here was very fierce and with her *ugra kala* used to burn everything before her. Even the archaka who opened the temple doors early in the morning was reduced to ashes and the people, unable to put up with such fierceness, eagerly availed themselves of the opportunity afforded by the presence in their midst of the great Sankaracharya who came to this kshetra in the course of his tour and implored him to draw out the *ugra kala* of the Goddess and thus appease her ferocity. Accordingly, he established a temple of Ganesa just opposite to that of the Goddess so that when the temple doors were opened in the morning the first person to catch the eye of the Goddess may be her own favourite son. This in a way reduced the ferocity, but not satisfied with this, Sri Sankaracharya prepared two Sri Chakras in the shape of two Tatankas (*Ear Ornaments*) and drew forth all the *ugra kala* of the Goddess into these two Tatankas and fixed them on her two ears. Thence forward the Goddess became *Soumya Murti* and ever since then this Tatanka has been worn by the Goddess always except during the nights. And whenever this ornament got into disrepair, it was repaired by the spiritual descendants of the Great world-teacher, who adorned the Kanchi Kamakoti Peetha, and put up again on the ears of the Goddess after due Pratishtha. In accordence with this time-honoured rule, the present occupant of Sri Kanchi Kamakoti Peetham deemed it part of his duty to repair the Tatanka and perform the Pratistha while fixing it up again on the ears of the Goddess. With this object in view, His Holiness started from Kumbakonam more than four years ago and after touring through various parts of the country, teaching Dharma to his numerous disciples, reached Trichinoploy just two weeks ago. The preliminary ceremonies were performed on a grand scale with the help of

thousands of Brahmins and the ceremony proper took place on the 29th ulto. Ever since a very early hour that morning, people began to assemble in large numbers and by about 8 A.M., when His Holiness left the Mutt for the temple, the crowd had become so dense that town could not hold it. The twin attraction of the Goddess Akhilandeswari (Goddess of all the worlds) and the divine Jagadguru (the world-Teacher) was so great that it attracted enormous crowds with boundless enthusiasm. The sight of this surging mass of people and the tremendous enthusiasm that swayed them was simply marvellous. The rush was so great that it became very difficult even for His Holiness to enter the temple. After all, when His Holiness got into the Sanctum Sanctorum and the Kumbham was brought in from the Yagasala and the Abhishekam was performed for the Goddess, there arose a thrill of reverence throughout that surging mass of humanity. Soon after, under the commands of His Holiness and blessed by him, the Tatankas were fixed up as usual on the ears of the Goddess and immediately there shone a brilliant divine lustre which it was the privilege, of only those that were inside, to witness. Thus ended this unique festival, eagerly awaited by thousands of pilgrims from all parts of the country. People were fed in tens of thousands and a very large number of highly learned vidvans, who had graced the occasion, delivered a number of public lectures under the command of His Holiness on various interesting topical subjects. They were all duly honoured by His Holiness with valuable presents according to their merits. Thus ended this unique ceremony not witnessed by any for two generations past."

## (9) 1957-இல் காஞ்சியில் ஸ்ரீ பரமாசார்யர்களுக்குப் பக்த கோடிகளால் நடத்தப்பட்ட கனகாபிஷேகத்தன்று ஸ்ரீ ஆசார்யர்களின் அருளுரை

இந்தக் காஞ்சீபுரத்தில் பகவான் மாமரத்தடியில் எல்லாப் பாவத்தையும் போக்கி அநுக்கிரஹம் பண்ணுவதற்காக ஏகாம்ரேசுவரராகக் காத்துக் கொண்டிருக்கிறார். வரதனும்

மற்றத் தெய்வங்களும் இருக்கிறார்கள். நூற்றெட்டுச் சிவாலயங்களும், பதினெட்டுத் திருப்பதிகளும் இருக்கின்றன. எல்லாத் தேவர்களும் சேர்ந்து ராஜராஜேசுவரியை பிரதட்சிணம் பண்ணும்படியாக நடுவில் நான்கு கோபுர வாயில்களைக் கொண்ட ஆலயத்தில் ஸ்ரீ காமாக்ஷி, பக்தர்களுக்கு அநுக்கிரஹம் பண்ணிக்கொண்டிருக்கிறாள்.

அந்தக் காமாக்ஷியின் மஹிமையினால் மூகன் அநுக்கிரஹம் பெற்றான். மூகன் என்றால் ஊமை என்று அர்த்தம். ஊமையாய் இருந்த அவருக்குக் காமாக்ஷி தேவியின் அநுக்கிரகத்தினால் கவிபாடும் திறமை உண்டாயிற்று. அங்கே ஒரு மஹான் தபஸ் பண்ணிக் கொண்டிருந்தார். தவத்திற்காகப் பிரசன்னமாக வேண்டிய முறைப்படி அம்பாள் ஆவிர்ப்பவித்தாலும் அவருக்குப் பக்வம் வரவில்லை. அந்தக்காலம் சிறிது எட்டியிருந்தது. காமாக்ஷி தேவி பிரசன்னமாகி அவருக்கு முன்னே வந்து 'வாயைத் திற' என்று சொன்னாள். 'நீ யாரோ' என்று அம்பிகையை அப்பால் போகச் சொல்லிவிட்டார் அவர். மூகன் அங்கே பேசாமல் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். 'நான் வாயைத் திறக்கிறேன்' என்று சொல்லி அவன் திறந்தான். அம்பாள் அவன் வாயில் தாம்பூலத்தை உமிழ்ந்தவுடன் பாட ஆரம்பித்துவிட்டான். ஆர்ய சதகம், பாதாரவிந்த சதகம், ஸ்துதி சதகம், கடாக்ஷ சதகம், மந்தஸ்மித சதகம் என்று ஐந்நூறு சுலோகங்கள் கங்கையின் வெள்ளம் போலப் பிரவாகமாக அவனுடைய வாக்கிலிருந்து வந்தது. அந்த ஐந்நூறு சுலோகங்களிலும் மந்திர சாஸ்திரம், தந்திர சாஸ்திரம், அநுக்கிரஹ விசேஷம் எல்லாம் கலந்து இருக்கின்றன. அம்பிகையின் வாக்கிலிருந்து அவனுடைய வாக்குக்கும், அவனுடைய வாக்கிலிருந்து திரும்பி நமக்கும் அநுக்கிரஹம் செய்ய வந்திருக்கிறது அது.

அதிலே ஒரு சுலோகத்திலிருந்து துண்டீர மண்டலத்தில் அத்புதமான அருள்புரிந்திருப்பதாகத் தெரிய வருகிறது. துண்டீரம் என்றால் தொண்டைக்கொடி. தொண்டை மண்டலத்துக்குத் துண்டீர தேசம் என்று பெயர். அந்தச் சுலோகம்:

खण्डीकृत्य प्रकृतिकुटिलं कल्मषं प्रातिभश्री
शुण्डीरत्वं निजपदजुषां शून्यतन्द्रं दिशन्ती
तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री
चण्डी देवी कलयति रतिं चन्द्रचूडालचूडे

சந்திர கண்டத்தைச் சிரசில் தரித்துக் கொண்டிருக்கிற பரமேசுவரனுக்குப் பரம லாபமாக இருக்கிறவள் அம்பிகை.

துண்டீரமென்னும் தொண்டை மண்டலத்துள் காஞ்சீபுரத்தில் இருக்கிருள். வடக்கே காளஹஸ்திக்குப் பக்கத்தில் ஸ்வர்ணமுகி என்கிற நதி இருக்கிறது. பொன்முகலி என்பார்கள். தெற்கே பெண்ணையாறு. பிநாகினி என்று பேர். பரமசிவன் தன் வில்லாகிய பிநாகத்தால் உண்டுபண்ணப்பட்ட நதி. கிழக்கே சமுத்திரம். மேற்கே விரிஞ்சீபுரத்துக்குப் பக்கத்தில் ஒரு மகாமடு. இந்த எல்லைக்குள் இருக்கும் பிரதேசம் எல்லாவற்றுக்கும் தொண்டை மண்டலம் என்று பெயர். துண்டீரம் என்றும் பெயர். அந்த இடத்தில் ஒரு சமயம் பஞ்சம் வந்த காலத்தில் ஸ்வர்ண விருஷ்டி—தங்க மழை பெய்யும்படியாகச் செய்தாள் அம்பிகை.

तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री

என்று ஒரு சுலோகத்தில் ஊமையினுடைய வாக்கிலே கங்கை வெள்ளமாக வந்திருக்கிறது.

பஞ்சம் எதனுல் வருகிறது? ஸ்வபாவமாக ஜனங்கள் அநேக தப்புகள் பண்ணுகிருர்கள். அதனுல் பாவங்கள் உண்டாகின்றன. யாராவது ஒருவன் பாபம் பண்ணிலுைம் அவன் அடைகிற துன்பத்தைக் காட்டிலும் அந்தத் தேசம் அதிகத் துன்பத்தை அடைகிறது. பஞ்சம் உண்டாகிறது.

புத்தி இல்லாததினுலே தப்புப் பண்ணுகிருேம். உயர்ந்த புத்தி நமக்குக் கிடைத்தால் பாவம் பண்ண மாட்டோம். வெறும் புத்தி மாத்திரம் போதாது. உண்மையான அறிவு இருக்கவேணும். உண்மையான அறிவுக்கு மேதை என்று பெயர். மேதா தட்சிண மூர்த்தி என்று கேட்டிருப்பீர்களே!

காஞ்சீபுரத்தில் இருந்து கொண்டிருக்கிற அம்பாள் தன்னுடைய பக்தர்களுக்கு இயல்பாக உள்ள தோஷங்களை எல்லாம் போக்கி நல்ல மேதையை அநுக்கிரஹம் பண்ணிக் கொண்டிருக்கிருள். அநேகமாக எந்த ஊரிலும் ஸ்ரீசக்ரத்துடன் தனியே கோயிலில் அம்பிகை இருக்க மாட்டாள். ஆனுல் காஞ்சீபுரத்தில் மாத்திரம் இப்படி உட்கார்ந்து ராஜராஜேச்வரியாக லோகம் முழுவதும் அநுக்கிரஹம் பண்ணிக் கொண்டு ஆறு காலமும் தரிசனம் கொடுத்துக் கொண்டு நான்கு கோபுர வாயில்கள் இருக்கும்படியான ஆலயத்தில் இருக்கிருள்.

அங்குள்ளவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து, பஞ்சத்தின் கஷ்டத்தைப் போக்க ஸ்வர்ண விருஷ்டி உண்டாகும்படியாகச் செய்தாள் என்று அவளது கடாக்ஷம் பெற்ற மூகன் வாக்கிலிருந்து ஒரு சுலோகம் வந்திருக்கிறது. தொண்டை மண்டலத்தில் அம்பாள் ஸ்வர்ண விருஷ்டி செய்ததற்கு அறிகுறியாகப் பொன் விளைந்த களத்தூர் என்று ஓர் ஊரின் பேரும் அமைந்திருக்கிறது.

அதே அம்பாள் பேரில் அன்புள்ள சங்கராசாரிய சுவாமிகள் பூலோகத்திலே அவதாரம் பண்ணி ஆஸேது ஹிமாசல பரியந்தம் யாத்திரை பண்ணி ஷண்மதஸ்தாபனம் செய்தார். பல அற்புதமான காரியங்களால் லோக க்ஷேமம் உண்டாகச் செய்தார். இங்கே வந்து காமாக்ஷியின் உக்ர சக்தியை மாற்றிச் சாந்தியடையச் செய்து சிலாரூபத்தில் ஸ்ரீ சக்ரத்தைப் பிரதிஷ்டை பண்ணினார். பிறகு இங்கேயே ஸர்வக்ஞ பீடாரோகணம் செய்தார். ஆசார்யர்கள் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு முன்பு பிரம்மசர்ய ஆசிரமத்தில் ஒரு வீட்டுக்குப் பிக்ஷைக்குப் போனார். அது மிகவும் ஏழையான ஒரு பிராம்மணன் வீடு. கையிலே ஒன்றும் இல்லை. அந்தப் பிராம்மணன் உஞ்சவிருத்திக்குப் போயிருந்தான். அன்றைக்குத் துவாதசி. துவாதசி ஆயிற்றே என்று எங்கிருந்தோ ஒரு நெல்லிக் காயைப் பொறுக்கி எடுத்து வந்து வைத்திருந்தாள் அந்த வீட்டு அம்மாள். நல்ல நெல்லிக்காயும் அல்ல; அழுகிப் போன நெல்லிக் காய். அந்த வீட்டில் போய் ஆசார்யர்கள் பிக்ஷை கேட்டார். "துவாதசி ஆயிற்றே, இந்தப் பிரம்மசாரி பிக்ஷை கேட்டு விட்டாரே. கொடுப்பதற்கு வேறு ஒன்றும் இல்லையே. இதைக் கொடுத்தால் கோபிப்பாரோ!" என மனம் வருந்தி அந்த நெல்லிக் காயைக் கொண்டு வந்து போட்டாள். கொண்டு வந்து போடும் போதே அவள் கண்களில் இருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வந்தது. அதைப் பார்த்தவுடன் அவளுடைய தாரித்திரியத்தால் உண்டான துன்பத்தை ஆசார்யர்கள் உணர்ந்து கொண்டார். மஹாலக்ஷ்மியைப் பார்த்து, "இவர்களுடைய தாரித்திரியத்தைப் போக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். கனகதாராஸ்தவம் என்று அந்த ஸ்தோத்திரத்துக்குப் பெயர்.

"பாவங்களைச் செய்தால் கர்மாக்களுக்கு ஏற்ற கஷ்டத்தை அநுபவிக்கத்தான் வேண்டும். இவர்கள் பண்ணின கர்மாக்களுக்கு இத்தனை தாரித்திரியத்தை அநுபவித்தது போதாதா? இவர்களுடைய தாரித்திரியம் நீங்க வேண்டும்" என்று இவர்

பிரார்த்தனை செய்த மாத்திரத்தில், ஒரு நெல்லிக்கனி கொடுத்த அந்த அம்மாள் வீட்டில் கோடிக் கணக்கான ஸ்வர்ணக் கனிகள் ஸ்வர்ண விருஷ்டியாகப் பொழிந்தன.

அம்பாளுடைய அநுக்கிரகத்தினால் துண்டீரத்தில் ஸ்வர்ண விருஷ்டி பொழிந்தது. ஆசார்யர்களுடைய அநுக்கிரகத்தினால் ஏழையின் வீட்டில் ஸ்வர்ண விருஷ்டி பொழிந்தது. அம்பாளும் ஆசார்யரும் கிருபை புரியும் க்ஷேத்ரம் இது. "உங்களுக்கும் கனகாபிஷேகம் செய்து பார்க்க வேண்டுமென்று ஆசை" என்று ஒரு பிராம்மணர் என்னைக் கேட்டார். அவருக்கு வயசு எண்பதாகி விட்டது. "நான் இருக்கிறபோதே பார்த்துவிட வேண்டும். அந்தப் புண்ணியத்தை அநுக்கிரகிக்க வேண்டும்" என்றார். ஓர் அபிமானத்தினாலே, ஆசார்ய தத்துவத்தில் கொண்ட பக்தியினாலே கேட்டார். பிறகு அவருக்குக் கண் பார்வை மங்கியது. "உமக்குக் கண் பார்வை இல்லையே. எதைப் பார்க்க முடியும்?" என்று சொல்லிவிட்டேன். அவருக்கு மறுபடியும் பார்வை கிடைத்தது. "இப்போது பார்வை வந்துவிட்டது. என் பிரார்த்தனையை நிறைவேற்றவேணும்" என்று கேட்டுக் கொண்டார். அவருடைய ஆசையைப் பார்த்து "ஆகட்டும்" என்று நானும் ஒப்புக் கொண்டேன். சொந்த ஹோதாவில் லாயக்கு இல்லை. லோகம் இருக்கும் நிலையிலும் லாயக்கு இல்லை. அவரும் மற்றவர்களும் காட்டின அபிமானத்தால் தட்ட முடியவில்லை. அம்பிகையினுடைய அநுக்கிரஹத்தினாலும் ஆசார்யர்களுடைய அனுக்கிரஹ விசேஷத்தாலும் லோகத்தில் கஷ்டம் எல்லாம் நீங்கி, தாரித்திரியம் நீங்கும்படியாகப் பிரார்த்திக்கிறேன். ஸ்வர்ணவிருஷ்டி செய்வித்த அம்பிகைக்குப் பிரதான க்ஷேத்ரமாகவும், பிரதான பீடமாகவும் கனகதாராஸ்தவ ஸ்தோத்திரத்தினால் தங்க நெல்லிக் கனிகளை வருஷிக்கும்படி செய்வித்த ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதருக்கு ஒரு முக்ய ஸ்தானமாயுள்ள இந்தக் காஞ்சீ க்ஷேத்ரத்தை ஸேவிப்பதே நமக்கும் பெரிய கனகாபிஷேகம்.

கலவையில் என்னுடைய குருவும் அவர்களுடைய குருவாகிய பரம குருவும் சித்தி அடைந்தார்கள். அவர்களுடைய ஆராதனைக்காக நான் அங்கே போயிருந்தேன். எல்லாரும் என்னைக் கொண்டாடும்போது நானும் ஒருவரைக் கொண்டாடவேண்டாமா என்று ஐம்பது வருஷக் கொண்டாட்டத்தின் போது ஐம்பதாவது வருஷ ஆராதனைக் கொண்டாட்டத்திற்கு அங்கே போயிருந்தேன்.

என்னுடைய குருவும் பரமகுருவும் சித்தி அடைந்த ஊர் கலவை, கலவை என்றால் வேறு பொருள் கூடச் சொல்லலாம்.

இரண்டறக், கலக்கிற இடம் என்று சொல்லலாம். பரமாத்ம ஸ்வரூபத்தில் ஜீவாத்மா வேறுபாடு இல்லாமல் கங்கை நதி சமுத்திரத்தோடு கலக்கிறது போலக் கலக்கும் இடம் அது. குருவும் பரம குருவும் பரமாத்மாவோடு கலந்த இடம் கலவை.

அதற்கு முந்திய ஆசார்யர்கள் என்னுடைய பரமேஷ்டி குரு. அவர்கள் சித்தி அடைந்த இடம் இளையாற்றங்குடி. இது இராம நாதபுரம் ஜில்லாவில் புதுக்கோட்டைக்குத் தெற்கே இருக்கிறது. அங்கே ஒரே சப்பாத்திக் காடாக இருந்தது. ஆசார்யர்கள் ராம நாதபுரம் எல்லாம் சுற்றிவிட்டு வரும் பிரயாணத்தில் அங்கே தங்கினார். வில்வ மரத்தடியில் தங்கினார். இரவு ஒரு மணிவரையில் பூஜை செய்துவிட்டு நிஷ்டையில் இருந்தார். இருந்தபடியே சித்தி அடைந்தார். அந்த இடத்திலேயே வில்வ மரத்தடியில் கோயில் கட்டினார்கள்.

இளையாற்றங்குடி என்ற பெயர்கூடப் பொருத்தமாக இருக்கிறது. உலகம் முழுவதும் சுற்றிவிட்டு ஆசார்யாருக்கு உண்டான இளைப்பாற்றுங்குடி அது. செட்டிநாடு அது. 16 நகர நாட்டுக் கோட்டைச் செட்டிமார்களுக்கு ஒன்பது சிவாலயங்கள் உண்டு. அதில் ஒன்று இளையாற்றங்குடி. அங்கே இவருக்கு ஆலயம் நிர்மாணம் பண்ணினார்கள்.

குரு, பரமகுரு, பரமேஷ்டி குரு ஆகிய மூவருக்கும் முந்தினவர் பராத்பரகுரு.

பராத்பரகுரு கும்பகோணத்தில் இருந்தார். நாலு தலைமுறை அங்கே இருந்தார்கள். வடக்கே பலபல க்ஷேத்திரங்களை எல்லாம் தரிசனம் பண்ணிக் கொண்டு கும்பகோணத்திற்கே வந்துவிட்டார்கள். கும்பகோணத்திற்கு என்ன விசேஷம்?

இதர இடங்களில் பண்ணின பாவங்கள் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றால் போகும். புண்ணிய க்ஷேத்திரங்களில் பண்ணின பாவங்கள் காசிக்குச் சென்றால் போகும். காசியில் உள்ளவனே பாவம் செய்தால் எங்கே போவது?

"காசி க்ஷேத்ரே க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி". காசியிலே இருக்கிறவர்கள் பாவம் செய்தால் கும்பகோணத்திற்குப் போனால்தான் போகும். கும்பகோணத்திலே இருக்கிறவர்கள் பாபம் செய்தால் என்ன பண்ணுவது? மரத்திலிருந்து விழுந்தால் மண்ணில் விழலாம். மண்ணிலிருந்தே விழுந்தால் மண்ணிலேதான் விழ வேண்டும்.

"கும்பகோணே க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி". கும்பகோணத்தில் செய்யும் பாபம் கும்பகோணத்திலே தான்

போக வேண்டும் என்பார்கள். கும்பகோணம் மஹா விசேஷ மானது. பராத்பர குரு அங்கே இருந்தார். அவர் பலபல இடங் களுக்குச் சென்ருர். திருச்சிராப்பள்ளிக்குப் பக்கத்தில் ஜம்பு கேசுவரத்தில் அகிலாண்டேசுவரி அம்பாள் இருக்கிருள். ஆதி சங்கரர் காஞ்சீபுரத்தில் சிலா ரூபத்தில் ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்தது போல அங்கே ஸ்ரீசக்ரம், சிவசக்ரம் இரண்டையும் அகிலாண்டேசுவரி அம்பிகையின் தாடங்கமாகப் பிரதிஷ்டை பண்ணினுர். அங்கே பராபர குரு போய்விட்டுத் திரும்பிக் கும்பகோணத்திற்கு வருகிற வழியில் தஞ்சாவூர் மகாராஜா சிவாஜி, அவர்களை வரவேற்றுக் கனகாபிஷேகம் செய்தார். இந்தப் பராபர குருதான் ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீ காமாக்ஷிக்கும் ஸ்ரீ சக்ரத்திற்கும் புனருத்தாரண கும்பாபிஷேகம் செய்தவர்கள்.

## 1958 மார்ச் மாதம் சென்னை தியாகராய நகரில் நடைபெற்ற கனகாபிஷேக வைபவத்தின்போது ஸ்ரீ பரமசார்யர்களின் அருளுரை

'' ஸ்ரீபகவத்பாதரின் ஆக்ஞைகளை நாம் தினசரி நிறைவேற்றினுல் அதுவே நாம் அவருக்குத் தினசரி செய்யும் கனகாபிஷேகமாகும்.

**'' ச்ருதி ஸ்ம்ருதி புராணுனும்**
**ஆலயம் கருணுலயம்**
**நமாமி பகவத்பாத**
**சங்கரம் லோக சங்கரம் ''**

ஸ்ரீ பகவத் பாத சங்கரரை நான் நமஸ்கரிக்கிறேன். அவர் சுருதி ஸ்ம்ருதி புராணங்களின் உறைவிடம் மட்டுமல்ல. அவர் கருணையின் உறைவிடம். லோகத்திற்குச் சாந்தியை அளிப்பவர்.

பிரதி தினமும் பக்தர்கள் எனக்குத் தேங்காய்கள், எண் ணற்ற புஷ்ப மாலைகள், துளஸிதளம், வில்வ மாலைகள், கவிஞர் கள் இயற்றிய பாமாலைகள் முதலியவைகளை ஸமர்ப்பிக்கிருர்கள். இவை எல்லாம் எனக்கு ஒருவித அபிஷேகமாகின்றன. இன்று எனக்குக் கனகாபிஷேகம் செய்திருக்கிருர்கள். இதற்கெல்லாம் ஒரே ஒரு காரணம்தான் உண்டு.

சுருதிகளும், ஸ்மிருதிகளும், புராணங்களும் வாஸம் செய் வதற்கிடமானவரும், சகல ஜீவராசிகளிடம் கருணை நிரம்பியவரு மான ஸ்ரீ பகவத் பாதர்களின் பெயரையே நான் பெற்றிருப்பதால் தான் எனக்குக் கனகாபிஷேகம் நடக்கிறது. ஸ்ரீ ஆதி சங்கரரின் பவித்திரமான பெயரைத் தரித்திருப்பதன் பலன் இது என்ருல்,

அவருடைய ஆக்ஞைகளை நிறைவேற்றினால் மக்கள் அனைவருக்கும் பொன் மழை பொழியும் என்பதில் சந்தேகமில்லை. இந்தக் கனக தாரை என்பது, பொருள் என்ற வகையைச் சேர்ந்த பொன்னை மட்டும் குறிப்பிடவில்லை. மனிதனின் அபிலாஷை, முயற்சியின் நான்கு லட்சியங்களான தர்ம அர்த்த காம மோக்ஷம் ஆகிய நான்கு புருஷார்த்தங்கள் வர்ஷிக்கப்படுவதைக் குறிக்கிறது. ஸ்ரீ பகவத் பாதரின் ஏனைய ஆக்ஞைகளை நிறைவேற்றுவதால் எல்லா புருஷார்த்தங்களின் கனக தாரையைப் பெறலாம்.

ஸ்ரீ பகவத் பாதரின் ஆக்ஞை என்ன? ஈசுவர பூஜை செய்யப் பட வேண்டும் என்பதுதான் நம் குருவின் ஆக்ஞை. கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் ஆகிய பஞ்சோபசாரங்களால் ஈசுவரனைப் பூஜை செய்கிறோம். இதே போல் ஷோடசோபசார (16 விதமான) பூஜை, சதுஷ் ஷஷ்டி உபசார (64 விதமான) பூஜை என்ற பூஜைகள் இருக்கின்றன.

இவற்றிற்கெல்லாம் மிகவும் சிரேஷ்டமானது ஸ்ரீ பரமேச்வர பூஜை. இதை எப்படிச் செய்வது! வேதங்கள் விதித்துள்ள கர்மாக்களை நாம் செய்ய வேண்டும். இதுதான் சிறந்த ஈசுவர பூஜை என்று பகவத்பாதர் ஆக்ஞையிட்டிருக்கிறார். அவரவர் களுக்கு விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்வதன் மூலம் ஈசுவரனை வழிபட வேண்டும் என்று பகவத்பாதர் கூறுகிறார். அந்த ஆக்ஞையை நிறைவேற்றுவதற்கான அனுக்ரஹத்தையும் ஸ்ரீ பகவத்பாதரின் பாதார விந்தங்களை நாடித்தான் பெற வேண்டும்.

''ஸர்வ தேவ நமஸ்கார: கேசவம் பிரதி கச்சதி'' என்பது பிரஸித்தம். நீங்கள் எல்லோரும் ஸந்நியாஸிக்கு நமஸ்காரம் செய்கிறீர்கள்.

இந்த நமஸ்காரங்கள் எல்லாம் தனக்குத்தான் என்ற உணர்ச்சி ஸந்நியாஸியின் மனசில் ஏற்பட்டு விட்டால் அவர் ஸந்நியாஸியல்ல. பக்தர்களின் நமஸ்காரத்தை ஸந்நியாஸி வாங்கிக் கொண்டு பக்தி சிரத்தையுடன் ஸ்ரீ நாராயணனுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும். இப்படித்தான் ஸந்நியாஸிக்குச் செய்யப்படும் நமஸ் காரங்கள் ஸ்ரீ நாராயணனுக்குச் சேருகின்றன. 'ஓம் நமோ நாராயணாய' என்ற அஷ்டாக்ஷர மந்திரத்தைச் சொல்லி பக்தர்கள் வந்தனம் செய்யும் போது ஸந்நியாஸியின் மனம் நாராயணனிடம் லயித்திருந்து, ''நாராயண நாராயண'' என்று அவர் சொல்ல வேண்டும். இவ்விதம் பெற்றுக்கொள்ளப்படும் நமஸ்காரங்கள்

வாழ்க்கை யாத்திரையின் பரம லட்சியத்தின் முன் அர்ப்பணிக்கப் படுகின்றன.

இதே போலத்தான் இந்தக் கனகாபிஷேகங்களை ஸ்ரீ பகவத் பாதருக்கு நான் மானஸிகமாக ஸமர்ப்பித்து விடுகிறேன். இந்த உணர்ச்சி எனக்கு இல்லாவிடில் அது பெரும் நன்றி கெட்ட செயலாகும். ஸ்ரீ பகவத்பாதரின் கனகதாரா ஸ்தோத்திரம், வறுமையால் வாடிய தம்பதிகளுக்குப் பொன்னை வர்ஷித்தது. ஸ்ரீ பகவத்பாதரின் ஆக்ஞை தினசரி நிறைவேற்றப்பட்டால் ஈசுவரனுக்குத் தினசரி கனகாபிஷேகம் செய்ததாக ஆகும்.

வேதங்களில் கூறப்பட்டுள்ள அனுஷ்டானங்கள் மூலம் ஈசுவர பூஜை செய்யப்பட வேண்டும் என்று ஸ்ரீ பகவத்பாதர் ஆணையிட்டிருக்கிறார். ஈசுவர பூஜையே வேறொரு பலனுக்கான சாதனமாகும். இதைவிட இன்னும் சிரேஷ்டமான ஆக்ஞையை நிறைவேற்றுவதற்கான ஸாதனம் இது. இதைக் காட்டிலும் மேலான ஆக்ஞை எது? பரமாத்மா உணர்வில் ஒருவன் ஸ்திரமாக லயித்திருக்கட்டும் என்று கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ பரமேச்வரனைப் பூஜிப்பதின் பலனாகத்தான் இந்தப் பேருண்மையை அறிய முடியும்.

பொருட்களால் ஈசுவரோபசாரம் செய்வதைக் காட்டிலும் வேதங்கள் விதித்துள்ள கர்மாக்களைச் செய்து 'ஜனார்த்தன: ப்ரியதாம்' என்ற வார்த்தைகளுடன் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்து ஈசுவர ஆராதனை செய்வது மிகவும் சிலாக்கியமானது.

இந்தப் பிரார்த்தனையின் பயனாக நமது வாழ்க்கையின் லட்சியத்தை உணர்ந்து கொண்டு தினசரி ஸ்ரீ பகவத்பாதருக்கு நாம் கனகாபிஷேகம் செய்வோம்.

## குரு பக்தி மகிமை

(ஸ்வாமிகளுடைய குரு பரமகுரு சித்தியடைந்த க்ஷேத்திரமும் ஸ்வாமிகளுக்கு 1907-இல் பீடாரோஹணம் நடைபெற்ற புனித ஸ்தலமுமான கலவை ப்ருந்தாவனத்தில் 1957-இல் ஸ்ரீமத் ஆசார்யர்களின் குருவின் ஐம்பதாவது ஆராதனை மகோத்ஸவத்தின் போது ஸ்வாமிகள் அருளிய உபந்யாஸம்.

"இன்று ஐம்பதாவது ஆராதன சுபதினமாகக் கிட்டியது ஒரு பெரும் பாக்யம். அவ்வித வாய்ப்புக் கிடைத்தது ஈசன் அருள்தான்.

குருவே தெய்வம், குருவே பிரம்மா, குருவே விஷ்ணு, குருவே மகேச்வரன், குருவே தேவர்கள், குருவே ஸாக்ஷாத் பர

பிரம்மம். இது முற்றிலும் உண்மை. ஸ்தோத்திரத்திற்காகச் சொல்லப்பட்டதில்லை.

குருவை உள்ளன்போடு பூஜித்தால் சிவ-விஷ்ணு பேதமில்லாமல் எல்லோரையும் பூஜித்ததாகிறது.

பிரம்மா சிருஷ்டிக்கிருர், சிவன் ஸம்ஹாரம் செய்கிருர். விஷ்ணு காப்பாற்றுகிருர். இதற்காக நாம் அவர்களை வணங்குவதில்லை. அவர்களிடமிருந்து அனுக்கிரஹம் பெற்று நம் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காகவும் கஷ்டங்களிலிருந்து தப்பித்துக் கொள்ளுவதற்காகவுமே வணங்குகிருேம்.

ஸுகமும் துக்கமும் கலந்தே வாழ்வு பூராவும் இருக்கும். கஷ்டமில்லாத முழு ஸுகமும், ஸுகமில்லாத முழு கஷ்டமும் பெற முயற்சிப்பது வீண். இரண்டிலும் மனம் தளராமல் சமநிலை அடைய முயற்சிக்க வேண்டும். இதுவே வாழ்வின் லட்சியம்.

கடவுள் இத்தன்மை வாய்ந்தவர். இந்தச் சமநிலையை நாம் இந்த வாழ்விலே அடைந்து விட்டால் அதுவே நாம் ஈசனின் அருள் பெற்றதாக ஆகும்.

மூக கவி ஒரு சுலோகத்தில் காமாக்ஷி அம்மன் கடாக்ஷத்தைப் பெற்றவர் எப்படியிருப்பார் என்று சொல்லியிருக்கிருர்:

> இவர் அரண்யத்தையும் மாளிகையையும், விரோதியையும் நண்பனையும், கோவைக் கனி போன்ற உதட்டையுடைய யௌவன ஸ்திரீயையும் ஓட்டாஞ் சல்லியையும் சமமாகக் காண்பார்.''

கீதையிலும் கண்ணன் இக்கருத்தையே உபதேசித்திருக்கிருர்.

இந்தச் சம நிலையை அடைய நாம் ஈசனை நாட வேண்டும். ஈசன் நம் கண்களுக்குப் புலப்பட மாட்டார். பார்க்க முடியாதவரை தியானம் செய்வது கஷ்டம். சங்கு, சக்கரம், பீதாம்பரத்துடன் உள்ள திருமாலைத் தியானம் செய்ய முற்பட்டால் சங்கைத் தியானிக்கும்போது சக்கரம் மறைந்து விடுகிறது. பாதகமலத்தை நினைத்தால் கருணைக் கண் நினைவிற்கு வருவதில்லை.

ஆதலால் சிவ விஷ்ணு ஸ்வரூபமாக விளங்கும் குருவைப் பூஜிப்பது வெகு சுலபம். சம நிலை அடைந்து சாந்த ஸ்வரூபமாக விளங்கும் குருவை நாம் சதா தியானத்தினுல் வழிபட்டால் அவரது அனுக்கிரஹத்தாலும், ஞானோபதேசத்தாலும் நமக்கும் அந்த மனோநிலை ஏற்படும். குருவை நேரில் தரிசனம் செய்யும் பாக்கியமும், ஞானத்தை நேரில் உபதேசிக்கப் பெறும் பாக்கியமும் கிடைக்கிறது.

தான தர்மங்கள் எத்தனை செய்தாலும் யாகம் செய்தாலும் ஸ்தல தீர்த்த யாத்திரைகள் செய்தாலும், காமம், குரோதம் கோபம் இவைகளுக்கு அடிமையாகி ராக துவேஷத்திற்கு வசப் பட்டால் ஒன்றும் பயன் இல்லாமல் போய்விடுகிறது.

புண்ய கர்மாக்களைச் செய்தால் அடுத்த ஜன்மத்தில் மோக்ஷம் கிட்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனால் காமக் குரோதங்களை ஜயித்து சம நிலை எய்தினால் அதுவே மோக்ஷ நிலை. இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் பெறலாம். நாம் ஒவ்வொருவரும் இந்த ஆயுளிலேயே மோக்ஷம் பெற முயல வேண்டும். அதற்காகவே எல்லா முயற்சியும் இருக்க வேண்டும். மற்றக் காரியங்கள் எல்லாம் வீணே.

50 ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டில் எல்லோருக்கும் கடவுள் பக்தியும், குரு பக்தியும் நிரம்ப இருந்தது. இப்போது நிலை முற்றி லும் மாறிவிட்டது.

ஈசனிடத்திலும், குருவினிடத்திலும் எல்லா மக்களுக்கும் நம்பிக்கையும் உள்ளன்பும் ஏற்பட நம்மாலான முயற்சிகள் செய்ய வேண்டும்.

## (10) ஸ்ரீ காமகோடி பீடத்தின் குருபரம்பரை

| நெ. | ஆசார்யர்களின் பெயர்கள் | பீடத்தில் அமர்ந்திருந்த காலவரை வருடங்கள் | சித்தி பெற்ற நாள் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | வருடம் | மாதம் | பக்ஷம், திதி* | இங்கிலீஷ் வருடம் |
| 1. | ஸ்ரீ சங்கர பகவத்பாதர் | ... | ரக்தாக்ஷி | வைசாகம் | சு. ப. 11 | கி. மு. 476 |
| 2. | சுரேச்வரர் | 70 | பவ | ஜ்யேஷ்டம் | ,, 12 | ,, 406 |
| 3. | ஸர்வக்ஞாத்மர் | 112 | நள | வைசாகம் | கி. ப. 14 | ,, 394 |
| 4. | ஸத்யபோதர் | 96 | நந்தன | மார்க்கசீர்ஷம் | ,, 8 | ,, 298 |
| 5. | ஞானாநந்தர் | 62 | மன்மத | மார்க்கசீர்ஷம் | சு. ப. 7 | ,, 235 |
| 6. | சுத்தாநந்தர் | 81 | நள | ஜ்யேஷ்டம் | ,, 6 | ,, 154 |
| 7. | அநந்தாநந்தர் | 69 | குரோதன | வைசாகம் | கி. ப. 9 | ,, 85 |
| 8. | கைவல்யானந்தர் | 113 | சர்வதாரி | புஷ்யம் | பூ. | கி. பி. 28 |
| 9. | கிருபாசங்கரர் | 41 | விபவ | கார்த்திகம் | கி. ப. 3 | ,, 69 |
| 10. | ஸுரேச்வரர் | 58 | அக்ஷய | ஆஷாடம் | பூ. | ,, 127 |
| 11. | சித்கனர் | 45 | விரோதிக்ருது | ஜ்யேஷ்டம் | கி. ப. 10 | ,, 172 |
| 12. | சந்திரசேகரர் - 1 | 63 | ஆனந்த | ஆஷாடம் | சு. ப. 9 | ,, 235 |
| 13. | ஸத்சித்கனர் | 37 | கர | மார்க்கசீர்ஷம் | ,, 1 | ,, 272 |
| 14. | வித்யாகனர் - 1 | 45 | தாது | மார்க்கசீர்ஷம் | அ. | ,, 317 |
| 15. | கீஷ்பதிகங்காதரர் | 12 | சர்வதாரி | சைத்ரம் | சு. ப. 1 | ,, 329 |
| 16. | உஜ்வலசங்கரர் | 38 | அக்ஷய | வைசாகம் | ,, 8 | ,, 367 |
| 17. | பாலகுருசதாசிவர் | 8 | | ஜ்யேஷ்டம் | ,, 10 | ,, 375 |

| நெ. | ஆசார்யர்களின் பெயர்கள் | பீடத்தில் அமர்ந்திருந்த காலவரை வருடங்கள் | சித்தி பெற்ற நாள் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | வருடம் | மாதம் | பக்ஷம், திதி* | இங்கிலீஷ் வருடம் |
| 18. | யோகி திலகஸுரேந்திரர் | 10 | தாருண | மார்க்கசீர்ஷம் | சு. ப. 1 | கி. பி. 385 |
| 19. | மார்த்தாண்ட வித்யாகனர் | 13 | ஹேவிளம்பி | பாத்ரபதம் | கி. ப. 9 | ,, 398 |
| 20. | மூகசங்கரர் | 39 | தாது | சிராவணம் | பூ. | ,, 437 |
| 21. | ஸார்வபௌம சந்திரசேகரர் | 10 | விய | சிராவணம் | கி. ப. 8 | ,, 447 |
| 22. | பரிபூர்ணபோதர் | 34 | ரௌத்ரி | கார்த்திகம் | சு. ப. 9 | ,, 481 |
| 23. | ஸத்சித்ஸுகர் | 31 | கர | வைசாகம் | ,, 7 | ,, 512 |
| 24. | சித்ஸுகர் | 15 | பராபவ | சிராவணம் | கி. ப. 9 | ,, 527 |
| 25. | ஸச்சிதாநந்தகனர் | 21 | பிரபவ | ஆஷாடம் | ,, 1 | ,, 548 |
| 26. | பிரக்ஞானகனர் | 16 | ஸ்வபானு | வைசாகம் | சு. ப. 8 | ,, 564 |
| 27. | சித்விலாஸர் | 13 | துர்முகி | சைத்ரம் | ,, 1 | ,, 577 |
| 28. | மகாதேவர் - 1 | 24 | ரௌத்ரி | கார்த்திகம் | கி. ப. 10 | ,, 601 |
| 29. | பூர்ணபோதர் - 1 | 17 | ஈச்வர | சிராவணம் | சு. ப. 10 | ,, 618 |
| 30. | போதர் | 37 | ஆனந்த | வைசாகம் | கி. ப. 4 | ,, 655 |
| 31. | பிரம்மானந்தகனர் | 13 | பிரபவ | ஜ்யேஷ்டம் | சு. ப. 12 | ,, 668 |
| 32. | சிதானந்தகனர் | 4 | பிரஜோர்பத்தி | மார்க்கசீர்ஷம் | ,, 6 | ,, 672 |
| 33. | ஸச்சிதாநந்தர் | 20 | கர | பாத்ரபதம் | கி. ப. 6 | ,, 692 |
| 34. | சந்திரசேகரர் - 2 | 18 | சௌம்ய | மார்க்கசீர்ஷம் | அ. | ,, 710 |

| நெ. | ஆசார்யர்களின் பெயர்கள் | பீடத்தில் அமர்ந்திருந்த காலவரை வருடங்கள் | சித்தி பெற்ற நாள் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | வருடம் | மாதம் | பக்ஷம், திதி* | இங்கிலீஷ் வருடம் |
| 35. | சித்ஸுகர்-2 | 27 | தாது | ஆஷாடம் | சு. ப. 6 | கி.பி. 737 |
| 36. | சித்ஸுகானந்தர் | 21 | ஹேவிளம்பி | ஆச்விஜம் | பூ. | ,, 758 |
| 37. | வித்யாகனர்-2 | 30 | பிரபவ | புஷ்யம் | சு. ப, 2 | ,, 788 |
| 38. | அபிநவசங்கரர் | 52 | சித்தார்த்தி | ஆஷாடம் | அ. | ,, 840 |
| 39. | ஸச்சித்விலாஸர் | 33 | நந்தன | வைசாகம் | பூ. | ,, 873 |
| 40. | சோபனமகாதேவர் | 42 | பவ | வைசாகம் | சு. ப. 6 | ,, 915 |
| 41. | கங்காதரர் | 35 | ஸௌம்ய | ஸ்ராவணம் | ,, 1 | ,, 950 |
| 42. | பிரம்மானந்தகனர் | 28 | ஈச்வர | கார்த்திகம் | ,, 8 | ,, 978 |
| 43. | ஆநந்தகனர் | 36 | பிரமாதீச | சைத்ரம் | ,, 9 | ,, 1014 |
| 44. | பூர்ணபோதர்-2 | 26 | பிரமாதி | பாத்ரபதம் | கி. ப, 13 | ,, 1040 |
| 45. | பரமசிவர்-1 | 21 | சார்வரி | ஆச்விஜம் | சு. ப. 7 | ,, 1061 |
| 46. | ஸாந்த்ரானந்த போதர் | 37 | ஈச்வர | ஆஷாடம் | அ. | ,, 1098 |
| 47. | சந்திரசேகரர்-3 | 68 | பார்த்திப | சைத்ரம் | அ. | ,, 1166 |
| 48. | சித்விலாஸ அத்வைதானந்த போதர் | 34 | சித்தார்த்தி | ஜ்யேஷ்டம் | சு. ப. 10 | ,, 1200 |
| 49. | மகாதேவர்-2 | 47 | பராபவ | கார்த்திகம் | கி. ப. 8 | ,, 1247 |
| 50. | சந்த்ரசூடர்-1 | 50 | துர்முகி | ஜ்யேஷ்டம் | சு. ப. 6 | ,, 1297 |
| 51. | வித்யாதீர்த்தர் | 88 | ரக்தாக்ஷி | மாகம் | கி. ப. 1 | ,, 1385 |
| 52. | சங்கரானந்தர் | 32 | துர்முகி | வைசாகம் | சு. ப. 1 | ,, 1417 |
| 53. | பூர்ணாநந்த ஸதாசிவர் | 81 | பிங்கள | ஜ்யேஷ்டம் | ,, 10 | ,, 1498 |

| எ. | ஆசார்யர்களின் பெயர்கள் | பீடத்தில் அமர்ந்திருந்த காலவரை வருடங்கள் | சித்தி பெற்ற நாள் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | வருடம் | மாதம் | பக்ஷம், திதி* | இங்கிலீஷ் வருடம் |
| 54. | வியாஸாசல மகாதேவர் | 9 | அக்ஷய | ஆஷாடம் | கி. ப. 1 | கி.பி. 1507 |
| 55. | சந்திரசூடர்-2 | 17 | ஸ்வபானு | பால்குணம் | சு. ப. 11 | ,, 1524 |
| 56. | ஸர்வக்ஞ ஸதாசிவ போதர் | 15 | விளம்பி | சைத்ரம் | ,, 8 | ,, 1539 |
| 57. | பரமசிவர்-2 | 47 | பார்த்திப | சிராவணம் | ,, 10 | ,, 1586 |
| 58. | ஆத்மபோதர் | 52 | ஈச்வர | ஆச்விஜம் | கி. ப. 8 | ,, 1638 |
| 59. | பகவந்நாமபோதர் | 54 | பிரஜோத்பத்தி | பாத்ரபதம் | பூ. | ,, 1692 |
| 60. | அத்வைதாத்மபிரகாசர் | 12 | ஸ்வபானு | சைத்ரம் | சு. ப. 2 | ,, 1704 |
| 61. | மகாதேவர்-3 | 42 | குரோதன | ஜ்யேஷ்டம் | ,, 9 | ,, 1746 |
| 62. | சந்திரசேகரர்-4 | 37 | சாதாரண | கார்த்திகம் | கி. ப. 2 | ,, 1783 |
| 63. | மகாதேவர்-4 | 31 | ஸ்ரீமுக | ஆஷாடம் | சு. ப. 12 | ,, 1814 |
| 64. | சந்திரசேகரர்-5 | 37 | சாதாரண | கார்த்திகம் | சு. ப. 2 | ,, 1851 |
| 65. | மகாதேவர்-5 | 39 | விரோதி | பால்குனம் | கி.ப. அ. | ,, 1880 |
| 66. | சந்த்ரசேகரர்-6 | 17 | பராபவ | மாகம் | கி. ப. 8 | ,, 1907 |
| 67. | மகாதேவர்-6 | (8 நாள்) | பராபவ | பால்குனம் | கி. ப. 1 | ,, 1907 |

68\. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள். இவர்களையடுத்து ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் இப்பொழுது பீடத்தை அலங்கரித்து வருகின்றூர்கள்.

* **விளக்கம் :** சு. ப. = சுக்ல பக்ஷம்; கி. ப. = கிருஷ்ண பக்ஷம்; அ = அமாவாஸை; பூ = பூர்ணிமை. பீடத்தை அலங்கரிக்கும் ஆசார்யர்கள் யாவருக்கும் இந்திர ஸரஸ்வதி என்னும் பட்டம் உண்டு. 1, 2...இவை திதியை குறிக்கும். 1 என்றுல் பிரதமை, 2 என்றுல் த்விதியை....

## (11) ஸ்வாமிகள் வியாஸபூஜை செய்து சாதுர் மாஸங்களைப் பூர்த்திசெய்த இடங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. பிலவங்க | 1907 | கும்பகோணம் | தஞ்சை | ஜில்லா |
| 2. கீலக | 1908 | திருவானைக்காவல் | திருச்சி | ,, |
| 3. ஸௌம்ய | 1909 | கும்பகோணம் | தஞ்சை | ,, |
| 4. சாதாரண | 1910 | ,, | ,, | ,, |
| 5. விரோதிக்ருது | 1911 | திருவானைக்காவல் | திருச்சி | ,, |
| 6. பரிதாபி | 1912 | மகேந்திரமங்கலம் | ,, | ,, |
| 7. பிரமாதீச | 1913 | ,, | ,, | ,, |
| 8. ஆனந்த | 1914 | திருவானைக்காவல் | ,, | ,, |
| 9. ராக்ஷஸ | 1915 | கும்பகோணம் | தஞ்சை | ,, |
| 10. நள | 1916 | ,, | ,, | ,, |
| 11. பிங்கள | 1917 | ,, | ,, | ,, |
| 12. காளயுக்தி | 1918 | ,, | ,, | ,, |
| 13. சித்தார்த்தி | 1919 | வேப்பத்தூர் | ,, | ,, |
| 14. ரௌத்திரி | 1920 | மாயவரம் | ,, | ,, |
| 15. துன்மதி | 1921 | கதிராமங்கலம் | ,, | ,, |
| 16. துந்துபி | 1922 | ஆவடையார் கோவில் | ,, | ,, |
| 17. ருத்ரோத்காரி | 1923 | திருவானைக்காவல் | திருச்சி | ,, |
| 18. ரக்தாக்ஷி | 1924 | திருவையாறு | தஞ்சை | ,, |
| 19. குரோதன | 1925 | இளையாத்தகுடி | ராமநாதபுரம் | ,, |
| 20. அக்ஷய | 1926 | காட்டுமன்னார் கோவில் | தென்னார்க்காடு | ,, |
| 21. பிரபவ | 1927 | கஞ்சிக்கோடு பாலக்காடு சமீபம் | மலையாளம் | ,, |
| 22. விபவ | 1928 | திருவேடகம் | மதுரை | ,, |
| 23. சுக்ல | 1929 | மணலூர்ப் பேட்டை | தென்னார்க்காடு | ,, |
| 24. ப்ரமோத | 1930 | பூசமலைக்குப்பம் ஆரணி சமீபம் | வட ஆர்க்காடு | ,, |
| 25. பிரஜாபதி | 1931 | சித்தூர் | சித்தூர் | ,, |
| 26. ஆங்கீரஸ | 1932 | புக்கை | ,, | ,, |
| 27. ஸ்ரீமுக | 1933 | தஞ்சாவூர் | தஞ்சை | ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 28. பவ | 1934 | அலகாபாத் | ஐக்கிய மாகாணம் | |
| 29. யுவ | 1935 | கல்கத்தா | வங்காள ராஜ்ஜியம் | |
| 30. தாது | 1936 | பர்ஹாம்பூர் | ஓரிஸா மாகாணம் | |
| 31. ஈச்வர | 1937 | பாலக்கோல் | மேற்கு கோதாவரி | |
| 32. பகுதான்ய | 1938 | குண்டூர் | குண்டூர் | ,, |
| 33. பிரமாதி | 1939 | கும்பகோணம் | தஞ்சை | ,, |
| 34. விக்ரம | 1940 | துவரங்குரிச்சி, பட்டுக்கோட்டை சமீபம் | ,, | ,, |
| 35. விஷு | 1941 | நாகப்பட்டினம் | ,, | ,, |
| 36. சித்ரபானு | 1942 | நத்தம்-காட்டுப் புத்தூர்சமீபம் | திருச்சி | ,, |
| 37. சுபானு | 1943 | திருவானைக்காவல் | ,, | ,, |
| 38. தாரண | 1944 | எசயனூர். காவேரி பாக்கம் சமீபம் | வடஆர்காடு | ,, |
| 39. பார்த்திப | 1945 | திருக்கருகாவூர் | தஞ்சை | ,, |
| 40. விய | 1946 | கும்பகோணம் | ,, | ,, |
| 41. சர்வஜித்து | 1947 | வசந்த கிருஷ்ண புரம், திருக்கோவி லூர் சமீபம் | தென்னுகாடு | ,, |
| 42. சர்வதாரி | 1948 | வெங்கடாத்திரி அகரம், விழுப்புரம் சமீபம் | ,, | ,, |
| 43. விரோதி | 1949 | திருவிடைமருதூர் | தஞ்சை | ஜில்லா |
| 44. விகுருதி | 1950 | திருவிசைநல்லூர் | ,, | ,, |
| 45. கர | 1951 | முடிகொண்டான் | ,, | ,, |
| 46. நந்தன | 1952 | சாத்தனூர் | ,, | ,, |
| 47. விஜய | 1953 | காஞ்சீபுரம் | செங்கற்பட்டு | ஜில்லா |
| 48. ஜய | 1954 | ,, | ,, | ,, |
| 49. மன்மத | 1955 | ,, | ,, | ,, |
| 50. துர்முகி | 1956 | ,, | ,, | ,, |
| 51. ஹேவிளம்பி | 1957 | சின்னகாஞ்சீ புரம் | செங்கல்பட்டு | ஜில்லா |
| 52. விளம்பி | 1958 | மயிலாப்பூர் (சென்னை) சமஸ் கிருத கல்லூரி | சென்னை | |

| | | | | |
|---|---|---|---|---|
| 53. விகாரி | 1959 | வானகரம் (சென்னை பூந்த மல்லி சாலை) | செங்கல்பட்டு | ஜில்லா |
| 54. சார்வரி | 1960 | காமாநாயகன் பாளையம் (குளித்தலை சமீபம்) | திருச்சி | ,, |
| 55. பிலவ | 1961 | இளையாத்தகுடி | ராமனாதபுரம் | ,, |
| 56. சுபகிருது | 1962 | ,, | ,, | |
| 57. சோபகிருது | 1963 | நாராயணபுரம் (மதுரைநத்தம் சாலையில்) | மதுரை | ,, |
| 58. குரோதி | 1964 | பெரிய காஞ்சீ புரம் மடம் | செங்கல்பட்டு | ,, |
| 59. விசுவாவசு | 1965 | காட்டுப்பள்ளி (எண்ணூரிலிருந்து வடக்கே 10 கி. மீ.) | | ,, |
| 60. பராபவ | 1966 | காளஹஸ்தி | சித்தூர் (ஆந்திரப்ரதேசம்) | ,, |
| 61. பிளவங்க | 1967 | ராஜமஹேந்திர புரம் | கிழக்குகோதாவரி (ஆந்திர ப்ரதேசம்) | ,, |
| 62. கீலக | 1968 | சிகந்தராபாத் | ஆந்திர ப்ரதேசம் | |
| 63. சௌமிய | 1969 | காஞ்சீபுரம் முக்தி மண்டபம் | செங்கல்பட்டு | ,, |
| 64. சாதாரண | 1970 | சின்னகாஞ்சீபுரம் | செங்கல்பட்டு | ,, |
| 65. விரோதி-கிருது | 1971 | கார்வெட்நகர் | சித்தூர் | ஜில்லா |
| 66. பரிதாபி | 1972 | காஞ்சீபுரம் | செங்கல்பட்டு | ஜில்லா |
| 67. பிரமாதீச | 1973 | ரிஷிகேஷ் (புதுப் பெரியவர்கள்) | உத்தரப்ரதேசம் | |
| | | சிவாஸ்தானம் (பெரியவர்கள்) | காஞ்சீபுரம் | |
| 68. ஆனந்த | 1974 | ஜெம்ஷெட்பூர் (புதுப் பெரிய வர்கள்) | பீஹார் ராஜ்யம் | |
| | 1974 | சிவாஸ்தானம் காஞ்சீபுரம் (பெரியவர்கள்) | செங்கல்பட்டு | ஜில்லா |

| | | | | |
|---|---|---|---|---|
| 69. | ராக்ஷஸ | 1975 | கலவைபிருந்தா வனம் (இருவரும்) | வடஆற்காடு ஜில்லா |
| 70. | நள | 1976 | காமாக்ஷி ஆலய ஸ்ரீ சங்கரர் சந்நதி காஞ்சீபுரம் | செங்கல்பட்டு ஜில்லா |
| 71. | பிங்கள | 1977 | சிவாஸ்தானம் பெரியவர்கள் காஞ்சீபுரம் | செங்கல்பட்டு ஜில்லா |
| | | | புதுப் பெரிய வர்கள், சேலம் | சேலம் ஜில்லா |
| 72. | காளயுக்தி | 1978 | பெரியவர்கள் ஹக்ரி | கர்னடகராஜ்யம் |
| | | | புதுப்பெரியவர்கள் காஞ்சீ ஸ்ரீ மடம் காஞ்சீபுரம் * | செங்கல்பட்டு ஜில்லா |
| 73. | | 1979 | ஸ்ரீ பெரியவர்கள் பெல்காம் | கர்னடகம் |
| | | | ஸ்ரீ புதுப் பெரியவர்கள் சிகந்திராபாத் | ஆந்திரப்ரதேசம் |

**குறிப்பு :** ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் சாதுர் மாஸ சங்கல்பம் 1954-வது வருடம் ஆரம்பம். 1978-வது வருட சங்கல்பத்துடன் அவர்களுக்கு 25 ஆண்டுகள் சாதுர்மாஸம் பூர்த்தியானதை முன்னிட்டு சிஷ்யர்களும் பக்தர்களும் இந்த ஆண்டை ஸ்ரீ ஸ்வாமிகளது வெள்ளிவிழா ஆண்டாகக் கொண்டாடினார்கள்.

## (12) காஞ்சி—கும்பகோணம் : ஓர் விளக்கம் :

சென்ற பதினெட்டாவது நூற்றூண்டில் தென் தமிழ் நாட்டில் குறிப்பாகத் தொண்டை மண்டலத்தில் கலவரங்களும், மகம்மதியர் படையெடுப்புகளும் பரவலாக நடைபெற்றுக்கொண் டிருந்தன. அந்தக் கலவரங்களில் நம் ஆலயங்களும் பாதிக்கப் பட்டன. பாளையக்கர்ரர்களும் பொதுமக்களும் அந்த ஆபத்தி லிருந்து பல ஆலயங்களைக் காப்பாற்றினுர்கள். அதன் தொடர் பாகவே காஞ்சீ காமாக்ஷி அம்பாள் ஆலயத்தில் இருந்த பங்காரு காமாக்ஷி அம்பாளின் விக்ரஹம் தஞ்சைக்கு எடுத்து வரப்பட் டது. தஞ்சை மேல வீதியில் அந்த அம்பாளுக்கு ஓர் ஆலயமும் அமைக்கப்பெற்றது.

ஸ்ரீ ஆதி சங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ காமகோடி பீடத்தின் பரம்பரையில் 62-ஆவது அதிபர்களாக விளங்கிய 4-ஆவது சந்திர சேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும் (1746-1783) காஞ்சியிலிருந்து சோழ நாட்டுக்கு அக்காலத்தில் விஜயம் செய் தார்கள். அவர்கள் யாத்திரை செய்து கொண்டு வந்த பொழுது உடையார்பாளையம் ஜமீன்தார் அவர்களை வணங்கிச் சில காலம் தம் பாளையத்திலே வாஸம் செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அவரது விருப்பப்படி சில மாதங்கள் ஸ்வாமிகள் அவ்விடம் தங்கினுர்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் உடையார்பாளையத்தில் தங்கியிருப்பதையறிந்த தஞ்சாவூர் மஹாராஷ்டிர மன்னர் பிரதாப ஸிம்ம மஹாராஜா (1739-1763) தம் முக்கிய மந்திரி யாகிய டபீர் பண்டிதரை அவ்வூருக்கு அனுப்பி ஸ்வாமிகளைத் தஞ்சைக்கு வரும்படி அழைப்பு விடுத்தார். ஆனுல் ஸ்வாமிகளோ தமது வேதாந்த விசாரத்திற்கும் ஸ்ரீ சந்திரமௌளீச்வர ஸ்வாமி பூஜைக்கும் ஏற்றவாறு காவிரி நதியின் கரையில் ஒரு க்ஷேத்திரத் தில் தங்குவதாகக் கூறினுர்கள். அதன்படி கும்பகோணம் க்ஷேத் திரத்தில் காவிரியாற்றின் தென்கரையில் டபீர் பண்டிதர் ஓர் மடத்தை அமைத்துக் கொடுத்தார். அத்துடன் மடத்தையடுத்து நான்கு அக்ரஹாரங்களையும், காவிரியில் ஓர் படித்துறையையும் அமைத்தார். இன்றும் அந்த அக்ரஹாரங்களும் படித்துறையும் அந்த அமைச்சர் பேராலேயே விளங்கி வருகிறது. அந்த நூற் ருண்டின் இறுதியில் தஞ்சையின் கடைசி மன்னராக விளங்கிய சிவாஜி மஹாராஜா காசி யாத்திரை சென்று திரும்பிய பொழுது ஸ்ரீ சந்திர மௌளீச்வர ஸ்வாமி பூஜைக்கு ஓர் கர்ப்ப கிருஹ விமானத்தை, அர்த்த மண்டபம், மஹாமண்டபத்துடன் அமைத்

துக் கொடுத்தார். இதை விளக்கும் கல்வெட்டு ஒன்றும் கர்ப்ப கிருஹத்தின் முன்னர் இன்றும் காணப்படுகிறது.

பீடத்தின் 62-ஆவது ஆசார்யர்களாகிய 4-ஆவது ஸ்ரீசந்திரசேக ரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும் 1783, சாதாரண வருஷம் கார்த் திக பகுள த்விதியையன்று கும்பகோணத்தில் சித்தி பெற்றார்கள். அவர்களது அதிஷ்டானமும் மடத்தின் பின்புறம் உள்ள தோட் டத்தில் அமைந்துள்ளது. அவர்களுக்குப் பின்னர் பீடாதிபதி களாக வந்த 4-ஆவது மஹா தேவேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும், 5-ஆவது சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளும் கும்ப கோணத்திலேயே சித்தி பெற்றனர். அவர்கள் இருவரின் அதிஷ்டா னங்களும், 62-ஆவது ஆசார்யரது அதிஷ்டானத்தையொட்டியே அமையப் பெற்றுள்ளன. 5-ஆவது ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ் வதீ ஸ்வாமிகள் (1814-1851) திருவானைக் காவல் அகிலாண்டேச் வரி அம்மனுக்குத் தாடங்க பிரதிஷ்டையையும் காஞ்சீ காமாக்ஷி ஆலயத்தின் ஜீர்ணோத்தாரண மஹா கும்பாபிஷேகத்தையும் நடத்தி வைத்தார்கள். இவர்களுக்கு முன்னர் இருந்த பீடாதிபதி களின் சில அதிஷ்டானங்கள் காஞ்சிக்கு வெகு சமீபத்தில் உள்ள அம்பி கிராமத்திலும், சென்னைக்கு அடுத்துள்ள திருவொற்றியூரி லும் இருக்கின்றன. அந்த அதிஷ்டானங்களுக்கு அடுத்தாற் போல் விஜயநகர அரசர்களால் ஸ்ரீ மடத்திற்குத் தானமாக அளிக்கப் பெற்ற பூமியும் இன்றும் மடத்தின் வசம் இருந்து வரு கிறது. உண்மை இப்படியிருக்கையில் சிலர் "காமகோடி பீடம்" என்பதை "கும்பகோண மடம்" என்று விவகரித்து அவர் களுக்குத் தோன்றியவாறெல்லாம் விமர்சனங்கள் எழுதி அச்சிட்டு வெளியிட்டு வருகின்றார்கள். இவை மிகவும் வருந்தத்தக்கவை; பக்தகோடிகளை வருந்தவே செய்கின்றனர். மேலும் சரித்திர பேராசிரியர் கே. ஆர். சுப்ரமண்யம் தமது ஆராய்ச்சி நூல் ஒன்றில் ஸ்ரீ மடம் காஞ்சியிலிருந்து கும்பகோணத்துக்கு வந்த வரலாற்றைப்பற்றி எழுதியிருப்பதையும் கீழே காணலாம் :—

## PRATAP SINGH (1739—1763)

The celebrated Dabir Pandit an expert in Revenue matters was another of the Great men in his Court. He confined to serve the son of Pratap except for a few short period and did much good to the State. He and Pratap welcomed to Kumbakonam, the Sankaracharya of Kamakoti Peeta from

Udayarpalayam whither the latter has shifted from Kanchi on account of increasing Muhamadan influences in the City.
Extract from 'The Maratha Rajas of Tanjore' by. K. R. Subramanian. (Chapter VII. Pratap Sing-1739-1763. Page 48)

## [13] காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

**(ராபர்ட் வால்ஸர்)**

(இக்கட்டுரை ஆசிரியர் ஸ்விட்ஜர்லாந்தில், ஜினீவாவில் யோக போதகராக இருக்கிறார். 'யோகமும் தேகாரோக்கியமும்' (Yoga & Health) என்ற பிரசித்தி பெற்ற நூலை எழுதிய எஸ்லேடியன், எலிஸபெத் ஹெய்ச் ஆகியோருடன் சக ஊழியராக இருந்தவர். தமது பதினெட்டாவது வயதிலிருந்தே யோக சாதனை புரிந்து வருபவர். ஸ்ரீ காமகோடி பெரியவர்களின் கிருபைக்குத் தாம் பாத்திரமானதை உள்ளமுருக்கும் வகையில் இங்கு விவரிக்கிறார்.)

இந்தப் புனித நாளில் புனித வாய்ப்பை நழுவ விடாமல் புனிதராகிய ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளுக்கு என் இதய பூர்வமான வணக்கத்தைத் தெரிவிக்கிறேன். அந்தரங்க சுத்தமுள்ள ஆன்ம சாதகர்கள் அனைவரின் நலனுக்காகவும், அடியார்களின் நலனுக்காகவும் அவரை ஆண்டவன் நம்மிடை நீண்ட காலம் வைத்திருப்பாராக! ஆன்ம சாதனையில் அடியெடுத்து வைத்துள்ள அவருடைய அடியேனுன பாக்கியம் எனக்கு உண்டு. அவர் நமக்கெல்லாம் மிகவும் தேவைப்படுகிறார் என்பதை உணர்ந்திருக்கிறேன். கடந்த சில ஆண்டுகளாக எனக்கு நானே அடிக்கடி சொல்லிக் கொள்கிறேன்: 'ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் என்று ஒரு வஸ்து உயிர் வாழ்கிறதே! இதற்காகப் பரமனிடம் எவ்வளவு நன்றிகூற வேண்டும்!'

ஆம்; அவர்தாம் பரம உத்தமமான பாரத ஜோதி!

1961-ஆம் ஆண்டு நவம்பர் இறுதியில் நான் புனிதரைச் சந்தித்தேன். அது என்னுடைய மூன்றாவது இந்திய யாத்திரை. ஆன்ம ஒளி அளிக்கக்கூடிய உண்மையான ஆசாரியரைத் தேடி அதற்கு முன் இருமுறை நான் இந்தியாவுக்கு வந்திருக்கிறேன்; பல மாதங்கள் நாடு முழுவதும் சுற்றித் தேடி அலைந்திருக்கிறேன். மகான்கள் என்று சொல்லப்படும் பலரைச் சந்தித்தும் இருக்கிறேன். (அவர்களில் பலர் மேல் நாடுகளில்கூடப் பிரசித்தி பெற்றவர்கள்.) ஆயினும் என் இதயம் நிறைவு காணவில்லை.

'தெய்வ மனிதர்' என்ற வியக்தியை நான் எப்படி உருவாக்கிக் கொண்டிருந்தேனோ, அந்தக் கருத்தின் அளவுக்கு அந்தப் பெரியவர்கள் எவரும் வரவில்லை. இந்தியாவில் அப்படிப்பட்ட தெய்வ மனிதரே கிடையாதோ என்று ஐயப்படவும் தொடங்கி விட்டேன். இருப்பினும் இன்னும் ஒரு சோதனை செய்துவிட வேண்டும். இன்னும் ஒரு தேட்டம்—இறுதித் தேட்டம்—போட்டு விட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டு மூன்றும் முறை பாரதத்துக்கு வந்தேன்.

இம் முறை நான் வழக்கம் போல் ஆசாரியராக விளங்கக் கூடியவர் பற்றிக் கேள்வி கேட்டும், விசாரணை செய்தும், பலரிடம் அவ் விசாரணையைச் சரிபார்த்தும் பொழுதைக் கழிக்கவில்லை. மௌனமாக மனத்தை ஒருமுகப்படுத்தி ஆண்டவன் எனக்கு வழிகாட்ட வேண்டும் என்று பிரார்த்தித்தபடியே இருந்தேன்.

ஏனோ இம்முறை சென்னையிலிருந்து என் ஆசாரியரைத் தேடத் தொடங்க வேண்டும் என்று விரும்பினேன். நான் சரியான திசையில் அடியெடுத்து வைக்க இறைவன் வழிகாட்ட வேண்டும் என்று ஒரு நாள் வெகு தீவிரமாக ஒருமணி நேரம் பிரார்த்தனை செய்தேன். அதன் பின் அறையை விட்டுக் கிளம்பிக் கடற்கரையில் உலவி வரப் புறப்பட்டேன். நான் தங்கியிருந்த ஹோட்டல் ஹாலைக் கடந்து வருகையில் சற்றும் எதிர்பாராத விதமாகத் தென் இந்தியர் ஒருவர் என்னிடம், "நீங்கள் தேடிக் கொண்டிருக்கும் குருநாதர் இங்கிருந்து வெகு தொலைவில் இல்லை. அவர் பெயர்..." புனித ஸ்ரீ காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகளின் பெயரை அப்போதுதான் நான் முதல் முறையாகக் கேட்டேன்.

திடீரென்று கிடைத்த இந்தத் திசைக்காட்டி என்னைத் திகைக்க வைத்தது. அதோடு ஓர் அவநம்பிக்கையும் இழையோடியது. எனினும் அந்தத் திசையைப் பின்பற்ற முடிவுசெய்தேன். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக எனக்கு உதவி புரிய வந்த அந்த நல்ல மனிதருக்கு ஸ்வாமிகளின் முகாமைச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை. தென் இந்தியாவில் எங்கோ ஒரு சிறு கிராமத்தில் இருக்கிறார்கள் என்றுமட்டும் கூறினார்.

நான் விசாரித்தவர் எவருக்குமே ஸ்வாமிகளின் இருப்பிடத்தைச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை. கைக்கு அகப்படாமல் நழுவி நழுவி ஓடுகிற அந்த ஸ்வாமிகளைத் தேடியபடி நான் திருச்சிராப்பள்ளிக்கு வந்து சேர்ந்தேன். 'அவரை நாம் பார்க்கப் போவதே இல்லையோ?' என்று அப்போது நம்பிக்கை இழக்கத் தொடங்கி விட்டேன். இப்படி ஒரு ஸ்வாமிகளே இருக்கமாட்டாரோ என்றுகூட எண்ணலானேன்.

ரெயில் நிலையத்தின் புழுக்கமான ஓய்வறைகளில் ஒன்றில் படுத்திருக்கிறேன். நள்ளிரவு நேரம். கதவு தட்டும் ஓசை கேட்கிறது. திறக்கிறேன். ஓர் இளைஞர் வெளியே நிற்கிறார். டாக்ஸி டிரைவராம். என்னைச் சங்கராசாரிய ஸ்வாமிகளிடம் அழைத்துப் போவதாகக் கூறுகிறார். அவர் இருக்குமிடம் தமக்கு நிச்சயமாகத் தெரியும் என்கிறார். அந்த வேளையில் அப்படி ஓர் இளைஞரை நான் ஏன் நம்பினேன் என்பது விசித்திரம். எப்படியோ நம்பினேன். "அதிகாலையிலேயே புறப்படுவோம்; தயாராக இரு" என்றேன்.

என் நம்பிக்கை சரியான இடத்தில் தான் சார்ந்திருக்கிறது! ஒரு சில மணிகள் குறுகலான, புழுதி நிறைந்த பாதைகளில் டாக்ஸி ஓடியபின், காலை பத்து மணி சுமாருக்கு இளையாற்றங்குடி என்ற கிராமத்தின் சிறிய ஆலயத்துக்கு வந்து சேர்ந்தோம்.

அங்கு குழுமியிருந்த அந்தணர் பலரை விசாரித்ததில், என் தேட்டத்தின் இலட்சியத்தைக் கடைசியில் அடைந்தேவிட்டேன் என்று தெரிகிறது.

"தொலை தூரத்திலிருந்து ஸ்வாமிகளைக் காண வந்திருக்கிறேன்" என்றேன்.

"ஆமாம், ஆமாம்; உங்களைத்தான் அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்" என்று பதில் வந்தது.

நம்ப முடியாத பதில்!

ஸ்வாமிகளுடன் எனக்குப் பேட்டி கிடைப்பது அசாத்தியம்; அப்படிக் கிடைப்பதாக இருந்தாலும் அதற்காக நான் பல காலம் காத்துக்கிடக்க வேண்டும் என்று முன்பு எனக்குப் பலர் எச்சரிக்கை விடுத்திருந்தார்கள்.

ஆனால் இதோ, இளையாற்றகுடியில் வந்திறங்கிய ஐந்தாவது நிமிஷத்துக்குள்ளேயே நான் ஸ்வாமிகளின் முன் நிற்கிறேன்!

உண்மையான மகத்துவத்தின் சந்நிதியில் நிற்கிறேன் என்று உடனடியாக உணர்ந்தேன்.

அந்த மகிமைக்குத்தான் எத்தனை எளிமை, எத்தனை சாந்தி, எத்தனை மௌனம்!

பெரும் பக்தி அலை ஒன்று என் இதயத்தே பொங்கி எழுந்தது. ஆகா! இறுதியில் இத்தனை ஆண்டுகளாக நான் தேடியதை அடைந்து விட்டேன்—ஆண்டவன் அருளை அடைந்து விட்டேன்.

ஸ்ரீ ஸ்வாமிகள் என்னைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கவே முடியாது. என்னை அவர் இன்னார் என்று தெரிந்து கொள்ளும் சாத்தியக் கூறே மநுஷ்ய ரீதியில் இல்லை. ஆயினும் அவருக்கோ

என்னைப்பற்றிச் சகலமும் தெரிந்திருப்பதாகக் காண்கிறது. இது ஏதோ அசாதாரண அற்புதம்!

மகான்கள் என்று சொல்லப்பட்ட மற்றப் பலரை நான் பார்த்தபோது அவர்களெல்லாம், "நீ எங்கேயிருந்து வருகிறாய்? என்ன செய்கிறாய்? எதற்காக இந்தியாவுக்கு வந்திருக்கிறாய்?" என்றெல்லாம் கேள்விகளை அடுக்குவார்கள். சர்வக்ஞ சாதுக்களாகத் தோன்றாமல் தகவலுக்குத் துருதுருக்கும் பத்திரிகை நிருபர்கள் போல் காணப்படுகிறார்களே என்று நான் நினைப்பதுண்டு. இப்படிக் கேள்வி கேட்டுப் பதில் சொல்லிப் பழகிப்போன என்னிடம், வினா விடுக்க வேண்டிய அவசியம் இந்த ஸ்வாமிகளுக்கு மட்டும் இருக்கவில்லை. எனக்குள்ளே ஊடுருவிப் பார்க்கும் ஒரு மனிதர் இதோ நிற்கிறார். ஒரு கேள்விகூடக் கேளாமலே திறந்து வைத்த புத்தகத்தைப் படிப்பது போல் என்னுடைய மனத்தைப் படிக்கிற ஒருவர் இதோ நிற்கிறார்!

என் ஆன்மாவினுள் ஓர் அதிசயமான சாந்தி நிரம்பியது. நான் எதுவும் வாய் திறந்து கேளாமலே, அந்த மகா புருஷர்—அந்த மதுர மனிதர்—என் கேள்விகளுக்கெல்லாம் விடை சொல்லச் சொல்ல என் அகத்தே அமைதி படிந்தது. நான் புத்தி பூர்வமாக அறிந்த ஐயப்பாடுகள் மட்டுமின்றி, என் வெளி மனத்துக்கே தெரியாமல் உள்ளொடுங்கியிருந்த ஐயங்களுக்குக் கூடத் தாமாக அவர் சந்தேக விளக்கம் தந்தார்! அன்பு நிறைந்த அவர்பால் என் இதயத்திலும் சத்தியமான, ஆழ்ந்த அன்பு வெள்ளமெனப் பிரவகித்தது. அவருடைய அற்புத வாக்குகளை நான் மௌனமாகக் கேட்கக் கேட்க அளவு கடந்த நன்றி உணர்ச்சி என் உள்ளத்தில் ஊற்றெடுத்தது. ஆகா. இந்தத் தருணம்தான் எப்படிப்பட்டது! இதை மறக்க முடியுமா?

நான் விடைபெறுமுன் அவர் ஆசி அளித்தார்.

"இன்றைக்கே இரவு எட்டு மணிக்கு மனத்தை ஒருமுகப் படுத்தி என்னை நினைத்துக்கொள்!" என்றார்.

அவர் குறிப்பிட்ட அந்த வேளைக்கு நான் திருச்சி திரும்பியிருப்பேன்.

## [14] அப்பாலும் அடிசார்ந்தார்

### டாக்டர் டி. எம். பி. மஹாதேவன்

(''யார் உற்ருர்? யார் அயலார்?'' என்று அன்று மணிவாசகர் சிவபெருமானைப் பற்றி வினவியது இன்றைய சிவாஸ்தான மூர்த்திக்கும் அப்படியே பொருந்தும்; தேசம், மதம், கலாசாரம் இவற்றுக்கு அப்பாற்பட்டு ஆசாரியர்களின் அடிசார்ந்துள்ள அடியார் குழாத்தின் சிலரைக் குறித்துப் பேராசிரியர் அவர்கள் சிறப்புக் கட்டுரை நல்குகிருர்.)

ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தோருக்கு மட்டுமின்றி உலகம் முழுவதிலும் அஞ்ஞான இருளில் தவிப்போருக்கு ஞான ஒளியைப் பாய்ச்சுவதையே ஆதி சங்கரர் பிறவிப் பணியாகக் கொண்டு அவதரித்தார். இப்பணி அவரது அவதார காலத்தோடு முற்றுப் பெற்றுப் போவது அல்ல. எக்காலமும் தொடர்ந்து வரவேண்டியது இத்திருப்பணி. பணி தொடருவதற்காகவே அவர் நாட்டின் பல பகுதிகளிலும் மடங்களை நிறுவி அவற்றில் தமது திருநாமத்திலேயே ஆசாரிய பரம்பரைகளை ஏற்படுத்திஞர். இவற்றுள் நானிலத்தின் ஞான தீபமான கச்சியம்பதியில் காமகோடி பீடத்தை ஸ்தாபித்தார். இப் பீடத்தில் ஆதிசங்கரரிலிருந்து தொடர்ந்து வந்துள்ள குரு பரம்பரையில் அறுபத்தெட்டாமவராகத் திகழும் ஸ்ரீ பெரியவர்கள் ஆதி சங்கரரின் அதே நோக்கத்தைத் தமது ஒரே லட்சியமாகக் கொண்டு வாழ்ந்து வருகிருர்—அதாவது, ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தோரை மட்டுமின்றி உலகம் முழுவதையும் உள்ளூற உயர்த்தி உருமாற்றிப் பூரணத்துவத்தை நோக்கி முன்னேறச் செய்து வருகிருர்.

ஸ்ரீ பெரியவர்களின் அருள் மயமான தரிசன மாத்திரத்தில் அடியோடு கவரப்பட்டு, தங்களது உள்ளத்தில் ஓர் உன்னதப் புரட்சியை உணர்ந்த அந்நியர் பலப் பலர். 'அந்நியர்' என்பது நமக்குத்தான். மாமுனிவருக்கு எவர் அந்நியர்?

நாற்பத்துமூன்று ஆண்டுகளுக்கு முன் பெரியவர்களைச் சந்தித்து உரையாடிய பால்பிரண்டன் இந்த மேற்கத்தியர்களில் முதலாமவர். அன்றைய பெரியவர்களின் திருவுருவம் பற்றி அவர் எழுதிஞர்: ''எனது விஸ்தாரமான நினைவுச் சித்திரசாலையில் அந்த உன்னதமான முகம் ஒரு மதிப்புக்குரிய ஸ்தானத்தை எடுத்துக் கொண்டு விட்டது. மத்திய சகாப்தம் என்பதும்

காலத்தை அணி செய்த கிறிஸ்தவ மகான்களுக்கு அத்தகைய முகம் இருந்திருக்கக் கூடும்! ஒரே ஒரு வித்தியாசம்: இம்முகத்தில் கூடுதலாக அறிவுத் திறனும் பிரதிபலித்தது.'' இப்போது, நாற்பத்து மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், பெரியவர்களின் எண்பதாவது ஜயந்திக் கொண்டாட்டத்துக்குப் பால் பிரண்டன் அளித்துள்ள வாழ்த்துரையில், இன்றைய உலகச் சூழலில் பெரியவர்களின் பிறவிப் பணியை ஆற்றுவது எத்துணை கடினமானது என்பதைக் குறிப்பிட்டு, "ஸ்ரீ ஸ்வாமிகள் தமது வாழ்நாள் முழுதும் இத்தனை அற்புதமாக எந்த மகத்தான பண்பாட்டுக்குப் பணி புரிந்திருக்கிறாரோ, அந்தப் பண்பாடே நமது மனித குல முயற்சிக்கெல்லாம் அத்தியாவசியமான அடிப்படையாக இன்றும் உயிர் வாழ்ந்தாக வேண்டும்!'' என்கிறார்.

பால் பிரண்டனுக்குப் பிறகு நாற்பதாண்டுகளில் பல தேசங்களைச் சேர்ந்த அறிஞர்களும் ஆத்ம சாதகர்களும், சமயத் தலைவர்களும், கலைஞர்களும், ராஜதந்திரிகளும்கூடக் காஞ்சி மாமுனிவரைச் சந்தித்து அதன் மூலம் பாரதத்தின் அமரப் பண்பாட்டை ஆழ்ந்து அறிந்து கொண்டிருக்கிறார்கள்.

1955-இல் ஸ்ரீ பெரியவர்களைச் சந்தித்த **சிகாகோ பல்கலைக் கழகப் பேராசிரியர் மில்டன் ஸிங்கர்**, இந்தியாவுக்குச் செல்லுமுன் அந்நாட்டு மகான்களின் 'ஆத்ம சக்தி' பற்றி நான் நிறைய படித்தும் கேள்விப்பட்டும் இருக்கிறேன். ஆனால் இது ஏதோ புராதன காலத்தைச் சேர்ந்த சமாசாரமாகவே இருக்கும் என்று எண்ணி வந்தேன். சங்கராசாரியரைக் கண்ட பின்னர் தான், இந்த 'ஆத்ம சக்தி' இன்றும் இந்து மதத்தில் ஜீவ சக்தியாக அங்கம் வகிக்கிறது என்று உணர்ந்தேன்'' என்றார்.

**பிரசித்தி பெற்ற எழுத்தாளரான ஆர்தர் கோஸ்ட்லர்** தமது நூல் ஒன்றில் ஆசாரியர்களின் திருமுகத்தில் ஓடிய இளநகை அவர்களைக் குழந்தையாக மாற்றிய அழகைப் பரக்க வருணித்து விட்டு "அந்தப் புன்னகையோடும், அது வெளியிட்ட உணர்வோடும் உவமித்துப் பேசக்கூடிய இன்னொன்றை நான் வேறெங்கும் நான் கண்டதேயில்லை. அதன் ஆகர்ஷணமும், மாதுரியமும் அசாதாரணமாக இருந்தன'' என்கிறார்.

பெரியவர்களின் திருஷ்டி விசேஷம் பற்றி அமெரிக்க அறிஞர் **ஆர்தர் ஐஸன்பர்க்** கூறுவதைப் பாருங்கள்: "என்னை நோக்கிய அந்த நயனங்களில் அறிவும், அன்பும், அருளும் அற்புதக் கலவையாகப் பின்னியிருந்தன; இவற்றோடுகூட எவ்விதமோ மிகவும் மிருதுவான நகைச்சுவை உணர்வையும் அவை பிரதிபலித்தன.''

அர்ஜென்டைனுவைச் சேர்ந்த **குமாரி யூகினு போர்கினி**, 1992-லிருந்து பெரியவர்களின் பக்தையாக இருப்பவர். "சுவாமிகளுக்குள்ளாக இயேசுநாதனே மீண்டும் இவ்வுலகுக்கு வந்துவிட்டான். அவர் அன்பின் விக்கிரகம். இயேசுநாதனைப் போலவே உடைமையற்ற துறவற வாழ்வைத் தழுவித் தியானத்திலும், வழிபாட்டிலும், தவத்திலும் உபதேசத்திலும் அவ்வாழ்வைச் செலவிட்டு மக்கட்குலத்தை மேம்படுத்துகிறார். எந்நாளும் அவரது திருவடிகளை வணங்கி, அவரைப் போற்றி பூஜித்து வாழ்வேன்" என்கிறார் இவ்வம்மை.

முன்பு சென்னையில் அமெரிக்கக் கான்ஸல் ஜெனரலாக இருந்த **டாக்டர்ஆல்பர்ட் பிராங்க்லின்** பெரியவர்களின் பீடாரோஹண வைர விழாவில் பேசும்போது, "ஸ்வாமிகளிடம் எனக்குள்ள மதிப்புக்கும் நன்றியறிதலுக்கும் வார்த்தைகள் மூலம் புகழாரம் படைப்பது என்றால் இயலாத காரியம். வாழ்க்கை என்கிற சந்தையில் வார்த்தைகளைச் சரக்காகவும், தொழிற் கருவிகளாகவும் பயன்படுத்தி வருகிற நாம், உள்ளூற மாற்றங்களை உண்டாக்கும் ஜீவ சக்திகளைப் பற்றியும், இறுதிச் சத்தியங்களைப் பற்றியும் சொல்வதற்கு இந்தச் சரக்கு அல்லது கருவி பயன்படவில்லையென்றே காண்கிறோம். ஒன்று மட்டும் சொல்கிறேன். நீண்ட நெடுங்காலமாக வந்துள்ள என்னுடைய சமயப் பெருந்தகைகளில் எவரும் இவ்விழாவில் நான் பங்கு கொள்வதன் பொருத்தத்தைப் பற்றி ஐயுற மாட்டார்கள். ஏனெனில், இன்று நாம் யாருக்காக விழா எடுக்கிறோமோ, அந்த ஆத்மா மனித குலத்தின் முடிந்த முடிவான சாதனைகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிப்பவராவர் என்பதில் எனக்கும் சரி, என் சமய முன்னோர்களுக்கும் சரி பூரண உடன்பாடு உண்டு," என்றார்.

ஈரான் நாட்டில் டெஹரான் பல்கலைக் கழகத் துணைவேந்தரான **ஸயத் ஹொஸைன் நாஸர்** 1970-இல் காஞ்சியில் முனிவரைத் தரிசித்துவிட்டு இப்படி எழுதினார்: "ஜகத்குரு ஸ்வாமிகளின் திருஉருவைக் கண்டு, அவரிடமிருந்து வீசும் இதமான காற்றால் மனிதனை இறைவனிடமிருந்து பிரிக்கும் உலக வாழ்வு என்கிற தீயையே அணைத்துக் கொள்கிற பாக்கியத்தைப் பெற முடிவதை நோக்குமிடத்து, மோட்சம் என்கிற திவ்விய சுதந்தர நிலையே தனது இச்சா சக்தியால் ஓர் உருவம் கொள்கிறது என்ற உண்மை பிரத்தியட்ச அநுபவமாகப் புரிகிறது. முஸ்லிம் என்ற முறையில் நான் மசூதிகளின் புனிதக் கருவறைகளிலும், எங்கள் மதத்தின் புனிதப் பெரியார்களிடத்தும் எந்தச் சக்தி வாய்ந்த ஒளியை

